# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

இரண்டாம் மடலம் மூன்றாம் பாகம்

## கெ - நௌ

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## VOLUME II - PART III


கா. சந்திரசேகரன், இ.ஆ.ப.

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

முனைவர். இரா. மதிவாணன்

முதன்மைப்பதிப்பாசிரியர்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு

2002

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## இரண்டாம் மடலம் – மூன்றாம் பாகம்

## கெ-கௌ

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## VOLUME II - PART III


தா. சந்திரசேகரன், இ.ஆ.ப.
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

முனைவர். இரா. மதிவாணன்
முதன்மைப்பதிப்பாசிரியர்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு
2002

சொ.சொ.பி. அகரமுதலித்திட்ட இயக்கக வெளியீடு-6
முதற்பதிப்பு : மேழம் (சித்திரை); தி.பி. ௨௦௩௩ ஏப்ரல் 2002



A Comprehensive Etymological Dictionary
of the Tamil Language, Vol. II, Part-III

**விலை உருபா 300/-**

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314" K.M4

**Published by :**
Directorate of Tamil Etymological
Dictionary Project,
Govt. Museum Campus,
Egmore, Chennai - 600 008.

**Copies available at :**
International Institute of Tamil Studies
Tharamani,
Chennai - 600 113.

**Printed at :**
Royapettah Stationery and
Printing and Allied Products
Producers Ind. Co-op. Society Ltd.,
26, Koya Arunaguri First Street,
Royapettah, Chennai - 600 014.

மு. தம்பிதுரை
கல்வி அமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

நாள் : 24-4-2002

# அணிந்துரை

**'செந்தமிழ் உயர் தனிச்செம்மொழி** என்னும் தகுதிப்பாட்டைப் பெற்றிருப்பது தமிழின் தொன்மையைக் காட்டுவதாய் இருக்கிறது' என்பார் டாக்டர் கால்டுவெல்.

'உலக முதன்மை, செம்மை, தூய்மை, தாய்மை, பகுத்தறிவு அடிப்படையில் பொருள்களைப் பகுத்து மெய்ப்பொருளியல் இலக்கணக் குறியீடுகள் கொண்டமை, செய்யுள் வடிவில் இலக்கியம் அமைந்தமை, பொருளிலக்கணம் உடைமை, இசையையும் நாடகத்தையும் இணைத்துக் கொண்டு முத்தமிழாய் விளங்கும் தன்மை போன்றவற்றைக் கொண்டு மக்கள்மொழியாயிருக்கும் தமிழை ஈடிணையில்லாத் தனிமொழியெனல் உண்மை நவிற்சியேயன்றி உயர்வு நவிற்சியன்று' என்பார் மொழிஞாயிறு பாவாணர்.

ஒரு மொழியின் பெருமையையும் வளமையையும் அம்மொழியின் சொல்வளத்தால் அறியலாம். அச் சொல்வளத்தைக் காட்டுவது அகரமுதலிகளே. பண்டுதொட்டு இன்றுவரையிலுமுள்ள பண்பாடு, நாகரிகம், வரலாறு ஆகியவற்றை அறியப் பெரிதும் துணையாயிருப்பது அவ்வம் மொழியிலமைந்துள்ள சொற்களே என்பது மிகையான கூற்றன்று.

தமிழில் அகரமுதலிக்கூறு தொல்காப்பியத்திலேயே கருக்கொண்டுள்ளது எனினும் இக் கூறுகள் பற்றிய கருத்துரு கி.பி. ஏழாம் நூற்றாண்டில்தான் உருக்கொண்டது; ஆயினும் முழுமையான கூறுகள் கொண்ட அகரமுதலி கி.பி. இருபதாம் நூற்றாண்டில் தான் உருவாயிற்று.

மொழியமைப்பு, இலக்கண அமைப்பு ஆகியவற்றைப் பொறுத்தவரை தொல்காப்பியத்திற்கு முன்பே இப்போதிருக்கும் அமைப்பில் தமிழ் நிலைபெற்று விட்டது. இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என மொழிநூல் அடிப்படையிலும்; செந்தமிழ், கொடுந்தமிழ் என மொழித்தூய்மை அடிப்படையிலும் பாகுபாடு கண்டுள்ளமை அக்காலத்து மொழிவளர்ச்சியின் உச்சநிலையைக் காட்டுகிறது. பொருள்பாகுபாட்டு அடிப்படையில் பொருள் குறித்ததே சொல் என்னும் சிறப்பினையுடையது. தமிழிலக்கணம், உயர்திணை என்றும் அஃறிணை என்றும் பாகுபடுத்தியுள்ளதன் மூலம் அன்றைய தமிழ்ச் சமுதாயத்தின் அறிவு முதிர்ச்சி நிலையை அறிந்து வியக்கிறோம். இத்தகைய சிறப்புகளை யுள்ளடக்கிய தமிழ் பிறமொழியின் துணையின்றித் தனித்தியங்கும் ஆற்றலுடைய தன்னேரில்லா மொழி என்று உலக மொழியறிஞர்களால் ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது.

தொல்காப்பியத்திற்குப் பிறகு கடந்த ஈராயிரம் ஆண்டுக்கால இடைவெளியில் தமிழ்மொழியமைப்பில் ஏற்பட்ட மாற்றங்கள் மிகச் சிலவே. தொல்காப்பியர் காலத்திலேயே சொல்வளம் மிகுந்திருந்த மொழியின் இந்த நீண்டகால இடைவெளியிலும் மேலும் பற்பல புதிய சொற்களும், பொருள்களும் சேர்ந்துள்ளன. புதிதாக வளர்ந்துவரும் கருத்துகளைக் குறிக்கச் சொற்கள் பெருகுவதும் முன்னரே வழங்கும் சொற்களுக்குப் புதுப்பொருள்

உண்டாவதும் மொழிவளர்ச்சியில் இயல்பே, என்றாலும், பல்வேறு காரணங்களினால் பல்லாயிரக்கணக்கான தமிழ்ச் சொற்கள் வழக்கிழந்து விட்டன. சொற்களைப் பதிந்து வைக்கும் அகரமுதலி போன்ற ஊடகங்கள் இருந்திருக்குமேயானால் அவை வீழ்ந்துபடாமல் மேலும் பல உண்மைகளை உணர்த்திக் கொண்டேயிருக்கும்.

செந்தமிழ் இலக்கியங்களில் பயின்று வந்துள்ள சொற்கள் முதல் இன்றைய பேச்சு வழக்கிலுள்ள சொற்கள் வரை அனைத்தையும் உள்ளடக்கி, சொற்களின் வடிவம், பொருள், பிறப்பு போன்றவை பற்றிய தேவையான செய்திகளுடன் தொன்மையான சொற்கள், கலைச்சொற்கள், வட்டார வழக்குச் சொற்கள் என அனைத்தையும் கொண்டதாக விளங்க வேண்டும் என்னும் நோக்கத்தினைக் கொண்டது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி.

'இது சொற்பொருள் விளக்கும் சொற்களஞ்சியமாகவும், வேரும் விளக்கமும் தரும் சொற்பிறப்பு அகரமுதலியாகவும் விளங்கும் திறத்தது. தமிழின் நலங்கள் அனைத்தையும் உள்ளடக்கிய வரலாற்றுப் பெட்டகமாக விளங்க வேண்டும்' என்பது பாவாணரின் பெருவிருப்பமாகும். அதனை அடியொற்றிச் செல்வதே இவ்வகரமுதலி.

இதுவரை வெளிவந்துள்ள அகரமுதலியில் இடம் பெறாத சொற்களையும் சொற்பொருள்களையும் இடம் பெறச் செய்யும் செயற்பாட்டுடன் வழுவில்லாமல் பொருள் கூறும் பாங்கும், வெவ்வேறு மூலத்தினவாக விளங்கும் சொற்களைத் தனித்தனியாகப் பிரித்துக் காட்டும் தன்மையும் கொண்டது இவ்வகரமுதலி. சொற்களின் தோற்றம் வரலாறு ஆகியவற்றைக் குறிக்கும் தன்மையது என்றாலும் இது தமிழ்மொழியின் இயல்பு பற்றிய அடிப்படைத் தன்மைகளைக் காட்டும் திறத்தது.

அகரமுதலி என்பது ஒரு கருவிநூல் என்னும் உணர்வோடு கூர்ந்து நோக்கிச் செயற்படுத்த வேண்டும் என்பது மொழியறிஞர்களின் உள்ளக்கிடக்கை; மொழியார்வலர்களின் எதிர்பார்ப்பு.

தேவநேயப்பாவாணர் நூற்றாண்டில், அவரின் மொழிக் கனவுகள் நனவாக - தனித்தமிழ்ப் பற்று அனைவருக்கும் ஏற்பட - தமிழ் அரியணை ஏறிட, எங்கும் தமிழ் - எதிலும் தமிழ் - என்றும் தமிழ் என்கின்ற நோக்கம் நிறைவேறிட **மாண்புமிகு டாக்டர் புரட்சித்தலைவி அம்மா** அவர்களின் சீரிய தலைமையில் செம்மாந்து நடைபோடும் தமிழக அரசு முனைந்து செயலாற்றி வருகிறது.

இந்தக் காலகட்டத்தில் தமிழின் ஏற்றத்தைப் பாருக்குரைக்கும் இப்பைந்தமிழ் அகரமுதலி வெளிவருவது பெரிதும் மகிழ்ச்சி தருவதாகும். அடுத்தடுத்த மடலங்களும் தொடர்ந்து விரைவில் வெளிவரும் வகையில் நடவடிக்கை எடுக்கப்படும் என்னும் உறுதியோடு, இவ்வகரமுதலி வெளிவர உழைத்த அனைத்துப் பெருமக்களையும் பாராட்டி வாழ்த்துகிறேன்.

தமிழக அரசு, தமிழ் - தமிழின - தமிழ்நாட்டு வளர்ச்சிக்கும் மலர்ச்சிக்கும் தொடர்ந்து மேற்கொள்ளும் பணிகளுக்கு நல்லாதரவு தர வேண்டியது நற்றமிழ் அறிஞர்களின் பெருங்கடமையாகும்.

அன்புடன்

மு. தம்பிதுரை
24-4-2002

(மு. தம்பிதுரை)

**பு.ஏ. இராமையா,** இ.ஆ.ப.,
அரசுச் செயலாளர்




தமிழ்வளர்ச்சி - பண்பாடு மற்றும்
அறநிலையத்துறை,
தலைமைச் செயலகம்,
சென்னை - 600 009

நாள் : 20-4-2002

# அணிந்துரை

"ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும் - ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்"

என்னும் தண்டியலங்காரப் பாடலின்படி ஞாலத்தொன்மொழிகளுள் தாய்மையும் தலைமையும் கொண்டது தமிழ்மொழி. நாட்டு வரலாறு, மொழி வரலாறு எழுதப்படுவதுபோல், சொற்களுக்குப் பிறப்பு மூலம் கண்டு சொல் வரலாறு விளக்கும் அகரமுதலியைச் சொற்பிறப்புஅகரமுதலி என்பர்.

உலகின் பல மொழிகளில் வெளிவந்துள்ள சொற்பிறப்பு அகரமுதலி போல் தமிழிலும் சிறந்த சொற்பிறப்பியல் அகரமுதலியைப் பன்மடலங்களாக வெளியிடும் நோக்கில் தமிழக அரசால் உருவாக்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் தற்போது இரண்டாம் மடலத்தின் மூன்றாம் பாகத்தை (கெ - கௌ) வெளியிடுகின்றது.

பொதுவான அகரமுதலியைவிட இது பல்லாற்றானும் வேறுபட்டது. இனச்சொல் காட்டுதல், ஒரு பொருள் குறித்த பலசொல் காட்டுதல், ஒரு பொருளின் இன வகைகள் காட்டுதல், உண்மையான வேர் மூலத்தைப் பாவாணர் நூல்களில் பொதித்த நெறிமுறைகளாலும், மரபிலக்கணம், மொழியியல் கூறுகள், இலக்கியம், வரலாறு, கல்வெட்டு, உலக வழக்கு ஆகியவற்றின் அணுகுமுறைகளாலும் கண்டறிதல், இன்றியமையாத சொற்களுக்கு அகராதிமுறையும், களஞ்சியப்பண்பும் இணைந்த அரைக்கலைக்களஞ்சியப் பாங்குடன் சிறப்புக் குறிப்புகள் தருதல் போன்றவற்றைச் சான்றாகக் கூறலாம்.

தமிழ்மொழியின் தூய்மையைப் பேணவும், தாய்மையை நிலைநாட்டவும், செவ்விய பொருளறிந்து சொற்களைத் தரமாகப் பயன்படுத்தவும், ஆராய்ச்சியாளர்க்கு மொழியியல் புதைப்பொருள்களை அகழ்ந்து இவ்வகரமுதலித் தொகுப்புகள் பெரிதும் பயன்படுவனவாம்.

தாய்மொழி வழிக்கல்வியே சிறந்தது எனும் கருத்து ஓங்கியுள்ள இக்காலத்தில் தாய்மொழியின் வெற்றி வாகைக்கும், தாய்மொழிப் பற்றுக்கும் சொல்வளம் மிகவும் இன்றியமையாதது. அத்தகைய சொல்வளக் களஞ்சியமாக இவ்வகரமுதலித் தொகுப்புகள் விளங்கும்.

எழுநிலைமாடமும் வானளாவி நின்று அப்பெயர் பெற்றது. அதன் அமைப்புத் தேரை ஒத்ததாகும்" என்று கூறி மேன்மேலும் காட்டும் நுட்பமான கருத்து விளக்கம் ஆய்வாளர்களின் நுண்மான் நுழைபுலத்தைக் காட்டுகிறது. 'கோவில்' என்ற சொல்லை எடுத்துக்காட்டி "இறைவனுக்காக எழுப்பப்படும் ஆலயத்தைக் 'கோவில்' என்பதே மரபிலக்கிணத்திற்கு ஏற்றதாகும் எனத் தக்க சான்றுகள் வழி நிறுவியிருப்பதும், காலந்தோறும் 'கோவில்' அமைப்பு எவ்வாறெல்லாம் வளர்ந்து வந்திருக்கின்றது என்பதைத் தக்க சான்றுகளோடு காண்பித்து இருப்பதும் இத்தொகுப்பின் அருமைப்பாட்டை உயர்த்துவதாகும்.

வண்ணப்படங்களின் மூலமாக கெண்டை, கெளுத்தி, கோலா மீன் வகைகளையும் ஆடற்கலையின் கையமைதிகளையும், கோழி, கொக்கின் வகைகளையும் பழங்காலத்தில் மகளிர் எத்தனை வகையான 'கொண்டை' அணியும் செய்து வந்தார்கள் என்பதையும் அறிந்து மகிழ்கின்றோம். கொடிவேலி, கொடிப்பாலை, கொள்ளுக்காய்-வேளை, கொடிவயலை என்னும் மூலிகைகளை அழகுற அச்சிட்டுக் காட்டியிருப்பதும் இவ்வகரமுதலியின் எழிற்கோலத்தை இன்னமுதாய்த் தெரிவிப்பனவாம்.

மேலும் மொழிஞாயிறு பாவாணர் அவர்களின் ஆராய்ச்சியை அடியொட்டியும் அவர்தம் ஆராய்ச்சிக் குறிப்புகளைப் பலவிடங்களிலும் எடுத்துக்காட்டி, சொல்விளக்கங்கள் நிறுவியிருப்பதும் பாவாணர் காட்டிய நெறியில்தான், இவ்வரகமுதலியின் ஆய்வாளர்கள் சென்றுள்ளனர் என்பதைத் தெளிவுறக் காட்டுகின்றது. சான்றாகக் 'கொற்றி' என்னும் சொல்லைக் காணலாம். சொல் விளக்கத்தில் கொற்றி-1. சிறியது; 2. குட்டி, குஞ்சு; 3. குழந்தை, பிள்ளை; 4. பூனை; இதில் பூனை என்னும் சொல்லின் மறுவடிவங்கள், இப்பூனை என்னும் சொல் திராவிடமொழிகளில் எவ்வாறு வழங்கப்படுகிறது; ஐரோப்பிய மொழிகளில் எவ்வாறு வழங்கப்படுகிறது; உலகமொழிகளில் எவ்வாறு வழங்கப்படுகிறது என்பதையெல்லாம் தெளிவாகக் காட்டியுள்ளனர்.

மேலும், பூனையின் தாயகம் தமிழகமே என்பதை, "கொற்றி = குழந்தை - இளமைப்பெயர். கன்றோடு கூடிய கறவைமாடும் கொற்றி எனப்படும். இது குற்றி (சிறிய குழந்தை) என்பதன் திரிபு. குற்றி, குஞ்சு, பிள்ளை, என்பன குழந்தையைக் குறிக்கும் இளமைப் பெயர்கள். தமிழில் இச்சொல் இறந்துபட்டது. பழஞ்சேரநாட்டுத் தமிழின் திரிபே (வடசொற்செறிந்த) மலையாளமாயினும் 'கொற்றி' என்னும் இளமைப் பெயரைத் தக்க வைத்துக் கொண்டுள்ளது. வீட்டு வளர்ப்பு விலங்குகள் குழந்தைபோன்று கருதப்படுவதால் கிளியைப் பறக்கும்பிள்ளை என்றும் அணிற்பிள்ளையை ஓடும்பிள்ளை என்றும் பூனையை நடக்கும் பிள்ளை என்றும் வழங்கும் பழந்தமிழ்ச் சொல்லாட்சிகளை நோக்குக. பூனையைப் பிள்ளையாகக் கருதிய கரணியத்தால் தெலுங்கு மொழியில் 'பில்லி' (பிள்ளை) எனப்படுகிறது. கன்னடத்திலும் உலக மொழிகளிலும் 'கொத்தி' எனப்படுகிறது. இதனைச் சரியாகப் பகலில் கண்தெரியாத காரணத்தால் குருட்டுத்தனத்தைக் குறிக்கும் 'கொத்தை' என்ற சொல்லோடு இணைக்க வேண்டியதில்லை. கொத்தை என்பது குந்து. (குறைபாடு, ஊனம்) என்னும் சொல்லிலிருந்து குந்து --> கொந்து --> கொந்தை --> கொத்தை எனத் திரிந்து தமிழில் பார்வைக் குறைபாட்டைக் குறிக்கும் உருப்பெற்றது. "கொத்தைக்கு மூங்கர் வழிகாட்டுவித்து" (தேவா. 1040,2)

மேலும், வேரும் மூலமும் காட்டப்படுவதால் புதிய சொற்கள் வேண்டுமிடத்து பல்லாயிரம் புத்தம் புதிய படைப்புச் சொற்கள் உருவாக்கிக் கொள்ளப்படச் சொற்பிறப்பியல் அகரமுதலி வழிகாட்டும். ஆதலால் மொழி வளர்ச்சிக்கு ஏனைய அகராதிகளை விட சொற்பிறப்பியல் அகரமுதலி ஆணிவேராக அமைகிறது.

சொற்பிறப்பியல் அகரமுதலி உருவாக்குவதன் வாயிலாக அம்மொழியின் சொற்பிறப்பியல் நெறிமுறைகளையும், மொழியின் முன்மை, தொன்மை, தாய்மை, தலைமை, வன்மை ஆகியவற்றையும் நன்கு அறியலாம். எந்தெந்த மொழிகளிலிருந்து சொற்கள் எந்தெந்த மொழிகளுக்குச் சென்றுள்ளன என்னும் தகவல்களையும், எக் காலகட்டத்தில் இம் மாறுதல்கள் தோன்றின, ஏன் தோன்றின என்னும் வரலாற்றுப் பின்னணிகளையும் அறியலாம்.

அவ்வகையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் இரண்டாம் மடலத்தின் மூன்றாம் பாகம் இப்போது வெளிவருகின்றது. ஒவ்வொரு சொல்லிலும், பதிப்பாசிரியர்கள், தொகுப்பாளர்கள் அனைவரின் உழைப்பும் அருமையும் தெள்ளத் தெளிவாகப் புலப்படுகின்றன. இருப்பினும் இவ்வியக்கப் பணியாளர்கள் இன்னும் விரைந்து செயற்பட்டுப் பாவாணர் எண்ணிய வண்ணம் எல்லா மடலங்களையும் அழகுற வெளிக் கொணர்வார்கள் என்று நம்புகிறேன். **மாண்புமிகு தமிழக முதல்வர்** அவர்களின் ஆணையை நிறைவேற்றும் வண்ணம் இத் துறைப்பதிப்புகள் இன்னும் விரைந்து பன்மடலங்களாக வெளியிடப்படவுள்ளன. இவ்வியக்ககம் செவ்வனே நடைபெற அனைத்து உதவிகளையும் ஒருங்கே அளித்துவரும் **மாண்புமிகு தமிழக முதல்வர்** அவர்களுக்கும், **மாண்புமிகு கல்வி அமைச்சர்** அவர்களுக்கும் நன்றியை உரித்தாக்கி மகிழ்கிறேன். இந்த அரிய படைப்பினைத் தமிழுலகம் நன்கு பயன்படுத்திக் கொள்ளும் என்பதில் ஐயமில்லை.

அன்புடன்

20|4|2002

(பு.ஏ. இராமையா)

**தா. சந்திரசேகரன்,** இ.ஆ.ப.,
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு).



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்,
அரசு அருங்காட்சியக வளாகம்,
எழும்பூர், சென்னை - 600 008.

நாள் : 18-4-2002

# பதிப்புரை

தொன்மையும் தூய்மையும் சான்ற அன்னைத் தமிழின் வளர்ச்சிக்கு அடிப்படையான பணிகளில் அகரமுதலி உருவாக்குவதும் தலைசிறந்த தமிழ்ப்பணியாகும். ஆங்கில மொழியில் நூற்றுக்கணக்கான அகரமுதலிகள் வெளியிடப்பட்டிருப்பதால் ஆங்கில மொழியின் வளர்ச்சி உலக அரங்கில் உயர்ந்து நிற்கின்றது என உலக அறிஞர்கள் ஒப்புக்கொள்கின்றனர்.

சொல்லின் பொருளை மிகத் தெளிவாகப் புரிந்துகொள்வதற்கும், புதிய படைப்புச் சொற்களை உருவாக்குவதற்கும், மொழியாராய்ச்சியாளர்களுக்கும் மொழியைக் கற்கும் பிற மொழியாளர்களுக்கும் அறியும் வழியில் உலகில் உள்ள பல மொழிகளிலும் சொற்பிறப்பு அகரமுதலிகள் வெளியிடப்பட்டுள்ளன. இந்திய மொழிகளில் வடமொழி (சமஸ்கிருதம்), மராத்தி, கூர்ச்சரம் (குசராத்தி), நேபாளம், தெலுங்கு ஆகிய மொழிகளில் சொற்பிறப்பு அகரமுதலிகள் வெளிவந்துள்ளன. ஆங்கிலத்தில் மட்டும் 5 சொற்பிறப்பியல் அகரமுதலிகள் வெளிவந்துள்ளன. தமிழில் முழுமையான சொற்பிறப்பு அகரமுதலி வெளிவராத குறையை இவ்வகரமுதலித் திட்டம் நிறைவாக்குகிறது. எந்த வேரிலிருந்து எந்தச் சொல் பிறந்தது என்பதையும் பிறமொழியிலிருந்து கடன்பெற்ற சொல்லாக இருந்தால் எம்மொழிச்சொல் எவ்வாறு திரிந்தது என்பதையும், அச்சொல் அம்மொழியின் இனமொழிகளில் எவ்வாறு வழங்குகிறது என்பதையும், அச்சொல்லின் மறுவடிவங்கள் எவை என்பதையும், சொல் வடிவிலும் பொருள் வடிவிலும் எவ்வகைத் திரிபுகளையும், மாற்றங்களையும் அச்சொல் அடைந்துள்ளது என்பதையும் விரிவாக ஆராய்வது சொற்பிறப்பு அகரமுதலியின் நோக்கமெனலாம். அவ்வகையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் முதன்மடல மூன்று பாகங்களும், இரண்டாம் மடல இரண்டு பாகங்களும் வெளிவந்தபின் தற்போது இரண்டாம் மடலத்தின் மூன்றாம் பாகம் (கெ-கௌ) வெளிவருகின்றது.

## அருஞ்சொல் விளக்கங்கள் :-

'கேள்வி' என்ற சொல்லுக்குத்தான் எத்தனை வகையான பொருள்கள்; இத்தொகுப்பில் 14 வகையான சொற்பொருள் நுட்பம் காட்டப்படுவதுடன், திராவிட இனமொழிகளில் அச்சொல் வழங்கும் பான்மை, 'கேள்வி' என்பதற்குரிய சொற்பொருள் விளக்கம் ஆகியன காட்டப்பட்டுள்ள பாங்கினைப் பார்க்கும்போது இத்துறை ஆய்வாளர்களின் உழைப்பின் மேன்மை புலப்படுகின்றது.

மேலும் 'கோபுரம்' என்ற சொல்லிற்குப் பாவாணர் காட்டியவாறே "கோ-அரசு, தலைமை; புரம் = உயர்வு, உயர்ந்த கட்டடம்; புரை - உயர்ச்சி, 'புரை உயர்பாகும்' (தொல்.உரி.4) வேந்தன் இருந்த உயர்ந்த எழுநிலைக் கட்டடம் முதலிற் கோபுரம் எனப்பட்டது. பின்பு கோயிலில் அமைந்த

"இன்னான் என்பது கண்ணாற்கொத்தை கல்லான் முடவன்" என்பன (தொல்.வேற்.11.இளம்.உரை) என்னும் சொல்லாட்சிகளை நோக்குக. ஐரோப்பாவில் கி.பி. 3-ஆம் நூற்றாண்டு வரை பூனை இருந்ததில்லை என்றும், அது எகிப்து நாட்டிலிருந்து இங்கு கொண்டுவரப்பட்டதென்றும் 'Cat' என்னும் அதன் பெயர் எகிப்துச் சொல்லென்றும் மாக்சுமுல்லர் கருதினார். பூனை நீண்டகாலமாக எகிப்து நாட்டில் வளர்க்கப்பட்டு வந்தமையாலும், ஓர் எகிப்திய பெண் தெய்வம் பூனைத் தலைகொண்டிருத்தலாலும், ஐரோப்பாவிற்கு எகிப்து அண்மையிலிருப்பதாலும், அவர் கூற்றுப் பொருத்தமாகவே தோன்றுகிறது. ஆயினும் குமரி நாடே மானிடர் தோன்றியதாலும் எகிப்து நாட்டோடு நீண்டகாலமாக நீர் வாணிகமும் நில வாணிகமும் இருந்து வந்ததாலும், வெருகு (பூனை) தமிழகத்தினின்றே எகிப்துக்குச் சென்றிருத்தல் வேண்டும். அதனால் அதன் பெயரும் த்மிழ்ச் சொல்லாகவே இருத்தல் வேண்டும்" என்று பாவாணர் குறிப்பிட்டுள்ளதை ஒப்பு நோக்குக (செந்தமிழ்ச்செல்வி பக். 134-136).

பல்வகை அகரமுதலிகளிலிருந்தும், வழக்கிலிருந்தும் தமிழ்ச்சொற்களைத் தொகுத்தல் - பாவாணர் வழி விளக்கம் எழுதுதல் - அவற்றை நூலாகப் பதிப்பித்தல் ஆகிய முப்பெரும் பணிகளிலும் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் பதிப்பாசிரியர்கள், தொகுப்பாளர்கள், பணியாளர்கள் அனைவரும் மேன்மேலும் உழைத்து அடுத்தடுத்த மடலங்களையெல்லாம் விரைவில் வெளிக்கொணர அரும்பாடுபட வேண்டும் என்று அகமிக விழைகிறேன். எல்லாவற்றுக்கும் மேலாகத் தமிழ்நலம் பேணும் இச்செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்புகள் விரைந்து வெளிவருவதற்குச் செயலாணை வழங்கிச் சிறப்பிக்கின்ற **மாண்புமிகு முதல்வர்** அவர்களுக்கு இத்துறையின் பொறுப்பு இயக்குநர் என்ற முறையில் எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் மாண்புமிகு முதல்வர் அவர்களின் ஆணையின் வண்ணம் ஆக்கமும் ஊக்கமும் தந்து எம்மைச் செயற்படுத்தும் **மாண்புமிகு கல்வி அமைச்சர்** அவர்களுக்கும், எம் **துறைச் செயலாளர்** அவர்களுக்கும் எனது மேலான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புடன்

தா. சந்திரசேகரன் 15.4.02

(தா. சந்திரசேகரன்)

# வண்ணப்படங்களின் பட்டியல்

# வண்ணப்படங்களின் பட்டியல்

# வண்ணப்படங்களின் பட்டியல்

# வண்ணப்படங்களின் பட்டியல்

# வண்ணப்படங்களின் பட்டியல்

| படத்தாள் எண் | படத்தின் பெயர் | எதிரும் பக்கம் |
|---|---|---|

நூற்றாண்டு விழா காணும்

# மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர்

**(7.2.1902 – 7.2.2002)**



போற்றியோ ராயிரம் போற்றி மொழியுலகில்
நூற்றாண்டு கண்டநம் பாவாணர் தோன்றலுக்கு
வாழியரோ வாழிதமிழ் வாழ்விக்க நூற்றாண்டு
ஓங்குவிழா கொண்டாடும் அரசு.

பாவாணர் நூலகம் என்னும் பெயர்வைத்தார்
நாவாரப் போற்றும் புரட்சித் தலைவர்
புரட்சித் தலைவி சிறப்பித்தார் நூற்றாண்டு
அரியவிழா நாடெங்கும் கண்டு.

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## கெ

**கெ** *ke.* பெ.(n.) பின்னண்ண ககர மெய்: 'க்' மற்றும் முன்னுயிர் 'எ' இரண்டும் இணைந்த அசை எழுத்து; the syllabic letter representing velar consonant 'க்' with front vowel 'எ'.

*[க் + எ = கெ.]*

**கெக்கட்டம்** *kekkaṭṭam,* பெ.(n.) ***கெக்களம்*** பார்க்க; see *kekkaḷam.* கெக்கட்டமிட்டுச் சிரிக்கிறான் (உ.வ.).

**தெ.** கெக்கிலி, கெக்கலு; **துட.** கெக்.

*[கெக்கலி → கெக்களி → கெக்கடி → கெக்கட்டம்.]*

**த.** கெக்கட்டம் > **Skt.** gagghatta.

**கெக்கரி¹-த்தல்** *kekkari-,* 4 செ.கு.வி.(v.i.) மிக மிக இனித்தல்; to taste very sweet.

*[கெக்கலி → கெக்கரி.]*

**கெக்கரி²-த்தல்** *kekkari-,* 4 செ.கு.வி.(v.i.) கொக்கரித்தல்; to cackle, cluck, as a hen.

*[கொக்கரி → கெக்கரி. (ஒலிக்குறிப்புச் சொல்).]*

**கெக்கரி³-த்தல்** *kekkari-,* 4 செ.கு.வி.(v.i.) சினத்தல்; to get angry.

*[கொக்கரி → கெக்கரி.]*

**கெக்கரிக்காய்** *kekkari-k-kāy,* பெ.(n.) முள் வெள்ளரி; kakri-melon.

**க.** கெக்கரிகெ (முலாம்பழவகை); **து.** சக்கர்பெ.

*[கெக்கரி + காய். குள் + கரி – குக்கரி. கக்கரி → கெக்கரி.]*



கெக்கரிக்காய் (கக்கரிக்காய்)

**கெக்கல்** *kekkal,* பெ. (n.) வாய்விட்டுச் சிரிக்கும் ஒலிக்குறிப்பு; sound denoting loud laughter.

*[கெக் – ஒலிக்குறிப்பு. கெக் → கெக்கல்.]*

**கெக்கலி¹-த்தல்** *kekkali-,* 4 செ.கு.வி.(v.i.) குஞ்சுகளைப் பருந்தின் பார்வையினின்றும் காப்பதற்காகத் தாய்க்கோழி ஒலி எழுப்புதல்; clucking of a hen to protect the chicken from the enemy.

**க.** கெக்கலிசு; **தெ.** கெக்கலின்சு; **E.** cackles.

*[கெக் – ஒலிக்குறிப்பு இடைச்சொல். கெக் → கெக்கலி.]*

**கெக்கலி²-த்தல்** *kekkali-,* 4 செ.கு.வி.(v.i.) 1. குலுங்கச் சிரித்தல்; to laugh violently, so that one's sides shake. 2. எளனமாகச் சிரித்தல்; to laugh in a derisive manner.

**மறுவ.** கேக்கலி.

**ம.** கெக்கலிக்குக; **க** கெக்களிசு; **தெ.** கெக்கலின்சு.

*[கெக்கல் → கெக்கலி.]*

**கெக்கலி³** *kekkali,* பெ.(n.) இனிமை; sweetness.

**ம.** கிக்கிளி; **தெ.** கெக்கலி.

*[கக்கம் → கக்கலி → கிக்கலி → கெக்கலி: கக்கத்தில் விரல் வைத்துச் சிரிக்கச்செய்தல். சிரித்தல் சிரிப்பினால் பெறும் இன்ப வுணர்வையும் குறித்தது.]*

**கெக்கலி கொட்டு-தல்** *kekkali-koṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) குலுங்கக் குலுங்கச் சிரித்தல்; to laugh violently so that one's sides shake. *"கண்டவ ரெவருங் கெக்கலி கொட்டவே" (இராமநா. சுந்தா. 4).*

*[கெக்கலி + கொட்டு-.]*

**கெக்கலிப்படு-தல்** *kekkali-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ***கெக்கலி*** பார்க்க; see *kekkali-.* *"அக்களிப்போடு கெக்கலிப்பட" (சர்வச. கீர்த். 186).*

*[கெக்கலி + படு-.]*

**கெக்கலிமூட்டு-தல்** *kekkali-mūṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) சிரிப்பூட்டுதல், சிரிக்கவைத்தல்; to make one laugh.

*[கிக்கலி → கெக்கலி + மூட்டு-.]*

**கெக்களம்** *kekkaḷam* பெ.(n.) வாய்விட்டுச் சிரிக்கை; loud or open laughter.

*[கெக்கலி → கெக்களி → கெக்களம் (ஒலிக்குறிப்புச் சொல்).]*

**கெக்களி-த்தல்** *kekkaḷi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. நெளிதல்; to bend, writhe; to be twisted, distorted. 2. துருத்துதல்; to be pushed out, to protrude. 3. தோற்றுப்போதல்; to be defeated or vanquished.

*[ஒருகா. செக்கலி → கெக்களி.]*

**கெக்கு-தல்** *kekku-,* 5 செ.கு.வி.(v.i.) கால்நடைகளை மேய்க்கும் போது ஒலி எழுப்புதல்; to shout in training cattle.

**க.** கெக்கு.

*[கக்கு → கெக்கு (கக்குதல் போன்று அடித் தொண்டையால் ஒலியெழுப்புதல்).]*

**கெக்கை** *kekkai,* பெ. (n.) கன்னம்; cheek.

**க.** கெக்கெ; **தெ.** செக்கு, செங்கெ.

*[செவிப்பட்டை → செப்பட்டை → செக்கெ → கெக்கெ → கெக்கை (கொ.வ.)]*

**கெகராசி** *kegarāśi,* பெ. (n.) செடிவகை, பூலா (மலை.); black berried feather foil.

*[குவை → கிவை → கிகை + ராசி - கிகைராசி → கெகராசி (கொ.வ.).]*

**கெங்கபாடி** *keṅgapāḍi,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Viḻuppuram Dt.

*[கங்கன் + பாடி - கங்கபாடி → கெங்கபாடி (கொ.வ.).]*

**கெங்கரை** *keṅgarai,* பெ.(n.) நீலகிரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Nīlagiri Dt.

*[கங்கன் + கரை - கங்கங்கரை → கெங்கரை (கொ.வ.).]*

**கெங்கலு கண்டிகை** *keṅgalu-kaṇḍigai,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tiruvaḷḷūr Dt.

*[கங்கல் → கெங்கலு (கொ.வ.) + கண்டிகை]*

**கெங்காதீரம்** *keṅgā-tīram,* பெ.(n.) கங்கைக்கரை; bank of Ganges. "கெங்கா தீரத்துத் தேசம்" (பெருங்.உஞ்சை.36:220).

*[கங்கை → கெங்கை + தீரம் - கெங்காதீரம்.]*

**கெங்கை** *keṅgai,* பெ.(n.) கங்கையாறு; river Ganges.

*[கங்கை → கெங்கை (கொ.வ.).]*

**கெங்கையாடிக் குப்பம்** *keṅgai-y-āḍi-k-kuppam,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tiruvaḷḷūr Dt.

*[கங்கை → கெங்கை + ஆடி - கெங்கையாடி + குப்பம்.]*

**கெச்சக்காய்** *kecca-k-kāy* பெ.(n.) 1. கழற்சிக்காய்; molucca-beans. 2. கழற்கொடி; molucca-bean-Caesalpina bonducella.

**க.** கெச்சகாய்; **தெ.** கட்ச்சகாய.

*[கழற்சிக்காய் → கெச்சக்காய் (கொ.வ.).]*



கெச்சக்காய்

**கெச்சக்கீயம்** *kecca-k-kīyam,* பெ.(n.) தூதுவேளை; three-lobed night-shade.

*[கச்சல் → கெச்சல் + கீயம். கச்சல் = மென்மை, இளமை.]*

**கெச்சங்கெட்டவன்** *keccaṅ-keṭṭavaṉ,* பெ.(n.) நாணமில்லாதவன்; shameless man, person void of self-respect.

*[கெச்சம் + கெட்டவன் (கெச்சம் = நாணம்).]*

**கெச்சச்சிலந்தி** *kecca-c-cilandi,* பெ.(n.) ***கெச்சைச் சிலந்தி*** பார்க்க; see *keccai-c-cilandi.*

**ம.** கெச்சச்சிலந்தி.

*[கெச்சம் + சிலந்தி.]*

**கெச்சசீரம்** *kecca-śīram,* பெ.(n.) முல்லை; jasmine.

*[கெச்சம் → கெச்சசீரம். கெச்சம் = முல்லை.]*

**கெச்சட்டிகை** *keccaṭṭigai,* பெ.(n.) கழுத்தணிவகை; a kind of ornament worn on the neck.

*[தெ. கெச்சம் + அட்டிகை.]*

**கெச்சம்**[1] *keccam* பெ.(n.) நாணம்; shame, sensitiveness, dread of evil.

படை. சிக்கு; Skt. lajja.

[சிணுங்கு → சிக்கு → சிக்கம் → கெச்சம்.]

**கெச்சம்**[2] *keccam.* பெ.(n.) 1. முல்லை (அக.நி.); wild jasmine. 2. அரசு (சங்.அக.); pipal.

[குச்சு → குச்சம் (ஊசிமுனை போன்றது) → கெச்சம்.]

**கெச்சம்**[3] *keccam* பெ.(n.) ***கெச்சை*** பார்க்க; see *keccai.* "பெண்க ளணிமணிக் கெச்சமடா" (குற்றா. குற. 123: 12).

**ம.** கெச்ச; **க., தெ.** கச்செ; **பட.** கக்கரெ.

[கழஞ்சு → கழஞ்சம் → கச்சம் → கெச்சம்.]

**கெச்சல்நாயக்கன்பட்டி** *keccal-nāyakkan-patti.* பெ.(n.) சேலம் மாவட்டத்துச் சிற்றூர்: a village in Salem Dt.

[கெச்சம் → கெச்சில் → கெச்சல் + நாயக்கன் + பட்டி.]

**கெச்சனா** *keccanā.* பெ.(n.) கையாந்தகரை; eclipse plant.

[கெச்சம் → கெச்சனா.]

**கெச்சனித்தல்** *keccanittal,* தொ.பெ.(vbl.n.) 1. கூடுதல்: joining. 2. சேருதல்; uniting.

[குள் → குச்சு → குச்சனி → கெச்சனி → கெச்சனித்தல் (கொ.வ.).]

**கெச்சி** *kecci* பெ.(n.) பேய்த்தும்மட்டி வகை (சங்.அக.); bitter water-melon.

**Skt.** gavākṣi.

[கிச்சு → கெச்சு → கெச்சி.]

**கெச்சிகா** *keccigā.* பெ.(n.) மயிற்றலைப் பூடு; peacock crest plant.

[குச்சி → குச்சிகை → கெச்சிகா (கொ.வ.).]

**கெச்சிதம்** *keccidam.* பெ.(n.) 1. பெருமிதம் (இ.வ.); majestic air. 2. குணமடைந்துவருகை; improvement in health. உடம்பு கெச்சிதமாய் வருகிறது (இ.வ.). 3. முழக்கம்; roaring noise.

[கச்சிதம் → கெச்சிதம்.]

**கெச்சிநடை** *kecci-nadai* பெ.(n.) ***கெச்சைநடை*** பார்க்க; see *keccai-nadai.*

[கச்சிதம் → கெச்சித(ப்) → கெச்சி - நடை.]

**கெச்சிலாபுரம்** *keccilā-puram.* பெ.(n.) தூத்துக்குடி மாவட்டத்துச் சிற்றூர்: a village in Tūttukkudi Dt.

[கெச்சம் → கெச்சில் + புரம்.]

**கெச்சுக்கெச்செனல்** *keccu-k-keccenal.* பெ.(n.) 1. கீச்சிடுதற் குறிப்பு; onom. expr. signifying chirping, as of a lizard. 2. துன்புறுத்துதற் குறிப்பு; expr. signifying teasing, harassing.

[கெச்சு + கெச்சு + எனல்.]

**கெச்சுருட்டி** *keccurutti,* பெ.(n.) திப்பிலி; long pepper.

[கச்சல் → கெச்சல் → கெச்சு + உருட்டி]

**கெச்சை** *keccai* பெ.(n.) சலங்கை; tinkling bells worn around the ankle. "அடியிடத்தே சமைத்துக்கட்டின... கெச்சையும்" (கலித். 96, உரை).

**ம.** கெச்ச; **க.** கச்சு, கெச்செ; **து.** கெச்ச, கெச்செ, கச்செ; **தெ.** கச்சியா, கச்செ; **பட.** கக்கரெ; **துட.** கிச்; **குட.** கெச்செ; **கோத.** கெச்.

[கழஞ்சு → கழஞ்சம் → கச்சம் → கெச்சம் → கெச்சை.]

**கெச்சைகட்டு-தல்** *keccai-k-kattu-,* 5 செ.குன்றா. வி.(v.t.) 1. நாடகம் ஆடுவதற்காகக் காலில் கச்சை கட்டுதல்: to adorn anklet for dance. 2. அணியமாதல்; (சோநா.) to get ready.

**ம.** கெச்சகெட்டுக.

[கெச்சை + கட்டு-.]

**கெச்சைக்குதிரை** *keccai-k-kudirai.* பெ.(n.) ஒலிக்கும் கெச்சை அணிந்த குதிரை; horse with anklet of tinkling bells.

[கெச்சை + குதிரை.]

**கெச்சைக்கொலுசு** *keccai-k-kolusu* பெ.(n.) ஒலிக்கும் முத்துகளையுடைய கொலுசு: anklet of tinkling silver bells.

[கெச்சை + கொலுசு.]

**கெச்சைச்சிலந்தி** *keccai-c-cilandi.* பெ.(n.) கெச்சைமணி கட்டியதுபோல் காலில் உண்டாகும் சிரங்கு; a kind of eruption on the foot (சோநா.).

**ம.** கெச்சச்சிலந்தி.

[கெச்சை + சிலந்தி.]

**கெச்சைநடை** *keccai-nadai.* பெ.(n.) பெருமித நடை (வின்.); pompous or affected gait.

[கெச்சை + நடை.]

**கெச்சைமிதி** *keccai-midi,* பெ.(n.) 1. கூத்தின் விரைந்த நடை; a quick or hurried step in dancing. 2. குதிரை விரைந்துசெல்லும் நடைவகை; rapid pace of

a horse. கெச்சைமிதிப்பிலே போ. 3. பெருமித நடை: pompous or affected gait.

[கெச்சை + மிதி.]

**கெசக்கன்னி** *kesa-k-kanni.* பெ.(n.) 1. வெருகு (மலை.); a tuberous-rooted herb. 2. மொந்தன் வாழை; stout banana (சா.அக.).

[கச்சல் → கெசல் + கன்னி.]

**கெசந்தாதி** *kesandādi,* பெ.(n.) அரசமரம்; pipal tree (சா.அக.).

**மறுவ.** கெசாசனை.

[குச்சு → கெச்சு → கெச்சந்தல் → கெசந்தாதி (கூரிய இலையுடையது).]

**கெசனிக்கீரை** *kesani-k-kirai.* பெ.(n.) கூரிய இலையுடைய கீரை; a kind of greens.

[குச்சு → கெச்சு → கெச்சனி → கெசனி + கீரை.]

**கெஞ்சம்பட்டி** *kenjam-patti,* பெ.(n.) மதுரை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Madurai Dt.

[கெச்சம் (முல்லைக்கொடி, அரசமரம்) → கெஞ்சம் + பட்டி.]

**கெஞ்சல்** *kenjal,* தொ.பெ. (vbl.n.) இரக்கமான வேண்டுகோள்; imploring, pleading, entreaty, உன் கெஞ்சலுக்கு அவன் மசியமாட்டான் (உ.வ.).

**ம.** கெஞ்சல்.

[கெஞ்சு + அல். 'அல்' தொ.பெ.ஈறு.]

**கெஞ்சி** *kenji,* பெ.(n.) சீந்தில்; moon-creeper.

[கொளுஞ்சி → கொஞ்சி → கெஞ்சி.]

**கெஞ்சிக்கேள்-தல் (கெஞ்சிக்கேட்டல்)** *kenji-k-kēl-,* 11 செ.குன்றாவி. (v.t.) பணிவான குரலுடன் வேண்டுதல்; to beg, entreat, beseech.

[கெஞ்சு + இ + கேள்.]

**கெஞ்சு-தல்** *kenju-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. இரந்து குறையுறுதல்; to beg humbly; to entreat, crave, beseech with supplicating gestures. *"கெஞ்சு மாதங்கமுகம் பார்த்திரங்கும்" (தனிப்பா. 1.339, 50).* 2. இரக்கமாக வேண்டுதல்; to implore, to plead. உங்களைக் கெஞ்சிக்கேட்டுக் கொள்கின்றேன். இந்த முறை மட்டும் மன்னித்து விடுங்கள் (உ.வ.).

**ம.** கெஞ்சுக., கிஞ்சுக; **கோத.** கென்ச்; **கோண்.** கேன்சானா; **பட.** கெஞ்சு; **மா.** க்வெகெ(கேள்).

**Skt.** khanj

[குழைஞ்சு → கஞ்சு → கெஞ்சு (கொ.வ.).]

**கெஞ்சுதல்** *kenjudal.* தொ.பெ. (vbl.n.) ***கெஞ்சல்*** பார்க்க; see *kenjal.*

[கெஞ்சு+தல். 'தல்' தொ.பெ.ஈறு.]

**கெட்ட** *ketta.* பெ.எ. (adj.) 1. அழிந்த; bad, ruined. *'கெட்ட குடியே கெடும்' (பழ.).* 2. தீமை விளைவிக்கிற; harmful. கெட்ட பழக்கத்திற்கு அடிமையாகிவிடாதே. 3. தவறான; mistaken. உனக்கு என்ன கெட்ட நேரமோ? 4. ஒழுக்கமில்லாத; evil; bad conduct. உனது கெட்ட நண்பனே இந்த நிலைக்குக் காரணம். 5. மோசமான; obnoxious. இந்தக் கெட்ட நாற்றம் எங்கிருந்து வருகிறது. 6. பதனழிந்த; spoiled. 7. அணைந்த (விளக்கு); having become extinguished (சேரநா.). 8. காணாமல் போன, இல்லாமலான; lost, absent.

**ம., க., குட., து., பட.** கெட்ட; **தெ.** செட்ட, செடு.

**Gk.** kakos. **Laos.** hai; **Ahom.** khyā. **Toungh-tem.** kay. **Talaim vmon.** hakhā. **Kūmi.** hauio; **Kungcheng bung.** cuttko. **Gyami.** hoñtimyā; **Basq.** gaizto, cesto.

[கெடு → கெட்ட.]

**கெட்ட கண்** *ketta-kan.* பெ.(n.) 1. கொள்ளிக் கண்; evil eye. 2. குருட்டுக் கண்; blind eye.

[கெட்ட + கண்.]

**கெட்ட காரியம்** *ketta-kāriyam,* பெ.(n.) ***கெட்ட செயல்*** பார்க்க; see *ketta-seyal.*

**ம.** கெட்டகார்யம்.

[கெட்ட + காரியம்.]

**கெட்ட காலம்** *ketta-kālam,* பெ.(n.) தீய நேரம்; inauspicious time, bad time.

**ம.** கெடுகாலம்.

[கெட்ட + காலம்.]

**கெட்டகுடி** *ketta-kudi,* பெ.(n.) நன்கு வாழ்ந்து, பின் தாழ்ந்தபோன குடும்பம்; the family once rich but now poor. *'பட்ட காலிலேபடும் கெட்ட குடியேகெடும்' (பழ.).*

[கெட்ட + குடி.]

**கெட்ட குடும்பம்** *ketta-kudumbam.* பெ.(n.) ***கெட்ட குடி*** பார்க்க; see *ketta-kudi.*

[கெட்ட + குடும்பம்.]

**கெட்டகுணம்** *ketta-gunam*, பெ.(n.) தீயபண்பு; bad character, evil nature.

க. கெட்ட கொண; து. கெட்டகுண.

*[கெட்ட + குணம்.]*

**கெட்டகேடு** *ketta-kēdu*, பெ.(n.) 1. தாழ்நிலையைக் குறிக்கும் ஓர் இழிசொல்; a term of contempt implying utter degradation or destitution. நீ கெட்ட கேட்டுக்கு உனக்கு எண்ணெயும் வேண்டுமா? 2. அதிகக் கேடு; high blemish.

*[கெட்ட + கேடு.]*

**கெட்டகோபம்** *ketta-kōbam*, பெ.(n.) ***கெட்ட சினம்*** பார்க்க; see *ketta-šinam*. அவருக்குக் கெட்ட கோபம் வரும்.

*[கெட்ட + கோபம்.]*

**கெட்டசமயம்** *ketta-šamayam*, பெ.(n.) ***கெட்ட நேரம்*** பார்க்க; see *ketta-nēram*.

*[கெட்ட + சமயம்.]*

**கெட்டசினம்** *ketta-šinam* பெ.(n.) கட்டுப்படுத்த முடியாத சினம்; seething rage.

*[கெட்ட + சினம்.]*

**கெட்டசெயல்** *ketta-šeyal*, பெ.(n.) 1. அழிவைத்தரும் அல்லது இழப்பைத் தரும் செயல்; activity leading to loss, guin. 2. தீய செயல்; bad deed.

ம. கெடுகாரியம்.

*[கெட்ட + செயல்.]*

**கெட்டணை** *kettanai* பெ.(n.) இறுகும்படி கெட்டியாதல்; ramming, beating down.

*[கட்டி → கெட்டி → கெட்டணை.]*

**கெட்டதனம்** *ketta-tanam* பெ.(n.) ***கெட்ட நடத்தை*** பார்க்க; see *ketta-nadattai*.

க. கெட்டதன, கெடுகுதன; தெ. செட்டதனமு; து. கெட்டதன.

*[கெடு → கெட்ட + தனம்.]*

**கெட்டநகம்** *ketta-nagam* பெ.(n.) சொத்தை உகிர் (நகம்); bad nail.

*[கெட்ட + நகம்.]*

**கெட்டநடத்தை**[1] *ketta-nadattai*, பெ.(n.) இருமனப் பெண்டிர்; prostitution or loose morality especially in woman.

*[கெட்ட + நடத்தை.]*

**கெட்டநடத்தை**[2] *ketta-nadattai*, பெ.(n.) தீயொழுக்கம்; bad, immoral conduct.

க., து. கெட்ட நடதெ.

*[கெடு → கெட்ட + நடத்தை.]*

**கெட்டநடவடிக்கை** *ketta-nadavadikkai*, பெ.(n.) தீய செயல்; wrong actions.

ம. கெடு நடவடிக்கை.

*[கெட்ட + நடவடிக்கை.]*

**கெட்டநடை** *ketta-nadai*, பெ.(n.) ***கெட்ட நடத்தை***[2] பார்க்க; see *ketta-nadattai*.

*[கெட்ட + நடை.]*

**கெட்டநாக்கு** *ketta-nākku*, பெ.(n.) தீய நாக்கு; evil tongue.

மறுவ. கருநாக்கு.

*[கெட்ட + நாக்கு.]*

**கெட்டநாற்றம்** *ketta-nārram*, பெ.(n.) தீய நாற்றம்; முடைநாற்றம்; bad, offensive, stench obnoxious smell.

*[கெட்ட + நாற்றம்.]*

நாறு → நாற்றம். பழந்தமிழில் நாற்றம் நறுமணத்தையே குறித்தது. இக்காலத்தில் இழிபொருளைக் குறிப்பதாயிற்று.

**கெட்ட நிலை** *ketta-nilai*, பெ.(n.) பிசகான நிலை; malposition as of intestines, uterus (சா.அக.).

*[கெட்ட + நிலை.]*

**கெட்டநேரம்** *ketta-nēram*, பெ.(n.) தீய நேரம்; bad time, inauspicious time.

*[கெட்ட + நேரம்.]*

**கெட்டநோய்** *ketta-nōy*, பெ.(n.) 1. சிக்கலான நோய்; disease attended with complications. 2. கொடிய நோய்; a malignant disease. 3. பேரிடர் (அபாயமான) நோய்; dangerous disease. 4. பிறப்புறுப்புகளில் உண்டாகும் நோய் (மேக நோய்); venereal disease. 5. உயிர் பறிக்கும் கொள்ளை நோய்கள்; diseases such as cholera, small-pox, tuberculosis, consumption, plague, etc.

மறுவ. கெட்ட வியாதி.

*[கெட்ட + நோய்.]*

**கெட்டபல்** *ketta-pal,* பெ.(n.) **1.** சொத்தைப் பல்; disintegrated tooth. 2. நச்சுப்பல்; teeth as a cause for uttering bad predictions which turn out to become true.

*[கெட்ட + பல்.]*

**கெட்டபழக்கம்** *ketta-palakkam* பெ.(n.) தீயபழக்கம்; bad habit.

**து.** கெட்டப்பேச, கெட்டப்பேசொ.

*[கெட்ட + பழக்கம்.]*

**கெட்டபுத்தி** *ketta-putti* பெ.(n.) ***கெட்டவறிவு*** பார்க்க; see *ketta-v-arivu.*

*[கெட்ட + புத்தி.]*

**கெட்டபெயர்** *ketta-peyar,* பெ.(n.) கண்டிக்கத் தக்க நடத்தையில் கிடைக்கும் அவப்பெயர்; bad name arising from reprehensible behaviour. உன்னால் நம் குடும்பத்துக்கே கெட்ட பெயர்.

*[கெட்ட + பெயர்.]*

**கெட்டபேச்சு** *ketta-pēccu,* பெ.(n.) தீய பேச்சு; foul talk, insulting speech.

**க.** கெட்ட நுடி; **து.** கெட்டபாதெர; **பட.** கெட்ட மாது.

*[கெடு → கெட்ட + பேச்சு.]*

**கெட்டபேர்** *ketta-pēr,* பெ.(n.) ***கெட்ட பெயர்*** பார்க்க; see *ketta-peyar.*

*[கெட்ட + பெயர் → பேர்.]*

**கெட்டம்** *kettam,* பெ.(n.) தாடி; beard.

**க., து., பட.** கட்டு; **தெ.** கட்டமு.

**Skt.** ganda

*[கட்டை - முகவாய்க்கட்டை → கட்டை → கட்டம் → கெட்டம் (கொ.வ.).]*

**கெட்டமனம்** *ketta-manam,* பெ.(n.) தீய மனம்; bad mind.

*[கெட்ட + மனம்.]*

**கெட்ட மூக்கு** *ketta-mūkku,* பெ.(n.) மூளி மூக்கு; deformed nose.

*[கெட்ட + மூக்கு.]*

**கெட்டரத்தம்** *ketta-rattam,* பெ.(n.) தூய்மையற்ற குருதி; dark coloured blood, oozing out from a wound.

**க.** கெட்டரக்த; **து.** கேட் நெத்தரு; **பட.** கெட்ட நெத்தரு.

*[கெட்ட + அரத்தம்.]*

**கெட்டலை-தல்** *kettalai-,* 2 செ.கு.வி. (v.i.) நிலைகெட்டுத் திரிதல்; to go astray, lead the life of a vagabond.

*[கெடு → கெட்டு + அலை-.]*

**கெட்டவயிறு** *ketta-vayiru,* பெ.(n.) செரியாமை அல்லது வேறு காரணங்களால் கோளாறடைந்த வயிறு; disorder of stomach due to indigestion or other causes.

*[கெட்ட + வயிறு.]*

**கெட்டவழி** *ketta-vali,* பெ.(n.) தீய வழி; evil way.

**க.** கெடுவட்டெ, கெட்டதாரி.

*[கெட்ட + வழி.]*

**கெட்டவள்** *kettaval,* பெ.(n.) **1.** தீயொழுக்கமுள்ளவள்; a bad, immoral woman. 2. கேடு அடைந்தவள்; a woman who is ruined.

**க.** கெடுதி; **து.** கெட்டபசாரி; **பட.** கெட்டவ.

*[கெடு → கெட்ட + அவள்.]*

**கெட்டவறிவு** *ketta-v-arivu,* பெ.(n.) தீய வறிவு; crooked mindedness, wickedness.

**ம.** கெடுமதி.

*[கெட்ட + அறிவு.]*

**கெட்டவன்** *kettavan,* பெ.(n.) 1. தீயொழுக்க முள்ளவன்; a mischief maker; a bad, wicked, mean man. 2. முன்பு நன்னிலையிலிருந்து பின்னர்த் தாழ்ந்தவன்; one degraded from higher position.

**க.** கெடுக; **தெ.** கட்டுவாடு; **பட.** கெட்டம.

**Pkt.** kontha

*[கெடு → கெட்ட + அவன்.]*

**கெட்டவாடி** *ketta-vādi,* பெ.(n.) ஈரோடுமாவட்டத்துச் சிற்றூர்; a village in Erode Dt.

*[கட்டி → கெட்டி + பாடி - கெட்டிபாடி → கெட்டவாடி (கொ.வ.).]*

**கெட்டவார்த்தை** *ketta-vārttai,* பெ.(n.) திட்டுவதற்கு மட்டும் பயன்படுத்துகிற இழிசொல்; dirty obscene language. *கெட்ட வார்த்தை சொல்லியா திட்ட வேண்டும்.*

*[கெட்ட + வார்த்தை.]*

**மறுவ.** கெட்ட சொல், இழிசொல்.

**கெட்டவாரி** *ketta-vāri,* பெ.(n.) நெல்வகை (மதி.கள.I,6); a kind of paddy.

*[கெடு → கெட்ட + வாரி.]*

**கெட்டவியல்பு** *ketta-v-iyalbu,* பெ.(n.) தீயபண்பு; immoral character.

*[கெட்ட + இயல்பு.]*

**கெட்டவியாதி** *ketta-viyādi,* பெ.(n.) ***கெட்ட நோய்*** பார்க்க; see *ketta-nōy*

*[கெடு → கெட்ட + வியாதி.* ***Skt.****]*

**கெட்டவிரல்** *ketta-viral,* பெ.(n.) குருதியோட்டம் குறைந்து வெண்ணிறமடைந்த விரல்; dead finger.

*[கெட்ட + விரல்.]*

**கெட்டவுடம்பு** *ketta-v-udambu,* பெ.(n.) பெண் நோயினால்சீரழிந்தவுடம்பு; system degenerated by venereal or syphilitic disease.

*[கெட்ட + உடம்பு.]*

**கெட்டவுருவம்** *ketta-v-uruvam,* பெ.(n.) குற்ற முடைய உருவம்; a deformed figure, monstrous figure.

**க.** கெட்டொடல்.

*[கெட்ட + உருவம்.]*

**கெட்டவெண்ணம்** *ketta-v-ennam,* பெ.(n.) தீய எண்ணம்; evil, bad thought.

*[கெட்ட + எண்ணம்.]*

**கெட்டவேலை** *ketta-vēlai,* பெ.(n.) தீய பணி; an evil deed.

**க., து.** கெட்டகெலச.

*[கெட்ட + வேலை.]*

**கெட்டவேளை** *ketta-vēlai,* பெ.(n.) 1. தீய காலம்; inauspicious time. 2. பொல்லாங்கான காலம்; adverse time or times. 3. காலமல்லாக் காலம்; inopportune time.

*[கெட்ட + வேளை.]*

**கெட்டழி-தல்** *kettali-,* 2 செ.கு.வி. (v.i.) 1. ஆண் பெண்கள் பரத்தமையால் ஒழுக்கம் கெடுதல்; to become loose in morals. 2. வீண் செலவினால் நிலைமை கெடுதல்; to be ruined by extravagant expenditure.

*[கெடு → கெட்டு + அழி-.]*

**கெட்டாகுளம்** *kottākulam,* பெ.(n.) நெய்வேலி வட்டத்துச் சிற்றூர்; a village in Neyveli Tk.

*[கட்டி → கெட்டி + குளம் – கெட்டி குளம் → கெட்டாகுளம்.]*

**கெட்டாகெட்டி** *kettā-ketti,* பெ.(n.) ***கெட்டாரகெட்டி*** பார்க்க; see *kettāra-ketti.*

*[கெட்டாரகெட்டி → கெட்டாகெட்டி.]*

**கெட்டாரகெட்டி** *kettāra-ketti,* பெ.(n.) 1. மிகு திறன்; great ability, consummate skill. 2. வலிமை பொருந்தியவன்; person of great ability or skill.

**க.** கெட்டாரகெட்டி.

*[கட்டாரம் → கெட்டாரம் + கெட்டி.]*

**கெட்டி**[1]**-த்தல்** *ketti-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. நிலம் முதலியவற்றைக் இறுக்கப்படுத்துதல்; to harden, strengthen, make firm. 2. துமுக்கி (துப்பாக்கி) யில் மருந்திட்டுக்கெட்டிப்படுத்துதல்; charge or load a firearm.

*[கட்டி → கெட்டி.]*

**கெட்டி**[2] *ketti,* பெ.(n.) 1. உறுதி; firmness, strength, hardness, durability. 2. இறுக்கம்; denseness, as of a liquid. 3. திறமை; cleverness, ability, skill. 4. வலியவன்; man of ability or skill; clever person. 5. உரத்த குரல்; loudness, as of tone. கெட்டியாய்ப் படிக்கிறான். 6. அழுத்தம்; profundity, soundness. கெட்டிப்படிப்பு. 7.திண்மை; thickness. அழைப் பிதழைக் கெட்டித்தாளில் அச்சடிக்க வேண்டும். 8. நீடித்த தன்மையுடையது; long lasting. அவருக்கு ஆயுள் கெட்டி.

**க., தெ., பட.** கட்டி.

**Mar.** gatti.

*[கட்டி → கெட்டி.]*

**கெட்டி**[3] *ketti,* இடை.(int.) மிக நன்று; well done, bravo. *"கெட்டியையா நல்லதென்பார்" (பணவிடு. 19).*

*[கட்டி → கெட்டி.]*

**கெட்டிக்கட்டடம்** *ketti-k-kattadam,* பெ.(n.) கருங்கல், அல்லது செங்கற்களால் கட்டப்பட்ட கட்டடம்; building made of brick or stone.

*[கெட்டி + கட்டடம்.]*

**கெட்டிக்காப்பு** *ketti-k-kāppu,* பெ.(n.) வெள்ளி அல்லது தங்கத்தாலான உட்டுளை இல்லாது இறுகிய காப்பு; bracelet or anklet of solid gold or silver.

*[கெட்டி + காப்பு.]*


கெட்டிக்காப்பு

கா = காப்பு. தீயன அணுகாது காக்கும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் அணியப்படும் அணிகலன் காப்பு எனப்பட்டது. வீட்டு முற்றத்தில் காப்புக் கட்டுவதுபோன்றனவும் இந் நம்பிக்கையின் அடிப்படையே.

**கெட்டிக்காரன்** *keṭṭi-k-kāraṉ,* பெ.(n.) 1. திறமை யானவன்; clever, active man. வேலையில் மிகவும் கெட்டிக்காரன் (உ.வ.). 2. துணிச்சல்மிக்கவன்; a braveman. 'கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளில் தெரியும்' (பழ.).

**தெ.** கட்டிவாடு, கட்டுவகாடு.

*[கட்டி → கெட்டி + காரன்.]*

**கெட்டிக்காரி** *keṭṭi-k-kāri,* பெ.(n.) திறமையுள்ளவள்; capable woman.

*[கட்டி → கெட்டி + காரி.]*

**கெட்டிக்குடல்** *keṭṭi-k-kuḍal,* பெ.(n.) கழிச்சல் எளிதில் ஆகாக் கல் குடல்; hard bowels not easily moved by purgatives (சா.அக.).

*[கெட்டி + குடல்.]*

**கெட்டிக்குரல்** *keṭṭi-k-kural,* பெ.(n.) உரத்த ஒலி; loud cry (சா.அக.).

*[கெட்டி + குரல்.]*

**கெட்டிக்கொலுசு** *keṭṭi-k-kolušu,* பெ.(n.) தங்கத் தால் அல்லது வெள்ளியால் ஆன உட்டுளை இல்லாத


கெட்டிக்கொலுசு

கொலுசு; chain, bracelet or anket of solid gold or silver.

*[கெட்டி + கொலுசு.]*

**கெட்டிச்சாயம்** *keṭṭi-c-cāyam,* பெ.(n.) அழுத்தமான எளிதில் மாறாத சாயம் (உ.வ.); fast colour.

*[கெட்டி + சாயம்.]*

**கெட்டிசாவி** *keṭṭi-šāvi,* பெ.(n.) ***கெட்டித்திறவுகோல்*** பார்க்க; *see keṭṭi-t-tiṟavu-kōl.*

**மறுவ.** கெட்டித்திறப்பு.

*[கெட்டி + சாவி.]*

**கெட்டிசேயூர்** *keṭṭisēyūr,* பெ.(n.) ஈரோடு மாவட்டத்துச் சிற்றூர்; a village in Erode Dt.

*[கட்டி → கெட்டி + சேய் + ஊர்.]*

**கெட்டித்தயிர்** *keṭṭi-t-tayir,* பெ.(n.) உறைந்த தயிர்; curdled milk.

**மறுவ.** கட்டித்தயிர்.

*[கெட்டி + தயிர்.]*

**கெட்டித்தன்மை** *keṭṭi-t-taṉmai,* பெ.(n.) இறுகலான தன்மை; toughness.

*[கெட்டி + தன்மை.]*

**கெட்டித்தனம்** *keṭṭi-t-taṉam,* பெ.(n.) 1. திறமை; cleverness, dexterity, capability. 2. செட்டு; economy, thrift.

*[கெட்டி + தனம்.]*

**கெட்டித்திறவுகோல்** *keṭṭi-t-tiṟavu-kōl,* பெ.(n.) உட்டுளையில்லாத திறவுகோல்; solid key.

**மறுவ.** கெட்டிச்சாவி.

*[கெட்டி + திறவு + கோல்.]*

**கெட்டித்தீர்வை** *keṭṭi-t-tirvai,* பெ.(n.) சோளம்முதலிய தவசங்கள் விளையும் நிலங்களுக்குரிய வரி (R.I.); assessment payable on lands cultivating certain superior kinds of dry grain, e.g., cholam, ragi, etc.

*[கெட்டி + தீர்வை.]*

**கெட்டித்தேன்** *keṭṭi-t-tēṉ,* பெ.(n.) இறுகிய தேன்; thick honey.

*[கெட்டி + தேன்.]*

**கெட்டிதளவாய்** *keṭṭi-taḷavāy* பெ.(n.) கட்டபொம்மு வழிமுறையில் இருபத்து நான்காவது அரசன்; twenty fourth chieftain of Kattabommu's lineage.

*[கெட்டி + தளவாய்.]*

**கெட்டிப்படு-தல்** *ketti-p-padu-,* 20 செ.கு.வி.(v.i.) இறுகுதல்; to become solid.

*[கெட்டி + படு-.]*

**கெட்டிப்படுத்து-தல்** *ketti-p-paduttu-.* 5 செ. குன்றாவி. (v.t.) 1. திடப்பொருளாக்குதல்; bring to a solid state. 2. ***கெட்டிபண்ணு-தல்*** பார்க்க; see *ketti-p-pannu-*.

**தெ.** கட்டிசேயு.

*[கெட்டி + படுத்து-.]*

**கெட்டிப்பணம்** *ketti-p-panam,* பெ.(n.) நாணயவகை; a kind of fanam, a coin.

*[கெட்டி + பணம்.]*

**கெட்டிப்பல்** *ketti-p-pal,* பெ.(n.) இறுகிய பல்; hard or firm tooth.

*[கெட்டி + பல்.]*

**கெட்டிப்பாகு** *ketti-p-pāgu,* பெ.(n.) 1. தடித்த வெல்லம்; a thick treacle made out of jaggery. 2. சருக்கரைப் பாகு; liquid form of sugar.

*[கெட்டி + பாகு.]*

**கெட்டிப்பிள்ளை** *ketti-p-pillai-,* பெ.(n.) திறமையான இளைஞன்; talented youngster. செட்டிப்பிள்ளை கெட்டிப்பிள்ளை (பழ.).

*[கெட்டி + பிள்ளை.]*

**கெட்டிபண்ணு-தல்** *ketti-pannu-.* 5. செ.குன்றாவி. (v.t.) 1. நிலம் முதலியவற்றை உறுதியாக்குதல்; to make firm, harden. 2. மருந்துமுதலியவற்றை இறுகச் செய்தல்; to solidity, as liquid medicines.

*[கெட்டி + பண்ணு-.]*

**கெட்டிபத்திரம்** *ketti-pattiram,* பெ.(n.) விழிப்பான கேட்பாடு (சாக்கிரதையான விசாரணை); delicate enquiry.

*[கெட்டி + பத்திரம்.]*

**கெட்டிபொம்மு** *ketti-pommu,* பெ.(n.) கட்டபொம்முவினுடைய நான்காவது வழிமுறையினன்; the fourth chieftain of Kattabommu's family.

*[கெட்டி + பொம்மு.]*

**கெட்டிமிளகு** *ketti-milagu,* பெ.(n.) அழுத்தமுள்ள மிளகு; solid pepper.

*[கெட்டி + மிளகு.]*

**கெட்டிமுலை** *ketti-mulai,* பெ.(n.) 1. இறுகிய முலை; hard breast. 2. தளராத முலை; firm breast.

*[கெட்டி + முலை.]*

**கெட்டிமூங்கில்** *ketti-mūngil,* பெ.(n.) கல் மூங்கில்; a variety of bamboo.

*[கெட்டி + மூங்கில்.]*

**கெட்டிமேதிகம்** *ketti-mēdigam,* பெ.(n.) புரசு; palaus tree.

*[கெட்டி + மேதிகம்.]*

**கெட்டிமேளம்** *ketti-mēlam,* பெ.(n.) தாலி கட்டுகை முதலிய சிறப்புகள் நிகழும்போது முழக்கும் இசை முழக்கம்; simultaneous and rapid play of musical instruments at special moments, as when the *tāli* is tied at a marriage.

*[கொட்டு → கொட்டி → கெட்டி + மேளம்.]*

**கெட்டிமோர்** *ketti-mōr,* பெ.(n.) தண்ணீர் கலக்காத மோர்; unadulterated butter-milk.

*[கெட்டி + மோர்.]*

**கெட்டியாக்கு-தல்** *ketti-y-ākku-,* 5 செ.குன்றா. வி.(v.t.) இறுகச் செய்தல்; to bring firm tight.

*[கெட்டி + ஆக்கு-.]*

**கெட்டியா-தல்** *ketti-y-ā-,* 6 செ.கு.வி.(v.i.) இறுகுதல்; to become firm. முடிச்சைக் கெட்டியாகப் போடு (உ.வ.).

*[கெட்டி + ஆ-.]*

**கெட்டியுடம்பு** *ketti-y-udambu,* பெ.(n.) 1. வலுவான உடம்பு; robust body. 2. உழைப்பினால் இறுகிய உடம்பு; body hardened through labour. 3. இயல்பாகவே வலிவுள்ள உடம்பு; body naturally strong. 4. கற்ப உடம்பு; body invigorated by process of rejuvenation.

*[கெட்டி + உடம்பு.]*

**கெட்டிவஞ்சி** *ketti-vañji,* பெ.(n.) 1. வைர வஞ்சி; iron wood tree. 2. சவுக்கு; casuarina.

*[கெட்டி + வஞ்சி.]*

**கெட்டிவராகன்** *ketti-varāgan,* பெ.(n.) கட்டி வராகன்; a coin.

*[கெட்டி + வராகன்.]*

**கெட்டிவாத்தியம்** *ketti-vāttiyam,* பெ.(n.) ***கெட்டிமேளம்*** பார்க்க; see *ketti-mēlam.*

[கெட்டி + வாத்தியம்.]

Skt. vādya > த. வாத்தியம்.

**கெட்டு** *kettu,* பெ.(n.) பக்கக்கிளை (யாழ்ப்.); branch of a tree or bough.

தெ. செட்டு; பட. சில்லு.

[கிளை → சிளை → சிள்ளு → தெ. செட்டு → த. கெட்டு.]

**கெட்டுப்போ-தல்** *kettu-p-pō-,* 8 செ.கு.வி.(v.i.) 1. அழிதல்; to perish; to be ruined. 2. நைந்துபோதல்; to wear out. 3. பதனழிதல்; to be spoiled. 4. அழுகிப் போதல்; to be rotten, to decay. 5. ஒழுக்கங்கெடுதல்; to become bad, immoral. 6. வறுமை யுறுதல்; to fall on evil days; to be reduced to straitened circumstances. அந்தக் குடும்பம் கெட்டுப்போயிற்று (உ.வ.). 7. காணாமற் போதல்; to be lost, as goods (உ.வ.).

க. கெட்டுஹோகு.

[கெடு → கெட்டு + போ-.]

**கெட்டுப்போனவள்** *kettu-p-pōnaval,* பெ.(n.) 1. கற்பழிந்ததனால் இனத்தினின்று விலக்கப்பட்டவள்; fallen, unchaste woman. 2. பாலியல் தொழில் செய்பவள்; a woman practicing of prostitution.

[கெட்டு + போன + அவள்.]

**கெட்டுவிடு-தல்** *kettu-vidu-,* 20 செ.கு.வி.(v.i.) ***கெட்டுப் போ-***[1,2] பார்க்க; see *kettu-p-pō-*.

[கெட்டு + விடு-.]

**கெட்டுவை-த்தல்** *kettu-vai-,* 4 செ.கு.வி.(v.i.) கிளைவிடுதல் (யாழ்ப்.); to send out branches, to ramify, branch out.

[கெட்டு + வை-. கெட்டு = கிளை.]

**கெட்டெண்ணம்** *kettennam,* பெ.(n.) ***கெடுநினைவு*** பார்க்க; see *kedu-ninaivu.*

[கெட்ட + எண்ணம்.]

**கெட்டேன்** *kettēn,* இடை.(int.) இரக்கக்குறிப்பு; expr. meaning woe is me! "*அருளிது வாயிற் கெட்டேன் பிழைப்பரோ வரக்கராயோர்*" *(கம்பரா. விபீடண. 127).*

[கெடு → கெட்டேன்.]

யாவரும் நலம்பெற்று வாழ வேண்டும் என்னும் என் கருத்துத் தோற்றது. நான் தோற்றேன் எனும் பொருளில் கெட்டேன் என்பது வியப்புக் குறித்த இடைச்சொல்லாயிற்று.

**கெட்டோடு-தல்** *kettōdu-,* 5 செ.கு.வி.(v.i.) தோற்றோடுதல்; to turn away (to guest).

க. கெட்டோடு.

[கெட்டு + ஓடு-.]

**கெட்டனமல்லி** *kettana-malli,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tiruvallūr Dt.

[குட்டு → கெட்டு (மேடு) → கெட்டன + (பள்ளி) மல்லி (கொ.வ.).]

**கெடகம்** *kedagam,* பெ.(n.) புறாமுட்டி; parakeet burr.

[கிடகம் → கெடகம்.]

**கெடகாரனூர்** *kedakāranūr,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

[கிடை (ஆட்டுப்பட்டி) + காரன் - கிடைகாரன் → கெடகாரன் + ஊர்.]

**கெடச்செய்-தல்** *keda-c-cey-,* 1 செ.குன்றாவி.(v.t.) 1. அழித்தல்; to destroy, ruin. 2. தீயதாக்குதல், கெடுத்துவிடுதல்; to make bad, to spoil. 3. அழகு நலங்கெடுத்தல்; to deflower. 4. நோய்முதலியவற்றை நீக்குதல்; to remove, as a disease. 5. விளக்குப் போன்றவற்றை அணைத்தல்; to extinguish as a lamp.

க. கெடிசு; பட. கெடசு.

[கெட + செய். செய்-து.வி.]

**கெடசாரம்** *keda-šāram,* பெ.(n.) இடர், இடையூறு, இன்னல், சிக்கல்; danger, misfortune, entanglment.

ம. கெடசாரம்.

[கெட + சாரம்.]

**கெடமால்கட்டை** *kedamāl-kattai* பெ.(n.) மீன் வலையின் மேற்புறம் கட்டப்பட்ட மிதப்பு; a float tied with the fishing net.

மறுவ. தலைவலைக்கட்டை, தொங்கு வலைக்கட்டை, மோம்புக்கட்டை, கடைவால் கட்டை.

[கடைவால் → கெடமால் (கொ.வ.) + கட்டை.]

**கெடலணங்கு** *kedal-anangu* பெ.(n.) தவ்வை, மூதேவி (பிங்.); the goddess of misfortune.

[கெடு → கெடல் + அணங்கு]

**கெடலூழ்** *kedal-ūl,* பெ.(n.) தீவினை; evil fate. "*கெடலூ ழூதலின் கேட்ட பொழுதே ... ஆருணி தெளிந்து*" *(பெருங். மகத. 25: 168).*

[கெடு → கெடல் + ஊழ்.]

**கெடவரல்** *kedavaral,* பெ.(n.) 1. மகளிர் விளையாட்டு; a woman's game. "*கெடவர லாய மொடு*" *(தொல். சொல். 319).* 2. மகளிர் கூட்டம் (சூடா.); gathering of women. 3. ஒளிந்தாட்டம்; hide and seek play.

**Punj.** keḍa

[*கெடு - மறைதல், ஒளிதல். கெடு + வால் – கெடுவரல் ஒளிந்து வெளிவருதல், ஒளிந்தாட்டம்.*]

**கெடவை–த்தல்** *keḍa-vai-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1. அழித்தல்; to destroy, ruin. 2. தீயதாக்குதல்; to make bad. 3. செயலிழக்கச்செய்தல்; to do cease as a function. 4 நலிவடையச் செய்தல்; to make weak.

**க.** கெடிசு; **பட.** கெடுசு.

[*கெட + வை–.*]

**கெடாரம்** *keḍāram*, பெ.(n.) கடிகாரம் (யாழ்.அக.); clock.

[*கடிகாரம் → கெடாரம்.*]

**கெடாவிளக்கு** *keḍā-viḷakku* பெ.(n.) தொடர்ந்து எரியும் அல்லது ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு எரியுமாறு வடிவமைக்கப்பட்ட விளக்கு; a lamp kept burning perpetually or for a fixed period of time.

**மறுவ.** அணையா விளக்கு, அவியா விளக்கு, நந்தா விளக்கு.

**ம.** கெடாவிளக்கு.

[*கெடு + ஆ + விளக்கு. 'ஆ' – எதிர்மறை இடைநிலை.*]

**கெடி[1]–த்தல்** *keḍi-*, 4 செ.கு.வி. (v.i.) வெருவுதல், அச்சங்கொள்ளுதல் (யாழ்.அக.); to be afraid.

[*கடி → கெடி.*]

**கெடி[2]** *keḍi*, பெ.(n.) ஊர்; village.

[*கடி - எல்லை. கடி. (எல்லை வகுத்த ஊர்).*]

**கெடி[3]** *keḍi*, பெ.(n.) நிறைவேறிவரும் செயல்; business accomplished. "*கெடியாயினவுங்கெடுமே*" (*சினேந். 451*).

[*கடி → கெடி.*]

**கெடி[4]** *keḍi*, பெ.(n.) 1. மலைக்கோட்டை, துருக்கம்; hill fort. 2. அதிகாரஞ்செல்லுமிடம்; jurisdiction province, region under authority. 3. வல்லமை; authority, power. "*கெடிமன்னர் வணங்குந் தாளான்*" (*சூடா. 9:10*). 4. புகழ்; fame, glory. "*மூன்று லோகங் கெடிபெற்ற ராவணா*" (*இராமநா.யுத். 32*). 5. அச்சம்; terror, fright, alarm.

**தெ.** கடி.

[*கடி → கெடி.*]

**கெடிமண்டு–தல்** *keḍi-maṇḍu-*, 5 செ.கு.வி.(v.i.) அச்சம் மிகுதல்; to be frightened out of one's wits; to be terrified, overwhelmed with fear.

[*கெடி + மண்டு–.*]

**கெடிமாடு** *keḍi-māḍu*, பெ.(n.) நீண்ட பயணத்தின் இடையிடையே வண்டியில் மாற்றிப் பூட்டும் எருது; bullocks stationed as relays in a journey.

[*கெடி + மாடு.*]

**கெடியன்** *keḍiyaṉ* பெ.(n.) அச்சம் உண்டாக்குபவன்; cruel, hard-hearted person.

[*கடியன் → கெடியன்.*]

**கெடியாமவிதை** *keḍiyāma-vidai*, பெ.(n.) தேற்றான்கொட்டை; water clearing nut.

[*கடி - வட்டமான கலம். கடி → கடியாம + விதை – கடியாம விதை → கெடியாம விதை.*]

மண்பாண்டங்களைச் சுடுமுன்னர்ச் சிறிதளவே விளக்கெண்ணெய் சேர்த்த செம்மண் பூசி, அதன் மீது தேற்றாங் கொட்டையால் தேய்க்கத் தேய்க்க மண் ஏனத்தில் மெருகு ஏறும். இது மண் ஏனத்தைத் தீற்றுவதற்குப் பயன்பட்டது.

**கெடியாரம்** *keḍiyāram*, பெ.(n.) 1. வெண்கலம்; bell-metal. 2. வெண்கலத்தட்டு; bell-metal vessel.

[*கடி - வட்டம். கடி → கடியாரம் → கெடியாரம்.*]

**கெடிரோகம்** *keḍi-rōgam*, பெ.(n.) அச்சத்தால் ஏற்படும் நோய்; a sudden prostration or perturbation of body and mind through fear.

[*கடி → கெடி + ரோகம்.*]

**கெடிலம்[1]** *keḍilam*, பெ.(n.) 1. கடலூரையடுத்துச் செல்லும் ஓராறு; a river near Cuddalore. "*நிரம்பு கெடிலப் புனலு முடையார்*" (*தேவா. 949:1*). 2. ஆழமான ஓடை; deep stream.

[*கடி → கடிலம் → கெடிலம். (வளைந்து ஓடும் சிற்றாறு).*]

**கெடிலம்[2]** *keḍilam*, பெ.(n.) 1. குகை; den. 2. ஒடுங்கிய பாதை (வின்.); narrow passage.

[*கடி → கடிலம்.*]

**கெடிவெட்டூர்நாயக்கர்** *keḍi-veṭṭūr-nāyakkar*, பெ.(n.) நாயக்க அரசர்களுளொருவர்; a Palayagar Chieftain.

[*கெடி + வெட்டூர் + நாயக்கர்.*]

வீரபாண்டிய கட்டபொம்மனுடைய தாய்மாமன். வெள்ளையார் இவரை அழைத்துக் கட்டபொம்முவிடம் தூது செல்லப் பயன்படுத்தினர்.

**கெடிறு** *kediru*, பெ.(n.) முள்ளுள்ள மீன்வகை; a kind of fish. *"பாண்மக ளின்கெடிறு சொரிந்த வகன்பெரு வட்டி"* *(ஐங்குறு. 47).*

*[கெளிறு → கெடிறு.]*



கெடிறு

**கெடு¹—தல்** *kedu-*, 20 செ.கு.வி.(v.i.) 1. அழிதல்; to perish, to be destroyed, annihilated. *"தான்கெடினுந் தக்கார்கே டெண்ணற்க"* *(நாலடி. 80).* 2. பழுதாதல்; to decay, rot; to become tarnished, damaged, spoiled, to be marred, blighted, worn out. 3. வறுமையுறுதல்; to fall on evil days, to be in straitened circumstances. *'கெட்டார்க்கு உற்றார் கிளையிலுமில்லை'* *(பழ.).* 4. ஒழுக்கங்கெடுதல்; to degenerate, deteriorate, change for the worse morally. கெட்டுப்போனவள். 5. உருவழிதல்; to be emaciated, reduced; deformed, disfigured. அந்தச் சித்திரங் கெட்டுவிட்டது. 6. தோற்றோடுதல்; to run away defeated. 7. கெடுதல்; to be elided, dropped. *"இறுதி யிகர மெய்யொடுங் கெடுமே"* *(தொல். எழுத்து. 240).* 'பகையாளி குடியை உறவாடி கெடு' (பழ.). 8. வழிதவறிப்போதல்; to lose one's way. *"கெடுமரக்கலம் கரை சேர்ந்தாற் போல்"* *(ஈடு. 1:2:3).* 9. எரியும் விளக்கு, தீப் போன்றன அணைதல்; to be extinguished as lamp fire etc., 10. காய்கறிமுதலியன அழுகுதல்; to purify, rot. 11. செயலிழத்தல்; cease to function, weaken. 12. தீயதாதல்; to become bad. 13. கொடியதாதல்; to become visions. 14. நோய் கவலை முதலியன அடியோடு நீங்குதல்; to be removed, as disease, sorrow.

**ம.** கெடுக; **க., பட.** கெடு; **தெ.** செடு; **குட.** கெட்; **து.** கெடகுனி; **கோத.** கெட்; **துட.** கொட்; **கொலா.** கிட்; **நா.** இட்; **பர்.** சிட்; **கோண்.** கரீநாநா.

**Gk.** kakoein.

*[கள் (வெட்டுதல், நீக்குதல்) → கடு → கெடு (அழிதல்).]*

**கெடு²—த்தல்** *kedu-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1. அழித்தல்; to destroy, annihilate; to squander, as wealth; to extinguish. *"திங்கள் விளங்கொளி கெடுத்து வெய்யவன் ... தோன்றினான்"* *(நைடத. இந்திர. 1).* 'கெடுப்பதும் வாயால், படிப்பதும் வாயால்' (பழ.). 2. பழுதாக்குதல்; to damage, spoil, tarnish, blast, injure. *"கெடுத்தொழிந்தானை.... புதல்வனை"* *(கம்பரா. மந்தரை. 76).* 3. ஒழுக்கங்கெடுத்தல்; to corrupt, demoralize, seduce, violate. 4. குற்றமாக்குதல்; to render nugatory, as religious rites, austerities. விரதங்களையெல்லாம் தீச்செயலால் கெடுத்துக் கொண்டான். 5. செயல் தடை செய்தல்; to frustrate. என் வேலையைக் கெடுக்காதே. 'கெடுப்பாரைத் தெய்வம் கெடுக்கும்' (பழ.). 6. நீக்குதல்; to remove. *"அரந்தை கெடுத்து வரந்தரு மிவளென"* *(சிலப். உரைபெறு.).* 7. ஆற்றல் குறையச்செய்தல்; to weaken, make inactive. 8. நஞ்சு முதலியவற்றை முறியச் செய்தல்; to neutralize, to counteract as poison in the system. இந்த வேர் நஞ்சைக் கெடுக்கும். 9. தோற்கச் செய்தல்; to defeat, overcome. 10. காணப்பெறாது போதல்; to lose, drop, as an object by negligence. *"ஏற்கெடுத்திரங்கி"* *(மணிமே. 5:36).*

**ம.** கெடுக்குக.

**Gk.** kakoein.

*[கள் (வெட்டுதல், நீக்குதல்) → கடு → கெடு (அழித்தல்).]*

**கெடு³** *kedu*, பெ.(n.) தவணை; term, fixed time, instalment.

**ம., க., து.,** கடு.

*[கடு → கடுவு → கெடுவு → கெடு.]*

**கெடு⁴** *kedu*, பெ.எ. (adj.) 1. தீய; bad. 2. அழிந்த; ruined, wasted.

**ம.** கெடு.

*[கடு → கெடு.]*

**கெடு⁵** *kedu*, பெ.(n.) 1. கேடு; peril, risk. *"கெடுவின்று மறங்கெழு சோழர்"* *(புறநா. 39: 7).* 2. ஏழைமை; poverty. *"கெடுவாக வையாது"* *(குறள். 117).*

*[கடு → கெடு.]*

**கெடுகாலம்** *kedu-kālam*, பெ.(n.) அழிவுகாலம்; bad times, time of ruin, drought.

**ம.** கெடுகாலம்.

*[கெடு + காலம்.]*

**கெடுகிடு—தல்** *kedu-kidu-*, 4 செ.கு.வி.(v.i.) கெட்டொழிதல்; to be utterly ruined, to perish.

*"வெந்துயர் கெடுகிட "(தேவா. 1077: 11).*

*[கெடுகு + இடு – கெடுகிடு.]*

**கெடுகு** *kedugu*, பெ.(n.) கெடுதி, தீமை; evil.

**க.** கெடுகு.

*[கெடு + கு – கெடுகு. 'கு' பெயரீறு.]*

**கெடுகுறி** *kedu-kuri* பெ.(n.) தீயநிமித்தம் (உ.வ.); bad sign, evil omen, portents.

*[கெடு + குறி.]*

**கெடுசொல்** *kedu-šol*, பெ.(n.) தீய பேச்சு; evil word.

**க.** கெடுசொல்.

*[கெடு + சொல்.]*

**கெடுத்தம்** *keduttam*, பெ.(n.) ***கெடு***[3] பார்க்க; see *kedu*.

*[கெடு → கெடுத்தம்.]*

**கெடுத்துவிடு–தல்** *keduttu-vidu-*, 8 செ.குன்றாவி. (v.t.) அழித்துவிடுதல்; to ruin, destroy.

*[கெடு → கெடுத்து + விடு–. விடு – து.வி.]*

**கெடுத்தை** *keduttai*, பெ.(n.) நச்சுத்தன்மையுள்ள முள்ளுடன் கூடிய கடல்மீன்வகை; a kind of sea fish.

*[கெடு → கெடுத்தை]*

**கெடுத்தையுளுவை** *keduttai-y-uluvai*, பெ.(n.) கடல்மீன்வகை; a kind of sea fish.

*[கெடுத்தை + உ ளுவை]*


கெடுத்தையுளுவை

**கெடுதப்பல்** *kedu-tappal*, பெ.(n.) மாதவிலக்கு முதலியவை காலவொழுங்கு தவறுதல்; outlasting the limited time as mensus in woman.

*[கடுவு → கெடுவு → கெடு + தப்பல்.]*

**கெடுதல்** *kedudal*, தொ.பெ. (vbl.n.) 1. அழிவு; ruin, destruction. 2. பழுது; damage, injury. 3. பேரழிவு; calamity, danger. *'கெடுதலை யுடைய மாக்கள்' (பெரும்பாண். 432, உரை).* 4. தீங்கு; degeneracy, vileness, evil. 5. இலக்கணத்தில் எழுத்து அல்லது அசைகெடுதல்; elision, omission *"தோன்ற றிரிதல் கெடுதல்" (நன். 154).*

*[கெடு → கெடுதல்.]*

**கெடுதல்திரிபு** *kedudal-tiribu*, பெ.(n.) எழுத்துக் கெடும் திரிபு (விகாரம்); elision of letter.

*[கெடுதல் + திரிபு.]*

**கெடுதலம்** *kedu-talam*, பெ.(n.) ***கெடுவிடம்*** பார்க்க; see *kedu-v-idam*.

*[கெடு + தலம்.]*

**கெடுதலை** *kedutalai*, பெ.(n.) அழிவு; ruin, destruction. *கெடுதலை பண்ணாதே.*

*[கெடு → கெடுதலை.]*

**கெடுதி** *kedudi*, பெ.(n.) 1. அழிவு; ruin, destruction. *"கிரிமையபி லரைமலங் கெடுதி யுற்றிடும்" (வள்ள. பதிபசுபாச. பாச. ஆணவ. வி. 2).* 2. இழப்பு; loss, waste, damage. *"காணாத போழ்திற் கெடுதிகளுங் காணாது" (சினேந். 157).* 3. இழந்த பொருள்; property or thing lost. கெடுதிவினாதல் (தஞ்சைவா. 72, தலைப்பு). 4. பேரிழப்பு; danger, peril. *"வேடராற் கெடுதிவந் துறுவன காணா" (உபதேசகா. சிவவிரத. 256).* 5. துன்பம்; affliction, suffering. 6. தீமை; evil, mischief. *"என்னிடையேகெடுதியிருந்த தெனினும்" (அருட்பா, III இரங்கன்மா. 28).*

**ம.** கெடுதி; **க.** கெடுக, கெடுகு, கெடகு; **தெ.** செடுகு; **கோத.** கெட்; **துட.** கொடில்; **குட.** கெடி.

*[கெடு + தி – கெடுதி.]*

**கெடுநினைவு** *kedu-ninaivu* பெ.(n.) தீய எண்ணம்; evil intention, malice.

*[கெடு + நினைவு.]*

**கெடுப்பவள்** *keduppaval*, பெ.(n.) அழிப்பவள்; a woman who destroys.

**க.** கெடகி, கெடிகெ, கெடுகி.

*[கெடு → கெடுப்பவள்.]*

**கெடுப்பார்** *keduppār*, பெ.(n.) அழிப்பவர், தீயவர்; those who do evil. கெடுப்பாரைத் தெய்வம் கெடுக்கும் (பழ.).

*[கெடு + ப் + பார்.]*

**கெடுப்பினை** *keduppinai,* பெ.(n.) ஈயக் கனிமம், வங்கமணல்; lead ore.

*[கெடு → கெடுப்பு → கெடுப்பினை.]*

**கெடுபடு-தல்** *kedu-padu-,* 20 செ.கு.வி.(v.i.) பேரழிவுக்கு உள்ளாதல்; to be caught in danger; to be overtaken by calamity. *'கெடுபட்டுப் போவார் ... விரைந்து போதலைக் கருதுவர்' (பெரும்பாண். 432, உரை).*

*[கெடு + படு-.]*

**கெடுபாதை** *kedu-pādai,* பெ.(n.) 1. கேடுடைய வழி; dangerous path. 2. கள்வரால் தீங்குநேரும் வழிக்காவலுக்கு அரசு பெறும் வரி; cess levied for protection from thieves (S.I.I. VIII, 214).

*[கெடு + பாதை.]*

**கெடுபிடி** *kedu-pidi,* பெ.(n.) 1. தடபுடல் (உ.வ.); bustle, tumult, hubbub. 2. விதிமுறைகள், கட்டளைகள் ஆகியவற்றை நிறைவேற்றுவதில் காட்டப்படும் கடுமை; severity in enforcement of order, regulations. கெடுபிடியான நடவடிக்கையால் கடத்தல் குறைந்துள்ளது (உ.வ.). 3. தானாகச் செயல்பட முடியாத கட்டுப்பாடு; restriction, constraint, check. அப்பாவின் கெடுபிடியால் திரைப் படத்திற்குப் போக முடியவில்லை (உ.வ.). 4. நெருக்குதல்; compulsion. வரிதண்டலில் (வசூலில்) இப்படிக் கெடுபிடி செய்தால் மக்கள் என்ன செய்வது? (உ.வ.).

**மறுவ.** கடுபிடி.

**தெ., க.** கலிபிலி; **Mar.** gadabadi; **U.** garbar.

*[கெடு + பிடி.]*

**கெடுபுத்தி** *kedu-putti,* பெ.(n.) ***கெடுநினைவு*** பார்க்க; see *kedu-ninaivu.*

*[கெடு + புத்தி.]*

**கெடும்பன்** *kedumban,* பெ.(n.) 1. தீயவன்; wicked man. 2. பொறாமைக்காரன் (சேரநா.); jealous man.

**ம.** கெடும்பன்; **க.** கெடுக; **து.** கேடகெ, கடிங்கெ.

*[கெடும்பு + அன்.]*

**கெடும்பு**[1] *kedumbu,* பெ.(n.) 1. கேடு (சங்.அக.); ruin, evil. 2. பொறாமை; jealousy. 3. தீய எண்ணம்; evil intention. 4. கெட்ட மணம், அழுகியதால் ஏற்படும் மணம்; rottenness, foul smell.

**ம.** கெடும்பு; **க.** கெடுகு; **தெ.** செகுபு, செருகு; **து.** கெடுகு, கெடகு.

*[கெடு → கெடும்பு.]*

**கெடும்பு**[2] *kedumbu,* பெ.(n.) சற்று முரடான புன்செய்நிலத்து அரிசி; a rough type of dry land rice.

**Jap.** (katumbu → kempu) kome.

*[கடு - கடும்பு - கெடும்பு.]*

**கெடுமதி** *kedu-madi,* பெ.(n.) 1. ***கெடுநினைவு*** பார்க்க; see *kedu-ninaivu.* 2. தீய அறிவுரை; evil counsel. *"அரும்பொருள் கவர்வ தாகக் கெடுமதி யுரைப்பார்" (திருவாத. பு. திருப்பெருந். 90).*

*[கெடு + மதி.]*

**கெடுவளம்** *kedu-valam* பெ.(n.) வளம்குன்றிய நிலம் (சேரா.); unfertile soil.

**ம.** கெடுவளம்.

*[கெடு + வளம்.]*

**கெடுவாய்** *keduvāy,* பெ.(n.) இகழ்ச்சியாகச் சொல்லும் சொல்; a term of reproach. *'கெடுவாய் வகுத்த விஷயத்தி லன்றோ நாங்கள் நெஞ் சிழந்தது (ஈடு. 2.1:7).*

*[கெடு → கெடுவாய்.]*

**கெடுவான்** *keduvān,* பெ.(n.) ஓர் இகழ்ச்சி மொழி; a term of reproach. கெடுவான் சொல்வதெல்லாம் பொய். கெடுவான் கேடு நினைப்பான்.

*[கெடு → கெடுவான்.]*

**கெடுவி** *keduvi,* பெ.(n.) ஓர் இகழ்ச்சிமொழி; a term of reproach. *'கெடுவிகாள்! நானன்றோ இவ் விஷயத்துக்கு யோக்யனாய் உங்களுக்கு உபதேசிக்கும்படியானேன்' (திவ். பெரியதி. 1.1:8 வியா.ப.44).*

*[கெடு (கெடுவான்) → கெடுவி.]*

**கெடுவிடம்** *kedu-v-idam,* பெ.(n.) 1. அதிகாரத்திற்கு உட்பட்ட இடம்; jurisdiction, region under authority. 2. கள்ளர் முதலிய கொடியோர் கூடும் இடம்; notorius place, as a haunt or rendezvous of robbers.

*[கெடு + இடம்.]*

**கெடுவு** *keduvu,* பெ.(n.) தவணை; fixed time, instalment.

**ம., க., து.** கடு; **தெ.** கடுவு.

*[கடு → கடுவு → கெடுவு.]*

**கெடுவை-த்தல்** *kedu-vai-,* 4 செ.குன்றாவி.(v.t.) நாள் குறித்தல்; to fix a date.

*[கெடு + வை-.]*

**கெடை** *kedai,* பெ.(n.) மூங்கில் (இ.வ.); bamboo.

**க.** கெடெ; **தெ.** கட.

*[கழை → கெழை → கெடை (கொ.வ.).]*

**கெடைக்கட்டு** *kedai-k-kattu-,* பெ.(n.) எலும்பு முறிவுக்கு, மூங்கிற்பத்தைவைத்துக்கட்டும்கட்டு; application of a bamboo splint in a case of fracture of bones.

*[கழை → கெடை + கட்டு.]*

**கெடைகட்டியாடு-தல்** *kedai-katti-y-ādu-,* 5 செ.கு.வி.(v.i.) கழைக்கூத்தாடுதல் (இ.வ.); to perform acrobatic feats on a bamboo pole.

*[கெடை + கட்டியாடு-.]*

**கெண்டகாரணி** *kenda-kārani,* பெ.(n.) 1. சீவகமூலி; moon creeper. 2. சிவதை; turpeth root.

*[கண்டை → கெண்டை + காரணி → கெண்டகாரணி.]*

**கெண்டம்** *kendam,* பெ.(n.) இக்கட்டான நிலை (ஆபத்து), கெடுவாய்ப்பு; critical period.

**Skt.** ganda

**க.** கண்ட; **தெ.** கண்டமு.

*[கண்டம் → கெண்டம்.]*

**கெண்டன்** *kendan,* பெ.(n.) 1. மிண்டன்; robust, stout man. 2. முரடன்; one who is rough and tough.

**ம.** கெண்டன்; **க.** கண்ட (வலியவன்); **தெ.** கண்டு (வலிமை).

*[குண்டன் → கெண்டன்.]*

**கெண்டாநகரம்** *kendā-nagaram,* பெ.(n.) வேலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Vēlūr Dt.

*[கண்டன் (மிண்டன்) → கெண்டன் + நகரம் – கெண்டநகரம் → கெண்டாநகரம் (கொ.வ.).]*

**கெண்டி[1]-த்தல்** *kendi-* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கடிந்து கூறுதல்; to reprove, chide. 2. முடிவு கட்டிப் பேசுதல் (வின்.); to speak with decision, precision. 3. துண்டித்தல் (திவா.); to chop, mince, slash, cut into pieces. 4. பகிர்தல் (வின்.); to divide, parcel. 5. பருத்தல்; to grow fat. ஆள் நன்றாய்க் கெண்டித்திருக்கிறான் (உ.வ.).

*[கண்டி → கெண்டி.]*

**கெண்டி[2]** *kendi,* பெ.(n.) ***கெண்டிகை*** பார்க்க; see *kendigai.* நாளதினாலே கொடுத்த பொன்னின் கெண்டி ஒன்று (S.I.I. II.3).

**பட.** கிண்டி.

*[கெண்டிகை → கெண்டி.]*

**கெண்டி[3]** *kendi-* பெ. (n.) வெட்டப்பட்ட துண்டு (யாழ்.அக.); portion which is cut.

*[கண்டி → கெண்டி.]*

**கெண்டி[4]** *kendi-* பெ.(n.) மூக்குள்ள செம்பு; a pot with a spout. *"நாளதினாலெய் குடுத்த பொன்னின் கெண்டி ஒன்று மேற்படி கல்லால் நிறை இருநூற்றெண்பது"* *(தெ.இ.கல்.தொ.II.கல்.1) (1. இராசராசன். 2. காலம் கி.பி. 985–1014).*

*[கிண்ணி → கிண்டி → கெண்டி.]*

**கெண்டிகானூர்** *kendikānūr,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[கண்டன் → கெண்டன் → கெண்டகன் → கெண்டிகான் + ஊர்.]*

**கெண்டிகை** *kendigai,* பெ.(n.) கமண்டலம் (திவா.); pot with a spout, pitcher.

**பட.** கிண்டி; **Skt.** kundika.

*[குண்டிகை → கண்டிகை → கெண்டிகை.]*

**கெண்டிச்செம்பு** *kendi-c-cembu-,* பெ.(n.) மூக்குள்ள செம்புவகை; a pot with a spout.

*[கெண்டி + செம்பு.]*



கெண்டிச் செம்பு

**கெண்டிரச்சேரி** *kendira-c-cēri,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kāñjipuram Dt.

*[கண்டீரன் → கெண்டிரன் + சேரி – கெண்டிரச்சேரி (கொ.வ.).]*

**கெண்டிவாய்**[1] *kendi-vāy* பெ.(n.) ஏனத்தில் நீண்டுள்ள வாய்; the projecting mouth of a vessel. 2. கெண்டி மூக்கு; spout of a pot.

*[கெண்டி + வாய்.]*

**கெண்டிவாய்**[2] *kendi-vāy* பெ.(n.) கோடரிவெட்டு; incision or gash in which the axe works in cutting a tree.

*[கெண்டி + வாய்.]*

**கெண்டு[1]–தல்** *kendu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. தோண்டுதல்; to dig. *"கவலை கெண்டிய கல்வாய்" (குறுந். 233).* 2. அறுத்துத் தின்னுதல்; to cut and eat. *"மன்றத்து மதவிடை கெண்டி" (பெரும்பாண். 143).* 3. கிண்டுதல்; to work in, as a bee gathering honey in flowers. *"வண்டு கெண்டி மருவும் பொழில்" (தேவா.626:10).* 4. வருந்துதல்; to feel sad.

*[கிண்டு → கெண்டு.]*

**கெண்டு[2]–தல்** *kendu-,* 5 செ.கு.வி.(v.i.) வருந்துதல்; to be distressed. *"கெண்டிக் கெழுதகைமை யில்லேன் கிடந்தூட" (யாப்.வி. பக்.351).*

*[கெண்டை → கெண்டு.]*

**கெண்டு**[3] *kendu,* பெ.(n.) கெண்டைச் சதை; calf muscle.

*[கெள் → கெண்டு.]*

**கெண்டு**[4] *kendu* பெ.(n.) ***கெண்டை**[1]* பார்க்க (யாழ்.அக.); see *kendai.*

*[கெண்டை → கெண்டு.]*

**கெண்டூரம்** *kendūram,* பெ.(n.) 1. ஒரு வயிற்றுப் போக்கு மருந்து; a purgative. 2. பாம்புகொல்லி (சித்.அக.); rue.

*[கண்டூரம் → கெண்டூரம்.]*

**கெண்டை**[1] *kendai,* பெ.(n.) 1. நன்னீரில் வாழும் சேல் மீன்; a fresh-water fish. *"கெண்டை போனயனத்தி" (தேவா.9:3).* "கெண்டையைப் போட்டு விறாலை இழுக்கிறது" (பழ.). 2.கெண்டைமீன் போன்ற கணைக்கால் (சதை.); that portion of the leg from the ankle to the knee.



கெண்டை மீன்

ம. கெண்ட ; க. கெண்டெ மீன்; தெ. கண்டெ, கெண்டெ.

*[கண்டு (திரட்சி) → கண்டை → கெண்டை.]*

வகைகள் : 1. பருத்திக்கெண்டை, 2. மோரான் கெண்டை, 3. பாற் கெண்டை, 4. பேரான் கெண்டை.

**கெண்டை**[2] *kendai* பெ.(n.) 1. தோள்பட்டையின் முன்பக்கத்துச் சதை; biceps. 2. கெண்டைமீன் போன்ற கணைக்கால்; ankle, as carp-shaped. "கெண்டைத்தலனியக்கர்" (தணிகைப்பு. அகத்.488).

ம. கெண்ட; க. கண்டு (சந்து); குட. கிண்ணி; து. கண்டு; Skt. ganda, gandu

*[கண்டு → கண்டை → கெண்டை.]*

**கெண்டை**[3] *kendai,* பெ.(n.) கண்டை; gold or silver lace.

ம. கெண்ட (கழுத்தணியாகப் பயன்படும் தாயத்து).

*[கண்டை → கெண்டை.]*

**கெண்டை**[4] *kendai* பெ.(n.) வயிற்றுக் கட்டி; enlargement of spleen.

ம. கெண்ட ; குட . கெண்டெ (மண்ணீரல்).

**கெண்டை**[5] *kendai,* பெ.(n.) ஏளனம்; ridicule, mockery, banter.

துட. கீடி.

Skt. khandana

*[கிண்டு → கிண்டை (கிண்டல்) → கெண்டை.]*

**கெண்டைக்கட்டி** *kendai-k-katti,* பெ.(n.) வயிற்றுக் கட்டி (சீவரட்.120); enlargement of spleen.

*[கெண்டை + கட்டி.]*

**கெண்டைக்காரல்** *kendai-k-kāral,* பெ.(n.) மீன் வகை; a kind of fish. *"உருக்கமுடைய கெண்டைக் காரல்" (பறாளை.பள்ளு.16).*

*[கெண்டை + காரல்.]*

**கெண்டைக்கால்** *kendai-k-kāl* பெ.(n.) கணைக்கால்; leg from ankle to foot (calf of the leg).

*[கெண்டை + கால்.]*

**கெண்டைக்கால் ஊதை** *kendai-k-kāl-ūdai,* பெ.(n.) கெண்டைக்கால் வீங்கிக் கடுத்து வலியை உண்டாக்கும் ஓர் ஊதைநோய்; rheumatic pain or

# கெண்டை வகைகள்



மோரான் கெண்டை



பருத்திக் கெண்டை





பாற் கெண்டை



பேரான் கெண்டை

nervous complaint affecting the muscle of the calf (சா.அக.).

[கெண்டை + கால் + ஊதை.]

**கெண்டைக்கால்வாதம்** *keṇḍai-k-kāl-vādam,* பெ.(n.) ***கெண்டைக்கால்ஊதை***பார்க்க; see *keṇḍai-k-kāl-ūdai.*

[கெண்டைக்கால் + (Skt.) வாதம்.)]

**கெண்டைக்குஞ்சு** *keṇḍai-k-kuñju,* பெ.(n.) சிறிய மீன்; small carp.

[கெண்டை' + குஞ்சு.]

**கெண்டைக்கெளுத்தி** *keṇḍai-k-keḷutti,* பெ.(n.) ஒருவகை மீன்; a kind of fish.

[கெண்டை + கெளுத்தி.]

**கெண்டைக்கை** *keṇḍai-k-kai,* பெ.(n.) தோளின் முன் பக்கத்துச் சதை; muscle of the arm just in front of the shoulder - biceps.

[கெண்டை + கை.]

**கெண்டைச்சதை** *keṇḍai-c-cadai,* பெ.(n.) கணைக் காலின் பின்புறத்துள்ள சதை; thick fleshy part of the leg behind and below the knee.

[கெண்டை + சதை.]

**கெண்டைச்சதைக்கட்டி** *keṇḍai-c-cadai-k-katti,* பெ.(n.) கெண்டைச் சதையிற் காணும் கட்டி; abscess of the calf.

[கெண்டை + சதை + கட்டி.]

**கெண்டைநோய்** *keṇḍai-nōy,* பெ.(n.) வயிற்றுக் கட்டியால் வரும் நோய்வகை (இராட்.); hypochondria, as caused by enlarged spleen.

[கெண்டை + நோய்.]

**கெண்டைப்பீலி** *keṇḍai-p-pīli,* பெ.(n.) முகப்பில் கெண்டை வடிவமைந்ததாய்க் கால்விரலில் இடும் அணிவகை; women's toe ring with *face designed* like carp.

[கெண்டை + பீலி.]

**கெண்டைப்பொடி** *keṇḍai-p-poḍi,* பெ.(n.) ***கெண்டைக் குஞ்சு*** பார்க்க; see *keṇḍai-k-kuñju.*

[கெண்டை + பொடி.]

**கெண்டைபுரட்டு-தல்** *keṇḍai-puraṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) பசி, நாவறட்சி முதலியவற்றால் கைகால்கள் வலித்திழுத்தல்; to have convulsions due to extreme hunger, thirst, etc. *"திண்ணையுங் கெண்டை புரட்டுங் கல்யாணத்திற் சென்றவர்க்கே" (தமிழ்நா. 190).*

[கெண்டை + புரட்டு-.]

**கெண்டையேறல்** *keṇḍai-y-ēṟal* பெ.(n.) கைகால் குரக்கு வலித்தல்; spasm or cramps of the limbs.

[கெண்டை + ஏறல்.]

**கெண்டைவலை** *keṇḍai-valai,* பெ.(n.) சிறு மீன் களைப் பிடிக்கப் பயன்படும் வலை; a small fishing net used in catching small fishes.

[கெண்டை + வலை.]

**கெண்டைவாங்கு-தல்** *keṇḍai-vāṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கைகால் குரக்கு வலித்தல்; spasm.

[கெண்டை + வாங்கு-.]

**கெண்டைவாதம்** *keṇḍai-vādam* பெ.(n.) வலிப்பு நோய் வகை; rheumatic pain or spasm in the limbs.

[கெண்டை + Skt. வாதம்.]

**கெண்டைவியாதி** *keṇḍai-viyādi,* பெ.(n.) ***கெண்டை நோய்*** பார்க்க; see *keṇḍai-nōy.*

[கெண்டை + வியாதி.]

**கெண்டைவிழி** *keṇḍai-viḻi,* பெ.(n.) அழகான கண்; *beautiful eyes.*

[கெண்டை + விழி.]

**கெண்டைவிழுந்தநோய்** *keṇḍai-viḻunda-nōy,* பெ.(n.) அச்சத்தால் ஏற்படும் கட்டியைப் போன்ற ஒரு நோய்; an affection in the hypochondriac region attended with *exaggerated ideas as regards one's* health-hypochondriasis.

[கெண்டை + விழுந்த + நோய்.]

**கெண்டைவூதை** *keṇḍai-v-ūdai,* பெ.(n.) வலிப்பு நோய் வகை; rheumatic pain or spasm in the limbs.

[கெண்டை + ஊதை.]

**கெண்ணை** *keṇṇai,* பெ.(n.) எண்ணிக்கை; computation, reckoning. *"அத்துவா சோதனை பண்ணு வித்துக் கெண்ணையில் அடங்காதாகையால்" (சித்.மரபுகண். 11)*

[கணி → கெணி → கெண்ணை (கொ.வ.).]

**கெணக்கு-தல்** *keṇakku-,* 5 செ.குன்றாவி.(v.t.) நோண்டுதல், எரிச்சல்படுத்துதல்; to irritate, prove by words or deeds.

க. கெணகு; தெ. செணகு, செணுகு; து. கெணகுனி. கெண்குனி, கெனகுனி.

[கிண் → கிண்டு → கெண்டு → கெணக்கு.]

**கெணிகாயம்** *keṇi-kāyam,* பெ.(n.) கலியாண முருங்கை; thorny coral tree.

[கிளி → கிணி → கெணி + காயம்.]

**கெணிதம்** *keṇidam,* பெ.(n.) 1. எரியணம் (சூடம்); camphor. 2. வெற்றிலை; betel leaf.

[கிளிதம் → கெணிதம்.]

**கெத்திடு—தல்** *kettiḍu-,* 19 செ.குன்றாவி.(v.t.) சில்லுபொல்லாய் வெட்டுதல்; to chop.

[கெத்து + இடு—. செத்து → கெத்து.]

**கெத்தியகன்** *ketti-y-agaṉ,* பெ.(n.) மூக்கறா; a medicinal root.

[கெத்தி + அகன்.]

**கெத்து[1]—தல்** *kettu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கீறிப் பிளத்தல்; to split asunder by driving in and turning the hatchet. 2. நறுக்குதல்; to chop, mince, cut off. 3. செதுக்குதல்; to chisel. 4. மீன் முதலியவை அறுத்தல்; to make an incision as in fish.

க., து., பட., கெத்து; தெ. செக்கு.

[செத்து → கெத்து.]

**கெத்து[2]—தல்** *kettu-,* 5 செ.கு.வி.(v.i.) முட்டையிட்ட கோழி அடைகாக்கக் கத்துதல் (யாழ்ப்.); to cackle, as a hen which has laid egg and seeks to sit on it for hatching.

[கத்து → கெத்து.]

[செ.ப.க. அகரமுதலி குறிக்கும் "கோழி முதலியன கொக்கரித்தல்" என்னும் பொருள் வழுவாகும் (செ.ப.க.சீ. 19.]

**கெத்து[3]—தல்** *kettu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கிட்டிப்புள்ளை எற்றிவிடுதல்; to strike the stick in the game of tip-cat. 2. ஏமாற்றுதல்; to deceive, cheat. 3. பாதத்தின் முன்பகுதியை மட்டும் தரையில் ஊன்றி எம்புதல்; hop, skip.

[எத்து → கெத்து.]

**கெத்து[4]** *kettu,* பெ.(n.) 1. சூழ்ச்சி (தந்திரம்); wiles, tricks. *"பொருளைக் கெத்திப் பற்றி" (திருப்பு. 1074).* 2. தந்திரமான பேச்சு; evasion, equivocation.

தெ. கத்து; Mar. gataka.

[எத்து → கெத்து.]

**கெத்துக்கெத்தெனல்** *kettu-k-ketteṉal,* பெ.(n.) 1. கோழி முதலியன எழுப்பும் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying chirping, cackling sound as of a hen. 2. அச்சக்குறிப்பு; onom. expr. signifying pit-a-pat, palpitation of heart through fright.

க. கெத்து (நடுங்குதல்).

[கெத்து + கெத்து + எனல்.]

**கெத்தை** *kettai* பெ.(n.) மயிர் (சங்.அக.); hair.

[கற்றை → கத்தை → கெத்தை.]

**கெதங்கெதமெனல்** *kedaṅ-kedam-eṉal,* பெ.(n.) அச்சக்குறிப்பு; onom. expr. signifying palpitation of heart through fright.

[கெதம் + கெதம் + எனல்.]

**கெதம்** *kedam,* பெ.(n.) 1. அடைகை; reaching. 2. ஓட்டம்; movement, flow. 3. சென்றது; that which is past.

[கதம் → கெதம்.]

**கெதி** *kedi,* பெ.(n.) 1. நடை; motion, movement. 2. வழி; way, path. 3. விரைவு; swiftness, rapidity. 4. புகலிடம்; refuge. 5. துறக்கம்; heaven. 6. குதிரை நடை; pace of a horse. 7. உயிரெடுக்கும் பிறப்பு; stages of existence, through which the soul may pass, of which there are four. 8. நிலை; state, condition. அவன் கெதி என்னவாயிற்று? 9. ஆற்றல்; ability, means. கொடுக்கக் கெதியில்லை. 10. இயல்பு; nature, quality, character. 11. ஆகூழ் (அதிட்டம்); luck, fortune. 12. படலம்; section, chapter.

க., தெ. கதி.

[கதி → கெதி.]

**கெதிகெட்டநோய்** *kedi-keṭṭa-nōy,* பெ.(n.) தீரா நோய்; chronic or incurable disease.

[கதி → கெதி + கெட்ட + நோய்.]

**கெதிகெட்டோடல்** *kedi-keṭṭōḍal,* பெ.(n.) நோய்கள் ஆதரவு அற்று உடம்பைவிட்டகலல்; getting away completely as diseases from the body.

[கதி → கெதி + கெட்டு + ஓடல்.]

**கெதிநாடி** *kedi-nāḍi,* பெ.(n.) தீவிர நாடி; accelerated pulse.

[கெதி + நாடி.]

**கெதை** *kedai,* பெ.(n.) உப்புத்தடி; a stick made of consolidated salt which is melted and cast in a mould.

[கதை → கெதை.]

**கெதைப்பஞ்சவண்ணம்** *kedai-p-pañja-vaṇṇam,* பெ.(n.) 1. ஐந்துவகை நிறம் கலந்த மாத்திரைக் கோல்; a magic wand made of consolidated salt exhibiting five colours by reflection. 2. ஊதை நோய்க்குப் பயன்படும் ஒருவகைக் கட்டுப்பு; consolidated salt reflecting of five colours used for transmutation of metals into gold.

*[கதை → கெதை + பஞ்ச + வண்ணம்.]*

**கெந்தகக்கட்டு** *kendaga-k-kaṭṭu,* பெ.(n.) கெந்தகம் நெருப்புக்குப் புகைந்து ஓடாதபடி ஊதை முறையால் கந்தகத்தை நெருப்பிற் காட்டிச் செய்த கட்டிமருந்து; a lamp of sulphur consolidated by alchemical method. *"தானென்ற கந்தகமோ கட்டிற் றானால் தட்டுமுதல் தாவரமும் பொன்னே யாகும்" (கொங்.வாத.காவியம்.)*

*[கெந்தகம் + கட்டு]*

இது எல்லா மாழைகளையும் பொன்னாக்கும்.

**கெந்தகக்களங்கு** *kendaga-k-kaḷaṅgu,* பெ.(n.) போகர் எனும் சித்தர் கந்தகம், தங்கம் இவை இரண்டையும் சேர்த்துச் செய்த மருந்து; an alchemical compound of sulphur and gold prepared by Bogar, a Siddha.

*[கெந்தகம் + களங்கு.]*

**கெந்தகநீர்** *kendaga-nīr,* பெ.(n.) கெந்தகம் கரைந்த நீர்; *a mineral water containing sulphur in solution,* sulphur water. 2. பனிக்குடத்து நீர்; amniotic fluid.

*[கந்தகம் → கெந்தகம் + நீர்.]*

**கெந்தகபற்பம்** *kendaga-parpam,* பெ.(n.) நலம் நல்கும் கந்தகப் பொடி; calcined oxide of sulphur, which gives good health.

*[கந்தகம் → கெந்தகம் + பற்பம்.]*

**கெந்தகபூமி** *kendaga-būmi,* பெ.(n.) காங்கையான நிலம்; soil containing sulphur; hot climate, the heat being ascribed to sulphur in the soil.

*[கந்தகம் → கெந்தகம் + பூமி.]*

**கெந்தகம்**[1] *kendagam,* பெ.(n.) 1. கந்தகம்; sulphur. 2. அப்பிரகம்; mica.

*[காந்து → காந்தகம் → கந்தகம் → கெந்தகம்.]*

**கெந்தகம்**[2] *kendagam,* பெ.(n.) நாய்வேளை (மலை.); a sticky plant that generally grows in sandy places.

*[காந்து → காந்தகம் → கெந்தகம்.]*

**கெந்தகம்**[3] *kendagam,* பெ.(n.) ***கெண்டூரம்*** பார்க்க; see *keṇḍūram* (சி.அக.).

*[கெண்டூரம் → கெந்தகம்.]*

**கெந்தகவண்டல்** *kendaga-vaṇḍal,* பெ.(n.) நீரூற்று மணற்கந்தகம்; sulphur combined with silica found in certain springs.

*[கந்தகம் → கெந்தகம் + வண்டல்.]*

**கெந்தகவுப்பு** *kendaga-v-uppu,* பெ.(n.) கறுப்புப்பு; sodium chloride with little sulphate of iron.

*[கந்தகம் → கெந்தகம் + உப்பு.]*

**கெந்தகவெடி** *kendaga-veḍi,* பெ.(n.) பட்டாசு (இ.வ.); fire crackers.

*[கெந்தகம் → கந்தகம் + வெடி.]*

**கெந்தகவெள்ளை** *kendaga-veḷḷai,* பெ.(n.) வெண் சுண்ணக் கந்தகம்; milk sulphur obtained from the solution of calcium sulphide.

*[கந்தகம் → கெந்தகம் + வெள்ளை.]*

**கெந்தகற்பம்** *kenda-kaṟpam,* பெ.(n.) வில்வம்; bael tree.

*[கந்தகம் → கெந்தகம் + கற்பம்.]*

**கெந்தகாயம்** *kenda-gāyam,* பெ.(n.) நீர்ப்பூலா; black honey shrub.

*[கந்தகம் → கெந்தகம் + காயம்.]*

**கெந்தகி** *kendagi,* பெ.(n.) அதிமதுரம்; liquorice plant.

*[கெந்தம் → கெந்தகி.]*

**கெந்தசடகம்** *kenda-šadagam,* பெ.(n.) ஆமணக்கு; castor plant

*[கெந்தம் + சடகம்.]*

**கெந்தசாமகன்** *kenda-šāmagaṉ,* பெ.(n.) பேரரத்தை; greater galangal.

மறுவ. கெந்தநரணி, கெந்த நாகுலியம்.

*[கெந்தம் + சாமகன்.]*

**கெந்தசாலி** *kenda-šāli,* பெ.(n.) கெந்தசாலி நெல்; a kind of paddy. *"பெரியசெந்நெற்பிரம்புரிகெந்தசாலி" (தேவா.700:7).*

*[கெந்தம் + சாலி.]*

**கெந்ததாரணை** *kenda-tāraṇai,* பெ.(n.) ஒன்பது வகைத்தாரணையுள் ஒன்று (திவா.Ms.); one of *nava-tāraṇai.*

*[கெந்தம் + தாரணை.]*

**கெந்ததாளி** *kendātāḷi,* பெ.(n.) 1. கந்தக மணமுள்ள தாளி; sulphur smelling bind weed of ipomaea ge-

nus. 2. வாய்ப்புண்; eruption of smell uesicles on the lips mouth, tongue and throat.

*[கெந்தம் + தாளி.]*

**கெந்தநரணி** *kenda-narani,* பெ.(n.) பேரரத்தை; greater galangal.

மறுவ. கெந்தசாமகன், கெந்தநாகுலியம்.

*[கெந்தம் + நரணி.]*

**கெந்தநாகுலியம்** *kenda-nāguliyam* பெ.(n.) பேரரத்தை; greater galangal.

*[கெந்தம் + நாகுலியம்.]*

**கெந்தப்பொடி** *kenda-p-podi,* பெ.(n.) 1. குளிக்கப் பயன்படுத்தும் நறுமணப் பொடி; aromatic powder used in bath. 2. சொக்குப் பொடி; love powder. *"பெட்டியிலே கெந்தப்பொடி வைத்தனுப்பினாள்" (தெய்வச். விறலிவிடு. 203).*

*[கந்தம் → கெந்தம் + பொடி.]*

**கெந்தபத்திரம்** *kenda-pattiram,* பெ.(n.) 1. முன்னை; firebrand teak. 2. வில்வம்; bael tree.

*[கெந்தம் + பத்திரம்.]*

**கெந்தபந்தம்** *kenda-pandam,* பெ.(n.) கவுரிநஞ்சு; a prepared arsenic.

*[கெந்தம் + பந்தம்.]*

**கெந்தபீசகம்** *kenda-pišagam,* பெ.(n.) காட்டுமா (சங். அக.); Cuddapah almond.

*[கெந்தம் + பீசகம்.]*

**கெந்தபுட்பி** *kenda-putpi,* பெ.(n.) மெருகன் கிழங்குச் செடி; a plant with a long tuberous root.

*[கெந்தம் + புட்பி.]*

**கெந்தபூதி** *kenda-pūdi,* பெ.(n.) நாய்வேளை; dog-mustard plant.

*[கெந்தம் + பூதி.]*

**கெந்தபூதியம்** *kenda-pūdiyam,* பெ.(n.) ***கெந்தபூதி*** பார்க்க; see *kenda-pūdi.*

*[கெந்தம் + பூதியம்.]*

**கெந்தம்** *kendam,* பெ.(n.) 1. மணம்; scent, odour, fragrance. 2. முகமணப்பொருள்; perfumery. 3. சந்தனம்; sandal-wood. 4. வசம்பு; sweet flag.

*[கந்தம் → கெந்தம்.]*

**கெந்தமாஞ்சில்** *kenda-māñjil,* பெ.(n.) இலாமிச்சை வேர்; Indian spikenard.

மறுவ. வெட்டிவேர்.

*[கெந்தம் + மாஞ்சில்.]*

**கெந்தமூலம்** *kenda-mūlam,* பெ.(n.) பிடங்கு நாறி; fire-brand teak.

*[கெந்தம் + மூலம்.]*

**கெந்தமூலி** *kenda-mūli,* பெ.(n.) சிறு இண்டஞ்செடி; a small species of the plant of the Mimosa genus.

*[கெந்தம் + மூலி.]*

**கெந்தரகம்** *kendaragam,* பெ.(n.) செங்கழுநீர்ப்பூ; red Indian water lily.

*[கெந்தரம் → செந்தரகம்.]*

**கெந்தரம்** *kendaram,* பெ.(n.) கார்முகில் நஞ்சு; a kind of prepared arsenic.

*[காந்து → கெந்து → கெந்தரம்.]*

**கெந்தரி** *kendari,* பெ.(n.) பொன்னிமிளை; gold pyrites.

*[காந்து → கெந்து → கெந்தரி.]*

**கெந்தருசு** *kendarušu,* பெ.(n.) சுராலை (சாம்பிராணி); frankincense.

*[காந்து → கெந்து → கெந்தருசு (கொ.வ.).]*

**கெந்தலவணம்** *kenda-lavaṇam,* பெ.(n.) ***கெந்திலவணம்*** பார்க்க; see *kendi-lavaṇam.*

*[கெந்தம் + இலவணம்.]*

**கெந்தவடி** *kenda-vadi,* பெ.(n.) மணமுள்ள எண்ணெய்ப் பொருள்; odoriferous essential punguent.

*[கெந்தம் + வடி.]*

**கெந்தவாசம்** *kenda-vāšam,* பெ.(n.) மணப்பொருள்; scented perfume.

*[கந்தம் → கெந்தம் + வாசம்.]*

**கெந்தன்** *kendan,* பெ.(n.) கோடகசாலை; a very small plant known as Coromandel gendarussa.

மறுவ. கெந்தணம்.

*[கந்தம் → கெந்தம் → கெந்தன்.]*

**கெந்தா** *kendā,* பெ.(n.) 1. வேளைப்பூடு; a vailay plant. 2. பேராமல்லி; a kind of jasmine. 3. ஒரு மருந்துச் செடி; a medicinal plant.

*[கந்தம் → கெந்தம் → கெந்தா.]*

**கெந்தாளி** *kendāḷi,* பெ.(n.) செரிமானம் இன்மையால் ஏற்படும் வயிற்று நோய்; gastritis through in digestion.

*[குந்து → கெந்து → கெந்தாளி.]*

**கெந்தி[1]-த்தல்** *kendi-,* 4 செ.குன்றாவி.(v.i.) தத்துதல்; to hop, skip. *"கெந்தியா வுகளுங் கெண்டை" (திருவிளை.கருவூர்.பதி. 3.10).*

**தெ., க.** கந்து.

*[கிந்து → கெந்து → கெந்தி.]*

**கெந்தி[2]** *kendi-,* பெ.(n.) 1. கந்தகம்; sulphur. 2. பொன்னிமிளை (சங்.அக.); gold-coloured antimony.

*[காந்து → கெந்து → கெந்தி.]*

**கெந்திகம்** *kendigam,* பெ.(n.) பாம்புகொல்லிப்பூடு; a kind of plant.

*[காந்து → கெந்து → கெந்திகம்.]*

**கெந்திகயம்** *kendikayam,* பெ.(n.) ஊசலாங் கொடி; a creeper.

*[கந்தம் → கெந்தம் → கெந்தி + கயம் (காயம்).]*

**கெந்திகாரச்சீலை** *kendi-kāra-c-cīlai,* பெ.(n.) கந்தக காரச்சீலை; a blistering plaster containing sulphur as one of its ingredients.

*[கந்தகம் → கெந்தி. கெந்தி + காரம் + சீலை.]*

இது குழிப் புண்ணுக்கு இடப்படும்.

**கெந்திச்செம்பு** *kendi-c-cembu,* பெ.(n.) 1. புறங்கை நாறி; a plant. 2. கந்தகத்தால் செய்த ஏனம்; a vessel made of consolidated sulphur. 3. கந்தகச் செம்பு; copper extracted from sulphur.

*[கெந்தி + செம்பு.]*

**கெந்திப்புகை** *kendi-p-pugai,* பெ.(n.) கந்தகப் புகை; sulphur-fumes.

*[கெந்தி + புகை. கந்தகம் → கெந்தி.]*

**கெந்திபரம்** *kendiparam,* பெ.(n.) ஆடுதின்னாப் பாளை; a kind of plant which goat will not eat, worm-killer.

*[கெந்திபாளை → கெந்திபரம்.]*

**கெந்திபாடாணம்** *kendi-pāḍāṇam,* பெ.(n.) கந்தக நஞ்சு; mineral poison.

*[கெந்தி + பாடாணம். பாஷாணம் Skt. த. பாடாணம்.]*

**கெந்திபாளை** *kendi-pālai,* பெ.(n.) ஆடுதின்னாப் பாளை (சித்.அக.); worm killer.

*[கெந்து → கெந்தி + பாளை.]*

**கெந்திமூலம்** *kendi-mūlam,* பெ.(n.) கிச்சிலிக் கிழங்கு; orange root.

*[கெந்தி + மூலம்.]*

**கெந்தியுப்பு** *kendi-y-uppu,* பெ.(n.) கந்தகவுப்பு; sulphur.

*[கெந்தி + உப்பு.]*

**கெந்தியுரிநஞ்சு** *kendi-y-uri-nañju,* பெ.(n.) வைப்பு நஞ்சு (சித்.அக.); a prepared arsenic.

*[கெந்தி + உரி + நஞ்சு.]*

**கெந்திரகாண்டம்** *kendira-kāṇḍam,* பெ.(n.) பாகல்; bitter gourd.

*[கெந்தரம் → கெந்திரம் + காண்டம்.]*

**கெந்திலவணம்** *kendi-lavaṇam,* பெ.(n.) 1. காய்ச் சுப்பு; a salt prepared by heating a mixture of rotten eggs, sulphur and sea-salt. 2. சிவப்புப்பு; sulphur salt.

*[கெந்தி + இலவணம்.]*

**கெந்திவாருணி** *kendi-vāruṇi,* பெ.(n.) பேய்க் கொம்மட்டி; bitter apple.

மறுவ. பேய்த்தும்மட்டி.

*[கெந்தி + (வாலுளி) வாருணி.]*

**கெந்து[1]-தல்** *kendu-,* 5 செ.குன்றாவி.(v.i.) 1. தத்துதல்; to hop, skip. 2. நெளிதல் (யாழ்ப்.); to crawl or creep, as worms in a sore, to writhe, wriggle. 3. கிட்டிப் புள்ளடித்தல்; to strike the stick in the game of tip-cat. 4. ஒற்றைக் கால் ஊன்றியும் மறுகால் ஊன்ற முடியாமலும் விந்தி விந்தி நடத்தல்; walk with one leg pressed and the other leg not capable of pressing. அவன் ஒருகாலில் புண்பட்டதால் கெந்துகிறான்.

**தெ., து.** கந்து.

*[கெந்தி → கெந்து.]*

**கெந்து[2]** *kendu,* பெ.(n.) ஒற்றைக்காலாற் கெந்தி யாடும் பிள்ளை விளையாட்டு; a game of children, in which each member of a side can put out any number of the other side by chasing and touching them


கெந்து

as long as he can hop continuously on one leg. 2. கிட்டிப்புள் விளையாட்டு; the game of tip-cat.

[கெந்தி → கெந்து.]

**கெந்துசடகம்** *kendu-šaḍagam*, பெ.(n.) ஒருவகைப் புழு; a kind of worm.

[கெந்து + சடகம்.]

**கெப்பிதம்** *keppidam*, பெ.(n.) நிந்தை; reproach, blasphemy, abuse.

[கவ்வை → கப்பை → கெப்பை → கெப்பிதம் (கொ.வ.)]

**கெபி** *kepi* பெ.(n.) 1. குகை; cave. 2. குழி; a bit. 3. வளை; a hole.

[கவி → கெவி → கெபி (கொ.வ.).]

**கெம்பட்டி** *kembaṭṭi*, பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

[செம் + பட்டி – செம்பட்டி → கெம்பட்டி (கொ.வ.).]

**கெம்பட்டிகை** *kempaṭṭgai*, பெ.(n.) பதக்கம்வைத்துக் கல்லிழைத்த கழுத்தணி; ruby necklace with locket in the middle.

[கெம்பு + அட்டிகை.]

**கெம்பத்து** *kempattu*, பெ.(n.) பகட்டு (வின்.); pomp splendour.

[கெம்பு → கெம்பல் → கெம்பத்து.]

**கெம்பநாயக்கன்பாளையம்** *kembanāyakkaṉ-pāḷaiyam*, பெ.(n.) ஈரோடு மாவட்டத்துச் சிற்றூர்; a village in Erode Dt.

[செம்பியன் → செம்பன் → கெம்பன் + நாயக்கன் + பாளையம்.]

**கெம்பரை** *kembarai*, பெ.(n.) 1. கூடை (யாழ்.அக.); basket. 2. நெற்கூடை; paddy basket.

க. கம்பெ; தெ. கம்ப.

[கெம்பு + அலை – கெம்பலை. சம்பு → கம்பு → கெம்பு.]

**கெம்பல்** *kembal*, பெ.(n.) 1. ஆரவாரம்; loud noise. 2. எழும்பல்; ascend, rise.

[கெம்பு + அல் – கெம்பல்.]

**கெம்பளி–த்தல்** *kembaḷi-*, 4 செ.கு.வி.(v.i.) மகிழ்வுறுதல் (யாழ்.அக.); to exult, to be merry.

[கெம்பு + அளி–.]

**கெம்பளிப்பு** *kembaḷippu*, பெ.(n.) 1. மகிழ்ச்சி (வின்.); exultation, mirth. 2. ஆடம்பரம்; pomp, ostentation.

[கெம்பு + அளிப்பு. கெம் = துள்ளுதல். கெம்பு = ஆரவாரித்தல்.]

**கெம்பிரிக்கம்பண்ணு–தல்** *kembirikkam-paṇṇu-*, 9 செ.கு.வி.(v.i.) 1. இட்டுக்கட்டிப்பேசுதல்; to concoct. 2. தம்பட்டமடித்தல்; to spread.

[கெம்பல் → கெம்பரிக்கம் → கெம்பிரிக்கம் + பண்ணு–.]

**கெம்பிரசன்னி** *kembira-šaṉṉi*, பெ.(n.) சிரிப்பு, வலிப்புகளுடன் கூடிய இசிவு (சன்னி); a kind of delirium highly characterised by incessant laughter, convulsion, fits, etc.

[கம்பீர → கெம்பீர + சன்னி.]

**கெம்பீரம்** *kembīram*, பெ.(n.) 1. ஆழம்; depth. 2. பரிமளிப்பு; shine. 3. மேன்மை; excellence. 4. வீரம்; courage. 5. வீறு; manliness. 6. ஆழ்ந்த அறிவு; profound knowldege.

[கம்பீரம் → கெம்பீரம்.]

**கெம்பீரி–த்தல்** *kembīri-*, 4 செ.குன்றாவி.(v.t.) வீரங்காட்டுதல் (யாழ்.அக.); to display manliness, majesty of spirit. 2. எடுப்பான குரலாற் பேசுகை; to exult, to speak in a majestic tone.

[கம்பீரி → கெம்பீரி.]

**கெம்பீரியம்** *kembīriyam*, பெ.(n.) 1. இளம்பிசின்; soft gum. 2. கம்பீர்பிசின்; gambier resin.

[கம்பீரி → கெம்பீரி → கெம்பீரியம். கம்பீரி தாம்பூலத்துடன் சேர்க்கும் ஒருவகைத் துவர்ப்புச் சரக்கு.]

**கெம்பு[1]–தல்** *kembu-*, 5 செ.கு.வி.(v.i.) கொந்தளித்தல் (வின்.); to rise, as waves; to be violent as the wind; to swell, heave, as the sea (W.). 2. அரத்தங்கொதித்தல் (வின்.); to rise up, boil, as blood in rage (W.). 3. உரத்துப்பேசுதல்; to speak loud, cry

out, clamour. 4. ஆரவாரித்தல் (வின்.); to create tumult, to rise with indignation. 5. நெம்புதல்; to lift.

*[கம்பு → கெம்பு.]*

**கெம்பு**[2] *kembu,* பெ.(n.) 1. கரும்சிவப்பு நிறக்கல் (பதுமராகம்); ruby. கெம்புத்தோடு வாங்க வேண்டும். 2. கருஞ்சிவப்பு; dark-red colour. உனக்குக் கெம்புநிறப் புடைவை அழகாக இருக்கும் (உ.வ.). 3. கருஞ்சிவப்புச் சாணைக்கல்; dark red whetstone. 4. மாணிக்க (இரத்தின)க் கல்; sardius.

**க., தெ.** கெம்பு.

*[செம் → கெம் → கெம்பு.]*

**கெம்புக்கட்டிக்கல்** *kembu-k-katti-k-kal,* பெ.(n.) தாழ்ந்தவகைக் குருந்தக்கல்; low quality of diamond.

*[கெம்பு + கல்.]*

**கெம்புநீலம்** *kembu-nīlam,* பெ.(n.) 1. உயர்ந்த நீலம்; superior sapphire. 2. சிவப்பு நிறமான சாணைக்கல்; red whetstone.

*[கெம்பு + நீலம்.]*

**கெம்புமல்லிகை** *kembu-malligai,* பெ.(n.) மயிர்மாணிக்கம்; cypress vine.

*[கெம்பு + மல்லிகை.]*

**கெம்மரம்பாளையம்** *kemmaram-pāḷaiyam,* பெ.(n.) கோவைமாவட்டத்துச் சிற்றூர்; a village in Kōvai Dt.

*[செம்மரம் → கெம்மரம் + பாளையம்.]*

**கெமி–த்தல்** *kemi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. போதல்; to go. "*அயல் கெமித்து*" (*இரகு. தேனுவ. 8*). 2. புணர்தல்; to copulate.

*[கும் → கம் → கெம் → கெமி.]*

**கெமிளி–த்தல்** *kemiḷi-,* 4 செ.கு.வி.(v.i.) மகிழ்தல் (கெம்பளித்தல்); to enjoy.

*[குமளி → கெமளி → கெமிளி.]*

**கெமுதாகி** *kemudāgi,* பெ.(n.) செங்கொட்டை; marking nut.

**மறுவ.** சேரான்கொட்டை; வண்ணத்தான்கொட்டை.

*[கெம் → கெம்பு = கருஞ்சிவப்பு. கெம்பு → கெமுதாகி.]*

**கெய்**[1] *kei,* பெ.(n.) ஒருவகை மீன் (யாழ்.அக.); a kind of fish.

*[கள் → கய் → கெய்.]*

**கெய்**[2]**–தல்** *kei,* 1 செ.குன்றாவி.(v.t.) 1. வினையாற்றுதல்; to perform, to do. 2. உருவாக்குதல், உண்டு பண்ணுதல்; to prepare, to make. 4. வேலை செய்தல், உழுதல்; to work, to till.

க. கெய், கெயி, கெயு, கெய்யு; **பட.** கீய்.

key, to do. In all the Dravidian dialects kei is hand. In Telugu kēlu is also found. The most common form of this word in Telugu is *chey-i or chēyi. The word signifying to do is almost* identical, viz., key, chey, etc......... Hungarian kēz (pronounced keis), Finnish kchēsi (root kā- *e.g.* genitive kā-an), Estain kāsi, Ostiak ket, Lappish kāt, Perimian ki, Lasian kē, Mingrelian che, Quasi-Qumuq (a Turkish dialect) kūya. Turkish kol, Mongol ghar, Tungusian gala. The Hungarian has both kar and kēz: but the former is used to signify arm, the later hand-a distinction which seems to prove that those roots, though perhaps ultimately related, have long been independent of one another. The word in the various Scythian languages signifying to do appear to stand in the same relation to the word for hand that they do in the Aryan and Dravidian languages. Comp. The Turkish kyl, to do; Mongol ki, Manchu gai, Mordvin kā. These words resemble the Aryan kar, to do, but still more closely the Dravidian ki, kē, etc. (CG.DEL.617, 618).

*[கை → கய் → கெய்.]*

**கெர்ச்சி–த்தல்** *kercci-,* 4 செ.கு.வி.(v.i.) 1. முழங்குதல்; to roar. 2. ***உரப்புதல்*** பார்க்க; see *urappu-.*

**மறுவ.** உரப்புதல், கருச்சித்தல்.

**க.** கெய், கெயி, கெயு, கெய்யு; **பட.** தீய்.

*[கருச்சி → கர்ச்சி → கெர்ச்சி (கொ.வ.) வழங்காமல் தவிர்க்க வேண்டும்.]*

கருச்சித்தல் என்பதே செவ்விய வடிவம்.

**கெர்ச்சினை** *kerccinai,* பெ.(n.) 1. அரிமாவின் முழக்கம்; roar of lion. 2. முழக்கம்; roar like a lion. 3. ***உரப்பல்*** பார்க்க; see *uarappal.*

**மறுவ.** உரப்பல், கருச்சனை.

*[கருச்சி → கர்ச்சனை → கெர்ச்சனை (கொ.வ.). வழங்காமல் தவிர்த்தல் வேண்டும்.]*

கருச்சனை என்பதே செவ்விய வடிவம்.

**கெர்ப்பீகரி–த்தல்** *kerppīkari-,* 4 செ.கு.வி.(v.i.) கருவாய் மாறுதல்; to form into an embryo. "*சுத்தசடமான சுக்கிலங் கெர்ப்பீகரித்து*" (*சொரூபசாரம், 61*).

*[கருப்பம் → கெர்ப்பம் + கரி (கொ.வ.).]*

**கெரட்டுக்கெரட்டெனல்** *kerattu-k-kerattenal,* பெ.(n.) சளி முதலியவற்றால் அல்லற்பட்டு விடும் மூச்சின் ஒலிக்குறிப்பு; onom. expression signifying hoarse sound or rattle, as in hard or difficult breathing.

*[கரள் → கரட்டு → கெரட்டு + கெரட்டெனல்.]*

**கெரடி** *keradi,* பெ.(n.) 1. சிலம்பம்; a kind of martial art. 2. புரட்டு; deceit, falsehood. 'கெரடி கற்றவன் இடறி விழுந்தால் அதுவும் ஒரு வரிசை என்பான்' (பழ.).

*[கரடி → கெரடி (கொ.வ.).]*

**கெரி–த்தல்** *keri-,* 4 செ.கு.வி. (v.i.) 1. உப்புச்சுவை மிகுதல்; to become salty, to irritate. 2. சிறு எரிச்சல்; to irritate as in the eyes on contact with external malter.

*[கரி → கெரி.]*

**கெரிகோடி அள்ளி** *kerikōdi-alli,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharumapuri Dt.

*[த. சிறை (ஏரி) > க. கெரெ > கெரி + கோடி + (பள்ளி) அள்ளி.]*

**கெரிட்டம்** *kerittam,* பெ.(n.) சினம்; angry, annoyed.

*[கரி → கெரி → கெரிட்டம்.]*

**கெருகம்** *kerugam,* பெ.(n.) கோரைக்கிழங்கு; fragrant tuber or root of koray.

*[கருக்கு → கெருக்கு → கெருகம்.]*

**கெருகம்பாக்கம்** *kerugam-bākkam,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tiruvallūar Dt.

*[குருகு → கெருகு + அம் + பாக்கம்.]*

**கெருடக்கல்** *keruda-k-kal,* பெ.(n.) 1. நஞ்சுக்கரசன்; king of poisons. 2. கருடன் தலைக்குள்ளிருப்பதாகக் கருதப்படும் கல்; a concretion said to be in the head of Brahminy kite.

*[கெருடன் + கல்.]*

**கெருடக்காய்** *keruda-k-kāy,* பெ.(n.) 1. நத்தைச்சூரி; bristly button weed. 2. தண்ணீர்விட்டான் கிழங்கு; water root.

*[கருடன் → கெருடன் + காய்.]*

**கெருடக்கொடி** *keruda-k-kodi,* பெ.(n.) 1. கருஞ் சீந்தில்; a black variety of moon-creeper. 2. தலைச் சுருள் வள்ளி; a creeper.

*[கருடன் → கெருடன் → கொடி.]*

**கெருடத்தொட்டி** *keruda-t-totti,* பெ.(n.) காக்கை கொல்லிவிதை; a kind of seed to kill crows (சா.அக.).

*[கருடன் → கெருடன் + தொட்டி.]*

**கெருடப்பச்சை** *keruda p-paccai,* பெ.(n.) படிகக்கல்; pearl-aquamarina (சா.அக.).

*[கருடப்பச்சை → கெருடப்பச்சை.]*

**கெருடமுகம்** *keruda-mugam,* பெ.(n.) மாடுகளின் முகம்மட்டும் வெண்மையாயிருக்கை (பெரியமாட்.15); being white in the nose only, as cattle.

*[கருடன் → கெருடன் + முகம்.]*

**கெருடன்** *kerudan* பெ.(n.) 1. வெண்மையும் செம்மையும் கலந்த பருந்து; white headed kite, bird. 2. மாலவன் ஊர்தி; vehicle of Visnu.

*[கருடன் → கெருடன்.]*

**கெருடி** *kerudi,* பெ.(n.) 1. சிலம்பம்; fencing. "*கெருடிகட்டி யளவிலா மைந்தர்க் கூட்டி*" *(திருவாலவா. 35:4).* 2. கரடிக்கூடம்; fencing school.

மறுவ. கொரடி.

க. கருடி; தெ. கரிடி; து. கரொடி.

*[கரடி → கொரடி → கெருடி.]*

**கெருமத்தம்** *kerumattam,* பெ.(n.) பறவை; bird.

*[கருமத்தம் → கெருமத்தம் (கொ.வ.).]*

**கெருவம்** *keruvam,* பெ.(n.) செருக்கு, தன்முனைப்பு (ஆணவம்); haughtiness, arrogance. "*கெருவமுடனகந்தை யுள்ளார்*" *(தண்டலை. 92).*

*[கருவம் → கெருவம் (கொ.வ.).]*

**கெருவிதன்** *keruvidan,* பெ.(n.) செருக்குடையவன் (கருவமுடையவன்); proud person. "*நடமாடுகனபத கெருவிதா*" *(திருப்பு. 132).*

*[கருவம் + அன் – கருவன் → கருவிதன் → கெருவிதன்.]*

**கெல்–தல்** *kel-,* 13 செ.கு.வி.(v.i.) புறப்படுதல், போதல்; to go.

**Fin.** kulkea (to go, to walk); **Est.** kulgeda; **Hung.** kel; **Mong.** yulyu; **Turk.** gelmek (to come); **J.** kuru; Q. chullai.

*[குல் → கெல்.]*

**கெல்லு–தல்** *kellu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கல்லுதல்; to dig out as a hole. "*கிணறு கெல்ல*" *(தனிப்பா. 2. 140,356)* 2. வயிற்றை அரித்துவிடுதல் (யாழ்ப்.); to irritate or corrode and waste the stomach, as excessive stimulus. 3. கிண்டுதல்; to stir. 4. தோண்டுதல்;




# கெளுத்திமீன் வகைகள்



பொன் கெளுத்தி



கானாங் கெளுத்தி



கோழக் கெளுத்தி



ஆற்றுக் கெளுத்தி

to dig up; to pluck, uproot. மலையைக் கெல்லி எலியைப் பிடிப்பதுபோல் (உ.வ.).

*[கில் → கெல் → கெல்லு.]*

**கெல்லுகம்பு** *kellu-kambu,* பெ.(n.) கல்லுகொம்பு; stake for digging the earth.

*[கல்லுகொம்பு → கெல்லுகம்பு.]*

**கெல்லுவி-த்தல்** *kelluvi-,* பி.வி.(caus.v.) தோற்றுவித்தல்; cause to make. *"மல்லாபுரத்தில் புதிதாகக் கெல்லுவித்த இராமானுசன் கால்வாய்க்கும் திருவிடை யாட்டம் ஏரி கால்வாய்க்கும்" (திருப்.கல். தொ.2, கல்.134-3).*

*[கெல்லு → கெல்லுவி.]*

**கெலமங்கலம்** *kelamaṅgalam,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[கீழ் → கீழ + மங்கலம் - கீழமங்கலம் > க. கெலமங்கலம்.]*

**கெலி[1]-த்தல்** *keli-,* 4 செ.குன்றாவி.(v.t.) வெல்லுதல்; to conquer, overcome.

**க., து.** கெல்; **தெ.** கெலுசு.

*[கலி → கெலி.]*

**கெலி[2]-த்தல்** *keli-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஆசை கொள்ளுதல்; to desire eagerly, feel a craving for. 2. அச்சங்கொள்ளுதல்; to be struck with terror; to start with fear.

*[கலி → கெலி.]*

**கெலி[3]** *keli,* பெ.(n.) ஆசை (யாழ்ப்.); eagerness; greediness, insatiable desire for food.

*[கலி → கெலி.]*

**கெலி[4]** *keli,* பெ.(n.) பெரும்அச்சம்; terror, extreme fear.

*[கிலி → கெலி.]*

**கெலி[5]** *keli,* பெ.(n.) பெருவயிறு (யாழ்.அக.); pot-belly.

*[கலி → கெலி.]*

**கெலிக்கடி** *keli-k-kaḍi,* பெ.(n.) வைப்பு நஞ்சு; a mineral poison.

*[கலி → கெலி + கடி.]*

**கெலிசு** *keliśu,* பெ.(n.) ***கெளிசு*** (யாழ்ப்.) பார்க்க; see *keḷiśu.*

*[கெலி → கெலிசு.]*

**கெலிப்பு** *kelippu,* பெ.(n.) 1. வெற்றி; winning, success, victory. 2. மகிழ்ச்சி; joy, happiness. 3. அச்சம்; fear. 4. ஆசை; desire, wish.

**ம.** கெலிப்பு; **க.** கெலுவு; **குட.** கெல்லு; **தெ.** கெலுபு, கெல்பு; **து.** கெல்பு, கெலுபு; **நா.** கெல்லு; **கொலா.** கெல்.

*[வெல் → கெல் → கெலி → கெலிப்பு.]*

**கெலுழன்** *keluḻan,* பெ.(n.) கருடன்; kite. *"கெலுழனோ நந்த னென்னா" (சீவக. 1926).*

*[கலுழன் → கெலுழன்.]*

**கெவ்வியம்** *kevviyam,* பெ.(n.) நாய்வேளை (மலை.); a sticky plant that grows in sandy places.

*[கவ்வு → கெவ்வு + அம் = கெவ்வியம்.]*

**கெவரி** *kevari,* பெ.(n.) வெள்ளைக்காக்கணம்; a kind of creeper with large white flowers and black fruit that turns red when ripe.

**மறுவ.** காக்கணங்கோவை, கருவிளை, காக்கட்டான்.

**கெவரிகம்** *kevarigam,* பெ.(n.) பல்லிப்பூடு; lizzard plant.

*[கவுளி → கெவளி → கெவரிகம்.]*

**கெவலிகபூடு** *kevaliga-p-pūḍu,* பெ.(n.) கொல்லைப் பல்லி (சித்.அக.); a flowering parasitic plant.

*[கவுளி → கெவளி → கெவலி → கெவலிகம் + பூடு.]*

**கெவி** *kevi,* பெ.(n.) 1. பள்ளம்; depth, deep valley. 2. குகை; cave, cavern. *"புவிதாவுங் கெவிதாவும்" (இராமநா. உயுத். 95. பக்.391).*

**தெ., க.** கவி (gavi).

*[கவி → கெவி.]*

**கெவிடு** *keviḍu,* பெ.(n.) 1. மந்திரக்கூடு (அட்சரக்கூடு) (யாழ்.அக.); case for talisman. 2. எழுத்துப் பலகையின் அறை; compartments of a type case.

*[கவுள் → கவுடு → கெவிடு.]*

**கெவியூதி** *keviyūdi,* பெ.(n.) நாலரைக் கல் (மைல்) தொலைவு; a distance of 2 Indian leagues = 4½ miles. *"குரோச மிரட்டி சேர்ந்தது கெவியூதி" (தணிகைப்பு. அகத். 443.).*

*[காவதம் → கெவியூதி (கொ.வ.)]*

**கெவுடு** *kevuḍu,* பெ.(n.) பொன் அல்லது வெள்ளிக் குவளைக்குள் வைத்துக் கட்டிக் கையில் அல்லது கழுத்தில் அணிந்து கொள்ளும் அக்கமணி (உருத்திராக்கம்); rudrāksa bead enclosed in gold or silver case and tied on the arm or neck, as a badge, amulet or charm.

*[குவி → குவிர் → குவிரு → கெவுரு → கெவுடு.]*

**கெவுரா** *kevurā*, பெ.(n.) துளசி (மலை.); basil, a sacred plant for Vaisṇavites.

மறுவ. கெவுராசிகம்.

*[கவிர் → கெவுரா]*

**கெவுரிகாரம்** *kevurikāram*, பெ.(n.) ஞாழல்; a tree (சா.அக.).

*[குவி → குவிர் → குவிரி → கெவுரி → கெவுரிகாரம் (கொ.வ.).]*

**கெவுரிசங்கம்** *kevuri-šaṅgam* பெ.(n.) 1. சிவனியர் (சைவர்கள்) மாலையாக அணியும் ஒருவகைக் கொட்டை; double rudrāksa bead.

*[குவி → குவிர் → குவிரி → கெவுரி + சங்கம்.]*

**கெவுரியாதியம்** *kevuri-y-ādiyam*, பெ.(n.) பறங்கிப்பட்டை; China rod (சா.அக.).

*[கவுரி → கெவுரி + ஆதியம்.]*

**கெவுளா** *kevuḷā*, பெ.(n.) ஒரு மணமுடைய நெய்மம்; an aromatic substance.

**கெவுளி**[1] *kevuḷi*, பெ.(n.) பல்லி; lizard.

*[கவுளி → கெவுளி.]*

**கெவுளி**[2] *kevuḷi*, பெ.(n.) 1. மஞ்சள் நிறமான காய்கள் உண்டாகும் தென்னைவகை (வின்.); a species of coconut-palm bearing yellowish fruit. 2. சிவந்த சங்கு; a reddish sea shell conch.

*[கேளி = தெங்கு (வின்.); கேளி → கெவுளி.]*

**கெவுளிச்செவ்விளை** *kevuḷi-c-cevviḷai*, பெ.(n.) ஒரு வகைத் தெங்கு; a kind of coconut.

*[கேளி = தெங்கு; கேளி → கெவுளி + செவ்விளை.]*

**கெவுளிசாத்திரம்**[1] *kevuḷi-šāttiram*, பெ.(n.) பல்லியின் ஒலிக்குப் பலன் கூறும் நூல்; a scientific treatise dwelling on the chirps of Lizzard.

*[கவுளி → கெவுளி + சாத்திரம்.]*

**கெவுளிசாத்திரம்**[2] *kevuḷi-šāttiram*, பெ.(n.) 1. மந்திரக்கூடு (அட்சரக் கூடு) (யாழ்.அக.); case for talisman. 2. எழுத்துப் பலகையின் அறை; compartments of a type case.

*[கவுளி → கெவுளி + சாத்திரம்.]*

**கெவுளிபாத்திரம்** *kevuḷi-pāttiram*, பெ.(n.) 1. ஒரு வகைத் தென்னை; a kind of coconut. 2. பிச்சை எடுக்கும் தேங்காய் ஓடு; coconut-shell for taking alms.

*[கெவுளி + பாத்திரம்.]*

**கெவுனம்** *kevuṉam*, பெ.(n.) காக்காய்ப்பொன் (சங்.அக.); mica.

*[கனவு → கவுனம் → கெவுனம்.]*

**கெவுனி** *kevuṉi*, பெ.(n.) கோட்டைவாயில் (இ.வ.); city gate, a gate of a fort, castle.

மறுவ. கவுனி.

தெ. கவினி.

*[கவாடம் → கவானி → கவுனி.]*

**கெழி** *keḻi*, பெ.(n.) நட்பு; friendship. *"ஒருவன் கெழியின்மை கேட்டா லறிக"* (நான்மணி. 63).

ம. கெழி; க. கெளெ.

*[கெழுவு → கெழி.]*

**கெழீஇயிலர்** *keḻī-y-ilar*, பெ.(n.) விருப்பமில்லார் (மணக்குடவர்); one who does not like. *"வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார் வீழப் படாஅர் எனின்"* (குறள். 1194).

*[கெழு → கெழி → கெழீ + இலர்.]*

**கெழீஇயிலார்** *keḻī-i-ilār*, பெ.(n.) நன்மை யடையாதவர்; one who has not benefited. *"பெரியாரைச் சார்ந்து கெழீஇயிலார் இல்"* (பழ.257).

*[கெழீஇ → (அல்லர்) → அலார்.]*

**கெழீஇயிலி** *keḻī-i-y-ili*, பெ.(n.) பகைவன் (தொல். சொல்.57, உரை); enemy, as one not on amicable terms.

*[கெழு → கெழி → கெழீ + இலி.]*

**கெழீஇயின்மை** *keḻī-i-y-iṉmai*, பெ.(n.) ***கெழீஇயிலி*** பார்க்க; see *keḻīyili*. *"கண்டறிவார் போலார் கெழீஇயின்மைசெய்வாரைப்பண்டறிவார் போலாது"* (பழ.140:1).

*[கெழீஇ + இன்மை.]*

**கெழீஇயினர்** *keḻī-i-y-iṉar*, பெ.(n.) சுற்றத்தார்; relatives. *"கேளல்கேளிர் கெழீஇயினர் ஒழுகவும்"* (அகம். 93:2).

*[கெழீஇ + இனர்.]*

**கெழு**[1]**—தல்** *keḻu*, 2 செ.கு.வி.(v.i.) 1. அடர்தல், செறிதல், நெருக்கமாதல்; to become tense, crowded. 2. இறுக்கமாதல்; to get tightened.

**Fin.** kirea (tight, tense); kiristaa (to tighten); **Kere.** kirei; **Est.** kiristada; **Mordvin.** kirems; **Q.** qiruy-firuy.

*[குல் → கெல் → கெழு.]*

**கெழு**[2] *ke/u,* பெ.(n.) 1. ஒரு சாரியை; an euphonic increment. *"உம்முங்கெழுவுமுளப்படப்பிறவும் (தொல். எழுத்து. 481.).* 2. நிறம்; colour. "குருவுங்கெழுவுநிறனா கும்மே" (தொல்.சொல். 303). 2. இடைச்சொல்; participle. *"வேல்கெழு தடக்கை".*

*[குல் → கெல் → கெழு.]*

**கெழு**[3] *ke/u,* பெ.(n.) 1. நிறம்; colour. *"குருவுங் கெழுவு நிறனா கும்மே" (தொல்.சொல். 303).* 2. அதிக ஒளி; brightness, luminosity, brilliance.

*[குல் → கெல் → கெழு.]*

**கெழு**[4] *ke/u,* பெ.(n.) குணகம்; coefficient (Maths).

*[குல் → குழு → கெழு.]*

**கெழுத்தை** *ke/uttai,* பெ.(n.) நஞ்சுடைய முட்களைக் கொண்ட ஒருவகை மீன்; a kind of poisonous thorny fish.

*[கள் → கழு → கெழு → கெழுத்தை.]*

**கெழுதகை** *ke/utagai,* பெ.(n.) ***கெழுதகைமை*** பார்க்க; see *ke/utagaimai.* *"கிள்ளி வளவனொடு கெழுதகை வேண்டி" (மணிமே.25:14).*

*[கெழு + தகை.]*

**கெழுதகைமை** *ke/utagaimai,* பெ.(n.) உரிமை; right, intimacy. *"கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை" (குறள். 808).*

*[கெழுதகை → கெழுதகைமை.]*

**கெழுமல்** *ke/umal,* பெ.(n.) 1. முளைத்தல்; germination. 2. அமைதல்; formulation. 3. கற்றல்; studying. 4. நிறைதல்; becoming full.

*[குள் → கெழு → கெழுமல்.]*

**கெழுமு**[1]**-தல்** *ke/umu-,* 22 செ.கு.வி. (v.i.) 1. நிறைதல்; to become full, plenteous, abundant. *"கெழுமி யெங்கணுமாய்க் கிளரொளிச் சடையனை" (வள்ள. சத்தியஞான. பதியியல், 9).* 2. முதிர்தல்; to become ripe. *'கெழுமுதல் ஈண்டு முற்றுதலை யுணர்த்திற்று' (மலைபடு. 114, உரை).* 3. முளைத்தல் (அக.நி.); to spring up, shoot forth (அக.நி.). 4. பாலுணர்ச்சி கொள்ளுதல்; to be affected with lust. *"கிரிகையை நினைந்துடல் கெழுமி" (பாரத. குருகு. 104).*

*[குள் → கெழு → கெழுமு (மு.தா.40).]*

**கெழுமு**[2]**-தல்** *ke/umu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. பொருந்துதல்; to attain, join, unite. *"தேரோடத் துகள்கெழுமி" (பட்டினப். 47.)* 2. கிட்டுதல்; to approach. *"ஒன்னாதார் படைகெழுமி" (பு.வெ. 3:12, கொளு).* 3. கற்றல் (திவா.); to learn, practise.

*[குள் → குழு → கெழு → கெழுவு → கெழுமு (மு.தா. 40).]*

**கெழுமை**[1] *ke/umai,* பெ.(n.) 1. முளைக்குகை; germinating. 2. வளமை; opulence. 3. நிறம்; colour. 4. ஒளி; brightness, shine.

*[குள் → கெழு → கெழுமல்.]*

**கெழுவ** *ke/uva,* இடை. (part.) ஓர் உவமவுருபு; a term denoting comparison (தொல்.பொருள். 286, உரை.).

*[குல் → குழுவு → கெழுவு.]*

**கெழுவல்** *ke/uval,* பெ.(n.) 1. தழுவுதல்; embracing. 2. நிறைதல்; become full.

*[கெழு → கெழுவல்.]*

**கெழுவு**[1]**-தல்** *ke/uvu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. பொருந்துதல்; to unite, to embrace. *"மங்கை யைக் கெழுவின யோகினர்" (தேவா. 951:5).* 2. நிறைதல்; to be full. *"கெழுவிய காதலையென் றெமதுள்ளம்" (தணிகைப்பு. களவு. 530).* 3. மயங்குதல் (சூடா.); to be confused, deluded (சூடா.). 4. பற்றுக்கொள்ளுதல் (சூடா.); to be attached, as the mind to earthly things (சூடா.).

*[குள் → கெழு → கெழுவு.]*

**கெழுவு**[2] *ke/uvu,* பெ.(n.) நட்பு; friendship. *"கேளிர் மணவின் கெழுவு மிதுவோ" (பரிபா. 8:63).*

*[குள் → குழு → கெழு → கெழுவு.]*

**கெளபள்ளி** *ke/apa/li,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[கேளன் + பள்ளி – கேளன்பள்ளி → கெளபள்ளி.]*

**கெளி-த்தல்** *ke/i-,* 4 செ.கு.வி. (v.i.) நெளிந்துபோதல் (யாழ்.அக.); to wriggle, crawl, as a worm.

**Skt.** gal.

*[குல் → கெல் → கெளி.]*

**கெளித்தி** *ke/itti-,* பெ.(n.) கெளிற்றுமீன், நன்னீர் உள்ள இடங்களில் வாழும் மீன்; a river fish.

*[கெளிறு → கெளிற்றி → கெளித்தி.]*

**கெளிச்சாறு** *keḷi-c-cāṟu*, பெ.(n.) நிலத்துளசி; ground basil (சா.அக.).

*[கெளி → சாறு.]*

**கெளிசு** *keḷišu*, பெ.(n.) 1. காமாலை வீக்கம்; swelling in jaundice. 2. பாண்டு; dropsy (சா.அக.). 3. முகம் வயிறுகளிற் காணும் வீக்கம் (யாழ்ப்.); bloatedness, as of the face or stomach.

*[குல் → கெல் → கெள் → கெளிசு.]*

**கெளிசுபற்று-தல்** *keḷišu-paṟṟu-*, 5 செ.கு.வி. (v.i.) முகம்முதலியன வீங்குதல் (யாழ்.அக.); to be bloated, as the face or stomach.

*[கெளிசு + பற்று-.]*

**கெளித்திப்பச்சை** *keḷitti-p-paccai*, பெ.(n.) பச்சை எரியணம் (கற்பூரம்); crude camphor (சா.அக.).

*[கெளித்தி + பச்சை.]*

**கெளிதம்** *keḷidam*, பெ.(n.) பெருங்கல் (சது.); large stone.

**Skt.** galita.

*[குல் → கெல் → கெள் → கெளிதம்.]*

**கெளிப்பு** *keḷippu*, பெ.(n.) 1. வளைவு; bend. 2. நெளிவு; twist.

*[குல் → கெல் → கெள் → கெளிப்பு.]*

**கெளிர்ச்சல்லியம்** *keḷir-c-calliyam*, பெ.(n.) மீனெலும்பு (வின்.); fish bone.

*[கெளிறு + சல்லியம்.]*

**கெளிற்றுமுள்ளி** *keḷiṟṟu-muḷḷi*, பெ.(n.) கெளிற்று மீனைப்பிடித்தற்குரிய தூண்டில் (இ.வ.); tackle used in catching *keḷiṟṟu-mīṉ*.

*[கெளிறு + முள்ளி.]*

**கெளிறு** *keḷiṟu*, பெ.(n.) **கெளுத்தி** பார்க்க; see *keḷutti*. "கேவேடராகிக் கெளிறதுபடுத்தும்" (திருவாச. 2:17).

*[குள் → கெள் → கெளிறு.]*

**கெளுசி சந்தனம்** *keḷuši-šandaṉam*, பெ.(n.) பேய்ப் புடல்; devil's gourd.

*[கெளிசு → கெளிசி + சந்தனம்.]*

**கெளுத்தி** *keḷutti*, பெ.(n.) 1. எட்டங்குல நீளமுள்ள கெளிற்றுமீன்; fiddler-keḷiṟu, silvery or golden, attaining 8 in. in length. 2. நன்னீரில் வாழும் மீன்வகை; a fresh-water fish, brownish attaining considerable size. 3. பதினெட்டு விரல் நீளமுள்ள மீன்வகை; a fresh-water fish-bird, bluish-brown, attaining 18 in. in length. 4. தேளிமீன்; scorpion-fish, leaden, attaining more than 1 ft. in length.



கெளுத்தி மீன்

**ம.** கென்னலு.

*[கெளிறு → கெளுத்தி.]*

வகைகள் : 1. பொன் கெளுத்தி, 2. கானாங் கெளுத்தி, 3. கோழக் கெளுத்தி, 4. ஆற்றுக் கெளுத்தி.

**கெளுத்திபிலாச்சை** *keḷutti-pilāccai*, பெ.(n.) கெளுத்திபோலத் தோற்றமுள்ள ஒருவகைமீன்; a kind of fish like *keḷutti*.

*[கெளுத்தி + பிலாச்சை]*

**கெளுத்திப்பூண்டு** *keḷutti-p-pūṇḍu*, பெ.(n.) மீனெரிஞ்சான் செடி; a species of rattlewort (சா.அக.).

*[கெளுத்தி + பூண்டு.]*

**கெற்சி** *keṟci*, பெ.(n.) சிறுவழுதலை (சங்.அக.); Indian nightshade.

*[கில் → கில்சி → கெற்சி.]*

**கெற்பக்கல்** *keṟpakkal*, பெ.(n.) கருப்பையில் காணப்படும் கல்; a mole which has undergone calcareous degeneration in the womb. (சா.அக.).

*[கருப்பம் + கல் – கருப்பக்கல் – கெற்பக்கல் (கொ.வ.).]*

**கெற்பக்கழலை** *keṟpa-k-kaḻalai*, பெ.(n.) கருக் கலைவாலுண்டாகும் சதைக் கட்டி; a fleshy mass occurring due to degeneration (சா.அக.).

*[கருப்பம் → கெற்பம் (கொ.வ.) + கழலை – கெற்பக்கழலை.]*

**கெற்பக்காய்ச்சல்** *keṟpa-k-kāyccal*, பெ.(n.) பெண் கருவுற்றிருக்கும்போது உண்டாகும் சுரம்; fever occuring in woman during pregnancy.

*[கருப்பம் → கெற்பம் + காய்ச்சல் – கெற்பக்காய்ச்சல்.]*

**கெற்பக்கிராணி** *kerpa-k-kirāṇi*, பெ.(n.) பேறு காலத்தில் உண்டாகும் நோயிலிருந்து விடுபடல்; relief found by pregnant woman from diarrhoea (சா.அக.).

*[கருப்பம் → கெற்பம் + கிராணி.]*

**கெற்பக்குருவிந்தம்** *kerpa-k-kuruvindam*, பெ.(n.) சாதிலிங்கம்; vermilion (சா.அக.).

*[கருப்பம் → கெற்பம் + குருவிந்தம்.]*

**கெற்பக்குவளை** *kerpa-k-kuvaḷai*, பெ.(n.) கருப்பை; uterus (சா.அக.).

*[கருப்பை + குவளை - கருப்பைக்குவளை → கெற்பக்குவளை (கொ.வ.).]*

**கெற்பக்கொழுப்பு** *kerpa-k-koḻuppu*, பெ.(n.) பொய்க்கற்பத்தில் காணப்படும் அடிவயிற்றின் கொழுப்பு; accumulation of fat in the abdominal wall found in cases of false pregnancy (சா.அக.).

*[கருப்பம் → கெற்பம் + கொழுப்பு.]*

**கெற்பக்கோள்** *kerpa-k-kōḷ*, பெ.(n.) 1. கருப்பங் கொள் தன்மை; the state of being pregnant. 2. கருப்பத்தின் குற்றங்கள்; disorders of pregnancy (சா.அக.).

*[கருப்பம் → கெற்பம் + கோள்.]*

**கெற்பக்கோளிலக்கணம்** *kerpa-k-kōḷ-ilakkaṇam*, பெ.(n.) கருப்பைக் கோளாறுபற்றிய நூல்; a treatise on diseases of the uterus and disorders of pregnancy (சா.அக.).

*[கருப்பம் → கெற்பம் + கோள் + இலக்கணம்.]*

**கெற்பச்சதைக்கழலை** *kerpa-c-cadai-k-kaḻalai*, பெ.(n.) 1. கருப்பையில் காணப்படும் அரத்தத் திரள்; a blood mole in the womb. 2. சிதைவுண்ட கருச்சதை போற் காணப்படல்; a mole formed by dead ovum assuming a flesh like appearance in the womb (சா.அக.).

*[கருப்பம் → கெற்பம் + சதை + கழலை.]*

**கெற்பச்சன்னி** *kerpa-c-caṉṉi*, பெ.(n.) கருவுற்ற பெண்களைத் தாக்கும் இசிவு (சன்னி); delirium attacking a pregnant woman (சா.அக.).

*[கருப்பம் → கெற்பம் + சன்னி.]*

**கெற்பச்சூடு** *kerpa-c-cūḍu*, பெ.(n.) கற்பக் குழந்தையைத்தாக்கும்சூட்டுநோய்; congenital heat affecting children while in the womb (சா.அக.).

*[கருப்பம் → கெற்பம் + சூடு.]*

**கெற்பச்சூரை** *kerpa-c-cūrai*, பெ.(n.) கருவுற்ற பெண்களுக்குக் காணும் சூலைநோய்; darting pain in the abdomen occuring to pregnant women (சா.அக.).

*[கருப்பம் → கெற்பம் + சூரை.]*

**கெற்பநாசம்** *kerpa-nāśam*, பெ.(n.) கருச்சிதைவு; abortion (சா.அக.).

*[கருப்பம் → கெற்பம்; நசி → நாசம்; கெற்பம் + நாசம்.]*

**கெற்பநாசினி** *kerpa-nāśiṉi*, பெ.(n.) கருவைக் கரைக்கும் மருந்து; medicinal agents responsible for causing abortion (சா.அக.).

*[கெற்பம் + நாசினி.]*

**கெற்பப்புழு** *kerpa-p-puḻu*, பெ.(n.) கருத்தரிப்பதைத் தடுக்கும் மலட்டுப்புழு; germs in the uterus destructive to conception (சா.அக.). ***கருப்பப்புழு*** பார்க்க; see *karuppa-p-puḻu*.

*[கருப்பம் → கெற்பம் + புழு.]*

**கெற்பம்** *kerpam*, பெ.(n.) பெண்ணின் கருப்பையில் கரு உண்டாதல்; ovum formed in woman's uterus with the help of male sperm.

*[கரு - கருப்பம்; குருத்தல் - தோன்றுதல்; குரு → கரு → கருப்பம். கரு - சூல், பீள், முட்டை, சேய், குட்டி. வட மொழியாளர் க்ரு (விளி) என்றும் grabh = grah (பற்று) என்றும் மூலங்காட்டு வது பொருந்தாது (வ.மொ.வர.ப.108).]*

**கெற்பம்கீழ்வீழ்தல்** *kerpam-kīḻ-vīḻdal*, பெ.(n.) குழந்தை பிறத்தல்; delivery of child (சா.அக.).

*[கருப்பம் → கெற்பம் + கீழ் + வீழ்தல்.]*

**கெற்பவெட்டை** *kerpa-veṭṭai*, பெ.(n.) குழந்தையைத் தாக்கும் தாய்தந்தையரின் பால்வினை நோய்; venereal or syphilitic tints of congenital origin in children.

*[கருப்பம் → கெற்பம் + வெட்டை.]*

**கெற்பாச்சன்** *kerpā-c-cāṉ*, பெ.(n.) பெருவழுதலை; a big variety of brinjal plant.

*[கில் (வன்மை) + சி - கிற்சி → கெற்சி + (பெருத்தான்) பாச்சான்.]*

**கெற்பிணி** *kerpiṇi*, பெ.(n.) கருவுற்ற பெண்; a pregnant woman (சா.அக.).

*[கருப்பிணி → கெற்பிணி (கொ.வ.).]*

**கெற்பி²-த்தல்** *kerpi-*, 4 செ.கு.வி. (v.i.) கருவுறல்; getting pregnant.

*[கரு → கருப்பி → கெற்பி (கொ.வ.).]*

**கெற்பிரி–தல்** *kerpiri-,*4செ.கு.வி.(v.i.)பற்றியெரிதல் (யாழ்.அக.); to blaze.

*[கிற்பு → கெற்பு (வலிமை) + எரி – கெற்பெரி → கெற்பிரி (கொ.வ.).]*

**கெற்பு** *kerpu,* பெ.(n.) 1. வலிமை; strength. 2. திறன்; power. 3. மெய்ப்பொருள்; philosophy.

**ம.** கெல்பு.

*[கிற்பு → கெற்பு.]*

**கெற்போட்டம்** *kerpōttam,* பெ.(n.) தென்திசை நோக்கி நகரும் முகில்; southern passage of clouds.

*[கருப்பம் → கெற்பம் + ஓட்டம்.]*

**கெனகாரி** *kenagāri* பெ.(n.) முன்னை; spiny fire-brand teak.

*[கனம் → கெனம் + காரி.]*

## கே

**கே** *kē,* பெ. (n.) ககர வல்லொற்றின் மேல் (க்) 'ஏகார' உயிரேறிப்பிறந்த ஓர் உயிர்மெய்யெழுத்து; the syllabic letter representing velar consonant 'க்' with the vowel 'ஏ'.

*[க் + ஏ – கே.]*

**கேக்களி–த்தல்** *kēkkali-,*4செ.கு.வி.(v.i.) ***கெக்களி*** பார்க்க; see *kekkali.*

*[கெக்களி → கேக்களி.]*

**கேக்குப்பூடு** *kēkku-p-pūdu,* பெ.(n.) சேய்மை (சீமைச்) சீரகம்; caraway plant (சா.அக.).

**மறுவ.** கரவிப்பூடு.

*[கேக்கு + பூடு.]*

**கேக்குவிதை** *kēkku-vidai,* பெ.(n.) சேய்மைச் சோம்பு; caraway seed (சா.அக.).

*[கேக்கு + விதை.]*

**கேக்கை** *kēkkai,* பெ.(n.) தாழை; screw-pine-tree.

**மறுவ.** கேக்கைசி.

*[கேதகை → கேக்கை.]*

**கேகம்** *kēgam,* பெ.(n.) வீடு (யாழ்.அக.); house.

*[கருவகம் (உள்வீடு) → கிருகம் → கேகம்.]*

அரசனின் மந்திரச்சுற்றம் கூடும் நெடுமாடத்தைக் கருமாளிகை என்றும், இறைவன் எழுந்தருளிய கோயிலகத்தைற் கருவறை என்றும், உள்மண்டபத்தைக் கருவரங்கம் என்றும் கூறுதலை ஒப்பிட்டு நோக்குக. கருவகம் என்னும் தமிழ்ச்சொல்லே வடமொழியில் கிருகம் என்றும் வட இந்திய மொழிகளில் கர் (gar) என்றும் திரிந்தது.

**கேகயப்புள்** *kēkaya-p-pul,* பெ.(n.) இசையுணரும் அசுணப்பறவை; a bird believed to possess an extremely delicate sense of music.

*[கேகயம் + புள் (பறவை).]*

இப் பறவையைக் கொல்ல நினைப்பவர், முதலில் யாழை மீட்டிப் பின்பு செவியில் ஏற்கவொண்ணாத பறையை முழக்கிக் கொல்வர் என்பது நற்றிணை 304ஆம் பாடலின் உரைக்குறிப்பு.

**கேகயம்**[1] *kēgayam,* பெ.(n.) மயில் (திவா.); peacock. *"கேகய நவில்வன" (கம்பரா.நாட்டு.49).*

*[கெக்கலி → கேக்கை → கேகயம் (கெக்கலிக்கும் பறவை).]*

**கேகயம்**[2] *kēgayam,* பெ.(n.) 1. பண்டைய ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்றானதும், சிந்து நாட்டிற் கருகிலுள்ளதுமான நாடு; the country bordering on Sindh, one of 56 countries. *"மணிமுடிக் கேகயத் தரசன்" (பெருங்.மகத.16:9).* 2. பண்வகை (சூடா.); a musical mode. 3. கவுரிச் செய்நஞ்சு (யாழ்.அக.); a prepared arsenic. 4. ***கேகயப்புள்*** பார்க்க; see *kēgaya-p-pul.*

*[கேகயம்[1] → கேகயம்[2].]*

**கேகயம்**[3] *kēgayam,* பெ.(n.) மகிழம்விதை; seeds of ape-flower tree (சா.அக.).

*[கேதகம் → கேகயம்.]*

**கேகயம்**[4] *kēgayam,* பெ.(n.) 1. வளைவு; bend. 2. வில் (அக.நி.); bow.

**Pkt.** kēya; **Ma.** ketana.

*[கவை → கேவு → கேகம் → கேகயம்.]*

**கேகயன்** *kēkayan,* பெ.(n.) கேகயம் என்னும் நாட்டை ஆண்ட மன்னன்; a king who ruled the nation *kēgayam.*

*[கேகயம் → கேகாரன்.]*

**கேகரம்** *kēgaram,* பெ.(n.) கடைக்கண் பார்வை; side glance (சா.அக.).

**Pan.** kairā; **Ass.** ker,rā, kērā; **H., Mar.** kaira.

*[கேக்கை → கேகரம்.]*

**கேகரன்** *kēgaran,* பெ.(n.) ஓரக்கண்ணன்; squint-eyed man (சா.அக.).

*[கேக்கை → கேகரம் → கேகரன்.]*

**கேகலன்** *kēgalaṉ,* பெ.(n.) கூத்தாடி; rope dancer.

**Skt.** ke-kala.

**து.**கேகபாடுனி.

*[களி → கேளி → கேளிகளி → கேகலன் (கொ.வ.).]*

**கேகி** *kēgi,* பெ.(n.) மயில்; peacock (சா.அக.).

**தெ.**கேகி.

**மறுவ.** கேகயம்.

*[கெக்களி → கேகளி → கேகி.]*

**கேகுந்தகம்** *kēgundagam,* பெ.(n.) கொழுக்கட்டை; a kind of rice cake or puff (சா.அக.).

**மறுவ.** கேகுந்தம்.

*[கேவு → கேவுந்தம் → கேகுந்தம் → கேகுந்தகம்.]*

**கேகுந்தம்** *kēgundam,* பெ.(n.) கொழுக்கட்டை; puff (சா.அக.).

*[கேவு → கேவுந்தம் → கேகுந்தம் வடஇந்திய மொழிகளில் gēhu கோதுமை எனப் பொருள்படும்.]*

**கேகை** *kēgai,* பெ.(n.) மயிற்குரலின் அகவலோசை; screech of a pea-cock (சா.அக.).

**மறுவ.** கேகம்.

**Skt.** keka; **Pkt.** kekā, **H.** kehā.

*[கேக்கை (ஒலிக்குறிப்பு) → கேகை.]*

**கேசக்கினம்** *kēša-k-kiṉam,* பெ.(n.) 1. தலை வழுக்கை; morbid baldness. 2 . மயிர் உதிர்தல்; falling off of the hair (சா.அக.).

*[கேசம் + (கீனம்) கினம்.]*

**கேசகம்** *kēšagam,* பெ.(n.) 1. ஒருவகைக் கிழங்கு; a kind of root. 2. அத்தி; fig tree (சா.அக.).

*[கதி → கெதி → கேதி → கேதிகம் → கேசிகம் → கேசகம்.]*

**கேசகாரம்** *kēšagāram,* பெ.(n.) ஒருவகைக் கரும்பு; a kind of sugarcane (சா.அக.). 2. குதிரையைத் தேய்க்குமொரு இரும்புக் கருவி; wire brush to molish the horses.

*[செய் → கெய் → கேயம் → கேசம் + கேசகாரம்.]*

**கேசதத்து** *kēša-tattu,* பெ.(n.) தகரை என்னும் மூலிகை; ring-worm plant (சா.அக.).

*[கதி → கெதி → கேதம் → கேசம் + (தந்து) தத்து.]*

**கேசதம்** *kēšadam,* பெ.(n.) கையாந்தகரை; eclipse plant (சா.அக.).

**மறுவ.** கரிசலாங்கண்ணி, கரிசாலை, கேசதாரகம்.

**Skt.** kesa-da.

*[கதி → கெதி → கேதம் → கேசம் → கேசதம்.]*

**கேசதமனி** *kēša-tamaṉi,* பெ.(n.) வன்னிமரம்; vanni tree also called Arjuna's penance tree (சா.அக.).

*[கதி → கெதி → கேதம் → கேசம் + தமனி.]*

**கேசதாரகம்** *kēša-tāragam,* பெ.(n.) கரிசலாங் கண்ணி; eclipse plant.

*[கதி → கெதி → கேதம் → கேசம் + (தாரம்) தாரகம்.]*

**கேசநாளம்** *kēša-nāḷam,* பெ.(n.) நுண்ணிய அரத்தக் குழாய்; a blood tube resembling a hair.

*[கேசம் + நாளம்.]*

**கேசம்**[1] *kēšam,* பெ.(n.) 1. மக்கள் தலைமயிர்; human hair. *"குறையிவட் குண்டேற் கேசங் குறைத்தற்கு" (பெருங்.வத்தவ.14:29).* 2. விலங்கின் மயிர் (பிங்.); hair of animals.

**Skt.** kēša; **Pali**., Pkt. kēsa; **Pr.** iš-kk (mustache); **Dm.** kyēc; **Gaw.** kheš.

*[கதித்தல் = தோன்றுதல், முளைத்தல். கதி → கெதி → கேதம் → கேசம். ஒ.நோ. கேசருகம் = புல். கேசிரி = புளியாரைக் கீரை.]*

**கேசம்**[2] *kēšam,* பெ.(n.) யானைத் திப்பிலி; elephant pepper.

*[கேசம்[1] → கேசம்[2].]*

**கேசமதனி** *kēšamadaṉi,* பெ.(n.) வன்னிமரம்; suma tree (சா.அக.).

*[கேசம் + (மரம் → மரன் → (மரனி) மதனி.]*

**கேசமாமுட்டி** *kēšamāmuṭṭi,* பெ.(n.) எட்டி; nux-vomica (சா.அக.).

*[கதி → கெதி → கேதம் → கேசம் + (ஆம் + எட்டி.) மாமுட்டி.]*

**கேசமுட்டி** *kēšamuṭṭi,* பெ.(n.) வேப்பமரம்; margosa tree (சா.அக.).

*[கதி → கெதி → கேதம் → கேசம் + (உற்றி → உத்தி) உட்டி.]*

**கேசமோரிகம்** *kēšam-ōrigam,* பெ.(n.) பிள்ளை மருது; flowering murdah (சா.அக.).

*[கதி (தோன்றுதல்) → கெதி → கேதம் → கேசம் + ஒரிகம்.]*

**கேசரத்துப்பு** *kēšarattuppu,* பெ.(n.) கல்லுப்பு; sea-salt (சா.அக.).

*[கதி(தோன்றுதல்) →கெதி →கேதம் →கேசம் →கேசரம் + அத்து + உப்பு.]*

**கேசரம்**[1] *kēšaram,* பெ.(n.) 1. பூந்தாது (திவா.); filaments of a flower, stamens. 2. மகிழமரம் (பிங்.); pointed-leaved ape-flower. 3. குங்குமப்பூ; saffron.

**மறுவ.** பூங்கூந்தல்.

**Skt., Pali., Pkt.** kēsara; **Mar.**, Guj., H., **Nep.** kesar; **Sinh.** kēsara.

*[சகித்தல் : தோன்றுதல், முளைத்தல். கதி → கெதி → கேதம் → கேதரம் → கேசரம்.]*

**கேசரம்**[2] *kēšaram,* பெ.(n.) 1. பெருங்காயம் (யாழ்.அக.); asafoetida. 2. வெங்காயம்; onion. 3. சிறுநாகப்பூ; ironwood of Ceylon. 4. புன்னை; alexandrian. 5. பெருங்குறிஞ்சி; conehead.

*[கதி (தோன்றுதல்) → கெதி → கேதம் → கேதரம் → கேசரம்.]*

**கேசரம்**[3] *kēšaram,* பெ.(n.) தலைமுடி; hair.

**Skt.** kēsarin; **Pali** kēsarin-maned (of a lion); **Pkt.** kēsari; **Sind** kehari; Pan. kehar, kehrī (lion, tiger); Guj. kesri; **Mar.** kēsar; **Sinh.** kēsarā; **H.** kehari.

*[கதி (தோன்றுதல். முளைத்தல்) → கெதி → கேதம் → கேதரம் → கேசரம்.]*

**கேசரம்பாய்-தல்** *kēšaram-pāy-,* 2 செ.கு.வி. (v.i.) இதளியக் குளிகையின் உதவியால், சித்தர்கள் விண்ணில் விரைவாகச் செல்லுதல்; flying in the mid-air region by Šiddhars with the aid of animated mercurial pills (சா.அக.).

*[கேசரம் + பாய்-.]*

**கேசரமாதியம்** *kēšaram-ādiyam,* பெ.(n.) புல்லுருவி; a parasitic plant.

*[கதி → கதி → கேதம் → கேதரம் → கேசரம் + ஆதியம்.]*

**கேசரமாருதம்** *kēšara-mārudam,* பெ.(n.) விசும்பினடுவே பரவியுள்ள காற்று; air of the mid-sky (சா.அக.).

*[கே + சரம் + மாருதம்.]*

**கேசரமுடையன்** *kēšaram-udaiyan,* பெ.(n.) சீந்தில்; moon-creeper (சா.அக.).

*[கேசரம் + உடையான்.]*

**கேசரர்** *kēšarar,* பெ.(n.) வானவர்; those who move in the aerial regions. *Vidhyādhar as* a class of demigods. *"கேசர னெனப்போம் விசும்பிடை" (பாரத.குருகுல.104).*

*[ககனம் (விசும்பு) + சரர் – ககனசரர் – கேனசரர் → கேசரர் (கொ.வ.).]*

**கேசரவரம்** *kēšara-varam,* பெ.(n.) 1. குங்குமம்; red paint. 2. குங்குமப்பூ; European saffron. 3. நாயுருவி; Indian burr. 4. கொம்மட்டிமாதுளை; a kind of citron (சா.அக.).

*[கேசரம் + வரம்.]*

**கேசரி** *kēšari,* பெ.(n.) 1. வானிற் பறக்குங் கலை; the art of flying in the sky. 2. கணியத்திற் கூறப்படும் ஒருவகைப் பேறு (யோகம் 3); a kind of good luck. *"நீர்ததருமாழ்ந் தெழிலோர் விசைகேசரி நிகழ் பொன்னாள்" (சேதுபு.சடாதீ.7).*

*[ககனம் + சரம் – ககனசரம் – கேனசரம் – கேசரம் – கேசரி.]*

**கேசரிக்கரு** *kēšari-k-karu,* பெ.(n.) பிண்டம்; foetus (சா.அக.).

*[கேசரி + கரு.]*

**கேசரிகம்**[1] *kēšarigam,* பெ.(n.) 1. நாயுருவி; Indian burr. 2. அரிமா; lion. 3. குதிரை; horse. 4. நாதம்; fuller's earth. 5. பெருங்காயம்; asafoetida (சா.அக.).

*[கேசரம் → கேசரிகம்.]*

**கேசரிகம்**[2] *kēšarigam,* பெ.(n.) புதர்க்காடுகளில் வளரும் நாயுருவி; Indian burr growing in hedges and thickets.

*[கேசரி + கேசரிகம்.]*

**கேசரிமங்கலம்** *kēšari-mangalam,* பெ.(n.) கோவை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kovai Dt.

*[கேசரி + மங்கலம்.]*

**கேசரிமுத்திரை** *kēšari-muttirai,* பெ.(n.) உள் நாக்கைத் தொடும்படி நாக்கு நுனியைக் கொண்டு செய்யும் ஓகவகை; a *yōgic* posture in which tne tip of the tongue is turned inward to touch the uvula.

*[கேசரி + முத்திரை.]*

**கேசரிவித்தை** *kē-šari-vittai,* பெ.(n.) வானில் பறத்தல்; the art of flying in the sky (சா.அக.).

*[கே + சரி + வித்தை.]*

**கேசரிவேந்தன்** *kēšari-vēndan,* பெ.(n.) இதளியம்; mercury.

*[கேசரி + வேந்தன்.]*

**கேசரின்** *kēšarin*, பெ.(n.) 1. நீலோற்பலவிதை; seeds of blue Indian-lily. 2. சிறுநாகப்பூ; Ceylon iron-wood. 3. கடாரநாரத்தை; citron tree. 4. செம்முருங்கைப் பூ; mooringa with red flower.

*[கேசரி – கேசரின்.]*

**கேசருகம்** *kēšarugam*, பெ.(n.) புல்; grass (சா.அக.).

*[கேசரம் → கேசருகம்.]*

**கேசரை** *kēšarai*, பெ.(n.) பருத்திச் செடி; cotton plant (சா.அக.).

*[கேசரம் → கேசரை.]*

**கேசவந்து** *kēšavandu*, பெ.(n.) வன்னிமரம்; vanni tree (சா.அக.).

மறுவ. கேசதமணி.

*[கேசதந்து → கேசவந்து.]*

**கேசவம்** *kēšavam*, பெ.(n.) 1. நறுமணம்; sweet scent. 2. பெண்வண்டு; beetle (female). 3. ஒரு பூடு; நீலோற்பல விதை; seed of blue Indian-lily. 4. நிறைமயிர்; fullness of hair. 5. பேய்; devil.

மறுவ. கேசதமணி.

*[கேசம் → கேசவம்.]*

**கேசவர்** *kēšavar*, பெ.(n.) வெள்ளைக் காக்கணங் கொடி; white mussell creeper (சா.அக.).

*[கசவம் → கசவர் → கேசவர்.]*

**கேசவை** *kēšavai*, பெ.(n.) உண்ணத் தகுந்த வேரினைக் கொண்ட ஒருவகைச் செடி; a plant with an esculent root, Colocasia antiquorum.

**க.** கேசு, கேசவெ.

kēcuka, kēmuka, kacu, kacvi, a plant with an esculant root, Arun colocasia etc. D. kēsu etc. K.K.E.D.XXII.

**கேசாதிபாதமாலை** *kēšādi-pāda-mālai*, பெ.(n.) கலிவெண்பாவால் ஒருவரை, முடிமுதலாக, அடிவரை வண்ணித்துப் பாடும் ஒருவகைச் சிற்றிலக்கியம் (இலக்.வி.871); a poem in *kali-venbā* describing a person from head to foot.

மறுவ. கேசாதிபாதம்.

*[கதி → கெதிகயம் (அடுப்பு) – கேயம் → கேசம் + ஆதி + பாதம் + மாலை. **முடியடிமாலை** பார்க்க; see mudi-y-adi-mālai]*

**கேசாந்தம்** *kēšāndam*, பெ.(n.) மயிர் களைந்து செய்யுமோர் சடங்கு; a ritual ceremony by shaving off the head.

*[கேசம் + அந்தம்.]*

**கேசாரசம்** *kēsārašam*, பெ.(n.) ஒருவகை நாரத்தை; bitter orange (சா.அக.).

*[கேசாரம் + ரசம்.]*

**கேசாரி** *kēsāri*, பெ.(n.) குதிரையின் பிடரிமயிர்; horse's mane. *'பலவாகிய கேசாரியையுடைய குதிரைகள்' (நெடுநல்.93, உரை).*

*[கேசம் + ஆரி.]*

**கேசியா** *kēšiya*, பெ.(n.) தாழை; fragrant screw-pine (சா.அக.).

*[கேதம் → கேசம் → கேசியா]*

**கேசிரி** *kēširi*, பெ.(n.) புளியாரைக்கீரை; Indian sorrel (சா.அக.).

*[கேசம் → கேசரி.]*

**கேசினி** *kēšini*, பெ.(n.) சங்கங்குப்பி; smooth volkameria (சா.அக.).

*[கேசி → கேசினி.]*

**கேசீ** *kēšī*, பெ.(n.) அவுரிச்செடி; Indigo plant (சா.அக.).

*[கேசம் → கேசீ.]*

**கேசுகம்** *kēsugam*, பெ.(n.) ஒருவகைக் கிழங்கு; an edible root (சா.அக.).

*[கேஞ்சலிகை → கேஞ்சுகம் → கேசகம்.]*

**கேஞ்சலிகை** *kēñjaligai*, பெ.(n.) 1. ஒருவகைக் கிழங்கு; a kind of root (சா.அக.). 2. செடிவகை; a plant.

*[காஞ்சலி → காஞ்சலிகை → கேஞ்சலிகை)]*

**கேட்காவொலி** *kēṭkāvoli*, பெ.(n.) ***கேளாவொலி*** பார்க்க; see *kēlā-v-oli*.

*[கேட்கா (த) + ஒலி.]*

**கேட்கு–தல்** *kēṭku-*, 5 செ.குன்றாவி.(v.t.) 1. ஆராய்தல்; to scrutinise. 2. கேட்டல்; to listen. 3. தரச் சொல்லுதல்; order to give. 4. வினாவல்; to question; enquire.

*[கேள் + கு → கேட்கு.]*

**கேட்குநர்** *kēṭkunar*, பெ.(n.) கேட்பவர்; hearer, audience "சொல்லுந போலவும் கேட்குந போலவும்" (தொல்.பொருள்.513).

*[கேள் + கு + நர்.]*

**கேட்கும்விடை** *kēṭkum-viḍai*, பெ.(n.) வினாவும் விடை; a reply in question form. என்னா லாகுமோ?

*[கேள் + உம் + விடை = கேட்கும் விடை.]*

**கேட்கை** *kēṭkai,* பெ.(n.) கேள்வி; hearing.

*[கேள் + கை - கேட்கை.]*

**கேட்டல்** *kēṭṭal,* 3 தொ.பெ.(vbl.n.) 1. இரத்தல்; to beg; entreat. 2. செவிகொடுத்தல்; to hear. இவன் எதையும் செவி கொடுத்துக் கேட்கமாட்டான். 3. வினாவல்; to question. 4. வேண்டுதல்; to request. 5. செய்தல்; to do.

*[கேள் → கேட்டல்.]*

**கேட்டவாய்க்கேட்டல்** *kēṭṭa-vāi-k-kēṭṭal,* தொ.பெ.(vbl.n.) பலர் சொல்லுவதைக் கேட்டல்; to hear through many.

*[கேள் → கேட்ட + வாய் + கேட்டல்.]*

**கேட்டவிவு** *kēṭṭavivu,* பெ.(n.) செயல்கள் (கருமங்கள்) சில கெட்டும் சில கெடாமலும் நிற்கும் நிலை; condition in which fruits of certain karmas are destroyed and of some others are made innocuous. *"கேட்டிற் கேட்ட விவுதன்கண்" (மேருமந்.790).*

*[கேடு → கேட்டு + அவிவு.]*

**கேட்டி**[1] *kēṭṭi,* பெ.(n.) ஓர் ஏவல்வினை; imparative verb. *"மாது கேட்டியிம் மடவரல் விதர்ப்பர்கோன் புதல்வி" (நைடத.வீம.6.).*

*[கேள் → கேட்டி]*

**கேட்டி**[2] *kēṭṭi,* பெ.(n.) தாற்றுக்கோல்; staff or rod for driving oxen, ox-goad.


கேட்டி

மறுவ. கேட்டித்தடி, மிலாறு, தாற்றுக்குச்சி.

*[கிட்டி → கேட்டி.]*

**கேட்டிக்கம்பு** *kēṭṭi-k-kambu,* பெ.(n.) ***கேட்டி*** பார்க்க; see *kēṭṭi.*

*[கேட்டி + கம்பு.]*

**கேட்டிகும்** *kēṭṭigum,* வி.எ.(adv.) கேட்டேம்; that which is heard themselves. *"மலர்பறி யாவெனக் கேட்டிகும்" (பதிற்றுப்.52).*

*[கேள் (கேட்டு) + இகும் - கேட்டிகும்]*

**கேட்டிசின்** *kēṭṭiśiṉ,* இடை(part.) 1. கேட்டேன்; asked *"பிறர்பிறர் கூறவழிக் கேட்டிசினே" (புறநா.150).* 2. கேட்பாயாக; ask for. "அடுபோ ரண்ணல் கேட்டிசின் வாழி" (மதுரைக். 208) (த.மொ.அக.).

*[கேள் → கேட்டல் → கேட்டிசின்.]*

**கேட்டீரே** *kēṭṭīrē,* வியப்.இடை (int.) அசைநிலைச் சொல் (தொல்.சொல்.425, உரை); expression meaning hark, inviting attention.

*[கேள் → கேட்டீர் → கேட்டீரே.]*

**கேட்டுக்கொள்(ளு)-தல்** *kēṭṭu-k-koḷ(ḷu)-,* 10 செ.குன்றாவி.(v.t.) 1. செவிக்குப் புலனாக்குதல்; to hear, listen to. 2. வேண்டிக்கொள்ளுதல்; to beg, beseech, request earnestly. அமைதி காக்கக் கூட்டத்தினரைக் கேட்டுக்கொண்டார்.

*[கேள் → கேட்டு + கொள்-.]*

**கேட்டுப்போ-தல்** *kēṭṭu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) செயல்கள் (காரியங்கள்) கெடுதல்; to fail, as a business. 2. முறிதல்; to break. வண்டியச்சுக் கேட்டுப் போயிற்று. 3. சாதல்; to be dead.

*[கெடு → கேடு + போ-.]*

**கேட்டுமுட்டு** *kēṭṭu-muṭṭu,* பெ.(n.) புறச்சமயத் தோரைப்பற்றிக் கேள்விப்பட்டதனால் அமணர்மேற் கொள்ளுந்தீட்டு; defilement assumed by Samanas on hearing about heretics. *"கேட்டுமுட்டியானுமென் றியம்பி" (பெரியபு. திருஞான. 684).*

*[கேட்டு + முட்டு.]*

**கேட்டை**[1] *kēṭṭai,* பெ.(n.) 1. பதினெட்டாவதுவிண்மீன்; the 18th star, part of scorpio. 2. மூதேவி; goddess of misfortune. 3. ஒரு நாள்; a day. *"அவிட்டம் விளக்குப் பதங்கேட்டை" (விதான.குணாகுண.ப.).*

ம. கேட்ட.

**Skt.** jyesta.

*[ஏ → ஏண் → ஏட்டை → கேட்டை.]*

**கேட்டை**[2] *kēṭṭai,* வியப்.இடை. (int.) ஓர் அசைநிலை (தொல்.சொல்.426); expression meaning hark, inviting attention.

*[கேள் → கேட்டை.]*

**கேட்டொறும்** *kēṭṭoṟum,* கு.வி.எ. (adv.) கேட்கும் பொழுதெல்லாம்; whenever one hears. *"தண்கடற் படுதிரை கேட்டொறும்" (ஐங்குறு. 107).*

*[கேள் + தொறும்.]

**கேட்பவர்** *kēṭpavar,* பெ.(n.) 1. வினாவுவோன், விடைகோருபவன், வேண்டுபவன்; he who asks, he who enquires. 2. பொறுப்புள்ளவன்; a responsible person, a master.

க. கேளுவவனு; து. கேணுநாயெ; பட. கேப்பம.

*[கேள் + ப் +அவர்.]*

**கேட்பி-த்தல்** *kēṭpi-,* 4 செ.குன்றாவி.(v.t.) திருப்பதிக முதலியன விண்ணப்பஞ் செய்தல்; to recite, as before a person. *"நாவ லூரர்தம் முன்பு நன்மை விளங்கக் கேட்பித்தார்" (பெரியபு. கழறிற்.69).*

*[கேள் → கேட்பி.]*

**கேட்பு** *kēṭpu,* பெ.(n.) 1. காதால் கேட்டல்; hearing. 2. வினா எழுப்புதல்; to ask a question. 3. ஏலம் கேட்டல்; biding in an auction.

ம. கேள்ப்பு.

*[கேள் → கேட்பு.]*

**கேட்புக்காசோலை** *kēṭpu-k-kāšōlai,* பெ.(n.) பிறர் உடனடியாகப் பணம் மாற்றிக்கொள்ளத் தகுந்த வகையில் ஒருவர் வங்கியில் பணத்தைச் செலுத்திப் பெறும் படிவம்; demand draft issued in banks encashable on presentation.

மறுவ. வரைவோலை; கேட்போலை.

*[கேட்பு + காசோலை.]*

**கேட்புத்தொகை** *ketpu-t-togai,* பெ.(n.) ஏலமிடுபவரால் குறிக்கப்படும் குறைந்த ஏலத்தொகை; lowest acceptable selling price fixed by the auctioner.

*[கேட்பு + தொகை.]*

**கேட்போர்** *kēṭpōr,* பெ.(n.) 1. அவைக்களத்துத் தலைமை ஏற்று அரங்கேறும் நூலைக் கேட்பவர்; the presiding member of a learned assembly listening to a new literary work that came up for approval. *"யார்கேட்டாரெனின்... உருத்திரசருமன் என்பது" (இறை. 1, 4).* 2. நூல் கேட்டற்குத் தகுதியுடைய மாணாக்கர் (நன். 47); students properly qualified to study a certain book. 3. இன்னார் கூற இன்னார் அதனைக்கேட்டாரென்னும் அகப்பாட்டுறுப்பு (இறை. 56, உரை); listeners, as distinct from speakers. 4. கேட்பதற்குரியவர்; those who ask or are entitled to ask, guardian.

ம. கேள்ப்போர்.

*[கேள் → கேட்போர்.]*

**கேடககோளம்** *kēḍaga-kōḷam,* பெ.(n.) நிணநீர் ஊற்று; thyroid gland (சா.அக.).

மறுவ. கேடயகோளம்.

*[கேடகம் + கோளம்.]*

**கேடகசாரி** *kēḍaga-šāri,* பெ.(n.) கழுதை; ass (சா.அக.).

*[கேடகம் + சாரி.]*

**கேடகசீரம்** *kēḍaga-šīram,* பெ.(n.) சிறுசீரகம்; a small variety of cumin seed (சா.அக.).

*[கேடகம் + சீரம்.]*

**கேடகம்**[1] *kēḍagam,* பெ.(n.) 1. வட்டமான பரிசை; shield, buckler. *"கேடகம் வெயில்வீச" (கம்பரா. கடிமண. 33).* 2. மலைகள் அடுத்துள்ள ஊர் (திவா.); village in the midst of hills. 3. பாசறை (பிங்.); encampment. 4. ***கேடயம்***[2] (பிங்.) பார்க்க; see *kēḍayam.* 5. பலகை; plank.

*[கோடு → கோடகம் → கேடகம்.]*

**கேடகம்**[2] *kēḍagam,* பெ.(n.) 1. புறாமுட்டி; parakeet bur. 2. தாழை; screw-pine (சா.அக.).

*[கேதம் → கேடம் → கேடகம்.]*

**கேடகமுருந்து** *kēḍaga-murundu,* பெ.(n.) தொண்டைக் குரல்வளையின் முருந்து; thyroid cartilage (சா.அக.).

*[கேடகம் + முருந்து.]*

**கேடம்**[1] *kēḍam,* பெ.(n.) 1. மலைகள் அடுத்துள்ள ஊர் (சூடா.); village in the midst of hills (கூடா). 2. மலை செறிந்த வூர்; hilly village in the midst.

**Skt.** kheta.

*[கோடு = மலை, கோடகம் → கேடகம் → கேடம்.]*

**கேடம்**[2] *kēḍam,* பெ.(n.) 1. கிளி; parrot. 2. ஆறு; river (அக.நி.).

*[கிள் → கேடம்.]*

**கேடயக்கோளம்** *kēḍaya-k-kōḷam,* பெ.(n.) மூச்சுக்குழலின் இருபக்கங்களிலுமுள்ள, உடல் வளர்ச்சியை உண்டுபண்ணும் தைராய்டு எனும் சுரப்பி; thyroid.

*[கேடயம் + கோளம்.]*

**கேடயப்பட்டி** *kēḍaya-p-paṭṭi,* பெ.(n.) புதுக்கோட்டை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Pudukkōṭṭai Dt.

*[கேடயம் + பட்டி.]*

**கேடயம்**[1] *kēḍayam,* பெ.(n.) போரிடும்போது பிறர் அம்பு படாதவாறு தடுக்கும் வட்டமான தட்டு; shield, buckler used in person to person combat.



கேடயம்

*[கோடு (வளைவு) → கோடகம் → கேடயம்.]*

**கேடயம்**[2] *kēḍayam,* பெ.(n.) 1. பெற்ற வெற்றி, புரிந்த சாதனை முதலிய செய்தி பொறித்த, தட்டு வடிவ அழகிய பரிசு; a memanto in the form of shield, awarded to a winner or one who has done something meritorious. 2. திருவாசியோடு கூடியதாய்க் கோயில் தெய்வத் திருவுருவை எழுந்தருளப் பண்ணுதற்கு உதவும் தோளுக்கினியான் என்னும் சட்டகம்; light rectangular frame with a solid aureole, used for carrying idols.

**Skt.** khetaka.

*[கிடுகு - இணைத்துக் கோத்து. கிடுகு → கேடகம் → கேடயம்.]*

**கேடரி** *kēḍari,* பெ.(n.) 1. கந்தகம்; sulphur. 2.பொன்னிமிளை; gold coloured pyrites. 3.நெல்லிக்காய்க் கந்தகம்; crystaline pieces of sulphur like alum. 4.செவ்வரளி; red-oleander(சா.அக).

*[கெடு → கேடு → கேடரி.]*

**கேடன்** *kēḍaṉ,* பெ.(n.) 1.கேடுடையவன்; ruined, miserable man. *"வினைக்கேடனேன்" (திருவாச.30:3).* 2. அழிப்பவன்; he who ruins. *"வினைக்கேடா" (திருவாச. 34:1).* அவன் ஒரு குடிகேடன் (உ.வ

**ம.** கேடன் (தீயவன்); **து.** கேடிங்கெ.

*[கேடு → கேடன்].*

*பெரும்பாலும் கூட்டுச் சொல்லில் பயன்படுத்தப்படும்.*

**கேடி** *kēḍi* பெ.(n.) 1. பழைய திருடன்; known depredator, old offender. 2. அழிப்பவள்; she who ruins, usually in compounds as, குடிகேடி, சீர்கேடி.

*ஆங்கிலத்தில் known delinquent என்பதன் சுருக்கம் KD; தமிழ்க் கேடி ஆங்கிலக் KD-யின் ஒலிபெயர்ப்பு அன்று.*

*[கேடு → கேடி.]*

**கேடிக்கை** *kēḍikkai,* பெ.(n.) கேளிக்கை; entertainment.

*[கேளிக்கை → கேடிக்கை.]*

**கேடில்லாவுவகை** *kēḍillā-v-uvagai* பெ.(n.) பேருவகை; imperishable joy (சா.அக.).

*[கேடு + இல்லா + உவகை.]*

**கேடிலி** *kēḍili,* பெ.(n.) அழிவில்லாதவன்–ள்; the imperishable one. *"கேடிலியை நாடுமவர் கேடிலாரே" (தேவா. 682:1).*

*[கேடு + இலி.]*

**கேடிலுவகை** *kēḍil-uvagai,* பெ.(n.) துறக்கம்; liberation, salvation, heaven.

*[கேடில் + உவகை.]*

**கேடு**[1] *kēḍu,* பெ.(n.) 1. அழிவு; ruin, destruction, annihilation. *"கேடில் விழுச்செல்வம்" (குறள். 400).* 2. இழப்பு; loss, waste, damage. *"ஊர்தி குடையுதய முன்றிற் கடுங்கோட்கள் – சேரவவற்றிற்குச் சென்றேழி – னேராகக் காணுமேற் கேடு" (சினேந். நட்ட.15).* 3.வறுமை; adversity, indigence, destitution. *"கேட்டினு முண்டோ ருறுதி" (குறள். 796).* 4. குற்றம்; defect. 5. தொல்லை; trouble, problem. 6. இறப்பு; death. *"பிணிபிறவி கேடென்று" (தேவா.935).* 7. தீமை; evil, injury. *"கிள்ளைபோன் மொழியார்க் கெல்லாங்கேடுசூழ்கின்றே னன்றே" (கம்பரா. மாரீச. 77).* 8. கெடுதல் திரிபு (விகாரம்); elision, omission. *"வந்த னகரந்திரிந்துழி நண்ணுங் கேடே" (நன்.210).* 9. அழகின்மை; ugliness, deformity.

**ம., க., து.,** பட. கேடு; **தெ.** சேடு; **குட.** கெடி; **கோத.** கெட்; **துட.** கொட்.

*[கெடு → கேடு.]*

**கேடு**[2] *kēḍu,* பெ.(n.) களங்கம்; blemish, damage to fame, honour. *நிறுவனத்தின் நற்பெயருக்குக் கேடு விளைவிக்கலாமா?* கெடுவான் கேடு நினைப்பான் (பழ.).

*[கெடு → கேடு.]*

**கேடுகாலம்** *kēḍu-kālam,* பெ.(n.) அழிவுறுங் காலம்; bad times.

**ம.**கெடுகாலம்; **க.,** பட., கோடுகால; **து.** கேட்கால. கேட்காலொ.

*[கேடு + காலம்.]*

**கேடுகெட்டவள்** *kēḍu-keṭṭavaḷ,* பெ.(n.) கீழ்த்தரமானவள்; wretched women. இந்தக் கேடு கெட்டவளுக்கு, நீங்கள் உதவலாமா? (உ.வ.).

*[கேடு + கெட்டவள்.]*

**கேடுகெட்டவன்** *kēḍu-keṭṭavaṉ,* பெ.(n.) நிலைமை யழிந்தவன்; ruined, despicable person. அந்தக் கேடு கெட்டவனை நம்பி, இந்தச் செயலில் இறங்க முடியுமா? (உ.வ.).

*[கேடு + கெட்டவன்.]*

**கேடுநினை-த்தல்** *kēḍu-niṉai-,* 4 செ.குன்றாவி. (v.t.) பிறருக்குத் தீமை ஏற்பட எண்ணுதல்; to think ill of others, to have the intention of harming others.

**து.** கேடு பகெபுனி.

*[கேடு + நினை.]*

**கேடுபாடு** *kēḍu-pāḍu,* பெ.(n.) 1. அழிவு; destruction, ruin. 2. வறுமைநிலை; adverse circumstances.

*[கேடு + பாடு.]*

**கேடையம்** *kēḍaiyam,* பெ.(n.) ***கேடயம்*** பார்க்க; see *kēḍayam.*

*[கேடயம் → கேடையம்.]*

**கேண்டு** *kēṇḍu,* பெ.(n.) ***கேண்டுகம்*** பார்க்க; see *kēṇḍugam.*

*[கெண்டு → கெண்டு → கேண்டு.]*

**கேண்டுகம்** *kēṇḍugam,* பெ.(n.) பந்து; anything rolled as ball.

*[செண்டு → கெண்டு → கேண்டு → கேண்டுகம்.]*

**கேண்மை**[1] *kēṇmai,* பெ.(n.) 1. நட்பு; friendship, intimacy. *"வெறுமின் வினைதீயார் கேண்மை"* (நாலடி. 172). 2. கண்ணோட்டம் (திவா.); kindness, favour, benevolence. 3. உறவு; relationship. *"பழங்கேண்மை கண்டறியா தேன்போல்" (கலித். 39: 39).* 4. வழக்கு; practice, usage. *"கிளைஞரி னெய்தாக் கேண்மையு முடைத்தே"* (நம்பியகப். 56).

*[குள் → கெள் → கேள் → கேண்மை.]*

**கேண்மை**[2] *kēṇmai,* பெ.(n.) 1. கேள்வி; hearing. 2. கேள்வியறிவு; knowledge by hearing.

**து.** கேண்மெ.

*[கேள் → கேண்மை.]*

**கேணம்** *kēṇam,* பெ.(n.) செழிப்பு (யாழ்.அக.); flourishing, state of fertility.

*[கள் → கணம் → கேணம்.]*

**கேணி**[1] *kēṇi,* பெ.(n.) 1. சிறுகுளம்; small tank (தொல். சொல். 400, உரை). 2. கிணறு (திவா.); well. 3. அகழி (திவா.); ditch, trench.

**க., ம.** கேணி; **து.** கணி.

**Skt.** khan.

*[குள் → குணி → கேணி.]*

**கேணி**[2] *kēṇi,* பெ.(n.) தொட்டில்; cradle.

*[குள் → குணி → கேணி.]*

**கேணிகா** *kēṇigā,* பெ.(n.) முல்லை; a kind of jasmine (சா.அக.).

*[குணிகம் → கேணிகா.]*

**கேணிப்பட்டு** *kēṇi-p-paṭṭu,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[கேணி + பட்டு.]*

**கேத்தனூர்** *kēttaṉūr,* பெ.(n.) கோவை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kōvai Dt.

*[கேத்தன் + ஊர்.]*

**கேத்தி** *kētti,* பெ.(n.) நீலகிரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Nilagiri Dt.

*[கேத்தன் + ஊர் - கேத்தனூர் → கேத்தி (கொ.வ.).]*

**கேத்திரிகன்** *kēttirigaṉ,* பெ.(n.) ஆதன் (ஆன்மா) (ஞானா.கட்.30); soul.

**கேத்தை** *kēttai,* பெ.(n.) தாழை; fragrant screw-pine (சா.அக.).

*[கேதாம் → கேத்தை]*

**கேதகம்** *kēdagam,* பெ.(n.) தாழை; fragrant screw-pine (சா.அக.).

**மறுவ.** கேதகை.

**Pali.** kētaki; Pkt. kēaya; Pan. keurā; **Ori.** keurā; **H.** keurā, kewrā; **Guj.** kevra; **Mar.** kevda.

*[கேதம் - கேதகம்.]*

**கேதகி** *kēdagi,* பெ.(n.) 1. ஆற்றுமருந்து; healing balm. 2. தாழை; fragrant screw-pine (சா.அக.). 3. தலையணிகலன்; ornament worn on the head.

**மறுவ.** கேதகை, கேதகம், கேத்தை.

*[கேதகம் → கேதகி.]*

**கேதகிப்பூ** *kētagi-p-pū,* பெ.(n.) 1. தாழம்பூ; flower of fragrant screw-pine.

*[கேதகி + பூ.]*

**கேதகை** *kēdagai,* பெ.(n.) 1. கதிர் நுனிப் பூந்துகள் (மகரந்தம்); pollen of the flower. 2. கதிர் நுனிப் பூந்துகள் இழை (மகரந்தகேசரம்); stem of a flower where pollen is stored.

*[கதி → கெதி → கேதகை.]*

**கேதம்** *kēḍam,* பெ.(n.) 1. இளைப்பு; exhausion. *"கேதம் பையத் தணித்தான்" (பாரத.சம்.48).* 2. துன்பம்; affliction *"கேதங் கெடுத்தென்னை யாண்டருளும்" (திருவாச.43).* 3. குற்றம்; blemish (சா.அக.).

*[கதம் → கேதம்.]*

**கேதம்கேட்கு-தல்** *kēdam-kēṭku-,* 5 செ.குன்றாவி. (v.t.) இழவுத் துயரத்தைக் கேட்டாற்றுவித்தல்; to condole a death.

*[கேவுதல் = விக்கி அழுதல். கேதம் + கேள்.]*

**கேதரம்** *kēdaram,* பெ.(n.) 1. மயில்; pea-cock. 2. மலை; mountain. 3. பனி (இமய) மலையின் ஒரு பாகம்; a part of the Himalayas. 4. தண்ணீர் விட்டான் கிழங்கு; water root (சா.அக.).

*[கதி → கெதி → கேதம் → கேதரம்.]*

**கேதல்**[1] *kēdal,* பெ.(n.) அழைக்கை (பிங்.); calling, inviting.

*[கேது → கேதல்.]*

**கேதல்**[2] *kēdal,* பெ.(n.) ஒருவகை மீன்; a kind of fish.

*[கேது → கேதல்; கேது = சிவப்பு.]*

**கேதவைக்கொடி** *kēdavai-k-koḍi,* பெ.(n.) கும்மட்டி; a kind of melon, water melon plant.

*[கேதவை + கொடி.]*

**கேதன்** *kēdaṉ,* பெ.(n.) காமன் (அக.நி.); Kāma, the god of love.

*[கெமு → கெமுந்தன் → கேதன்]*

**கேதாண்டபட்டி** *kēdāṇḍa-paṭṭi,* பெ.(n.) வேலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Velur Dt.

*[கேத்தன் + அண்டன் - கேத்தண்டன் → கேதாண்டன் + பட்டி.]*

**கேதாரநாட்டை** *kēdāra-nāṭṭai,* பெ.(n.) பண்வகை (யாழ்.அக.); a tune.

*[செய் = விளைநிலம். பண்படுத்தப்பட்ட நிலம். செய் → கெய் + தாரம் - கெய்தாரம் - கேதாரம் (பண்படுத்தப்பட்ட நிலை, செவ்விய பண் வகை. கேதாரம் + நாட்டை.]*

**கேதாரம்** *kēdāram,* பெ.(n.) உழுத நிலம், விளைநிலம்; field.

**Skt.** kēdāra. kēdāra, a field. This is related to D. key. It might even be distined as keyda (or kēda, worked, tilled, fr, D. key, Tbh. āra (or āḷa), and mean "tilled ground" K.K.E.D. XXVI.

**Pali.** kēdāra (irrigated field); Pkt. kēāra; **La.** kiārā (large plot in a field); **Pan.** keārā, kiārā (bed in a field or garden); **kuma.** kero. kyāri (bed of creeping plants etc., ground near a house).

**கேதாளி** *kēdāḷi,* பெ.(n.) குறிஞ்சி யாழ்த்திறத்துள் ஒன்று (பிங்.); a melody-type of the *kurinji* class.

*[கெக்கலி → கேகலி → கேசம் + தாளி - கேகதாளி → கேதாளி.]*

**கேது**[1]**-தல்** *kēdu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கதறி யழைத்தல் (பிங்.); to cry aloud from pain or grief. *"கெடுவதிம் மனிதர் வாழ்க்கை காண்டொறுங் கேது கின்றேன்" (தேவா. 702: 1).*

*[கேவு → கேது.]*

**கேது**[2] *kēdu,* பெ.(n.) ஒன்பது கோள்களுள் ஒன்று; the descending node caudraconis, one of the nine *kiragam.*

*[செவ் → செய் → சேய் → சே → சேது = சிவப்பு. சேதா = சிவலைப்பசு, சேதாம்பல் = செவ்வாம்பல். சேது → கேது = செம்பாம்பு வடிவினதாகச் சொல்லப்படும் ஒன்பதாங் கோள். கேது > Skt. kēty. வட.வர. 130.131.]*

**கேதுச்சிலாங்கனம்** *kēdu-c-cilāṅgaṉam,* பெ.(n.) ஒன்பான் மணிகளுள் ஒன்று (புட்பராகம்); topaz (சா.அக.).

மறுவ. கேதுசிலாங்கனம், கேதுஞானம்.

*[கது → கிது → கேது + சிலாங்கன்.]*

**கேதுரு** *kēduru,* பெ.(n.) 1. ஒரு நறுமண மரம்; a fragrant tree known as cedar of Lebanon. 2. கேக்கு விதை (சீமைச்சோம்பு); caraway seed (சா.அக.).

*[கதி → கெதி → கேது → கேதுரு.]*

**கேந்தி** *kēndi,* பெ.(n.) 1. அடங்காக் காமம்; inordinate sexual desire. 2. சினம்; anger, wrath.

*[காந்து + கேந்து → கேந்தி.]*

**கேந்திகம்** *kēndigam*, பெ.(n.) புன்கமரம்; pungu tree (சா.அக.).

மறுவ. புங்குதம்.

*[கேந்து → கேந்திகம்]*

**கேந்திகா** *kēndigā*, பெ.(n.) புளிச் சிறுகீரை; sour greens (சா.அக.).

*[கேந்தி → கேந்திகா.]*

**கேந்திதம்** *kēndidam*, பெ.(n.) புன்கு (சித்.அக.); Indian beech.

*[கேந்து → கேந்திதம்.]*

**கேந்திரம்** *kēndiram*, பெ.(n.) 1. உதயம்; origin. 2. பிறப்போரையிலிருந்து ஒன்று, நான்கு, ஏழு அல்லது பத்தாமிடம்; the places 1, 4, 7, 10 in the rasikattam in astrology. 3. வட்டத்தின் நடுமையம்; centre of a circle. 4. முதன்மை; important.

*[கதி → கெதி → கெந்து → கேந்திரம்.]*

**கேந்திரவள்ளி** *kēndira-valli*, பெ.(n.) கண்ணழகு கொடி; a kind of creeper (சா.அக.).

*[கெந்து → கெந்திதம் → கேந்திரம் + வள்ளி.]*

**கேந்திரி[1]-த்தல்** *kēndiri-*, 4 செ.கு.வி. (v.i.) நிற்றல், வட்ட நடுவில் நிற்றல்; to stand at the centre of the circle.

*[கேந்திரம் → கேந்திரி.]*

**கேந்திரி[2]-த்தல்** *kēndiri-*, 4 செ.கு.வி. (v.i.) கோள் (கிரகம்) கேந்திரம் பெற்று நிற்றல்; to be in one of the houses in kēndiram, as a kiragam. *"பொன்னவன் கேந்திரித்த புனிதலக் கினத்தில்" (திருவிளை. உக்கிர.25).*

*[கேந்திரம் → கேந்திரி.]*

**கேந்துகம்** *kēndugam*, பெ.(n.) 1. வெள்ளத்தி மரம்; white fig tree. 2. தவளை; frog (சா.அக.).

*[கேந்து → கேந்துகம்.]*

**கேந்துகயம்** *kēndu-kayam*, பெ.(n.) மான் மணத்தியலரி; a kind of olender herb (சா.அக.).

*[கேந்து + கயம்.]*

**கேந்துமுறியம்** *kēndu-muriyam*, பெ.(n.) நாய் வேளை; a sticky plant that generally grows in sandy places.

*[கேந்து + முறியம்.]*

**கேநாயம்** *kēnāyam*, பெ.(n.) கோயில் பணிகளுள் ஒன்று; a service of the temple. *"ஸ்ரீமாகேவரக் கண்காணி செய்வோர்களுக்கும் கேநாயம் செய்வானுக்கும்" (தென்.க.தொ.2. 354-1).*

*[கேபநயம் → கேநாயம்]*

**கேப்பை** *kēppai*, பெ.(n.) 1. கேழ்வரகு; ragi. 2. குரக்கன்; a kind of millet.

*[கேழ் → கேப்பை.]*

**கேப்பைக்களி** *kēppai-k-kali*, பெ.(n.) ***கேழ்வரகு களி*** பார்க்க; see *kēḻ-varagu-kaḷi.*

*[கேப்பை + களி.]*

**கேப்பைமாடு** *kēppai-mādu*, பெ.(n.) அதிகப் பால் தரும் உயர்வகை மாட்டுஇனம்; a variety of high yielding cow.

*[கேப்பை + மாடு.]*

**கேமாச்சி** *kēmācci*, பெ.(n.) வெள்ளைக் காக்கணம்; white flowered-mussell shell creeper.

*[கேமச்சி → கேமாச்சி.]*

**கேயம்[1]** *kēyam*, பெ.(n.) 1. கௌரி நஞ்சு; a kind of arsenic. 2. அகழ்; a ditch, a moat (சா.அக.).

*[கயம் → கேயம்.]*

**கேயம்[2]** *kēyam*, பெ.(n.) 1. இசைத்தற் குரியது; that which is fit to be sung, played on musical instruments. 2. இசைப்பாட்டு (திவா.); song, hymn, lyric.

*[கா → காயம் → கேயம்.]*

**கேயன்** *kēyaṉ*, பெ.(n.) 1. பாடுவோன்; singer. 2. இசைப்பாட்டு; a melody, tune song.

*[காயம் → கேயம் → கேயன்.]*

**கேயிகம்** *kēyigam*, பெ.(n.) 1. செங்கல்; bricks (சா.அக.). 2. காவிக்கல்; red ochre.

*[சவ் → சே → கெ → கேயிகம்.]*

**கேயூரம்** *kēyūram*, பெ.(n.) தோளணி; a shoulder ornament; an epaulet. *"புதுவயிரக் கேயூரம் பூட்டி" (ஏகாம்.உலா, 64).*

மறுவ. வாகுவளையம்.

ம. கய்யுற (கையுறை) Pali. kāyūra; Pkt. kēūra; Sinh. keyura.

*[கை + ஊரம் → கையூரம் → கேயூரம்.]*

**கேயெனல்** *kē-y-eṉal*, பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; onam. expr. signifying shouting.

*[கே + எனல்.]*

**கேரண்டம்** *kēranḍam*, பெ.(n.) 1. காக்கை; crow. 2. நீர்ப்பறவை; water-bird.

*[கரண்டம் → கெரண்டம் → கேரண்டம்.]*

**கேரலி** *kērali*, பெ.(n.) ஒரு நெல்வகை; a kind of paddy (சா.அக.).

*[கரல் → கெரலி → கேரலி.]*

**கேரளபுரம்** *kēraḷapuram*, பெ.(n.) குமரிமாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[சேரலம் → கேரளம் + புரம்.]*

**கேரளம்**[1] *kēraḷam*, பெ.(n.) 1. தமிழ்நாட்டை ஒட்டி மேற்கே அமைந்துள்ள இந்திய மாநிலம்; an Indian state west of Tamil Nadu. 2. இந்தியாவின் பண்டைய 56 நாடுகளில் ஒன்று; one of 56 lands of ancient India (திருவேங்.சத.97). 3. மலையாள மொழி; Malayāḷam language.

*[சேரல் → கேரல் → கேரளம்.]*

**கேரளம்**[2] *kēraḷam*, பெ.(n.) வாய்விளங்கம்; common windberry.

*[கெரள் → கெரளம் → கேரளம்.]*

**கேரளர்** *kēraḷar*, பெ.(n.) கேரளமாநிலத்து மக்கள்; people of Kerala state. *"பூஞ்சாப வெற்றிக்கொடிக் கேரளர் பொன்னி நாடர்" (பாரத. வெளிப்பர்.21).*

*[சாரல் → சேரல் → சேரலன் → கேரளன் → கேரளர்.]*

கேரளர் (சேரர்), சோழர், பாண்டியர் என்ற மூவரும் ஒன்றிற் றோன்றிய உடன்பிறப்புகளென்றும், நாகரிகம் தோன்றி வளர்ந்த பெருமையுடைய தென்னிந்தியாவின் திருநெல்வேலியிலமைந்த தண்பொருநை ஆற்றங் கரையிலுள்ள கொற்கையைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட அரசமரபினரென்றும், பிற்காலத்தில் இவர்கள் பிளவுண்டு பாண்டியன் அங்கேயே தங்க, மற்ற இருவரில் கேரளர் மேற்கேயும் சோழர் வடக்கேயும் அரசமைத்துக்கொண்டனர்என்றும் தமிழ்நாட்டில்வழங்கும் உள்நாட்டு மரபுரை (பழங்கதை) கூறுகிறது. (ப.210) (ஆதாரம் - சங்ககாலச் சிறப்புப் பெயர்கள்).

**கேரளன்** *kēraḷaṉ*, பெ.(n.) சேரன்; the Cēra.

*[சேரலன் → கேரளன். சாரல் → சேரல் → சேரலன் → சேரன். மலையாணைக் குறிக்கும் குறும்பு என்னும் சொற்போல். சேரல் என்பதும் இடவாகு பெயராய் அரசனை உணர்த்தும் (ப.த.நா.ப.முன்.20). சேரல் → சேரலன் → கேரளன்.]*

மேற்புறமாயினும் கீழ்ப்புறமாயினும், சேரநாடு முழுவதும் பெரும்பாலும் மேற்குத் தொடர்ச்சி கிழக்குத் தொடர்ச்சி மலைகளின் அடிவாரச் சரிவே. மலை யடிவாரம், சாரல் எனப்படும். *"சாரல் நாட செவ்வியை யாகுமதி" (குறுந்.18:2). "சாரல்நாட நடுநாள்" (குறுந்.9), "சாரல்நாட நீவாலாறே" (குறுந்.141:8)* என்பன மலைப்பக்கநாட்டைச்சாரல்நாடு எனக் கூறுதல் காண்க.

**கேரளாந்தகன்வாயில்** *kēraḷāndagaṉ-vāyil*, பெ.(n.) தஞ்சைப் பெரிய கோயில் முதல் கோபுரத் தோரண வாயிலின் பெயர் (பிற்.சோழ.வர. சதாசிவ. ப.125) name of main entrance of Thanjavur Siva temple *[கேரளன் + அந்தகன் + வாயில் – கேரளாந்தகன் வாயில்.]*

**கேரளி** *kēraḷi*, பெ.(n.) கேரளத்தில் விளையும் நெல்; a kind of paddy.

*[கேரளம் → கேரளி.]*

**கேரளை** *keṟaḷai*, பெ.(n.) இசைப்பாட்டு; a melody song (சா.அக.).

*[கெரளை → கேரளை.]*

**கேரிசுபண்ணு-தல்** *kērisu-paṇṇu-*, 5 செ.குன்றா வி.(v.t.) கடை முதலியவற்றைக் கணக்கு முடித்து மூடுதல் (நாட்டுக்கோட்டைச் செட்டி); to close or wind up.

*[கரிசு → கேரிசு + பண்ணு. கரிசு = கருத்தாகச் செய்யும் பணி.]*

**கேரு-தல்** *kēru-*, 4 செ.கு.வி.(v.i.) 1. முட்டையிடக் கத்துதல்; to cluck as hen about to lay egg. 2. குரல் கம்மிப்பேசுதல்; to speak in a low voice. 3. தொண்டை கட்டுவதனால் வருந்தி மூச்சுவிடுதல்; to breathe with effort as from phlegm in the throat. 4. திகைத்தல்; to be bashful diffident, confused (சா.அக.).

தெ., பட. கேரு.

*[கெர் – ஒலிக்குறிப்பு. கெர் → கெரு → கேரு.]*

**கேரைக்குட்டி** *kērai-k-kuṭṭi*, பெ.(n.) சிறு கடல்மீன் வகை; a kind of small sea fish.

*[கோரா + குட்டி.]*

**கேலகன்** *kēlagaṉ*, பெ.(n.) 1. கழைக்கூத்தாடி; pole dancer. 2. வாள்மேல் நடனமாடுவோன்; sword dancer.

*[கோலகன் → கேலகன்.]*

**கேலம்** *kēlam*, பெ.(n.) 1. மகளிர் விளையாட்டு; a women's play. 2. பகடி (பரிகாசம்); joke (த.சொ.அக.).

*[களி → கேளி → கேளம் → கேலம்.]*

**கேலளம்** *kēlaḷam*, பெ.(n.) 1. தெங்கு; coconut tree. 2. கேளி, செந்தெங்கு; a kind of coconut.

மறுவ. கேளிகம்.

*[கேழ் (சிவப்பு) – கேழிகம் → கேளிகம் → கேலளம்.]*

**கேலி** *kēli,* பெ.(n.) 1. விளையாட்டுப் பேச்சு; fun, jest, joke. 2. பகடி, ஏளனம் (பரிகாசம்); ridicule derision, mockery. 3. விகடம்; buffoonery, mimicry.

*[களி → கேளி → கேலி (கொ.வ.).]*

**கேலிக்காரன்** *kēli-k-kāraṉ,* பெ.(n.) 1. ஒருவர் அல்லதுஒன்றைப்போல நடித்துக்காட்டுபவன்; jester, buffoon, mimic. 2. ஏளனஞ்செய்பவன்; one who ridicules, scoffer.

*[கேலி → கேலிக்காரன்.]*

**கேலிக்கூத்து** *kēli-k-kūttu,* பெ.(n.) 1. பொருளற்ற தாகச் செய்து சிரிக்கும் அளவிற்குத் தாழ்த்திவிடும் செயல்; farce, mockery, travesty. அவன் செயல் கேலிக்கூத்தாக முடிந்தது. 2. அளவுக்கதிகமான கோமாளித்தனம்; clownish nature, farce. *நாடகம் நகைச்சுவையாக இருக்க வேண்டுமே தவிரக் கேலிக்கூத்தாக இருக்கக் கூடாது.*

*[கேலி + கூத்து.]*

**கேலிகம்** *kēligam,* பெ.(n.) 1. தெங்கு; coconut tree. 2. சீந்தில் ; moon-creeper (சா.அக.). 3. அசோகம் (மலை.); Indian mast tree.

*[கேலி → கேலிகம்.]*

**கேலிச்சித்திரம்** *kēli-c-cittiram,* பெ.(n.) 1. ஒரு செய்தியைப்பகடியாக வெளிப்படுத்தும் ஓவியம்; caricature. 2. கருத்துப்படம்; cartoon.

*[கேலி + சித்திரம். **பகடி ஓவியம்** பார்க்க; see pagaḍi ōviyam.]*

**கேலிச்சிரிப்பு** *kēli-c-ciṟippu,* பெ.(n.) பொருளற்ற ஏளனச் சிரிப்பு; laugh with travesty.

*[கேலி + சிரிப்பு.]*

**கேலிசீலம்** *kēli-śīlam,* பெ.(n.) கம்பம்புல்; millet plant (சா.அக.).

*[கேலி + சீலம்.]*

**கேலிசெய்–தல்** *kēli-šei-,* 1 செ.குன்றாவி. (v.t.) பொருளற்றதாகச் செய்து சிரிப்புக்கு உள்ளாக்குதல். to make a travesty, mockery. உன் நடத்தை சட்டத்தையே கேலிசெய்வதாக இருக்கிறது.

*[கேலி + செய்–.]*

**கேலிப்பேச்சு** *kēli-p-pēccu,* பெ.(n.) வேடிக்கையாக, ஏளனமாகப் பேசுதல்: talk of fun, joke.

*[கேலி + பேச்சு.]*

**கேலிமாலி** *kēli-māli,* பெ.(n.) பகடி, ஏளனம் (யாழ்.அக.); ridicule.

*[கேலிமாலி. எதுகை நோக்கிய மரபிணைச் சொல்.]*

**கேலை** *kēlai,* பெ.(n.) தீக்கொழுந்து; flame.

*[கில் (கிச்சு) → கெல் → கேலை.]*

**கேவகா** *kēvagā,* பெ.(n.) 1. பிள்ளைத்தாய்ச்சிக்கொடி; an unknown creeper. 2. நஞ்சுக்கொடி; umblical cord.

*[கவ்வு → கேவு → கேவகா (கொ.வ.).]*

**கேவசட்டையரம்** *kēvaśaṭṭai-y-aram,* பெ.(n.) ஒருவகை அரம் (C.E.M.); a curved file, half -round file.

*[கேவசட்டை + அரம்.]*

**கேவணம்**[1] *kēvaṇam,* பெ.(n.) மணிபதிக்கும்குழி; bed or socket for a gem. *'திருவடிக்காறை பொன்னின் பட்டைமேற் குண்டும் கேவணமும் வைத்து விளக்கிற்று' (தெ.கல்.தொ.2.2.கல். 51). 'மத்தக மணியொடு வயிரங் கட்டிய பத்திக் கேவணப் பசும்பொற்குடைச்சூற்சித்திரச்சிலம்பு' (சிலப். 16:117-8, உரை).*

*[கவ்வு → கவ்வணம் → கேவணம்.]*

**கேவணம்**[2] *kēvaṇam,* பெ.(n.) பொன்னணிகளில் முத்துகள் இரத்தினக் கற்களைப் பதிப்பதற் கேற்ற வகையில் தனித்தனியே செய்து பற்றவைக்கப்பெறும் பொற்குழிப்புகள்; a bed or socket for gems in ornaments. *"திருவடிக்கைக்காறை பொன்னின் பட்டைமேற் குண்டும் கேவணமும் வைத்து விளக்கிற்று" (SII.II.51-175, p.207).*

*[கவ்வு → கவ்வணம் → கேவணம்.]*

**கேவரம்** *kēvaram,* பெ.(n.) வெள்ளைக் காக்கணம்; white mussel (சா.அக.).

*[கவ்வு → கவ்வரம் → கேவரம்.]*

**கேவல்**[1] *kēval,* பெ.(n.) 1. ஒருவகை இழுப்புவலி; a kind of spasmodic pain. 2. விக்கல் போன்ற அழுகைபொலி; sobbing. அறையிலிருந்து கேவலும் விசும்பலும் கேட்டன (கிரி.).

*[கவல் → கேவல்.]*

**கேவல்**[2] *kēval,* பெ.(n.) வள்ளிக்கொடி (மலை.); five - leaved yam.

*[கவல் → கேவல்.]*

**கேவலக்கிடை** *kēvala-k-kiḍai,* பெ.(n.) 1. ஆணவத்தால் மறைப்புண்டு செயல்திறம் குறைந்து செயலற்றுக்கிடக்கும் ஆதனின் (ஆன்மா) நிலை; disembodied inactive condition of the soul enevloped in *āṇava,* the inherent darkness. 2. படுத்தபடுக்கையாய் இருத்தல்; being confined to bed by age.

*[கேவலம் + கிடை.]*

**கேவலக்கிழவன்** *kēvala-k-kiḻavaṉ,* பெ.(n.) அருகக்கடவுள்; Arhat, as enjoying the supreme bliss. "தோமறு கேவலக் கிழவன் மூதெயில் போல்" (சீவக.856).

*[கேவலம் + கிழவன். கேவலம் = மேன்மை, உயர்வு, முற்றறிவு.]*

**கேவலகும்பகம்** *kēvala-kumbagam,* பெ.(n.) ஒருங்கே மூச்சுத் தேக்கல்; compelete suppression of breath. 2. கும்பகத்தில் (ஆன்ம) நிலை; condition of the embodied soul in the suppression of breath.

*[கேவலம் + கும்பகம்.]*

**கேவலசரீரம்** *kēvala-šarīram,* பெ.(n.) இளைத்த உடம்பு; emaciated body (சா.அக.).

*[கேவலம் + சரீரம்.]*

**கேவலசைதனியம்** *kēvala-cāitaniyam,* பெ.(n.) ஆதன் அறிவமாக (ஞான சொரூபம்) உள்ள நிலை; condition of soul when it becomes one with the supreme knowledge. *'கேவல சைதந்யமாகிய ஆத்மாவினிடம்' (சித். சிகா. 191:2, உரை).*

*[கேவலம் + சைதன்யம் → சதனியம். (சைதன்யம் = சமணக்கோயில்).]*

**கேவலசொப்பனம்** *kēvala-šoppaṉam,* பெ.(n.) ஆதன், தன்முனைப்புக் காரிருளால் மறைப்புண்டிருக்கும்பொழுதும் நிலையாகி அதன்கணின்று மீளும்பொழுதும் ஆதன் நிற்கும் நிலைகளுள் ஒன்றாகிய கனவு; the *šoppaṉam* condition of the embodied soul on its way to, and from, *kēvalak-kiḍai.*

*[குவ்வல் → கேவல் → கேவலம் + சொப்பனம்.]*

**கேவலஞானம்** *kēvala-ñāṉam,* பெ.(n.) முக்கால அறிவு; perfect knowledge, knowledge of the past, present and future. *'கேவல ஞானத்துக்கு முன்காணுங் காட்சியை' (சீவக.3081, உரை).*

Skt. *kēvalañāna.*

*[குவ்வல் → கேவல் → கேவலம் + ஞானம்.]*

**கேவலப்படு[1]-தல்** *kēvala-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. இளைத்தல்; emaciating 2. மெலிதல்; becoming thin (சா.அக.).

*[கீழ்வு → கீவு → கேவு → கேவலம் + படு-.]*

**கேவலப்படுத்து[2]-தல்** *kēvala-p-paḍuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) மதிப்புக் குறையுமாறு செய்தல்; to disgrace, dishonour.

*[கீழ்வு → கீவு → கேவு → கேவலம் + படுத்து-.]*

**கேவலப்பொருள்** *kēvala-p-poruḷ,* பெ.(n.) முழுமுதற் கடவுள்; the supreme Being, as the one without a second. *'கேவலப் பொருளையே பாவித்தல் வேண்டுதலான்' (குறள், 358, உரை).*

*[குவவு → குவவில் → கேவல் → கேவலம் + பொருள்.]*

**கேவலம்[1]** *kēvalam,* பெ.(n.) 1. தனிமை (சூடா.); singleness, solitariness, isolation. 2. இணையற்றது; uniqueness. 3. வீடுபேறு (பிங்.); final emancipation, supreme bliss. 4. ***கேவல ஞானம்*** பார்க்க; see *kēvala-ñāṉam.* 5. சிறியது; that which is insignificant, common. *"கேவ மல்ல விப்போர்" (பாரத. பதின்மூ. 100).* 6. தாழ்நிலை; low status, meanness; அவன் மிகக் கேவலமானவன் (உ.வ.). 7. மானக் குறைவு; disgrace, dishonour. அவரைக் கேவலம் பண்ணினான் (உ.வ.). 8. இழிவு; humilation.

ம. கேவலம்.

**Pali., Pkt.** kēvala; Kt. kyūra; **Dm.** kyewal; **Paš.** kēwala; **Phal.** khilēi; **OGuj.** kēvalaum; **Guj.** kēval.

*[குவவு → குவவல் → கேவல் → கேவலம்.]*

**கேவலம்[2]** *kēvalam,* பெ.(n.) உயர்வு, மேன்மை; greatness, excellence.

*[குவி → குவை → கூவை → கேவல் → கேவலம்.]*

கேவலம் என்னும் சொல் உயர்வு மேன்மை வீடுபேறு போன்ற உயர்பொருள்களிலும் இழிவு தாழ்வு அவமதிப்பு என்னும் இழிபொருள்களிலும் இருவேறுபட்ட முரண் பொருள்களில் வழங்கி வருகின்றது. தவ ஆற்றல் பெற்ற முனிவர்களைக் கேவலிகள் என்பார்கள். வீடுபேற்றிற்கு உரிய காட்சியறிவு கேவலஞானம் எனப்படும்.

குவி, குவை என்னும் சொற்கள் ஒன்றாகத் திரளுதல் பெருகுதல் மேம்படுதல் என்று பொருள்படும். குவை - கூவை எனத் திரியும். [கூவைக்கிழங்கு = பெரிய கிழங்கு] [கூவுதல் பெரிதாக ஒலியெழுப்புதல்.] குவை, கூவை, கூவல், கூவன், கூவலம் - கேவலம் = பெருமை, உயர்வு, மேன்மை.

**கேவலம்[3]** *kēvalam,* பெ.(n.) தாழ்வு, இழிவு; low status, dishonour, humiliation.

*[கீழ் → கீழ்வு → கேவு → கேவலம்.]*

இனி, தாழ்வு என்னும் பொருளில் வழங்கும் கேவலம் என்னும் சொல் கீழ், கீழ்வு, கீவு, கீவல், கீவலம், கேவலம் எனத் திரிந்ததாகும்.

வெருவு – வெருவல், பார்வு – பார்வல் என்றாற்போன்று கீழ்வு – கீழ்வல், கீவல் என்பனவும் 'அல்' ஈற்று தொழிற்பெயர் ஆகும். ஒரே சொல் இருவேறுபட்ட முரண் தருவதாயின் அவை வெவ்வேறு வினையடிகளில் பிறந்தவை ஆதல் வேண்டும் என்பது சொற்பிறப்பு நெறிமுறைகளில் ஒன்று.

**கேவலமாய்க்கிடத்தல்** *kēvalamāy-k-kiḍa-*, தொ.பெ.(vbl.n.) பேரிடர்நோயால் கிடத்தல்; lying dangerous ill (சா.அக.).

*[கேவலமாய் + கிடத்தல்–.]*

**கேவலமாயிளை–த்தல்** *kēvalamāy-iḷai-*, 4 செ.கு.வி.(v.t.) மிகவும் இளைத்தல்; becoming very feeble (சா.அக.).

*[கேவலமாய் + இளை–.]*

**கேவலமானவன்** *kevalam-āṉavaṉ*, பெ.(n.) இழிந்தவன்; loafer (சா.அக.).

*[கேவலம் + ஆனவன்.]*

**கேவலவுணர்வு** *kēvala-v-uṇarvu*, பெ.(n.) உயர் அறிவு (பரஞானம்); (குறள், 352, உரை). knowledge of the supreme truth.

*[கேவலம் + உணர்வு.]*

**கேவலன்** *kēvalaṉ*, பெ.(n.) 1. வீடுபேறு அடைய முயல்பவன்; one who attempts to obtain final emancipation. *"கேவலன்.... யாவதாத்மபாவி அசரீரியாய்க் கொண்டு திரிவானொருவன்" (அஷ்டாதச. அர்த்தபஞ்.26).* 2. எளியவன்; ordinary man, average person. *"ஆசிரியன் கேவல னல்லன்" (திருவாலவா.15:11).*

ம. கேவலன்.

*[கேவலம் → கேவலன்.]*

**கேவலி** *kēvali*, பெ.(n.) முற்றறிவினன்; person possessing perfect knowledge. *"முதற்பொருள் கேட்டார்க் குரைக்குமெங் கேவலியே" (திருநூற்.10).*

*[கேவலம் → கேவலி.]*

**கேவலி²** *kēvali*, பெ.(n.) வள்ளிக்கொடி (மூ.அக.); five leaved yam.

*[கை + வல்லி – கைவல்லி → கேவலி.]*

**கேவலிகா** *kēvaligā*, பெ.(n.) பிளவுச் சீரகம்; a kind of cummin seed (சா.அக.).

*[கவலிகம் → கவலிகா → கேவலிகா (கொ.வ.).]*

**கேவிகேவியழு–தல்** *kēvi-kēvi-y-aḻu*, 2 செ.கு.வி.(v.t.) கடும் துயரத்தால் மூச்சையடக்கி வெளிப்படுமாறு போல விம்மியழுதல்; to weap, to be grieved or vexed.

*[கேவி + கேவி + அழு–.]*

**கேவு¹–தல்** *kēvu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. மூச்சுத்திணறல்; to breath heavily, to breath with difficulty as in whooping cough. 2. செறுமி அழுதல்; to cry of a child seeking breath. 3. மூச்சுத் திக்காடல்; to gasp for breath (சா.அக.).

ம. கேவுக.

*[கவ்வு → கெவவு → கேவு.]*

**கேவு²** *kēvu*, பெ.(n.) வெண்கடுகு; white mustard (சா.அக.).

*[கவு → கேவு.]*

**கேவு³** *kēvu-*, பெ. (n.) 1. செந்நெல்; red paddy. 2. சிவப்பரிசி; red rice.

க. ரீகவு.

*[கவ்வு → கெவவு → கேவு.]*

**கேவுநீர்** *kēvunīr*, பெ.(n.) கீழ்நீர்; underground water.

து. கெவுநீர்.

*[கசிவு → கேவு + நீர்.]*

**கேவுரா** *kēvurā*, பெ.(n.) 1. கடுகு; mustard. 2. கேழ்வரகு; ragi (சா.அக.).

*[கவு → கேவு → கேவுரம் → கேவுரா.]*

**கேவேடன்** *kēvēḍaṉ*, பெ.(n.) மீன்வலைஞன்; fisher man *"கேவேட னாகிக் கெளிறது படுத்தும்" (திருவாச.2:17).*

*[கே + வேடன்.]*

**கேழ்** *kēḷ*, பெ.(n.) 1. ஒளி (பிங்.); light. *"நயங்கேழ் பெருவள நல்குநல் லூர்" (தஞ்சைவா.392).* 2. நிறம்; bright colour, hue. *"ஒண்கேழ் நூற்றித ழலரின்" (புறநா.27).* 3. ஒப்பு; comparison, equality, *"கேழே வரையுமில்லோன்" (திருக்கோ.269).*

**Chin**. Cār; **E.** colour; **Am.eng.** col-or; **ME.** colur, colour. **OF.** colur, colour.

*[கெழு → கேழ்]*

**கேழ்பவர்** *kēḷbavar*, பெ.(n.) நன்மையுடையார்; blessed persons. *"ஒருவர் நம்போல் வருங் கேழ்பவருளரே" (திருவிருத்.45).*

*[கேழ் → கேழ்பவர்.]*

**கேழ்பு** *kēḻbu,* பெ.(n.) நன்மை (திருவிருத்.45, அரும்.); blessing.

*[கேழ் → கேழ்பு.]*

**கேழ்வரகு** *kēḻ-varagu,* பெ.(n.) கேப்பை (பதார்த்த.1394); ragi, a millet - Eleusine coracana.



கேழ்வரகு

*[கேழ் - சிவப்பு. கேழ்+வரகு.]*

**கேழ்வரகுகளி** *kēḻvaragukaḻi,* பெ.(n.) கேழ்வரகு மாவினால் செய்யப்படும் களி; porridge or dough made up of ragi powder.

*[கேழ்வரகு + களி.]*

**கேழ்விமுதலிகள்** *kēḻvi-mudaligaḷ,* பெ.(n.) அரசரின் வாய்மொழி ஆணைகளை நேரில் கேட்டு ஒலையில் எழுதும் அதிகாரி; officer who hears the order direct from the king. *"இப்படிக்கு வாணவரையன் எழுத்து கேழ்விமுதலிகளில் சிங்களராயர் எழுத்து" (SII.XII.235-11, p.148).*

*[கேள்விமுதலி → கேழ்விமுதலி (கொ.வ.).]*

**கேழல்** *kēḻal,* பெ.(n.) 1. நிறம்; bright colour, hue. *"செங்கேழற் றாமரை" (பதினொ. திருக்கைலா உலா, அரிவை,1).* 2. மண்ணைத் தோண்டும் ஆண்பன்றி; hog, boar, swine. *"செந்நாய். . . . கேழல் பார்க்கும் வெஞ்சுரக் கவலை" (ஐங்குறு.323).* 3.குளநெல்; wild rice. *"நீர்விளை கேழலும்" (சீவக.1422).* 4. யானை; elephant.

*[கேழ் → கேழல்.]*

**கேழற்பன்றி** *kēḻar-panri,* பெ.(n.) ஆண்பன்றி; boar.

*[கேழல் + பன்றி.]*

**கேழற்பன்றி என்பதனைக் களிற்றுப் பன்றி என்றுஞ் சொல்லுப'** [தொல்.பொருள்.589, உரை].



கேழற்பன்றி

**கேள்[1]–தல் (கேட்டல்)** *kēḷ-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. செவிக்குப் புலனாக்குதல்; to hear, hearken, listen to. *"சொல்லுந போலவுங் கேட்குந போலவும்" (தொல்.பொருள்.513).* 2. பாடங் கேட்டல்; to learn, be instructed in. *"ஒருகுறிகேட் போன்" (நன்.பொது.42).* 3. வினாதல்; to ask, inquire, question, catechise. 4. ஆராய்தல்; to investigate. *'களவுபோனமைஎங்ஙனே என்று கேட்டு' (Insc.) (சோழவ.66).* 5. வேண்டுதல்; to request, solicit, crave. படிக்கப் புத்தகம் தருமாறு கேட்டான் (உ.வ.). 6. கேள்விப்படுதல்; to be informed of. *"தருதி நீயெனக் கேட்டேன்" (பாரத.கன்ன.238).* 7. உரிமை கொண்டாடிக் கொடுக்கச் சொல்லுதல்; to require, demand, claim. 8. தண்டித்தல்; to avenge, punish.; தீயரைத் தெய்வங் கேட்கும் (உ.வ.) 9. நோய் முதலியன நீக்குதல்; to effect a remedy, cure, as medicine. *"செயச்செயவூறு கேளாது... அரவுகான்ற வேகம் மிக்கிட்ட தன்றே" (சீவக.127).* 10. விலை கேட்டல்; to bid, offer, inquire the price of; 11. ஏற்றுக்கொள்ளுதல்; to accept, agree to. *"கேட்டார்ப் பிணிக்கு தகையவாய்" (குறள்,643).* 12. பொறுத்தல்; to tolerate, brook. *"கேளா ராயர் குலத்தவ ரிப்பழி" (திவ். பெரியாழ்.3,1:8).*

**ம.** கோள்க்குக; **க., குட., கோத., துட.** கோள்; **து.** கேணுனி; **பட.** கே; **கொலா.** கெல்.

kēḷ. to hear, comp; **Latin.** aus-cul-to, to hear, to listen; also the gruk klu-ō, to hear; Welsh clyw, hearing; Irish. clusas, to ear; **Lithuanian** klau, to hear; **Latin** clu-o, to be called (C.G.D.F.L. 593).

*[கிள் → கேள்.]*

**கேள்[2]–தல்** *kēḷ-,* 12 செ.கு.வி.(v.i.) 1. தணிதல்; to come under the control of; to be cured. வாதநோய் அந்த மருந்துக்குக் கேட்கும் (உ.வ.). 2. கீழ்ப்படிதல்; to obey, be submissive, docile. பொல்லாத மனங் கேளாது (உ.வ.). 3. ஒலி எட்டுதல்; to be heard, as a call; to reach, as a sound. குண்டு போட்டால் இங்கே கேட்கும் (உ.வ.). 4. செவிப்புலனுணர்வைப் பெறுதல்; to have

perception by the ear. அவனுக்குக் காது கேட்கும். 5. அனுமதி பெறுதல்; to get permission. *"கேளாதே வந்து கிளைகளா யிற்றோன்றி"* (நாலடி.30).

**Irish.** cluas. **Fin.** kerjata; **Est.** kerjata; **Komi.** korui; **Hung.** ker; **Mung.** gori.

*[கிள் → கேள்.]*

**கேள்**[3] *kēḷ,* பெ.(n.) 1. உறவு; kindred, relations. *"தன் கேளலறச் சென்றான்"* (நாலடி.29). 2. நட்பு; friendship. 3. நண்பன்; friend, companion (திவா.). *"கேளன்றிக் கொன்றாரே கேளாகி"* (தொல். பொருள். 72,உரை). 4. கணவன்; husband. *"அவளுந்தன் கேட்குச் சொன்னாள்"* (சீவக.1052).

ம. கேள்.

*[குள் → கெள் → கேள்.]*

**கேள்வன்** *kēḷvaṉ,* பெ.(n.) 1. கணவன்; husband. *"தன் கேள்வனை யெங்கணா வென்னா வினைந் தேங்கி"* (சிலப்.18:33). 2. தலைவன்; master, lord. 3. நண்பன், தோழன் (திவா.); companion, comrade, friend.

ம. கேளன்; க. கேள.

*[கேள் → கேள்வன்.]*

**கேள்வி**[1] *kēḷvi,* பெ.(n.) 1. கேட்கை; hearing. 2. வினா; question. ஆசிரியர் மாணவனைக் கேள்வி கேட்டார் (உ.வ.). 3. நூற்பொருள் முதலிய கேட்கை; taking lessons, as in literature; listening to words of wisdom. *"கேள்வியாற் றோட்கப் படாத செவி"* (குறள்,418). 4. கல்வி (திவா.); learning. *"ஆய்ந்தமைந்த கேள்வி யறிவுடையா ரெஞ்ஞான்றும்"* (நாலடி.7). 5. ஒலி; sound. *"எழுதாக் கேள்வியுங் கேள்வி"* (ஞானா. பாயி.5:5). 6. மறை (வேதம்); Veda. *"கெடுவில் கேள்வியு ணடுவா குதலும்"* (பரிபா. 2:25). 7. நூல்; treatise. *"கேள்விக டுறைபோய்"* (சீவக.2386). 8. சொல்; word. *"ஏனோர் கேள்வியுங் கேள்வி"* (ஞானா. பாயி.5,6). 9. அறிக்கை( உ.வ.); report. 10. அலர் (வதந்தி); rumour, hearsay. 11. காது (திவா.); ear, organ of hearing. *"நட்போடு கேள்வியூடு நாடுவார்"* (சேதுபு. இராமநா.76). 12. உசாவுதல்; hearing in trial of a case, judicial inquiry. 13. ஏலம் முதலியன கேட்கை; bid, offer. 14. இசைக்குறிப்பு; pitch of a tune, keynote. *"கிளை யாய்ந்து பண்ணிய கேள்வியாழ்ப் பாணனும்"* (பு.வெ.7:18). 15. யாழ் (அக.நி.); lute.

ம. கேள்வி; க. கேளிகெ, கேள்விகெ; து. கேளி; கோத. கேள்வ்ய் (சொல், பேச்சு); துட. கேள்வ்.

*[கேள் → கேள்வி.]*

கேள்வி என்பது காதால் கேட்கப்படும் கேள்வி அறிவைக் குறிக்கும் சொல். இதே பொருளில் திருவள்ளுவரும் கேள்வி எனும் அதிகாரம் அமைத்துள்ளார். ஆயின் வாயால் உசாவுதலாகிய வினாப்பொருளிலும் 'கேள்வி கேட்டான்' என வழங்கி வருகிறது. செவிப் புலனுக்குரிய வினைச்சொல், வாய்ப்புலனுக்குரிய வினைச்சொல் ஆக வேறுபட்டு மக்களிடையே வழங்குவதைப் பொருட்பாட்டுப் புடைப் பெயர்ச்சி என்பார்கள்.

கிள் - கிட்டு என்னும் சொற்கள் நெருங்குதல் சேர்தல் எனப் பொருள் பெறும்.

கிள் - கெள் (கெளு) - கேள் = காதுக்கு எட்டுதல், காதிற் சேர்தல்.

கேள் - கேள்வி = காதால் கேட்கப்படும் செய்தி.

சில அடிவினைகள் தன்வினைப் பொருளிலும், பிறவினைப்பொருளிலும் வழங்கும். கேள் என்னும் சொல் காதிற் சேர்தல் என்றும் காதில் சேர்த்தல் என்றும் பொருள்படத் தக்க அடிவினைச் சொல். 'நீ அவனைக் கேள்' என்ற விடத்து 'அவன் காதில் சேர்த்து' எனும் பிறவினைப் பொருளில் மற்றொருவரின் காதில் சேர்த்தற்குக் காரணமாகிய பேசுதல் (வினவுதல்) எனும் வினையையும் குறித்தது. இதனால் காதில் சேர்தல், செவிக் கொள்ளுதல் என்னும் பொருளில் செவிப்புலனின் வினையைக் குறித்த கேள் என்னும் சொல் பிறர் செவியில் ஒரு செய்தியைச் சேர்த்தற்குக் காரணமான வாய்ப்புலனின் செய்கையாகிய பேசுதலையும் குறிப்பதாயிற்று. ஆதலின் கேள் என்னும் அடிவினை செவி கொள்வதாகிய செவிப்புலனின் செயலையே குறித்த முதல்வினை என்பதும் நாளடைவில் வாய்ப்புலனின் செய்கையையும் குறித்த வழிவினையாயிற்று என்பதும் புலப்படும்.

வினவுதல் என்ற சொல்லும் தெலுங்கில் காதால் கேட்பதையும், தமிழில் வாயால் வினவுதலையும் குறித்து வழங்கி வருவது கேள் என்னும் சொல்லின் வழக்காற்றலின் வினை போன்றதாகும்.

**கேள்விக்கச்சேரி** *kēḷvi-k-kaccēri,* பெ.(n.) வரி தண்டுஞ் சாலை.(நாஞ்.); revenue office.

*[கேள்வி + கச்சேரி.]*

**கேள்விக்கடுதாசி** *kēḷvi-k-kaḍudāśi,* பெ.(n.) 1. முறைமன்றத்தில் கொடுக்கும் எழுத்துமூலமான விண்ணப்பம்; written application to a court of justice. 2. ஒப்பந்தப் புள்ளி; tender proposal in writing.

*[கேள்வி + கடுதாசி.]*

**கேள்விக்காரர்** *kēḷvi-k-kārar,* பெ.(n.) 1. ஏலங் கேட்போர்; bidders at an auction. 2. விலைகேட்போர்; person who tenders proposals at a purchase. 3. பணிக்கு விண்ணப்பஞ் செய்வோர்; applicants for a post. 4. வழக்கில் வாதி (யாழ்.அக.); plaintiff.

*[கேள்வி + காரர்]*

**கேள்விக்குழாய்** *kēḷvi-k-kuḻāy,* பெ.(n.) செவிப்புலன் இழந்தோர் பயன்படுத்தும் குழாய்; a.

small coiled tube worn at the ear to assist the hearing.

[கேள்வி + குழாய்.]

**கேள்விக்குறி** *kēḷvi-k-kuṟi,* பெ.(n.) 1. கேள்விச் சொற்றொடர் என்பதைக் காட்ட இடப்படும் கொக்கி வடிவக் குறி; question mark. 2.கேள்வியை உள்ளடக்கிய முகக்குறி; gesture expressive of the desire to know. நானிருந்த சூழலைப்பார்த்துவிட்டுக் கேள்விக்குறியோடு என்னை நோக்கினார் (உ.வ.). 3.தொக்கி நிற்கும் ஐயம்; question in one's mind. குறித்த காலத்தில் திட்டம் முடிவடையுமா? என்பது கேள்விக்குறியாக இருக்கிறது (உ.வ.).

[கேள்வி + குறி.]

**கேள்விக்குறைவு** *keḷvi-k-kuṟaivu,* பெ.(n.) காது கேளாமை; dullness of hearing.

[கேள்வி + குறைவு. குள் → கெள்.]

**கேள்விகேட்பாடு** *kēḷvi-kēṭ-pāḍu,* பெ.(n.) 1. ஒழுங்குமுறை; regularity. 2.முறையான நாட்டாண்மை (நீதி நிருவாகம்); moral control, administration of justice. ஊரில் கேள்விகேட்பாடு இல்லை.

**மறுவ.** கேள்விமுறை.

[கேள்வி + கேட்பாடு.]

**கேள்விகொடு-த்தல்** *kēḷvi-koḍu-,* 4 செ.கு.வி.(v.i.) செவிகொடுத்தல்; to have inclination to hear.

[கேள்வி + கொடு-.]

**கேள்விகொடுவை** *kēḷvi-koḍuvai,* பெ.(n.) குடுவை என்னும் ஒருவகைச் சீட்டாட்டம்; (G.Sm.D.I.i.iii.) a game at cards.

[கேள்வி + கொடுவை.]

**கேள்விகொள்(ளு)-தல்** *kēḷvi-koḷ(ḷu)-,* 13 செ.குன்றாவி.(v.t.) ஐயங்கொண்டுகேட்டல்; to question by way of clearing doubts. *"சர்வேசுவரனைக் கேள்வி கொள்ள வேண்டாதபடி"* (ஈடு. 1.5:3).

[கேள்வி + கொள்(ளு)-.]

**கேள்விச்சாட்சியம்** *kēḷvi-c-cāṭciyam,* பெ.(n.) கேள்விப்பட்டதாகக் கூறும்சான்று (சாட்சியம்); hearsay evidence.

[கேள்வி + சாட்சியம்.]

**கேள்விச்செல்வம்** *kēḷvi-c-celvam,* பெ.(n.) செவிவழி எய்திய அறிவுப்பெருக்கம்; knowledge acquired by audio education or scholarly lectures.

[கேள்வி + செல்வம்.]

**கேள்விச்செவியன்** *kēḷvi-c-ceviyaṉ,* பெ.(n.) கேள்வியுற்றதை யெல்லாம் நம்புவோன்; one who readily believes hearsay reports, credulous person. கேள்விச் செவியன் ஊரைக் கெடுத்தான் (உ.வ.).

[கேள்வி + செவியன்.]

**கேள்விஞானம்** *kēḷvi-ñāṉam,* பெ.(n.) செவி வழியாய்ப்பெறும் அறிவு; knowledge gained through observation by hearing.

[கேள்வி + ஞானம்]

**கேள்வித்தாரை** *kēḷvi-t-tārai,* பெ.(n.) காதின் குழாய் வழி; auditory canal (சா.அக.).

[கேள்வி (காது) + தாரை.]

**கேள்வித்தாள்** *kēḷvi-t-tāḷ,* பெ.(n.) தேர்வுகளுக்கான வினாத்தாள்; question paper.

[கேள்வி + தாள்.]

**கேள்வித்தானம்** *kēḷvi-t-tāṉam,* பெ.(n.) பிறப்பியத்தில் ஒருவன் பிறந்த நல்லோரைக்கு இரண்டு அல்லது மூன்றாமிடம் (சங்.அக.); the 2nd or 3rd house from the ascendant.

[கேள்வி + தானம்.]

**கேள்வித்துளை** *kēḷvi-t-tuḷai,* பெ.(n.) காதினுள் ஆனக சவ்வு வரைக்கும் $1^1/_4$ அங்குலம் நீண்டு சற்றுச் சரிவாக உள்நோக்கி நடுவில் வளைந்தும் ஒடுங்கியுமுள்ள ஒரு குழாய்ப்பாதை; a designation of the internal ear consisting of a series of cavities such as vestibule etc. at the semi-circular canals upto the cavity of the tympanum (சா.அக.).

[கேள்வி + துளை.]

**கேள்விநரம்பு** *kēḷvi-narambu,* பெ.(n.) கேட்பதற்குக் காரணியமான நரம்பு; auditory nerve.

[கேள்வி + நரம்பு.]

**கேள்விநேரம்** *kēḷvi-nēram,* பெ.(n.) சட்டப் பேரவையில் உறுப்பினர்களின் கேள்விகளுக்காக ஒதுக்கப்படும் நேரம்; question hour of an Assembly etc.

[கேள்வி + நேரம்]

**கேள்விப்படு-தல்** *kēḷvi-p-paḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) பிறர் வாய்மூலமாகச் செய்தி தெரிந்து கொள்ளுதல்; to learn through others, to learn by hearsay.

[கேள்வி + படு-.]

**கேள்விப்பத்திரம்** *kēlvi-p-pattiram,* பெ.(n.) 1. எழுத்துமூலமான விண்ணப்பம் (யாழ்ப்.); request, application, petition in writing. 2.மன்றாட்டு மடல்; letter of supplication.

*[கேள்வி + பத்திரம்.]*

**கேள்விப்பந்தர்** *kēlvi-p-pandar,* பெ.(n.) பலர் கூடி நூல்கள் கேட்பதற்காக அமைக்கப்பட்ட பந்தல்; pandal for discussion of šastras. *"கீத சாலையுங் கேள்விப் பந்தரும்" (பெருங்.இலாவாண.7:131).*

*[கேள்வி + பந்தல் → பந்தர்.]*

**கேள்விமகமை** *kēlvi-magamai,* பெ.(n.) வரிவகை (M.E.R.585 of 1926); a tax.

*[கேள்வி + மகமை.]*

**கேள்விமுதலி** *kēlvi-mudali,* பெ.(n.) அரசன் கூறுவதைக் கேட்கும் அலுவலர், திருவாய்க்கேள்வி; officer who hears the commands of a king and transfers them to others.

*[கேள்வி + முதலி.]*

**கேள்விமுறை** *kēlvi-murai,* பெ.(n.) 1. ***கேள்வி கேட்பாடு*** பார்க்க; see *kēlvi-kētpādu.* 2. தவறுகளைச் சுட்டிக்காட்டிக் கண்டிக்க வழி; means of administration to check and control. *பணம்பிடுங்கும் பள்ளிகட்குக் கேள்விமுறை கிடையாதா?*

*[கேள்வி + முறை.]*

**கேள்விமூலம்** *kēlvi-mūlam,* பெ.(n.) 1. கேட்பதற்கு மூலமானது; tympanum the source of hearing. 2. செவி; ear.

*[கேள்வி + மூலம்.]*

**கேள்வியந்திரம்** *kēlvi-yandiram,* பெ.(n.) கேளார்க்குக் கேட்கும்படி செய்யும் காதுக்கருவி; an instrument or device enabling the deaf to hear more distinctly (சா.அக.).

*[கேள்வி + எந்திரம்.]*

**கேள்வியருத்தாபத்தி** *kēlvi-y-aruttapatti,* பெ.(n.) ஒருவன் வீட்டில் இல்லைஎன்பதைக் கேட்டவன், வேறு இடத்தில் அவன் இருக்கிறான் என்று உணர்ந்துகொள்வது போல் வரும் நிலை; implication from a statement heard dist.fr.kāṉ-arruttapatti. *"அகத்தினி லையுறு தேவதத்தனெனிலிருப்பனவன் வேறோரிடத்திலெனத் தெரிந்தறிதல்... கேள்வியருத்தாபத்தி" (வேதா.சூ.22).*

*[கேள்வி + அருத்தாபத்தி.]*

**கேள்வியறல்** *kēlvi-y-aral,* பெ.(n.) காது கேளாது போதல்; becoming deaf.

*[கேள்வி + அறல்.]*

**கேள்வியறிவு** *kēlvi-y-arivu,* பெ.(n.) 1.கேட்குமுணர்ச்சி; the sense of hearing 2. கேள்வியினாலுண்டான அறிவு; knowledge derived from hearing (சா.அக.).

*[கேள்வி + அறிவு.]*

**கேள்வியா-தல்** *kēlvi-y-ā-,* 6 செ.கு.வி (v.i.) கேள்வியால் தெரியவருதல்; to be heard reported, to reach the ears, as news.

*[கேள்வி + ஆ-.]*

**கேள்வியாட்டம்** *kēlvi-y-āttam,* பெ.(n.) சீட்டாட்ட வகை (உ.வ.); an adaptation of bezique, a game at cards.

*[கேள்வி + ஆட்டம்.]*

**கேள்வியுள்ளோன்** *kēlvi-y-ullōn,* பெ.(n.) 1. கல்வி கேள்வியுள்ளவன்; a man of great culture; learned man. 2. அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய இவற்றின் கேள்விகளில் தெரிவு பெற்றவன்; an expert on all questions concerning virtue, wealth, domestic pleasure and heavenly bliss.

*[கேள்வி + உள்ளோன்.]*

**கேள்வியேற்றல்** *kēlvi-y-ērral,* பெ.(n.) காது கேளாமைக்குச் சிகிச்சையளித்தல்; improving the sense of hearing (சா.அக.).

*[கேள்வி + ஏற்றல்.]*

**கேள்விவரி** *kēlvi-vari,* பெ.(n.) அரசன் கட்டளைகளைப் பதியும் பதிவேடு (T.A.S.I.165); register of royal commands.

ம. கேள்வி வரி.

*[கேள்வி + வரி.]*

**கேள்வை** *kēlvai,* பெ.(n.) பெருவிலையில் பொருண் மதிப்பறிந்து கேட்டல்; asking rate by knowing the prime cost of the materials.

*[கேள்வி → கேள்வை.]*

**கேளந்தலூர்** *kēlandalūr,* பெ.(n.) திருவள்ளுவர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvalluvar Dt.

*[கேளன் + நந்தல் + ஊர் - கேளநந்தலூர் → கேளந்தலூர்.]*

**கேளம்பாக்கம்** *kēḷam-bākkam,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanjipuram Dt.

*[கேளன் + பாக்கம் – கேளம்பாக்கம்.]*

**கேளல்கேளிர்** *kēḷal-kēḷir,* பெ.(n.) நொதுமலர், பகையும் நட்பு மில்லாத அயலார்; those who are neither friends nor enemies. neutrals. *"கேளல்கேளிர் கெழீஇயினா ரொழுகவும்" (அகநா.93).*

*[கேள் + அல் + கேளிர்.]*

**கேளலர்** *kēḷalar,* பெ.(n.) பகைவர்; enemies.

*[கேள் + அல் + அர்.]*

**கேளவர்பந்தம்** *kēḷavar-bandam,* பெ.(n.) கடலாத்தி; falcate trumpet (சா.அக.).

**மறுவ.** கேள்விபந்தம்.

*[கேளவர் + பந்தம்.]*

**கேளன்** *kēḷaṉ* பெ.(n.) தோழன்; friend, companion.

**ம.** கேளன்; **க.** கேள.

*[கேள் + அன்.]*

**கேளா** *kēḷā,* கு.வி.எ.(adv.) ஒருபயனுமின்றி (சூடா.); to no purpose, vainly.

*[கேள் + ஆ.]*

**கேளாக்கேள்வி** *kēḷā-k-kēḷvi,* பெ.(n.) ***கேளாத கேள்வி*** பார்க்க; see *kēḷāda-kēḷvi.*

*[கேளாதகேள்வி → கேளாக் கேள்வி.]*

**கேளாதகேள்வி** *kēḷāda-kēḷvi,* பெ.(n.) கேட்கக் கூடாததைக் கேட்கும் வினா; question not to be asked, indecent, unbecoming lauguage.

**மறுவ.** கேளாக்கேள்வி.

*[கேளாத + கேள்வி.]*

**கேளாதவன்** *kēḷādavaṉ,* பெ.(n.) காது கேளாதவன்; deaf man.

*[கேளாத + அவன்.]*

**கேளாமை** *kēḷāmai,* பெ.(n.) கீழ்ப்படியாமை; disobedience.

*[கேள் + ஆ + மை.]*

**கேளார்** *kēḷār,* பெ.(n.) 1. பகைவர்; enemies, foes *"கேளாரும் வேட்ப மொழிவதாஞ் சொல்" (குறள், 64).* 2. காது கேளாதவர்; deaf persons. *"காணார் கேளார்" (மணிமே. 13:111).*

**மறுவ.** செவிடர்.

**ம.** கேளார்

*[கேள் + ஆ + ஆர்.]*

**கேளாவொலி** *kēḷā-v-oli,* பெ.(n.) மாந்தக் காதினால் உணரப்பட முடியாததும், புதிய இயற்பியற்கருவிகளால் பதிவுசெய்யக்கூடியதுமான ஒலி; ultra sound.

*[கேள் + ஆ + ஒலி.]*

**கேளான்** *kēḷāṉ,* பெ.(n.) செவிடன்; deaf man.

**மறுவ.** செவிடன்.

*[கேள் + ஆ + ஆன்.]*

**கேளி**[1] *kēḷi,* பெ.(n.) மகளிர் விளையாட்டு; women's sport. *"மலர்கொய் கேளி" (இரகு.இந்தும.9).*

**ம.** கேளி (விளையாட்டு); **Skt.** keli.

*[களி → கேளி.]*

**கேளி**[2] *kēḷi,* பெ.(n.) செம்மஞ்சள்நிறத் தென்னைவகை (பதார்த்த.65); Brahman coconut.

**ம.** கேளி.

**Skt.** narikela.

*[கேழ் - செந்நிறம். கேழ் → கேள் → கேளி (செவ்விளநீர்).]*

**கேளி**[3] *kēḷi,* பெ.(n.) 1. அறிவிப்பு, கேட்பித்தல்; announcement. 2. பறையறைந்து தெரிவித்தல்; announcement by beating drum. 3. புகழ்; fame.

**ம., து.** கேளி.

*[கேள் → கேளி.]*

**கேளிக்கை** *kēḷikkai,* பெ.(n.) 1. மகளிர் விளையாட்டு; women's sport. 2. மகளிர் நடனம் (உரி.நி.); dancing of women. 3. பொழுதுபோக்கு; entertainment. இரவுக் கேளிக்கைகள் இல்லாத நகருண்டா? (உ.வ.).

**ம.** கேளிக்க.

**Skt.** kelikā.

*[கேளி → கேளிக்கை.]*

**கேளிக்கைத்தண்டல்** *kēḷikkai-t-taṇḍal,* பெ.(n.) ***கேளிக்கைவரி*** பார்க்க; see *kēḷikkai-vari.*

*[கேளிக்கை + தண்டல்.]*

**கேளிக்கைவரி** *kēḷikkai-vari,* பெ.(n.) அரசால், பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளைப் பார்ப்பதற்கு உரிய அனுமதிக் கட்டணத்தோடுசேர்த்துவாங்கப்படும்வரி; entertainment tax imposed by the Government.

*[கேளிக்கை + வரி.]*

**கேளிகா** *kēliga*, பெ.(n.) 1. தென்னை; coconut tree. 2.செவ்விளநீர்; half-ripe coconut of reddish colour (சா.அக.).

[கேளி → கேளிகா.]

**கேளிகி** *kēlgi*, பெ.(n.) புளிப்பிரண்டை; sour adamantine creeper (சா.அக.).

[கேழ் → கேளி → கேளிகி.]

**கேளிதம்** *kēlidam*, பெ.(n.) பெருங்கல் (பிங்.); boulder, rock.

Skt. galita.

[கோளி → கேளி → கேளிதம்.]

**கேளிர்** *kēlir*, பெ.(n.) 1.நண்பர்; friends. *"கேளிர் போலக் கேள்கொளல் வேண்டி" (பொருந.74).* 2.சுற்றத்தார்; relation. *"யாதும்ஊரேயாவரும்கேளிர்" (புறநா.162).* 3. கணவர்; husband.

[கேள் → கேளிர்.]

**கேளியிளநீர்** *keli-y-ilanir*, பெ.(n.) செவ்விளநீர்; half-ripe coconut of reddish colour.

[கேளி + இளநீர்.]

**கேளூர்** *kēlūr*, பெ.(n.) திருவண்ணாமலை மாவட்டத் துச் சிற்றூர்; a village in Thiruvannamalai Dt.

[கேளன் + ஊர் – கேளனூர் → கேளூர்.]

**கேளையாடு** *kēlai-yādu*, பெ.(n.) ஒருவகை வெள்ளாடு; a kind of goat.



கேளையாடு

[கேளி (விளையாட்டு) → கேளை + ஆடு.]

விருதுநகர் உய்வகத்தில் [சரணாலயம்] பாதுகாக்கப் படும் ஒருவகை காட்டாடு.

**கேளையூர்** *kēlai-y-ūr*, பெ.(n.) சேலம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Salem Dt.

[கேளன் → கேளை + ஊர்.]

**கேளொலி** *kēl-oli*, பெ.(n.) செவிப்புலனாகும் ஒலி (அறி.க.); sonic.

[கேள் + ஒலி.]

**கேறு–தல்** *kēru-*, 5 செ.குன்றாவி.(v.t.) புடைத்தல்; to winnow.

ம. சேறுக; க. கேறு; தெ. செருகு; கொலா., நா. கேடு; பர். கேட்; கட. கேய்; பட. கேரு.

[ஏல் → கேல் → கேறு.]

**கேனங்கொண்டவன்** *kēnan-kondavan*, பெ.(n.) மனநிலைக் கேடன்; a lunatic.

[கேனம் + கொண்டவன்.]

**கேனம்** *kēnam*, பெ.(n.) மனநோய் (பைத்தியம்); craziness, insanity.

[கவல் → கவலம் → கவணம் → கேனம்.]

**கேனவாயன்** *kēna-vāyan*, பெ.(n.) பேதை (உ.வ.); lit. the open-mouthed; simpleton, fool.

மறுவ. இளித்தவாயன்.

[கேனம் + வாயன்.]

**கேனன்** *kēnan*, பெ.(n.) மனநோயினன் (உ.வ.); crazy fellow.

[கேனம் → கேனன்.]

**கேனாரவென்பு** *kēnāra-v-enbu*, பெ.(n.) மண்டை யோட்டின் (கபாலத்தின்) இருபக்கத்தின் கீழ்ப் பகுதிகள்; temporal bones (சா.அக.).

[கீழ் → கீழார → கீனார + என்பு → கேனாரவென்பு (கொ.வ.).]

**கேனிப்பட்டு** *kēni-p-pattu*, பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

[கேனன் → கேனி + பட்டு.]

## கை

**கை** *kai*, பெ.(n.) 'க்' என்னும் அடியண்ண மெய்யொலியும் 'ஐ' என்னும் கூட்டுயிரொலியும் இணைந்த மெய்யெழுத்து; the syllable formed by adding the diphthong 'ai' to consonant, velar voiceless stop 'k'.

[க் + ஐ – கை.]

**கை¹–தல்** *kai-*, 1 செ.குன்றாவி. (v.t.) செய்தல்; to do; to work, to act. கைநேர்த்தி (செய்நேர்த்தி).

மறுவ. கெய், செய்.

*[குல் → குய் → கய் → கெய் → கை.]*

**கை[2]—த்தல்** *kai-*, 4 செ.கு.வி. (v.i) 1. கசத்தல்; to be bitter, astringent, unpleasant. *"தேனும் புளித்தறக் கைத்ததுவே" (கந்தரலங்.6).* 2. உப்புக் கரித்தல்; to be saltish to the taste. உப்புமிகுதியானதால் தெளிசாறு கைக்கிறது (உ.வ.).

ம. கைக்குக; தெ. காரு; கோத. கய்ள்; பட. கய்.

*[கள் → கய் → கய → கச → கசப்பு. கய் → கை.]*

**கை[3]—த்தல்** *kai-*, 4 செ.கு.வி.(v.i) நைந்து வருந்துதல்; to be deeply afflicted. *"கைத்தன ளுள்ளம்" (கம்பரா. மாயாசன. 30).*

*[குழை → குழ → கழ. கச → கசங்கு. கச → கய → கை]*

**கை[4]—த்தல்** *kai-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1. சினத்தல் *"மருவலரைக் கைக்கும்" (தஞ்சைவா.423);* to dislike; to be angry with; to hate. 2. அலைத்தல்; to vex, trouble, harass, torment.

*[குல் = எரிதல். குல் → குய் → கய் → கை.]*

**கை[5]—த்தல்** *kai-*, 11 செ.குன்றாவி. (v.t.) செலுத்துதல்; to produce, as a sound; to propel, shoot, as an arrow. *"சிலம்பிரங்கு மின்குரல் கைத்தெடுத்தலின்" (சீவக.2683).*

*[குல் – தோன்றுதல், முற்செலவுக் கருத்துவேர். குல் – குய் → கய் → கை.]*

**கை[6]—த்தல்** *kai-*, 11 செ.குன்றாவி.(v.t.) ஒப்பனை செய்தல் (அலங்கரித்தல்); to adorn, decorate. *"மடமொழி யோருங் கைஇ மெல்லிதி னொதுங்கி" (மதுரைக்.419).*

*[குல் – கூடுதல் கருத்துவேர். குல் – கெல் → கெய் (செய்தல்) → கை.]*

**கை[7]** *kai* பெ.(n.) 1. தோள்பட்டையிலிருந்து தொங்கும் நீண்ட மாந்தவுறுப்பு, கரம்; the human forelimb from shoulder to hand, arm. *"அகமென் கிளவிக்குக் கைமுன் வரினே" (தொல்.எழுத்து. 315).* 2. மணிக்கட்டிற்குக் கீழுள்ள மாந்தவுறுப்பு; hand. கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை (பழ.). கைப்புண்ணுக்குக் கண்ணாடியா? (பழ.). 3. யானைத் தும்பிக்கை; elephant's trunk. *"தூங்குகையா னோங்குநடைய" (புறநா.22).* 4. கதிரவனின் ஒளிக்கற்றை; ray, as of sun. *"செங்கை நீட்டித் தினகரன் தோன்றலும்" (திருவிளை. விடை. 20).* 5. நாட்டிய நளிக்கை (சிலப். 3:18, உரை); hand-pose in dancing. 6. சட்டையின் கை; sleeve of a garment. முழுக்கைச் சட்டை (உ.வ.).

ம. கை, கய்யி; க. கய், கயி, கய்யி, கெய்; தெ. செயி; து., பட., இரு., கோண. கை; கோத. கெய்; து. கொள்; எருக. கயி, கி; குட. கை, கீய், கய்; கூ. கசு; குவி. கேயு, கேசு; நா. கீ; குரு. கியு; மால. கெகெ; பர். கெய்; கட., கொலா. கி.

*[குல் – கூடுதல் கருத்துவேர். குல் → குய் → கய் (செய்தல்) → கெய் = செய். செய் → கெய் → கை.]*

*கை யென்னும் பெயர், செய் என்னும் வடிவில் குமரி நாட்டில் வழங்கியிருத்தல் வேண்டும் செல்வி. 435 (1974)*

தமிழ் 'செய்' எனும் வடிவம் கன்னடம், குடகு, துளு, கோத்தம், துடவம், படகு, கொலாமி, கடபா, கோண்டி, கொண்டா, கூய், குவி, பிராகுவி ஆகிய மொழிகளில் கை, கெய், gey, giy, கீ எனும் வடிவங்களில் ஆட்சி பெற்றுள்ளது.

மாந்தக்கை போன்றிருக்கும் தும்பிக்கையும் கை எனப்பட்டது. ஒளிக்கற்றையைக் கதிரவனின் கையாக உருவகப்படுத்தியுரைப்பதால் அதுவும் கை எனலாயிற்று.

kai-hand: all Dravidian dialects. Telugu has in addition cēlu and chey-i or chĕy-i.

The harder form is probably the more ancient; hence the words we have to compare with corresponding words in other languages are key, to do, and kei, hand. It cannot be doubted that these words were originally identical, like kar, to do, and kar-a hand in Sanskrit. Key would naturally become kei, of which we see an appropriate instance in gei-du, having done, in colloquial Canarese, which is the shape of the order and more classical gey-du has taken. Though it seems certain that these words were originally identical it does not seem quite so clear which of the two meanings to do or the hand, was the original one. It would be very natural to call the hand the doer; on the other hand; 'to do' is a abstract word, which cannot well have come into use until a large number of doings and doers had been provided with special names. Some word for hand would be required at a much earlier stage, and it is conceivable that to do meant first of all to use the hand (C.G.D.F.L.582).

**கை[8]** *kai* பெ.(n.) 1. ஐந்து என்னும் எண்ணிக்கையைக் குறிக்குஞ் சொல்; a word signifying number five. மாம்பழம் ஒரு கை போடு (உ.வ.). 2. செங்கல் முதலியவற்றை எண்ணும் ஓரளவு (கொ.வ.) group, set, as in counting bricks, dry dung cakes. உடைந்த கல்லிற்குஈடாகஒருகைபோடு(உ.வ.) 3. கையளவு; handful. கையளவுமனத்தில்கடலளவு ஆசை வைத்தான் (பழ.) ஒரு கை உப்புக் கொடு (உ.வ.).

*[கை[7] → கை[8]]*

செங்கல் முதலியன இவ்விரண்டாய் எண்ணப் படுவதும், பழம் போன்றன பப்பத்தாகவோ ஐவைந் தாகவோ எண்ணப்படுவதும், தவசம் போன்றன இணைந்த இருகை நிறைந்த அளவையும், உப்புப் பருப்புப் போன்றன ஒரு கை நிறைந்த அளவையும் 'கை' குறிக்கும்.

கைவிரலைக்கொண்டே மாந்தன் எண்ணிப் பழகினமையால் 'கை' என்னும்சொல் ஐந்து என்னும்பொருளில் வழங்கலாயிற்று. இரண்டு கைகளால் செங்கல் போன்றவை இவ்விரண்டாய் எடுக்கும் தோதுபற்றியே 'கை' இரண்டு எனும் எண்ணிக்கையில் ஆளப்பெற்றது.



**கை**[9] *kai* பெ.(n.) 1. பக்கம்; side, right or left. *"இருகையு மிரைத்துமொய்த்தார்" (கம்பரா.கைகேசி.83).* 2. கட்சி, பிரிவு; faction, party. நேற்றுவரை நம்முடன் இருந்தவர் இன்றுஎதிர் கையில் சேர்ந்துவிட்டார் (உ.வ.). 3. சிறகு; wings of a bird. *"கோழி கைத்தலத்தைக் கொட்டி" (அரிச்சந்.விவா.195).* 3. இடம் (சூடா.); place. 4. கிளை, துணை; branch; tributary.



*[கை[7] → கை[9].]*

மாந்த உறுப்பான 'கை' உடலின் ஒரு பக்கத்தைக் குறிக்கும் வகையின் அடிப்படையில், 'கை' பக்கப் பொருளில் விரிந்தது; பக்கங்களில் இருப்பதால் சிறகும் கை எனப்பட்டது.

**கை**[10] *kai,* பெ.(n.) 1. கைப்பிடி; handle, as of an axe. *"நெடுங்கை நவியம்பாய்தலின்" (புறநா. 36:7).* 2. கைமரம்; rafter. *"கால்தொடுத் திருகை யேற்றி" (தேவா. 838:4).* 3. விசிறிக்காம்பு; handle, as of a fan. *"மணிக்கையாலவட்டம்" (பெருங்.உஞ்சைக்.34:217).* 4. தொடர்வண்டியின் கைகாட்டி (கொ.வ.); semaphore. 5. நாற்காலியில் கை வைக்கும் சட்டம்; a rail or support for the arm on a chair. கையொடிந்த நாற்காலி (உ.வ.). 6. முழம்; elmeasure.

**Fin.** kasi, kandj; **Est.** kasi; **Hung.** kez; **Mong.** katyl (to lead by hand), **Jap.** kata; **Q.** kucus (elbow, elmeasure).

*[கை[7] → கை[10].]*

**கை**[11] *kai* பெ.(n.) முள்; thorn.

*[கள் (முள்) → கய் → கை. ஒ.நோ. கைதை (முள்ளுள்ள தாழை).]*

**கை**[12] *kai,* பெ.(n.) கைப்பொருள்; money on hand. "அவரன்பும் கையற்ற கண்ணே யறும்" (நாலடி.371).

*[குய் → கெய் → கய் → கை.]*

கை இடவாகுபெயராய்ப் பணத்தை (கைப் பொருளை)க் குறித்தது.

**கை**[13] *kai* பெ.(n.) 1. செய்யத்தக்கது; that which is fit to be done. "கையறியாமை யுடைத்தே" (குறள்,925). 2. ஒப்பனை (பிங்.); decoration, dressing.

**க.** கை, கெய்.

*[க. கய் → கெய் → கை.]*

**கை**[14] *kai* பெ.(n.) 1. சிறுமை; littleness, smallness, hardiness. *"கைஞ்ஞானங்கொண்டொழுகுங்காரறி வாளர்" (நாலடி.311).* 2. தங்கை (பிங்.); younger sister.

*[குய் → நெய் → கை.]*

கை சிறியதாக இருத்தலின் சிறுமைப் பொருள் தந்தது.

**கை**[15] *kai* பெ.(n.) 1. ஆற்றல்; strength, ability. யாரிடம் உன் கை காட்டுகிறாய்? (உ.வ.) 'கை உண்டாவது கற்றவர்களுக்கு ஆமே' (பழ.). 2. ஆள்; hands, workmen, assistants. சீட்டாட்டத்திற்கு ஒரு கை குறைகிறது (உ.வ.).

*[கை[1] → கை[14].]*

கைதல் – செய்தல் செயலுக்குரிய ஆற்றலையும் குறித்தது.

**கை**[16] *kai* பெ.(n.) 1. ஒழுங்கு; row, line. கையமை விளக்கம் (முல்லைப்.49); 2. முறை, தடவை; turn. 3. உலகவொழுக்கம்; custom, usage, way of the world. 4. பழக்கம்; habit. அது அவருக்குக் கைவந்த கலை (உ.வ.).

**க.** கை, கய், கெய்.

*[கை[14] – கை[15].]*




செயல் திறனின் நோக்கமும் விளைவும் ஒழுங்கின் பாற்பட்டவையாதலின் ஒழுங்கைக் குறித்தது.

**கை**[17] *kai* பெ.(n.) குற்றம்; fault, blemish (அக.நி.). *"கைசெய்தூண் மாலை யவர்"* (குறள்,).

**து.** கைனெ (இழிமகள்).

*[கை[2] – கை[16]. கை = கசப்பு, குற்றம்.]*

**கை**[18] *kai* பெ.(n.) செல்வாக்குள்ளவன்; man of high influence. அவன் பெரிய கை. அவனிடம் பகை வேண்டா (உ.வ.).

*[கை[14] → கை[17].]*

**கை**[19] *kai* இடை. (part.) 1. குறுமைப் பொருள் முன்னொட்டு; diminutive prefix. 2. சிறுமைப்பொருள் பின்னொட்டு; diminutive suffix. குடிகை, கன்னிகை (வேர்.கட்.161). 3. உடைமைப்பொருளீறு; possessive suffix. 4. தொழிற்பெயரீறு; suffix at the end of verbal nouns. செய்கை, வருகை. 5. வினையுடன் சேர்ந்துவரும் முன்னொட்டு; auxiliary prefix to verbs as in கையிகந்து. *[கை[14] → கை[19]]*

**கை**[20] *kai* இடை. (part.) ஏழனுருபுள் ஒன்று; a locative ending. *"செவிலி கையென் புதல்வனை நோக்கி" (அகநா. 26:18).*

*[கை[7] → கை[19]. (இடப்பொருள் குறித்தது.)]*

**கைஅம்பு** *kai-ambu*, பெ.(n.) கைக்கணை; small arrow.

*[கை[13] + அம்பு.]*

**கை ஒப்பிதம்** *kai-oppidam*, பெ.(n.) ஒப்புகைக்கான கையொப்பம்; signature *(கொ.நா.ஆ.வ.35 ப.132).*

*[கை + ஒப்பிதம்.]*

**கைஓலை கட்டோலை** *kai-ōlai-kaṭṭōlai*, பெ.(n.) படி ஓலை; copy of document on hand *(கொ.நா.ஆ.வ.58 ப.247).*

*[கை + ஓலை + கட்டு + ஓலை.]*

**கைக்கட்டி** *kai-k-kaṭṭi*, பெ.(n.) 1. கையுறை (சூடா.); gloves. 2. அக்குட்புண் (இ.வ.); boil or tumour in the arm-pit. 3. ஓர் அணிகலன்; an ornament. 4. கைச்சட்டை; hand of shirt.

*[கை + கட்டி.]*

**கைக்கட்டு** *kai-k-kaṭṭu*, பெ.(n.) புண், எலும்பு முறிவு, காயம் முதலியவற்றைக் கருதிக் கைக்கிடும் கட்டு; bandage for the arm in cases of wounds, fractures or other injuries (சா.அக.). 2. கையில் அணியும் அணிகலன்; an ornament for the arms.

ம. கய்க்கெட்டு; க. கெய்கட்டு; து. கைகட்டு.

*[கை + கட்டு.]*

**கைக்கட்டு[4]-தல்** *kai-k-kaṭṭu-*, 4 செ.கு.வி.(v.i.) இடக்கையை வலப்பக்கமாகவும், வலக்கையை இடப்பக்கமாகவும் மடக்கிக்கொண்டு வணக்கங் காட்டுதல்; to fold the hands in reverence, obedience, etc. "*தாம்என்முன்னே கைக்கட்டிக் கொண்டு நின்றார்*" *(திவ்.திருநெடுந்.21,188,வியா.).*

*[கை + கட்டு-.]*

**கைக்கட்டுபவளம்** *kai-k-kaṭṭu-pavaḷam*, பெ.(n.) பவளத்தாலான ஒருவகைக் கையணி (பர.); coral bracelet.

*[கை + கட்டு + பவளம்.]*

**கைக்கடகம்** *kai-k-kaḍagam*, பெ.(n.) கையில் அணியும் கடகம்; a hand bracelet.

க. கைகடக; து. ககிடக.

*[கை + கட்டு + பவளம்.]*

**கைக்கடன்** *kai-k-kaḍaṉ*, பெ.(n.) 1. ஒப்பந்தமுறியோ வட்டியோ இல்லாமல் குறுகிய காலத்தில் திருப்பித்தரும் வகையில் கடனாகப் பெறும் பொருள்கள் அல்லது பணம்; a temporary loan of articles or money without bond or interest. 2. கடப்பாடு; obligation, duty. "*உம்முடைய கைக்கடன்றா னுயிர்காக்கக் கடவீர்*" *(கம்பரா. கும்பகர்.355).*

மறுவ. கைமாற்றுக்கடன்.

க. கைகட, கெய்கட; து. கைகட.

*[கை + கடன்.]*

**கைக்கடன்தீர்-த்தல்** *kai-k-kaḍaṉ-tīr-*, 4 செ. குன்றாவி.(v.t.) பெற்ற கடனை அடைத்தல்; to clear it or return a loans.

க. கெய்கடதீரிசு.

*[கைக்கடன் + தீர்.]*

**கைக்கடனாற்றல்** *kai-k-kaḍaṉ-āṟṟal*, பெ.(n.) உதவிபுரிதலாகிய வேளாண் மாந்தரியல்பு (சூடா.); rendering assistance, helping, obliging, mentioned as a characteristic of the Velalas.

*[கை + கடன் + ஆற்றல்.]*

**கைக்கடனாற்று-தல்** *kai-k-kaḍan-āṟṟu-*, 5 செ.கு.வி.(v.i.) உறுதியின்றி நம்பிக்கை கொடுத்தல்; to assure without any trust.

*[கை + கடன் + ஆற்று-.]*

**கைக்கடியாரம்** *kai-k-kaḍiyāram*, பெ.(n.) கையிலெடுத்தாளும் சிறு கடியாரம்; wrist watch.

*[கை + கடியாரம்.]*

**கைக்கடுதாசி** *kai-k-kaḍudāśi*, பெ.(n.) ***கைச்சீட்டு*** பார்க்க; see *kai-c-ciṭṭu.*

*[கை + கடுதாசி.]*

**கைக்கணக்கு[1]** *kai-k-kaṇakku*, பெ.(n.) 1. கணக்குக் குறிக்கப்பெறும் சிற்றேடு; memorandum of accounts. கையைக்கொண்டு எண்ணப்படும் கணக்கு. 2. சான்றுச் சீட்டு (யாழ்.அக.); receipt. 3. ஒருறுதி; an assurance.

ம. கைக்கணக்கு.

*[கண் + அக்கு – கணக்கு. கை + கணக்கு.]*

**கைக்கணக்குமுதல்** *kai-k-kaṇakku-mudal*, பெ.(n.) பழைய வரிவகை. (S.I.I.VI,33); a kind of ancient tax.

*[கை + கணக்கு + முதல்.]*

**கைக்கணிசம்** *kai-k-kaṇiśam*, பெ.(n.) கையால் மதிக்கும் மதிப்பு; estimation of weight or quantity by the hand.

*[கை + கணிசம்.]*

**கைக்கணை** *kai-k-kaṇai*, பெ.(n.) ***கைஅம்பு*** பார்க்க; see *kai-ambu*.

*[கை + கணை.]

**கைக்கத்தி**[1] *kai-k-katti,* பெ.(n.) சிறு கத்தி; pocket knife, small knife.

க. கெய்கத்தி; து. கயிகத்தி.

*[கை + கத்தி. கை = சிறுமை.]*

**கைக்கத்தி**[2] *kai-k-katti,* பெ.(n.) விரலால் எடுத்துக் கொண்டு அறுக்குங் கத்தி; a surgeon's knife (சா.அக.).

ம. கைக்கத்தி.

*[கை + கத்தி.]*

**கைக்கத்திரிகை** *kai-k-kattirigai,* பெ.(n.) மயிர் வெட்டுங் கருவி; shears, clipping instrument. *'கைக்கத்திரிகையிட்டு நறுக்கின தலையாட்டத்தை யுடைய பரிகள்' (பு.வெ.3:10,உரை).*

*[கை + கத்திரிகை.]*

**கைக்கதவு** *kai-k-kadavu,* பெ.(n.) சிறு நுழைகதவு; trapdoor. *"கைக்கதவும்தாழ்திறக்கக் காண்கிலேன்" (நெல்விடு.431).*

*[கை + கதவு. கடவு → கதவு]*

**கைக்கரடு** *kai-k-karaḍu,* பெ.(n.) முன்கையும் முழங்கையும் இணையும் பொருத்து (வின்.); wrist.

மறுவ. மணிக்கட்டு.

*[கை + கரடு. கரண் = திரட்சி, முருடு. கரண் → கரடு]*

**கைக்கரண்டி** *kai-k-karanḍi,* பெ.(n.) சிறு கரண்டி; small-spoon, tea-spoon.

து. கயிசமுட்டு.

*[கை +கரண்டி. கரள் → கரண் → கரண்டு →கரண்டி]*

**கைக்கரணம்** *kai-k-karaṇam,* பெ.(n.) 1. கைச்சாடை (நெல்லை); sign, as of dumb show. 2. கொத்துக் கரண்டிவகை (இ.வ.); a small trowel.

மறுவ. கைச்சாடை.

*[கை + கரணம்.]*

**கைக்கரணை**[1] *kai-k-karaṇai,* பெ.(n.) கொத்தனார் கைக்கரண்டி ; a mason's tool.



கைக்கரணை

*[கை + கரணை.]*

**கைக்கரணை**[2] *kai-k-karaṇai,* பெ.(n.) கையில் உண்டாகும் ஒருவகைச் சிலந்தி (இ.வ.); whitlow.

*[கை+கரணை. கரள் → கரணை = மேல்தோல்சமனற்றும் உரிய நிறமாற்றம் காணப்படுதல்.]*

**கைக்கரத்தை** *kai-k-karattai,* பெ.(n.) ஆள் இழுப்பு வண்டி (யாழ்ப்.); rickshaw.

Fr. carte.

*[கை + கரத்தை. கரு → கரத்தை = ஒற்றைமாட்டுவண்டி. கைக்கரத்தை = கையால் இழுக்கும் வண்டி.]*

**கைக்கல்** *kai-k-kal,* பெ.(n.) தட்டாங்கல்விளையாட்டில் தரையில் கற்களை வைத்தபின் கையில் எஞ்சியிருக்கும்ஒற்றைக்கல்; the single stone which is in hand after keeping the remaining stones on ground in one of girls lay with stones.

மறுவ. ஆட்சிக்கல்.

*[கை + கல்.]*

விளையாட்டின் தொடக்கத்தில் விளையாட்டுக் கற்கள் மேலெறிந்து பிடிக்கப்படுவதால் அக் கல்லைக் கைக்கல் என்பர்.

**கைக்கவளம்** *kai-k-kavaḷam,* பெ.(n.) ஒருமுறை கையால் எடுத்து வாயிடும் அளவு உணவு; so much food as is taken with the fingers and put into the mouth.

க. கெய்துத்து.

*[கை + கவளம்.]*

**கைக்கவசம்** *kai-k-kavaśam,* பெ.(n.) கையுறை; gloves.

மறுவ. கையுறை.

*[கை + கவசம்.]*

**கைக்கவளம்** *kai-k-kavaḷam,* பெ.(n.) ஒருமுறை வாயில்போடக் கையால் எடுக்கும் அளவு உணவு; so much food as is taken with the fingers and put into the mouth.

க. கெய்துத்து.

*[கை + கவளம்.]*

**கைக்கழுத்து** *kai-k-kaḻuttu,* பெ.(n.) முன்கை மணிக்கட்டு; wrist. *"திருக் கைக்கழுத்தின் வளையில்" (S.I.I.IV,81).*

மறுவ. மணிக்கட்டு, கைக்காடு.

*[கை + கழுத்து.]*

**கைக்கறுப்பு** *kai-k-karuppu,* பெ.(n.) உள்ளங்கை கறுக்கும்ஒருவகைத்தோல்நோய்(பால்வினைநோய்); a venereal affection by which the palm is rendered black.

*[கை + கறுப்பு.]*

**கைக்காசு** *kai-k-kāšu,* பெ.(n.) 1.கையிலுள்ள காசு; cash on hand. 2. முதலீடு (மூலதனம்) கைக்காசிற்கு இழப்பில்லாமல் வணிகம் நடத்து.

*[கை + காசு.]*

**கைக்காணம்** *kai-k-kāṇam,* பெ.(n.) கையூட்டு (இ.வ.); bribe.

**மறுவ.** கையூட்டு.

**ம.** கைக்கரணம்.

*[கை + காணம். காணம் = பழங்காலக் காசு.]*

**கைக்காணி** *kai-k-kāṇi,* பெ.(n.) காணிக்கை, கொடை; present, gift. *'இடப விலச்சனையைக் கைக் காணியாக இட்டு' (கலித். 82:12, உரை).*

**ம.** கய்க்காணம்.

*[கை + காணி.]*

**கைக்காணிக்கை** *kai-k-kāṇikkai,* பெ.(n.) 1.கையால் அளிக்கும் காணிக்கை; present given with hand. 2. பெரியோர், மேலானோர், ஆகியோரைக் காணும் காணிக்கை; present given to elders and respected ones on the occassion of a visit or an offering to God while visiting a temple.

**க.** கெய்காணிகெ.

*[கை + காணிக்கை.]*

**கைக்காப்பு** *kai-k-kāppu,* பெ.(n.) கையிலணியுங் காப்பு; wristlet, bracelet.

**க.** கெய்கட்டு.

*[கை + காப்பு.]*

**கைக்காய்** *kai-kāy,* பெ.(n.) சதுரங்கம் போன்ற ஆட்டங்களில் ஆடுவதற்காகக் கையில் வைத்திருக்கும் காய்; a die cat chess etc. that is in one's hand.

**க.** கெய்குதுரெ.

*[கை + காய்.]*

**கைக்காய்ச்சல்** *kai-k-kāiccal,* பெ.(n.) கையில் உண்டாகும் ஒருவகை எரிச்சல்; a burning sensation in hand.

*[கை + காய்ச்சல்.]*

**கைக்காரன்**[1] *kai-k-kāran,* 1. உதவுபவன்; one who helps others. 2. பணக்காரன்; rich man.

**க.** கெய்ருடக

*[கை + காரன்.]*

**கைக்காரன்**[2] *kai-k-kāran,* பெ.(n.) 1. வல்லாளன்; man of ability or skill. 2. செல்வன் (இ.வ.); wealthy person.

**ம.** கய்க்காரன், கைக்காரன்; **க.** கெய்ருடக.

*[கை + காரன்.]*

**கைக்காரன்**[3] *kai-k-karan,* பெ.(n.) 1. சூழ்ச்சியாளன்; a man of invention, sagacious person. 2. ஏமாற்றுபவன்; deceiver.

**க.** கெய்கார.

*[கை + காரன்.]*

கை என்பது செயல்திறம் என்னும் பொருளது அதன் எதிர்மறையாவது இது.

**கைக்காரியம்** *kai-k-kāriyam,* பெ.(n.) கைவேலை (உ.வ.); work on hand, immediate engagement.

*[கை + காரியம்.]*

**கைக்காளவாய்** *kai-k-kāḷavāy,* பெ.(n.) சுண்ணாம்பு சுடுவதற்குக் கிணறுபோலக் கட்டப்பட்ட காளவாய் (கட்டட.நாமா.9); a kind of lime kiln.

*[கை + காளவாய்.]*

**கைக்காறை** *kai-k-kāṟai,* பெ.(n.) ஒருவகைக் கையணி; bracelet, arm-ring. *'திருக்கைக்காறை பொன்று' (S.I.I.II. 144).*

*[கை + காறை.]*

**கைக்கிட்டி** *kai-k-kiṭṭi,* பெ.(n.) கைகளிலிட்டு இறுக்குங் கோல் (வின்.); instrument of torture for the hand.

*[கை + கிட்டி.]*

**கைக்கிரியை** *kai-k-kiriyai,* பெ.(n.) கையினாற் செய்யும் வேலை; the work done with hand, manual labour.

*[கை + கிரியை.]*

**கைக்கிளவர்** *kai-k-kiḷavar,* பெ.(n.) ***கைக்கோளர்*** பார்க்க; see *kai-k-kōḷar.*

**மறுவ.** கைக்குளர், கைக்கொளவர்.

*[கை + கிளவர் (கொ.வ.).]*

**கைக்கிளவன்** *kai-k-kiḷavaṉ*, பெ.(n.) ***கைக்கோளன்*** (இ.வ.) பார்க்க; see *kai-k-kōḷaṉ.*

*[கை + கிளவன் (கொ.வ.).]*

*கை-சிறுமைப்பொருள்முன்னொட்டு.கிளை-ஒழுக்கம்.கை + கிளை.*

**கைக்கிளை** *kai-k-kiḷai*, பெ.(n.) 1. ஒருதலைக் காமம்; unreciprocated sexual love, as one sided. *"கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்" (தொல்.பொருள் அகத்.1).* 2. ஐந்து விருத்தச் செய்யுளில் ஒருதலைக் காமத்தைப்பற்றிக் கூறும் சிற்றிலக்கியம் (இலக்.வி.827); poem in five viruttam verses treating of unrecipocated love. 3. ஏழிசையுள் மூன்றாவதாகிய காந்தாரப்பண் (திவா.); the third note of the gamut one of seven isai. 4. ***மருட்பா*** பார்க்க; see *maruṭpā*, a kind of verse. *"கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுளோடு" (தொல்.பொருள்.430).*

கை – சிறுமைப் பொருள் முன்னொட்டு. கிளை = ஒழுக்கம்.

*[கை + கிளை + திணை.]*

கைக்கிளையாவது, ஆடவன் பெண்டு ஆகிய இருவருள்ளும் ஒருவருக்கே காதல் இருப்பது. இது ஒருதலைக் காமம். கை என்பது பக்கம். கிளை என்பது நேயம். ஆகவே கைக்கிளை என்பது ஒருதலைக் காதல் [தமிழர் திருமணம் 28].

**கைக்கிளைத்திணை** *kai-k-kiḷai-t-tiṇai*, பெ.(n.) கைக்கிளையைப்பற்றிக் கூறும் திணை (தொல். பொருள்.1, உரை); theme treating of *kai-k-kiḷai.*

*[கை + கிளை + திணை.]*

**கைக்கிளைமருட்பா** *kai-k-kiḷai-maruṭpā*, பெ.(n.) மருட்பாவகை (பாப்பா.132); a kind of verse.

*[கை + கிளை + மருட்பா.]*

**கைக்கீறல்** *kai-k-kīṟal*, பெ.(n.) ***கைக்கீறு*** பார்க்க; see *kai-k-kīṟu.*

*[கை + கீறல்.]*

**கைக்கீறு** *kai-k-kīṟu*, பெ.(n.) தற்குறிக் கீற்று; signature mark made by an illiterate person.

ம. கைக்கீறு.

*[கை + கீறு.]*

**கைக்குக்கீழ்** *kai-k-ku-k-kīḻ*, வி.எ.(adv.) பிறரது ஆளுகைக்கு உட்பட்டு; under (another) control or authority, the state of being at (another) disposition.

க. கெய்கெளகெ.

*[கை + கு + கீழ்.]*

**கைக்குட்டை**[1] *kai-k-kuṭṭai*, பெ.(n.) சிறு துண்டு; hand kerchief.

க. கெய்பாவட, கெய்வட்ட.

*[கை + குட்டை (கை – சிறுமைப்பொருள் முன்னொட்டு).]*

**கைக்குட்டை**[2] *kai-k-kuṭṭai*, பெ.(n.) இரண்டு மணிக்கட்டுகளையும் பிணைக்கும் கயிறு அல்லது தொடரி (சங்கிலி); handcuff.

மறுவ. கைவிலங்கு, கைக்களை.

*[கை + குட்டை.]*

**கைக்குடை** *kai-k-kuḍai*, பெ.(n.) சிறுகுடை; parasol, small umbrella. *"அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையுங் காக்கும்" (அறநெறி.43).*

*[கை + குடை. (கை – சிறுமைப்பொருள் முன்னொட்டு).]*

**கைக்குத்தலரிசி** *kai-k-kuttal-arisi*, பெ.(n.) நெல்லை உரலிலிட்டு உலக்கையால் குத்தி ஆக்கப்படும் அரிசி; rice got by pounding paddy with pestle in mortar.

*[கை + குத்தல் + அரிசி.]*

**கைக்குத்து** *kai-t-kuttu*, பெ.(n.) கைமுட்டியால் தாக்குகை; blow with the fist cuff in boxing. *"கைக்குத்தது படலும்" (கம்பரா.முதற்போ.176).*

ம. கைக்குத்து.

*[கை + குத்து.]*

**கைக்குதல்** *kaikkudal*, தொ.பெ.(vbl.n.) கசத்தல்; being bitter (சா.அக.).

*[கை → கைக்கு.]*

**கைக்குதவு-தல்** *kaikkudavu-*, 5 செ.கு.வி. (v.i.) ஏற்றபொழுதிற் பொருள் வகையாலோ வினை வகையாலோ உதவிசெய்தல்; to be opportunely useful, to be of timely help.

*[கைக்கு + உதவு-.]*

**கைக்குந்தாலி** *kai-k-kundāli*, பெ.(n.) சிறுகுந்தாலி; a small hoe.

க. கெய்குத்தலி; பட. கைகுத்தலி.

*[கை + குந்தாலி.]*

**கைக்குநீர்கொள்(ளு)-தல்** *kaikku-nīr-koḷ(ḷu)-*, 16 செ.கு.வி.(v.i.) சிறுநீர் விடுதல் (யாழ்.அக.); lit. to take

water for washing hands, while going to pass urine (used euphemistically).

ம. கைக்கினி கொள்ளுக.

*[கைக்கு + நீர் + கொள்(ளு)-.]*

**கைக்குமெய்க்குமில்லாமை** *kaikkumaikkum-illāmai,* பெ.(n.) உண்ணவும் உடுக்கவுமில்லாத நிலை; the struggle of existence for food and cloth.

*[கைக்கும் + மெய்க்கும் + இல்லாமை.]*

**கைக்குவா-தல் (கைக்கு வருதல்)** *kaikku-vā-,* 18 செ.கு.வி.(v.i.) 1. கையிற் கிட்டுதல்; to come to hand. 2. மகன் தந்தைக்கு உதவியாய் வருவது போல், பயன் உள்ளதாக இருத்தல், உதவி செய்தல்; to become useful or afford assistance, as a grown up son to his father.

க. கெய்கெபரு.

*[கைக்கு + வா-.]*

**கைக்குழந்தை** *kai-k-kuḻandai* பெ.(n.) 1. இடுப்புப் பிள்ளை; small baby. 2. சிறுகுழந்தை; infant.

ம. கைக்குஞ்ஞு; க. கெய்கூசு ; பட. கைகூசு.

*[கை + குழந்தை. (கை - சிறுமைப் பொருள் முன்னொட்டு).]*

**கைக்குழவி**[1] *kai-k-kuḻavi,* பெ.(n.) ***கைக்குழந்தை*** பார்க்க; see *kai-k-kuḻandai.* *"மூர்த்திகைக் குழவியே போல் முதற்புரியாடல்" (கந்தபு.திருவவ.114).*

*[கை + குழவி.]*

**கைக்குழவி**[2] *kai-k-kuḻavi,* பெ.(n.) சிறிய அம்மிக் குழவி; small macerating stone.

*[கை + குழவி.]*

**கைக்குழி** *kai-k-kuḻi,* பெ.(n.) அக்குள், கமுக்கட்டு; the arm-pit.

ம. கப்க்குழி (கைக்கூடு): க. கங்குள்; தெ. சங்கலு; து. கிதுகில்; பட. கக்குவ.

*[கை + குழி.]*

**கைக்குழித்தாமரை** *kai-k-kuḻi-t-tāmarai,* பெ.(n.) அக்குளில் தோன்றும் புண்வகை (யாழ்.அக.); a tumour in the arm-pit (செ.அக.).

*[கை + குழி + தாமரை.]*

**கைக்குழைச்சு** *kai-k-kuḻaiccu* பெ.(n.) மணிக்கட்டு (இ.வ.); wrist (செ.அக.).

*[கை + குழைச்சு.]*

**கைக்குள்**[1] *kaikkuḷ,* பெ.(n.) 1. உடனே (யாழ்.அக.); immediately. 2. சடுதி; quick (செ.அக.).

*[கை + கு + உள்.]*

**கைக்குள்**[2] *kaikkuḷ,* பெ.(n.) கட்டுப்பாடு; control, obedience. என் கைக்குள்ளேயே வளர்ந்தவன்.

*[கை + உள்.]*

**கைக்குள்போடு-தல்** *kaikuḷ-pōḍu-,* 19 செ. குன்றாவி.(v.t.) தன்வயப்படுத்துதல்; to gain one to his side (சா.அக.).

*[கைக்குள் + போடு-.]*

**கைக்குள்வளர்-தல்** *kaikkuḷ-vaḷar-,* 2 செ.கு.வி.(v.i.) ஒருவர் பொறுப்பில் வளர்தல்; to grow in one's custody. என் கைக்குள் வளர்ந்தவன் என்னையே எதிர்க்கின்றான்.

*[கைக்குள் + வளர்-.]*

**கைக்குள்ளா-தல்** *kaikkuḷḷādal,* பெ.(n.) 1. வெற்றி பெறல்; gaining success. 2. வயப்படுத்துதல்; winning (சா.அக.).

*[கைக்குள் + ஆதல். ஆதல் - து.வி.]*

**கைக்குளசு** *kai-k-kuḷasu,* பெ.(n.) ***கைக்குழைச்சு*** பார்க்க; see *kai-k-kuḻaiccu.*

*[குழைச்சு → குளசு. கை + குளசு.]*

**கைக்குளர்** *kaikkuḷar* பெ.(n.) கைக்கோளர்; a class of weavers.

மறுவ. கைக்குளர்; கைக்கொளவர்.

*[கை + கோளர் → குளர்.]*

**கைக்குற்றம்** *kai-k-kuṟṟam,* பெ.(n.) 1. கைத்தவறு; slip of the hand. 2. சிறுபிழை; lapse, slight, accidental mistake.

ம. கைக்குற்றம்; க. கெய்தப்பு.

*[கை + குற்றம்.]*

**கைக்குறி** *kai-k-kuṟi,* பெ.(n.) 1. வாழ்வின் போக்கினைக் குறிப்பதாகக் கருதும் கைவரி (இரேகை); lines on the palms as indicating one's career or course of life. 2. கையளவு; handful *'கைக்குறியாப்பை வாங்குவது' (ஈடு.1,4:6).*

*[கை + குறி.]*

**கைக்குறிப்பு** *kai-k-kuṟippu,* பெ.(n.) நினைவுக் குறிப்பு; written record, memorandum (செ.அக.).

ம. கைக்குறிப்பு; க. கெய்காகத; து. கயிகன்னெ.

*[கை + குறிப்பு.]

**கைக்குறிப்பேடு** *kai-k-kurippēḍu,* பெ.(n.) 1. அற்றைக்குறிப்பேடு; rough day book. 2. வருவாய்த்துறையினரின் நாட்குறிப்பு; ittah book of the Revenue official.

*[கை + குறிப்பு + ஏடு.]*

**கைக்குன்று** *kai-k-kuṉṟu,* பெ.(n.) யானை; elephant (சா.அக).



கைக்குன்று

*[கை + குன்று.]*

**கைக்கூச்சம்** *kai-k-kūccam,* பெ.(n.) ஈயாமை, இவறற்றனம் (கஞ்சத்தனம்) (இ.வ.); miserliness.

*[கை + கூச்சம்.]*

**கைக்கூட்டம்** *kai-k-kūṭṭam,* பெ.(n.) அணிவகுப்புக் கூட்டம்; battle array. *"கைக்கூட்ட மிட்டாற்போலே என்னவுமாம்" (திங்.பெரியாழ்.5:2:1, வியா.)(செ.அக.).*

*[கை + கூட்டம்.]*

**கைக்கூட்டன்** *kai-k-kūṭṭaṉ,* பெ.(n.) காவற்காரன்; watchman, warder, prison guard. *'ராஜபுத்ரனைச் சிறையிலே இட்டுவைத்தால் கைக்கூட்டனுக்குப் பாலுஞ் சோறும் இடுவாரைப் போல' (ஈடு,7,10:8).*

*[கை + கூட்டன்.]*

**கைக்கூலி**[1] *kai-k-kūli,* பெ.(n.) 1. அற்றைக்கூலி; daily wages. 2. கையிலே கொடுக்கும் விலைப்பொருள்; cash payment. *'கைக்கூலி கொடுத்துக் கொள்ள வேண்டும்" (ஈடு,4,6:1).* 3. கையூட்டு; bribe, glove-money.

ம. கைக்கூலி; க. கைகூலி, கெய்கூலி.

*[கை + கூலி.]*

**கைக்கூலி**[2] *kai-k-kūli,* பெ.(n.) 1. மணமகளுக்குப் பெண்வீட்டார் கொடுக்கும் தொகை (வின்.); money paid by the parents of the bride to the bridegroom. 2. கையூட்டு; bribe. *"கைக்கூலி தான்வாங்கு காலறுவான்" (தனிப்பா.1,108:47).*

ம. கய்க்கூலி; க. கெய்கூலி.

*[கை + கூலி.]*

**கைக்கூலிக்காரன்** *kai-k-kūli-k-kāraṉ,* பெ.(n.) நாட்கூலிக்குப் பணி செய்பவன்; a day labourer.

க. கெய்கூலிகார.

*[கை + கூலி + காரன்.]*

**கைக்கெளிமை** *kaikkeḷimai,* பெ.(n.) உள்ளீடற்று எடையில்லாத மென்மை (இலேசு); lightness.

*[கை + கு + எளிமை.]*

**கைக்கேடு** *kai-k-kēḍu,* பெ.(n.) 1. கீழறுப்பு; treachery. 2. எதிர்பாராது நேர்ந்த கேடு; unintentional error, accidental loss.

*[கை + கேடு.]*

**கைக்கேடுபோ–தல்** *kai-k-kēḍu-po-,* 8 செ.கு.வி. (v.i) பிறர் சூழ்ச்சிக்குட்பட்டுக் கேடு அடைதல்; to run risk or loss unawares by another's deception.

*[கை + கேடு + போ–.]*

**கைக்கை** *kaikkai,* பெ.(n.) 1. கசப்பு; bitter. 2. வெறுப்பு; aversion.

*[கை + கை.]*

**கைக்கொட்டை**[1] *kai-k-koṭṭai,* பெ.(n.) கைத்திண்டு (வின்.); pillow cushion for the arm (செ.அக.).

மறுவ. கைத்திரண்டு.

*[கை + கொட்டை.]*

**கைக்கொடு–த்தல்** *kai-k-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) **கைகொடு** பார்க்க see *kai-koḍu. "நற்சவையிற் கைக்கொடுத்தல் சாலவு முன்னினிதே" (இனி.நாற்.2).*

*[கை + கொடு–.]*

**கைக்கொள்(ளு)**[1]**–தல்** *kai-k-koḷ(ḷu)-,* 13 செ. குன்றாவி. (v.t.) 1. கையில் எடுத்துக் கொள்ளுதல்; to take in hand, take up, occupy, have in charge. *"கணவிர மாலை கைக்கொண் டென்ன" (மணிமே. 5:48).* 2. பேணிக் கொள்ளுதல்; to observe; to practise; to maintain. அறத்தைக் கைக்கொண்டு நடக்கிறார்கள். 3. ஏற்றுக் கொள்ளுதல், ஒப்புக் கொள்ளுதல், மேற் கொள்ளுதல்; to accept, adopt, admit. *'சொன்னவார்த்தை ஆப்தமென்ற கைக் கொள்ள வேண்டும்படி' (ஈடு.4:7,பிர.).* 4. கவர்தல்; to seize, grasp. *"கணநிரை கைக்கொண்டு" (பு.வெ.1:9).* 5. வளைத்துக் கொள்ளுதல்; to surround. *"கண்ணுதலோ னிருமருங்கு மொன்றாகக் கைக் கொண்டார்" (கோயிற்பு.பதஞ்.18).*

ம. கய்க்கொள்ளுக, கைக்கொள்ளுக; க.கெய்கொள்; தெ. கைகொனு.

*[கை + கொள்.]*

**கைக்கொள்(ளு)²-தல்** *kai-k-kol(lu)-,* 13 செ. குன்றாவி.(v.t.) 1. ஏற்றுச்செயற்படுத்துதல்; to undertake. *"மதுராந்தக ப்ரஹ்மாதிராஜர் கைக்கொண்டு இரட்சித்தமையில்" (S.I.I. VII, 308).* 2. உரிமை யாக்குதல்; to make one's own. 'தெருவைக் கைக்கொண்டு நின்றார்' (சீவக.457,உரை).

*[கை + கொள்(ளு)-.]*

**கைக்கொள்³** *kaikkol,* பெ.(n.) தலைவன் தலைவி யரின் களவுகற்பொழுக்கங்கள் (தொல்.பொருள்.498, உரை); life of hero and heroin through clandestine union or arranged marriage.

*[கை + கொள்]*

**கைக்கொளவர்** *kai-k-kolavar,* பெ.(n.) 1. அரசனைச் சூழ்ந்து பாதுகாக்கும் பொறுப்பேற்றபடைமறவர்; special bodyguards of the king in the army. 2. நெசவாளர்; weaver.

*[கை + (கொளுவர்) கொளவர்.]*

அரசனைப் பாதுகாக்கும் பொறுப்பைக் கையில் கொண்டவர்.

**கைக்கொளவன்** *kai-k-kolavan,* பெ.(n.) போரில் அரசனைப் பாதுகாக்கும் மெய்காப்பு மறவன்; a soldier who takes the responsibility of guarding the royal king.

மறுவ. கைக்கோளன்.

*[கை + (கொளுவன்) கொளவன்.]*

**கைக்கோட்சேனாதிபதி** *kai-k-kōṭ-cēṉādipadi,* பெ.(n.) மண்வெட்டி; a spade, a hoe.

ம. கய்க்கோட்டு.

*[கை + கோட்டு + சேனாதிபதி.]*

**கைக்கோட்டு** *kai-k-kōṭṭu,* பெ.(n.) மண்வெட்டி; a spade, a hoe.



கைக்கோட்டு

ம. கய்க்கோட்டு.

*[கை + (கொட்டு) கோட்டு.]*

**கைக்கோட்டை** *kai-k-koṭṭai,* பெ.(n.) யானை; elephant.

*[கை + (கோடு) கோட்டை.]*

**கைக்கோடரி** *kai-k-kōḍari,* பெ.(n.) சிறு கோடரி; hatchet, small axe, hand axe.

ம. கைக்கோடாலி; க. கெய்கொடலி, கைகோட்லி; தெ. செயிகொட்டலி; பட. கைகொடலி.

*[கை + கோடரி.]*

**கைக்கோரணி** *kai-k-kōraṇi,* பெ.(n.) 1. கைச்சாடை (வின்.); signs with the hands, as of a dumb person or a dying man (சா.அக.).

*[கை + கோரணி. குறள் → குரண் → குரணி → கோரணி (கொ.வ.).]*

**கைக்கோரணி காட்டு-தல்** *kai-k-kōraṇi-kāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) இறக்குந்தறுவாயிலிருத்தல் (இ.வ.); to be at the point of death.

*[கை + கோரணி + காட்டு-.]*

**கைக்கோல்¹** *kai-k-kōl,* பெ.(n.) 1. ஊன்றுகோல்; staff, walking stick. *"தன்கைக்கோலம்மனைக்கோலாகிய ஞான்று" (நாலடி.14).* 2. பற்றுக்கொடிறு; goldsmith's pincers. *"கைக்கோற் கொல்லன்" (சிலப்.16:108).*

ம. கைக்கோல்; க. கெய்கோலு.

*[கை + கோல்.]*

**கைக்கோல்²** *kai-k-kōl,* பெ.(n.) செங்கோல்; sceptre. *"எழுமேதி னிக்குங் கைக்கோல் செலுத்துங் குலோத்துங்கன்" (குலோத்.கோ.391).*

*[கை + கோல்.]*

**கைக்கோலிளையர்** *kai-k-kōl-iḷaiyar,* பெ.(n.) கையில் கோல் பிடித்துக் காவற்றொழில் புரிவோர்; watchmen, guards, as holding a staff. *"காவற் றொழிலொடு கைக்கோ லிளையரும்" (பெருங். உஞ்சைக்.57:70).*

*[கை + கோல் + இளையர்.]*

**கைக்கோள்** *kai-k-kōl,* பெ.(n.) கைப்பற்றிக் கொள்ளுதல்; seizure.

*[கை + கோள்.]*

**கைக்கோள்முதலி** *kai-k-kōḷ-mudali,* பெ.(n.) கைக்கோளக் குடியினரின் தலைவர்; chief of the *Kaikkōḷa* caste. *"கைக்கோளர்க்கும் கைக்கோள்*

*முதலிகளுக்கும் உள்ள மனையும்"* (தெ.இ.கல்.தொ:I:121)

*[கைக்கோள் + முதலி.]*

**கைக்கோளப்படை** *kai-k-kōḷa-p-paḍai,* பெ.(n.) சோழர் சிறப்புடைப்படை; special army of *Cōḷās.*

*[கைக்கோள் + படை.]*

"ஸ்ரீ ராஜராஜ தேவர், கைக்கோளப்படை பிரந்தகந் தெரிஞ்ச கைக்கோளரும் சூத்திரசோழந் தெரிஞ்ச கைக்கோளரும் பாண்டிய குலாசநித் தெரிஞ்ச கைக்கோளரும்" (தெ.கல்.தொ.4.கல்.391) நான்கு வகைகளைக் கொண்ட இப் படைப் பிரிவு முதல் இராசராசன் ஆட்சியில் சிறந்த படைப்பிரிவாக இருந்ததாம். (கல்.அக.).

**கைக்கோளர்**[1] *kai-k-kōḷar,* பெ.(n.) ***கைக்கோளன்*** பார்க்க; see *kai-kōḷaṉ.*

**கைக்கோளர்**[2] *kai-k-kōḷar,* பெ.(n.) நெசவுத்தொழில் செய்வோர்; weavers community. *"கங்கநல்லூர் கைக்கோளருங்" (ஆவ. 2 கட். 11 ப.24).*

*[கை + கோளர்.]*

**கைக்கோளர்**[3] *kai-k-kōḷar,* பெ.(n.) நெசவாளர்; weavers.

*[கை + கோள் + ஆர்.]*

**கைக்கோளர்**[4] *kai-k-kōḷar,* பெ.(n.) அரசரின் படைப்பிரிவில் வரி தண்டுவதற்காகத் தேர்ந்தெடுத்த படைமக்கள்; selected people in the administration for collection of tax using mild power. *"இரட்டித்துவந்த பொன் 30 தண்டப் போந்த சமரகேசரித் தெரிந்த கைக்கோளர் தண்டிப் பொன் கொண்ரு வருக வென்று இராஜராஜ மாராயர் கடையீடு வரக்காட்ட" (SII.XXII.Pt.1, 27-5 p.21).*

*[கை + கோள் + அர்.]*

**கைக்கோளன்** *kai-k-kōḷaṉ,* பெ.(n.) 1. போர்க் காலத்தில் அரசனைச் சூழ நின்று பாதுகாக்கும் பொறுப்பேற்றுச் சூளுரைக்கும் சிறப்புப் படைமறவன்; special army men who function as reliable body-guards of the king. 2. இன்று பெரும்பாலும் நெசவுத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் ஒரு தமிழ்க்குடியினன்; a caste, now mostly weavers, found in all districts.

ம. கய்க்கோளன்; தெ. கைகோல.

*[கைக்கொளவன் → கைக்கோளன்.]*

**கைக்கோளன்காடி** *kai-k-kōḷaṉ-kāḍi,* பெ.(n.) 1. நெசவுக்காரர் ஆக்கும் அரிசிக்காடி; fermented liquid prepared from boiled rice and used by weavers for yarns. 2. ஆறு மாதத்திய காடி; fermented liquid six months old (சா.அக.).

*[கைக்கோளன் + காடி.]*

**கைகட்டிநில்(-தல்) (கைகட்டிநிற்றல்)** *kai-kaṭṭi-nil-,* 14 செ.கு.வி.(v.i.) கைகளைக் கட்டிக்கொண்டு வணங்கி நிற்றல்; to stand submissively with folded arms.

*[கை + கட்டி + நில்-.]*

**கைகட்டு** *kai-kaṭṭu,* பெ.(n.) கூலியாள்களின் சேர்க்கைக் கூட்டம் (இ.வ.); batch, as of workmen.

*[கை + கட்டு-.]*

**கைகட-த்தல்** *kai-kaḍa-,* 3 செ.கு.வி. (v.i) 1. வயப் படாமல் மீறுதல்; to pass beyond one's control. *'நின்னைக்கைகடந்துநின்னுண்கண்களே, எனக்குச் சொல்ல லுறுவதொரு காரியம்' (குறள். 1271, உரை).* 2. கைக்கு எட்டாமற்போதல்; to escape; to pass out of one's hands; to pass beyond one's reach. *"தோண் முயங்கிடாது.... கைகடக்க விட்டிருந்து" (கம்பரா.கார்மு. 54).*

*[கை + கட-.]*

**கைகடந்தபோகம்** *kai-kaḍanda-bōgam,* பெ.(n.) மிகுதியான காமம்; too much of indulgence in sexual intercourse (சா.அக.).

*[கை + கடந்த + போகம்.]*

**கைகடி-த்தல்** *kai-kaḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) கைமுதலுக்கு இழப்பு நேர்தல்; to loss (of capital in hand).

ம. கைகடிக்குக.

*[கை + கடி.]*

**கைகடை-தல்** *kai-kaḍai-,* 12 செ.குன்றாவி.(v.t.) கையால் கடைதல்; to churn or stir about with the hands.

க. கெய்கடெ.

*[கை + கடை-.]*

**கைகண்ட**[1] *kai-kaṇḍa,* கு.பெ.எ.(adj.) தேர்ந்த; skilled. *அவர் இந்தத் தொழிலில் கைகண்டவர் (சா.அக.).*

*[கை + கண்ட.]*

**கைகண்ட**[2] *kai-kaṇḍa,* கு.பெ.எ.(adj.) நின்ற மதியுடைய, நற்றிறமிக்க; immediately useful, efficacious. *"தீவினைக் கருக்கெடும்மிது கைகண்ட யோகமே (தேவா. 927:5).*

*[கை + கண்ட.]*

**கைகண்டசாரம்** *kai-kaṇḍa-šāram*, பெ.(n.) 1. நவச் சாரம்; chloride of ammonium. 2. கைகண்ட பலன்; the result in hand immediate benefit.

*[கை + கண்ட + சாரம்.]*

**கைகண்டது** *kaikaṇḍadu*, பெ.(n.) 1. படிப்பினையால் சிறந்ததெனக் கொள்ளப்பட்டது; that which is found usually efficacious after experience. *"சான்றோர் புகழும் வெருகெண்ணெய்தவறா திதுகை கண்டோம் நாம்" (பராச சேகரம்.) (சா.அக.).* 2. **கைகூடு-தல்** பார்க்க; see *kai-kūdu-*. 3. தோன்றினது; that which appeared.

*[கை + கண்டது.]*

**கைகண்டபணி** *kai-kaṇḍa-paṇi*, பெ.(n.) பழக்கப்பட்ட பணி, தேர்ச்சி பெற்ற பணி; work which is known to a person or to which a person is accustomed.

**க.** கெய்கண்ட கெலச.

*[கைகண்ட + பணி.]*

**கைகண்டபயன்** *kai-kaṇḍa-payaṉ*, பெ.(n.) நடைமுறையில் உறுதிப்படுத்தப்பட்ட பயன்; established benefit.

*[கைகண்ட + பயன்.]*

**கைகண்டபரிகாரி** *kai-kaṇḍa-parigāri*, பெ.(n.) பட்டறிவு மிக்க மருத்துவன்; an experienced physician (சா.அக.).

*[கை + கண்ட + பரிகாரி.]*

**கைகண்டபலன்** *kai-kaṇḍa-palaṉ*, பெ.(n.) ***கைகண்டபயன்*** பார்க்க; see *kai-kaṇḍa-payaṉ*.

*[கை + கண்ட + பலன்.]*

**கைகண்டமருந்து** *kai-kaṇḍa-marundu*, பெ.(n.) 1. நோய் நீக்கும் மருந்து; the medicine which cures a disease. 2. கைதேர்ந்த மருந்து; a medicine the virtues of which are tried. 3. நோய்க்குரிய மருந்து; the medicine which exerts a special action in the prevention and cure of a disease (சா.அக.).

*[கை + கண்ட + மருந்து.]*

**கைகண்டமுறை** *kai-kaṇḍa-murai*, பெ.(n.) நுகர்ச்சியால் தெளிந்த முறை; an efficient method determined by experience (சா.அக.).

*[கை + கண்ட + முறை.]*

**கைகண்டயோகம்** *kai-kaṇḍa-yōgam* பெ.(n.) வழக்கத்தால் நலம் உள்ளதெனத் தெரிந்த மருந்து; any medicine found by trial to possess peculiar efficacy in the cure of a particular disease. *"கைகண்ட யோகந் தடவர் தீரும்" (திவ்.நாய்ச்.12:5).*

*[கை + கண்ட + யோகம்.]*

**கைகண்டவள்** *kai-kaṇḍavaḷ*, பெ.(n.) பரத்தை; prostitute (சா.அக.).

*[கை + கண்டவள்.]*

**கைகண்டவேலை**[1] *kai-kaṇḍa-vēlai*, பெ.(n.) ***கைகண்டபணி*** பார்க்க; see *kai-kaṇḍa-paṇi*.

**க.** கெய்கண்ட கெலச.

*[கை + கண்ட + வேலை.]*

**கைகண்டவேலை**[2] *kai-kaṇḍa-vēlai*, பெ.(n.) ஒருவருக்கு நன்கு தெரிந்த அல்லது பழக்கப்பட்ட வேலை; work which is known to a person or to which a person is accustomed.

**க.** கெய்கண்ட கெலச

*[கை + கண்ட + வேலை.]*

**கைகம்** *kaigam* பெ.(n.) வக்கிராந்தி செய் (வைப்பு) நஞ்சு (யாழ்.அக.); a mineral poison.

*[கச → கயி → கை → கைகம்.]*

**கைகயன்** *kaikayaṉ*, பெ.(n.) 1. கேகயநாட்டுமன்னன்; king of Kegaya. *"கைகயன் மகள் விழுந்தரற்ற" (கம்பரா.கிளைகண்டு.40).* 2. கேகய நாட்டைச் சார்ந்தவன்; inhabitant of Kegaya. *"கைகயர் வேந்தன்" (கம்பரா.எழுச்.64).*

*[கேகயன் → கைகயன்.]*

**கைகர-த்தல்** *kai-kara-*, 3 செ.குன்றாவி. (v.t.) ஒளித்தல்; to hide, conceal. *"சான்றவர் கைகரப்ப" (பழ.242).*

*[கை + கர-.]*

**கைகல-த்தல்** *kai-kala-*, 3 செ.கு.வி. (v.i.) 1. கூடுதல்; to unite, join. *"ஆசையிற் கைகலந்து" (திருப்பு.296).* 2. நெருங்கிப் பொருதல்; to engage in a hand-to-hand fight. *"மதன் படையுங் கைகலக்குந் தானே" (தனிப்பா. 1,326,24).*

*[கை + கல-.]*

**கைகவி-த்தல்** *kai-kavi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. கைக்குறியால் அடக்குதல்; to check as by gesture. *'மற்று அவனைக் கைகவித்து' (பாரத வெண்.*

*34,உரை).* 2. புகலிடம்கொடுத்தல்; to protect. *"அஞ்சே லென்றுகைகவியாய்" (திவ். பெரியாழ். 5,3:7).*

*[கை + கவி–.]*

**கைகழி—தல்** *kai-kaḷi-*, 3 செ.கு.வி.(v.i.) எல்லை கடத்தல்; to go beyond, exceed the bounds, overstep the limits to go beyond the hand, etc. *"அப்ராப்தமானதிலே கைகழியப் போய்" (ஈடு,4,6:8).*

க. கெய்கழி.

*[கை + கழி–.]*

**கைகழுவிவிடு—தல்** *kai-kaḷuvi-viḍu-*, 20 செ.கு.வி. (v.i.) முடியாதென்று மறுத்தல்; to refuse, to rescue. *சாகுந்தறுவாயிலிருந்த ஒரு நோயாளியைமருத்துவர் கைகழுவி விட்டார் (இ.வ.).*

*[கை + கழுவி + விடு–.]*

**கைகழுவு[1]—தல்** *kai-kaḷuvu-*, 5 செ.கு.வி. (v.i.) கையலம்புதல்; to wash the hands.

க. கெய்தொளெ; பட. கைதோகு.

*[கை + கழுவு–.]*

**கைகழுவு[2]—தல்** *kai-kaḷuvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. விட்டுவிடுதல்; to relinguish, abandon. 2. பொறுப்பை நீக்கிக்கொள்ளுதல்; to avoid one's responsibility.

*[கை + கழுவு–.]*

**கைகளத்தூர்** *kaikaḷattūr*, பெ.(n.) பெரம்பலூர் மாவட்டச் சிற்றூர்; a village in Perambalur Dt.

*[கை (சிறு) + களத்தூர்.]*

**கைகாசு** *kai-kāšu*, பெ.(n.) ***கைக்காசு*** பார்க்க; see *kai-k-kāšu.*

*[கை + காசு]*

**கைகாட்டி** *kai-kāṭṭi* பெ.(n.) 1. ***கைகாட்டிமரம்*** பார்க்க; see *kai-kāṭṭi-maram.* 2. மாமியாரிடத்தில் மருமகள் கைகாட்டியல்லது வாயாற்பேசுதல் கூடா தென்னும் வழக்கத்தையுடைய ஒருசார் கணக்க வகுப்பினர் (இ.வ.); A caste of accountants, so called from their custom of prohibiting a daughter-in-law, to communicate with her mother-in-law except by signs.

ம. கைகாட்டி.

*[கை + காட்டி.]*

**கைகாட்டிமரம்** *kai-kāṭṭi-maram*, பெ.(n.) ஊர்களுக்குச் செல்லும் வழி சொல்லி அடையாளங்



கைகாட்டிமரம்

குறிக்கும் மரம்; sign board, semaphore.

*[கை + காட்டி + மரம்.]*

**கைகாட்டிவிடு—தல்** *kai-kāṭṭ-viḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. தொழிலைப் பழக்கிக் கொடுத்தல்; to train a person. 2. தான் பொறுப்பேற்காமல் வேறொருவரைக் காட்டிவிடுதல்; to guide one to seek help from some one else.

*[கை + காட்டி + விடு–.]*

**கைகாட்டு[1]—தல்** *kai-kāṭṭu-*, 5. செ.கு.வி (v.i.) 1. சைகை காட்டுதல்; to make signs with the hand. *"பேதையார் கைகாட்டும் பொன்னும்" (நாலடி.328).* 2. நாட்டியத்தில் தொழிற்கை பிடித்தல்; to gesticulate with hands as dancing girls. 3. கொடியசைத்து அடையாளங் காட்டுதல் (உ.வ.); to wave the flag, as in railway stations. 4. நோய் அறிய, நாடி பார்க்கக் கையைக் காட்டுதல்; to show hand in order that the physician feels the pulse and diagnoses disease.

ம. கை காட்டுக; க. கெய்தோரு.

*[கை + காட்டு–.]*

**கைகாட்டு[2]—தல்** *kai-kāṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) திறமை காட்டுதல்; to exhibit (the power of) one's strength. யாரிடத்தில் கைகாட்டுகிறாய் (உ.வ.).

க. கெய்தோறு.

*[கை + காட்டு–.]*

**கைகாட்டு[3]—தல்** *kai-kāṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. சிறிது கொடுத்தல்; to give a little. *"ஐயமும் பிச்சையு மாந்தனையுங் கைகாட்டி" (திவ்.திருப்பா.2).* 2. வாழ்க்கைக்குத் தேவையானவற்றைக் கொடுத்தல்; to enable one to earn his livelihood. 3. இறைவனுக்குப் படைத்தல்; to offer to God. 4. கையூட்டுக் கொடுத்தல் (இ.வ); to bribe.

*[கை + காட்டு–.]*

**கைகாட்டு[4]–தல்** *kai-kāṭṭu-,* 5 செ.கு.வி.(v.i) ***கை காட்டிவிடு–தல்*** பார்க்க; see *kāi-kāṭṭi-viḍu-.*

*[கை + காட்டு–.]*

**கைகாட்டு[5]** *kaikāṭṭu,* பெ.(n.) கைச்சைகை; gesture with hands. *"கடவுணீ யுணர்த்துவதுங் கைகாட்டு" (தாயு.கல்லாலின்.1).*

*[கை + காட்டு.]*

**கைகாண்(ணு)[1]–தல்** *kai-kāṇ(ṇu)-,* 16 செ.குன்றாவி.(v.t.) பட்டறிவின் வாயிலாக அறிதல்; to find out by experience. *"மருந்துகை கண்டேன்" (பெரியபு. கண்ணப்.181).*

*[கை + காண்(ணு)–.]*

**கைகாண்(ணு)[2]–தல்** *kai-kāṇ(ṇu)-,* 12 செ.கு.வி.(v.i.) 1. மெய்ப்பித்தல் (யாழ்ப்.அக.); to prove. 2. நிறை வேறுதல்; to complete.

*[கை + காண்(ணு)–.]*

**கைகாய்த்து–தல்** *kai-kāyttu-,* பி.வி.2 (caus.) எரியச் செய்தல்; to burn. *"காடுகை காய்த்திய நீடுநா ளிருக்கை" (பதிற்றுப்.82:9).*

*[கை + காய்த்து–.]*

**கைகாய்ப்பு** *kai-kāyppu,* பெ. (n.) கடும் உழைப்பில் உள்ளங்கையில் ஏற்படும் தோல் தடிப்பு; hardening of skin in palm due to hard work.

*[கை + காய்ப்பு.]*

**கைகாரன்** *kaikāraṉ,* பெ.(n.) ***கைக்காரன்*** பார்க்க; see *kai-k-kāraṉ.*

*[கை + காரன்.]*

**கைகால்கரணைவிழல்** *kai-kāl-karaṇai-viḻal.* பெ.(n.) கைகால் பருத்ததனால் அல்லது வீங்குவதால் மடிப்பு விழுதல்; formation of folds in the cutaneous portion of the limbs from corpulency or swelling (சா.அக.).

*[கைகால் + கரணை + விழல்.]*

**கைகால்நடுக்கம்** *kai-kāl-naḍukkam,* பெ.(n.) 1. கைகால் இவற்றில் காணப்படும் நடுக்கம்; shivering of the limbs. 2. குழந்தை அல்லது வலுவில்லார்க்கு ஏற்படும் நடுக்கம்; inability to keep the fingers and toes free from continued motion as in convalescents or children (சா.அக.).

*[கைகால் + நடுக்கம்.]*

**கைகால்பிடி–த்தல்** *kai-kal-piḍi-,* 4 செ.கு.வி.(v.i.) வெந்நீரிட்டுக் கைகால்களைத் தடவிப் பிடித்து, பலவாறு திருப்பி நெட்டி முறித்தல்; to press and rub over the limbs at the same time bending and racking the joints especially when giving a hot bath (சா.அக.).

*[கைகால் + பிடி–.]*

**கைகால்முடக்கு** *kai-kāl-muḍakku,* பெ.(n.) 1. கைகால் மரத்து நீட்டவும் மடக்கவும் முடியாமற்போகும் ஒருவகை ஊதை (வாத) நோய்; a kind of rheumatic affection of the limbs arising from undue pressure exerted in the nervous system due to forcible throwing of stones, bending of bows etc. (சா.அக.).

*[கை + கால் + முடக்கு.]*

**கைகால்முரடுகட்டு–தல்** *kai-kāl-muraḍu-kaṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) முழங்கை முழங்கால் ஆகியவை திருப்பமுடியாது கரடு கட்டுதல்; the hardening or stiffening of a joint such as the elbow or knee in which there is no rotatary movement (சா.அக).

*[கைகால் + முரடு + கட்டு–.]*

**கைகால்முறுக்கு–தல்** *kai-kāl-murukku-,* 8 செ.குன்றாவி.(v.t.) 1. கைகால்களைப் பலவாறு திருப்புதல்; twisting the limbs in various ways for the purpose of stimulating the circulation of blood. 2. ***கைகால் பிடித்தல்*** பார்க்க; see *kai-kāl-piḍi.*

*[கை + கால் + முறுக்கு–.]*

**கைகால் வலி** *kai-kāl-vali,* பெ.(n.) கைகால் குத்தல் அல்லது குடைச்சல்; intense pricking or boring pain in the extremities (சா.அக.).

*[கை + கால் + வலி.]*

**கைகால் வழங்காமை** *kai-kāl-vaḻaṅgāmai,* பெ.(n.) 1. கைகால் பயன்படாதிருத்தல்; the state of being incapable of using hands and feet. 2. கைகால் செயல் இழத்தல்; deadening, or loss of motion and sensation of the limbs through paralytic attack (சா.அக.).

*[கை + கால் + வழங்காமை.]*

**கைகால்வற்று–தல்** *kai-kāl-vaṟṟu-,* 5 செ.கு.வி.(v.i.) கைகால் சூம்புதல்; atrophy of the limbs (சா.அக.).

*[கை + கால் + வற்று–.]*

**கைகால்வாங்கு–தல்** *kai-kāl-vāṅgu-,* 5 செ. குன்றாவி.(v.t.) கைகால் நீக்குதல்; amputation of the limbs (சா.அக).

*[கை + கால் + வாங்கு–.]*

**கைகால்விழு–தல்** *kai-kāl-viḻu-*, 2 செ.கு.வி. (v.i.) கைகால் உணர்ச்சி அசைவு ஆகியவை இல்லாமற் போதல்; to lose motion and sensation of the limbs through paralytic attack (சா.அக.).

*[கைகால் + விழு–.]*

**கைகால்வீங்கு–தல்** *kai-kal-vīṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. கைகால் பொதுவாக வீங்கிக் கொள்ளுதல்; to swell, of the limbs ordinarily from a disease. 2. சாவுக்குறி அடையாளமாகப் புறங்கை புறங்கால் வீங்குதல்; to swell, of in-steps, back of the palm indicating fatal termination.

*[கை + கால் + வீங்கு–.]*

**கைகால்வெடிப்பு** *kai-kāl-veḍippu*, பெ.(n.) கைகால்களில் ஏற்படும் வெடிப்பு; crack or fissure of the extremities through bilious disorders or frost bite (சா.அக.).

*[கைகால் + வெடிப்பு.]*

**கைகாலசதி** *kai-kāl-asadi*, பெ.(n.) வலுக்குறை வினால் உண்டாகும்கைகாலுளைச்சல்; exhaution of the limbs through weakness (சா.அக.).

*[கை + கால் + அசதி.]*

**கைகாலடி–த்தல்** *kai-kāl-aḍi-*, 4 செ.கு.வி. (v.i.) பக்கவூதையால் கை கால் உணர்ச்சியறல்; to be attacked with paralysis of the limbs (சா.அக.).

*[கை + கால் + அடி–.]*

**கைகாலதிர்ச்சி** *kai-kāl-adircci*, பெ.(n.) கைகால் நடுக்கம்; trembling of hand and leg (சா.அக.).

*[கை + கால் + அதிர்ச்சி.]*

**கைகாலயர்–தல்** *kai-kāl-ayar-*, 2 செ.கு.வி. (v.i.) கைகால் கனத்து, திமிர்த்து ஓய்தல்; heavy becoming and benumbed as hands and feet (சா.அக.).

*[கை + கால் + அயர்–.]*

**கைகாலழற்சி** *kai-kāl-aḻaṟci*, பெ.(n.) கைகாலெரிவு; burning of the extremities (சா.அக.).

*[கை + கால் + அழற்சி.]*

**கைகாலாட்டு–தல்** *kai-kāl-āṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. கைகாலசைத்தல்; to move hands and legs. 2. சோம்பி இருக்காமல் ஏதாவது பணி செய்தல்; to do some work instead being lazy (சா.அக.).

*[கை + கால் + ஆட்டு–.]*

**கைகாலிற்றுவிழல்** *kai-kāl-iṟṟu-viḻal*, தொ.பெ. (vbl.n.) குட்ட நோயால் கைகால் இற்றுவிழல்; dropping off of the digits in leprosy (சா.அக.).

*[கை + கால் + இற்று + விழல்.]*

**கைகாலுதறு–தல்** *kai-kal-udaṟu-*, 5 செ.கு.வி. (v.t.) கைகால் நடுங்குதல்; to shiver as the hands and feet (சா.அக.).

*[கை + கால் + உதறு–.]*

**கைகாலுதை–த்தல்** *kai-kāl-udai-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. கால், கை வலிப்புக் கண்டு கையையும் காலையும் உதைத்துக் கொள்ளுதல்; to move the hands and feet alternatively or in quick succession due to convulsions as epilepsy. 2. குழந்தைகள் கிடக்கும்போது கையையும் காலையும் உதைத்துக் கொள்ளல்; to move hands and feet spontaneously as by children when lying (சா.அக.).

*[கை + கால் + உதை–.]*

**கைகாலுளைச்சல்** *kaikāl-uḷaiccal*, பெ.(n.) கைகால் குடைச்சல்; boring pain of the limbs experienced in rheumatism or other nervous affections (சா.அக.).

*[கை + கால் + உளைச்சல்.]*

**கைகாலுறுப்பு** *kai-kāl-uṟuppu*, பெ.(n.) சேர்க்கை உறுப்பு; a jointed and divisible part of the limbs, appendages of the limbs (சா.அக.).

*[கை + கால் + உறுப்பு.]*

**கைகாலூது–தல்** *kai-kāl-ūdu-*, 5 செ.கு.வி. (v.i.) கைகால் வீக்கம்கொள்ளல் அல்லது பருத்தல்; to swell or enlarge abnormal by referring to extremities (சா.அக.).

*[கை + கால் + ஊது–. உல் → ஊல் → ஊது]*

**கைகாலூனம்** *kai-kāl-ūṉam* பெ.(n.) கைகால் நொண்டி; defective formation of limbs (சா.அக.).

*[கை + கால் + ஊனம்.]*

**கைகாலெரிச்சல்** *kai-kāl-ericcal* பெ.(n.) 1. கைகாலெரிவு; burning of the extremities 2. பித்த வெரிச்சல்; burning sensation of the palm and the sole from biliousness (சா.அக.).

*[கை + கால் + எரிச்சல்.]*

**கைகாலோய்ச்சல்** *kai-kāl-ōyccal*, பெ.(n.) வலு வின்மையால் காணும் கைகால் அசதி; exhaution of the limbs through weakness (சா.அக.).

*[கை + கால் + ஓய்ச்சல்.]*

**கைகாலோய்-தல்** *kai-kāl-ōy-,* 2 செ.கு.வி.(v.i.) கைகால் கனத்து மரத்துப் போதல்; hands and feet becoming heavy and benumbed (சா.அக.).

*[கை + கால் + ஓய்-.]*

**கைகாவல்[1]** *kai-kāval,* பெ.(n.) 1. இன்றியமையாத நேரத்திற்பயன்படுத்தப்படும்பொருள்கள் (இ.வ.); that which is useful in emergency as medicines, provisions and weapons. 2. கையுதவி; a ready or necessary help (சா.அக.). 3. காத்தல்; protection, guard.

ம. கைகாவல்.

*[கை + காவல்.]*

**கைகாவல்[2]** *kai-kāval,* பெ.(n.) வேண்டியதற்குமேல் ஒன்று இருப்பிலிருப்பு; something excess in possession more than the actual requirement.

*[கை + காவல்.]*

**கைகாற்கழுவல்** *kai-kāṟ-kaḻuval,* பெ.(n.) கைகால்களைத் தண்ணீரால் கழுவுதல்; washing hands and feet (சா.அக.).

*[கை + கால் + கழுவல்.]*

**கைகாற்காந்து-தல்** *kai-kāṟ-kāndu-,* 5 செ.கு.வி. (v.i.) கைகால்களில் காணும் சூடு; glowing of heat experienced due to high temperature (சா.அக.).

*[கை + கால் + காந்து-.]*

**கைகாற்குடைச்சல்** *kaikāṟ-kuḍaiccal.* பெ.(n.) 1 கைகால் குடைதல்; aching of the limbs. 2. கை கால்களுக்கேற்படும் ஊதைக் குடைச்சல்; rheumatic pain of the limbs (சா.அக.).

*[கை + கால் + குடைச்சல்.]*

**கைகாற்குத்தல்** *kai-kār-kuttal,* தொ.பெ.(vbl.n.) கைகால்களில் உண்டாகும் குத்தல் வலி; excruciating or piercing pain experienced in wounds, ulcers or other injuries inflicated in the limbs (சா.அக.).

*[கை + கால் + குத்தல்.]*

**கைகாற்குறண்டு-தல்** *kaikāṟ-kuranḍu-,* 5 செ.கு.வி.(v.i.) கைகால் வெலவெலத்தல்; being convulsed in the hands and feet (சா.அக.).

*[கை + கால் + குறண்டு-.]*

**கைகாற்சந்துளைவு** *kai-kāṟ-šanduḷaivu,* பெ.(n.) 1. கைகாற் குடைதல்; aching of the limbs. 2. கை கால்களுக்கு ஏற்படும் ஊதை(வாத)க் குடைச்சல்; rheumatic pain of the limbs (சா.அக.).

*[கை + கால் + சந்து + உளைவு.]*

**கைகாற்சில்லிடு-தல்** *kai-kāṟ-cilliḍu-,* 18 செ.கு.வி. (v.i.) கைகால் குளிர்ச்சியடைதல்; getting chillness of extremities which is a premonitory symptom of death (சா.அக.).

*[கை + கால் + சில்லிடு-.]*

**கைகாற்சுத்திசெய்-தல்** *kai-kāṟ-šutti-cey-,* 1 செ.குன்றாவி.(v.t.) மருந்துநீர் அல்லது கருக்கினால் கைகாலைக் கழுவுதல்; cleaning of hands and feet with a lotion or other disinfectants, sterlization of hands and feet. 2. மரபு கோட்பாட்டின்படி (ஐதிகம்) தூய்மைசெய்தல்; ceremonial cleaning of hands and feet (சா.அக.).

*[கை + கால் + சுத்தி + செய்-.]*

**கைகாற்சுரப்பு** *kaikāṟ-curappu,* பெ.(n.) கைகால் வீக்கம்; swelling of the limbs (சா.அக.).

*[கைகால் + சுரப்பு.]*

**கைகாற்சுரவை** *kaikāṟ-šuravai,* பெ.(n.) கைகால் வீக்கம்; swelling of the limbs (சா.அக.).

*[கை + கால் + சுரவை.]*

**கைகாற்செத்துப்போ-தல்** *kaikāṟ-cettu-p-pō-,* 8 செ.கு.வி.(v.i.) 1. கைகால் ஓய்ச்சல்; exhausion of the limbs. 2. கைகால் உணர்ச்சியற்றுப் போதல்; loss of motion and sensation of the limbs (சா.அக.).

*[கை + கால் + செத்து + போ-.]*

**கைகாற்பிடி-த்தல்** *kai-kāṟ-piḍi-* 4 செ.குன்றாவி. (v.t.) வெந்நீரால் கைக்கால்களை வருடிப் பிடித்துப் பலவாறு திருப்பி நெட்டிமுறித்தல்; pressing and rubbing over the limbs at the same time bending and racking the joints especially when giving a hot bath (சா.அக.).

*[கை + கால் + பிடி -.]*

**கைகாற்பிடிப்பு** *kai-kāṟ-piḍippu,* பெ.(n.) 1. கைகால் அசையமுடியாமல் செய்யும் ஊதை (வாத) நோய்; a kind of arthritis marked by inability to stretch or bend the joints due to stiffening of the limbs (சா.அக.).

*[கை + கால் + பிடிப்பு.]*

**கைகாற்றிமிர்** *kai-kāṟṟimir,* பெ.(n.) கைகால்களில் ஏற்படும் திமிர்; numbness of the limbs (சா.அக.).

*[கை + கால் + திமிர்.]*

**கைகீழ்** *kai-kīḻ,* பெ.(n.) கையமைச்சல்; dependency, subordination as of servant.

*[கை + கீழ்.]*

**கைக்குத்தலரிசி** *kai-kuttal-ariši,* பெ.(n.) கையால் குத்திய முனை முறியாத அரிசி; rice obtained by hand pounding.

*[கை + குத்தல் + அரிசி.]*

நெல்லை ஆலையில் இட்டு அரைத்து அரிசியாக்காமல் உரலிலிட்டு உலக்கையால் குத்தி எடுக்கும் அரிசி.

**கைகுலுக்கு-தல்** *kai-kulukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) மகிழ்ச்சிக் குறியாக ஒருவர் கையை ஒருவர் பிடித்து அசைத்தல்; to shake hands.

*[கை + குலுக்கு-.]*

**கைகுவி[1]-த்தல்** *kai-kuvi-,* 4 செ.குன்றாவி. (v.t.) கைகூப்புதல்; to greet with one's palms joined together in front of the chest.

மறுவ. கைகூப்பு; கைமுகிழ்.

*[கை + குவி-]*

**கைகுவி[2]-த்தல்** *kai-kuvi-,* 4 செ.கு.வி.(v.i.) கொம்மை கொட்டுதல் (யாழ்.அக.); to clap hands and dance.

*[கை + குவி-.]*

**கைகுளிர** *kai-kuḷira,* கு.வி.எ (adv.) தாராளமாய்; liberally, freely. *கைகுளிரக் கொடுத்தான்.*

*[கை + குளிர.]*

**கைகுறண்டு-தல்** *kai-kuṛaṇḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. வலிப்பு நோயினால் கை மடங்குதல் (வின்.); to be affected by spasms in the hands; to be cramped in the hands. 2. இவறத் (கஞ்சத்) தனமாயிருத்தல்; to be stingy, parsimonious, close-fisted.

*[கை + குறண்டு-.]*

**கைகுறுகிநில்-தல்(நிற்றல்)** *kai-kurugi-nil-,* ***கைகட்டிநில்-தல்(நிற்றல்)*** பார்க்க; see *kaikaṭṭi-nil-.*

*[கை + குறுகி + நில்-.]*

**கைகூசு-தல்** *kai-kūšu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. அச்சத்தால் அல்லது வெட்கத்தால் பின்னடைதல் (வின்.); to shrink, draw back, shrink out of fear or reserve. 2. இவறன்மை(கஞ்சத்தனம்) கொள்ளுதல்; to be stingy, parsimonious.

*[கை + கூசு-.]*

**கைகூட்டு-தல்** *kai-kūṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) ***கைகூப்பு*** பார்க்க; see *kai-kūppu.* *"வணங்கித் தன் கை கூட்டினளாகி" (பெருங்.வத்தவ.13:34:35).*

*[கை + கூட்டு-.]*

**கைகூடு[1]-தல்** *kai-kūḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. எடுத்த பணியில் வெற்றியடைதல்; to succeed, prosper. *காரியங் கைகூடிற்று.*

க. கெய்கூடு.

*[கை + கூடு-.]*

**கைகூடு[2]-தல்** *kai-kūḍu-,* 5 செ.கு.வி.(v.i.) கிட்டுதல்; to approach, draw near. *"கடுங்களிறு கண்கனலக் கைகூடி" (பு.வெ.7:12).*

*[கை + கூடு-.]*

**கைகூப்பி** *kai-kūppi,* பெ.(n.) சிப்பி; bi-value shell (சா.அக.).

மறுவ. கும்பிடுகிளிஞ்சல்.

*[கை + கூப்பி.]*

கைகூப்பியதுபோன்றவடிவம் பெற்றமையால் இப் பெயர் பெற்றிருக்கலாம்.

**கைகூப்பு[1]-தல்** *kai-kūppu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கையைக் குவித்துக் கும்பிடுதல் (சூடா.); to worship, adore, as by raising joined hands (செ.அக.). 2. கொப்பி கொட்டல்; to clap hands in kummi dance.

ம. கைகூப்புக.

*[கை + கூப்பு-.]*

**கைகூப்பு[2]-தல்** *kai-kūppu-,* 5 செ.கு.வி.(v.i.) ***கைகுவி-தல்*** (யாழ்.அக.) பார்க்க; see *kai-kuvi-* (செ.அக.).

*[கை + கூப்பு-.]*

**கைகூப்பு[3]** *kai-kūppu,* பெ.(n.) 1. கைகுவித்து வணங்குகை; worshipping with joined hands. *"எண் கைகூப்புச் செய்கையே" (திவ்.திருவாய். 4,3:2).* 2. அடிமுதல் கூப்பிய கைவரையுள்ள அளவு (வின்.); distance from the feet to the tip of the fingers of the hands joined and raised above the head.

*[கை + கூப்பு.]*

**கைகேசி[1]** *kaikēši* பெ.(n.) கரிசலாங்கண்ணி; eclipse plant (சா.அக.).

*[கை + (கசி)) கேசி.]*

**கைகேசி[2]** *kaikēši,* பெ.(n.) கேகயவரசன் மகளும் தசரதன் மனைவியருள் ஒருத்தியும் பரதன் தாயுமானவள்; daughter of the king of *Kēgaya,* one of the wife of Dasarada and mother of Bharata.

*"உனைப்பயந்த கைகேசி தன்சொற் கேட்டு" (திவ். பெருமாள்.9:1).*

*[கேகயன் → கைகேசி.]*

**கைகேசி**[3] *kaikēśi,* பெ.(n.) கையாந்தகரை; a herb.

**மறுவ.** கைவீசி.

*[கைவீசி – கைகேசி.]*

**கைகேயி** *kaikeyi,* பெ.(n.) ***கைகேசி***[2] பார்க்க; see *kaikēśi. "கைகேயி நினைந்த கருத்திதுவோ". (கம்பரா.பிராட்டிகளங்.15).*

**கைகொட்டிச்சிரி–த்தல்** *kai-kotti-ciri-,*4 செ.கு.வி. (v.i.) ஏளனமாய்ச் சிரித்தல்; to laugh derisively.

**ம.** கைகொட்டிச் சிரிக்குக.

*[கை + கொட்டி + சிரி–.]*

**கைகொட்டு**[1]**–தல்** *kai-kottu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கைகளைத் தட்டுதல்; to clap the hands, as in ridicule or applause. *"கைகட்டி வாய்பொத்திநிற்பாரைக் கண்டே கைகொட்டிச் சிரிக்கின்றீர்" (அருட்பா. VI. உறுதி.9).*

**ம.** கைகொட்டுக; **க.** கெய்கட்டு.

*[கை + கொட்டு–.]*

**கைகொட்டு**[2]**–தல்** *kai-kottu-,*5 செ.கு.வி. (v.i.) 1. உள்ளங்கைகள் இரண்டை ஒன்றோடொன்று சேருமாறு அடித்து ஒலி உண்டாக்குதல்; to clap; applause by clapping the hands. 2. எள்ளி நகையாடுதல்; to ridicule, laugh at derisively.

**ம.** கைகொட்டுக.

*[கை + கொட்டு–.]*

**கைகொடு**[1]**–த்தல்** *kai-kodu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. உதவிசெய்தல்; to lend a hand in aid or succour, render assistance. *"உற்றுழியுங் கைகொடுக்கும்" (நீதிநெறி.2).* 2. ***கைலாகுகொடு–த்தல்*** பார்க்க; see *kailāgu-kodu-. "விடையார்க்குங் கைகொடுக்குந் தொழில்பூண்டான்" (குற்றா.தல. யானைபூசித்த. 18:40).*

**ம.** கைகொடுக்குக; **க.** கெய்கொடு.

*[கை + கொடு–.]*

**கைகொடு**[2]**–த்தல்** *kai-kodu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ***கைகுலுக்கு–தல்*** (யாழ்.அக.) பார்க்க; see *kai-kulukku-.* 2. கையடித்து உறுதி கூறுதல்; to strike hands as in concluding a bargain.

**ம.** கைகொடுக்குக.

*[கை + கொடு–.]*

**கைகொடு**[3]**–த்தல்** *kai-kodu-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஏமாற்றுதல்; to deceive.

**மறுவ.** கடுக்காய்கொடு.

**க.** கெய்கொடு.

*[கை + கொடு–.]*

**கைகோ–த்தல்** *kai-kō-,* 4 செ.கு.வி. (v.i.) 1. தோளோடு தோள் பின்னுதல்; to take another's arm, to be arm to arm. 2. கைபிணைதல் (சிலப்.5:70, உரை); to clasp one another's hands, join hands. 3. நட்புச்செய்தல்; to make friends with. *"வஞ்சகக் காரர்கள் கைகோவாமல் நற்குணத்தார் கைகோத்து நான்றிரிவது" (தாயு. எந்நாட். அன்பர்நெறி, 2).* 4. சண்டைபிடித்தல் (உ.வ.); to start fighting, to come to blows.

*[கை + கோ–.]*

**கைகோட்சேனாதிபதி** *kaikōtcēṉādipadi,* பெ.(n.) அரசரின் மெய்காவற்படைத் தலைவர்; chief of the bodyguard unit of the king. *"திருநெல்வேலிகைகோட் சேனாதிபதிகளோம்" (தெ.இ.க. தொ.5 க.417).*

*[கைகோள் + சேனை + அதிபதி.]*

**கைகோத்தாடு–தல்** *kai-kōttādu-,*5 செ.கு.வி. (v.i.) குரவையாடுதல்; to dance the rural dance of females.

*[கைகோத்து + ஆடு–.]*

**கைகோர்–த்தல்** *kaikōr-,*4 செ.கு.வி. (v.i.) ***கைகோ–த்தல்*** பார்க்க; see *kai-kō-.*

*[கைகோ → கைகோர்–த்தல்.]*

**கைகோலு–தல்** *kai-kōlu-,* 5 செ.கு.வி. (vi) 1. முயலுதல்; to make effort, to attempt. 2. தொடங்குதல் (இ.வ.); to make a beginning.

*[கை + கோல் – கைகோல் → கைகோலு.]*

**கைகோலு**[2]**–தல்** *kai-kōlu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. சூளுரைத்தல், உறுதியேற்றல்; to resolve, determine, to swear. *"கைகோலிஞாலமளந்து" (திவ்.இயற்.2.47).* 2. ***கைகூப்பு*** பார்க்க; see *kai-kūppu.*

*[கை + கோலு–.]*

**கைகோவை** *kai-kōvai,* பெ.(n.) பொற்கொல்லர் தொழிலினொன்று (யாழ்.அக.); a process in goldsmith craft.

*[கை + கோவை.]*

**கைகோள்** *kai-kōl,* பெ.(n.) 1. தலைவியரின் களவு கற்பொழுக்கங்கள் (தொல்.பொருள்.498, உரை); con-

duct of lovers, comprising of clandestine intercourse as well as subsequent wedding life (Akap.). 2. சோரப் புணர்ச்சி; illicit intercourse with a female (சா.அக.).

[கை +கோள்.]

**கைங்கரியம்** *kaiṅkariyam*, பெ.(n.) பணிவிடை; service, employment of a servant.

Skt. kainkarya.

**கைச்சங்கம்** *kai-c-caṅgam*, பெ.(n.) நாகரவண்டு, நத்தை (யாழ்.அக); snail.

[கை + சங்கம்.]

**கைச்சங்கிலி** *kai-c-caṅgili* பெ.(n.) கைவிலங்கு; handcuff, chain, a shackle.

ம. கைச்சங்ஙல; க. கைகோள.

[கை + சங்கிலி.]

**கைச்சட்டம்** *kai-c-caṭṭam*, பெ.(n.) கூரையின் குறுக்குச் சட்டம் (வின்.); cross piece for rafters.

மறுவ. கைவிட்டம்.

[கை + சட்டம்.]

**கைச்சட்டை** *kai-c-caṭṭai*, பெ.(n.) 1. அரைச்சட்டை; short-sleeved shirt, bodice. 2. கையுறை; gloves.

[கை + சட்டை.]

**கைச்சம்** *kaiccam*, பெ.(n.) ஆணை; order. *"இப்பரிசு கைச்சம் செய்தோம் சபையோம்"(SII.XIV.78-4 p.50).*

[கை →கைச்சம்.]

**கைச்சம்பிரதாயம்** *kaiccambiradāyam*, பெ.(n.) கைச்சித்திரம் (யாழ்.அக.); dexterity of hand, skill in manual labour.

[கை + (வு.) சம்பிரதாயம்.]

**கைச்சரக்கு** *kai-c-carakku*, பெ.(n.) கற்பித்துக் கூறுவது, இட்டுக்கட்டிச் சொல்வது; fabricated reports, exaggerations. நடந்ததைக் கூறாமல் கைச்சரக்கைச் சேர்த்துக் கதைவிடலாமா? (உ.வ.).

[கை + சரக்கு.]

**கைச்சரசம்** *kai-c-carašam*, பெ.(n.) 1. ஆண் பெண்ணைத் தொட்டு விளையாடும் விளையாட்டு; wanton sport, dallying. 2. கைச்சேட்டை; ungraceful gestures with the hand. 3. நகையாட்டு; joking by action. மாப்பிள்ளை என்னிடம் கைச்சரசம் வேண்டா (உ.வ.).

மறுவ. கைச்சேட்டை, கைக்குறும்பு.

[கை + சரசம்.]

**கைச்சரடு**[1] *kai-c-caraḍu*, பெ.(n.) ***கைச்சாடு*** (பதிற்றுப்.19, உரை) பார்க்க; see *kai-c-cāḍu*.

[கை + சரடு.]

**கைச்சரி** *kai-c-cari*, பெ.(n.) கைவளை; a kind of arm-ring, bracelet.

[கைச்செறி → கைச்சரி.]

காப்புக்கு மேற்பகுதியில் கையில் அணியப்படும் சரிகை என்னும் அணிகலன். இது மேலே பருத்தும் கீழே சிறுத்தும் சிறு குழாய் வடிவில் இருக்கும்; பொன்னினா லானது.

**கைச்சல்** *kaiccal*, பெ.(n.) 1. வெறுப்பு (யாழ்.அக.); dislike. 2. கைப்பு, கசப்பு; bitterness.

[கள் → கை → கைச்சல்.]

**கைச்சவளம்** *kai-c-cavaḷam*, பெ.(n.) குத்தீட்டி, கையீட்டி (பு.வெ.10, சிறப்பிற்.10, உரை); a kind of hand lance, spear.

[கை + சவளம். சவளம் = குத்தாயுதம்]

**கைச்சற்றிராய்** *kaiccaṟṟirāy*, பெ.(n.) திராய் வகைகளுளொன்று (வின்.); a kind of chickweed, as bitter, mollugo.

[கைச்சல் + திராய்.]

**கைச்சற்றோடை** *kaiccaṟṟōḍai*, பெ.(n.) ***கைச்சனாரத்தை*** (வின்.) பார்க்க; see *kaiccaṉārattai*.

மறுவ. புளி நாரத்தை.

[கைச்சல்+ தோடை. தோடை = எலுமிச்சை, ஆரஞ்சு போன்ற காய்கள் காய்க்கும் செடிவகை. புளிப்பின் மிகுதியால் கசப்புத்தன்மை கொண்டதால் இப் பெயர் பெற்றதாம்.]

**கைச்சனம்** *kaiccaṉam*, பெ.(n.) புளிநரளை (சித்.அக.); bristly trifoliate vine.

[கய் → கை + சனம். சனம் = இனம் (வின்.).]

**கைச்சனாரத்தை** *kaiccaṉārattai*, பெ.(n.) புளிநாரத்தை (மலை.); bitter orange.

[கைச்சல் + நாரத்தை.]

**கைச்சாடு** *kai-c-cāḍu*, பெ.(n.) கையுறை; gloves. *தொழின் மாட்சிமைப்பட்ட கைச்சாட்டை இறுகக்கட்டி (கலித்.7, உரை).* மின்வலர் கைச்சாடின்றிப் பணிசெய்ய இயலாது (உ.வ.). 2. குத்துச் சண்டையில் கையில் அணியும் திண்ணுறை; gloves for wrestling.

மறுவ. கையுறை.

க. கெய்சில; பட. கய்சிர.

*[கை + சாடு. தோடு → தாடு → சாடு.]*

**கைச்சாடை** *kai-c-cāḍai,* பெ.(n.) கையால் காட்டும் மனக்குறிப்பு; significant movement of hand to evoke a response or convey intention.

*[கை + சாடை.]*

**கைச்சாத்து** *kai-c-cāttu,* பெ. (n.) 1. கையெழுத்து; signature. *"தந்தைதன் தந்தைதான் வேறெழுது கைச்சாத்து"(பெரியபு.தடுத்தாட்.61).* 2. பொருட்பட்டி; invoice, list of goods with the vendor's signature. 3. பற்றுச்சீட்டு; receipt for land tax paid, acknowledgement of payment.

ம. கைச்சார்த்து.

*[கை + சாத்து. சாற்று → சாத்து = சொல்லுகை.]*

**கைச்சாது** *kai-c-cādu,* பெ.(n.) 1. பணம் செலுத்தியதற்கான பற்றுச்சீட்டு; receipt *"குண்டிகையில் இட்டு கைச்சாதுக் கொள்ள"(SII. VI. 57-4 p.32).*

*[கை + (சாத்து) சாது (கொ.வ.).]*

**கைச்சாய்ப்பு** *kai-c-cāyppu,* பெ.(n.) சாய்மானம் (யாழ்.அக.); back, as of a chair, anything to lean on.

*[கை + சாய்ப்பு.]*

**கைச்சார்பு** *kai-c-cārbu,* பெ.(n.) ***கைச்சாய்ப்பு*** பார்க்க; see *kai-c-cāyppu.*

*[கை + சார்பு.]*

**கைச்சால்** *kai-c-cāl,* பெ.(n.) நீரிறைக்குங் கைவாளி (வின்.); hand bucket.

*[கை + சால். சால் = நீரிறைக்குங் கலம்.]*

**கைச்சாளை** *kai-c-cāḷai,* பெ.(n.) வளாகச் சுவரில் வைக்கப்பட்டிருக்கும்பதிவின் மீதுள்ள கூரை; the roof (கட்.தொ.).

*[கை + சாளை.]*

**கைச்சி**[1] *kaicci,* பெ.(n.) கமுகு (மலை.); areca-nut palm.

**கைச்சி**[2] *kaicci,* பெ.(n.) 1. சிரட்டை; coconut shell, half of a dried palmyra nut. 2. ஊமற்கச்சி; snail.

*[கை = சிறியது. கை → கைச்சி.]*

**கைச்சிட்டா** *kai-c-ciṭṭā,* பெ.(n.) அன்றாடக்குறிப்பேடு (இ.வ.); rough day-book. ***கைக்குறிப்பேடு*** பார்க்க; see *kai-k-kurippēḍu.*

*[கை + சிட்டா. U. ciṭṭāh > த. சிட்டா.]*

**கைச்சித்தி** *kai-c-citti,* பெ.(n.) ***கைப்பேறு*** பார்க்க; see *kai-p-pēṟu.*

*[கை + சித்தி. சித்தி = நலம், வெற்றி.]*

**கைச்சித்திரம்** *kai-c-cittiram,* பெ.(n.) 1. தொழிற்றிறமை; dexterity of hand, skill in manual labour, in fine arts. இவருடைய கைச்சித்திரம் எண்ணி மகிழத்தக்கது (உ.வ.). 2. கைநளினம்; sleight of hand.

*[கை + சித்திரம்.]*

**கைச்சிமிட்டு** *kai-c-cimiṭṭu,* பெ.(n.) 1. கமுக்கமாக (இரகசியமாக)க் கைகாட்டுங் குறிப்பு; secret gesture or sign with the hand. 2. கைத்திறன்; sleight of hand.

*[கை + சிமிட்டு. சிமிட்டு = கள்ளவேலை. சிமிழ்த்து → சிமிட்டு.]*

**கைச்சிறை** *kai-c-ciṟai,* பெ.(n.) 1. கையகத்தது; that which is in one's hand or possession, as property. *"கைச்சிறையான வநேகமும் விழுங்கப்பட்டு" (திருப்பு.579).* 2. பணயமாக வைக்கப்பட்ட ஆள்; hostage.

ம. கைச்சிற; க. கெய்சிறெ.

*[கை + சிறை.]*

**கைச்சின்னம்** *kai-c-cinnam,* பெ.(n.) தேவாரம்பெற்ற சிவப்பதிகளில் ஒன்று; one of Śiva temples on which there are hymns in *Tēvāram.*

*[கை + சின்னம். சின்னம் = அடையாளம்.]*

இந்நாளில் இவ்வூர் கச்சனம் என வழங்கப் பெறுகிறது; நாகை மாவட்டத்தில் எட்டுக்குடிக்கருகில் உள்ளது.

**கைச்சீட்டு** *kai-c-cīṭṭu,* பெ.(n.) 1. கையாலெழுதிய குறிப்புச்சீட்டு; written acknowledgement, any short memorandum in writting. 2. கடன்முறி; a bond.

ம. கய்ச்சீட்டு, கைச்சீட்டு; க. கெய்காகத, கெய்சீட்டு.

*[கை + சீட்டு.]*

**கைச்சீப்பு** *kai-c-cīppu,* பெ.(n.) தோட்பட்டையெலும்பு (வின்.); scapula, shoulder blade.

ம. கைசீட்டு.

*[கை + சீப்பு. சீப்பு = விலா எலும்பு (வின்.).]*

**கைச்சுடர்** *kai-c-cuḍar,* பெ.(n.) சிறு விளக்கு; a small lamp.

க. கெய்சொடர்.

*[கை + சுடர்.]*

**கைச்சுத்தம்** *kai-c-cuttam,* பெ.(n.) ***கைத்தூய்மை*** பார்க்க; *see kai-t-tūymai.*

*[கை + சுத்தம்.]*

**கைச்சுத்தி** *kai-c-cutti,* பெ.(n.) ***கைச்சுத்தியல்*** பார்க்க; see *kai-c-cuttiyal.*

*[கை + சுத்தி.]*

**கைச்சுத்தியல்** *kai-c-cuttiyal,* பெ.(n.) சுத்தியல்வகை; தட்டார் பயன்படுத்துஞ் சுத்தியல் வகை (C.E.M.); small hammer for working in gold.



கைச்சுத்தியல்

*[கை + சுத்தி + அல். (அல் : தொழிற்பெயர் ஈறு. ஒ.நோ. பட்டியல். செதுத்தல் → செத்துதல் : அடித்தல், தாக்குதல். செத்து → (சொத்து) சுத்து.]*

**கைச்சுரிகை** *kai-c-curigai,* பெ.(n.) உடைவாள் (சீவக. 558, உரை); dagger.

*[கை + சுரிகை.]*

**கைச்சுருக்க** *kai-c-curakka,* வி.எ.(adv.) விரைவாய்; quick, hastily. கைச்சுருக்கக் கடைக்குப் போய்வா.

*[கை + சுருக்க.]*

**கைச்சுருக்கு[1]–தல்** *kai-c-curukku-,* 3 செ.கு.வி.(v.i.) ***கைகுறுக்கு*** பார்க்க; see *kay-kuṟukku.*

*[கை + சுருக்கு–.]*

**கைச்சுருக்கு[2]** *kai-c-curukku,* பெ.(n.) 1. கைத்திறன்; expertness, dexterity of hand in any craft or excercise. 2. கையிறுக்கம்; stinginess, close fistedness.

ம. கைச்சுறுக்கு.

*[கை + சுருக்கு.]*

**கைசுருங்கு–தல்** *kai-c-curuṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) செலவு குறைதல்; to be cut down expenses.

*[கை + சுருங்கு–.]*

**கைச்சுருள்** *kai-c-curuḷ,* பெ.(n.) 1. திருமணத்தில் நாகவல்லிக்கு முன்னும் மற்றும் சில நற்செயல் நிகழ்வுகளிலும் மணமக்களுக்குக் கொடுக்கும் வெற்றிலைச்சுருள்; roll of betel leaves offered to bride and bridegroom when going to bathe on the day of marriage and on similar auspicious occasions. 2. மணமக்களுக்குத் தம்பலத்தோடு (தாம்பூலத்தோடு) கொடுக்கும் பணம்; a wedding gift of money presented with roll of betel leaves.

மறுவ. இலைப்பணம், இலைவயம், கும்பிடுபணம்.

*[கை + சுருள்.]*

கையில் கொடுக்கும் வெற்றிலைச் சுருளுக்கு வழங்கிய இப்பெயர் அச்சுருளோடு கொடுக்கும் பணத்திற்கும் வழங்கியது. இலைக்குள் [வெற்றிலை] வைத்துத் தந்தது இலைவயம் – இலவசம் ஆயிற்று.

**கைச்சுவடி** *kai-c-cuvaḍi,* பெ.(n.) ***கையேடு*** பார்க்க; see *kai-y-ēḍu.*

மறுவ. கையேடு.

*[கை + சுவடி.]*

**கைச்சுழி** *kai-c-cuḷi,* பெ.(n.) விதைக்கும்போது விதைகள் ஒன்றுகூடி விழுகை (யாழ்ப்.); falling in handfuls, as seeds in sowing.

*[கை + சுழி.]*

**கைச்சுழிப்படு–தல்** *kai-c-cuḷi-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) சரியாக விதையாமையால் பயிர் ஓரிடத்துக் குவிந்துவளர்தல் (யாழ்ப்.); to grow in clumps, as grain sown by untrained hands.

*[கைச்சுழி + படு–.]*

**கைச்சுழியா–தல்** *kai-c-cuḷi-y-ā-,* 6 செ.கு.வி.(v.i.) ***கைச்சுழிப்படு–தல்,*** (யாழ்ப்.) பார்க்க; see *kai-c-cuḷi-p-paḍu-.*

*[கை + சுழி + ஆ–.]*

**கைச்சுறுக்கு** *kai-c-cuṟukku,* பெ.(n.) ***கைச்சுருக்கு[2]*** பார்க்க; see *kai-c-curukku.*

*[கை + சுறுக்கு.]*

**கைச்சூடு[1]** *kai-c-cūḍu,* பெ.(n.) 1. கையைத் தேய்த்தல், தீக்காய்தல் முதலியவற்றால் உண்டாகுஞ் சூடு (வின்.); heat produced in the hand by friction or by holding it to the fire. 2. கை பொறுக்கக்கூடிய சூடு; bearable heat. கைச்சூடு பதமாக எண்ணெய் காய்ச்சித் தலைக்குத் தேய் (உ.வ.).

ம. கைச்சூடு.

*[கை + சூடு.]*

**கைச்சூடு**[2] *kai-c-cūḍu,* பெ.(n.) கதிரறுப்பவர் களுக்குக் கொடுக்கும் அரிக்கட்டு (யாழ்ப்.); sheaf given to reapers.

*[கை + சூடு. சூடு - விளைந்த கதிர்.]*

**கைச்செட்டு** *kai-c-ceṭṭu,* பெ.(n.) 1. சிக்கனம் (யாழ். அக.); thrift, economy. புதிதாக வந்த மருமகளின் கைச்செட்டு மாமியாருக்கு மிகவும் பிடித்துவிட்டது (உ.வ.). 2. சில்லறை வணிகம் (யாழ். அக.); retail trading.

*[கை + செட்டு.]*

**கைச்செட்டை** *kai-c-ceṭṭai,* பெ.(n.) ***கைச்சீப்பு*** பார்க்க; see *kai-c-cīppu.*

*[கை + செட்டை.]*

**கைச்செய்கை** *kai-c-ceygai,* பெ.(n.) வயல் முதலியவற்றில் செய்யுங் கைவேலை (வின்.); manual labour in field or garden.

*[கை + செய்கை.]*

**கைச்செலவு** *kai-c-celavu,* பெ.(n.) 1. சொந்தச் செலவு; personal expense. கைச்செலவுக்குக்கூடக் காசில்லை (உ.வ.). 2. சில்லறைச்செலவு; sundry expenses. கைச்செலவுக்கு இவ்வளவுபணமா? (உ.வ.).

**ம.** கைச்செலவு; **க.** கைகாசு; **பட.** கைசெலவு.

*[கை + செலவு.]*

**கைச்செறி** *kai-c-ceṟi,* பெ.(n.) 1. தோலினாற் செய்த கையுறை; gloves made of leather. *"காற்செறி நாணெறிகைச்செறிகட்டி"(பெரியபு. கண்ணப்ப. 60).* 2. கையில் அணியும் அணிகலன்; ornament worn on hand.

*[கை + செறி.]*

**கைச்சேட்டை** *kai-c-cēṭṭai,* பெ.(n.) கையாற் செய்யுங் குறும்புச் செயல்; mischievous acts of the hand.

*[கை + சேட்டை.]*

**கைச்சைகை** *kai-c-caigai,* பெ.(n.) 1. கையால்காட்டுங் குறிப்பு; sign made by the hand. 2. கையொப்பம் (இ.வ.); signature.

**மறுவ.** கைச்சாடை.

**க.** கெய்மாட, கெய்சன்னெ; **பட.** கைசன்னிய.

*[கை + சைகை.]*

**கைச்சொடுக்கு**[1] *kai-c-coḍukku,* பெ.(n.) கைப்பெருவிரலையும் நடுவிரலையும் ஒன்றோடொன்று உராய்ந்து உண்டாக்கும் ஓசை; a snap with the fingers.

**க.** கெய்கொடுகு.

*[கை + சொடுக்கு.]*

**கைச்சொடுக்கு**[2]**–தல்** *kai-c-coḍukku-,* 5 செ. குன்றாவி. (v.t.) விரல்களை நெட்டியெடுத்தல்; to snap with the fingers.

**க.** கெய்கொடுங்கு

*[கை + சொடுக்கு.]*

**கைச்சோர்வு** *kai-c-cōrvu,* பெ.(n.) 1. இழுப்புநோய் போன்றவற்றால் கை உணர்வற்றுப் போதல்; loss of sensation in hand or the arm though paralysis. 2. வன்முறைத் தாக்குதலால் கைதளர்ந்து போதல்; disablement effected by violence (சா.அக.).

*[கை + சோர்வு.]*

**கைச்சோரம்** *kai-c-cōram,* பெ.(n.) ***கச்சோரம்*** (தைலவ.தைல.77) பார்க்க; see *kaccōram.*

*[கை + சோரம்.]*

**கைச்சோலம்**[1] *kai-c-cōlam,* பெ.(n.) கிச்சிலிக் கிழங்கு; an aromatic root (சா.அக.).

*[கை - சிறிய. கை + சோலம். சுல்லம் → சோலம்.]*

**கைச்சோலம்**[2] *kai-c-cōlam,* பெ.(n.) ஒருவகை ஏனம்; a kind of metal vessel. *"வெண்கலக் கைச் சோலமொன்று"(S.I.I.II.408,9).*

*[கை - சிறிய. கை + சோலம்.]*

**கைச்சோலம்**[3] *kaiccōlam,* பெ.(n.) இறைவன் வழிபாட்டிற்குரிய ஏனங்களுள் ஒன்று; a vessel for worship. *"மேற்படி நிறை கைச்சோலம் ஒன்று" (SII.V.521-7, p.212).*

*[கச்சோலம் → கைச்சோலம்.]*

**கைசகர்** *kai-šagar,* பெ.(n.) வன்னியர் (அக.நி.); persons of the *Vanniya* caste.

*[கை + சகர். சாகு - வேளாண்மை, உழவுத்தொழில். சாகு → சாகர் → சகர்.]*

**கைசருவு–தல்** *kai-šaruvu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. எதிர்த்தல் (யாழ்ப்.); to attack, assault. 2. திருடுதல்; to pilfer, steal. 3. தகாதமுறையில் பெண்களிடம் நடந்துகொள்ளுதல் (இ.வ.); to commit indecent assault, as on a woman. கைசருவிய இவனுக்கு இதுவும் வேண்டும் இன்னமும் வேண்டும் (உ.வ.).

*[கை + சருவு-.]*

**கைசலி-த்தல்** *kai-šali-*, 4 செ.கு.வி.(v.i.) 1. கை யோய்தல்; to be tired, exhausted, wearied, as the arms in swimming carrying a burden, etc. *"வேதாவும் கைசலித்து விட்டானே" (பட்டினத். திருப்பா.பொது.ப.172).* 2. வறுமையுறுதல் ; to be reduced to poverty, to be in straitened circumstances.

*[கை + சலி-.]*

**கைசளை-த்தல்** *kai-calai-*, 4 செ.கு.வி.(v.i.) ***கைசலி-த்தல்.*** பார்க்க; see *kai-šali-*.

*[கை + சளை-.]*

**கைசா** *kaišā*, பெ.(n.) இரு கழஞ்சு கொண்ட நிறை (கணக்கதி. 7:8).; a weight = 2 *kalañju*.

**ம.** கைசு (¼ பலம்)

**Mar.** kaich

*[கஃசு → கைசா (கொ.வ.).]*

**கைசிகம்** *kaišigam*, பெ.(n.) 1. பண்வகையுளொன்று (பரத.இராக.56); a musical mode. 2. இசை; music.
*[கைசெய் → கைசிகம்]*

**கைசியம்** *kaišiyam*, பெ.(n.) மயிர் (யாழ்.அக.); hair.

*[கேசம் → கைசியம்.]*

**கைசிகன்** *kaišigam*, பெ.(n.) நம்பாடுவான் (திவ்.திருமாலை.33, வியா.ப.202); the devotee Nampāduvān who sang in the kaišiga melody.

*[கைசிகம் → கைசிகன்.]*

**கைசு** *kaišu*, பெ.(n.) காற்பலம்; one-fourth of a palam. *"சர்க்கரையமுது போது கைசாக" (S.I.I. II.70:14).*

*[கஃசு → கைசு (கொ.வ.).]*

**கைசெய்[1]-தல்** *kai-šey-*, 1 செ.கு.வி.(v.i.) 1. தொழில் செய்தல்; to do manual labour, work with one's hands. *"நும்மெய் வருத்திக் கைசெய் துய்ம்மினோ" (திவ்.திருவாய்.3,9:6).* 2. அழகு படுத்துதல்; to adorn, decorate, trick out. *"மானிட மகளிர்க்கு.... கைசெய்து பிறப்பிக்கும் அழகு" (திருமுருகு.17,உரை).* 3. உதவி செய்தல் (ஈடு.4,8:7); to assist.

**பட.** கைமாடு.

*[கை + செய்-.]*

**கைசெய்[2]-தல்** *kai-cey-*, 1 செ.குன்றாவி.(v.t.) 1. நடத்துதல்; to conduct. *"பாரதங் கைசெய்த" (திவ்.பெரியாழ்.2,1:1).* 2. பழக்குதல்; to domesticate.

**Fin.** kesy (to tame, domesticate)

*[கை + செய்-.]*

**கைசெய்[3]-தல்** *kai-cey-*, 2 செ.கு.வி.(v.i.) அறுவை மருத்துவம் செய்தல் (நாஞ்.); to make a surgical operation.

*[கை + செய்-.]*

**கைசேர்-தல்** *kai-šēr-*, 2 செ.குன்றாவி.(v.t.) ஒன்று சேர்தல்; to join (the hand) (ஒரு) கை சேர்ந்த பின் ஆட்டம் விறுவிறுப்பாக இருந்தது.

**க.** கெய்சேரு.

*[கை + சேர்-.]*

**கைசோர்-தல்** *kai-šōr-*, 2 செ.கு.வி.(v.i.) 1. கைதளர்ந்துவிழுதல்; to be loosened from the hand, to fell. 2. ***கைசலி*** பார்க்க; see *kai-šali-*.

**க.** கெய்சோல்.

*[கை + சோர்-.]*

**கைசோர்ந்துபோ-தல்** *kai-šōrndu-pō-*, 8 செ.கு.வி. (v.i.) 1. கைவிட்டுப்போதல்; to slip out of one's hands; to be lost. 2 வறுமைநிலை அடைதல்; to become poor.

*[கை + சோர்ந்து + போ-.]*

**கைஞ்ஞானம்** *kai-ñ-ñāṉam*, பெ.(n.) சிற்றறிவு (அற்ப) அறிவு; shallow, superficial knowledge. *"கைஞ்ஞானங் கொண்டொழுகுங் காரறி வாளர்" (நாலடி.311).*

*[கை + ஞானம். கை = சிறிய.]*

**கைத்தகம்** *kai-t-tagam*, பெ.(n.) தாழை; fragrant screw-pine. 2. எட்டி; nux-vomica (சா.அக.).

*[கை (கசப்பு) → கைத்தகம்.]*

**கைத்தகோடரம்** *kaitta-kōḍaram*, பெ.(n.) எட்டி (மலை.) nux-vomica.

*[கைத்த (கசப்பான) + கோடரம்.]*

**கைத்தட்டு** *kai-t-taṭṭu*, பெ.(n.) குவளை அல்லது ஏனம்; a small cup or basin.

**க.** கெய்பட்லு.

*[கை + தட்டு.]*

**கைத்தடி[1]** *kai-t-taḍi*, பெ.(n.) 1. ஊன்றுகோல்; walking-stick. *"ஒரு கைத்தடி கொண்டடிக்கவோ வலியிலேன்" (அருட்பா.5.தெய்வமணி.31).* 2. சிறுதடி; short stick.

**க.** கயிகம்ப, கெய்கோலு; **து.** கயிகம்ப; **பட.** கைதடி.

*[கை + தடி.]*

**கைத்தடி**[2] *kai-t-tadi,* பெ.(n.) 1. சொத்துரிமைப் பங்கீட்டு ஆவணம்; partition deed. 2. தற்குறிக்கீற்று; mark of signature made by an illiterate person.

ம. கைத்தடி.

*[கை + தடி. கைத்தடி = ஊன்றுகோல்போல் பாதுகாப்பான ஆவணம் அல்லது கையெழுத்து.]*

**கைத்தடி**[3] *kai-t-tadi,* பெ.(n.) கையாள்; man employed to execute one's unlawful wishes. அவருக்குக் கைத்தடியாக இருப்பதில் இவனுக்கு வெட்கமில்லையே!

*[கை + தடி.]*

கையுடன் இருக்கும் தடியைப்போல் ஒருவன் பின் சென்றொழுகும் தன்மை கொண்டோன் கைத்தடி எனப்பட்டான்.

**கைத்தடிப்படி** *kai-t-tadippadi,* பெ.(n.) 1. ***கையிழப்பு*** பார்க்க; see *kai-y-ilappu.* 2. ஊன்றுகோல்; crutch.

து. கைத்தண்டா.

**கைத்தண்டம்** *kai-t-tandam,* பெ.(n.) 1. ***கையிழப்பு*** பார்க்க; see *kai-y-ilappu.* 2. ஊன்றுகோல்; crutch.

து. கைத்தண்டா.

*[கை + தண்டம்.]*

**கைத்தண்டலம்** *kai-t-tandalam,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டச் சிற்றூர்; a village in Kanjipuram Dt.

*[கை (சிறு) + தண்டலம்.]*

**கைத்தண்டு** *kai-t-tandu,* பெ.(n.) 1. கைத்தடி; hand stick. 2. ஒக(யோக)த் தண்டு; resting rod used by ascetics in yoga.

*[கை + தண்டு.]*

**கைத்தப்பு** *kai-t-tappu,* பெ.(n.) ***கைக்குற்றம்*** பார்க்க; see *kai-k-kurram.*

ம. கைத்தப்பு; க. கெய்தப்பு.

*[கை + தப்பு.]*

**கைத்தபழம்** *kaitta-palam,* பெ.(n.) சோற்றுக் கற்றாழைப் பால்; the juice of aloe-pulp (சா.அக.).

*[கை → கைத்த + பழம்.]*

**கைத்தரவு** *kai-t-taravu,* பெ.(n.) வரவு வைத்த கைச்சாத்து. *"கார்தோறும் குடுத்து இவர் கையால் தரவு கொள்வோமாகவும்" (தெ.இ.க. தொ.5 க.415).*

*[கை + தரவு.]*

**கைத்தராசு** *kai-t-tarāsu,* பெ.(n.) சிறு நிறைகோல் (தராசு); small balance used for weighing precious metals and stones.

*[கை + தராசு.]*

**கைத்தல்**[1] *kaittal,* தொ.பெ.(vbl.n.) 1. கசத்தல்; tasting bitter. 2. களிம்பேறல்; forming verdigris (சா.அக.). 3. அலைத்தல்; torment. 4. சினத்தல்; to get angry. 5. வெறுத்தல்; to hate.

*[கை → கைத்தல்.]*

**கைத்தல்**[2] *kaittal,* பெ.(n.) அணி செய்தல் (அலங்கரித்தல்); to decorate.

*[கை → கைத்தல். கை = அழகு.]*

**கைத்தல்**[3] *kaittal,* பெ.(n.) கறிவகை; a kind of vegetable curry. "கரியல் பொடித்தூவல் கைத்தல்" (சரவண.பணவிடு.,274).

*[கை → கைத்தல்.]*

**கைத்தலம்**[1] *kai-t-talam,* பெ.(n.) உள்ளங்கைப் பகுதி; palm of the hand, metacarpus. *"கைத்தலமொத்தா" (பெருங்.வத்தவ.14:71).*



கைத்தலமும் முக அளவும்

க. கெய்தள

*[கை + தலம்.]*

**கைத்தலம்**[2] *kai-t-talam,* பெ.(n.) ***கைத்தலைப்பூண்டு*** பார்க்க; see *kaittalai-p-pūndu.*

*[கைத்தலை → கைத்தலம்.]*

**கைத்தலம்பால்** *kai-t-talam-pāl,* பெ.(n.) கன்றில்லாமல் கறக்கும் ஆவின் பால்; cow's milk drawn without the aid of a calf (சா.அக.).

ம. கைத்தலம்.

*[கை + தலம் + பால்.]*

**கைத்தலைப்பூண்டு** *kai-t-talai-p-pūṇḍu,* பெ.(n.) சிற்றெழுத்தாணிப் பூடு (சித்.அக.); a variety of style plant.

*[கைத்தலை + பூண்டு.]*

**கைத்தவறு** *kai-t-tavaṟu,* பெ.(n.) ***கைக்குற்றம்*** பார்க்க; see *kai-k-kuṟṟam.*

**க.** கெய்தப்பு

*[கை + தவறு.]*

**கைத்தளம்** *kai-t-taḷam,* பெ.(n.) கேடய வகை (சீவக.1561, உரை.); a kind of shield.

*[கை + தளம்.]*

**கைத்தளை** *kai-t-taḷai,* பெ.(n.) இருகைகளையும் பிணைத்துக் கட்டும்படியாக அமைந்த, சிறு தொடரி (சங்கிலி)யால் இணைக்கப்பட்ட, மாழையாலான இருவட்டங்களைக் கொண்ட கருவி; handcuff. *"கைத்தளை நீக்கி யென்முன் காட்டு" (பட்டினத்.பொது.42).*

**மறுவ.** கைவிலங்கு.

**ம.** கைத்தள.

*[கை + தளை.]*

**கைத்தா** *kaittā,* பெ.(n.) ***காட்டாமணக்கு*** (மலை.) பார்க்க; see *kāṭṭāmaṇakku.*

*[கை + தாள் – கைத்தாள் → கைத்தா.]*

**கைத்தாக்கு** *kai-t-tākku,* பெ.(n.) 1. கையினால் கொடுத்த குத்து; a blow dealt with the hand. 2. கையினால் குத்துகை; pounding with the hand as rice (சா.அக.).

*[கை + தாக்கு.]*

**கைத்தாங்கல்** *kai-t-tāṅgal,* பெ.(n.) கையால் தாங்கி நிற்கை; supporting a person or thing by the arms. மருத்துவமனையிலிருந்து ஒரு நோயாளியைக் கைத்தாங்கலாக அழைத்து வந்தனர் (இ.வ.).

**ம.** கைத்தாங்ஙு.

*[கை + தாங்கல்.]*

**கைத்தாமணக்கு** *kaittāmaṇakku,* பெ.(n.) காட்டாமணி (சித்.அக.); Malabar nut.

*[கைத்த + ஆமணக்கு.]*

**கைத்தாய்** *kai-t-tāy,* பெ.(n.) 1. தூக்கி வளர்த்த தாய்; nurse. 2. செவிலித்தாய்; wet-nurse. 3. வளர்ப்புத்தாய்; foster-mother (சா.அக.).

*[கை + தாய்.]*

**கைத்தாயர்** *kai-t-tāyar,* பெ.(n.) ***கைத்தாய்*** பார்க்க; see *kaithaay.* "ஓர் உயிரைத் தருகின்ற போதிருகைத்தாயர் தம்பால் வருகின்ற நண்பு" (திருமந்.459).

**கைத்தாராளம்** *kai-t-tārāḷam,* பெ.(n.) பெருந்தன்மை, வள்ளன்மை; open-handedness, liberality.

**க.** கெய்தொட்டது.

*[கை + தாராளம்.]*

**கைத்தாள்** *kai-t-tāḷ,* பெ.(n.) 1. திறவுகோல்; key. *"கைத்தாள் கொண்டாருந் திறந்தறிவா ரில்லை" (திருமந்.2604).* 2. கையாலிடுந் தாழ்ப்பாள்; bolt. 3. ***கைத்தாழ்*** பார்க்க; see *kai-t-taḷ.*

**க.** கெய்தாழு.

*[கை + தாழ் → கைத்தாள்.]*

**கைத்தாழ்** *kai-t-taḷ,* பெ.(n.) திறவுகோல்; key.

*[கை + தாழ்.]*

இதனைக் கைத்தாவ் என்பது கொச்சைவழக்கு.

**கைத்தாளம்** *kai-t-tāḷam,* பெ.(n.) 1. தாளக்கருவி; cymbals. *"கொக்கரை கைத்தாள மொந்தை" (தேவா.965:7).* 2. கையாற் போடுந் தாளம்; beating time with the hand. *"செத்தவ ரெழுவ ரென்று கைத்தாளம் போடு" (அருட்பா.vi, நாமாவ.161).*



கைத்தாளம்

**ம.** கைத்தாளம்; **க., து.** கைதாள; **தெ.** கைதாளமு.

*[கை + தாளம்.]*

**கைத்திட்டம்** *kai-t-tiṭṭam,* பெ.(n.) 1. கைமதிப்பு; rough estimation of the weight or measure of a thing by the hand. கைத்திட்டமாக உப்புப்போடு (உ.வ.). 2. அறுதியிட்ட கையிருப்புத் தொகை; balance struck in accounts, balance in hand.

*[கை + திட்டம்.]*

**கைத்திண்டு** *kai-t-tiṇḍu,* பெ.(n.) கைக்கு வைத்துக் கொள்ளும் சாய்வுத் திண்டு; a pillow to lean on.

*[கை + திண்டு.]*

**கைத்திரி** *kai-t-tiri,* பெ.(n.) இடக்கை என்னுந் தோற்கருவி; a small drum. *"குழையுடற் றளைவிரி கைத்திரி கறங்க" (கல்லா.8:12).*

*[கை + திரி.]*

**கைத்திறன்** *kai-t-tiṟaṉ,* பெ.(n.) கைக்குணம்; the virtue or efficacy of the hand. 2. பயிற்சி; practice. 3. பட்டறிவு; experience.

**து.** கய்யெட்டெ.

*[கை + திறன்.]*

**கைத்தீட்டு**[1] *kai-t-tīṭṭu,* பெ.(n.) ஆவணம் (T.A.S.); document, deed, record of gift. *மணற்குடி யூரோம் கைத்தீட்டு.*

**ம.** கைத்தீட்டு.

*[கை + (தீற்று) தீட்டு.]*

**கைத்தீட்டு**[2] *kai-t-tīṭṭu,* பெ.(n.) நேரில் கையெழுத்திட்டு எழுதிக் கொடுத்த உறுதிச் சீட்டு. *"பஞ்சவந் பிரமராயர்க்கு நாங்கள் கைத்தீட்டு இட்டுக் குடுத்த" (ஆவ.10–17–2 பக்.42–4)* (கி.பி.1072).

*[கை + தீட்டு.]*

**கைத்தீபம்** *kai-t-tībam,* பெ.(n.) 1. ***கைத்தீவட்டி*** (பிங்.) பார்க்க; see *kai-t-tīvaṭṭi* 2. கைவிளக்கு; small, hand-lamp. *கைவிளக்கை வைத்துக்கொண்டு கிணற்றில் விழுவார்களா? (பழ.).*

**க.** கெய்தீவிகெ.

*[கை + தீபம்.]*

**கைத்தீவட்டி** *kai-t-tīvaṭṭi,* பெ.(n.) சிறு தீவட்டி; small torch.

*[கை + தீவட்டி.]*

**கைத்தீவர்த்தி** *kai-t-tīvartti,* பெ.(n.) கைத்தீவட்டி (வின்.) பார்க்க; see *kai-t-tīvaṭṭi.*

*[கை + தீவர்த்தி.]*

**கைத்தீற்றி** *kai-t-tīṟṟi,* பெ.(n.) கையால் ஊட்டும் தீனி; food given to calves, lambs, kids, etc. by hand, food for infants.

**மறுவ.** கைத்தீனி.

**ம.** கைத்தீற்றி.

*[கை + தீற்றி.]*

**கைத்தீன்** *kai-t-tīṉ,* பெ.(n.) கையில் வைத்து ஊட்டும் உணவு (வின்.); food given to calves, lambs, kids, etc., by hand, food for infants.

**ம.** கைத்தீற்றி.

*[கை + தீன்.]*

**கைத்து**[1] *kaittu,* பெ.(n.) செல்வம்; lit., that which is in hand, gold, riches, wealth. *"கைத்துண்டாம்போழ்தே கரவா தறஞ்செய்மின்" (நாலடி.19).*

*[கையகத்தது → கைத்து.]*

**கைத்து**[2] *kaittu,* பெ.(n.) வெறுப்பு (சூடா.); abhorrence.

*[கை (தவறு) கசப்பு → கைத்து.]*

**கைத்துடுக்கு** *kai-t-tuḍukku,* பெ.(n.) கையால் அடித்தல் போன்று செய்யுந் தீய பழக்கம்; bad habit of the hand, as fighting, pilfering etc. கைத்துடுக்கால் சீரழிபவர்கள் மிகுதி (உ.வ.).

**க.** கெய்துடுகு.

*[கை + துடுக்கு.]*

**கைத்துடுப்பு** *kai-t-tuḍuppu,* பெ.(n.) 1. கூழ்முதலியன துழாவுங் கருவி ; small ladle used in stirring liquid food. *"கைத்துடுப்பால் .......... துழாவித் துழாவிக் கொள்ளீரே" (கலிங்.537).* 2. படகு வலிக்குஞ் சிறிய தண்டு; small oar.

*[கை + துடுப்பு.]*

**கைத்துண்டு** *kai-t-tuṇḍu,* பெ.(n.) 1. கைக்குட்டை; hand kerchief. 2. கைமரம்; pair of rafters framed together with a joint at one end.

**ம.** கைத்துகில்.

*[கை + துண்டு.]*

**கைத்துணிகரம்** *kai-t-tuṇigaram,* பெ.(n.) ***கைத்துணிச்சல்*** பார்க்க; see *kai-t-tuṇiccal.*

*[கை + துணிகரம்.]*

**கைத்துணிச்சல்** *kai-t-tuṇccal,* பெ.(n.) துணிந்த செய்கை (இ.வ.); act of daring.

*[கை + துணிச்சல்.]*

**கைத்துணை**[1] *kai-t-tuṇai,* பெ.(n.) உதவியாள்; a help-mate.

**க.** கெய்குடக.

*[கை + துணை.]*

**கைத்துணை**[2] *kai-t-tuṇai,* பெ.(n.) உதவி, துணைமை; help, assistance.

க. கெய்தநரவு.

*[கை + துணை.]*

**கைத்துப்பாக்கி** *kai-t-tuppākki,* பெ.(n.) ***கைத்துமுக்கி*** பார்க்க; see *kai-t-tumukki.*

மறுவ. கைத்துமிக்கி.

ம. கைத்தோக்கு.

*[கை + துப்பாக்கி.]*

**கைத்துப்போ-தல்** *kaittu-p-pō-,* 8 செ.கு.வி.(v.i.) களிம்பேறல்; forming verdigris (சா.அக.).

*[கைத்து + போ-.]*

**கைத்துமுக்கி** *kai-t-tumukki,* பெ.(n.) 1. கைத்துவக்கு, கைத்துப் பாக்கி; hand pistal.

*[கை + துமுக்கி.]*

**கைத்துருவுமணை** *kai-t-turuvu-manai,* பெ.(n.) சிறு துருவுமணை; nut scraper.

*[கை + துருவு + மணை.]*

**கைத்துவக்கு**[1] *kai-t-tuvakku,* பெ.(n.) ***கைத்துமுக்கி*** (துப்பாக்கி) பார்க்க; see *kai-t-tumukki.*

*[கை + துவக்கு.]*

**கைத்துவக்கு**[2] *kai-t-tuvakku,* பெ.(n.) சிறு தொடரி (சங்கிலி); a small chain.

*[கை + துவக்கு.]*

**கைத்தூக்கு**[2] *kai-t-tūkku,* பெ.(n.) கையினால் எடுக்கக் கூடிய ஒரு தூக்களவு; so much weight as can be lifted by hand.

*[கை + தூக்கு. தூக்கு - 16 சேர் கொண்ட எடையளவு.]*

**கைத்தூண்**[1] *kai-t-tūṇ,* பெ.(n.) சிறுதூண்; small pillar.

*[கை + தூண்.]*

**கைத்தூண்**[2] *kaittūṇ,* பெ.(n.) பிறர் கையால் உண்கை; accepting food from another's hands. *"கடவ தன்றுநின் கைத்தூண் வாழ்க்கை" (சிலப். 15:57).*

*[கைத்து + ஊண்.]*

**கைத்தூய்மை** *kai-t-tūimai,* பெ.(n.) 1. களவு செய்யாமை; not to cover other's property. 2. கையூட்டுப் பெறாமை; non-taking of bribes. 3. திருத்தமான கைத்தொழில்; fine workmanship.

*[கை + தூய்மை.]*

**கைத்தேக்கு** *kai-t-tēkku,* பெ.(n.) சிறுதேக்கு; fire-creeper (சா.அக.).

*[கை + தேக்கு.]*

**கைத்தேங்காய்** *kai-t-tēṅgāy,* பெ.(n.) புத்தாண்டு நாளன்று தேங்காயை உருட்டியாடும் விளையாட்டு வகை (வின்.); a new year's game in which coconuts are rolled forcibly one against another and broken.

*[கை + தேங்காய்.]*

**கைத்தொண்டு** *kai-t-toṇḍu,* பெ.(n.) 1. கையினாற் செய்யும் கோயிற் பணிவிடை; manual service in temple. *"காசுவாசியுடன் பெற்றார் கைத்தொண்டாகு மடிமையினால்" (பெரியபு. திருநாவுக். 260).* 2. குற்றேவல்; menial service.

மறுவ. கைப்பணி.

*[கை + தொண்டு.]*

**கைத்தொழில்** *kai-t-toḻil,* பெ.(n.) 1. கையாற் செய்யும் வேலை; manual art, industries, handicrafts. *"கைத்தொழி லமைத்தபின்" (பெருங். இலாவாண. 10:91).* 2. பெண்களது கைத்திறனை வெளிக் காட்டும் ஐவகைத் தொழில்; the five skilled accomplishments of women. *இலை எழுதுதல், கிள்ளல், பூத்தொடுத்தல், யாழ் மீட்டுதல் போன்றவை பெண்கள் கைத்திறன் காட்டும் ஐவகைத் தொழில்கள் எனப் பண்டைக் காலத்தில் கருதப்பட்டது*

ம. கைத்தொழில்.

*[கை + தொழில்.]*

**கைத்தொழும்பு** *kai-t-toḻumbu,* பெ.(n.) கைத் தொண்டு (யாழ்.அக.); manual service.

*[கை + தொழும்பு.]*

**கைத்தோணி** *kai-t-tōṇi,* பெ.(n.) கையினால் இயக்கும் ஒருவகை மரக்கலம்; a kind of wooden boat which is propelled by hands.

*[கை + தோணி.]*

**கைதகம்** *kaidagam,* பெ.(n.) தாழம்பூ; fragrant screw-pine (சா.அக.).

*[கை → கைது → கைதகம்.]*

**கைதட்டிப்பண்டாரம்** *kai-taṭṭi-p-paṇḍāram,* பெ.(n.) வாய் திறவாது, கைதட்டி இரந்துண்ணும் சைவப் பண்டாரம் (இ.வ.); a Šaiva mendicant who wanders about mutely, clapping hands for alms.

*[கை + தட்டி + பண்டாரம்.]*

**கைதட்டிப்போடு–தல்** *kai-taṭṭi-p-pōḍu-,* 19 செ.குன்றாவி.(v.t.) நீக்கிவிடுதல் (வின்.); to forsake, give up.

*[கை + தட்டி + போடு–.]*

**கைதட்டிவை–த்தல்** *kai-taṭṭi-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) பூப்படையாப் பெண்ணைப் பூப்பெய்தியவளாகக் கொண்டு உரிய நிகழ்வுகள் செய்தல்; to perform the rites connected with puberty to any immature girl.

*[கைதட்டி + வை–.]*

**கைதட்டு[1]–தல்** *kai-taṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. வியப்பு, வெறுப்பு, நகைப்பு முதலியவற்றின் குறியாகக் கைகொட்டுதல்; to clap or strike hands together in token of defiance, triumph, derision, admiration etc. *"கைதட்டி வெண்ணகை செய்வர் கண்டாய்" (அருட்பா.II, புறமொழிக்.10).* 2. புலையரும் வீட்டுவிலக்கான பெண்களும் ஒதுங்கிச் செல்வதற்காகக் கையைத் தட்டுதல்; to warn off, as an outcaste pulayas, a woman in menstruation etc. 3. ***கையடி*** பார்க்க; see *kai-y-aḍi-.* 4. ***கைதப்பு–தல் (வின்.)*** பார்க்க; see *kai-tappu-.*

க.கெய்தட்டு; பட. கைதட்டு.

*[கை + தட்டு–.]*

**கைதட்டு[2]–தல்** *kai-taṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) பூப்பு எய்துதல் (இ.வ.); to attain puberty, to be in menses, as signified by clapping of hands.

*[கை + தட்டு–.]*

**கைதட்டு[3]–தல்** *kai-taṭṭu-,* பெ.(n.) கைகொட்டுதல்; clapping the hands.

க. கெய்சப்பளி; பட. கைசப்படெ.

*[கை + தட்டு–.]*

**கைதப்பு–தல்** *kai-tappu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கையினின்று தவறிப்போதல்; to slip from the hand, as a thing, to escape or get out of control, as a person or animal. *"கானவர் வலையிற் பட்டுக் கைதப்பி யோடும்" (கைவல்.தத்து.13).* 2. இலக்குத் தவறுதல்; to miss the mark.

க. கெய்தப்பு; பட. கைதப்பு.

*[கை + தப்பு–.]*

**கைதரு–தல்** *kai-taru-,* 2 செ.கு.வி.(v.i.) 1. இடங்கொடுத்தல்; to give a hold. 2. உதவுதல்; to help. 3. கைகூடுதல்; to materialize.

*[கை + தரு–.]*

**கைதல்** *kaidal,* பெ.(n.) தாழை; fragrant screw-pine. *"கைதல் சூழ்கழிக் கானல்" (தேவா.532:2).*

ம.கைத; க.கேதகெ, கேதிகை; தெ., கே. தகி; து.கேதை, கேதயி, கேதாயி.

Skt. ketaka.

*[கை → கைதல்.]*

**கைதலைவை–த்தல்** *kai-talai-vai-,* 4 செ.கு.வி.(v.i.) பெருந்துயரடைதல் (கையைத்தலைமீதுவைத்தல்); lit., to place the hand on the head; to mourn, lament, grieve. *"கறைகெழு குடிகள் கைதலை வைப்ப" (சிலப்.4:9).*

*[கை + தலை + வை–.]*

**கைதவம்[1]** *kai-davam,* பெ.(n.) 1. ஏய்ப்பு, வஞ்சம்; cunning, craftiness. *"மைதவழ் கண்ணி கைதவந் திருப்பா" (பெருங்.மகத.15:18).* 2. பொய்; falsehood. *"கைதவம் புகலேன்" (கந்தபு. வரவுகேள்.4).* 3. துன்பம்; affliction, suffering. *"கைதவமே செய்யு மதுவின்களி" (பிரமோத். சிவராத்திரி.17).*

ம. கைதவம்.

*[கை → கைத்து → கைத்துவம் → கைதவம்.]*

**கைதவம்[2]** *kai-davam,* பெ.(n.) மிகுபுகழ்; great eulogy, praise, panegyric.

*[கை + தவம். கைமேல் பயன் கண்ட தவமுயற்சி, புகழ்.]*

**கைதவறு–தல்** *kai-tavaṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1 ***கைதப்பு–.*** பார்க்க; see *kai-tappu.* 2. கைப்பிழையாதல்; to err or commit a mistake by a slip of the hand. 3. தொலைந்து போதல்; to be lost. என் புத்தகம் கைதவறிவிட்டது (உ.வ.). 4. இறத்தல்; to die. குழந்தை கைதவறிவிட்டது.

*[கை + தவறு–.]*

**கைதவன்[1]** *kaidavaṉ,* பெ.(n.) 1. பாண்டியன்; Pāṇḍya king. *"கைதவனுஞ் சொன்னான்" (பெரியபு. திருஞான.749).* 2. பாண்டியனின் பட்டப் பெயர்களிலொன்று; one of the title of Pāṇḍia kings.

**மறுவ.** பாண்டியன், செழியன், கூடற்கோமான், தென்னவன், வேம்பின்றாரோன், வழுதி, குமரிச்சேர்ப்பன், வைகைத்துறைவன், மாறன், பொதியவெற்பன், மீனவன்.

*[கைதவம் → கைதவன் (மிகுபுகழ் உடையவன்.]*

**கைதவன்[2]** *kaidavaṉ,* பெ.(n.) ஏய்ப்பவன், வஞ்சகன்; deceitful, cunning person. *"கைதவனாமிக் கானவனேயோ" (திருவிளை.பழியஞ்.28).*

*[கைதவம் → கைதவன்.]*

**கைதவன்**[3] *kaidavaṉ,* பெ.(n.) திருமாலாற் கொல்லப்பட்ட ஓர் அசுரன்; an Aśura slain by Viṣṇu. *"மதுகைடவரும் வயிறுருக மாண்டார்" (திவ்.இயற். 3:66).*

*[கை - கைதவன்.]*

**கைதவை** *kaidavai,* பெ.(n.) கொற்றவை (துர்க்கை) (யாழ்.அக.); Durga.

*[கொற்றவை → கொதவை → கைதவை.]*

**கைதழுவு-தல்** *kai-taḻuvu-,* 5 செ.கு.வி.(v.i.) கைகோத்தல்; to clasp hand in hand. *"தொடர்ந்து கைதழீஇ நடந்து" (பெருங்.உஞ்சைக்.41:110).*

*[கை + தழுவு-.]*

**கைதளர்-தல்** *kai-taḷar-,* 2 செ.கு.வி.(v.i.) 1. கையின் வலிமை அல்லது ஆற்றல் இழத்தல்; to lose the use or power of one's hand. 2. தோற்றுப் போதல்; to be defeated. 3. வறுமை; to be in reduced circumstances.

க. கெய்கெடு.

*[கை + தளர்-.]*

**கைதா-தல் (கைதருதல்)** *kai-tā-,* 18 செ.கு.வி.(v.i.) 1. வறுமை, இடுக்கண் முதலியவற்றில் உதவி புரிதல்; to render help, save, rescue, as from poverty, danger, etc. *"காவலனார் பெருங்கருணை கைதந்தபடி யென்று" (பெரியபு.திருஞான.1118).* 2. உறுதி கொடுத்தல்; to give assurance. *"எய்தவல்லையேற்கு கைதருக" (பாரத. குருகுல. 44).* 3. மணம்புரிதல்; to marry. *"கோதையா லுறவுகொண்டுகைதரல்குறித்த கோமகன்" (பாரத.குருகுல.131).* 4. மிகுதல்; to increase. *"உவகை கைதர" (கம்பரா.மீட்சி.268).*

*[கை + தா-.]*

**கைதாங்கி** *kai-tāṅgi,* பெ.(n.) கைப்பிடி (யாழ்.அக.); handle.

*[கை + தாங்கி.]*

**கைதாங்கியடி-த்தல்** *kai-tāṅgi-y-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. மெதுவாயடித்தல் (இ.வ.); to beat or strike gently. 2. ஓங்கி வலுவாயடித்தல்; to strike forcibly.

*[கை + தாங்கி + அடி-.]*

**கைதாங்கியுழு-தல்** *kai-tāṅgi-uḻu-,* 5 செ.கு.வி.(v.i.) மேலாக உழுதல் (வின்.); to plough lightly.

*[கை + தாங்கி + உழு-.]*

**கைதாங்கு-தல்** *kai-tāṅgu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கைதாங்கல் கொடுத்தல்; to support one by the arm. 2. அழிவெய்தாமற் காத்தல்; to save from ruin.

*[கை + தாங்கு-.]*

**கைதாரம்** *kai-tāram,* பெ.(n.) செந்நெல்; red paddy (சா.அக.).

தாரம் = அரும்பண்டம்.

*[கை + தாரம்.]*

பொதுவான நெல்வகையினின்று வேறுபட்டிருப்பதாலும் எங்கும் எளிதில் கிடைக்காததாலும் இப் பெயர் பெற்றிருக்கலாம்.

**கைதாரிகம்** *kai-tārigam,* பெ.(n.) வயல்வெளி; paddy field.

*[கை + தாருகம். கைதாருகம் → கைதாரிகம்.]*

**கைதாழ்-தல்** *kai-tāḻ-,* 2 செ.கு.வி.(v.i.) செல்வநிலை குன்றுதல் (இ.வ.); to reduced in circumstances.

*[கை + தாழ்.]*

**கைதிகம்** *kaidigam,* பெ.(n.) 1. மலை எலுமிச்சை; hill lime. 2. கசப்பு நாரத்தை; bitter mountain lime.

*[கை = கசப்பு. கை → கைதிகம்.]*

**கைதிகா** *kaidi-gā,* பெ.(n.) புட்டரிசி; a kind of Rangoon rice (சா.அக.).

*[கை (கசப்பு) → கைதிகா.]*

**கைதிட்டம்** *kai-tiṭṭam,* பெ.(n.) 1. செம்மையாக அழகுபடுத்துகை; exquisite adornment. *"கைதிட்டமாக வருபவளே" (தனிப்பா.2, 163:404).* 2. ***கைத்திட்டம்*** பார்க்க; see *kai-t-tiṭṭam.*

*[கை + திட்டம்.]*

**கைதிருந்து-தல்** *kai-tirundu-,* 5 செ.கு.வி.(v.i.) கையெழுத்து நேர்த்தியாதல்; to be trained, as the hand in writing.

*[கை + திருந்து-.]*

**கைதீண்டு-தல்** *kai-tīṇḍu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. அடித்தல்; to beat. 2. முறைகேடாகப் பெண்டிரை அணுகுதல்; to commit indecent assault on a woman.

*[கை + தீண்டு-.]*

**கைதுடை-த்தல்** *kai-tuḍai-,* 4 செ.குன்றாவி.(v.t) விட்டொழிதல்; to give up for good; to forsake, abandon. *"எமைக் கைதுடைத் தேகவும்" (கம்பரா. நகர்நீ.159).*

*[கை + துடை-.]

**கைதூக்கல்** *kai-t-tūkkal,* பெ.(n.) 1. உதவுகை; help, 2. ஒப்புகை; acceptance.

*[கை + தூக்கல்.]*

**கைதூக்கிவிடு-தல்** *kai-tūkki-viḍu-,* 5 செ.கு.வி. (v.t.) 1. ***கைதூக்கு-தல்*** பார்க்க; see *kai-tūkku-.* 2. கூட்டத்தின் நடுவில் கையைப் பிடித்து வெளியே இழுத்துவிடுதல் (கொ.வ.); to drag out one by the hand from an assembly or crowd.

*[கை + தூக்கிவிடு-.]*

**கைதூக்கு[1]-தல்** *kai-t-tūkku-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கையை உயர்த்துதல்; to raise the hand. 2. இசைவு தெரிவித்தல்; to record agreement or approval.

ம. கைபொக்கு.

*[கை + தூக்கு-.]*

**கைதூக்கு[2]-தல்** *kai-tūkku-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. வறுமையில் வருந்துவோர், நீரில் அழுந்துவோர் முதலியோரைக் காத்தல்; to lend a helping hand, to save from ruin; to rescue from sinking. 2. ஏற்றுக்கொள்ளுதற் குறியாகக் கையை உயர்த்துதல்; to hold up the hand to record agreement or approval. 3. விடுதலையாக்கல்; to get released, freed. 4. காப்பாற்றுதல்; to save.

ம. கைபொக்குக.

*[கை + தூக்கு-.]*

**கைதூவாமை[1]** *kai-tūvāmai,* பெ.(n.) 1. கையொழியாமை (திவா.); incessant, unceasing work. 2. ஒழியா வொழுக்கம்; moral conduct of departing from a right course.

மறுவ. கையொழியாமை.

*[கை + தூவு + ஆ + மை. 'ஆ' எ.ம.இ.நி.]*

**கைதூவாமை[2]** *kai-tūvāmai,* பெ.(n.) படைக் கலன்களுள் ஒன்று, கைவிடாப்படை (அக.நி.); a kind of weapon.

*[கை + தூவாமை.]*

**கைதூவு[1]-தல்** *kai-tūvu-,* 5 செ.கு.வி.(v.i.) கையொழிதல்; to have rest or leisure, as from one's activities. *"புலவற் களியொடு..... கை தூவலை" (கலித்.50).*

*[கை + தூவு-.]*

**கைதூவு[2]** *kai-tūvu,* பெ.(n.) செயலற்றிருக்கை; rest or leisure from work. *"நனிவிருந் தயருங் கைதூ வின்மையின்" (நற்.280).*

*[கை + தூவு-.]*

**கைதேர்-தல்** *kai-tēr-,* 2 செ.குன்றாவி.(v.t.) திறமை யடைதல்; to become an adept.

*[கை + தேர்-.]*

**கைதேர்ந்தவன்** *kai-tērndavaṉ-,* பெ.(n.) திறமையாளன்; adept, expert.

*[கை + தேர்ந்தவன்.]*

**கைதை[1]** *kaidai,* பெ.(n.) தாழை; fragrant screw-pine. *"கைதையம் படப்பை" (அகநா.100:18).*

ம. கைதா.

*[கள் : முள். கள் → கய் → கை (கைது) கைதை : முள்ளுள்ள தாழை (வட.வர.131) கைதை > Skt. kaitaka.]*

**கைதை[2]** *kaidai,* பெ.(n.) எட்டி; nux vomicca.

*[கை → கைத்து → கைதை.]*

**கைதை[3]** *kaidai,* பெ.(n.) வயல் (பிங்.); paddy field.

Skt. kēdāra.

*[செய் → கை → கைதை (கொ.வ.).]*

**கைதைச்சுரிகையன்** *kaidai-c-curigaiyaṉ,* பெ.(n.) தாழையை வாளாக உடைய காமன் (பிங்.); lit., one having screw-pine for his weapon: Kama, the god of love.

மறுவ. காமன்.

*[கைதை + சூரி → சுரி + கையன் – கைதைசுரி கையன். (கொ.வ.).]*

தாழையை வாளாக உடையவனாதலால் இப் பெயர் பெற்றிருக்கலாம்.

**கைதொடல்[1]** *kai-toḍal,* பெ.(n.) 1. உண்கை (பிங்.); taking food, eating. 2. உணவு; food as taken by the hand. *"கைதொடல்கண்படை வெய்துறுபெரும்பயம்" (ஞானா.35).* 3. சிறிதுண்ணல்; eating a small quantity.

*[கை + தொடல்.]*

**கைதொடல்[2]** *kai-toḍal,* பெ.(n.) திருமணம் (யாழ்.அக.); marriage.

*[கை + தொடல்.]*

**கைதொடன்** *kai-toḍaṉ,* பெ.(n.) 1. உதவிசெய்வோன்; one who helps or serves. *"தூசித்தலையிலவர்களே கைதொடராய்" (ஈடு.4,4:1).* 2. அறிவாற்றலுடன் செயலைச் செய்வோன்; one who does an act intelli-

gently. "ஜநநிபக்கல் அபராதத்திற் கை தொடனாயிருக்க" (ஈடு.6,10:10).

[கை + தொடு + அன்.]

**கைதொடு[1]–தல்** *kai-todu-*, 20 செ.குன்றாவி.(v.t.) 1. கையினால்மெய்தீண்டுதல்; to touch with the hand. "சக்கரவர்த்தித் திருமகன் இத்தைக் கை தொட்டுச் சிட்சித்து" (ஈடு.4,2:8). 2. சூளுரைத்தல்; to lift one's hand, in oath to swear. 3. உண்ணுதல் (பிங்.); to eat. 4. தொடங்குதல்; to commence, begin, enter upon. அவன் கை தொட்ட நிகழ்வு (காரியம்) நல்லதே (உ.வ.). 5. மணஞ் செய்தல் (வின்.); to marry.

[கை + தொடு–.]

**கைதொடு[2]–த்தல்** *kai-todu-*, 17 செ.குன்றாவி.(v.t.) 1. திருமணஞ் செய்துவைத்தல் (வின்.); to marry, join hands in marriage.

[கை + தொடு–.]

**கைதொடுமானம்** *kai-todu-mānam*, பெ.(n.) உதவி; help, support. "தன் வெறுமையைக் கை தொடுமானமாகக் கொண்டு" (ஈடு.6,10:8).

[கை + தொடு – மானம்.]

**கைதொழு–தல்** *kai-tolu-*, 1 செ.குன்றாவி.(v.t.) 1. வணங்குதல்; to adore, worship as with hands joined. "காதலி தன்னொடு கைதொழு தெடுத்து" (மணிமே.13:20). 2. கும்பிடுவதற்காகக் கையைத் தலைமேல் உயர்த்துதல்; to lift up the hands above the head, as in adoration or worship. "கைதொழூஉப் பரவி" (திருமுருகு.252).

[கை + தொழு–.]

**கைதோணி** *kai-tōṇi*, பெ.(n.) ஒருவகைப் பூடு; a kind of an unknown herb (சா.அக.).

[கை + தோணி.]

நீர்வளமுள்ள இடங்களில் வளரும் பூண்டானதால் இப் பெயர் பெற்றிருக்கலாம்.

**கைதோய்வு** *kai-tōyvu*, பெ.(n.) கையால் எட்டிப்பிடிக்கக் கூடிய நிலை; being within hand's reach. "கைதோய் வன்ன கார்மழைத் தொழுதி" (மலைபடு.362).

[கை + தோய்வு.]

**கைந்தலை** *kaintalai*, பெ.(n.) 1. கைம்பெண், கணவனை இழந்தவள்; widow. "கைந்தலைவிரைந்து நோக்குந் தக்கபே ரன்பையும்" (திருவாலவா.41:28).

[கைம்(மை) + தலை.]

**கைந்நட்டம்** *kai-n-nattam*, பெ.(n.) **கையிழப்பு** பார்க்க; see *kai-y-ilappu*.

[கை + நட்டம்.]

**கைந்நலம்** *kai-n-nalam*, பெ.(n.) கன்றிறந்தபின் பால் கொடுக்கும் மாடு; cow that milks after having lost its calf.

[கை + நலம்.]

**கைந்நவில்** *kai-n-navil*, பெ.(n.) கைத்தொழில்; handicrafts.

[கை + நவில்.]

**கைந்நவிலாளர்** *kai-n-navilāḷar*, பெ.(n.) கை வினைஞர், கையால் தொழில் செய்யப் பழகியவர்; handicrafts men. "கைந்நவி லாளர் காடெறிந்து" (பெருங். உஞ்சைக். 46:66).

[கை + நவிலாளர்.]

**கைந்நறுக்கு** *kai-n-narukku*, பெ.(n.) கையுறுதி; firmness, stability.

[கை + நறுக்கு.]

**கைந்நன்றி** *kai-n-nanri*, பெ.(n.) செய்நன்றி; gratitude, benefits done.

[கை + நன்றி.]

**கைந்நாகம்** *kai-n-nāgam*, பெ.(n.) யானை; elephant, as having a trunk. "கைந்நாகம்..... கடல்வந்த தோர்காட்சி" (கம்பரா.கடறாவு.40).

[கை + நாகம்.]

**கைந்நாடிபார்–த்தல்** *kai-n-nādi-pār-*, 4 செ.குன்றாவி.(v.t.) நாடியோட்டம் பார்த்தல்; to observe the blood circulation in hand by feeling the pulse.

[கைந்நாடி + பார்–.]

**கைந்நிதானம்** *kai-n-nidānam*, பெ.(n.) கையில் நிறை முதலியவற்றை மதிப்பிடுகை (உ.வ.); estimation of weight, etc. by the hand.

ம. கைநிதானம்.

[கை + நிதானம்.]

**கைந்நிலை[1]** *kai-n-nilai*, பெ.(n.) பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுளொன்றும், அகப்பொருள் பற்றியதும், புல்லங்காடர் என்ற புலவரியற்றியதுமான நூல்; an ancient love poem by, *Pullaṅkāḍar*, one of *Padiṉeṉkīḻkkaṇakku*. "நாலடி நான்மணி.......... கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு" (தனிப்பா.).

[கை + நிலை.]

**கைந்நிலை**[2] *kai-n-nilai,* பெ.(n.) பாசறை (தக்கயாகப்ப.274); military camp.

**ம.** கைநில.

[கை + நிலை.]

**கைந்நிறுத்து-தல்** *kai-n-niṟuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. நிலைநிறுத்துதல்; to establish. *"காப்புக்கைந் நிறுத்த வல்வேற் கோசர்" (அகநா.113).* 2. அடக்குதல்; to subdue, conquer. *"காமங்கைந்நிறுக் கல்லாது" (அகநா.198).*

[கை + நிறுத்து-.]

**கைந்நிறை** *kai-n-niṟai,* பெ.(n.) சீராக அடுக்குதல்; to be nicely arranged.

**க.** கெய்நிறெ.

[கை + நிறை.]

**கைந்நீட்டு**[1] *kai-n-nīṭṭu,* பெ.(n.) கைப்பிடி; handle, haft. *தமது கிடுகைக் காம்புடனே கைந்நீட்டுச் செறிக்கவும் (புறநா.98,உரை).*

**ம.** கைநாட.

[கை + நீட்டு.]

**கைந்நீட்டு**[2]**-தல்** *kai-n-nīṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கையை நீட்டுதல்; to stretch out the hand. 2. இரத்தல்; to beg, pray for gift or charity. 3. திருடுதல்; to steal, pilfer. 4. கையூட்டு வாங்குதல்; to accept bribe.

**ம.** கைநீட்டுக; **க.** கெய்நீடு.

[கை + நீட்டு-.]

**கைந்நீட்டு**[3] *kai-n-nīṭṭu,* பெ.(n.) கைப்பிடி; handle, haft. *தமது கிடுகைக் காம்புடனே கைந்நீட்டுச் செறிக்கவும் (புறநா.98,உரை).*

**ம.** கைநாட.

[கை + நீட்டு.]

**கைந்நீவு-தல்** *kai-n-nīvu-,* 5 செ.குன்றாவி.(v.t.) அவமதித்துக் கடத்தல்; to defy, disregard. *"மதமாக் கொடுந்தோட்டி கைந்நீவி" (பரிபா.10:49).*

[கை + நீவு.]

**கைந்நூல்**[1] *kai-n-nūl,* பெ.(n.) கையிற் கட்டும் காப்பு நாண்; ceremonial thread worn on the wrist. *"கைந்நூல் யாவாம்" (குறுந்.218).*

[கை + நூல்.]

பண்டைத் தமிழரின் கைந்நூல் கட்டும் வழக்கம் வடபுலத்தில் ரக்ஷா பந்தன் என மருவி வழங்கலாயிற்று.

**கைந்நூல்**[2] *kai-n-nūl,* பெ.(n.) கையால் நூற்ற நூல் (கதர்நூல்); hand spun thread. காந்தியடிகள் எப்பொழுதும் கைந்நூலாடையே அணிவார் (உ.வ.).

[கை + நூல்.]

**கைந்நெகிழ்-தல்** *kai-n-negiḻ-,* 2 செ.கு.வி.(v.i.) கையிலிருந்து நழுவி விழுதல்; to slip down from the hand.

[கை + நெகிழ்-.]

**கைந்நொடி**[1] *kai-n-noḍi,* பெ.(n.) 1. ஒலியுண்டாக்க இருவிரல்களை அழுத்தி எடுத்தல்; a snap with the fingers. 2. கையை நொடிக்கும் நேரம்; a unit of time marked by a snap of the finger. *மாந்தருடை கண்ணிமையுங் கைந்நொடியும் (நன்.99,மயிலை.).*

**க.** கெய்சிடுகு.

[கை + நொடி.]

**கைந்நொடி**[2]**-த்தல்** *kai-n-nŏḍi,* 4 செ.குன்றாவி.(v.t.) விரலை நொடித்தல்; to snap the finger.

**ம.** கைநொடிக்குக, கைஞொடிக்குக; **க.** கெய்நொடு.

[கை + நொடி-.]

**கைநட்டம்** *kai-naṭṭam,* பெ.(n.) ***கையிழப்பு*** பார்க்க; see *kai-y-iḻappu.*

**ம.** கைநஷ்டம்.

***Skt.*** *nasta > த. நட்டம்.*

**கைநடுக்கம்** *kai-naḍukkam,* பெ.(n.) மூப்பு, அச்சம் முதலியவற்றால் கைநடுங்குகை; tremulousness of the hand through age, nervousness, etc. (செ.அக.).

[கை + நடுக்கம்.]

**கைநம்பிக்கை** *kai-nambikkai,* பெ.(n.) 1. கையடித்து உறுதிமொழி கூறுகை; giving or striking the hand in token of a promise or assurance. 2. கைக்கடன்; temporary oral loan. கை நம்பிக்கை யாகக் கொடு (செ.அக.).

**து.** கைநம்பிகெ.

[கை + நம்பிக்கை.]

**கைநலப்பால்** *kai-nala-p-pāl,* பெ.(n.) கன்றின் உதவியின்றிக் கையாற்கறக்கும்பால் (யாழ்.அக.); milk drawn by the hand without the help of the calf.

[கை + நலம் + பால்.]

**கைநலம்**[1] *kai-nalam,* பெ.(n.) வாய்ப்பான உள்ளங்கைக் கோடு (அஸ்தரேகை) அமைந்தவர் மருத்துவத் தொழிலில் கைதொட்டவுடன் குணமாகும் தன்மை; (In palmistry) the curing or healing power of diseases due to peculiar line or curing marks in the palm of one's hand, lucky hand (சா.அக.).

*[கை + நலம்.]*

**கைநலம்**[2] *kai-nalam,* பெ.(n.) 1. கைராசி; auspiciousness of one's hand supposed to produce the desired end. 2. ***கைநலப்பால்*** (யாழ்.அக.) பார்க்க; see *kai-nala-p-pāl.*

*[கை + நலம்.]*

**கைநறுக்கு** *kai-narukku,* பெ.(n.) ***கைச்சீட்டு*** பார்க்க; see *kai-c-cittu.*

*[கை + நறுக்கு.]*

**கைநன்றி** *kai-nanri,* பெ.(n.) செய்ந்நன்றி (யாழ்.அக.); gratitude.

*[கை + நன்றி.]*

**கைநனை-த்தல்** *kai-nanai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. பிறர் வீட்டில் உணவு கொள்ளுதல்; to partake of food in another's house. 2. சாவு வீட்டில் உண்ணுதல்; to partake of food in a deseased person's house. *துக்க வீட்டில் கைநனைக்காமல் போகலாமா? (நெல்லை.).*

*[கை + நனை-.]*

உணவு கொள்வதற்கு முன்னும் உண்டபின்னும் நீரால் கையைக் கழுவும் பண்பாட்டுப் பழக்கத்தின் அடிப்படையில் கைநனைத்தல் உண்ணுதலைக் குறித்தது.

**கைநாட்டு**[1]**-தல்** *kai-nāttu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கையெழுத்திடுதல்; to affix or put one's signature, as in a bond. 2. தற்குறிக் கீறல்; an illiterate person making his mark in token of his signature.

*[கை + நாட்டு. நட்டு → நாட்டு. நாட்டுதல் = நிறுவுதல், நிலைநிறுத்தம் படைக்கல், எழுதுதல்.]*

**கைநாட்டு**[2] *kai-nāttu,* பெ.(n.) 1. கையெழுத்து; signature. *"கோவலனார் கைநாட்டைக் கொற்றவனுந் தான்பார்த்து" (கோவ.க.25).* 2. எழுத்தறிவு அற்றவன்; an illiterate person.

க. கெய்றுது.

மறுவ. கைக்கீறு.

*[கை + நாட்டு.]*

**கைநாட்டுப் பேர்வழி** *kai-nāttu-p-pērvali,* பெ.(n.) படிப்பறிவற்றவன்; ignorant. *இவன் ஒரு கைநாட்டுப் பேர்வழி. எதைப் பேசியும் பயனில்லை (உ.வ.).*

மறுவ. தற்குறி.

*[கைநாட்டு + பேர்வழி.]*

**கைநாடி** *kai-nādi,* பெ.(n.) 1. மணிக்கட்டில் துடிக்கும் குருதி நாடி; the pulse felt at the wrist. 2. கையில் ஓடும் நாடி; arteries of the arm (சா.அக.).

*[கை + நாடி. நாளி → நாடி.]*

**கைநிமிர்-தல்** *kai-nimir-,* 2 செ.கு.வி.(v.i.) அகவையாகி (வயதாகி) வளர்தல்; to grow up to adolescence. *கைநிமிர்ந்த பிள்ளை இருக்கும் போது உனக்கென்ன கவலை (நெல்லை).*

*[கை + நிமிர்-.]*

**கைநிமிர்த்தாதனம்** *kai-nimirttādanam,* பெ.(n.) இருக்கை (ஆசன) வகையுளொன்று (தத்துவப். 108, உரை); a yogic posture.

*[கை + நிமிர்த்து + ஆதனம்.]*

**கைநிரை** *kai-nirai,* பெ.(n.) ஓலைகளால் செய்த தடுப்புத்திரை, நிரைச்சல்; screen of plaited palm leaves. *"கைநிரைகட்டிக் கொண்டிருக்கிறநாளிலே" (ஈடு. 4,6:6).*

*[கை + நிரை. கை = ஒழுங்கு.]*

**கைநிலை** *kai-nilai,* பெ.(n.) வீரர்கள் தங்குதற்குப் பாசறையில் தனித்தனியே அமைக்கப்பட்ட குடிசை (பு.வெ.4:7, உரை); soldiers lines, military quarters in a camp.

*[கை + நிலை. கை = திறமை, திறமைமிக்க மறவர்.]*

**கைநிறக்கல்** *kai-nira-k-kal,* பெ.(n.) செம்பாறைக்கல்; gravel stone (சா.அக.).

*[கை + நிறம் + கல்.]*

**கைநிறம்** *kai-niram,* பெ.(n.) வெண்கலம்; bell-metal (சா.அக.).

*[கை + நிறம்.]*

**கைநிறை** *kai-nirai,* பெ.(n.) கையால் தூக்கி மதிக்கும் நிறை; estimation of the weight of a thing by lifting it in hand.

மறுவ. கைமதிப்பு.

*[கை + நிறை.]*

**கைநீட்டம்** *kai-nittam,* பெ.(n.) 1. கொடை (இ.வ.); presents, gift, donation. 2. அன்றன்று கடை திறந்தவுடன் முதன்முதலாக விற்கும் பண்டத்திற்கு வாங்கும்

முதற்பணம்; first cash payment received for the first article sold after opening the shop for the day.

ம. கைநீட்டம்.

[கை + நீட்டம்.]

**கைநீட்டல்** *kai-nīṭṭal,* பெ.(n.) அடித்தல்; striking. *கைநீட்டு²–தல்* பார்க்க; see kai-nīṭṭu-.

[கை + நீட்டல்.]

**கைநீட்டு¹–தல்** *kai-nīṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கையை நீட்டுதல்; to stretch out the hand. 2. இரத்தல்; to beg, pray for gift or charity. 3. திருடுதல்; to steal, pilfer. 4. கையூட்டு வாங்குதல்; to accept bribe.

ம. கைநீட்டுக; க. கெய்நீடு.

[கை + நீட்டு–.]

**கைநீட்டு²–தல்** *kai-nīṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. அடிக்கக் கையோங்குதல்; to lift one's hand against another. 2. இழவு வினாவுதல் (விசாரித்தல்); to condole.

ம. கைநீட்டுக.

[கை + நீட்டு–.]

**கைநீளம்** *kai-nīḷam,* பெ.(n.) 1. தாராளம் (இ.வ.); liberality. 2. திருடுங்குணம் ; thievish tendency. 3. அடிக்குங் குணம் ; show of power, disposition to strike.

ம. கைநீளம்.

[கை + நீளம்.]

**கைநீளு–தல்** *kai-nīḷu-,* 16 செ.கு.வி.(v.i.) 1. கொடுத்தல்; to give. *"கைநீண்ட தயரதன்"* (கம்பரா.). 2. அடித்தல்; to beat. *இனிக் கண்டபடி கைநீளுதல் கூடாது.* 3. திருடுதல்; to steal. *எல்லா விடங்களிலும் கை நீண்டதால் அவனது பெயர் கெட்டுப் போனது (உ.வ.).*

[கை + நீளு. நீள் → நீளு.]

கையை நீட்டிச் செய்யும் வினைகளானதால் இப் பெயர்பெற்றதாம்.

**கைநுணுக்கம்** *kai-nuṇukkam,* பெ.(n.) 1. அழகான வேலைப்பாடு; fine workmanship. 2. இவறற்றனம் (கஞ்சத்தனம்); close-fistedness.

[கை + நுணுக்கம்.]

கையினால் நுணுகிச் செய்யும் வேலை.

**கைநெகிழ்–தல்** *kai-negiḻ-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. கைதவற விடுதல்; to let slip. *"மெள்ள மெள்ளக் கைநெகிழ விட்டாய்"* (தாயு.பராபர.334).

[கை + நெகிழ்–.]

**கைநெசவு** *kai-nešavu,* பெ.(n.) 1. சிறு நெசவுத்தறி; a small loom. 2. கையால் நெய்யும் தறி; a loom that is marked by hand.

க. கெய்மக்க.

[கை + நெசவு.]

**கைநெரி–த்தல்** *kai-neri-,* 4 செ.குன்றாவி.(v.t.) துக்கம் அச்சம் முதலியவற்றால் கையை நெரித்தல்; to wring one's hands in grief, fear, etc. *"மந்தி எழுந்தெழுந்து கைநெரிக்கும் ஈங்கோயே"* (ஈங்கோய்.).

[கை + நெரி–.]

**கைநெல்லி** *kai-nelli,* பெ.(n.) உள்ளே இருக்கும் நிறத்தையே புறத்திலும் காட்டும் நெல்லிக்கனி; *nelli* fruit which is transparent as a crystal for clarity. *"தோற்றர வடுக்குங் கைநெல்லி போலெனல்"* (மணிமே.29:83).

மறுவ. அங்கையுள் நெல்லி, உள்ளங்கை நெல்லிக்கனி, உள்ளகங்காண்நெல்லி.

[அங்கை → கை + நெல்லி.]

அகம் + காண் + நெல்லி - அகங்காண் நெல்லி - அங்கைநெல்லி - கைநெல்லி எனத் திரிந்தது. உள்ளே இருக்கும் நிறமே புறத்தும் காணப்படுதலால் அகங்காண் நெல்லி எனப் பெயர் பெற்றது. உள்ளங்கை நெல்லி என்பது பொருட் பொருத்தமற்றது.

**கைநொடி–த்தல்** *kai-noḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. பெருவிரல் நடுவிரல் இரண்டும் கொண்டு (கைவிரலால்) ஒலியுண்டாக்குதல்; to snap the fingers. 2. செல்வநிலைமை கெடுதல்; to be reduced in circumstances, to become poor, destitute. செட்டியார் கைநொடித்துப் போனார் (இ.வ.).

ம. கைநொடிக்குக, கைஞொடிக்குக.

[கை + நொடி–.]

**கைநொடுநொடு–த்தல்** *kai-noḍu-noḍu-,* 4 செ.கு.வி. (v.i.) கண்டவெல்லாவற்றையுங் கையால் தொடுதல் (யாழ்.அக.); to be restless of hand and touch everything near about.

[கை + நொடுநொடு–.]

**கைநோட்டம்** *kai-nōṭṭam,* பெ.(n.) 1. கையினாற் குறிப்புணர்த்தல்(சாடை)(இ.வ.); sign or gesture made by hand. 2. கைவேலைத்திறம்; manual skill. 3. கையால் அளவிடும் மதிப்பு; estimation by hand.

ம.கைநோட்டம்; து.கைநோட.

*[கை + நோட்டம்.]*

**கைப்பக்கம்** *kai-p-pakkam*, பெ.(n) கு.வி.எ. (adv.) அருகில் (இ.வ.); very close, near at hand. அவன் என் கைப்பக்கம் இருந்தான் (உ.வ.).

*[கை + பக்கம்.]*

**கைப்பகர்ப்பு** *kai-p-pagarppu*, பெ.(n.) இசைவின்றிப் பெற்றுக்கொண்ட படி (இ.வ.); unauthorised copy, as of a document filed in court.

*[கை + பகர்ப்பு.]*

**கைப்பகற்றல்** *kaippagarral*, பெ.(n.) மனக்கசப்பைப் போக்கல்; removing the bitterness from a substance (சா.அக.). அண்ணன் தம்பியிடம் கைப்பகற்றல் நண்பர்கள் கடமையாகும்.

*[கை → கைப்பு + அகற்றல்.]*

**கைப்பங்கொட்டை** *kaippan-kottai*, பெ.(n.) ஒருவகை மரம்; a variety of tree.

*[கை → கைப்பு + அம் + கொட்டை.]*

எட்டிக் கொட்டையைப் போன்று மும்மடங்கு நச்சுத்தன்மையுடையதும், வெண்ணிறப்பூக்களைக் கொண்டதும், மருத்துவத்திற்குப் பயன்படுவதுமான இம் மரம் பிலிப்பைன்சு நாட்டில் அதிகம் காணப்படுகிறது.

**கைப்பட்டை** *kai-p-pattai*, பெ.(n.) 1. தோட்பட்டை; shoulder blade. 2. கைமரம் தாங்கும் சட்டம் (இ.வ.); sleeper, joist to support a superstructure. 3. நீர்முகக்கும் சிறுபட்டை (வின்.); small *ōla* bucket.

*[கை + பட்டை.]*

**கைப்பட** *kai-p-pada*, கு.வி.எ.(adv.) சொந்தக் கையெழுத்தாக; in one's own hand writting. அதைத் தட்டச்சுக்குக் கொடுக்காமல், ஏன் கைப்பட எழுதிக் கொடுத்தாய்? (உ.வ.).

ம. கய்பட, கைப்பட.

*[கை + பட. படு → பட.]*

**கைப்படு¹-தல்** *kai-p-padu-*, 20 செ.கு.வி.(v.i.) கைவயமாதல்; to fall into one's hands. *"ஒள்வாட னொன்னார்கைப்பட்டக்கால்" (நாலடி.129).*

*[கை + படு-.]*

**கைப்படு²-தல்** *kai-p-padu-*, 17 செ.குன்றாவி. (v.t.); 1. தொடுதல்; to meet, 2. பார்த்தல்; find. *"புனைசெய் கோல் வளையைக் கைப்படுதி" (சீவக.1600).*

*[கை + படு-.]*

**கைப்படு³-த்தல்** *kai-p-padu-*, 18 செ.குன்றாவி. (v.t.) 1. கைப்பற்றுதல்; to seize, take hold of, acquire. *"கடல்சூழ் வையங் கைப்படுத்தான்" (சீவக. 1058).* 2. தெளிதல்; to find out, discover. *"நின் ......... மாயப் பரத்தைமை..... கைப்படுத்தேன்" (கலித்.98).*

*[கை + படு-.]*

**கைப்படை** *kai-p-padai*, பெ.(n.) 1. படைக்கலம், ஆயுதம்; weapons. *"வென்றிக் கைப்படை நவின்ற வெம்போர்" (சூளா.சீய.128).* 2. மணியாசுப் பலகை (இ.வ.); mason's smoothing plane.

*[கை + படை.]*

**கைப்பண்டம்** *kai-p-pandam*, பெ.(n.) கையிலுள்ள பொருள்; things in hand. கைப்பண்டம் கருணைக் கிழங்கு (உ.வ.).

*[கை + பண்டம்.]*

**கைப்பணம்¹** *kai-p-panam*, பெ.(n.) 1. கையிலுள்ள தொகை; cash in hand. 2. சொந்தப்பணம்; one's own money. கைப்பணம் போட்டு அந்தப் பொத்தகத்தை அச்சிட்டார். 3. வணிகத்தில் கடனின்றிக் கைமேற் கொடுக்கும் பணம் (யாழ்.அக.); cash-payment for purchase.

மறுவ. ரொக்கம்.

ம. கைப்பணம்; க. கெய்கண்டு.

*[கை + பணம்.]*

**கைப்பணம்²** *kai-p-panam*, பெ.(n.) முதலீடு (மூலதனம்); capital.

*[கை + பணம்.]*

**கைப்பணி** *kai-p-pani*, பெ.(n.) 1.கல்தச்சர் (சிற்பர்) கருவிகளுள் ஒன்று; a kind of instrument used by menial stone cutters. 2. கைத்தொண்டு; manual service in the temple of deity. 3. மணியாசுப்பலகை; polishing board used by the mason. 4. முடவன் தவழ்வதற்குக் கொள்ளும் கைப்பிடி; hand hold for lame persons who have to crawl.

ம.கைப்பணி

*[கை + பணி.]*

**கைப்பத்து** *kai-p-pattu*, பெ.(n.) விளக்கக் (விவர)குறிப்பு; statement, report, detailed account, particulars.

*[கை + பற்று - கைப்பற்று → கைப்பத்து.]*

**கைப்பதட்டம்** *kai-p-padattam*, பெ.(n.) **கைப்பதற்றம்** பார்க்க; see *kai-p-padarram*.

*[கை+பதற்றம்-கைப்பதற்றம்-கைப்பதட்டம்(கொ.வ.).]*

**கைப்பதம்** *kai-p-padam*, பெ.(n.) 1. அடுதலில், மருந்து தருதலில் தனித்திறம்; special skill in cooking or compounding medicine. அடுவதில் அவர் கைப்பதம் யார்க்கும் வராது (உ.வ.).

**தெ.** கயிபதமு.

*[கை + பதம்.]*

**கைப்பதர்** *kai-p-padar*, பெ.(n.) களவு, கொலை, கொள்ளை முதலிய பழிச்செயல்கள்; mean acts such as stealing, murder and robbery. 'வாய்ப்பதர் கைப்பதர் சிசுப்பதர் வாழாது' (இ.வ.).

*[கை (சிறுமை, இழிவு) + பதர்.]*

**கைப்பதற்றம்** *kai-p-padarram*, பெ.(n.) 1. பதற்றத்தில் கைபதறுகை; tremulousness of the hand as in haste. 2. திருடுங்குணம் (வின்.); thievishness (செ.அக.).

*[கை + பதற்றம் – கைப்பதற்றம்.]*

**கைப்பதிவு** *kai-p-padivu*, பெ.(n.) ***கையொப்பம்*** பார்க்க; see *kai-y-oppam*.

**ம.** கைப்பதிவு.

*[கை + பதிவு.]*

**கைப்பந்தம்** *kai-p-pandam*, பெ.(n.) கைத்தீவட்டி; flambeau, hand torch.

*[கை + பந்தம்.]*

**கைப்பந்து** *kai-p-pandu*, பெ.(n.) எறிந்து பிடிக்கும் பந்து விளையாட்டு; hand ball.

*[கை + பந்து.]*

**கைப்பயிர்** *kai-p-payir*, பெ.(n.) இளம்பயிர்; young crop.

*[கை + பயிர். கை - இளமை குறித்த முன்னொட்டு.]*

**கைப்பயில்** *kai-p-payil*, பெ.(n.) 1. கையால் குறிப்புணர்த்துகை (வின்.); beckoning with the hand, hand language, as of dumb persons. 2. கைவரைவு நூல்; palmistry.

*[கை + பயில்.]*

**கைப்பரிசு**[1] *kai-p-parišu*, பெ.(n) 1. சிறுதெப்பம்; small raft. *"கைப்பரிசு காரர்போ லறிவான வங்கமுங் கைவிட்டு" (தாயு.தேசோ.2).*

*[கை + பரிசு.]*

**கைப்பரிசு**[2] *kai-p-parišu*, பெ.(n.) கையூட்டு (இ.வ.); bribe.

*[கை + பரிசு.]*

நல்லெண்ணத்தில் சிறப்புச் செய்யக் கையில் கொடுக்கும் பொருளைக் குறித்து, பின்னர் தவறான எண்ணத்தில் கொடுப்பதையும் குறிக்க வழங்கியது.

**கைப்பரிட்சை** *kai-p-paritcai*, பெ.(n.) ***கைப்பழக்கம்***[1] பார்க்க; see *kai-p-palakkam* (சா.அக.).

*[கை + பரிட்சை.]*

**கைப்பழக்கம்**[1] *kai-p-palakkam*, பெ.(n.) நாடி பார்த்தல்; feeling the pulse.

*[கை + பழக்கம்.]*

**கைப்பழக்கம்**[2] *kai-p-palakkam*, பெ.(n.) பட்டறிவால் பெறும் திறம் ; manual skill acquired by practice. *"சித்திரமும் கைப்பழக்கம்" (தனிப்பா.1:91:5).*

**ம.** கைப்பழக்கம்.

*[கை + பழக்கம்.]*

**கைப்பள்ளம்** *kai-p-pallam*, பெ.(n.) உள்ளங்கைக் குழி; hollow of the hand.

**க.** கெய்கொப்பெ

*[கை + பள்ளம்.]*

**கைப்பற்றம்** *kai-p-parram*, பெ.(n) 1. கைப்பிடி; handle. 2. கைத்தாங்கல்; supporting a person or thing by the hands.

**மறுவ.** கைத்தாங்கல்.

*[கை + பற்றம்.]*

**கைப்பற்று**[1]**-தல்** *kai-p-parru-*, 5 செ.குன்றாவி.(v.t.) 1. திருமணம் செய்தல்; to marry. 2. கைவயத்தி லொடுக்குதல்; to restrain with hands. 3. வாங்குதல்; to purchase. 4. உரிமைப்படுத்திக் கொள்; to annex.

*[கை + பற்று-.]*

**கைப்பற்று**[2]**-தல்** *kai-p-parru-*, 5 செ.குன்றாவி.(v.t.) கையிற் கொள்ளுதல்; to apply the hand, or lay hold of, with vehimence or eagerness. *"கைப்பற்றிய விற்கொடு" (கந்தபு.காம.35).* 2. கவர்ந்து கொள்ளுதல்; to seize eagerly or by force.

**ம.** கைப்பற்றுக; **க.** கெய்துடுகு; **து.** கைபட்டு.

**Fin.** kaapala (to capture); **Est.** kaabata; **Hung.** kap; **Mong.** xabuci; **Q.** hapi

*[கை + பற்று-.]*

**கைப்பற்று**[3]**-தல்** *kaipparru-*, 15 செ.கு.வி.(v.i.) 1. கைதூக்குதல்; to uphold, to save from ruin.

*[கை + பற்று-.]*

**கைப்பற்று**[4] *kai-p-parru,* பெ.(n) ஆம்புடை (சாதனம்); means. *தான்தோன்றியான கைப்பற்றடியாக வந்தொன்றல்ல (ஈடு.9,4:9).*

*[கை + பற்று.]*

**கைப்பற்று**[5] *kai-p-parru.* பெ.(n.) 1. கைத்தாங்கல்; supporting a person by the arms. 2. கையிற் பெற்றுக்கொண்ட தொகை; money received on hand. 3. உரிமை நல்கை; land held rent free. *"இளமண்டியம் என்கிற கிராமத்தை அவர்களுக்குக் கைப்பற்றாக விடுவித்து" (குரு.பரம்.234).*

**ம.** கைப்பற்று.

*[கை + பற்று.]*

**கைப்பற்றுநிலம்** *kai-p-parru-nilam,* பெ.(n) நீண்ட காலம் ஆளுகையிலிருக்கும் நிலம்; land acquired by darkhast or by prescription.

*[கைப்பற்று + நிலம்.]*

**கைப்பற்றுப்பாத்தியம்** *kaipparru -p-pāttiyam,* பெ.(n.) கைப்பற்றுரிமை; right to land acquired by prescription.

**Skt.** pattiyam > *த. பாத்தியம்.*

*[கைப்பற்று + பாத்தியம்.]*

**கைப்பறை** *kai-p-parai,* பெ.(n.) சிறு பறை; a hand-drum.

**க.** கெய்பறெ.

*[கை + பறை.]*

**கைப்பறையன்** *kai-p-paraian,* பெ.(n.) சிறுபறையை அடிப்பவன்; a drummer who beats a small drum with his hand or stick.

**க.** கெய்பறெக.

*[கை + பறையன்.]*

**கைப்பாகம்** *kai-p-pāgam,* பெ.(n.) ***கைப்பதம்***பார்க்க; see *kai-p-padam.* பதமறிந்து மருந்து, சமையல் முதலியன பக்குவம் செய்யும் திறம் ; skill in cooking, skill in compounding medicine.

**ம.** கைபாகம்

*[கை + பாகம்.]*

**கைப்பாடு**[1] *kai-p-pāḍu,* பெ.(n.) கையிழப்பு; loss in trade or otherwise.

*[கை + பாடு.]*

**கைப்பாடு**[2] *kai-p-pāḍu,* பெ.(n.) 1. உடைமை, உடைமைப்பொருள்; possession. 2. கைவயம் உள்ள பொருள்; possession, subjection. 3. கைப்பதிவு; impression of the hand. 4. கையிழப்பு (சேர.நா.); loss from one's own hand.

**ம.** கைப்பாடு.

*[கை + பாடு. படு → பாடு.]*

**கைப்பாடு**[3] *kai-p-pāḍu.* பெ.(n.) உடலுழைப்பு; manual labour, toil by hand.

*[கை + பாடு. பாடு = வேலை, பிடிக்கை.]*

**கைப்பாடுபடு-தல்** *kaippāḍu-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) அரும்பாடுபட்டு உழைத்தல்; to work with the hand, toil, labour hard. *அவன் கைப்பாடுபட்டு முன்னுக்கு வந்தான் (உ.வ.).*

*[கைப்பாடு + படு-.]*

**கைப்பாணி** *kai-p-pāṇi,* பெ.(n.) 1. ***கைப்பணி***பார்க்க; see *kai-p-paṇi.* 2. மணியாசுப் பலகை; mason's smoothing plane. 'கைப்பாணியிட்டு மெழுக்கு வாசியிலே பிரமிக்கும்படி' (ஈடு.5;1:5). 3. முடவன் தவழ்வதற்குக் கொள்ளும் கைப்பிடி; hand hold for lame persons who have to crawl. *'முடவனாய்க் கைப்பாணி கொண்டு தவழ்வா னொருவன்' (பழ.16,உரை).*

**ம.** கைப்பாணி

*[கை + (பணி) பாணி.]*

**கைப்பாணிப்பு** *kai-p-pāṇippu,* பெ.(n.) பொருளைக் கையில் எடுத்து நிறுத்திடும் மதிப்பு; estimating the weight of anything by hand.

*[கை + பாணிப்பு.]*

**கைப்பாத்திரம்** *kai-p-pāttiram,* பெ.(n.) ***கையேனம்*** பார்க்க ; see *kai-y-ēṉam.*

*[கை + பாத்திரம். பாத்திரம் = கொள்கலன்.]*

**கைப்பாதி** *kai-p-pādi,* பெ.(n.) இரண்டாய்ப் பிளப்பதிற் சிறுபாதி; a small portion in division.

*[கை + பாதி.]*

**கைப்பால்** *kai-p-pāl,* பெ.(n.) வாங்குவோர் எதிரில் கறவாமல் முன்னரே கறந்து கொண்டு வந்து விற்கும் பால்; milk not milked in the presence of the buyer, but brought by the milkman in his can.

*[கை + பால்.]*

**கைப்பாலை** *kai-p-pālai,* பெ.(n.) வெட்பாலை; Tellicherry bark (சா.அக.).

*[கை + பாலை.]*

**கைப்பான்** *kaippāṉ*, பெ.(n.) 1. பாகல்; spiked bitter cucumber. 2. கசப்பு மருந்து; bitter medicine. 3. கசக்கக் கூடிய பொருள்; any substance that is bitter (சா.அக.).

*[கய் → கை → கைப்பான்.]*

**கைப்பான்கொட்டை** *kaippāṉ-koṭṭai*, பெ.(n.) ***கைப்பங்கொட்டை*** பார்க்க; see *kaippaṅ-koṭṭai* (சா.அக.).

*[கய் → கை → கைப்பான் + கொட்டை.]*

**கைப்பிச்சை** *kai-p-piccai*, பெ.(n.) களத்தில் கொடுக்கும்பிச்சை (R.T.); handful of grain given in charity at the threshing floor.

*[கை + பிச்சை.]*

**கைப்பிசகு** *kai-p-piśagu*, பெ.(n.) ***கைக்குற்றம்*** பார்க்க; see *kai-k-kuṟṟam*.

*[கை + பிசகு. பிழை → பிசகு.]*

**கைப்பிடி[1]-த்தல்** *kai-p-piḍi-*, 4 செ.கு.வி.(v.i.) 1 உறுதியாகப் பிடித்தல்; to seize with hand, grasp, firmly. "*இம்முறைகைப்பிடித்தல்*" (*தணிகைப்பு.அகத். 415*). 2. மணம் புரிதல்; to marry. "*கண்ணாலங் கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான்*" (*திவ்.நாய்ச்.11:9*).

*[கை + பிடி-.]*

**கைப்பிடி[2]** *kai-p-piḍi*, பெ.(n.) 1. கையாற் பிடிக்கை; grasp, grip of the hand. 2. ஆயுதம் முதலியவற்றின் பிடி; handle, as of a tool, ear, as of a pitcher. 3. படிக்கட்டு முதலியவற்றின் பக்கங்களில் கையாற் பிடித்துச் செல்ல அமைக்கும் சுவர், சட்டம் முதலியன; hand rail, rail of a ship, parapet of a house. 4. திருமணம்; marriage. "*கைப்பிடிநாயகன்*" (*பட்டினத். திருவே. மாலை.3*). 5. உலக்கை; pestle. 6. பிடியளவு; a handful.

**ம.**கைப்பிடி, கய்பிடி; **க.**கெய்பிடி, கைபிடி; **தெ.**செயிபிடி; **து.**கைபுடி.

*[கை + பிடி.]*

**கைப்பிடி[3]** *kai-p-piḍi*, பெ. (n.) பிடியளவு; handful.

**மறுவ.**குத்து.

*[கை + பிடி.]*

**கைப்பிடிக்கணையாழி** *kai-p-piḍi-k-kaṇai-y-āḻi*, பெ.(n.) திருமணத்தின்போது மாப்பிள்ளைக்குப் பெண்வீட்டார் கொடுக்கும் கணையாழி ; ring presented to the bridegroom by the bride's parents in a marriage.

*[கைப்பிடி + கணையாழி.]*

**கைப்பிடிகாப்பு** *kai-p-piḍi-kāppu*, பெ.(n) 1. நெருங்கிய நட்பு; close friendship, mental confidence. 2. அணுக்கமான (அந்தரங்கமான) ஆள்; confidential servant.

*[கை + பிடி + காப்பு.]*

**கைப்பிடிச்சக்கை** *kai-p-piḍi-c-cakkai*, பெ.(n.) தேய்ப்புவேலைக்குப்பயன்படும்மரப்பலகை; a wooden plank used for masonry polishing work.



கைப்பிடிச்சக்கை

*[கை + பிடி + சக்கை.]*

இது நான்கு முதல் ஆறு அங்குல அளவுள்ளதாய் இருக்கும்.

**கைப்பிடிச்சட்டம்** *kai-p-piḍi-c-caṭṭam*, பெ.(n.) படிக்கட்டில் கைப்பிடி இணைக்கப்பட்ட சட்டம்; hand rail on the sides of a stair-case, banisters.

*[கை + பிடி + சட்டம்.]*

**கைப்பிடிச்சுருள்** *kai-p-piḍi-c-curuḷ*, பெ.(n.) மணநிகழ்வில், மணமகளுடைய தந்தையால் மணமக்களின் விரல்களைச் சேர்த்துக் கட்டின பட்டையை அவிழ்த்ததற்காக, மணமகளின் பிறவனுக்குத் (சகோதரனுக்கு) தரும் பணப் பரிசு (G.Tn.D.136); present to the bride's brother when he unties the silk tied by the bride's father uniting the fingers of the bride and bridegroom.

*[கை + பிடி + சுருள். பணவளத்திற்கேற்பக் கைப்பிடிச்சுருள் மாறுபடும்.]*

**கைப்பிடிச்சுவர்** *kai-p-piḍi-c-cuvar*, பெ.(n.) 1. மொட்டை மாடி, படிக்கட்டு, பாலம் முதலியவற்றின் பக்கங்களில்கையாற்பிடித்துக்கொண்டுசெல்லுமாறு அமைக்கப்பட்ட உயரக் குறைவான சுவர் (C.E.M.);

wall similar to railings on both the side of staircase, bridge, etc., parapet wall. 2. சிறு சுவர்; small wall.

க. கெய்பிடிகோடெ.

*[கைப்பிடி + சுவர்.]*

**கைப்பிடிச் செங்கல்** *kaippiḍi-c-ceṅgal,* பெ.(n.) வரிசையாக நின்றுகொண்டு கைக்குக் கை மாறும் பொருள்; act of passing on a thing by hand in a row. கிடக்கின்ற விறகு கட்டைகளைக் கைப்பிடிச் செங்கலாய் உள்ளே அடுங்குங்கள் (நெல்லை.).

*[கைப்பிடி + செங்கல்.]*

கட்டடக் கூலித் தொழிலாளர் கைக்குக்கை செங்கல் மாற்றுவது போன்று பொருள்களை வரிசையாக மாற்றுதல்.

**கைப்பிடிமடி** *kaippiḍi-maḍi,* பெ.(n.) 1. மீன்தங்கும் சிறிய வலைப்பை; small netted bag for fishing. 2. வலைப்பையின் முன்பகுதி (மீனவ.); front side of the netted bag.

*[கைப்பிடி + மடி.]*

**கைப்பிடிமோதிரம்** *kaippiḍi-mōdiram,* பெ.(n.) ***கைப்பிடிக் கணையாழி*** பார்க்க see *kai-p-piḍi-k-kaṇai-y-āḻi.*

*[கைப்பிடி + மோதிரம்.]*

**கைப்பிடியாய்ப்பிடி-த்தல்** *kai-p-piḍyai-p-piḍi-,* 4 செ.குன்றா.வி. (v.t.) கையுங் களவுமாய்ப் பிடித்தல்; to catch a thief red handed, to detect a fraud even in the act of perpetration.

*[கைப்பிடி + பிடி-.]*

**கைப்பிடிவாள்** *kai-p-piḍi-vāḷ,* பெ.(n.) 1. கைவாள்; small sword (சூடா.). 2. கை அரம்பம்; hand saw.

மறுவ. கைவாள்.

*[கைப்பிடி + வாள்.]*

**கைப்பிடிவேலி** *kaippiḍi-vēli,* பெ.(n.) கோயில் கட்டட அடித்தள வரிசை அமைப்பினுள் ஒரு பகுதி; a part of a foundation structure of a temple.

*[கைப்பிடி + வேலி.]*

**கைப்பிணக்கிடு-தல்** *kai-p-piṇakkiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) கைகோத்தல்; to hold the hands of another in one's own hands. *"அவர்களோடே கைப்பிணக்கிடுகை முதலான இவன் செய்யும் விஷமங்கள் வாசாம கோசர மாகையாலே" (திவ். பெரியாழ். 2:7:4, வியா.ப.395).*

*[கை + பிணக்கு + இடு-.]*

**கைப்பிணி** *kai-p-piṇi,* பெ.(n) கையால் தழுவுகை; embracing.

*[கை + பிணை – கைப்பிணை → கைப்பிணி.]*

**கைப்பிணை** *kai-p-piṇai,* பெ.(n.) 1. காக்கும்படி கையில் ஒப்படைக்கப்பட்ட பொருள் அல்லது மாந்தர்; person or thing entrusted to one's care, trust. 2. வேண்டுங் காலங்களில் குற்றவாளி தவறாமல் வருவதற்கு முறை(நீதி)மன்றம் அமர்த்தும்பிணையம்; bail or security demanded by the court to ensure the appearance of the accused when summoned.

*[கை + பிணை.]*

**கைப்பிழி** *kai-p-piḻi,* பெ.(n.) கையால் பிழியப்பட்டது; that which is squeezed.

**Fin.** kapsata (to squeeze); **Mong.** xabci; **Q.** gapi.

*[கை + பிழி.]*

**கைப்பிழை**[1] *kai-p-piḻai,* பெ.(n.) ***கைக்குற்றம்*** பார்க்க; see *kai-k-kuṟṟam.*

ம. கய்பிழ.

*[கை + பிழை.]*

**கைப்பிழை**[2] *kai-p-piḻai,* பெ.(n.) கவனக்குறைவால் நிகழ்ந்த குற்றச்செயல்; mistake due to carelessness. *"பள்ளிசெல்வன் இவ்வூரிருக்கும் பள்ள வேணாட்டரையனைக் கைப்பிழையாலெய்து செத்தமையில்" (SII. Vol. VII. 68-12).*

க. கெய்தப்பு.

*[கை + பிழை.]*

**கைப்பிழைபுகு-தல்** *kaippiḻai-pugu-,* 2 செ.கு.வி. (v.i.) 1. கைத்தவறு நேர்தல்; to occur by slip of hand. *"சம்புபுரத்திருக்கும் பள்ளிசெல்வன் இவ்வூரிருக்கும் பள்ளி வேணாட்டராயனைக் கைப் பிழையால் எய்து செத்தமையில்நாட்டவரும்சம்புவரையரும்கூடி இவன் வேணாட்டரையனுக்காகச் சாக வேண்டாம். கைப்பிழை புகுந்தது" (S.I.I. Vol. VII, 68.).*

*[கைப்பிழை + புகு-.]*

**கைப்பிள்ளை** *kai-p-piḷḷai,* பெ.(n.) கைக்குழந்தை; baby in arms. வேலைக்காரிக்குக் கைப்பிள்ளை சாக்கு (பழ.). வயிற்றுப் பிள்ளையை நம்பி, கைப்பிள்ளையை விட்டதுபோல் (பழ.).

*[கை + பிள்ளை.]*

**கைப்பிள்ளைக்காரி** *kai-p-piḷḷaikkāri,* பெ.(n.) கைக்குழந்தை வைத்திருப்பவள்; woman having new born baby.

*[கை + பிள்ளை + காரி.]*

**கைப்பு**[1] *kaippu,* பெ.(n.) 1. அறுசுவையினொன்றான கசப்பு; one among the six flavours. 2. கசப்புப்பண்டம்; bitterness. 3. வெறுப்பு; dislike, aversion.

**ம.** கைப்பு.

**Russ.** gōrik.

*[கை → கைப்பு.]*

**கைப்பு**[2] *kaippu,* பெ.(n.) ஆடுதின்னாப்பாளை; worm-killer.

*[கை → கைப்பு.]*

**கைப்புக்கந்தம்** *kaippu-k-kandam,* பெ.(n.) கசப்புச் சரக்கு; aromatic drugs with a bitter taste (சா.அக.).

*[கைப்பு + கந்தம்.]*

**கைப்புக்கெண்டை** *kaippu-k-kendai,* பெ.(n.) கருங்கெண்டை மீன்; bitter carp (சா.அக.).



கைப்புக்கெண்டை

*[கைப்பு + கெண்டை.]*

**கைப்புச்சரக்கு** *kaippu-c-carakku,* பெ.(n.) கசப்பு மருந்துச் சரக்கு; any medicinal agent having a bitter taste (சா.அக.).

*[கைப்பு + சரக்கு.]*

**கைப்புச்சீந்தில்** *kaippu-c-cīndil,* பெ.(n.) சீந்தில்; a kind of medicinal creeper.

*[கைப்பு + சீந்தில்.]*

**கைப்புட்டில்** *kai-p-puṭṭil,* பெ.(n.) கைவிரலுறை; armoured glove, glove (யாழ்.அக.).

*[கை + புட்டில்.]*

*புட்டில் - கூடை. கூடை போன்ற அமைப்பையுடையதால் இப்பெயர் பெற்றது.*

**கைப்புடை**[1] *kai-p-puḍai,* பெ.(n.) ***கைப்புட்டில்*** பார்க்க; see *kai-p-puṭṭil.*

*[கை + புடை.]*

**கைப்புடை**[2] *kai-p-puḍai,* பெ.(n.) அம்பின் இருபுறமும் இறைமுள் உள்ள கீழ்ப்பகுதி; the lower, feathered part of an arrow (கருநா.).

**க.** கெய்பொடெ.

*[கை + புடை.]*

**கைப்புடை**[3] *kai-p-puḍai,* பெ.(n.) கைக்கட்டி; boil or obscess in hand.

*[கை + புடை.]*

**கைப்புடை**[4] *kai-p-puḍai,* பெ.(n.) 1. வாயிற்காவலர் தங்குமிடம்; guard's room. *'தங்கள் கைப்புடைகளிலே இருத்தி' (ஈடு.10,9:9).* 2. அருகு; nearness. *"வெண்மதிக் கைப்புடை வியாழம் போல" (பெருங். இலாவாண.19:92).*

**து.** கைபுடெ.

*[கை + புடை.]*

**கைப்புண்** *kai-p-puṇ,* பெ.(n.) 1. உள்ளங்கைப்புண்; any sore or ulcer in the palm (சா.அக.). *கைப்புண்ணுக்குக் கண்ணாடியா? (பழ.).* 2. தெளிவாகத் தெரிவது; anything clear to eyes.

**ம.** கய்யில் புண்ணு; **பட.** கையுண்ணு.

*[கை + புண்.]*

**கைப்புண்ணியம்** *kai-p-puṇṇiyam,* பெ.(n.) 1. பெருந்தன்மை, தயாளம்; benevolence, liberality. 2. கையமைவு (கைராசி); luckiness of one's hand.

**ம.** கைப்புண்ணியம்.

**மறுவ.** கைப்பேறு, கைவாக்கு, கைப்பாங்கு (கைராசி) கைப்பேறு.

*[கை + புண்ணியம்.]*

**கைப்புத்துவர்ப்பு** *kaippu-t-tuvarppu,* பெ.(n.) கசப்போடு கூடிய துவர்ப்பு; bitter drugs with markedly astringent taste (சா.அக.).

*[கைப்பு + துவர்ப்பு.]*

**கைப்புநீர்** *kaippu-nīr,* பெ.(n.) 1. உப்புத்தண்ணீர்; brackish water (சா.அக.). 2. கசப்புநீர்; water bitter in taste. 3. உப்புநீரின் வண்டல்; brine remaining after salt has been derived from it in salt works.

*[கைப்பு + நீர்.]*

**கைப்புப்பட்டை** *kaippu-p-paṭṭai,* பெ.(n.) ஒருவகை மரத்தின் கசப்புப்பட்டை; bitter bark of a tree (சா.அக.).

*[கைப்பு + பட்டை.]*

**கைப்புப்பண்டம்** *kaippu-p-paṇḍam,* பெ.(n.) கசப்புத் தின்பண்டம்; any bitter substance (சா.அக.).

*[கைப்பு + பண்டம்.]*

**கைப்புப் பீர்க்கு** *kaippu-p-pīrkku,* பெ.(n.) கசப்புப் பீர்க்கு; bitter gourd (சா.அக.).

*[கைப்பு + பீர்க்கு.]*

**கைப்புப்புல்** *kaippu-p-pul,* பெ.(n.) கசத்தம்புல்; bitter grass (சா.அக.).

*[கைப்பு + புல்.]*

**கைப்புமருந்து** *kaippu-marundu,* பெ.(n.) கசப்பு மருந்து; bitter medicine (சா.அக.).

*[கைப்பு + மருந்து.]*

**கைப்புமாறல்** *kaippu-māṟal,* பெ.(n.) 1. கசப்பு மாறுதல்; change of bitterness (சா.அக.). 2. மருந்துணாக்கொள்ளும்போது கசப்புப்பண்டங்களை விலக்கல்; abstaining from taking bitter substances when on diet.

*[கைப்பு + மாறல்.]*

**கைப்புமானோன்** *kaippumāṉōṉ,* பெ.(n.) ஒருவகைச் செய்நஞ்சு; a kind of arsenic.

*[கைப்பு + உம் + ஆனோன்.]*

**கைப்புயம்** *kai-p-puyam,* பெ.(n.) ***கைப்பட்டை*** பார்க்க; see *kai-p-paṭṭai.*

*[கை + புயம்.]*

**கைப்புரட்டு** *kai-p-puraṭṭu,* பெ.(n.) கைத்திறமையால் செய்து காட்டும் ஏமாற்று வேலை; illusionary acts performed by the sleight of the hand. 2. கைமாற்று; short loan by way of accommodation.

*[கை + புரட்டு.]*

**கைப்புலி** *kai-p-puli,* பெ.(n.) யானை; elephant. lit., tiger with a hand elephant.

*[கை + புலி.]*

**கைப்புவலியுறுத்தி** *kaippu-vali-y-uṟutti,* பெ.(n.) வலிமையை உண்டாக்கும் கசப்பு மருந்து; bitter tonic (சா.அக.).

*[கைப்பு + வலி + உறுத்தி.]*

**கைப்புவாதுமை** *kaippu-vādumai,* பெ.(n.) கசப்பு வாதுமைக் கொட்டை; bitter almond (சா.அக.).

*[கைப்பு + வாதுமை.]*

**கைப்புவெட்பாலை** *kaippu-veṭpālai,* பெ.(n.) கசப்பு வெட்பாலை; bitter oleander (சா.அக.).

*[கைப்பு + வெட்பாலை – கைப்பு வெட்பாலை.]*

**கைப்புவேம்பு** *kaippu-vēmbu,* பெ.(n.) நிலவேம்பு; king of bitters, Justicia Paniculata (சா.அக.).

*[கைப்பு + வேம்பு.]*

**கைப்பூட்டு**[1] *kai-p-pūṭṭu,* பெ.(n.) சிறிய பூட்டு; small lock.

**ம.** கைப்பூட்டு

*[கை + பூட்டு.]*

**கைப்பூட்டு**[2] *kai-p-pūṭṭu,* பெ.(n.) 1. மல்லரின் கைப்பிடி; hand-grip in wrestling. 2. தோட் பொருத்து; shoulder joint.

**ம.** கைப்பூட்டு.

*[கை + பூட்டு.]*

**கைப்பெட்டகம்** *kai-p-pēṭṭagam,* பெ.(n.) ***கைப் பெட்டி*** பார்க்க; see *kai-p-pēṭṭi.*

**ம.** கைப்பெட்டகம்; **க.** கைபெட்டிக.

*[கை + பெட்டகம்.]*

**கைப்பெட்டி** *kai-p-pēṭṭi,* பெ.(n.) சிறுபெட்டி; small box.

**ம.** கைபெட்டி, கய்பெட்டி; **க.** கைபெட்டிகெ, கெய்பெட்டிகெ; **தெ.** சேபெட்டெ; **பட.** கைப்பெட்டி.

*[கை + பெட்டி.]*

**கைப்பேறிப்புளி** *kaippēṟi-p-puḷi,* பெ.(n.) காட்டெலுமிச்சை; Indian wild lime (சா.அக.).

*[கைப்பு + ஏறி + புளி.]*

**கைப்பேறு** *kai-p-pēṟu,* பெ.(n.) மருத்துவக் குணம் உண்டாவதாகக் கருதப்படும் தன்மை; success or skill in medical treatment.

**மறுவ.** கைராசி.

*[கை + பேறு.]*

**கைப்பை** *kai-p-pai,* பெ.(n.) 1. சொந்தச் செலவிற்காகப் பணம் வைக்கும் பை; a purse or bundle of money for one's use. 2. சிறுபை; a small bag.

**க.** கெய்கண்டு, கெய்சீல; **பட.** கைசீர, கய்சீர.

*[கை + பை.]*

**கைப்பொட்டு** *kai-p-poṭṭu,* பெ.(n.) ஒருவகை அணி; a kind of an ornament. *"திருக்கைப் பொட்டு ஒன்று"* (S.I.I.II,80,7).

*[கை + பொட்டு.]*

**கைப்பொருள்** *kai-p-poruḷ,* பெ.(n.) கையிலுள்ள பொருள்; cash in hand, property in possession. *"கைப்பொருள் போகூழாற் றோன்றும் மடி" (குறள்.371).*

மறுவ. கைம்முதல்.

ம. கைப்பொருள்; க. கெய்கண்டு.

*[கை + பொருள்.]*

**கைப்பொல்லம்** *kai-p-pollam,* பெ.(n.) சிறுதுண்டு (யாழ்.அக.); small piece.

*[கை + பொல்லம்.]*

**கைப்பொலி** *kai-p-poli,* பெ.(n.) கையாலள்ளும்பொலி; a handful of winnowed corn in the heap.

*[கை + பொலி.]*

**கைப்பொழுது** *kai-p-poḻudu,* பெ.(n.) கதிரவன் தோன்றும் போதும் மறையும் போதும் நிலவுலகுக்குமேல் கைம்முழ வுயரத்திலிருப்பதாகத் தோன்றும் சிறு நேரம் (வின்.); the time during which the rising or setting sun is just above the horizon. கைப்பொழுதாயும் காட்டுக்குப் போகலையா? கைப்பொழுது இருக்கவே வேலையை ஏறக்கட்டி விட்டாயா? (உ.வ.).

*[கை + பொழுது.]*

**கைப்பொறுப்பாய்** *kai-p-poṟuppāy,* கு.வி.எ.(adv.) 1. பொறுப்பாய், அக்கறையாய்; with full responsibility, earnestly. 2. ஊக்கம் தளராமல்; diligently.

*[கை + பொறுப்பாய்.]*

**கைப்பொறுப்பு** *kai-p-poṟuppu,* பெ.(n.) 1. வணிகம் முதலியவற்றில் செலவு இழப்பு முதலியவை தன் பொறுப்பு ஆகுகை; monetary or financial responsibility. 2. இழப்பு; loss. 3. தன் பொறுப்பு; self responsibility.

*[கை + பொறுப்பு.]*

**கைபடி–தல்** *kai-paḍi-,* 4 செ.கு.வி.(v.i.) தொழிலிற் கைதிருந்துதல்; to acquire ease and skill in manual art and craft. *"கைபடியத் திருமகளைப் படைத்திவளைப் படைத்தனன்" (தனிப்பா.1,147:48)*

*[கை + படி–.]*

**கைபதறு–தல்** *kai-padaṟu-,* 8 செ.கு.வி.(v.i.) பதற்றப்படுதல்; to be in a hurry. *"காரியவசத்தினர்கள் கைபதறல் செய்யார்" (பிரபோத. 5:24).*

*[கை + பதறு–.]*

**கைபதில்** *kai-padil,* பெ.(n.) ***கைமாற்று*** பார்க்க ; see *kai-māṟṟu.*

து. கைபத்லு.

*[கை + பதில்.]*

**கைபரி–தல்** *kai-pari-,* 4 செ.கு.வி.(v.i.) ஒழுங்கு குலைதல்; to fall into disorder. *"கார்மழை முன்பிற் கைபரிந்து" (பதிற்றுப்.83:1).*

*[கை + பரி–.]*

**கைபரிமாறு[1]–தல்** *kai-parimāṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தூய்மை கெடும்படி தொடுதல்; to pollute or make unclean by touch. 2. கற்பை யழித்தல்; to violate the chastity of a woman. 3. கவர்தல், எடுத்துக்கொள்ளுதல்; to missappropriate, to embezzle.

*[கை + பரிமாறு–.]*

**கைபரிமாறு[2]–தல்** *kai-parimāṟu-,* 5 செ.கு.வி.(v.i.) அடிபிடிசண்டையிடுதல்; to fight, exchange blows.

*[கை + பரிமாறு–.]*

**கைபலிதம்** *kai-palidam,* பெ.(n.) கைவரியால் (அஸ்த ரேகையால்) மருத்துவத் தொழிலில் கை தொட்டவுடன் குணமாகும் தன்மை; the curing power of diseases due to peculiar link (சா.அக.).

*[கை + பலிதம்.]*

**கைபறி–தல்** *kai-paṟi-,* 4 செ.குன்றாவி. (v.t.) கை தவறுதல் (வின்.) (செ.அக.); to slip, as a hold, to slip or fall out of the hands.

*[கை + பறி–.]*

**கைபாகம்** *kai-pāgam,* பெ.(n.) 1. கைம்முறை; the skill of hand in compounding medicines as opposed to ceypāgam. 2. வீட்டுமருந்து; household medicine. 3. மருத்துவமுறைசாரா மருத்துவம் (பண்டுவம்); non-medicinal treatment. 4. சமையல் பாகம்; skill in cooking (சா.அக.).

*[கை + பாகம்.]*

**கைபார்[1]–த்தல்** *kai-pār-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கைந்நாடி பார்த்தல்; to feel the pulse of. 2. கைவரை (இரேகை) பார்த்தல்; to read the line of the palm. 3. உதவி நாடுதல்; to seek the help of. ஏழைகள் செல்வரின் கைபார்த்து வாழ வேண்டி யிருக்கிறது (உ.வ.).

*[கை + பார்–.]*

**கைபார்[2]–த்தல்** *kai-pār-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. பழுதுபார்த்தல் (யாழ்ப்.); to make repairs. 2. வணிகச்

சரக்குகளைச் சரிபார்த்தல்; to examine goods, as a trader. 3.பொருள்களைத் தரம் பிரித்தல்; to divide according to quality or standard.

*[கை + பார். கை - ஒழுங்கு.]*

**கைபாரமாய்ப் பொடித்தல்** *kai-pāramāy-p-podittal,* தொ.பெ.(vbl.n.) கையின் வலிவு கொண்டளவில் அழுத்திப்பொடி செய்தல்; pulverising by exerting as much pressure as possible with the hand (சா.அக.).

*[கை + பாரமாய் + பொடித்தல்,]*

**கைபிசை—தல்** *kai-pišai-,* 4 செ.கு.வி.(v.i.) செய்வ தறியாது திகைத்தல்; lit., to wring the hands, to be in a fix, to be in deep affliction.

*[கை + பிசை—.]*

**கைபிடி[1]—த்தல்** *kai-pidi-,* 4 செ.குன்றாவி.(v.t.) கைக்கொள்ளுதல்; to take on hand, entertain, cherish. *"கைபிடித்து விடுதற் குரியதோ" (அரிச்சந். நகர்நீ.123).*

க. கெய்விடி, கெய்பிடி.

*[கை + பிடி.]*

**கைபிடி[2]—த்தல்** *kai-pidi-,* 4 செ.குன்றாவி.(v.t.) மணம் செய்தல்; to marry. கைபிடித்த நாள் முதலாய் அவளைக் கண்கலங்காமல் காத்து வருகிறேன் (உ.வ.).

*[கை + பிடி—.]*

**கைபிடி[3]** *kai-pidi,* பெ.(n.) 1. ***கைப்பிடி*** பார்க்க; see *kai-p-pidi.* 2. கையிற் பெற்றுக்கொண்ட பொருள்; money or thing received on hand. *'இவ்வாடு திருவுண்ணாழிகை யுடையார் கைபிடி' (S.I.I.III.107).*

*[கை + பிடி—.]*

**கைபிடித்துப் பார்—த்தல்** *kai-piḍittu-p-pār-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. நாடித்துடிப்பை அறிதல்; to feeling the pulse of a patient. 2. உள்ளங்கை வரியை ஆய்தல்; to read the lines of the palm. 3. வல்லமையை ஆய்தல்; to try one's ability or strength (சா.அக.).

*[கை + பிடித்து + பார்—.]*

**கைபிடிபத்திரம்[1]** *kai-pidi-pattiram,* பெ.(n.) ***கைபிடியாவணம்*** பார்க்க; see *kai-pidi-y-āvanam.*

*[கைபிடி + பத்திரம்.]*

**கைபிடிபத்திரம்[2]** *kai-pidi-pattiram,* பெ.(n.) ***கைபிடிகாப்பு*** பார்க்க; see *kai-pidi-kāppu.*

*[கைபிடி + பத்திரம்.]*

**கைபிடியாவணம்** *kai-pidi-y-āvaṇam,* பெ.(n) வைப்பு நிதி, வைப்புப்பொருள்; wealth well secured or guarded.

*[கைபிடி + ஆவணம்.]*

**கைபிழைபாடு** *kai-piḻai-pāḍu,* பெ.(n) ***கைப்பிழை*** (வின்.) பார்க்க; see *kai-p-piḻai.*

*[கைபிழை + பாடு.]*

**கைபின்வளைவு** *kai-piṉ-vaḷaivu,* பெ.(n.) பிறக்கும் பொழுதே கையின் பக்கமாக வளைந்திருக்கும் ஒருவகை முடம்; backward deviation of the hand from the time of birth (சா.அக.).

*[கை + பின் + வளைவு.]*

**கைபுகு—தல்** *kai-pugu-,* 21 செ.கு.வி. (v.i.) 1. வயப் படுதல்; to come with in one's reach or grasp. *"திருமந்திரங் கைபுகுந்தவாறே ஈசுவரன் கைபுகும்" (ஸ்ரீவசன.97).* 2. ஒருவன் பேரிலிருந்த ஆவணம் பிறனொருவன் பேருக்கு மாறுதல்; to be assigned, to be made over, as a document. இது கைபுகுந்த ஆவணம் (பத்திரம்) (இ.வ.).

க. கெய்வொகு, கெய்புகு.

*[கை + புகு—.]*

**கைபுடை—த்தல்** *kai-p-pudai-,* 4 செ.குன்றாவி.(v.t.) கைதட்டுதல்; to strike one's hand on. *"காணுநர் கைபுடைத் திரங்க" (பதிற்றுப்.19).*

*[கை + புடை—.]*

**கைபுனை[1]—தல்** *kai-puṉai-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. அழகுபடுத்துதல்; to adorn, decorate. *"கைபுனைந்த பூமலி சேக்கை" (பு.வெ.12, பெண்பாற்.4).* 2. பூத்தொடுத்தல் (வின்.); to string as flowers.

க. கெய்கெய்; தெ. கைசேய்.

*[கை + புனை—.]*

**கைபுனை[2]** *kai-puṉai,* பெ.(n.) 1. பூத்தொடுக்கை (சது.); stringing as flowers. *"கைபுனைந் தியற்றாக் கவின்பெரு வனப்பு" (திருமுருகு.).*

*[கை + புனை.]*

**கைபூசு—தல்** *kai-pūšu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. உண்ட கையைக் கழுவுதல்; to wash the hand after meals. *"மறையோ ரினிதருந்திக் கைபூசி" (கூர்மபு. தென்புலத்.9).*

*[கை + பூசு—.]*

**கைபோ[1]-தல்** *kai-pō-,* 8 செ.கு.வி.(v.i.) முற்றும் வல்லவனாதல்; to attain thorough mastery. *"ஓவியத்துறை கைபோய வொருவனை" (நைடத. அன்.கண்.6).*

*[கை + போ-.]*

**கைபோ[2]-தல்** *kai-pō-,* 8 செ.குன்றாவி.(v.t.) கடந்து செல்லுதல்; to overstep, pass beyond, exceed the limits. *"நிறையெனுஞ் சிறையைக் கைபோய்" (சீவக.710).*

*[கை + போ-.]*

**கைபோட்டிழு-த்தல்** *kai-pōṭṭiḻu-,* 4 செ.குன்றாவி. (v.t.) கையை உள்ளேவிட்டு இழுத்து வெளிப்படுத்தல்; pulling out by inserting one's hand as a child from the womb (சா.அக.).

*[கை + போட்டு + இழு-.]*

**கைபோடு-தல்** *kai-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. கை வைத்தல்; to put or apply the hand. 2. கை கொடுத்து உறுதி தருதல் (இ.வ.); to confirm a promise by offering the hand. 3. தொழிலேற்கத் தொடங்குதல்; to undertake a business. *'வேலையில் இன்னுங் கைபோடவில்லை' (வின்.).* 4. பிறரறியாமல் கைகளைத் துணியால் மறைத்துக் கொண்டு கைக்குறிப்பால் விலை பேசுதல் (உ.வ.); to consult secretly about the price of a thing by making signs with hands under cover. 4. காமவெறியோடு தொடுதல் (இ.வ.); to commit indecent assault on a woman.

**க.** கெய்காகு.

*[கை + போடு-.]*

**கைம்பெண்** *kaim-peṇ,* பெ.(n.) ***கைம்பெண்டாட்டி*** பார்க்க; see *kaim-peṇḍāṭṭi.*

*[கை + பெண்.]*

**கைம்பெண்கூறு** *kaimpeṇ-kūṟu,* பெ.(n.) ஆண் வழித்தோன்றலில்லாத கணவனையிழந்தாளுக்குக் குடும்பச் சொத்திலிருந்து கொடுக்கும் வாழ்க்கைப்படி (சீவனாம்சம்) (இ.வ.); allowance, out of family funds, made to a son's widow for maintenance.

*[கைம்பெண் + கூறு.]*

**கைம்பெண்சாதி** *kaim-peṇšādi,* பெ.(n.) கைம்பெண்; widow.

*[கைம்பெண் + சாதி.]*

**கைம்பெண்டாட்டி** *kaim-peṇḍāṭṭi,* பெ.(n.) கணவனை இழந்தவள் (விதவை); widow.

**மறுவ.** கைம்மை, கைனி, கலங்கழி, மடக்கை.

*[கைம்(மை) + பெண்டாட்டி.]*

**கைம்பெண்ணுடை** *kaim-peṇ-uḍai,* பெ.(n.) கணவனை இழந்த பெண் உடுத்தத் தக்க உடை; a dress of a widow.

*[கைம்பெண் + உடை.]*

**கைம்பெண்மணம்** *kaim-peṇ-maṇam,* பெ.(n.) கணவனையிழந்தவளை மணத்தல்; marring a widow.

*[கைம்பெண் + மணம்.]*

மணமகள் நிலைபற்றி, தமிழ் மணங்கள் 1. கன்னி மணம், 2. கட்டுப்பட்ட மணம், 3. கைம்பெண்மணம் என முத்திறப்படும். இவற்றுள் பின்னவை யிரண்டும் இழந்தோர் மணமாகவும் இடைத்தரத்தோர் மணமாகவும் இருந்து வந்திருக்கின்றன (தமிழர் திருமணம்,28).

**கைம்மகவு** *kai-m-magavu,* பெ.(n.) பச்சிளங் குழந்தை ; babe in arms. *"கைம்மகவொடுங் காதலவரொடும்" (பரிபா.15:47).*

**மறுவ.** கைப்பிள்ளை, கைக்குப்பிள்ளை, கைக்குழந்தை, இளம்பிள்ளை.

**க.** கைம்மொகு; **தெ.** செய்பிட்ட.

*[கை + மகவு.]*

**கைம்மட்டம்** *kai-maṭṭam,* பெ.(n.) 1. கைமதிப்பீடு, கைமட்டு; level fixed by hand. 2. கொத்தன் கைமட்டம் பார்க்க உதவும் கருவி (ரசமட்டம்); hand level used to see level by the mason.

**மறுவ.** கைமட்டு, கைமதியம்.

*[கை + மட்டம்.]*

**கைம்மடல்** *kai-m-maḍal,* பெ.(n) தோட்பட்டை (யாழ்.அக.); scapula, shoulder blade. 2. கைச்சீப்பு; comb.

*[கை + மடல்.]*

**கைம்மணி** *kai-m-maṇi,* பெ.(n.) 1. பூசையில் வழங்கும் சிறுமணி; hand bell used in worship. *"கைம்மணிச் சீரன்றிச் சீரறியா" (தமிழ்வா.102).* 2. கைத்தாளம்; cong used in temple. 3. கோல்கொண்டடிக்கும் வட்ட மணிவகை (சேமக்கலம்); cymbals.

**மறுவ.** படலிகை, பரந்தவட்டம்.

**க.** கெய்கண்டெ

*[கை + மணி.]

**கைம்மதம்** *kai-m-madam,* பெ.(n.) யானையின் துதிக்கையினின்றுவெளியேறும்மதநீர் (திவா.); exudation from the trunk of an elephant in rut.

*[கை + மதம்.]*

**கைம்மதியம்** *kai-m-madiyam,* பெ.(n.) கைமட்டு; level fixed by hand.

*[கை + மதியம் (மதிப்பீடு).]*

**கைம்மயக்கம்** *kai-m-mayakkam,* பெ.(n.) இன்ப மயக்கம்; fascination, infatutation. *"திரிகண்ண ரானவர் செய்தகைம்மயக்கமோ" (குற்றா.குற.70:26).*

*[கை + மயக்கம்.]*

**கைம்மயக்கு** *kai-m-mayakku,* பெ.(n.) 1. ***கைம் மயக்கம்***பார்க்க; see *kai-m-mayakkam.* 2. ஒருவசிய மருந்து;

*[கை + மயக்கு.]*

**கைம்மரம்** *kai-m-maram,* பெ.(n.) வீட்டின் பாய்ச்சு மரம்; one of the sloping beams of the house, rafter.



கைம்மரம்

*[கை + மரம்.]*

**கைம்மருந்து** *kai-m-marundu,* பெ.(n) 1. கையிலுள்ள மயக்கு(வசிய)மருந்து; medicine for infatuation kept always on hand for use. *"அவன் கைம்மருந்தான் மெய்ம்மறந்துதிரிகின்றாயோ" (தனிப்பா.1.323:18).* 2. தான் பயன்படுத்திப் பயன் அடைந்த (அனுபவப்பட்ட) மருந்து (வின்.): simple medicine prepared from one's own experience. 3. கணவனைத் தன் வயமாக்கப் பெண்டிர் பயன்படுத்தும் மருந்து: specifics administered by wives to keep their husbands from straying. 4. மருத்துவரின்றித் தாமே செய்து கொடுக்கு மருந்து: self prepared medicine without doctor.

**து.** கயிமர்த்.

*[கை + மருந்து.]*

**கைம்மலை** *kai-m-malai,* பெ.(n) மலை போன்றது, கையை உடைய யானை (அக.நி.); lit., mountain with a hand, elephant.

*[கை + மலை.]*

**கைம்மறதி** *kai-m-maradi,* பெ.(n) நினைவுதவறுகை; forgetfulness, as of a place where a thing was kept. தமிழர் வரலாறு என்ற பாவாணரின் நூலை கைமறதியாக எங்கோ வைத்துவிட்டேன் (உ.வ.). 2. அயர்ச்சி; forgetfulness.

*[கை + மறதி.]*

**கைம்மறி-த்தல்** *kai-m-mari-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கையால் தடுத்தல்; to check or resist with the fore-arm. 2. கைகவித்து விலக்குதல்; to wave the open hand as a sign of disapproval. *"கைம்மறித்த காந்த ளந்தோ தகாதெனவே" (சீவக.1227).*

*[கை + மறி-.]*

**கைம்மறை**[1] *kai-m-marai,* பெ.(n.) கையால்மறைத்தல்; hiding through hands.

*[கை + மறை.]*

**கைம்மா** *kai-m-mā,* பெ.(n.) துதிக்கையை உடைய விலங்கு, யானை; elephant, an animal with a trunk. *"பொலம்படைக் கைம்மாவை" (பரிபா.11:52).*

**மறுவ.** கைக்குன்று, கைம்மலை, உம்பல், உவா, ஓங்கல், கரி, கள்வன், கறையடி, குஞ்சரம், தும்பி, நால்வாய், புகர்முகம், புழைக்கை (பூட்கை), பெருமா, பொங்கடி, யானை (ஏனை), வழுவை, வாரணம், வேழம், கைப்புலி.

*[கை + மா - கைம்மா.]*

**கைம்மாட்டாங்கானா-தல்** *kai-m-maṭṭāṅgāṉā-,* 6 செ.கு.வி.(v.i.) கையெழுத்து இடுவதற்கு ஆகமாட்டாதவனாக இருத்தல்; one who becomes unfit to put his own signature. *"இது பற்ற முடையான் கைம்மாட்டாங் கானமைக்கு, இவை பற்றமுடையான இவை தாண்டான் எழுத்து" (தெ.கல்.தொ.5 கல்.985) (கல்.அக.).*

*[கை + மாட்டாங்கான் (மாட்டாமை) + ஆதல்.]*

**கைம்மாட்டாங்கு** *kai-m-māṭṭāṅgu,* பெ.(n.) தற்குறி; mark. *"ஆளுடையானும் கைம்மாட்டாங் கானமைக்கும்" (S.I.I. VIII, 406).*

*[கை + மாட்டாங்கு (மாட்டாமை, இயலாமை, கையால் எழுதத் தெரியாமை).]*

**கைம்மாய்ச்சி** *kai-m-māycci,* பெ.(n.) கைவிலங்கு (யாழ். அக.); handcuff.

மறுவ. கைமாச்சி, கைமாச்சு.

*[கை + மாய்ச்சி (மாய்ச்சி - பூட்டுவிலங்கு.]*

**கைம்மாயம்** *kai-m-māyam,* பெ.(n.) ***கைமயக்கு*** பார்க்க; see *kai-mayakku.*

*[கை + மாயம்.]*

**கைம்மாற்று** *kai-m-māṟṟu-,* பெ.(n.) சிறிய கடன் தொகை; hand loan (of money). கைமாற்றாக வாங்கிய பணத்தை மறுநாளே திரும்பக் கொடுத்து விட்டேன் (நெல்.வழ.).

**க.** கெய்பதலு.

*[கை + மாற்று.]*

**கைம்மாறு[1]—தல்** *kai-m-māṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1.மேற்கொள்ளுதல்; to assume, partake, usurp. *"களிற்றியல் கைம்மாறுவார்" (பரிபா.9:50).*

**து.** கயிமாருனி.

*[கை + மாறு—.]*

**கைம்மாறு[2]** *kai-m-māṟu,* பெ.(n.) 1. பகரம் (பதிலி); substitute, exchange. *"கைம்மாறா நோயும்பசலையுந் தந்து" (குறள். 1183).* 2. செய்த உதவிக்குச் செய்யும் நன்றி; recompense, return. *"கைம்மாறு வேண்டா கடப்பாடு" (குறள்.211).*

*[கை + மாறு. கையினது மறுசெய்கை, அதேபோன்ற மாற்றுச் செய்கை.]*

**கைம்மாறுவெற்றிலை** *kai-m-maṟu-veṟṟilai,* பெ.(n.) ஒருவகை வெற்றிலை; a kind of betel leaf (சா.அக.).

**மறுவ.** கம்மாறு வெற்றிலை.

*[கய் → கைம் + மாறு + வெற்றிலை.]*

**கைம்மிகல்** *kai-m-migal,* பெ.(n.) ***கைமிகுதல்*** பார்க்க; see *kai-migu-.*

*[கை + மிகல்.]*

**கைம்மிகு—தல்** *kai-m-migu-,* 21 செ.கு.வி.(v.i.) 1. அன்பு, துன்பம், நோய் போன்றவை அளவு கடத்தல்; to exceed the limit, to be beyond sufferance, as love, sorrow, disease. *"காப்புக் கைம்மிகுதல்" (தொல்.பொருள்.214).* 2. இனக் கட்டுப்பாட்டிற்கு மாறுபட்டு ஒழுகுதல்; to violate the caste rules. *"கைம்மிக னலிதல்" (தொல். பொருள்.260).*

*[கை + மிகு—.]*

**கைம்மிடிப்பு** *kai-m-miḍippu,* பெ.(n.) கையிலொன்று மில்லாமை; nothing in hand.

*[கை + மிடிப்பு.]*

**கைம்மீறு—தல்** *kai-m-mīṟu-,* 5 செ.கு.வி.(v.i.) அளவுக்கு மிஞ்சுதல்; to exceed, transgress. கடன் பட்டவரின் வாழ்க்கை கைம்மீறிப்போய்விட்டது(உ.வ.).

**து.** கைமீரு.

*[கை + மீறு.]*

**கைம்மீன்** *kai-m-mīṉ,* பெ.(n.) பதின்மூன்றாவது விண்மீன் (அத்தம்); the 13th naksatra.

*[கை + மீன்.]*

**கைம்முகிழ்—த்தல்** *kai-m-mugiḻ-,* 4 செ.கு.வி.(v.i.) கடவுள் வழிபாடு வணக்கம் முதலியவற்றில் கையைக் கூப்புதல் (உ.வ.); to join or unite the palms of the hand, as in salute, prayer, etc.

**து., பட.** கைமுகி.

*[கை + முகிழ்—.]*

**கைம்முட்டு** *kai-m-muṭṭu-,* பெ.(n.) ***கைம்மிடிப்பு*** பார்க்க; see *kai-m-miḍippu.*

*[கை + முட்டு.]*

**கைம்முடக்கம்** *kai-m-muḍakkam,* பெ.(n) மூட்டு வினைக்கேடு; lameness.

*[கை + முடக்கம்.]*

**கைம்முடிப்பு** *kai-m-muḍippu,* பெ.(n.) முடிப்புப் பணம்; wrapped money, bundled cash.

*[கை + முடிப்பு.]*

**கைம்முதல்** *kai-m-mudal,* பெ.(n.) 1.வணிகம் முதலியவற்றிற்கு வைத்த கைப்பொருள்; business capital investment. 2. கையில் இருக்கும் பணம்; cash in hand, savings, ready money. *"கைம்முதற்கு நட்டமில்லை" (பணவிடு.241).* 3.விலைமதிப்புமிக்க பொருள்; cash, valuables. *"கைம்முதல் கொடுத்தனர்" (உபதேச கா. சிவத்துரோ.72).* 4. முறை (சாதனம்); means. *'ஒரு கைம்முத லின்றிக்கே யிருக்க' (ஈடு,4,7:9).*

**ம.** கைமுதல்.

*[கை + முதல் – கைமுதல் → கைம்முதல்.]*

**கைம்முற்று—தல்** *kai-m-muṟṟu-,* 6 செ.கு.வி.(v.i.) முடிவு பெறுதல்; to be finished, exhausted. *"கைம்முற் றலநின் புகழே" (புறநா.53:8).*

*[கை + முற்று—.]*

**கைம்முறி—தல்** *kai-m-muṟi-,* 2 செ.கு.வி. (v.i.) ஏற்ற துணை இல்லாது போதல்; devoid of companion.

*[கை + முறி—.]*

**கைம்முறை** *kai-m-muṟai,* பெ.(n.) ஆடல் (நர்த்தனம்); dance. *"நின்று பண்ணுங் கைம்முறை தப்பா" (சரவண.பணவிடு.417).*

*[கை + முறை.]*

**கைம்மூலம்** *kai-m-mūlam,* பெ.(n.) 1.அக்குள்; arm pit. 2. கன்று செத்த பின்பு கறக்கும் பால்; milk drawn after the death of calf. 3. கையினடி; back arm. 4. முகாந்திரம்; *cause, reason.*

*[கை + மூலம்.]*

**கைம்மெய்காட்டு-தல்** *kai-m-mei-kāṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) அபிநயங்காட்டல்; to indicate passion.

*[கை + மெய் + காட்டு-.]*

**கைம்மேல்** *kai-mēl,* வி.எ.(adv.) ***கைமேலே*** பார்க்க; see *kai-mēlē.*

*[கை + மேல்.]*

**கைம்மேற்பணம்** *kai-m-mēṟ-paṇam,* பெ.(n.) உடனே கையிற் கொடுக்கும் பணம்; cash on hand.

*[கை + மேல் + பணம்.]*

**கைம்மை**[1] *kai-m-mai,* பெ.(n.) 1.காதலனைப் பிரிந்திருக்குந் தனிமை; love-lorn condition. *"கைம்மையா லொண்கலையும்... தோற்றவர்கள்" (பதினொ. ஆளு. திருவுலா. 128).* 2. கணவனை யிழந்த நிலைமை; widowhood. *"கருந்தடங் கண்ணி கைம்மை கூறின்று" (பு.வெ.10, சிறப்பிற். 4, கொளு).* 3. கணவனை இழந்தவள் (விதவை); widow. *"ஓர் கைம்மையைக் கலத்த னோக்கி" (நைடத. கலிதோன்று.9).*

*[கை → கைம்மை.]*

**கைம்மை**[2] *kai-m-mai,* பெ.(n.) 1.சிறுமை; discomfiture, degradation, ignominy. *"கைம்மை கொள்ளேல் காஞ்சன" (மணிமே.20:122).* 2. அறி வின்மை; ignorance. *"கைம்மையி னானின் கழல் பர வாது" (பதினொ. ஆளு. திருவந்.18).* 3. பொய்; lie. *"கைம்மை சொல்லி" (திவ். திருவாய். 5:1:1).*

*[கை + மை.]*

**கைம்மை பெற்றோன்** *kaimmai-peṟṟōṉ,* பெ.(n.) கைம்பெண்ணிடம் பிறந்தவன் (சூடா.); one born of a widow.

*[கைம்மை + பெற்றோன்]*

**கைம்மை வினை** *kaimmai-viṉai,* பெ.(n.) கையால் வேலை செய்யும் திறம்; manual skill. *"கைம்மை வினையினில் வேறுவேறு கறியமு தாக்கி" (பெரியபு. இளையான்குடி. 22).*

*[கை → கைம்மை + வினை.]*

**கைம்மோசம்** *kai-m-mōšam,* பெ.(n.) செய்கைப் பிழை; error, omission.

*[கை + மோசம்.]*

**கைமகவு** *kai-magavu,* பெ.(n.) ***கைப்பிள்ளை*** பார்க்க; see *kai-p-piḷḷai.*

*[கை + மகவு.]*

**கைமட்டம்** *kai-maṭṭam,* பெ.(n.) 1.***கைமதிப்பு*** பார்க்க; see *kai-madippu.* 2. கைப்பழக்கம் (வின்.); precision of hand acquired by practice. 3. கொத்தன் மட்டம் பார்ப்பதற்கு உதவுங் கருவி (இ.வ.); a mason's implement for level-testing. 4. தரைமட்டத்திலிருந்து தாழவிட்ட கை நுனி வரையிலுள்ள உயரம்; height up to the tips of the hanging arms. கைமட்டத்துக்குச் சுவரை உயர்த்து (உ.வ.).

*[கை + மட்டம்.]*

**கைமட்டு** *kai-maṭṭu,* பெ.(n.) ***கைமதிப்பு*** (வின்.) பார்க்க; see *kai-madippu.*

*[கை + மட்டு.]*

**கைம்மடங்கு-தல்** *kai-maḍaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) வாளாவிருத்தல்; laziness, not doing anywork. *"உழவினார் கைம்மடங்கின் இல்லை" (குறள்.1036).*

**கைமடிப்பு** *kai-maḍippu,* பெ.(n.) கீழறுப்பு, ஏமாற்று (வஞ்சகச்செயல்) (வின்.); cheating, duplicity.

*[கை + மடிப்பு.]*

**கைமண்டை** *kai-maṇḍai,* பெ.(n.) 1.நீர் முதலியன ஏற்பதற்கு ஏனம்போல் குவித்துக் கொள்ளுங் கை; hands held like a bowl. *குழந்தைக்குப் பாலைக் கைமண்டை வைத்துப் புகட்டு (உ.வ.).*

*[கை + மண்டை. மொந்தை → மந்தை → மண்டை.]*

**கைமணி** *kai-maṇi,* பெ.(n.) பூசை போன்றவற்றில் பயன்படுத்தும் சிறிய மணி; a kind of small bell. *"கைமணி ஒரணை நிறை ஐம்பத்தெண்பலம்" (S.I.I.V.521:10).*

ம. கைமணி.

*[கை + மணி.]*

**கைமதிப்பு** *kai-madippu,* பெ.(n.) 1.கையால் தூக்கி மதிக்கும் மதிப்பு; estimating weight by hand. 2. தோராய மதிப்பு (இ.வ.); rough estimation.

ம. கைமதிப்பு.

[கை + மதிப்பு.]

**கைமதியம்** *kai-madiyam,* பெ.(n.) ***கைமதிப்பு*** (யாழ்.அக.) பார்க்க; see *kai-madippu.*

[கை + மதி + அம். அம். சொ.ஆ.ஈறு. ஒ.நோ: தேக்கம்.]

**கைமதில்** *kai-madil,* பெ.(n.) உயரம் குறைந்த மதில்; a low wall.

ம. கைமதில்.

[கை + மதில்]

**கைமயக்கு** *kai-mayakku,* பெ.(n.) வசிய மருந்து (இ.வ.); a preparation of drugs for keeping a person under fascination.

[கை + மயக்கு.]

**கைமரம்** *kai-maram,* பெ.(n.) 1. வீட்டுக்கூரையின் மரச்சட்டம் அல்லது நெற்றிச்சரம்; rafter of roof. 2. உழுத வயலைச் சமமாக்கப் பயன்படுத்தும் பலகை; a short leveling plank used in paddy fields.

ம. கைமரம்.

[கை + மரம்.]

**கைமருத்துவம்** *kai-maruttuvam,* பெ.(n.) 1.பட்டறிவு மருத்துவம்; practice of medicine through experience. 2. வீட்டு மருத்துவம்; home treatment. 3.கைப்பாகம்; palliative treatment. 4. எல்லோருக்கும் தெரிந்த மருத்துவம்; medical treatment known to everybody, well known medical treatment.

க. கெய்கரண.

[கை + மருத்துவம்.]

**கைமருந்து** *kai-marundu,* பெ.(n.) 1.அணியம் செய்து கையிலிருக்கும் மருந்து ; prepared medicine on hand. 2. கைமுறையாற் செய்த மருந்து; medicine prepared by experience. 3. கைக்கிடு மருந்து; medicine applied to hand or arm (சா.அக.).

[கை + மருந்து.]

**கைமலம்** *kai-malam,* பெ.(n.) 1. கன்றிறந்த பின் பால் கொடுக்கும் மாடு (இ.வ.); cow that milks after having lost its calf (செ.அக.). 2. ***கைம்மூலம்*** பார்க்க; see *kai-m-mūlam.*

[கை + மூலம் – கைமூலம் → கைமலம் (கொ.வ.).]

**கைமலிவு** *kai-malivu,* பெ.(n.) விலைநயம்; cheapness. கைமலிவு பார்த்து வாங்கு (இ.வ.).

[கை + மலிவு.]

**கைமறதி** *kai-maradi,* பெ.(n.) ***கைத்தவறு*** பார்க்க (வின்.); see *kai-t-tavaṟu.*

[கை + மறதி.]

**கைமறி–தல்** *kai-maṟi-,* 4 செ.கு.வி.(v.i.) ***கைமாறு[1]–தல்*** பார்க்க; see *kai-māṟu-*

[கை + மறி–.]

**கைமறு–த்தல்** *kai-maṟu-,* 4 செ.குன்றாவி. (v.t.) கொடுக்க மறுத்தல்; to refuse to give, deny.

[கை + மறு–.]

**கைமறை** *kai-maṟai,* பெ.(n.) விதைத்தபின் விதை உள்ளடங்க உழும் மேலுழவு (யாழ்ப்.); ploughing after sowing, to cover the seed.

[கை + மறை.]

**கைமறைப்பு** *kai-maṟaippu,* பெ.(n.) மருந்து அணியமாக்குதலில் ஏற்படும் அற்றம்; secrecy in the preparation of medicine (சா.அக.).

[கை + மறைப்பு.]

**கைமாட்டாதார்** *kai-māṭṭādār,* பெ.(n.) வேலை செய்ய இயலாதவர்; incapable or incompetent persons; maimed, disabled or weak persons. *"கைமாட்டாதார்... நரகமென்று பகல்வர்" (பிரபோத.13:10).*

[கை + மாட்டாதார்.]

**கைமாட்டிக்கொள்(ளு)–தல்** *kai-māṭṭi-k-koḷ(ḷu)-,* 12 செ.கு.வி.(v.i.) அகப்பட்டுக் கொள்ளுதல்; to get entangled, to be caught.

[கை + மாட்டிக்கொள்(ளு)–.]

**கைமாட்டு–தல்** *kai-māṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) ***கைமாட்டிக்கொள்(ளு)–தல்*** பார்க்க; see *kai-māṭṭi-k-ko(ḷu)-.*

[கை + மாட்டு.]

**கைமாயம்** *kai-māyam,* பெ.(n.) 1.கையினாற் செய்யும் மாயவித்தை; magic, sleight of hand. 2. திறன்மிகு திருட்டு (வின்.); dexterous stealing.

ம. கைமாயம்.

[கை + மாயம்.]

**கைமாயவித்தை** *kai-māya-vittai,* பெ.(n.) செய்ய முடியாத செயலைச் செய்வதாகச் சொல்லிச் செய்யுந் தொழில் (Pond.); jugglery.

[கை + மாய + வித்தை.]

**கைமார்** *kai-mār,* பெ.(n.) முழம் என்னும் நீட்டல் அளவு; elmeasure.

**Fin.** kyynārā(elmeasure); **Est.** kuunar; **Mordvin.** kener; **Hung.** konyok; **Jap.** kuneru; **Q.** kanay.

*[கை + மார்.]*

மார் என்பது கைகளையும் அகன்ற பக்கவாக்கில் நீட்டிய அளவு. ஒரு முழம் என்பது முழங்கை முதல் நடுவிரல் நுனி வரையிலான அளவைக் குறிப்பதாகலின் முழங்கை யளவினதாகிய மார் என்னும் பொருளில் கைமார் என இடவழக்குச் சொல்லாயிற்று.

**கைமாற்றம்** *kai-mārram,* பெ.(n.) ***கைமாற்று*** பார்க்க; see *kai-mārru-.*

**ம.** கைமாற்றம்.

*[கை + மாற்றம்.]*

**கைமாற்றம்பிள்ளை** *kai-mārram-pillai,* பெ.(n.) கைமாற்றுக்கடன் கணக்குப் பார்க்கும் பணியாளன் (இ.வ.); accountant in charge of call-loans.

*[கை + மாற்றம் + பிள்ளை.]*

**கைமாற்று[1]–தல்** *kai-mārru-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1.ஆளை வேலையினின்று முறைமாற்றுதல் (வின்.); to relieve, as persons in work, by relays. 2. பண்டமாற்றுச் செய்தல்; to barter, exchange. 3. விற்றல் (இ.வ.); to sell, dispose of.

*[கை + மாற்று–.]*

**கைமாற்று[2]** *kai-mārru,* பெ.(n.) 1. சிறிய கடன் தொகை, கைக்கடன்; short loan without bond for a given time. கைமாற்றாகக் கொஞ்சம் பணம் கொடு. 2. ஒருவர் வயம் இருந்தது மற்றொருவர் வயம் ஆதல்; changing of hands ownership. 3. கையை மாற்றி மாற்றி நீரிற் போட்டு நீந்தும் நீச்சல் (இ.வ.); swimming with alternate overarm stroke. 4. பண்டமாற்று (இ.வ.); barter, exchange. 5. விற்பனை (இ.வ.); sale.

**க.** கெய்பதலு.

*[கை + மாற்று.]*

**கைமாற்றுக்கடன்** *kai-mārru-k-kaḍaṉ,* பெ(n.) ***கைக்கடன்*** பார்க்க; see *kai-k-kaḍaṉ.*

*[கை + மாற்று + கடன்.]*

**கைமாறாட்டம்** *kai-māṟāṭṭam,* பெ.(n.) 1.கைத் தவறு; slip of the hand. 2. கைவன்மையாற் செய்யும் ஏமாற்றம்; juggling with hand, deception practised by sleight of hand.

*[கை + மாறாட்டம்.]*

**கைமாறாப்பு** *kai-māṟāppu,* பெ.(n.) கைகளை மாற்றி மார்போடு சேர்த்துத் தோள்மேல் வைக்கை; folding of arms cross-wise against the breast, the right hand touching the left shoulder and the left hand the right (shoulder) one.

*[கை + மாறாப்பு.]*

**கைமாறு[1]–தல்** *kai-māṟu-,* 11 செ.கு.வி.(v.i.) ஒருவருரிமை இன்னொருவருக்கு மாறுதல்; to transfer one's right to another.

*[கை + மாறு–.]*

**கைமாறு[2]–தல்** *kai-māṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1.ஒருவர் கையினின்றும் மற்றொருவர் கைக்குச் செல்லுதல்; to change hands, as a thing when sold. இந்த வீடு எத்தனை கைமாறியிருக்கிறது என்கிறீர்கள். 2. வேலையாள்கள் முறைமாறுதல்; to be relieved in work, as by relays. 3. ஒழுக்கத்தைக் கைவிடுதல்; to change one's conduct. *"கடிதகன்று கைமாறி" (கலித். 65).* 4. கட்சி மாறுதல்; to change sides, leave one party and join other.

**ம.** கைமறியுக, கைமாறுக.

*[கை +மாறு–.]*

**கைமாறு[2]** *kai-māṟu,* பெ.(n.) 1. ***கைம்மாறு*** பார்க்க; see *kai-m-māṟu.* 2. ***கைம்மாற்று*** பார்க்க; see *kai-m-mārru.*

*[கை + மாறு.]*

**கைமிகு[1]–தல்** *kai-migu,* 2 செ.கு.வி.(v.i.) 1. அளவு கடத்தல்; to go beyond. 2. மிகுதியாதல்; to become exessive. 3. தடுக்க முடியாததாதல்; to become uncontrollable.

**க.** கெய்மிகு.

*[கை + மிகு–.]*

**கைமிஞ்சு[1]–தல்** *kai-miñju-,* 5 செ.கு.வி.(v.i.) 1.வரம்பு மீறுதல்; to overstep or transgress the limits, to go beyond bounds. *"போனா ளெனைவிட்டுக் கைமிஞ்சியே" (தனிப்பா.2. 138:351).* 2. பிறரோடு சண்டை செய்ய முற்படுதல்; to be disposed to fight; to be aggressive.

**க.** கெய்மிஞ்சு.

*[கை + மிஞ்சு–.]*

**கைமிஞ்சு[2]–தல்** *kai-miñju-,* 5 செ.கு.வி.(v.i.) 1.நோய் கட்டுப்படாமை; turning of disease beyond cure. 2. அடித்தல்; striking. 3. அளவுக்குமேல் சேர்த்தல்;

adding beyond the normal quantity as salt, tamarind or chilli to a sauce (சா.அக.).

*[கை + மிஞ்சு-.]*

**கைமிடுக்கு** *kai-miḍukku,* பெ.(n.) 1. கைத்தேர்ச்சி; dexterity, skill, speedy execution. 2. படைத்திறன்; might of arms, strength (சேரநா.). 3. திறமை; ability. *என் கைமிடுக்காலே யறிந்து சொல்லுகிறேன் (உ.வ.).*

**ம.** கைமிடுக்கு.

*[கை + மிடுக்கு.]*

**கைமுகம்** *kai-mugam,* பெ.(n.) உடலைவிட்டு உயிர்போகும் கதிகளுள் ஒன்று (சீவக.948, உரை); (Jaina.) a mode of the passage of the soul when it leaves the body.

**கைமுகிழ்-தல்** *kai-mugil-,* 4 செ.கு.வி.(v.i.) இரு கைகளைக் கூட்டி வணங்குதல்; to join hands out of respect, to salute, to pray to god.

**க.** கைமுகி; **து.** கயிமுகிழனி; **பட.** கைமொகெ.

*[கை + முட்டி.]*

**கைமுட்டி** *kai-muṭṭi,* பெ.(n.) 1. விரல் மடக்கியுள்ள கை; clenched fist. 2. முட்டிப்போர்;boxing with the fist.

**து.** கய்தமுட்டெ.

*[கை + முட்டி.]*

**கைமுட்டு[1]** *kai-muṭṭu,* பெ.(n.) 1.விரற்கணு; knuckle. 2. முழங்கைச் சந்து; elbow joint.

**ம.** கைமுட்டு

*[கை + முட்டு.]*

**கைமுட்டு[2]** *kai-muṭṭu,* பெ.(n.) ***கைமுடக்கம்*** பார்க்க; see *kai-muḍakkam.*

*[கை + முட்டு.]*

**கைமுடக்கம்** *kai-muḍakkam,* பெ.(n.) செய்கைக்குக் கை பயன்படாமை; inablity to use the hand, as from paralysis. 2. பண முட்டுப்பாடு; straitened circumstances, severe straits.

*[கை + முடக்கம்.]*

**கைமுடக்கு** *kai-muḍakku,* பெ.(n.) கைநொண்டி; lame of hand. ***கைமுடக்கு நோய் வந்தமையால் நலிந்து போனான் (உ.வ.).***

*[கை + முடக்கு – கைமுடக்கு.]*

**கைமுடக்குவாதம்** *kai-muḍakku-vādam,* பெ.(n.) கைகளை அசைக்கவும், நீட்டவும் முடியாமற் செய்யும் ஒருவகை நோய்; a kind of rheumatism affecting the joints of the arm or hand due to the aggravated condition of vayu which prevails in the arm (சா.அக.).

*[கை + முடக்கு + நோய்.]*

**கைமுடம்** *kai-muḍam,* பெ.(n.) 1. கைநொண்டி; lame of hand. 2. திருகிய கை; a deformity of the hand in which it is twisted out of shape or position (சா.அக.)

*[கை + முடம். முட → முடம்.]*

**கைமுடிப்பு** *kai-muḍippu,* பெ.(n.) 1.கைப்பொருள்; cash or property in possession, savings. 2. கட்டுச்சோறு; food for a journey.

*[கை + முடிப்பு.]*

**கைமுடை[1]** *kai-muḍai,* பெ.(n.) ***கைமுடக்கம்[2]*** பார்க்க; see *kai-muḍakkam.*

*[கைமுடக்கம் → கைமுடை.]*

**கைமுடை[2]** *kai-muḍai,* பெ.(n.) செலவுக்குப் பணத்தட்டுப்பாடு; straitened circumstances, severe straits.

*[கை + முடை.]*

**கைமுடைஞ்சல்[1]** *kai-muḍaiñjal,* பெ.(n.) 1.கை இளைத்தல் அல்லது சூம்பல்; atrophsy of hand. 2.***கைமுடக்கம்[2]*** பார்க்க; see *kai-muḍakkam.* கைமுடைஞ்சலுக்குப் பணம் தேவைப்படுகிறது (உ.வ.).

*[முட → முடை → முடைஞ்சல். கை + முடைஞ்சல்.]*

**கைமுடைஞ்சல்[2]** *kai-muḍaiñjal,* பெ.(n.) ***கைமுடை*** பார்க்க; see *kai-muḍai.*

*[கை + முடைஞ்சல்.]*

**கைமுறி-தல்** *kai-muri-,* 2 செ.குன்றாவி. (v.t.) கை தற்செயலாய் ஒடிதல்; to fracture of arm or hand occurring accidentally (சா.அக.).

*[கை + முறி-.]*

**கைமுறை** *kai-murai,* பெ.(n.) 1. மருந்து செய்யும் வழக்க முறை; the practice of making medicine without a regular medical education but chiefly relying on experience of observation; empirical method (சா.அக.). *பாட்டி மருத்துவம் என்பது நம் முன்னோர் கைமுறையாகச் செய்து வந்த பயனுள்ள*

மருத்துவ முறையாகும். 2. விளையாட்டு முதலியவற்றில் மாறிமாறி வரும் முறை; one's turn as in play.

[கை + முறை.]

**கைமுதல்** *kai-mudal,* பெ.(n.) ***கைம்முதல்*** பார்க்க; see *kai-m-mudal.*

ம. கைமுதல்

[கை + முதல்.]

**கைமுதிகஞாயம்** *kai-mudiga-ñāyam,* பெ.(n.) அதுவே அப்படியானால் மற்றதனைப்பற்றிக் கூறுவதேன் என்னும் வாதநெறி; illustration of arguing a posteriori. *"குழறுபடை கைமுதிக நியாயத்தான் இனிது விளங்கும்" (சித். மரபுகண்: 21).*

[கை + (முதுக்கு) முதிக + ஞாயம். முதுக்கு = அறிவு]

**கைமுதிர்–தல்** *kai-mudir-,* 2 செ.கு.வி.(v.t.) இளமைப் பருவம் நிரம்புதல் (இ.வ.); to be grown up.

[கை + முதிர்–.]

**கைமுந்து[1]–தல்** *kai-mundu-,* 5 செ.கு.வி.(v.i.) ***கைமிஞ்சு–தல்*** பார்க்க; see *kai-miñju-.*

[கை + முந்து–.]

**கைமுந்து[2]–தல்** *kai-mundu-,* 5 செ.குன்றாவி.(v.t.) திருடுதல்; to steal, pilfer. *அவன் கைமுந்துந் தன்மையன்.*

[கை + முந்து–.]

**கைமுழம்** *kai-muḻam,* பெ.(n.) முழங்கை நீளமுள்ள அளவு; length of fore-arm. மூன்று கைம்முழம் மல்லிகைப்பூ வாங்கி வந்தேன் (உ.வ.).

க. கெய்மாரு.

[கை + முழம்.]

**கைமுளி** *kai-muḷi,* பெ.(n.) மணிக்கட்டிலுள்ள எலும்பு; (R) wrist-bone.

[கை + முளி.]

**கைமுறி** *kai-muṟi,* பெ.(n.) 1. ஓலைத்துண்டு; a piece of palm leaf . 2. ஓலைச்சீட்டு; note on a piece of palm leaf.

ம. கைமுறி (குறிப்பு).

[கை + முறி.]

**கைமுறுக்கு** *kai-muṟukku,* பெ.(n.) கையால் பிழிந்து திரித்துச் சுட்டெடுக்கும் கார முறுக்கு; a kind of snack made of rice flour using fingers to give the shape of screw like twisting.

[கை + முறுக்கு.]

**கைமுறை[1]** *kai-muṟai,* பெ.(n.) 1.விளையாட்டு முதலியவற்றில் மாறி மாறி வரும் முறை; one's turn, as in play.

[கை + முறை.]

**கைமுறை[2]** *kai-muṟai,* பெ.(n.) மருந்து செய்யும் பட்டறிவு முறை; empirical method of preparing medicine.

[கை + முறை.]

**கைமுறை மருந்து** *kaimuṟai-maṟundu,* பெ.(n.) 1.பழக்கத்தால் செய்த மருந்து; medicine prepared from experience. 2. சாதனைப் பழக்கத்தாற் செய்த மருந்து; medicine based on habitual preparation (சா.அக.).

[கைமுறை + மருந்து.]

**கைமுறை வேதியியல்** *kaimuṟai-vēdiyiyal,* பெ.(n.) செய்முறை (சோதனை) வகையைக் கூறும் வேதியியல் நூல்; a book on practical chemistry (சா.அக.).

[கைமுறை + வேதியியல்.]

**கைமுனை[1]** *kai-muṉai,* பெ.(n.) கையின் நுனிப்பகுதி; the point of the hand.

க. கெய்துகி.

[கை + முனை.]

**கைமுனை[2]** *kai-muṉai,* பெ.(n.) கைவிரலின் முன் பகுதி; the point of the hand.

க. கெய்துகி.

[கை + முனை.]

**கைமூட்டு** *kai-mūṭṭu,* பெ.(n.) தோட்பொருத்து; shoulder-joint.

ம. கைமூட்டு.

[கை + மூட்டு.]

**கைமூலம்[1]** *kai-mūlam,* பெ.(n.) கமுக்கட்டு (பிங்.); armpit.

[கை + மூலம்.]

**கைமூலம்[2]** *kai-mūlam,* பெ.(n.) ***கைராசி*** பார்க்க; see *kai-rāśi.*

[கை + மூலம்.]

**கைமூலம்**[3] *kai-mūlam,* பெ.(n.) கன்றிழந்த கறவைமாடு; milch cow, that has lost its calf.

*[கை + மூலம்.]*

**கைமெய்காட்டு-தல்** *kai-mei-kāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) மெய்ப்பாடு தோன்ற உறுப்பசைவு காட்டல் (அபிநயங்காட்டுதல்); to make gesticulations.

*[கை + மெய் + காட்டு-.]*

**கைமெய்யாய்** *kai-mei-y-āy* வி.எ.(adv.) கையும் களவுமாய் (இ.வ.); in the very act of crime, red-handed.

*[கை + மெய் + ஆய்.]*

**கைமேசு** *kai-mēśu,* பெ.(n.) கைவிரலுறை; gloves.

*[கை + மேசு.]*

**கைமேலே** *kai-mēlē,* வி.எ.(adv.) உடன்கையில்; in quick return, immediately. கைமேலே பயன் கிடைத்தது (உ.வ.).

**கைமேற்பணம்** *kai-mēṟ-paṇam,* பெ.(n.) பொருளின் விற்பனை முதலியவற்றுக்காக உடன் கையிற் கொடுக்கும் பணம்; ready money, cash payment.

*[கைமேல் + பணம்.]*

**கைமோசம்** *kai-mōśam,* பெ.(n.) ***கைக்கேடு*** பார்க்க; see *kai-k-kēḍu.*

ம. கைமோசம்

*[கை + மோசம்.]*

**கைமோசம்போ-தல்** *kai-mōśam-pō-,* 8 செ.கு.வி.(v.i.) ***கைக்கேடுபோ-தல்*** பார்க்க; see *kai-k-kēḍu-po-.*

*[கைமோசம் + போ-.]*

**கையகப்படு**[1]**-தல்** *kai-y-agappaḍu-,* 20 செ.கு.வி.(v.i.) வயப்படுதல்; to come under one's control. *"மாநிலங் கையகப் படுவது பொய்யா காதே" (புறநா.58).*

*[கையகம் + படு-.]*

**கையகப்படு**[2]**-த்தல்** *kai-y-agappaḍu-,* 20 செ.குன்றாவி. (v.t.) 1. ஒப்புக் கொடுத்தல்; சிக்கப் பண்ணுதல்; to entangle 3. பிடித்தல்; to hold, control. 4. கைக்குட்சேருதல்; to hold within hands.

*[கையகம் + படு-.]*

**கையகப்படுத்து-தல்** *kai-y-agappaḍuttu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. தன்வயப்படுத்துதல்; to get possession of, to inveigle, entice. 2. காட்டிக் கொடுத்தல்; to betray (செ.அக.). 4. சிக்க வைத்தல்; to entangle (கழ.தமி.அக.).

*[கையகம் + படுத்து-.]*

**கையகல்(லு)-தல்** *kai-y-agal(lu)-,* 7 செ.கு.வி. (v.i.) விட்டு நீங்குதல்; to separate from, depart from.

*[கை + அகல்(லு)-.]*

**கையகலக்கரை** *kai-y-agala-k-karai,* பெ.(n.) சேலை வேட்டி போன்றவற்றின் நீளவாக்கு ஓர விளிம்பில் உள்ள கை அகலத்தில் உள்ள வண்ணக் கரை; border of a cloth or saree to the breadth equal to that of a palm.

*[கை + அகலம் + கரை.]*

**கையகலம்** *kai-y-agalam,* பெ.(n.) மிகச் சிறிய; very small, hand breadth.

ம. கையகலம்.

*[கை + அகலம்.]*

**கையசதி** *kai-y-aśadi,* பெ.(n.) கைகடுப்பு; fatigue in the hand.

*[கை + அசதி.]*

**கையசதிவாதம்** *kai-y-aśadi-vādam,* பெ.(n.) கைகடுத்து, பிடரி நரம்பை யிழுத்து வலியை உண்டாக்கும் ஒருவகை ஊதைநோய்; an affection of cold marked by severe pain of the arm and spasmotic contraction of the nape (சா.அக.).

*[கை + அசதி + வாதம்.]*

**கையடக்கஅகரமுதலி** *kai-y-aḍakka-agara mudali,* பெ.(n.) கையடக்கமாக ஆளும் வகையில் அச்சிட்ட அகரமுதலி; a packet dictionary.

*[கை + அடக்கம் + அகரமுதலி.]*

**கையடக்கப்பதிப்பு** *kai-y-aḍakka-p-padippu,* பெ.(n.) சிறிய அளவிலான நூற்பதிப்பு; a small size publication of a book.

*[கை + அடக்கம் + பதிப்பு.]*

**கையடக்கம்**[1] *kai-y-aḍakkam,* பெ.(n.) கைக்கு நொய்தானது; handy one.

ம. கையடக்கம்.

*[கை + அடக்கம்.]*

**கையடக்கம்**[2] *kai-y-aḍakkam,* பெ.(n.) 1.கைக்குள் அடங்குகை; being handy. 2. கைக்குள் அடங்கக் கூடிய பொருள்; anything handy or portable. 3. சேமித்து வைக்கப்பட்ட பொருள்; money laid by, savings. 4. ஒளித்து வைக்கப்பட்ட பொருள்; that which is concealed.

**ம.** கையடக்கம்.

*[கை + அடக்கம்.]*

**கையடம்** *kai-y-aḍam,* பெ.(n.) கையடர் எழுதிய ஒரு நூல்; book written by *kaiyaḍar.*

*[கையடர் → கையடம்.]*

**கையடர்** *kaiyaḍar,* பெ.(n.) கையடம் என்ற நூலின் ஆசிரியர்; an author of the book *Kaiyaḍam.*

*[கையடன் → கையடர்.]*

**கையடி**[1]**-த்தல்** *kai-y-aḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1.விலைக்கு விற்றல்; to sell. *என் வண்டியை எப்படியாவது கையடிக்கப் பார்க்கிறேன் (உ.வ.).*

*[கை + அடி-.]*

**கையடி**[2]**-த்தல்** *kai-y-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. கை தட்டிப் பறித்தல், ஏமாற்றுதல்; to deceive, to cheat. 2. ***கைபோடு-தல்*** பார்க்க; see *kai-pōḍu-.* 3. கைவேலை செய்தல்; to work with the hand, to do manual labour.

*[கை + அடி-]*

**கையடி**[3]**-த்தல்** *kai-y-aḍi-,* 4 செ.கு.வி.(v.i.) ஒப்புறுதி அளித்தலைக் காட்டும் வகையில் மற்றவரின் உள்ளங்கையில் அடித்தல்; to manifest approbation by striking the palm of another's hand, to agree, to assent (வழ.சொ.அக.). உறுதி (சத்தியம்) சொல்வார், தலையில் கைவைத்தல், துணிமேல் கைவைத்தல், புத்தகத்தின்மேல் கைவைத்தல், தாங்கள் மதிக்கும் பொருள்மேல் கைவைத்தல் எனப் பலவகையால் சொல்வதுண்டு. *"அவ்வாறே கையடித்தலும் வந்ததாம்"* என்ற பரிபாடல் வரியையும் இங்கு ஒப்புநோக்கலாம்.

**க.** கெய்வொய், கெய்பொய்.

*[கை + அடி-.]*

**கையடி**[4] *kai-y-aḍi,* பெ.(n.) களத்தில் கையாலடித்த நெல்மணி (தவசம்); grain threshed by hand on the threshing floor (G.Sm.D.I.i, 210).

*[கை + அடி.]*

நெற்கதிரினைக் கையால் அடித்துப் பெற்ற நெல்லைக் கையடி நெல், அடிநெல் என்றும் கையால் அடித்த பிறகு குவித்த நெல்லைப் போரடி நெல் என்றும் வழங்குவது வழக்காம்.

**கையடிப்படு**[1]**-தல்** *kai-y-aḍi-p-paḍu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஒரு பொருள் பல கைகளில் கடந்து செல்லுதல்; to pass through many hands, as a current coin. 2. கைக்குட்படுதல்; to obtain in hand.

*[கை + அடிபடு-.]*

**கையடிப்படு**[2]**-தல்** *kai-y-aḍippaḍu-,* 5 செ. குன்றாவி.(v.t.) ஆட்சிக்குட்படுத்துதல்; to have control over, rule.

*[கையடி + படு-.]*

**கையடியுண்(ணு)-தல்** *kai-y-aḍi-y-uṇ(ṇu)-,* 12 செ.கு.வி.(v.i.) ஈடுபடுதல்; to be absorbed, engrossed. *'இங்கு இவன் நீர்மையிலே கையடியுண்டிருக் கையாலே' (ஈடு,9:9:பிர.).*

*[கையடி + உண்-.]*

**கையடு-த்தல்** *kai-y-aḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1.***கையடைத்தல்*** பார்க்க; see *kai-y-aḍai-.* *"அடைக்கல நினக்கென வவன்வயிற் கையடுத்து" (பெருங்.மகத.23:49).* 2. அடைக்கலம் புகுதல் (உ.வ.); to take refuge in.

*[கை + அடு-.]*

**கையடுப்பு** *kai-y-aḍuppu,* பெ.(n.) கையால் எடுத்துச் செல்லத்தகும் சிற்றடுப்பு; small portable oven.

*[கை + அடுப்பு.]*

**கையடை**[1]**-த்தல்** *kai-y-aḍai-,* 4 செ.குன்றாவி.(v.t.) ஒப்படைத்தல்; to give charge to.

*[கை + அடை-.]*

**கையடை**[2] *kai-y-aḍai,* பெ.(n.) 1.அடைக்கலம்; refuge. 2. காக்குமாறு ஒப்படைத்த பொருள்; a thing which was handed over for safe keeping. 3. கடனைத் தீர்; to pay off or discharge a debt (கழ.த.அக.).

*[கை + அடை.]*

**கையடை**[3] *kai-y-aḍai,* பெ.(n.) 1.பிறர் கையில் ஒப்புவிக்கை; entrusting, depositing. 2. காக்கு மாறு ஒப்பித்த பொருள்; trust, deposit. *"கையடை யாகுமென்னு... ... காட்டுங் காலை" (கம்பரா. வாலிவ. 151).* 3. கையூட்டு (இ.வ.); bribe.

*[கை + அடை.]*

**கையடைப்பு** *kai-y-aḍaippu,* பெ.(n.) கைவசமான பொருள்; that which is kept under one's charge

or control. *நெஞ்சும் இவள்தனக்குக் கையடைப் பாகையாலே (ஈடு, 2,4:3) (செ.அக.).*

*[கை + அடைப்பு.]*

**கையணி** *kai-y-aṇi,* பெ.(n.) கைக்கு அணியும் அணிகலன்கள்; ornaments for the hand.

க. கெய்தொடிகெ.

*[கை + அணி.]*

**கையம்** *kaiyam,* பெ.(n.) 1.நீர் (அக.நி.); water. 2. கடல்; sea.

*[கயம் → கையம்.]*

**கையம்பாய்** *kai-y-ambāy,* கு.வி.எ.(adv.) 1. கையிலுள்ள அம்புபோலக் கிடைத்தற்கு எளிதாய்; like an arrow in the hand, ready at hand, easily available. 2. உறுதியாய்; unmistakably, most certainly.

*[கை + அம்பு + ஆய்.]*

**கையம்பு**[1] *kai-y-ambu,* பெ.(n.) சிறு அம்பு; small arrow.

ம. கையம்பு.

*[கை + அம்பு.]*

**கையம்பு**[2] *kai-y-ambu,* பெ.(n.) 1.உறுதி; firmness, strength. 2. நம்பிக்கை; trust.

*[கை + அம்பு.]*

**கையமர்-த்தல்** *kai-y-amar-,* 3 செ.கு.வி.(v.i.) அமர்ந்திருக்கக் குறிப்புக்காட்டல்; to give a sign, to remain peaceful hint to sit, by hands.

*[கை + அமர்-.]*

**கையமர்த்து-தல்** *kai-y-amarttu-,* 3 செ.குன்றாவி.(v.t.) 1. கையாற் குறிப்புக் காட்டி ஒலியடங்கச் செய்தல்; to silence, as an audience, by a show of hand. 2. கையால் குறிப்புக்காட்டி அவையோரை அமரச் செய்தல்; to motion a person or an assembly to be seated. 3. அடக்கி ஆளுதல்; to keep under proper control, as children. சிறுபிள்ளைகளைக் கையமர்த்திக்கொண்டு போவது எளிதான செயலன்று (இ.வ.). 4. ஒப்பாரியில் அழுகையை நிறுத்தச் செய்தல்; to stop weeping in lamentation. நீண்ட நேரமாக அழுபவளைக் கையமர்த்து (உ.வ.).

*[கை + அமர்த்து-.]*

**கையமை-த்தல்** *kai-y-amai-,* 3 செ.கு.வி.(v.i.) ***கையமர்த்தல்*** பார்க்க; see *kai-y-amar-.*

*[கை + அமை-.]*

**கையமைதி** *kai-y-amai-,* பெ.(n.) கைவிரல்களை நீட்டுதல், மடக்குதல், கூட்டுதல், விலக்குதல், குவித்தல் ஆகிய ஐந்து நிலைகளின் அடிப்படையில் தன் எண்ணத்தைப் புறத்தே வெளியிடுவதற்குக் காட்டும் நாட்டிய மெய்ப்பாட்டுக் குறிப்பு நிலைகள்; five types of hand and finger positions in dance posture of the ancient traditional art of dancing of the Tamils.

*[கை + அமைதி.]*

கையமைதிகளுள் 24 வகை தொழிற்கைகளும் 4 வகை எழிற்கைகளும் அடங்கும். 1. அருட்கை, 2. ஈகைக்கை, 3. கடகக்கை, 4. விளிக்கை, 5. மெய்பொருள் விளக்கக்கை, 6. சுட்டுக் கை 7. அச்சுறுத்தும் கை, 8. கத்திரிக்கை, 9. விரிதாமரைக்கை, 10. வியப்புக்கை, 11. தளிர்க்கை, 12. துயிற்கை, 13. அரைநிலாக்கை, 14. இருபாற்கை, 15. முத்தலைவேற்கை, 16. முட்டிக்கை, 17. சிகரக்கை, 18. நிலம் தொழுகை, 19. கிடக்கை, 20. கடியவலம், 21. தழுவற்கை, 22. விற்கை, 23. உடுக்கைக் கை, 24. ஒறுத்தல் கை.

**கையமைவு** *kai-y-amaivu,* பெ.(n.) சிலர் கைக்குள்ளதாகக் கருதப்படும் சிறப்புத்தன்மை (கைராசி); merit or luckiness of hand.

*[கை + அமைவு.]*

**கையயர்-தல்** *kai-y-ayar-,* 2 செ.கு.வி.(v.i.) 1.சோர்வடைதல்; to get tired. 2. நிலைமை தாழ்தல்; to be reduced in circumstances.

*[கை + அயர்-.]*

**கையர்** *kaiyar,* பெ.(n.) 1.கீழ்மக்கள் (திவா.); mean, despicable persons. 2. கள்ளர்; thieves. *"கைவந்தவா செய்யுங் கையர்" (திருநூற். 94).* 3. ஏமாற்றுபவர் (வஞ்சகர்); deceivers, cheats (தொல். சொல். 400, உரை). 4. மூடர்; ignorant persons. *"ஒராக் கையர்கள் தம்மைத் தாமே காதலித்து" (சிவதரு. பலவிசிட். 41).*

*[கை + அர்.]*

**கையரம்** *kai-y-aram,* பெ.(n.) அராவுவதற்குரிய சிறு எஃகு கருவி; hand file.

*[கை + அரம்.]*

**கையரம்பம்** *kai-y-arambam,* பெ.(n.) சிறு ஈர்வாள்; hand saw.

*[கை + அரம்பம்.]*

**கையராயர்** *kaiyarāyar,* பெ.(n.) கள்ளர்குடிப் பட்டப்பெயர்களுள் ஒன்று (கள்ளர் சரித்.ப.98); a caste title of Kaḷḷars.

*[கையன் + அரையர்.]

# கையமைதிகள்


அருட்கை


ஈகைக்கை


கடகக்கை


விளிக்கை


மெய்ப்பொருட்கை


சுட்டுக்கை


வெருவல் கை (அச்சுறுத்தும் கை)


கத்திரிக்கை


விரிதாமரைக் கை


வியப்புக்கை


தளிர்க்கை


துயிற்கை

**கையரி¹-த்தல்** *kai-y-ari-*, 4 செ.கு.வி. (v.t.) 1.கையில் தினவெடுத்தல்; to itch at hand. 2. அல்வழியில் பொருள் தேட முயலுதல்; to take effort to get things in improper way.

*[கை + அரி-.]*

**கையரி²** *kai-y-ari*, பெ.(n.) தேடல் (அக.நி.); seeking, searching.

*[கை + அரி - கையரி.]*

**கையரிக்கொள்(ளு)-தல்** *kai-y-ari-k-kol(lu)-*, 10 செ.குன்றாவி.(v.t.) 1. தேடுதல் (திவா.); to seek, search for. 2. வாரி அரித்துக் கொள்ளுதல்; to gather, sweep up. *"காடு கையரிக் கொண்டு" (சீவக. 30).*

*[கையரி + கொள்(ளு)-.]*

**கையரியம்** *kai-y-ariyam*, பெ.(n.) இரும்பு (மூ.அக.); iron.

*[கை + அரியம்.]*

**கையரிவாள்** *kai-y-ari-vāl*, பெ.(n.) சிற்றரிவாள்; small sickle.



கையரிவாள்

மறுவ. கருக்கறுவாள்.

*[கை + அரிவாள்.]*

**கையல்லது** *kai-y-alladu*, பெ.(n.) தகாதது, கடிபட்ட; that which is unbecoming. *"காதன்மை கையல்ல தன்கட் செயல்" (குறள்: 832).*

*[கை + அல்லது.]*

**கையலகு** *kai-y-alagu*, பெ.(n.) கைமரம்; rafter *"உத்தரமுதலியன பயில அவற்றின் மேலே பளிக்குக் கையலகாலே கைபரப்பி" (சீவக. 593, உரை).*

ம. கைலகு.

*[கை + அலகு.]*

**கையலப்பு** *kai-y-alappu*. பெ.(n.) 1.கையசைத்து நடத்தலிற் காணப்பெறும் நளினம்; a kind of zest in a walk. *"காதோரங் கொண்டைக்காரி கையலப்பில் கெட்டிக்காரி" (நா.பா.).* 2. ஒருவித அழகு; a kind of beauty.

*[கை + அலப்பு.]*

**கையலம்பு-தல்** *kai-y-alambu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. கையைக் கழுவுதல்; to wash the hand. 2. விலக்கி விடுதல்; to avert.

*[கை + அலம்பு-.]*

**கையலு-த்தல்** *kai-y-alu-*, 4 செ.கு.வி.(v.i.) ***கையயர்²-தல்*** பார்க்க; see *kai-y-ayar-*.

*[கை + அலு-.]*

**கையலை-த்தல்** *kai-y-alai-*, 4 செ.குன்றாவி. (v.t.) துன்புறுத்துதல்; to trouble, harass, torment. *"கையலைத் தோடுமோர் களிமகற் காண்மின்" (பெருங். உஞ்சைக். 40:98).*

கொ.வ. கையலப்பு.

*[கை + அலை-.]*

**கையழி-தல்** *kai-y-ali-*, 2 செ.கு.வி.(v.i.) செயலறுதல்; to be disabled, to be broken-hearted. *"கையழிந்து புலவர் வாடிய பசிய ராகி" (புறநா.240)*

*[கை + அழி-.]*

**கையளவு** *kai-y-alavu*, பெ.(n.) மிகச் சிறு அளவு; a small measure. கையளவு இடமிருந்தால் அவன் கற்பனை வானளவு சென்றுவிடும் (உ.வ.).

*[கை + அளவு.]*

**கையளி-த்தல்** *kai-y-ali-*, 4 செ.குன்றாவி.(v.t.) ***கையடை-த்தல்*** பார்க்க; see *kai-y-adai-* (செ.அக.).

*[கை + அளி-.]*

**கையளிப்பு** *kai-y-alippu*, பெ.(n.) பிறரிடம் ஒப்பிக்கை (Pond.); handing over, as charge or possession.

*[கை + அளிப்பு.]*

**கையற** *kai-y-ara*, கு.வி.எ. (adv.) முற்றும்; utterly. *"இவன் கையற நசிக்கின்ற காலத்து" (நீலகேசி. 187, உரை).*

*[கை + அற.]*

**கையறக்கொள்(ளு)-தல்** *kai-y-ara-k-kol(lu)-*, 10 செ.குன்றாவி.(v.t.) முழுத்தொகையினையும் பெற்றுக்கொள்ளுதல்; to receive full amount.

"விலைப்பொருள் இந்நாளிலே கையிலே கையறக் கொண்டு" (தெ.க.கல்.தொ.V. 433).

[கை + அற + கொள்.]

**கையறம்**[1] *kai-y-aram,* பெ.(n.) இரங்கற்பா; elegy. "கம்பன் பேரிற் பாடிய கையறம்" (தமிழ்நா. 92).

**மறுவ.** வசைக்கவி.

[கை + அறம்.]

**கையறம்**[2] *kai-y-aram,* பெ.(n.) பெருந்துன்பம்; great distress. "வாளமர்கட் கையறமாம்" (பாரதவெண். 176).

[கை + அறம்.]

**கையறல்** *kai-y-aral,* பெ.(n.) **கையறவு** பார்க்க; see *kai-y-aravu.*

[கை + அறல்.]

**கையறல்** *kai-y-aral,* பெ.(n.) 1.ஒழுக்கமின்மை; indecency. 2.செயலின்மை; powerlessness. 3. இரத்தல்; begging.

**மறுவ.** கையறவு.

[கை + அறல்.]

**கையறல்விலக்கு** *kaiyaral-vilakku,* பெ.(n.) ஓரணிகாரம்; a kind of decoration. அது கையறு தலைக் காட்டி விலக்குவது (உ.வ.).

[கையறல் + விலக்கு.]

**கையறவு** *kai-y-aravu,* பெ.(n.) 1.செயலற்ற நிலை; state of utter prostration, helplessness. "வாராள் காயசண் டிகையெனக் கையற வெய்தி" (மணிமே. 20:26). 2. இறப்பு; death. "கையற வுரைத்துக் கை சோர்ந் தன்று" (பு.வெ.10. சிறப்பிற். 14, கொளு). 3. துன்பம், பெருந்துயர்; affliction, sorrow, disaster. "யான்பட்ட கையறவு காணாயோ" (கம்பரா. சூர்ப். 107). 4. ஊடல்; love quarrel. "கையறவு வட்டித்து" (பரிபா.10:33). 5. ஏழ்மை; impecuniosity, poverty. "பிறர்கை யறவு தான்நா ணுதலும்" (புறநா.157:2). 6. ஒழுக்கமின்மை (வின்.); immorality.

[கை + அறவு.]

**கையறி-தல்** *kai-y-ari-,* 2 செ.கு.வி.(v.i.) 1.பழக்க மாதல்; to become trained or adept. 2. செய்யுமுறைமை அறிதல்; to know how to do things; to be discreet and knowing. "கையறியாப் பேதை" (குறள். 836).

**மறுவ.** கையறல்.

[கை + அறி-.]

**கையறிந்தவன்** *kai-y-arindavan,* பெ.(n.) 1. நாடி பார்க்க அறிந்தவன்; one who is skilled in examining pulse. 2. தேர்ந்த மருத்துவன்; an experienced physician (சா.அக.).

[கை + அறிந்தவன்.]

**கையறியாமை** *kai-y-ariyāmai,* பெ.(n.) செய்வ தறியாமை; helplessness. "கையறியாமை உடைத்தே" (குறள்.925).

[கை + அறியாமை.]

**கையறு-தல்** *kai-y-aru-,* 20 செ.கு.வி.(v.i.) 1.செயலற்றுப் போதல்; to be laid prostrate, be overcome, as with pity. "காணா வுயிர்க்குங் கையற் றேங்கி" (மணிமே.3:89). 2. மானமழிதல்; to be broken hearted. "கையற் றின்ன லெய்தலும்" (ஞானா. 31:22). 3. அளவு கடத்தல்; to exceed limits. "காப்பின் கடுமை கையற வரினும்" (தொல். பொருள்.114). 4. மீட்சி யரிதாதல்; to be irremediable, overwhelming. "கையறு துன்பங் காட்டினுங் காட்டும்" (சிலப். 10:71). 5. இறத்தல்; to die. "காதி மலைந்தே கையற்றார்" (பாரத. பதினாறாம்.2). 6. ஒழுக்கம் நீங்குதல்; to become immoral.

[கை + அறு-.]

**கையறுகிளவி** *kai-y-aru-kilavi,* பெ.(n.) தாய் துஞ்சாமை நாய் துஞ்சாமை முதலாய காப்பு மிகுதி சொல்லி வரவு விலக்குதலைக் கூறும் அகத்துறை (அகப்.), (களவியல்.99.); theme describing the obstacles to the hero visiting the heroine.

[கையறு + கிளவி.]

**கையறுத்துக்கொள்(ளு)-தல்** *kai-y-aruttu-k-kol(lu)-,* 16 செ.கு.வி.(v.i.) பொருள் இழப்பு ஏற்படுதல் (இ.வ.); to suffer loss of money or materials.

[கையறுத்து + கொள்(ளு)-.]

**கையறுதி** *kai-y-arudi,* பெ.(n.) 1.அறுதியாக விற்கை (வின்.); outright sale. 2. முற்றும் கைவிட்டு நீக்குகை (வின்.); quitting finally; relinguishing entirely, as one's claim or right. 3. **கையுறுதி**[2] பார்க்க; see *kai-y-urudi* (செ.அக.).

[கை + அறுதி.]

**கையறுதியாய்விடல்** *kai-y-arudiyāy-vidal,* பெ.(n.) தீராதன கைவிடுதல்; giving up as incurable; giving up all hopes (சா.அக.).

[கை + அறுதியாய் + விடல்.]

# கையமைதிகள்


அரைநிலாக்கை


இருபாற்கை


முத்தலை வேற்கை


முட்டிக்கை


சிகரக்கை


நிலம் தொழுகை


கிடக்கை


கடியவலம்


தழுவற்கை


விற்கை


உடுக்கைக்கை


ஒறுத்தல்கை

**கையறுநிலை** *kai-y-aṟunilai,* பெ.(n.) 1.தலைவனேனும் தலைவியேனும் இறந்தமைக்கு அவர் ஆயத்தார் முதலானோர் செயலற்று மிக வருந்தியதைக் கூறும் புறத்துறை; theme describing the utter helplessness of dependents at the death of a chief or his wife. "*கழிந்தோர் தேஎத் தழிபட ருறீஇ, ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும்*" (*தொல். பொருள். 79*). 2. கையறுநிலை பற்றிய சிற்றிலக்கியம் (வின்.); a poem on *kai-aṟunilai.*

[*கையறு + நிலை.*]

வாட்போரில் இறந்த மன்னனைக் கண்டு யாழ்ப்பாணரும் சுற்றத்தாரும் அவன் பட்ட பாட்டைக் கூறி இரங்கிப் பாடப்பெற்ற இலக்கியம்.

**கையறை**[1] *kai-y-aṟai,* பெ.(n.) ***கையாறு***[2] பார்க்க; see *kai-y-āṟu.* "*கலன் மாய்த்தவர் கையறை போல்*" (*தணிகைப்பு. களவு. 104*).

**மறுவ.** கையறவு, கையறல்.

[*கை + அறை.*]

**கையறை**[2] *kai-y-aṟai,* பெ.(n.) ***கையாறு***[3] (சூடா.) பார்க்க; see *kai-y-āṟu* (செ.அக.).

**கையறை**[3] *kai-y-aṟai,* பெ.(n.) சிறிய பொருள் வைப்பறை (இ.வ.); small store-room, as in a temple (செ.அக.).

[*கை + அறை. கை = சிறிய.*]

**கையாக்கம்** *kai-y-ākkam,* பெ.(n.) கைபடுவதனால் உண்டாவதாகக் கருதும் நன்மை; luckiness associated with one's hand. அவன் கையாக்க முள்ளவன் (இ.வ.).

**மறுவ.** கைராசி

[*கை + ஆக்கம்.*]

**கையாட்சி** *kai-y-āṭci,* பெ.(n.) 1.கைப்பழக்கம்; constant use and practice. 2. தொழில்; profession, occupation. "*ஆலயத்தின் களவு கையாட்சியான்*" (*குற்றா. தல. மந்தமா. 90*). 3. ஒருவன் வசமானது; that which is on hand or in one's possession and enjoyment. 4. பட்டறிவினால் நன்மையெனத் தெளிந்தது (வின்.); that which has been proved good by experience (செ.அக.).

[*கை + ஆட்சி.*]

**கையாட்சி மருந்து** *kai-y-āṭci-marundu,* பெ.(n.) கைதேர்ந்த மருந்து; approved medicine efficacious drug (சா.அக.).

[*கை + ஆட்சி + மருந்து.*]

**கையாடல்** *kai-y-āḍal,* பெ.(n.) 1. பயன்படுத்துகை; administration, usage. 2. திருட்டு; theft. 3.நம்பிக்கைக்கு மாறாகப் பிறர் பொருளைக் கவர்ந்து கொள்ளுதல்; misappropriation. அரசு பணத்தைக் கையாடல் செய்த அலுவலருக்கு ஓராண்டு கடுங்காவல் தண்டனை (உ.வ.).

[*கை + ஆடல்.*]

**கையாடு**[1]**-தல்** *kai-y-āḍu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. பயன் படுத்துதல்; administering as medicine. 2. நம்பிக்கைக்கு மாறாகப் பிறர் பொருளைக் கவர்ந்து கொள்ளுதல்; misappropriation of funds (சா.அக.).

[*கை + ஆடு-.*]

**கையாடு**[2]**-தல்** *kai-y-āḍu-,* 5 செ.கு.வி.(v.i.) முதுமையின் அறிகுறியாகக் கை நடுங்குதல்; shivering of hands due to old age.

[*கை + ஆடு.*]

**கையாடு**[3]**-தல்** *kai-y-āḍu-,* 5 செ.கு.வி.(v.i.) ***கையாள்(ளு)-தல்*** பார்க்க; see *kai-y-āl(lu)-,*

**ம.** கையாடு.

[*கை + ஆடு-.*]

**கையாண்ட மருந்து** *kai-y-āṇḍa-marundu,* பெ.(n.) நோய்க்குக் கொடுத்து ஆய்ந்த மருந்து; tried medicine (சா.அக.). மஞ்சட்காமாலைக்குக் கீழ்வாய் நெல்லி கைகண்ட மருந்தாகும் (உ.வ.).

[*கை + ஆண்ட + மருந்து.*]

**கையாணி** *kai-y-āṇi,* பெ.(n.) கைமரத்திற் சட்டத்தை யிறக்கும் ஆணி; rafter-nail (C.E.M.)

[*கை + ஆணி.*]

**கையாந்தகரை** *kaiyāndagarai,* பெ.(n.) கரிசலாங்கண்ணி (பிங்.); a plant growing in wet places, Eclipta alba (செ.அக.).

[*கய்யாந்தகரை → கையாந்தகரை.*]



கையாந்தகரை

**கையாப்பலகை** *kaiyā-p-palagai,* பெ.(n.) வள்ளத்தின் குறுக்குவாட்டில் இடப்படும் பலகைகளில் ஒன்று; one of the cross planks used in wooden boat.

*[கையாம் + பலகை.]*

**கையாப்புடை** *kai-y-āppudai,* பெ.(n.) மரவகை (L.); white Australian teak tree.

**Malay.** kāyūputi.

*[கையா + புடை.]*

**கையாயிரத்தன்** *kai-y-āirattan,* பெ.(n.) வாணாசுரன்; an enemy of the Aryans who has thousand arms.

*[கை + ஆயிரம் + அத்து + அன்.]*

**கையார** *kai-y-āra,* கு.வி.எ.(adv.) கைக்குப் பொந்திகையாக (திருப்தியாக); to the satisfaction of one's hand, liberally, in large quantities.

**ம.** கையார; **க.** கையாரெ; **து.,பட.**கய்யார.

*[கை + ஆர.]*

**கையால்முகந்துடை-த்தல்;** *kaiyāl-mugan-tudai-*, 4 செ.குன்றாவி. (v.t.) பறவைக் குற்றத்தால் குழந்தைகள் நோயுற்றபோது அடிக்கடி கையினால் முகத்தைத் தேய்த்துக் கொள்ளுதல்; rubbing of the face with the hands, as children do in morbid diathesis (சா.அக.).

*[கை + ஆல் + முகம் + துடை-.]*

**கையாலா-தல்** *kaiyāl-ā-,* 6 செ.கு.வி.(v.i.) செய்யும் ஆற்றல் பெறுதல்; to be able to work or accomplish (செ.அக.). உன் கையால் ஆகுமா? (உ.வ.).

**க.** கெய்லாகு.

*[கை + ஆல் + ஆகு-.]*

**கையாலாகாதவன்** *kaiyāl-āgādavan,* பெ.(n.) எவ்வேலையும் செய்யத் திறமையற்றவன்; an incapable or incompetent person. *கையாலாகாதவனுக்குக் கருக்கரிவாள் பத்து வேண்டுமா. (பழ.).*

*[கையால் + ஆகாதவன்.]*

**கையாலேபாணி-த்தல்** *kaiyāl-e-pāni-,* 4 செ.குன்றாவி.(v.t.) கையால் தூக்கிப்பார்த்து நிறையறிதல் (இ.வ.); to estimate the weight of a thing by hand.

*[கையாலே + பாணி-.]*

**கையாள்**[1] *kai-y-āl,* பெ.(n.) குறிப்பறிந்து செய்பவன்; one who does by taking the cue (வழ.சொ.அக.).

**ம.** கையாள்; **து.** கையாளு; **பட.** கைஆ.

*[கை + ஆள்.]*

**கையாள்**[2] *kai-y-āl,* பெ.(n.) 1. குற்றேவல் செய்வோன்; trustworthy servant, waiter, menial servant. *"உனக்குக் கையாளாய் உன் இசைவு பார்த்து" (அஷ்டாதச. முமுட்சுப். சரம. 26).* 2. உதவி செய்வோன் (உ.வ.); helping hand. (செ.அக.).

**ம.** கய்யாள்; **க., து.** கையாளு; **பட.** கைஆ.

*[கை + ஆள்.]*

**கையாள்(ளு)**[3]**-தல்** *kai-y-āl(lu),* 10 செ.குன்றாவி. (v.t.) 1.கையிலெடுத்து ஆளுதல்; to handle, use. 2. வழக்கத்துக்குக் கொண்டு வருதல்; to bring into vogue or practice, to make constant use of. 3. வல்லந்தமாகக் கவர்தல்; to usurp, misappropriate. 4. கற்பழித்தல்; to violate a woman's chastity.

**ம.** கய்யாளுக, கையாளுக.

*[கை + ஆள்(ளு)-.]*

**கையாளி** *kai-y-āli,* பெ.(n.) 1.திறலோன்; a good hand, skillful person. 2. கொடியன், கயவன்; wicked man. 3. பாசாங்கு செய்பவன்; hypocrite, dissembler, pretender (யாழ்.அக.).

**க.** கய்யாலி; **தெ.** கயாலி.

*[கை + ஆள் + இ.]*

'இ'.சொல்லாக்க ஈறு. **ஒ.நோ.** மலையாளி, தொழிலாளி.

**கையாளி-த்தல்** *kai-y-āli-,* செ.குன்றாவி.(v.t.) ஒப்படைத்தல்; to hand over, as charge or possession. "கிராமத்தார்வசம் கையாளிக் கையில்"(T.A.S.V:150).

**கையாளு-தல்** *kai-y-ālu-,* செ.கு.வி. (v.i.) எடுத்துப் பயன்கொள்ளல்; to adopt, use, handle.

*[கை + ஆள்(ளு)-.]*

**கையாற்சா-தல்** *kaiyār-šā-,* 19 செ.கு.வி.(v.i.) ஒருவரால் கொல்லப்படுதல்; being killed by one (சா.அக.).

*[கையால் + சா-.]*

**கையாற்றல்** *kai-y-ārral,* பெ.(n.) ***கைவலிமை*** பார்க்க; see *kai-valimai.*

*[கை + ஆற்றல்.]*

**கையாற்றி** *kai-y-āṟṟi,* பெ.(n.)1.தொழிலுக்கு உதவுகை; relieving or aiding in manual labour. 2. இளைப்பாறல்; relief or rest from work. *நீ வருவாயானால் எனக்குக் கையாற்றியாயிருக்கும்.* 3. ஆறுதல்; consolation. 4. உதவி; help.

*[கை + ஆற்றி.]*

**கையாற்று-தல்** *kai-y-āṟṟu-,* 9 செ.கு.வி.(v.i.) 1. அடைதல்; to attain, reach. 2. மாற்றுதல்; to change. 3. இளைப்பாற்றுதல்; to relieve, console.

*[கை + ஆற்று-.]*

**கையாறு[1]-தல்** *kai-y-āṟu-,* 8 செ.குன்றாவி. (v.t.) உதவி செய்து இளைப்பாறச் செய்தல்; to give or offer relief as by a subsitute.

*[கை + ஆறு-.]*

**கையாறு[2]-தல்** *kai-y-āṟu-,* 5 செ.கு.வி.(v.i.) இளைப்பாறுதல்; to rest a while from work. *"பண்ணுமயன் கையாறவும்" (பட்டினத். திருப்பா. பொது. திருவை.).*

*[கை + ஆறு-.]*

**கையாறு[3]** *kai-y-āṟu,* பெ.(n.) 1. செயலறுகை; state of utter prostration, helplessness. 2. துன்பம்; distress, affliction, suffering. *"கலக்கத்தைக் கையாறாக் கொள்ளாதா மேல்" (குறள். 627).*

*[கை + ஆறு.]*

**கையாறு[4]** *kai-y-āṟu,* பெ.(n.) ஒழுக்கநெறி; conduct, behaviour. *"இடுதுனி கையாறா" (பரிபா. 8:78).*

*[கை + ஆறு.]*

**கையாறு[5]** *kai-y-āṟu,* பெ.(n.) 1. வரலாறு; history. 2. சிற்றாறு; small river. *"அண்ணா நாட்டு எல்லையில் திருந்தி கையாற்றை அடைத்து ஏரியும் வெட்டி தூம்பும் இட்டு"* (தெ.கல்.தொ8.கல்.83).

*[கை + ஆறு.]*

**கையான்** *kai-y-āṉ,* பெ.(n.) 1.***கையாந்தகரை*** பார்க்க; see *kaiyāntagarai.* 2. கொடிகையான்; creeper eclipse. 3. பொற்றலைக் கையான்; Mari-gold (சா.அக.).

ம. கய்யன்யம்.

*[கை → கையான்.]*

**கையானீர்** *kai-y-āṉīr,* பெ.(n.) கரிசலாங்கண்ணிச் சாறு; the juice of the bee plant (சா.அக.).

*[கையான் + நீர்.]*

**கையிக-த்தல்** *kai-y-iga-,* 3 செ.கு.வி.(v.i.) 1. அளவுக்கு மேற்படுதல்; to exceed the limits. *"கையிகந்த தண்டமும்" (குறள். 567).* 2. மீறுதல்; to get beyond one's control. *"கரப்பினும் கையிகந்து" (குறள். 1271).* 3. அகன்று நிற்றல்; to stand away. 4. ஒழுங்குதப்புதல்; to derail from rightful conduct or behaviour. 5. கடத்தல்; to smuggle.

*[கை + இக-.]*

**கையிசுவாதம்** *kai-y-isu-vādam,* பெ.(n.) தோளில் மிக்க குடைச்சலை உண்டாக்கும் ஊதைநோய்; a kind of rheumatism characterised by pain all over body, numbness of certain parts and pain in the shoulders (சா.அக.).

*[கை + இசு + வாதம்.]*

**கையிசை-தல்** *ka-y-iśai-,* 2 செ.கு.வி.(v.i.) மனம் இணங்குதல்; to agree, assent. *"காஞ்சன மாலை கையிசைந்து" (பெருங். உஞ்சைப். 44:150).*

*[கை + இசை-.]*

**கையிடு-தல்** *kai-y-iḍu,* 20 செ.கு.வி.(v.i.) 1. கையைத் தொய்த்தல்; to dip one's hands. *'நெய்யிலே கையிட வல்லாரார்' (ஈடு,6,1:5).* 2. காரியத்திற் புகல்; to undertake, engage in. 3. ஒரு தொழிலில் வேண்டாது தலையிடுதல்; to meddle, interfere officiously. 4. நேர்ப்படுதல்; to put in order.

*[கை + இடு-.]*

**கையிடை** *kai-y-iḍai,* பெ.(n.) கையூட்டு (உ.வ.); bribe, hush - money.

*[கை + இடை.]*

**கையிணக்கம்** *kai-y-iṇakkam,* பெ.(n.) 1.பொருத்தம்; fitness, suitability, complete agreement. 2. ***கையடக்கம்[2]*** பார்க்க; see *kai-y-aḍakkam.* 3. கைகலந்து சண்டையிடுகை; boxing.4. வைப்பாட்டி வைக்கை; keeping a mistress or concubine. 5. போர் செய்கை; struggling, agitating.

ம. கையிணக்கம்.

*[கை + இணக்கம்.]*

**கையிணக்கமாதல்** *kai-y-iṇakkam-ādal,* பெ.(n.) கைவயமாதல்; submitting to one's pursuasion (சா.அக.).

*[கை + இணக்கம் + ஆதல்.]*

**கையிருப்பு**[1] *kai-y-iruppu,* பெ.(n.) செங்குவளைப்பூ; red Indian water lily (சா.அக.).

*[கை + இருப்பு.]*

**கையிருப்பு**[2] *kai-y-iruppu,* பெ.(n.) 1.இருப்புத் திட்டம்; money on hand, cash balance of an account. 2. கைப்பணம்; cash on hand. 3. உணவுப் பொருள் முதலியவற்றின் இருப்பு; stock-account.

*[கை + இருப்பு.]*

**கையில்** *kaiyil,* பெ.(n.) தேங்காயில் பாதி; one - half of the coconut (சா.அக.).

**ம.** கையில்.

*[கயில் → கையில்.]*

**கையில் பிடிக்க முடியாமை** *kai-y-il-piḍikka-muḍiyāmai,* பெ.(n.) அளவிடவியலாத மகிழ்ச்சி; immense joy. தேர்விலே வெற்றி பெற்றதும் கையிலே பிடிக்க முடியலே (நெல்லை.)

*[கை + இல் + பிடிக்க + முடியாமை.]*

**கையிலாகாதவன்** *kaiyil-āgādavaṉ,* பெ.(n.) ***கையாலாகாதவன்*** பார்க்க; see *kaiyāl-āgādavaṉ.* *"கையிலாகாதவன் போலக் கண்டோர் பழிக்க" (இராமநா. ஆரணி. 24).*

*[கையால் + ஆகாதவன்.]*

**கையிலி** *kai-y-ili,* பெ.(n.) கை இல்லாதவன்; lame of hand (சா.அக.).

*[கை + இலி. இ - பண்புகுறித்த ஈறு.]*

**கையிழ–த்தல்** *kai-y-iḻa-,* 2 செ.கு.வி.(v.i.) காணாமற் போதல், பயன் குறைந்து உள்ளதும் குறைவது; to be lost, to lose capital and the profit there of.

*[கை + இழ-.]*

**கையிழப்பு** *kai-y-iḻappu-* பெ.(n.) 1. கையில் உள்ளதை இழக்கை; loss of anything on hand. 2. கைமுதலுக்கு ஏற்படும் இழப்பு; loss of capital in trade.

*[கை + இழப்பு.]*

**கையிளகு–தல்** *kai-y-iḷagu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கைப்பிடிப்பு நெகிழ்தல்; to become slack in hand-grip. 2. தாராளமாதல்; to be liberal, bountiful. 3. கொடுக்கச் சம்மதித்தல்; to agree to give.

*[கை + இளகு-.]*

**கையிளை–த்தல்** *kai-y-iḷai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. ***கைசலி–த்தல்*** பார்க்க; see *kai-šali-.* 2. செல்வநிலை குன்றுதல்; to be reduced in circumstances.

*[கை + இளை-.]*

**கையிற்கனி** *kaiyiṟ-kaṉi,* பெ.(n.) நெல்லிக்காய்; gooseberry (சா.அக.).

*[கையில் + கனி.]*

**கையிற்சாதல்** *kaiyiṟ-sādal,* பெ.(n.) ஒருவர் கையில் தாங்கப்பட்ட நிலையில் இறத்தல்; dying while resting on one's hand (சா.அக.).

*[கையில் + சாதல்.]*

**கையிறக்கம்** *kai-y-iṟakkam,* பெ.(n.) 1. சீட்டு விளையாட்டில் முதலில் சீட்டை இறக்குகை; first serve in a game of cards. 2. செல்வநிலை குன்றுகை; reverse of fortune. 3. கைவிட்டிறங்குதல்; to get down from hand.

*[கை + இறக்கம்.]*

**கையிறக்கு–தல்** *kai-y-iṟakku-,* 5 செ.கு.வி.(v.i.) தொடர்வண்டி (இரயில்) வர அடையாளமாகக் கைகாட்டியைக் கீழிறக்குதல்; lowering of arm of train signal.

*[கை + இறக்கு-.]*

**கையிறுக்கம்** *kai-y-iṟukkam,* பெ.(n.) 1. சிக்கனம்; thrift. 2. உதவாத இயல்பு, இவறன்மை, கஞ்சத்தனம்; miserliness.

**மறுவ.** இவறன்மை. கஞ்சத்தனம். ஈயாமாரித்தனம்.

*[கை + இறுக்கம்.]*

**கையிறை** *kai-y-iṟai,* பெ.(n.) 1. ***கைரேகை*** பார்க்க; see *kai-rēgai.* 2. கைவிரலின் இடுக்கு; crotch of the fingers.

*[கை + இறை.]*

**கையீடு** *kai-y-īḍu,* பெ.(n.) பணம் செலுத்துகை; receipt for remittance. "பதினெட்டாவது தியதி கையீடு ஒன்றினால் காசு" (S.I.I. IV. 134).

**ம.** கையீடு.

*[கை + ஈடு. இடு → ஈடு.]*

**கையுங்கணக்கும்** *kaiyuṅ-kaṇakkum,* பெ.(n.) வரையறை; limit, bound. *அங்கே வந்த பட்டத்துக்குக் கையும் கணக்குமில்லை* (கொ.).

*[கையும் + கணக்கும்.]*

**கையுங்களவுமாய்** *kaiyuṅ-kaḷavum-āy,* பெ(n.) ***கைமெய்யாய்*** பார்க்க; see *kai-mei-yāi.*

*[கையும் + களவும் + ஆய்.]*

**கையுடன்** *kai-y-uḍaṉ,* வி.எ.(adv.) ***1.கையோடு*** பார்க்க; see *kai-y-ōḍu.* 2. உடனே; at once, immediately.

*[கை + உடன்.]*

**கையுடை** *kai-y-uḍai,* பெ.(n.) கையாப்பு, கைக்கவசம்; boxing gloves.

**மறுவ.** கையாப்பு, கையுறை.

**ம.** கய்யுற.

*[கை + உடை.]*

**கையுண்(ணு)-தல்** *kai-y-uṇ(ṇu)-,* 13 செ.கு.வி.(v.i.) பிறர் கைபார்த்து உண்டு வாழ்தல்; to live a dependent life. *"சான்றவர் கையுண்டுங் கூறுவர் மெய்" (பழ. 83).*

*[கை + உண்(ணு)-.]*

**கையுதயம்** *kai-y-udayam,* பெ.(n.) பிள்ளைப்பேற்றின்போது குழந்தையின் கை வெளிப்படல் (சா.அக.); emergence of hand at child birth.

*[கை + உதயம்.]*

**கையுதவி** *kai-y-udavi,* பெ.(n.) 1. சமையத்தில் உதவும் உதவி; timely help. 2. துணையான உதவிப் பொருள்; ready or necessary help as a friend, a weapon. 3. சிற்றுதவி; trifling aid or assistance. 4. கையூட்டு; bribe. 5. ஆளுதவி; provision of helping hands.

**க.** கெய்நெரவு; **பட.** கைநெர.

*[கை + உதவி.]*

**கையுதிர்க்கோடல்** *kai-y-udir-k-kōḍal,* பெ.(n.) விட்டு விலகும்படி கையசைத்துக் குறிப்பிடுகை; waving one's hand as a signal to quit or go away. *"காண மிலியென கையுதிர்க் கோடலும்" (மணிமே. 16:10).*

*[கை + உதிர் + கோடல்.]*

**கையுபகாரம்** *kai-y-ubagāram,* பெ.(n.) ***1.கையுதவி*** பார்க்க; see *kai-y-udavi.* 2. ஒத்தாசை; help.

*[கை + உபகாரம்.]*

**கையுமெய்யுமாய்** *kaiyu-meiyum-āi,* வி.எ.(adv.) ***கைமெய்யாய்*** பார்க்க; see *kai-mei-y-āy.*

*[கையும் + மெய்யும் + ஆய்.]*

**கையுயர்-தல்** *kai-y-uyar-,* 4 செ.கு.வி.(v.i.) ***கையோங்கு[1,2]-தல்*** பார்க்க; see *kai-y-ōṅgu-.*

*[கை + உயர்-.]*

**கையுயர்த்து-தல்** *kai-y-uyarttu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. ***கையோங்கு-தல்*** பார்க்க; see *kai-y-ōṅgu.* 2. ***கையெடு-த்தல்*** பார்க்க; see *kai-y-ēḍu-.*

*[கை + உயர்த்து-.]*

**கையுருவிச்சுவர்** *kai-y-uruvi-c-cuvar,* பெ.(n.) கைப்பிடிச்சுவர் (புதுக்.கல்.213); parapet wall.

*[கை + உருவி + சுவர்.]*

**கையுரொக்கம்** *kai-y-yurokkam,* பெ.(n.) கைவயத்திலிருக்கும் பணம்; ready cash.

**மறுவ.** கைப்பணம், கைக்காசு.

*[கை + உரொக்கம்.]*

**கையுழற்றி** *kai-y-uḻaṟṟi,* பெ.(n.) கைநடுக்கம்; spasms in the arms.

*[கை + உழற்றி.]*

**கையுழைப்பு** *kai-y-uḻaippu,* பெ.(n.) 1.வேலை; toil. 2. உடலுழைப்பு (மீன்.பிடி.தொ.); manual labour.

*[கை + உழைப்பு.]*

**கையுளி** *kai-y-uḷi* பெ.(n.) சற்றொப்ப இரண்டு விரலம் (அங்குலம்) அகலம் கொண்ட உளி; a chisel of about two inches in width.



கையுளி

**ம.** கையுளி(பட்டையுளி); **து.** கயிஉளி.

*[கை + உளி.]*

**கையுறு[1]-தல்** *kai-y-uṟu-,* 20 செ.கு.வி.(v.i.) கைவயமாகக் கிடைத்தல்; to come to hand, to be received, to attain. *"வானகம் கையுறினும்" (நாலடி. 300).*

**கையுறு²–தல்** *kai-y-uṟu-,* 20 செ.குன்றாவி.(v.t.) தீண்டுதல்; to approach, have intercourse with. *"பூப்பு மகளிர் கையுறாப் பொருட்டே" (திவா. பண்பு பற்றிய.).*

*[கை + உறு-.]*

**கையுறு³–தல்** *kai-y-uṟu-,* 20 செ.குன்றாவி.(v.i.) 1. கைக்கொள்ளுதல்; to hold. 2. பகுத்தல்; to divide. *"நீங்கலாக நின்ற பல மரங்களோடும் ஆடுபடுத்தும் பிடிலிகை வாரி அரைக்கால் பொன்னுக்குக் கீழ்ப்பட்ட பொன்னும் இக் கோயில் சிவப் பிராமணர்கள் கையுற்று தாங்கள் அநுபவித்து" (தெ.கல்.தொ. 7 கல். 801.).*

*[கை + உறு-.]*

**கையுறுதி** *kai-y-uṟudi,* பெ.(n.) 1.கடனுக்கு வைக்கப்படும் ஈடு; security deposited for loan. 2. கையடித்து விலையுறுதி செய்கை; completing a bargain by striking hands. 3. அட்டவணை; table. 4. வாய்மொழி உறுதி; oral assurance.

*[கை + உறுதி.]*

**கையுறை¹** *kai-y-uṟai,* பெ.(n.) 1.காணிக்கைப் பொருள்; offerings, presents from an inferior to a superior, visiting presents. *"மையறு சிறப்பிற் கையுறை யேந்தி" (சிலப். 8:22).* 2. மொய்ப்பணம்; marriage presents. 3. தலைவிக்கு அன்பு பாராட்டித் தலைவன் கொடுக்கும் தழை முதலிய நன்கொடை (தஞ்சைவா. 97 தலைப்பு); customary love-token consisting of a bunch of tender leaves. 4. ***கையுடை*** பார்க்க; see *kai-y-uḍai.* 5. கையூட்டு; bribe.

**ம.** கையுற; **க.** கெய்சில.

*[கை + உறை.]*

**கையுறை²** *kai-y-uṟai,* பெ.(n.) விரல்களைத் தனித்தனியாக நுழைத்து மணிக்கட்டு வரையில் மாட்டிக்கொள்ளும் காப்பு உறை; a glove.

**மறுவ.** கைச்சாடு.

**க.** கெப்சில.

*[கை + உறை.]*

**கையுறையெழுது–தல்** *kai-y-uṟai-y-eḻudu-,* 5 செ.கு.வி.(v.i.) திருமணம் முதலிய விழாக்களில் மொய்க்கணக்கெழுதுதல்; to make a list of presents made on marriage or other occasions. *"கையுறை யெழுதினர்" (சீவக. 829).*

*[கை + உறை + எழுது-.]*

**கையூக்கம்** *kai-y-ūkkam,* பெ.(n.) ***கையூற்றம்*** பார்க்க; see *kai-y-ūṟṟam* (செ.அக.).

*[கை + ஊக்கம்.]*

**கையூக்கு** *kai-y-ūkku,* பெ.(n.) ***கையூற்றம்*** பார்க்க; see *kai-y-ūṟṟam.*

*[கை + ஊக்கு.]*

**கையூட்டு** *kai-y-ūṭṭu,* பெ.(n.) நேர்மைக்குப் புறம்பாகச் செயற்பட வேண்டியோ, நேர்மையாகச் சட்டபூர்வமாக மேற்கொள்ள வேண்டிய செயற்பாட்டை மேற்கொள்ளாமலிருப்பதற்கோ கொடுக்கப்படும் பணம் அல்லது பொருள் (லஞ்சம்); bribe, illegal gratification, hush-money. *"எப்பேர்ப்பட்ட கையூட்டுங் கொண்டான்" (சோழவமி. 53).*

*[கை + ஊட்டு.]*

**கையூழ்** *kai-y-ūḻ,* பெ.(n.) வண்ணத்திற் செய்த பாடலெல்லாம் இன்பமாகயாழிற் பாடுதல் (உறை.சொ.5); to play music melodiously.

*[கை + ஊழ்.]*

**கையூற்றம்** *kai-y-ūṟṟam,* பெ.(n.) கையின் வலிமை, வல்லமை; strength of the arm, skill.

**ம.** கையூற்றம்.

*[கை + ஊற்றம்.]*

**கையூறல்** *kai-y-ūṟal,* பெ.(n.) வெள்ளையினால் கையிற் காணும் ஊறல் நோய்; venereal itching of the palm (செ.அக.).

*[கை + ஊறல்.]*

**கையூனம்** *kai-y-ūṉam,* பெ.(n.) கை பழுது; privation of hand or arm (செ.அக.).

*[கை + ஊனம்.]*

**கையெடு¹–த்தல்** *kai-y-eḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கையைத் தூக்குதல்; to raise hands. 2. கும்பிடுதல்; to salute, as a mark of respect. *"அவன் எவரையும் கையெடுப்பதில்லை" (செ.அக.).* காந்தியண்ணலைச் சுடுமுன் நாதுராம் விநாயக கோட்சே அவரைக் கையெடுத்துக் கும்பிட்டான்.

*[கை + எடு-.]*

**கையெடு²–த்தல்** *kai-y-eḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கையை நீக்குதல்; to withdraw the hand. தேள் கொட்டுமுன் கையெடுத்துக் கொண்டான் (உ.வ.). 2. ***கைவாங்கு–தல்*** பார்க்க; see *kai-vāṅgu-.*

**க.** கெய்தெகெ.

*[கை + எடு-.]

**கையெடு³–த்தல்** *kai-y-eḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. இரத்தல்; to beg, entreat, supplicate. 2. தேர்ந்தெடுப்பு முதலியவற்றில் கையுயர்த்தித் தம் கருத்தை உணர்த்துதல் (Mod.); to vote by raising hands (செ.அக.).

*[கை + எடு–.]*

**கையெடுப்பு** *kai-y-eḍuppu,* பெ.(n.) கையை யுயர்த்தி நிற்கும் ஒருவனது உயரத்தினளவு; the height of a man with his arms raised up right, as used in indicating the depth of water in a well, tank, etc. *அந்தக் குளத்தில் கையெடுப்பு நீர் இருக்கிறது (உ.வ.).*

*[கை + எடுப்பு.]*

**கையெண்ணெய்** *kai-y-eṉṉey,* பெ.(n.) கையால் பிழிந்து பெறப்பட்ட எண்ணெய்; oil extracted by hand (not by mill).

**மறுவ.** விளக்கெண்ணெய்.

**க.** கெய்யெண்ணெ.

*[கை + எண்ணெய்.]*

**கையெரிவு** *kai-y-erivu-,* பெ.(n.) பித்தத்தினால் உண்டாகும் உள்ளங்கை எரிச்சல்; burning of the palm due to bilious causes (சா. அக.).

*[கை + எரிவு.]*

**கையெழுத்து** *kai-y-eḻuttu,* பெ.(n.) 1. கையா லெழுதும் எழுத்து; hand writing. *"நீரி லெழுதுங் கையெழுத் தென்றும்" (அருட்பா. தெய்வமணி. 17). கையெழுத்து நல்லாயிருந்தா போதுமா, தலையெழுத்தும் நல்லா இருக்கணுமே (உ.வ.).* 2. கையொப்பம்; signature, initial. 3. உடன்படிக்கை; written agreement. *"சதுர்வேதி மங்கலத்து சபையோம் கையெழுத்து" (S.I.I.II,103).* 4. ***கைவரி*** பார்க்க; see *kai-vari* (செ.அக.). 5. தன் பேரெழுத்து; name of an individual signed on letter on document. சிலர் கையெழுத்து முத்துப்போல் அழகாக இருக்கும் (உ.வ.).

**ம.** கய்யக்ஷரம், கையெழுத்து; **க.** கெய்பரக.

*[கை + எழுத்து.]*

**கையெழுத்துப்படி** *kai-y-eḻuttu-p-paḍi,* பெ.(n.) கையாலெழுதிய நூற்படி மூலம்; manuscript. சில நூற்றாண்டுகளுக்கு முன் எழுதிய தமிழ் நூல்களின் மூலக் கையெழுத்துப்படிக் கூடக் கிட்டவில்லை.

*[கை + எழுத்து + படி.]*

**கையெழுத்துப்பிரதி** *kai-y-eḻuttu-p-piradi,* பெ.(n.) ***கையெழுத்துப்படி*** பார்க்க; see *kaiy-eḻuttu-p-paḍi*

*[கை + எழுத்து + பிரதி.]*

**கையெழுத்துப்போடு–தல்** *kai-y-eḻuttu-p-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) கையொப்பமிடுதல்; to sign one's name, affix one's signature or initial (செ.அக.).

*[கை + எழுத்து + போடு–.]*

**கையெழுத்து மறையும் நேரம்** *kai-y-eḻuttu-maṟaiyum-nēram,* பெ. (n.) அந்தி மயங்கும் நேரம்; twilight. கையெழுத்து மறையும் நேரமாயிற்று. இன்னும் கன்றுகாலிகள் பட்டியில் வந்து அடையவில்லை (உ.வ.).

*[கை + எழுத்து + மறையும் + நேரம்.]*

**கையெழுத்துவை–த்தல்** *kai-y-eḻuttu-vai-,* 4 செ.கு.வி. (v.t) ***கையெழுத்துப் போடு–தல்*** பார்க்க; see *kai-y-eḻuttu-p-pōḍu-* (செ. அக.).

*[கை + எழுத்து + வை–.]*

**கையெறி–தல்** *kai-y-eṟi-,* 2 செ.கு.வி.(v.t.) 1. கை கொட்டுதல்; to clap hands. *"கையெறிந்து நக்கார்" (சீவக. 582).* 2. உறுதி கூறிக் கையடித்தல்; to take a vow or to swear by striking hands. *"சென்றங்குப் பாரதங் கையெறிந் தானுக்கு" (திவ். பெரியாழ். 2:6:4).* 3. சினத்தாற் கைவீசுதல் (இ.வ.); to flourish the hands in anger (செ. அக.).

*[கை + எறி–.]*

**கையெறி காலெறி** *kai-y-eṟi-kāl-eṟi,* பெ.(n.) வலிப்பினால் கைகால்களை உதைத்துக் கொள்ளுதல்; alternate contraction of arms and legs through convulsion; clonic spasm or convulsion of the limbs (சா. அக.).

*[கை + எறி + கால் + எறி.]*

**கையெறிகுண்டு** *kai-y-eṟi-guṇḍu,* பெ.(n.) கையால் வீசி வெடிக்கச் செய்யும் குண்டு; hand grenade.

*[கை + எறி + குண்டு.]*

**கையேடு** *kai-y-ēḍu,* பெ.(n.) 1. சிறிய ஏட்டுப் புத்தகம் (தொல். பொருள். 1, இளம்.); small book, handbook. 2. நாள்வழிக் கணக்கு; day-book, journal. 3. நாள்வழிக் கணக்கில் ஏற்றுதற்கு அவ்வப்போது எழுதி வைக்கும் குறிப்புப் புத்தகம் (இ.வ.); rough day-book, waste-book. 4. பெருஞ் செலவிற்கு விவரங் காட்டுந் தனிக் கணக்குப் புத்தகம்; memorandum of account containing details of major items of expense. கையேட்டிலுள்ள குறிப்புகள் பேரேட்டிற்குச் செல்ல வேண்டும் (உ.வ.).

**மறுவ.** கைச்சுவடி.

**ம.** கையேடு.

*[கை + ஏடு.]*

**கையேந்தி** *kai-y-ēndi,* பெ.(n.) இரப்போன் (வின்.); beggar (செ. அக.).

*[கை + ஏந்தி.]*

**கையேந்து-தல்** *kai-y-ēndu-,* 9 செ.குன்றாவி. (v.t.) 1. கையை யேந்துதல்; to hold out hands. 2. இரத்தல்; to beg.

*[கை + ஏந்து-.]*

**கையேல்-தல் [கையேற்றல்]** *kai-y-ēl-,* 14 செ.கு.வி. (v.i.) 1. ***கையேந்து-*** பார்க்க; see *kai-y-ēndu-. "மென்காந்தள் கையேற்கு மிழலை யாமே" (தேவா. 575: 4).* 2. செயல் பொறுப்பை ஏற்று நடத்தல்; to undertake, shoulder responsibility (செ. அக.).

*[கை + ஏல்-.]*

**கையேற்பு¹** *kai-y-ērpu,* பெ.(n.) 1. பெறுகை; taking, receiving. 2. இரக்கை; begging. 3. களப்பிச்சை வாங்குகை (வின்.); receiving alms at the threshing floor. 4. ஒரு தொழிலை ஏற்றுக்கொள்ளுகை (இ.வ.); undertaking a job (செ. அக.).

*[கை + ஏற்பு.]*

**கையேற்பு²** *kai-y-ērpu,* பெ.(n.) 1. வரிவகை (I.M.P. Cg. 524); a tax (செ. அக.). 2. கைப்பிச்சை; begging for alms.

*[கை + ஏற்பு.]*

**கையேற்றம்** *kai-y-ērram,* பெ.(n.) செல்வப் பெருக்கான நிலை; state of prosperity (செ. அக.). இப்போது அவன் கையேற்றமாய் உள்ளான் (உ.வ.).

*[கை + ஏற்றம்.]*

**கையேறல்** *kai-y-ēral,* பெ.(n.) நடுத்தரமான முத்து (யாழ். அக.); pearl of medium size or quality (செ.அக.).

*[கை + ஏறல்.]*

**கையேறு-தல்** *kai-y-ēru-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கையிற் கிடைத்தல்; to reach one's hand; to come to hand, as a payment or bribe. *இன்னும் பணங் கையேறவில்லை.* 2. ***கைமாறு¹*** பார்க்க; see *kai-māru* (செ. அக.).

*[கை + ஏறு-.]*

**கையேனம்** *kai-y-ēnam,* பெ.(n.) சிறு ஏனம், சிறு கொள்கலன்; small vessel.

*[கை + ஏனம்.]*

**கையை** *kaiyai,* பெ.(n.) தங்கை (பிங்.) younger sister.

*[கை + ஐ.]*

**கையைக்கடி-த்தல்** *kaiyai-k-kadi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. எதிர்பார்த்தற்குமேல் செலவாதல்; lit., to bite the hand, to exceed the allotted amount. 2. இழப்பு ஏற்படுதல்; to entail loss (செ.அக.). திருமணச் செலவு கையைக் கடித்துவிட்டது.

*[கையை + கடி-.]*

**கையைக் குறுக்கு-தல்** *kaiyai-k-kurukku-,* 5 செ.கு.வி. (v.i.) 1. செலவைக் குறைத்தல்; to retrench or cut down expenses. 2. இவறன்மை (கஞ்சத்தனம்) செய்தல்; to be close-fisted; to give sparingly (செ.அக.).

*[கையை + குறுக்கு-.]*

**கையைப்பிடி-த்தல்** *kaiyai-p-pidi-,*4 செ.குன்றாவி. (v.t.) 1. கையைப் பற்றுதல்; to hold the hand. 2. திருமணஞ் செய்தல்; to marry. 3. ***கையைப் பிடித்திழு-த்தல்*** பார்க்க; see *kaiyai-p-pidittilu-.*

*[கையை + பிடி-.]*

**கையைப்பிடித்திழு-த்தல்** *kaiyai-p-pidittilu-,* 4 செ.குன்றாவி.(v.t.) தீயநோக்கத்தோடு ஒருத்தியைக் கைப்பற்றி யழைத்தல்; to solicit illegitimately the favours of a woman through drawing her by her hands (செ. அக.).

*[கையை + பிடித்து + இழு-.]*

**கையொட்டி** *kai-y-otti,* பெ.(n.) சிறுகுழந்தை (இ.வ.); a babe in arms, nursling (செ. அக.).

மறுவ. கைக்குழந்தை.

*[கை + ஒட்டி.]*

**கையொட்டுக்கால்** *kai-y-ottu-k-kāl,* பெ.(n.) கருப்பூரவகை (சிலப்.14:109, உரை); a kind of camphor (செ.அக.).

*[கை + ஒட்டு + கால்.]*

**கையொடிந்ததா-தல்** *kai-odin-dadāl,* 4 செ.கு.வி.(v.i.) பிரிவு;separation. அவன் இல்லாதது கையொடிந்தது போல இருக்கிறது (நெல்.வழ.).

*[கை + ஒடிந்தது + ஆ-.]*

**கையொடுகாவலாய்** *kai-y-odu-kāvalāy,* கு.வி.எ. (adv.) தக்க நேரத்திற்குப் பயன்படுவதாய் (கொ.வ.); as a help in emergencies (செ. அக.).

*[கையொடு + காவலாய்.]*

**கையொத்து—தல்** *kai-y-ottu-* 4 செ.கு.வி.(v.i.) வழிபாடு செய்தல்; to join the hands together in worship. *"கையொத்து செல்லுங்கோள்" (ஈடு. 6, 1:5) (செ.அக.).*

*[கை + ஒற்று→ ஒத்து.]*

**கையொப்பம்** *kai-y-oppam,* பெ.(n.) 1. கையால் தன் பெயரெழுதிய ஒப்புகை; signature. 2. கீறற் கையெழுத்து, mark made in place of signature by illiterate persons. 3. கையெழுத்துச் செய்யப்பட்ட தொகை (சந்தா); subscribed amount (செ. அக.).

ம. கைப்பதிவு; க. கெய்குறுது.

*[கை + ஒப்பம்.]*

**கையொப்பமிடு—தல்** *kai-y-oppam-idu-,* 20 செ. கு.வி.(v.i.) ***கையெடுத்திடு—தல்*** பார்க்க; see *kai-y-eduttidu-.*

*[கையொப்பம் + இடு-.]*

**கையொலி**[1] *kai-y-oli,* பெ.(n.) கைகளால் எழுப்பும் ஒலி; sound made while clapping. *கோயில்களில் சண்டிகேசுவரருக்கு நூலைப் போட்டு, கையொலி செய்தல் வேண்டும் (உ.வ.).*

*[கை + ஒலி.]*

**கையொலி**[2] *kai-y-oli,* பெ.(n.) பெரும்பாலும் ஐந்து முழமுள்ளதும் திருமேனிகட்குச் சாத்துவதுமான சிறிய ஆடை; small cloth, usually five cubits long, with which idols are clothed. *"கையொலியைத் தலையிலே கட்டுகிறதும்" (கோயிலொ.) (செ. அக.).*

*[கை + ஒலி. ஒலியல் = ஆடை.]*

**கையொலியல்** *kai-y-oliyal,* பெ.(n.) ***கையொலி*** (தொல். பொருள்.1, இளம்.) பார்க்க; see *kai-y-oli* (செ.அக.).

*[கை + ஒலியல்.]*

**கையொழி—தல்** *kai-y-oli-,* 2 செ.கு.வி. (v.i.) 1. ***கைதூவு—தல்*** பார்க்க; see *kai-tūvu-.* *"எண்ணிய கருமஞ் செய்தற்கு யான் கையொழியேன்" (குறள், 1021, உரை).* 2. கைவேலை நீங்குதல் (கொ. வ.); to be free from work or engagement (செ. அக.).

ம. கையொழியுக; து. கயிவொடுங்கெலுனி.

*[கை + ஒழி-.]*

**கையொழியாமை** *kai-y-oliyāmai,* பெ.(n.) 1. முயற்சி நீங்காமை (திவா.); state of ceaseless activity; 2. ஓய்வின்மை; want of leisure; 3. நீங்கா நிறை ஒழுக்கம்; perfect conduct.

மறுவ. ஒழியா வொழுக்கம்.

*[கை + ஒழியாமை.]*

**கையொழுக்கம்** *kai-y-olukkam,* பெ.(n.) வேறுபாடின்றி ஒரே வகையாக வொழுகுந் தன்மை (வின்.); unvarying course of conduct, perseverance (செ. அக.). 2. ஒழுக்கம்; conduct.

*[கை + ஒழுக்கம்.]*

**கையொற்றி** *kai-y-orri,* பெ.(n.) 1. அமர்த்தாணை ஆவண எழுத்தரால் எழுதப்பெறாமல் வைக்கப்படும் ஒற்றி (வின்.); mortgage of lands without reference to a notary public. 2. பதிவு செய்யப்படாத ஒற்றி; a mortgage transaction not evidenced by registration (செ. அக.).

ம. கையொற்றி.

*[கை + ஒற்றி.]*

**கையொறுப்பு** *kai-y-oruppu,* பெ.(n.) 1. சிக்கனச் செலவு (யாழ். அக.); thrift. 2. இச்சையடக்குகை; self-denial (செ.அக.). 2. கையுறுதியில் வைக்கப் பட்ட காணியீடு; security deposited to obtain a loan.

*[கை + ஒறுப்பு.]*

**கையோங்கு**[1]**—தல்** *kai-y-ōngu-,* 5 செ. குன்றாவி. (v.t.) அடித்தல்; to strike. பிள்ளைகளைக் கையோங்கலாகாது (உ.வ.).

*[கை + ஓங்கு-.]*

**கையோங்கு**[2]**—தல்** *kai-y-ōngu-,* 8 செ.கு.வி. (v.i.) 1. மேன்மைப்படுதல்; to grow in prosperity; to be prosperous. அவனுக்கு இப்போது கையோங்குங் காலம் (உ.வ.). 2. செழித்தோங்குதல் (வின்.); to be luxuriant in growth, as tree. 3. வெற்றியடைதல்; to gain victory.

ம. கையோங்குக.

*[கை + ஓங்கு-.]*

ஆட்டம், போர், பொருள் முதலியவற்றின் வெற்றிக்கும் உயர்ச்சிக்கும் இடமாகச் சொல்லப் படுவதால் இச் சொல் வழக்குச் சொல்லாயிற்று.

**கையோட்டம்** *kai-y-ōttam,* பெ.(n.) 1. எழுதுதல் முதலிய வேலைகளிற் கை விரைவு; dexterity of hand; speed or ease, as in writing. 2. செல்வ நிலை; affluent circumstances (செ. அக.).

*[கை + ஓட்டம்.]*

**கையோடழை—த்தல்** *kaiyōdalai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. உடனே வருமாறு அழைத்தல்; ask to come at

once. திருமண உறுதி செய்யும் பொருட்டுத் தங்களை அம்மா கையோடழைத்துவரச் சொன்னார் (உ.வ.).

*[கை + ஒடு + அழை-.]*

**கையோடாமை** *kai-y-ōdāmai,* பெ.(n.) திடீர் உணர்வில் செயற்பட முடியாத நிலை; stage of inactiveness. அதிர்ச்சியில் அவனுக்குக் கையும் ஒடவில்லை காலும் ஓடவில்லை (உ.வ.).

*[கை + ஓடாமை.]*

**கையோடு[1]-தல்** *kai-y-ōḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. வேகமாக எழுதுதல்; to write a fast hand, write quickly. *"கையோட வல்லவர்... எழுதினும்" (அருட்பா.1. திருவருள். 10).* 2. ஒரு தொழிலில் மனஞ் செல்லுதல்; to be inclined to a task.

*[கை + ஓடு-.]*

**கையோடு[2]** *kai-y-ōḍu,* கு.வி.எ. (adv.) 1. உடன்; with, together with. கைம்யோடு கூட்டிவா. 2. அணியமாக; at hand, ready. மருந்து கையோடு இருக்க வேண்டும். 3. உடனடியாக, காலந் தாழ்த்தாது; immediately, without delay. *சொன்னதுங் கையோடே போனேன் (செ.அக.).*

**ம.** கையோடெ.

*[கை + ஓடு.]*

**கையோடுகையாய்** *kai-y-ōḍu-kai-y-āy,* வி.எ.(adv.) 1. செயலுடன் செயலாக; along with the work on hand. கையோடு கையாய் இச் செயலையும் முடித்துவிடு. 2. ***கையோடு[3]*** பார்க்க; see *kai-y-ōḍu[3]*.

*[கையோடு + கை + ஆய்.]*

**கையோடே** *kaiyōḍē,* கு.வி.எ.(adv.) ***கையோடு*** பார்க்க; see *kai-y-ōḍu* (செ. அக.).

*[கை + ஓடே.]*

**கையோலை** *kai-y-ōlai,* பெ.(n.) ***கைமுறி*** பார்க்க; see *kai-muṟi* (செ. அக.). 2. கையுறுதி; security deposited for loan.

**ம.** கையோல.

*[கை + ஓலை.]*

**கையோலைசெய்-தல்** *kai-y-ōlai-cey-,* 1 செ. குன்றாவி.(v.t.). தீர்மானித்தல், உறுதி செய்தல்; to determine, settle, confirm. *"கவிழ்ந்திருந்து கையோலை செய்து கொடுக்கிறார்" (ஈடு,2,9:4) (செ.அக.).*

*[கை + ஓலை + செய்-.]*

**கைராசி** *kai-rāśi,* பெ.(n.) ***கையாக்கம்*** பார்க்க; see *kai-y-ākkam*.

*[கை + ராசி.]*

**கைராட்டு** *kai-rāṭṭu,* பெ.(n.) கையால் நூல் நூற்கும் எந்திரம்; spinning wheel (செ. அக.).



கைராட்டு

**மறுவ.** கைராட்டை, கைராட்டினம்

**ம.** கைராட்டு; **க.** கைராடெ; **தெ.** சேதிராட்னமு.

*[கை + இறாட்டு → இராட்டு.]*

**கைரேகை** *kai-rēgai,* பெ.(n.) ***கைவரை*** பார்க்க; see *kai-varai.*

கை + ரேகை. ஏகை (சிலப்.). ஏகை – கீற்று, ஏகை – ரேகை என வடமொழியில் திரிந்தது (ஏகைக்கணியம்). ***கைவரி*** பார்க்க; see *kai-vari.*

**மறுவ.** கையேகை, கைவரை, கைவரி.

*[கை + ரேகை.]*

**கைரேகை நூல்** *kai-rēgai-nūl,* பெ.(n.) கைவரி கணியம்; palmistry (சா. அக.).

**மறுவ.** கைவரிக்கணியம்.

*[கை + ரேகை + நூல்.]*

**கைரொக்கம்** *kai-rokkam,* பெ.(n.) ***கைம்முதல்*** பார்க்க; see *kai-m-mudal.*

*[கை + ரொக்கம்.]*

**கைல்** *kail,* பெ.(n.) பிடரி; back of the neck; nape. (சா. அக.)

*[உல் → குல் → கில் → கைல்.]*

**கைலஞ்சம்** *kai-lañjam,* பெ.(n.) ***கையூட்டு*** பார்க்க; see *kai-y-ūṭṭu.*

*[கை + லஞ்சம்.]*

**கைலாகு** *kai-lāgu,* பெ.(n.) ***கைத்தாங்கல்*** பார்க்க; see kaittaṅgal.

மறுவ. கைலாகுகொடுத்தல்.

*[கை + லாகு.]*

**கைலாகுகொடு-த்தல்** *kai-lāgu-koḍu-,* 1 செ.கு.வி.(v.t.) அரசர் துறவியர் போன்ற மேன்மையர் நடக்கும்பொழுது மதிப்புரவாக அவர் கைகளைத் தாங்குதல்; to support by the arms, as a king or other great personage while walking, as a mark of respect. 2. உடல் வலிவற்றவரைக் கைகொடுத்துத் தாங்குதல்; to hold by the arms, as a weak man (செ. அக.).

*[கை + லாகு + கொடுத்தல்.]*

**கைலாகை** *kai-lāgai,* பெ.(n.) ***கைலாகு*** (யாழ். அக.) பார்க்க; see *kai-lāgu.*

*[கை + லாகை.]*

**கைலாசநாதன்** *kailāśa-nādaṉ,* பெ.(n.) சிவன்; "Siva, as the Lord of Mount Kailas.

*[கைலாசம் + நாதன்.]*

**கைலாசநாயனார்** *kailāśa-nāyaṉār,* பெ.(n.) சட்டைமுனி என்னும் சித்தரின் மறுபெயர்; a Šiddha named Saṭṭamuṉi (சா.அக.).

**கைலாசம்** *kailāśam,* பெ.(n.) ***கைலாயம்*** பார்க்க; see *kailāyam.*

*[கைலாயம் → கைலாசம்.]*

**கைலாச மந்திரன்** *kailāśa-māṉdiraṉ,* பெ.(n.) சிவன்; Lord Šiva.

*[கைலாசம் + (மந்திரம்) மந்திரன்.]*

**கைலாத்து**[1] *kailāttu,* பெ. (n.) சாரமற்றது; juiceless, a thing of no avail.

*[கையால் + அற்றது → கையாலற்றது → கைலாத்து (கொ.வ.).]*

**கைலாய சுந்தரர்** *kailāya-śundarar,* பெ.(n.) ***கைலாசநாதன்*** பார்க்க; see *kailāśa-nādaṉ.*

*[கைலாயம் + சுந்தரர்.]*

**கைலாயதேகம்** *kailāya-tēgam,* பெ.(n.) 1. கற்பதேகம்; rejuvenated system of body. 2. இறவா உடல்; immortal body.

*[கைலாயம் + தேகம்.]*

**கைலாயம்** *kailāyam,* பெ. (n.) எண்வகைக் குன்றுகளில் ஒன்றும் சிவன் வாழ்விடமாகக் கருதப்படுவதுமான ஒருமலை; Kailas, supposed to be the abode of Šiva, one of Asṭa-kula parvadam (செ.அக.).

*[கயில்[1] (உச்சி, முகடு) + ஆயம் – கயிலாயம் (உயர்ந்த உச்சிகளைக் கொண்டமலை).]*

**கைலாய மேருகலை** *kailāya-mēru-kalai,* பெ.(n.) வலது மூக்குத்துளை வழியாகச் செல்லும் மூச்சுக்காற்று; the vital air passing through the right nostril (சா.அக.).

மறுவ. சூரியகலை.

*[கைலாயம் + மேரு + கலை.]*

**கைலி** *kaili,* பெ. (n.) ***கையொலி***[2] பார்க்க; see *kai-y-oli.* "அழகிய மணவாளப் பெருமாள் சாத்தியருளின கைலியில்" (கோயிலொ. 30) (செ. அக.).

*[கையொலி → கைலி.]*

**கைலேசு** *kai-lēśu,* பெ. (n.) கைக்குட்டை (நாஞ்.); hand kerchief (செ. அக.).

*[கை + லேசு. (கை - குறுமை, ஒலியல் → ஒலிக → லேசு - உடை).]*

**கைலை** *kailai,* பெ.(n.) ***கைலாயம்*** (திவா.) பார்க்க; see *kailāyam* (செ. அக.).

*[கைலாயம் → கைலை. மரூஉ.]*

**கைலைக்கலம்பகம்** *kailai-k-kalambagam,* பெ. (n.) குமரகுருபரரால் பதினேழாம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட சிற்றிலக்கிய நூல்; a treatise composed by kummaragurubarar during 17th Century.

*[கைலை + கலம்பகம்.]*

**கைலைமூர்த்தி** *kailai-mūrtti,* பெ.(n.) அண்ட சுண்ணம்; calcined compound (சா.அக.).

*[கைலை + மூர்த்தி.]*

**கைலைவெளி** *kailai-veḷi,* பெ.(n.) மூளை; brain (சா.அக.)

*[கைலை + வெளி.]*

**கைவசம்** *kai-vaśam,* பெ.(n.) ***கைவயம்*** பார்க்க; see *kai-vayam.*

க. கெய்வச.

*[கை + (வயம்) வசம்.]*

**கைவட்டகை** *kai-vaṭṭagai,* பெ.(n.) சிறிய உண்கலன்; a kind of metal vessel. "*கை வட்டகை யொன்று*" *(S.I.I.II, 418, 81) (செ.அக.).*

ம. கைவட்டகை.

*[கை + வட்டகை.]*

**கைவட்டணை** *kai-vaṭṭaṇai,* பெ. (n.) நாட்டியத்தில் கையாற் செய்யும் முத்திரை (*சீவக.1257, உரை*); hand pose in dancing.

*[கை + வட்டணை.]*

**கைவட்டி** *kai-vaṭṭi,* பெ.(n.) சிறிய ஓலைப்பெட்டி; small *ōla* basket (செ. அக.).

*[கைவட்டி : கடகப்பெட்டி. வடு → வட்டு → வட்டி : வட்டமானது, உருண்டையானது.]*

**கைவட்டில்** *kai-vaṭṭil,* பெ. (n.) ***கைவட்டி*** பார்க்க; see *kai-vaṭṭi.*

*[கை + (வட்டு→வட்டி) வட்டில்.]*

**கைவண்டி** *kai-vaṇḍi,* பெ. (n.) 1. கையால் இழுக்கும் வண்டி; hand-cart, barrow, trundle. 2. தள்ளு வண்டி; perambulator.

**ம.** கைவண்டி; **க.** கைபண்டி; **தெ.** செய்பண்டி.

*[கை + வண்டி.]*

**கைவண்டில்** *kai-vaṇḍil,* பெ.(n.) ***கைவண்டி*** பார்க்க; see *kai-vaṇḍi.*

*[கை + வண்டில். வண்டி → வண்டில்.]*

**கைவண்ணம்** *kai-vaṇṇam,* பெ.(n.) கைத்திறன் – ஆற்றல்; power of the hand, talent. *"கைவண்ணம் அங்குக் கண்டேன்" (கம்பரா.பால.481).*

*[கை + வண்ணம்.]*

**கைவந்தகலை** *kai-vanda-kalai,* பெ. (n.) செய்து செய்து பழகிய முதிர்ந்த நிலை; handy technique. பாவேந்தர் பாரதிதாசனார்க்குத் தமிழ்ப்பா, கைவந்த கலையாகத் திகழ்ந்தது (உ.வ.).

*[கை + வந்த + கலை.]*

**கைவந்தவன்** *kai-vandavaṉ,* பெ.(n.) பழகித் தேர்ந்தவன்; a practised hand. *வித்தை கை வந்தவன் (செ.அக.).*

*[கை + வந்தவன்.]*

**கைவந்தி** *kai-vandi,* பெ.(n.) தோளின் கீழாகக் கையில் அணியப்படும் ஓரணி; bracelet worn on the arm just below the shoulder. *"விளக்க முற்றிய கைவந்தி யினையும்" (மதுரைக். 415, உரை).*

*[கை + வந்தி.]*

**கைவயம்**[1] *kai-vayam,* பெ.(n.) கையிலிருக்கும் பொருள்; matter on hand. புலவர் குழந்தையின் திருக்குறள் உரை என் கைவயமில்லையே (உ.வ.).

*[கை + வயம்.]*

**கைவயம்**[2] *kai-vayam,* பெ.(n.) 1. கையிருப்பு; actual possession. 2. கையிருப்பு; charge. 3. அடைக்கலம், கையடை; custody. அவள் இப்போது உன் கைவயமாய் ஆகிவிட்டாள் (உ.வ.).

**ம.** கைவசம்; **க., து.,** கைவச.

*[கை + வயம்.]*

**கைவர்த்தம்** *kaivarttam* பெ.(n.) கோரைக்கிழங்கு; corai root (சா. அக.).

*[கை + வருத்தம் (வட்டம், வளைவு) – கைவருத்தம்→ கைவர்த்தம்.]*

**கைவர்த்தர்** *kai-varttar,* பெ.(n.) பல்லக்குத் தூக்கிகள் (ஈடு.); palanquin bearers (செ. அக.).

*[கைவரு → கைவருத்தர் → கைவர்த்தர் (திறனாளர்).]*

**கைவரப்பு** *kai-varappu,* பெ.(n.) குறுங்காலிகமாக இட்ட சிறு மண்ணணை (இ.வ.); temporary earthen bank (செ. அக.). கைவரப்பு எவ்வளவு நேரம் நிற்கும்.

*[கை + வரப்பு.]*

**கைவரல்** *kai-varal,* பெ.(n.) 1. அறுவை மருத்துவம் செய்வதில் தேர்ச்சியடைந்திருத்தல்; being an expert in performing a manual work as operation (சா. அக.). 2. கைப்பழக்கம்; manual skill acquired by practice.

*[கை + வரல்.]*

**கைவரி** *kai-vari,* பெ.(n.) ***கைவரை*** பார்க்க; see *kai-varai.*

*[கைவரை → கைவரி.]*

**கைவரிக்கணியம்** *kaivari-k-kaṇiyam,* பெ.(n.) கைவரி (கைரேகை)களை உற்று நோக்கி வருங்காலம் உரைக்கும் குறிநூல்; palmistry.

**மறுவ.** கைரேகை நூல், கைரேகை சாத்திரம்.

*[கை + வரி + கணியம்.]*

**கைவரிகை** *kai-varigai,* பெ.(n.) ***கைவரை*** பார்க்க; see *kai-varai.*

*[கைவரை → கைவரிகை.]*

**கைவரிசை** *kai-variśai,* பெ.(n.) 1. திறமை (கொ.வ.); strength, prowess. இறுதியில் அவன் தன் கைவரிசையைக் காட்டிவிட்டான். 2. கொடை (இ.வ.); liberality. 3. சீட்டாட்டத்தில் முதலில் சீட்டை இறக்கும் உரிமை; right to serve first in a game of cards (செ.அக.).

*[கை + வரிசை.]*

**கைவருடல்** *kai-varuḍal,* 7 செ.கு.வி.(v.t.) கையால் தடவுதல்; to massage.

*[கை + வருடல்]*

**கைவரை**[1] *kai-varai,* பெ.(n.) அகங்கையில் உள்ள கோடுகள்; lines on the palm.

மறுவ. கைவரி, கைரேகை.

*[கை + வரை]*

**கைவரை**[2] *kai-varai,* பெ.(n.) 1. கையெழுத்து; hand-writing. 2. கையொப்பம்; signature.

க. கெய்பரக.

*[கை + வரை]*

**கைவரை**[3] *kai-varai,* பெ.(n.) கையால் எழுதியது; hand-writing.

க. கெய்பெரக; படீ. கைபரெ.

*[கை + வரை]*

**கைவரைச்சம்பா** *kai-varai-c-cambā,* பெ.(n.) சம்பா நெல்வகையுளொன்று (பதார்த்த. 803); a kind of cambā paddy (செ.அக.).

*[கை + வரை + சம்பா.]*

**கைவல்யம்** *kaivalyam,* பெ.(n.) ***கைவல்லியம்*** பார்க்க; see *kaivalliyam* (செ. அக.).

*[கைவல்லியம் → கைவல்யம்.]*

**கைவல்லபம்** *kai-vallabam,* பெ. (n.) 1. தோள் வலிமை; power or strength of arm. 2. தொழில் செய்கைத்திறம்; dexterity of hand, skill in handi-craft (செ. அக.).

*[கை + (வல்லம்) → வல்லவம் → வல்லயம்.]*

**கைவல்லயம்** *kai-vallayam,* பெ. (n.) கைத்திறமை, ஆற்றல்; talent.

*[கை + (ஒல் → வல்) வல்லயம்.]*

**கைவல்லர்** *kai-vallār-,* பெ.(n.) திறமையானவர்; adept.

*[கை + வல்லர்.]*

**கைவல்லவம்** *kai-vallavam,* பெ. (n.) ***கைவல்லயம்*** பார்க்க; see *kai-vallayam.*

*[கை + (ஒல் → வல் → வல்லயம்) வல்லவம்.]*

திறமையையும் ஆற்றலையும் குறித்த வல்லவம் எனும் தமிழ்ச்சொல் வடமொழியில் வல்லபம் எனத் திரிந்தது.

**கைவல்லிய நவநீதம்** *kai-valliya-navanidam,* பெ.(n.) தாண்டவராய அடிகள் தமிழ்ச் செய்யுளில் இயற்றிய ஓர் இரண்டன்மை நெறிநூல்; an Advaita treatise in Tamil by Tandavaraya swami (செ.அக.).

*[கை + (வல்லயம்) வல்லியம் + நவநீதம்.]*

**கைவல்லியம்**[1] *kai-valliyam,* பெ.(n.) 1. ஒன்றான தன்மை; absolute oneness, perfect isolation. *"நிர்விஷய கைவல்லமாநிஷ்கள" (தாயு. கருணா.1.).* 2. துறக்கம் (திவா.); final emancipation. 3. பயன் (அனுகூலம்) (இ.வ.); success, gain. 4. நூற்றெட்டு மறைமங் (உபநிடதம்) களிலொன்று; an Upanishad, one of 108 (செ.அக.), 5. கைகூடுகை; achieving object. 6. தனிமை; solitude.

*[கை + (ஒல் → வல்) வல்லயம் (வல்லியம்). கை தனிமை, உயர்வு.]*

**கைவல்லியம்**[2] *kai-valliyam,* பெ.(n.) வீடுபேறு; eternal emancipation. 2. வெற்றி; success. 3. உடலிலிருந்து உயிரைப் பிரித்தல்; separation of the soul from matter. 4. எல்லாப் பற்றுகளினின்றும் விலகி, மறுபிறப்பு அறுத்தும் நிற்றல்; perfect isolation (சா.அக.).

*[கை + (வல்லயம்) வல்லியம். கைஒல்லுதல் : கைச்சேர்தல், பெறுதல். ஒல் → வல். கைவல்லியம் பெறத்தக்க வீடுபேறு.]*

**கைவல்லியமா-தல்** *kai-valliyam-ā-,* 2 செ.கு.வி, (v.i.) வாய்த்தல்; being successful (சா. அக.).

*[கை + வல்லியம் + ஆ-.]*

**கைவல்லோர்** *kai-vallōr* பெ.(n.) கைப்பழக்க முள்ளோர்; adeptat handiwork.

*[கை + வல்லோர்.]*

**கைவலச்செல்வன்** *kaivala-c-celvan,* பெ.(n.) அருகன் (துறக்கமா செல்வத்தை யுடையவன்); Arhat, as one possessing the wealth of final emancipation. *"கருமக்கடம் கடந்த கைவலச் செல்வன்" (சீவக. 274).*

*[கைவலம் + செல்வன்.]*

**கைவலம்** *kai-valam,* பெ.(n.) துறக்கம்; final emancipation. *"இவை விடுத்தறானே யடையுங் கைவலம்" (பிரபோத.42:15). (செ.அக.).* 2. கைந் நலம்; luck associated with one's hand.

*[கை + (ஒல்→வல்→வல்லயம்) வலம்.]*

**கைவலி-தல்** *kai-vali-,* 2 செ. குன்றாவி. (v.t.) கைகடந்து போதல்; to get out of control, to dis-obey. *"சிறுமா னிவணம்மைக் கைவலிந்து" (திவ்.திருவாய். 6:5:7).*

*[கை + வலி-.]*

**கைவலிப்பு** *kai-valippu,* பெ.(n.) கைக்குக் காணும் குரக்குவலி; cramp in the hand (சா.அக.). 2. கைக்கடுப்பு; irritation in the hand.

*[கை + வலம்.]*

**கைவலிமை** *kai-valimai,* பெ.(n.) கையின் ஆற்றல்; the power of the hand.

**க.** கெய்பல.

*[கை + வலிமை]*

**கைவலை** *kai-valai,* பெ.(n.) சிறுவலை; small casting-net.

*[கை + வலை.]*

**கைவழக்கம்** *kai-valakkam* பெ.(n.) 1. கையின் கொடைக்குணம்; liberality, munificence. திருக்கை வழக்கம். 2. ***கைவிளக்கம்*** [2] பார்க்க; see *kai-vilakkam.* 3. கோயிலில் பூசகர் முதலியோருக்கு உரிய உரிமை; perquisites of the priest or servant of a temple. 4. ஈமக்கடனாற்றிய பின்பு குடிமக்கள் ஐவர்க்குக் கொடுக்கும் பணம் முதலியன (யாழ்.); money and other gifts to five of the *kudimakkal* on the day after the funeral ceremony.

**ம.** கைவழக்கம்; **பட.** கைபழக்க.

*[கை + வழக்கம்.]*

**கைவழங்காமலிருத்தல்** *kai-valankāmal-iruttal,* பெ.(n.) கை முடமாயிருத்தல்; being lame of hand (சா.அக.).

*[கை + வழங்காமல் + இருத்தல்.]*

**கைவழங்காமை** *kai-valangāmai,* பெ.(n.) கை பயன்பாடற்றுப் போதல்; being unable to use the hand (சா. அக.).

**மறுவ.** விளங்காமை.

*[கை + வழங்காமை.]*

**கைவழங்கு[1]-தல்** *kai-valangu-,* 8 செ. குன்றாவி. (v.t.) கொடுத்தல்; to give (செ. அக.).

*[கை + வழங்கு-.]*

**கைவழங்கு[2]-தல்** *kai-valangu-,* 10 செ. கு. வி. (v.i.) ***கையடி-[1]***, பார்க்க; see *kai-y-adi-.* *"வெஞ்சமர் விளைக்கவே கைவழங்குகென" (பாரத. கிருட்.120).*

*[கை + வழங்கு-.]*

**கைவழம்** *ka-ivalam,* வழங்குங் கைப்பக்கம்; being able to use the hand or arm.

*[கை + வழம்.]*

**கைவழி[1]** *kai-vali,* பெ. (n.) 1. யாழ்; lute, as an instrument held in the hand. *"கைவழி மருங்கின் செவ்வழி பண்ணி" (புறநா. 149:3) (செ. அக.).*

*[கை + வழி (கையிலிருப்பது).]*

**கைவழி[2]** *kai-vali,* பெ. (n.) 1. ஒருவன் கைவசமாக அனுப்பிய பொருள்; that which is sent by a person. 2. ஆள்; individual, person. 3. ***கைராசி*** (இ.வ.) பார்க்க; see *kai-rāśi* (செ.அக.).

*[கை + வழி.]*

**கைவழி[3]** *kai-vali,* பெ.(n.) 1. ஒற்றையடிப்பாதை (இ.வ.); foot-path. 2. சிறு கிளையாறு; small branch of a river (செ. அக.).

**ம.** கைவழி.

*[கை + வழி.]*

**கைவழி[4]** *kai-vali,* பெ.(n.) தெய்வத் திருமேனிக்குச் சாற்றும் சிற்றாடை; small cloth, usu. 5 cubits. long, with which idols are clothed.

*[கை + வழி.]*

**கைவழித்தமண்** *kai-valitta-man,* பெ.(n.) நுண்ணிய களிமண்; fine clay, sticking to the hands of potter (சா. அக.).

*[கை + வழித்த + மண்.]*

**கைவளச்சம்பா** *kai-vala-c-cambā,* பெ.(n.) நிறமும் இனிமையுமுள்ள சம்பா நெல்வகை (வின்.); a species of cambā paddy with bright colour and pleasant taste.

*[கை + வளம் + சம்பா.]*

**கைவளப்பம்** *kai-valappam,* பெ.(n.) கொடை; bounty. *'கைவளப்பத்தையுடைய தலைவன்' (பெரும்பாண். 420, உரை).*

*[கை + வளப்பம்.]*

**கைவளம்** *kai-valam,* பெ.(n.) 1. ***கைராசி*** பார்க்க; see *kai-rāśi.* 2. கைப்பொருள்; property on hand. 3. செழிப்பு; fertility, luxuriance, richness of soil. *"கைவளமான தேசம்" (இ.வ.).* 4. கைத்தொழிலின் திறம்; skill in workmanship. *"கண்டோர் மருளக் கைவளங் காட்டி" (பெருங். இலாவாண.4:194) (செ.அக.).*

*[கை + வளம்.]*

**கைவளர்[1]-தல்** *kai-valar-,* 2 செ.கு.வி. (v.i.) 1. போற்றப்பட்டு வளர்தல்; to be carefully tended. *"கைவளர் மயில னாளை" (கம்பரா. கோலங். 18).*

2. பழக்கமுறுதல்; to be accustomed, habituated, experienced. *"விஷயாந்தரங்களிலே கைவளருகிற கரணங்களை" (அஷ்பாதச. ப. 22).*

ம. கைவளருக.

*[கை + வளர்–.]*

**கைவளர்²–தல்** *kai-valar-*, 2 செ.கு.வி.(v.i.) பரவுதல்; to spread. *"சேனையொடு கைவளர்ந்து சென்றது" (பு.வெ.6:5). "கன்னிசூழ் நாட்டிற் கயலாணை கைவளர" (S.I.I.V. 155).*

*[கை + வளர்–.]*

**கைவளாக்கை** *kaivaḷākkai*, பெ.(n.) ஏழு முள்ளுக்கொடி (சா.அக.); thorny creeper.

*[கைவளம் = செழிப்பு. அக்கு = முள். கைவளம் + (அக்கு) அக்கை – கைவளக்கை.]*

**கைவளை¹** *kai-vaḷai*, பெ.(n.) 1. கைத்தொடி (பிங்.); bangle worn on hand or bangle bracelet. *"கைவளை திருத்துபு கடைக்கண் நோக்கினாள்" (கம்ப.இராம.).* 2. தோள்வளை; an arm-ring. 3.மேற்கூரையைத் தாங்குமாறு சுவர் முதலியவற்றி லமைக்குஞ் சட்டம்; wall-plate, horizontal beam upon a wall or upon projecting corbels, supporting the ends of other beams or roof-trusses (செ. அக.). 4. கூகம்; the state of being hidden. 3. சிறுவளை; small bangle. 6. மருதோன்றி; a flowering shrub. 7. வளையல்; bangle.



கை வளை (தொடி)

ம. கைவள; க. கெய்பளெ; பட. கைபே.

*[கை + வளை.]*

**கைவளை²** *kai-vaḷai*, பெ.(n.) மருதோன்றி; a herb used to colour the hands and feet of girls.

*[மரு = நிறம். மரு + தோன்றி. கை = சிறிய. வேளை = வேளைச்செடிவகை. கை + வளை – கைவேளை – கைவளை (கொ.வ.).]*

**கைவளை³** *kai-vaḷai*, பெ.(n.) 1. சிறியபொந்து; a small hole. 2. கமுக்கம், மறைவு; the state of being hidden. 3. சிறுவளை; small bangle. 4. வளையல்; bangle.

*[கை + வளை.]*

**கைவளையல்** *kai-vaḷaiyal*, பெ.(n.) கைக்கிடும் வட்டவடிவ அணிகலன்; bangle.

*[கை + வளையல். வளை → வளையல் = வட்ட வடிவமானது.]*

**கைவற்று–தல்** *kai-vaṟṟu-*, 6 செ.கு. வி. (v.i.) 1. பொருளின்றி நிலைமை தாழ்தல்; to become reduced in circumstances. 2. கையிற் பொருளறுதல்; to be empty handed (செ. அக.).

*[கை + வற்று–.]*

**கைவறட்டி** *kai-vaṟṭṭi*, பெ.(n.) கையால் தட்டின வறட்டி; cow dung cake formed by hand.

*[கை + வறட்டி.]*

**கைவறள்(ளு)–தல்** *kai-vaṟaḷ(ḷu)-*, 16 செ.கு.வி. (v.i.) ***கைவற்று–தல்*** பார்க்க; see *kai-vaṟṟu-* (செ.அக.).

*[கை + வறள்(ளு)–.]*

**கைவறுண்டி¹** *kai-vaṟuṇḍi*, பெ.(n.) சீமை மிளகாய்; ***காந்தாரி மிளகாய்*** பார்க்க; see *kāndāri-milagāy* (சா.அக.).

*[சேய்மை → சீமை + மிளகாய்.. கை + வறுண்டி.]*

**கைவறுண்டி²** *kai-vaṟuṇḍi*, பெ.(n.) 1. *சீனமிளகாய்* (சித். அக.); a species of chillies plant (செ. அக.). 2. *சீனிவெடி*; chinese cracker. 3. *சீனி அவரைக்காய்* (கொத்தவரங்காய் – சென்னை வழக்கு); a beans like vegetable.

*[சின்ன → சீன (சிறிய) மிளகாய். கை + வறுண்டி.]*

**கைவன்மை** *kai-vaṉmai*, பெ.(n.) ***கைவல்லவம்*** பார்க்க; see *kai-vallavam* (செ. அக.).

*[கை + வன்மை.]*

**கைவா¹–தல் (கைவருதல்)** *kai-vā-*, 18 செ.கு.வி. (v.i.) 1. தேர்ச்சி பெறுதல்; to become proficient, expert. *"வேத தாற்பரியங் கைவந்திருக்கு மவர்கள்" (ஈடு, 10,1:2).* 2. ஒருங்கே நிகழ்தல்; to happen together. *"காட்டிய பத்துங் கைவரு மெனினே" (நம்பியகப். 36).* 3. கைகூடுதல்; to be successful, attained. *"இந்தப் பாவனை கைவாரா தாகில்" (சி.சி. 8:34, மறைஞா.) (செ. அக.).*

*[கை + வா–.]*

**கைவா²–தல் (கைவருதல்)** *kai-vā-,* 18 செ.கு.வி. (v.i.) ஒன்றைச் செய்யக் கையெழுதல்; to be disposed to do a thing. அடிக்கக் கைவர வில்லை (உ.வ.)

*[கை + வா–.]*

**கைவா³–தல்(வருதல்)** *kaivā(varu-),*18 செ.கு.வி. (v.t.) செய்நேர்த்தியாதல்; to be accomplished. பாவாணருக்குச் சொல்லாய்வு கைவந்த கலையாயிற்றே (உ.வ.).

*[கை + (வரு) வா–.]*

**கைவாக்கு** *kai-vākku,* பெ.(n.) 1. ***கைவாகு*** பார்க்க; see *kai-vāgu* (செ.அக.). 2. ***கைவழக்கம்*** பார்க்க; see *kai-vālakkam.*

**ம.** கைவாக்கு.

*[கை + வாக்கு.]*

**கைவாகு** *kai-vāgu,* பெ.(n.) 1. ***கைராசி*** (இ.வ.) பார்க்க; see *kai-rāśi.* 2. கையால் ஆளுதற்கு உரிய நிலை; being ready to hand (செ. அக.). சமைத்தற்குரிய பொருளைக் கைவாகாக வைத்துக் கொண்டால் சமையலே எளிதாக இருக்கும் (உ.வ.).

*[கை + வாகு.]*

**கைவாங்கியுண்(ணு)–தல்** *kai-vāṅgi-y-uṇ(ṇu)-,* 5 செ.குன்றாவி. (v.t.) நிறைய உண்ணுதல் (இ.வ.); to eat in large qunatities (செ. அக.).

*[கை + வாங்கி + உண்(ணு)–.]*

**கைவாங்கு¹–தல்** *kai-vāṅgu-,* 7 செ.கு.வி.(v.i.) நீங்குதல்; to withdraw. *"இரட்சணத்தினின்றும் கைவாங்கினாயோ" (திவ். திருநெடுந். 16:128, வியா).*

*[கை + வாங்கு–.]*

**கைவாங்கு²–தல்** *kai-vāṅgu-,*5 செ. குன்றாவி. (v.t.). கையை வெட்டுதல்; to cut off the hand, to amputate (செ. அக.).

**ம.** கைவாங்ஙுக.

*[கை + வாங்கு–.]*

**கைவாசி** *kai-vāśi,* பெ.(n.) ***கைராசி*** பார்க்க; see *kai-rāśi* (செ. அக.).

**ம.** கைவாசி.

*[கை + (வயம் →வாசி) வாசி.]*

**கைவாட்சம்பா** *kai-vāṭ-cambā,* பெ.(n.) நெல்வகை (யாழ். அக.); a kind of paddy (செ. அக.).

*[கை + வாள் + சம்பா.]*

**கைவாய்க்கால்** *kai-vāykkāl,* பெ.(n.) சிறுகால்வாய் (தொல். பொருள். 1. இளம்.); small channel branching out from the main one (செ.அக.).

*[கை + வாய்க்கால்.]*

**கைவாய்ச்சி** *kai-vāycci,* பெ.(n.) சிறு வாய்ச்சிக் கருவி (வின்.); a small adze (செ. அக.).

**க.** கெய்வாசி.

*[கை + வாய்ச்சி.]*

**கைவாய்ப்பு** *kai-vāyppu,* பெ.(n.) ***கைமாற்று¹*** பார்க்க; see *kai-māṟṟu. மூன்று உருபா கைவாய்ப்பாய் வாங்கியிருக்கிறேன் (இ.வ.) (செ.அக.).*

**ம.** கைவாய்ப.

*[கை + வாய்ப்பு.]*

**கைவாரங்கொள்(ளு)–தல்** *kai-vāraṅgol(lu)-,* 2 செ.கு.வி. (v.i.) 1. அதிகாரத் தோரணை கொள்ளுதல்; to assume authority. 2. கூத்தை நிறுத்தும் பொருட்டுக் கையை உயரவெடுத்து வீசுதல் (ஒழிவி. பொது. 1, உரை) (செ.அக.); to wave the hand to stop the folk dance drama.

**க.** கெய்வாரிசு (புகழ்தல்).

*[கை + வாரம் + கொள்(ளு)–.]*

**கைவாரம்¹** *kai-vāram,* பெ.(n.) 1. கைதூக்கிக் கூறும் வாழ்த்து; benediction, encomium, praise pronounced with raised hands. *"புறப்பட்டருளின வுடனே ஜயசப்தங்களாலே கைவாரம் பண்ணு கிறதும்" (கோயிலொ. 89).* 2. பனங்கிழங்கு உண்டாக்குதல் முதலியவற்றுக்குக் கொடுக்குங் கூலி (யாழ்ப்.); wage in kind for pressing pulp of palmyra fruits or preparing palmyra roots. 3. சரிவாரம்; equal division of a crop. 4. வயிர முதலியவற்றின் முனை; edge, as of a diamond (செ.அக.).

**க.** கெய்வார; **தெ.** கைவாரமு.

*[கை + வாரம்.]*

**கைவாரம்²** *kai-vāram,* பெ.(n.) 1. வேளாண்மையில் உழைப்புக்குரிய பங்கு (யாழ். அக.); cultivator's share of the produce for his tilling and manuring the soil (செ.அக.). களத்தடி நிலத்தை கைவாரமாகக் கொடுத்துள்ளேன் (உ.வ.).

*[கை + வாரம்.]*

**கைவாரிகள்** *kaivārigaḷ,* பெ.(n.) நின்றேத்துவார் (சிலப்.5:48, அருள்.); panegyrists of a king whose duty is to praise standing with raised hands.

**தெ.** கைவாரி.

*[கைவாரம் → கைவாரி + கள்.]*

**கைவாள்** *kai-vāḷ,* பெ.(n.) 1. கையரம்பம் (இ.வ.); hand saw. 2. சிறுவாள் (தொல். பொருள். 1, இளம்.) short sword (செ.அக.). 3. சிறுகத்தி; a grass-knife, sickle.


கைவாள்

ம. கைவாள்; க. கெய்பாளு; பட. கைபாளு.

*[கை + வாள்.]*

**கைவாளப்பை** *kai-vāḷa-p-pai,* பெ.(n.) ***கைவாளை*** பார்க்க; see *kai-vāḷai.* *"பாக்கிட்ட் கைவாளப் பையும்" (விறலிவிடு. 661) (செ. அக.).*

**ம.** கைவாளச்சஞ்சி.

*[கை + வாளப்பை.]*

**கைவாளம்** *kai-vāḷam,* பெ.(n.) ***கைவாளை*** பார்க்க; see *kai-vāḷai.* *"தொங்கிய கைவாளமென்று தூக்கி" (விறலிவிடு. 809).*

*[கை + (வாளை) வாளம்.]*

**கைவாளரம்** *kai-vāḷ-aram,* பெ.(n.) சிறிய அரவகை (C.E.M.); hand saw-file.

*[கை + வாள் + அரம்.]*

**கைவாளை**[1] *kai-vāḷai,* பெ.(n.) அடைப்பை, வெற்றிலைப்பை; pouch with a wrapper, betel pouch. *"தம்முடைய கைவாளையிலேயிருந்த தீர்த்தவிக்கிரகத்தை" (குருபரம். 571. பன்னீ.).*

ம. கைவாளசஞ்சி.

*[கை + வாளை.]*

**கைவாளை**[2] *kai-vāḷai,* பெ.(n.) புடைவை வகை (யாழ்.அக.); a kind of saree.

*[கை + வாளை.]*

**கைவாளைப்பை** *kai-vāḷai-p-pai,* பெ.(n.) ***கைவாளை***[1] பார்க்க; see *kai-vāḷai* (செ.அக.).

ம. கைவாளச்சஞ்சி.

*[கை + வாளை + பை.]*

**கைவாளைவட்டுவம்** *kai-vāḷai-vaṭṭuvam,* பெ.(n.) ***கைவாளை***[1] பார்க்க; see *kai-vāḷai* (செ.அக.).

*[கை + வாளை + வட்டுவம் (பை அல்லது சிறு பெட்டி).]*

**கைவாறு** *kai-vāṟu,* பெ.(n.) 1. தக்கசமையம் (யாழ்ப்.); suitable opportunity. 2. ***கைலாகு*** பார்க்க; see *kai-lāgu* (செ.அக.). 3. கைதூக்கு; giving a hand.

*[கை + வாறு.]*

**கைவிசை** *kai-visai* பெ.(n.) 1. ***கைமுறை*** பார்க்க; see *kai-muṟai.* 2. கைவிடல்; droping, forsake. 3. நீங்கல்; removal.

*[கை + விசை.]*

**கைவிஞ்சு-தல்** *kai-viñju-* 5 செ.கு.வி. (v.i.). அளவுகடத்தல், to exceed the limit. *"கைவிஞ்சி மோகமுற" (திருவாய். நூற். 62). (செ. அக.).*

*[கை + விஞ்சு-.]*

**கைவிட்டம்** *kai-viṭṭam,* பெ.(n.) வீட்டின் குறுக்கு விட்டம் (கொ. வ.); cross-piece, cross-beam, brace connecting two rafters (செ. அக.).

*[கை + விட்டம்.]*

**கைவிடல்** *kai-viḍal,* பெ.(n.) நோய் நீங்காதென மருந்து கொடுக்காது விட்டகலல்; abandoning a patient without prescribing medicines (சா.அக.).

*[கை + விடல்.]*

**கைவிடாப்படை** *kai-viḍā-p-paḍai,* பெ.(n.) வாள் போன்ற கைப்படை (பிங்.); hand-weapon, weapon held in hand, dist. for *kai-viḍu-paḍai* (செ. அக.).

*[கை + விடா + படை.]*

**கைவிடு**[1]**-தல்** *kai-viḍu-,* 18 செ. குன்றாவி. (v.t.) 1. பிடிதளர்தல்; to let loose (one's own or another's) hand. 2. விட்டொழிதல்; to forsake, abandon, desert, as dependents; to shun, eschew, as passions. *"பெரியோர் கண்டு கைவிட்ட மயல்" (நாலடி. 43)* (செ.அக.). 3. தள்ளிப் போடுதல்; to postpone.

ம. கைவிடுக; க. கைபிடு, கெய்பிடு; தெ. செய்விடுட; பட. கைபுடு.

[கை + விடு-.]

**கைவிடு²–தல்** *kai-viḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) கொப்புவிடுதல்; branch out.

[கை + விடுதல்.]

**கைவிடுங்குறி** *kai-viḍuṅ-kuṟi* பெ.(n.) குண மடைதல் அரிது எனும் அறிகுறி; symptom of incurability. 2. சாவுக் குறி; symptoms of collapse. 3. பெண்குறியில் கை விட்டறியும் கருப்பக்குறி; diagnosis of pregnancy by a finger inserted into the vagina (சா. அக.).

[கை + விடும் + குறி.]

**கைவிடுபடை** *kai-viḍu-paḍai*, பெ. (n.) அம்புப்படை (பிங்.); missile weapon, as an arrow, dist. fr. *kai-viḍā-p-paḍai* (செ. அக.). 2. கைப்படை, அம்பு; arrow.

[கை + விடு + படை.]

கைவிடு படை அம்பு போன்றன, கைவிடாப் படை வாள் போன்றன.

**கைவிடுமாற்றம்** *kai-viḍu-māṟṟam*, பெ.(n.) கருவுயிர்ப்பின் போது பெண்குறிக்குள் விரலையிட்டுக் குழந்தை இருக்கும் நிலையை மாறச் செய்தல்; conversion performed by the hand introduced into the uterus. 2. கருப்பைக்குள் கையை விட்டுக் குழந்தையைத் திருப்பி வெளிப்படச் செய்தல்; the manual turning of the child in delivery (சா. அக.).

[கை + விடும் + மாற்றம்.]

**கைவிதிர்–த்தல்** *kai-vidir-*, 4 செ.கு.வி. (v.i.) 1. மறுப்பு; to shake one's hands in denial. *"இனித்தவிர் விச்சையெனக் கைவிதிர்த் தலுமே" (கலிங். 160).* 2. அச்சத்தைக் காட்டுதற்காகக் கையை அசைத்தல்; to shake one's hands to show fear. *"அடியார் சூழ்ந்து கைவிதிர்க் கொண்டு" (திருவாலவா.37:39).* 3. வியப்பினை வெளிப்படுத்து தற்குக் கையை அசைத்தல்; to shake one's hand in surprise. *"வியந்துகை விதிர்ப்ப" (சீவக. 2366).* 4. புகழ்ச்சியைக் கவருமுகத்தான் கையை அசைத்தல்; to shake one's hand in praise. *"அங்கை விதிர்த்தாங் கரசவை புகழ" (பெருங். உஞ்சைக். 32:58).*

[கை + விதிர்-.]

**கைவிதை¹** *kai-vidai*, பெ.(n.) ***வெந்தயம்*** (மலை.) பார்க்க; see *vendayam.* (செ. அக.).

[கை + விதை.]

**கைவிதை²** *kai-vidai*, பெ.(n.) நாற்றைப் பெயர்த்து நடுகையின்றி விதைத்தபடியே பயிர்செய்கை (இ.வ.); cultivation without the process of transplantation.

[கை + விதை.]

**கைவிதைப்பு** *kai-vidaippu*, பெ.(n.) 1. புழுதி விதைப்பு (இ.வ.); sowing in dry earth (செ. அக.). 2. கொருக்கலப்பையில் விதை போடாமல் நேரடியாக விதைகளைக் கையிலெடுத்து நிலத்தில் வீசி விதைத்தல்; to sow seeds with hand.

[கை + விதைப்பு.]

**கைவிரசு¹** *kai-viraśu*, பெ.(n.) ***கைவிரைவு*** பார்க்க; see *kai-viraivu* (செ. அக.).

து. கைவிரசு.

[கை + (விரவு) → விரசு-.]

**கைவிரசு** *kai-viraśu*, பெ.(n.) சீட்டாட்டத்தில் கை வரிசைப்படி சீட்டை இறக்குகை; to deal card as per turn.

[கை + விரசு.]

**கைவிரட்டி** *kai-viraṭṭi* பெ.(n.) கையால் தட்டின வறட்டி; by hand cow dung cake (சா. அக). ***கைவறட்டி*** பார்க்க; see *kaivaraṭṭi.*

[கை + (வறட்டி) விரட்டி.]

**கைவிரல்** *kai-viral*, பெ.(n.) கையின் நுனிப்பகுதியில் அமைந்துள்ள ஐந்து உறுப்புகளுள் ஒன்று; one of the five terminal parts of the hand, finger.

க. கெய்வெரள், கெய்பெரல்; பட. கைபெரலு.

[கை + விரல்.]

**கைவிரற்சந்து** *kai-viraṟ-candu*, பெ.(n.) கை விரலின் இடுக்கு; crotch of the fingers (சா. அக.).

[கை + விரல் + சந்து.]

**கைவிரி–த்தல்** *kai-viri-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1. இரத்தற் பொருட்டுக் கையை நீட்டுதல்; to stretch out the hands in begging. *"கைவிரித் தெவரளித் தாலும் நன்றென வேற்ற வளநிதி" (பிரமோத். 6:54).* 2. தன்னால் இயலாமை குறிப்பித்தல்; to indicate one's inability, disappointment (செ. அக.).

க. கெய்யொட்டு.

[கை + விரி-.]

**கைவிரிதவம்** *kai-viri-tavam,* பெ.(n.) செந்நாக தாளி (சித். அக.); a red cobra creeper.

*[கை + விரிதவம்.]*

**கைவிரைச்சம்பா** *kai-virai-c-cambā,* பெ.(n.) கைவளச்சம்பா; a species of cambā-paddy (செ.அக.).

*[கை + விரை + சம்பா.]*

**கைவிரைவு** *kai-viraivu,* பெ.(n.) கையினால் விரைந்து தொழில் செய்யுந்தன்மை; quickness of hand, as in suffling cards.

*[கை + விரைவு.]*

**கைவிலக்கம்** *kai-vilakkam,* பெ.(n.) மகளிர் தீட்டு; the menstrual discharge of females (சா. அக.).

*[கை + விலக்கம். எதையும் தொடலாகாது என்னும் வழக்கம்.]*

**கைவிலக்கமாதல்** *kai-vilakkam-ādal* பெ.(n.) தீட்டாதல்; being on monthly course (சா. அக.).

*[கை + விலக்கம் + ஆதல்.]*

**கைவிலக்கு** *kai-vilakku,* பெ.(n.) 1. களப்பிச்சை கொடுத்து இரவலர்களை அனுப்புகை; sending away beggars from the threshing floor after giving them alms. 2. கதிரவனின் ஒளிக்கற்றை கண்ணிற் படாதபடி கையால் மறைக்கை; shading the eyes from the sun with the hand (செ. அக.).

*[கை + விலக்கு.]*

**கைவிலங்கு** *kai-vilangu,* பெ.(n.) இரண்டு மணிக்கட்டுகளையும் பிணைக்கும் கயிறு அல்லது தொடரி (சங்கிலி); manacles, handcuffs (செ. அக.).

மறுவ. கைத்தளை, கைக்குட்டை.

ம. கைவிலங்நு.

*[கை + விலங்கு.]*

**கைவிலை**[1] *kai-vilai,* பெ.(n.) மொத்த விலை, பண விலை: cash -price (செ. அக.). 2. கைப்பணத்திற்கு விற்றல்: to sell for ready-money.

ம. கைவில; து. கைபிலெ: பட. கைபெலெ.

*[கை + விலை]*

**கைவிலை**[2] *kai-vilai,* பெ.(n.) அப்போதைய விலை; current price. *"பிடாகை தோறும் கைவிலைப் படிக்கு நாமீடாறும் தாவெழுதவும்"* *(S.I.I. VIII. 139). (செ. அக.).*

*[கை + விலை]*

**கைவிழல்** *kai-viḻal,* பெ.(n.) பக்கப் (பாரிச) காற்றால் கை உணர்ச்சியற்றுப் போதல்; paralysis of an arm (சா. அக.).

*[கை + விழல்.]*

**கைவிழுது** *kai-viḻudu,* பெ.(n.) கடலில் ஆழங் குறைவாயுள்ள இடங்களில் ஆழத்தை அறிய உதவுங்கயிறு (M. Navi. 71); hand lead-line, used for sounding small depths in the sea.

*[கை + விழுது.]*

**கைவிளக்கம்** *kai-viḷakkam,* பெ.(n.) 1. தொழிலின் திறமை; dexterity, workmanship. 2. ***கைப்பாங்கு*** பார்க்க; see *kai-p-pāngu. அவன் கைவிளக்க மில்லாதவன் (செ. அக.).*

மறுவ. கைப்பாங்கு, கைராசி.

*[கை + விளக்கம்.]*

**கைவிளக்கு** *kai-viḷakku,* பெ.(n.) சிறுவிளக்கு; hand lamp, small portable lamp. *"கைவிளக் கேந்தி" (சீவக. 1542).* 2. ஒளிர்விளக்கு; bright lamp.

ம. கைவிளக்கு; க. கெய்தீவிகெ.

*[கை + விளக்கு.]*

**கைவிளங்காமை** *kai-viḷangāmai,* பெ.(n.) கைசெயற்படாகை; inability to use the hand.

மறுவ. கைமுடக்கு, கைமுடக்கம்.

*[கை + விளங்காமை.]*

**கைவிளி**[1] *kai-viḷi,* பெ.(n.) கையால் உதட்டை மடித்து ஊதியெழுப்பும் சீழ்க்கையொலி; whistle produced by applying the hand to the lips. *"மறவ ரழைத்த கைவிளி" (சேதுபு. சங்கரபா. 7.) (செ. அக.).*

மறுவ. சீழ்க்கை.

*[கை + விளி.]*

**கைவிளி**[2] *kai-viḷi,* பெ.(n.) கைதட்டியேனும் குறியீடுகள் (சமிஞ்ஞை) செய்தேனும் அழைக்கை (பெரியபு. கண்ணப்ப. 72); calling one's attention by clapping hands or making signs (செ. அக.).

*[கை + விளி.]*

**கைவிறிசு** *kai-viṟisu,* பெ.(n.) ஒருவகை வாணவெடி (யாழ்ப்.); hand-rocket, a kind of fire-work.

*[கை + விறிசு.]*

**கைவினை** *kai-viṇai,* பெ. (n.) ***கைவேலை*** பார்க்க; see *kai-vēlai.* *"வித்தக ரியற்றிய.... கைவினைச் சித்திரம்" (மணிமே. 19:5).(செ.அக.).*

*[கை + வினை.]*

**கைவினைக்குடி** *kai-vinnai-k-kudi,* பெ.(n.) கைத்தொழில் வேலை செய்யும் இனத்தோர்; artisan class. *"உழவுகுடி கைவினைக் குடி காசாயக் குடியிற் கொள்ளும்" (S.I.I.V. 95).*

*[கை + வினை + குடி.]*

**கைவினைஞன்** *kai-viṇaiñaṉ,* பெ. (n.) 1. தொழிலாளி; artisan, mechanic, workman (செ.அக.). 2. கம்மாளர்; carpenter, blacksmith. 3. செய்கை வல்லோர்; dynamic person, experts.

*[கை + வினைஞன்.]*

**கைவினைத்திறன்** *kai-viṉai-t-tiṟaṉ,* பெ.(n.) ***கைவேலை*** பார்க்க; see *kai-vēlai.*

*[கை + வினை + திறன்.]*

**கைவீச்சன்** *kai-viccaṉ,* பெ.(n.) பணிகார வகை (யாழ். அக.); a sweet cake (செ. அக.).

*[கை + வீச்சன்.]*

**கைவீச்சு**[1] *kai-viccu,* பெ.(n.) 1. கைவீசுகை; swing or free motion of the arms, as in walking. *"கைவீச்சொன்றே பெறு மைம்பது பொன்" (தனிப்பா.2,132:334).* 2. கையிருப்புத் தொகை (வின்.); cash on hand. 3. கைத்திறம்; strength, ability. *"அரக்கன் கைவீச்சு" (இராமநா. பாலகா.5).* 4. மிகுகொடை; grand donation. 5. ஐந்து; five. பழம் இரண்டு கைவீச்சு வாங்கி வா (உ.வ.).

ம. கைவீச்சு.

*[கை + வீச்சு.]*

**கைவீச்சு**[2] *kai-viccu,* பெ.(n.) அடி (யாழ். அக.); blow, stroke with the hand (செ. அக.).

*[கை + வீச்சு.]*

**கைவீசி** *kai-viśi,* பெ.(n.) ***கையாந்தகரை*** (சு. வை.181) பார்க்க; see *kaiyāntagarai.*

*[கை + வீசி.]*

**கைவீசியிலை** *kai-viśi-y-ilai,* பெ.(n.) கரிசலாங் கண்ணி; eclipse (சா. அக.).

*[கை + வீசி + இலை.]*

**கைவீசு-தல்** *kai-viśu-,* 7 செ.குன்றாவி.(v.t.) 1. கையை முன்னும் பின்னும் அசைத்தல்; to sway or wave the arms to and fro. 2. சண்டைக்கு அணியமாகும் போது கை வீசுதல்; to wave the hand when beginning to fight. 3. சைகை காட்டும் பொருட்டு கைவீசுதல்; to wave the hand for giving a sign.

க. கெய்வீசு, கெய்பீசு; பட. கைபீசு.

*[கை + வீசு-.]*

**கைவீடு** *kai-vidu,* பெ.(n.) விட்டு நீங்குகை (குறள். 799, உரை); desertion, forsaking (செ. அக.).

*[கை + வீடு. விடு → வீடு.]*

**கைவீணை** *kai-viṇai,* பெ.(n.) நரப்புக் கருவி வகையுளொன்று; a kind of lute. ***"கைவீணை முழங்க" (கொண்டல்விடு. 511) (செ.அக.).***



கைவீணை

*[கை + வீணை.]*

**கைவீழ்-தல்** *kai-viḻ-,* 2 செ.கு.வி.(v.i.) கையின் பயன் அல்லது ஆற்றல் அறுதல்; to lose the use or power of one's hands.

க. கெய்கெடு; பட. கைசோலு.

*[கை + வீழ்-.]*

**கைவெள்ளை** *kai-veḷḷai,* பெ.(n.) கையின் தோலை வெளுக்கச் செய்யும் ஒருவகை வெள்ளை (மேக) நோய்; leucoderma of the hand (சா. அக.).

ம. கைவெள்ள (உள்ளங்கை).

*[கை + வெள்ளை.]*

**கைவேகம்** *kai-vēgam,* 1. ***கைவிரைவு*** பார்க்க; see *kai-viraivu* (செ. அக. ). 2. கைவிசை; hand speed, dexterity, talent.

ம. கைவேகம்; க. கெய்தவக, கெய்வேக.

*[கை + வேகம்.]*

**கைவேட்டு** *kai-vēṭṭu,* பெ.(n.) இடிகொம்பு (இ.வ.); small mortars set on a pole and used in pyrotechny.

*[கை + வேட்டு.]*

**கைவேல்** *kai-vēl,* பெ.(n.) கப்பணம்; dart, javelin. *"கைவேல் களிற்றொடு போக்கி" (குறள். 774). (செ.அக.).*

*[கை + வேல்.]*

ஐகாரக் குறுக்கம் மொழி முதற்கண் ஒன்றரை மாத்திரையாயும், ஏனைய இடங்களில் ஒரு மாத்திரையாயும் குறுகுமென்றுணர்க. அவ்வாறு கொள்ளாக்கால் கய்வேல் களிற்றொடு என வரும் இலக்கியம் இலக்கணம் இன்றாய் முடியும் – இலப்பிரபம்.

**கைவேலி** *kaivēli,* பெ.(n.) காஞ்சிமாவட்டத்துச் சிற்றூர்; a village in kānjipuram Dt.

*[கைதை (தாழை) → கை + வேலி (நிலம்).]*

**கைவேலை** *kai-vēlai,* பெ.(n.) 1. கைத்தொழில்; manual labour, handicraft. 2. கைத்தொழிற்றிறம்; workmanship. 3. கையாற்செய்தது; work done with one's own hand, work performed by the hand (செ. அக.).

**ம.** கைவேல; **க.,பட.** கைகெலச; **து.** கைவாடு.

**Norw.** handling.

*[கை + வேலை]*

**கைவேலைப்பாடு** *kai-vēlai-p-pāḍu,* பெ.(n.) கைத்தொழிற்றிறம்; handicraft, workmanship.

*[கை + வேலைப்பாடு.]*

**கைவை[1]–த்தல்** *kai-vai-,* பெ.(n.) 1. கற்பழித்தல்; seducing (சா.அக.). 2. ஏற்படுதல்; to happening. 3.தொடுதல்; to feel by touch.

*[கை + வை-.]*

**கைவை[2]–த்தல்** *kai-vai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கையால் தொட்டுச் செய்தல்; to touch, handle, deal with. 2. உட்புகுதல்; to enter, as on a disquisition. *"பகவத் விஷயத்திற் கைவைத்தார்" (ஈடு, 6:2, பிர.).* 3. திருடுதல் (கொ.வ.); to steal, embezzle.4. கைவைத்து, குரு தூய்மையாக்குதல்; to consecrate by laying hands on (Chr.).

**ம.** கைவய்க்குக; **க.** கெய்யிக்கு; **பட.** கையிக்கு.

*[கை + வை-.]*

**கைவை[3]–த்தல்** *kai-vai-,* 18 செ. குன்றாவி. (v.i.) 1. அடித்தல்; to beat, belabour. 2. கற்பழித்தல் (இழி. வ.); to seduce, as a woman.

*[கை + வை-.]*

**கைவைத்தியம்** *kai-vaittiyam,* பெ.(n.) ***கைமருத்துவம்*** பார்க்க; see *kai-maruttuvam.*

*[கை + வைத்தியம்.]*

**கைனி[1]** *kaiṉi,* பெ. (n.) கைம்பெண் (திவா.); widow (செ.அக.).

*[கை (தனிமை). கைனி (தனித்திருப்பவள், கணவனை இழந்தவள்).]*

**கைனி[2]** *kaiṉi,* பெ. (n.) 1. ***அத்தம்*** (பிங்.) பார்க்க; see *attam.* 2. பதின்மூன்றாவது விண்மீன் (கை எனும் நாண்மீன்); (செ. அக.). கைம்மீன்; the 13th naksatra.

*[கை → கைனி. கைனி = கையின் இயல்புடையது.]*

## கொ

**கொ** *ko,* பெ.(n.) கொகரம்; தமிழ் நெடுங்கணக்கில் அடியண்ண எடுத்தொலிப்பில்லா வல்லின முதல்மெய்யும் (க்), பத்தாம் உயிரெழுத்தாகிய அரையங்காப்பு இதழ் குவிவுப் பின்னண்ண இடை உயிர்க்குறிலாகிய 'ஒ'கரமும் சேர்ந்து பிறந்த உயிர்மெய்யெழுத்து; the syllable formed by adding the back middle lax rounded vowel 'o', to the first consonant of Tamil alphabet, velar voiceless stop 'k'.

*[க் + ஒ – கொ.]*

**கொக்கட்டி[1]** *ko-k-kaṭṭi,* பெ.(n.) மஞ்சள் நாங்குப்பூடு; xanthochymus (சா.அக.).

*[கொக்கு → கொக்கட்டி.]*

**கொக்கட்டி[2]** *kokkaṭṭi,* பெ.(n.) குறுகிவளைந்த பனங்கிழங்கு (யாழ்ப்.); short and slightly crooked plamyra roots.

**மறுவ:** குறண்டற் பனங்கிழங்கு.

*[கொள்→கொட்கு→ கொக்கு. கொக்கட்டி = (குறுகி) வளைந்த பனங்கிழங்கு. (வட.வர.6)]*

**கொக்கட்டிச்சோலை** *kokkaṭṭi-c-cōlai* பெ.(n.) ஈழவளநாட்டில் மட்டக்களப்பிலுள்ள ஓர் ஊர்; a village at Mattakalappu in Sri Lanka.

*[கொக்கட்டி + சோலை.]*

**கொக்கரசன்பேட்டை** *kokkarasaṉ-pēṭṭai,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Cuddalore Dt.

*[கொக்கரசன் + பேட்டை.]*

**கொக்கரந்தாங்கல்** *kokkaran-dāṅgal,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kāñjipuram Dt.

*[கொக்கரன் + தாங்கல் = ஏரி.]*

**கொக்கரன்கோட்டை** *kokkaraṉ-kōṭṭai,* பெ.(n.) இராமநாதபுர மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanadapuram Dt.

*[கொக்கரன் + கோட்டை.]*

**கொக்கரி[1]-த்தல்** *kokkari-,* 4 செ.கு.வி. (v.i) 1. ஆரவாரித்தல்; to shout in triumph, to vaunt. *"கொக்கரித் தலகை சுற்ற" (கலிங்.150.).* 2. கோழி முதலியன கூவுதல்; to cluck, as hen; to cackle, as goose; to chuckle as crow. *"எருவை கூடிக் கொக்கரித்திட" (இரகு. மீட்சிப். 47.).*

**ம.** கொக்ரய்க்குக; **க.**கொக்கரிசு; **தெ.** கொக்கரின்சு.

**Fin.** kokka (puhe)(joke, joking); **Mong.** gokir; **Jap.** kokkei; **Q.** chavkay.

*[கொக் - ஒலிக்குறிப்பு. கொக் + கரி. கரு → கரி (செய்தல்).]*

**கொக்கரி[2]** *kokkari,* பெ.(n.) இன்னிய (வாச்சிய) வகை; a kind of musical instrument. *"கொக்கரி கிடுபிடி கொட்ட" (வள்ளி. கதை. Ms.).*

*[கெக்கல் (முழங்குதல்) → கொக்கரி.]*

**கொக்கரி[3]** *kokkari,* பெ.(n.) முழக்கம்; shouting, vaunting. *"குருதி குடிகாளி கொக்கரிசெய்" (திருப்பு. 179.).*

*[கொக் + கரி[1] → கொக்கரி[3].]*

**கொக்கரி[4]** *kokkari,* பெ.(n.) முன் வளைந்த கொம்புள்ள மாடு; the cow which has horn like hook.

*[கொள்கு → கொட்கு → கொக்கு + அரி.]*

**கொக்கரிகம்** *kokkarigam,* பெ.(n.) எழுத்தாணிப்பூடு (சா.அக.); style plant.

**மறுவ.** எழுத்தாணிக்கூர், எழுத்தாணிப் பச்சிலை, எழுத்தாணிப் பச்சை, கடற்கொழுப்பை.

*[கொக்கல் → கொக்கலிகம் → கொக்கரிகம்.]*

**கொக்கரிப்பு** *kokkarippu,* பெ.(n.) 1. தற்சிறப்பு; vociferation. என் வீழ்ச்சியைப் பார்த்துக் கொக்கரிக்கிறான் (உ.வ.). 2. பறவையொலி; cackle (சா.அக.).

*[கொக்கரி → கொக்கரிப்பு.]*

**கொக்கரை** *kokkarai,* பெ.(n.) 1. வளைவு (இ.வ.); crookedness, deformity. 2. வைக்கோலெடுக்குங் கருவி (இ.வ.); rake. 3. வலம்புரிச் சங்கு (திவா.); chank with spiral turning to the right. 4. இசைக் கருவி வகை; a kind of musical instrument. *"தாளமலி கொக்கரை" (தேவா. 1141:7).* 5. வில் (அக.நி.); bow. 6. பாம்பு (அக.நி.); snake. 7. வலை (அக.நி.); net. 8. தாழை, பனை, தெங்கு முதலியவற்றின் வற்றியுலர்ந்த இளமடல் (யாழ்ப்.); dried integument of the palmyra flower.

**மறுவ.** கொக்கறை.

**ம.** கொக்கர.

*[கொள் → கொட்கு. கொட்குதல் = சுற்றுதல், திரிதல். கொட்கு → கொக்கி. கொட்கு → கொக்கு = வளைந்த கழுத்துள்ள பறவை. கொட்கு → கொக்கரை = வளைவு.]*

**கொக்கரையுடும்பு** *kokkarai-y-uḍumbu,* பெ.(n.) வற்றிய மடல் போன்ற உருவுடைய உடும்பு; lizard of the varanus species, as resembling a dried integument.

*[கொக்கரை + உடும்பு.]*

**கொக்கல்** *kokkal,* பெ.(n.) வளைவு; curvature.

*[கொள் → கொட்கு → கொக்கு → கொக்கல்.]*

**கொக்கலகு** *ko-k-kalagu,* பெ.(n.) 1. வளைந்த மூக்கு; a curved hook. 2. கொக்கு மூக்கு; beak of crane (சா.அக.).

*[கொக்கு + அலகு.]*

**கொக்கவாலி** *kokkavāli,* பெ.(n.) புளியாத்தி; sour mountain ebony (சா.அக.)

*[கொக்கு + வாலி – கொக்குவாலி → கொக்கவாலி.]*

**கொக்களப்பி** *kokkaḷappi,* பெ.(n.) மதுரை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Madurai Dt.

*[கொக்கு + அளப்பி.]*

ஒருகா. சங்கஞ்செடி மிகுந்த நிலப்பகுதியாகலாம்.

**கொக்காகை** *kokkāgai,* பெ.(n.) சங்கஞ்செடி; mistletoe berry thorn (சா.அக.).

*[கொக்கு + (சாகை) ஆகை.]*

**கொக்காட்டம்** *kokkāttam,* பெ.(n.) 1. கொக்கரித்து ஆடும் ஆட்டம்; merriment with dance. 2.மிகுதிபும் ஆட்டிப் படைக்கும் இயல்பு; arrogance. அவன் கொக்காட்டம் போடுவது ஒன்றும் சரியில்லை (நெல்லை.).

[கொக்கரி + ஆட்டம் - கொக்கரியாட்டம் → கொக்காட்டம்.]

**கொக்காட்டல்** *kokkāṭṭal,* பெ.(n.) சீராட்டுகை (யாழ்.அக.); fondling.

[கொக்கரி + ஆட்டல் - கொக்கரியாட்டல் → கொக்காட்டல்.]

**கொக்காட்டல்** *kokkāṭṭal,* பெ.(n.) ஆட்டிப் படைத்தல்; to harass, annoy.

[கொக்கி + ஆட்டல் – கொக்காட்டல்.]

**கொக்காட்டி** *kokkāṭṭi,* பெ.(n.) சிவகங்கை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Sivagangai Dt.

[கொக்கு + பட்டி– கொக்குப்பட்டி → கொக்கட்டி → கொக்காட்டி.]

**கொக்காடி** *kokkāḍi,* பெ.(n.) இராமநாதபுர மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanadapuram Dt.

[கொக்கு + பாடி– கொக்குப்பாடி → கொக்காடி.]

**கொக்காம்பாளை** *kokkam-pāḷai,* பெ.(n.) ஓர் பூடு; an unknown shrub (சா.அக.).

[கொக்கு + ஆம் + பாளை.]

**கொக்காமணி** *kokkāmaṇi,* பெ.(n.) மணிவகை; a kind of bead. *"வக்காமணி கொக்காமணி வாங்கலையோ ஆயாளோ"* (நாட்டுப்.).

[கொக்குமணி → கொக்காமணி.]

**கொக்காரப்பட்டி** *kokkāra-p-paṭṭi,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

[கொக்கல் : வளைவு, வளைவான மேடு. கொக்கல் + பட்டி – கொக்கல்பட்டி →கொக்கரப்பட்டி → கொக்காரப்பட்டி.]

**கொக்கான்**[1] *kokkāṉ,* பெ.(n.) ஒரு மரம்; a tree (சா.அக.).

[கொக்கு → கொக்கான்.]

**கொக்கான்**[2] *kokkāṉ,* பெ.(n.) ஏழு கூழாங் கற்களைக் கொண்டு ஆடும் மகளிர் விளையாட்டு வகை (யாழ்ப்.); a game played by girls with seven pebbles.

[கொக்கு → கொக்கான்.]

**கொக்கான்வெட்டு–தல்** *kokkāṉ-veṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) கொக்கான் விளையாடுதல் (வின்.); to play with pebbles, as girls.

[கொக்கான் + வெட்டு–,.]

**கொக்கி**[1] *kokki,* பெ.(n.) 1.தேள்கெண்டை; scorpion goby. 2. உளுவை; river goby (சா.அக.).

[கொள் → கொட்கு. கொட்குதல் = சுற்றுதல், திரிதல். கொட்கு → கொக்கு : வளைந்த கழுத்துள்ள நீர்ப்பறவை. கொட்கி → கொக்கி : வளைந்த மாட்டி (வ.மொ.வ.6).]

**கொக்கி**[2] *kokki,* பெ.(n.) 1.கொளுவி; hook, clasp, as of a necklace or ear ring. 2. துறட்டி நுனியிற் செருகும் இருப்புக்கருவி (இ.வ.); hooked knife attached to a long bamboo, for cutting leaves and twigs. 3. சுமைதூக்கப் பயன்படுத்தும் கூரிய வளைவான கம்பி பொருத்தப்பட்ட கருவி; a hook-like device with a handle to hold. 4. கேள்விக்குறி; question mark. புரியாத இடங்களில் கொக்கி போட்டுவை. 5. தையல் எந்திரத்தில் நூலினை இழுத்துவிடும் கொழுப்போல் வளைந்துள்ள பாகம்; the hook that pulls the thread in a sewing machine.

**A.S.** hoe, hooc; **Du.** hock,haak; **Ice.** haki; **Gr.** haken; **Ohgr.** hako; **Lowgr.** hake; **E.** hook; **Fin.** kokka (hook), **Est.** kook; **Hung.** kajko; **Mong.** glygle; **Jap.** kagi. **Indones**. kaitān; **ME.** kok; **Ice.** haki; **Dan.** hage; **Swed.** hake **Gr.** haken; **A.S.** haca.

**ம.** கொக்கி; **க.** கொக்கெ, கொக்கி, கொங்கி; **தெ.** கொக்கி, கொக்கெமு; **து.** கொக்கெ, கொங்கி; **கோத.** கொக்ய; **துட.** க்விக்ய்; **பட.** கொக்கி; **நா.** கொங்கி (வளைந்த குந்தாலி).

[கொள்கு → கொட்கு → கொட்கி → கொக்கி.]

**கொக்கிக்கயிறு** *kokki-k-kayiṟu,* பெ.(n.) தூண்டில்முள் கோக்கப்பட்ட நீளக் கயிறு; a long rope attached with a fish hook.

[கொள் → கொள்கு → கொக்கி + கயிறு.]

**கொக்கிக்கல்** *kokki-k-kal,* பெ.(n.)தாழ்வாரம் கட்டுவதற்காகப் பயன்படுத்தும் வளைந்த கல்; a curved stone use in the construction of a verandah.

[கொக்கி + கல்.]

**கொக்கித்தாழ்ப்பாள்** *kokki-t-tāḻppāḷ,* தாழ்ப்பாள் வகைகளிலொன்று; a kind of latch.

[கொக்கி + தாழ்ப்பாள்.]

**கொக்கிப்புழு** *kokki-p-puḻu,* பெ.(n.) குடலில் காணப்படும் நுண்ணுயிரி வகை; hook-worm in intestine.

**ம.** கொக்கப்புழு, கொக்கோப்புழு; **க.** கொக்கெகுளு; **தெ.** கொக்கெபுறுகு.

[கொக்கி + புழு.]

**கொக்கிப்பூட்டு** *kokki-p-pūṭṭu,* பெ.(n.) அணிகலனி லமைந்த பூட்டு (வின்.); lock of a clasp in an ornament.

*[கொக்கி + பூட்டு.]*

**கொக்கிமுள்ளு** *kokki-muḷḷu,* பெ.(n.) காட்டு முள்ளுக்கத்தரி.(L.); hedge caper.

*[கொக்கி + முள்ளு.]*

**கொக்கியெலும்பு** *kokki-y-elumbu,* பெ.(n.) மணிக்கட்டின் எலும்பு; bone of the wrist.

*[கொக்கி + எலும்பு.]*

**கொக்கில்** *kokkil,* பெ.(n.) அணிகலனில் அமைந்துள்ள கொக்குவாய்; hook of a clasp.

*[கொக்கு → கொக்கி → கொக்கில்.]*

**கொக்கிலிமேடு** *kokkili-mēḍu,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kāñjipuram Dt.

*[கொக்கில் → கொக்கிலி + மேடு.]*

**கொக்கிலை** *kokkilai,* பெ.(n.) கொக்கு மூக்கைப் போன்ற இலைப்பூடு; lance leaved wind (சா.அக.).

*[கொக்கு + இலை.]*

**கொக்கிவாய்** *kokki-vāy,* பெ.(n.) ***கொக்குவாய்*** பார்க்க;see *kokku-vāy. "கொக்கிவாய் முத்தார மாகச் செய்து" (சிலப். 6:101. அரும்.).*

*[கொக்கி + வாய்.]*

**கொக்கிறகு** *kokkiṟagu,* பெ.(n.) வெள்ளை மந்தாரை (புட்ப.5); taper-pointed mountain ebony.

*[கொக்கு + இறகு.]*

வடிவிலும் நிறத்திலும் அளவிலும் கொக்கிறகை ஒத்திருப்பதால் அப் பெயர் பெற்றது (தமிழர் மதம்.87).

**கொக்கிறகு மந்தாரை** *kokkiṟagu-mandārai,* பெ.(n.) கொக்குமந்தாரை (M.M. 521.); taper-pointed mountain ebony.

*[கொக்கு + இறகு + மந்தாரை.]*

**கொக்கு**[1] *kokku,* பெ.(n.) 1.பறவைவகை; common crane. *"பைங்காற் கொக்கின்" (புறநா. 342).* 2. கரிய மூக்குடைய கொக்குவகை; 'சித்திரத்துக் கொக்கே ரத்தினத்தைக் கக்கு' (பழ.). stork. 3. நெல்லுண்ணும் கொக்குவகை; paddy-bird.

**மறுவ.** மடையான்.

**ம.** கொக்கு; **க.** கொக்கரெ, கொக்கு; **தெ.** கொக்கர, கொங்க, கொக்கராயி; **து.** கொர்ங்கு; **எரு.** கொக்கு; **துட.**



கொக்கு

கொச்க்; **கோண்.** கொருகு; **கூ.** கொக்கொ; **கொலா.** கொங்க; **பர்.** கொக்கல்; **பிரா.** காகூர். **Pkt.**kokkai; **Skt.** kaṅka; **Sinh.** koka.

**Fin.** kokko, kotka (eagle); **Est.** kotkas, kokas; **komi.** kuc.

*[கொள் → கொட்கு → கொட்குதல் = சுற்றுதல், திரிதல். கொட்கு → கொக்கு = வளைந்த கழுத்துள்ள நீர்ப்பறவை. (வ.மொ.வ.6).]*

வகைகள் : 1. குருட்டுக் கொக்கு. 2. தேசிக் கொக்கு. 3. சவதிக் கொக்கு. 4. வெண்கழுத்தி. 5. பறைக்கொக்கு. 6. கருமூக்கன். 7. பிணந்தின்னிக் கொக்கு. 8. பூங்கொக்கு. 9. கரண்டி மூக்கன். 10. செங்காலன்.

**கொக்கு**[2] *kokku,* பெ.(n.) மாமரம்; mango tree. *'துளு மாமரத்தைக் கொக்கென்பது' (தொல். சொல். 400, உரை).*

**து.** கொக்கு.

*[குளகு (அழகிய இளந்தழை) → குக்கு → கொக்கு.]*

**கொக்கு**[3] *kokku,* பெ.(n.) செந்நாய் (பிங்.); wild dog.

**தெ.** குக்க; **Skt.** kōka.

*[குக்கல் →கொக்கு.]*

**கொக்கு**[4] *kokku,* பெ.(n.) குதிரை(பிங்.); horse.

*[கொங்கு → கொக்கு.]*

**கொக்கு**[5] *kokku,* பெ.(n.)1. குருகு (மூல) விண்மீன்; mula naksatra. *"கொக்குச்சோதி" (விதான குணாகுண.12).* 2. வெண்மை; white.

*[குல் → குக்கு → கொக்கு. கொக்கு= வளைந்த அல்லது வட்டமான ஓடுபாதையில் ஓட்டப் பயிற்சி பெற்ற குதிரை.]*

**கொக்கு**[6] *kokku,* பெ.(n.) பறவையின் அலகு; beak or bill of a bird.

# கொக்கு வகைகள்


தோசிக் கொக்கு


சவதிக் கொக்கு


பறைக் கொக்கு


செங்காலன்


குருட்டுக் கொக்கு

ம., க. கொக்கு; து. கொக்கு, கொக்காயி, கோகாயி; குட. கொக்கி.

*[கொட்கு → கொக்கு.]*

**கொக்குக்கல்** *kokku-k-kal,* பெ.(n.) சிலைமான் கல், மாந்தளிர்க்கல் (வின்.); agate.

*[குல் → குக்கு → கொக்கு.]*

**கொக்குக்கால்** *kokku-k-kāl,* பெ.(n.) 1.ஒரு நீர்ப்பூண்டு; an aquatic plant. 2. நீண்ட கால்; long leg (சா.அக.).

*[கொக்கு+கால்]*

**கொக்குக்காலன்** *kokku-k-kālaṉ* பெ.(n.) நீண்ட கால்களையுடையவன்; one with an abnormally long leg (சா.அக.).

*[கொக்கு + காலன். கால் + அன் = காலன். 'அன்' ஆ.பா.ஈறு.]*

**கொக்குக்காலி** *kokku-k-kāli,* பெ.(n.) 1. மாமரம்; mango tree. 2. செந்நாய்; red wild dog. 3. குதிரை; horse (சா.அக.).

*[கொக்கு + காலி.]*

**கொக்குச்சத்தகம்** *kokku-c-cattagam,* பெ.(n.) அலக்கரிவாள்; hook-shaped blade attached to a pole.

*[கொக்கு (வளைவு) + அரிவாள்.]*

**கொக்குச்சம்பா** *kokku-c-cambā,* பெ.(n.) சம்பா நெல்வகை; a kind of *cambā* paddy.

*[கொக்கு + சம்பா.]*

**கொக்குச்சாறு** *kokku-c-cāṟu,* பெ.(n.) கொக்குக் கறியினின்று அணியம் செய்த சாறு; soup extracted from the flesh of heron (சா.அக.).

*[கொக்கு + சாறு.]*

**கொக்குடம்** *kokuḍam,* பெ.(n.) நச்சுவித்துகளைக் கொண்ட மரம்; strychnos, nux. vomica, tree (சா.அக.).

மறுவ. எட்டிமரம்.

*[கொக்குள் → கொக்குளம் → கொக்குடம்.]*

**கொக்குநடை** *kokku-naḍai,* பெ.(n.) கொக்கு நடப்பதுபோல் அசைந்தசைந்து நடக்கும் நடை; walk as of a crane.

*[கொக்கு + நடை.]*

**கொக்குநீர்** *kokku-nīr,* பெ.(n.) கழுதையின் சிறுநீர்; ass's urine (சா.அக.).

*[கொக்கு + நீர்.]*

**கொக்குநோய்** *kokku-nōy,* பெ.(n.) ஆட்டுக்குக் காணும் எரிநோய்; a disease among sheep, highly infectious (சா.அக.).

*[கொக்கு + நோய்.]*

**கொக்குநோவு** *kokku-nōvu,* பெ.(n.) 1.நெல்நோய் வகை; a blight affecting paddy. 2. ஆடுகட்குக் காணும் எரிநோவு (M.C.M. D.249.); a contagious disease among sheep. 3. கோழிகளுக்கு ஏற்படும் கழிச்சல் நோய்; a contagious disease among hens.

*[கொக்கு + நோவு.]*

**கொக்குப்பதரி** *kokkup-padari,* பெ.(n.) இலந்தை; jujube tree (சா.அக.).

*[கொக்கு + (புதரி) பதரி.]*

**கொக்குமட்டி** *kokku-maṭṭi-,* பெ.(n.) 1.சிப்பிவகை (வின்.); cockle. 2. சங்கு; conch. 3. நத்தைக்கூடு; cockle shell.

*[கொக்கு + மட்டி.]*

**கொக்குமணி** *kokku-maṇi,* பெ.(n.) கொக்கா மணி; a kind of bead. *"வக்காமணி கொக்கு மணிகளையும்" (மதி. கள. II, 139).*

*[கொக்கு + மணி.]*

**கொக்குமந்தாரை** *kokku-mandārai,* பெ.(n.) 1.வெள்ளை மந்தாரை; taper pointed mountain ebony. 2. புடைவை வகை (கொ.வ.); a kind of woman's cloth.

ம. கொக்குமந்தாரம், கொங்குமந்தாரம்.

*[கொக்கு + மந்தாரை.]*

**கொக்குமீன்** *kokku-mīṉ,* பெ.(n.) ஊசிக்கழுத்தி மீன் (M.M.203.); long-nosed fish.

*[கொக்கு + மீன்.]*



கொக்குமீன்

**கொக்குமுக்காடு** *kokku-mukkāḍu,* பெ.(n.) 1. கொக்கைப் போலக் கூனிக் குறுகி முக்காடு போடுகை; veiling oneself adopting a crowling. 2. மிளகாய், கத்தரிச்செடிகள் நட்ட மறுநாள் இருக்கும் தன்மை; the look of chilly brinjal plants the day after they are transplanted.

*[கொக்கு + முக்காடு.]*

**கொக்குமுட்டை** *kokku-muṭṭai,* பெ.(n.) புதுக்கோட்டை மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Pudukkōṭṭai* Dt.

*[கொக்கு + (முட்டம்) முட்டை.]*

**கொக்குமுத்து** *kokku-muttu,* பெ.(n.) கொக்கின் கண்டத்தில் பிறப்பதாகச் சொல்லப்படும் ஒரு வெண்முத்து; a white pearl-like concretion said to be formed in the neck of a stork (சா.அக.).

*[கொக்கு + முத்து.]*

**கொக்குமுள்ளு** *kokku-muḷḷu,* பெ.(n.) தொடரி; prickly burr-thorn (சா.அக.).

*[கொக்கு + முள்ளு.]*

**கொக்குமூக்கன்** *kokku-mūkkaṉ,* பெ.(n.) நீண்டு வளைந்த மூக்குடையவன்; one who has a long hook - nose.

*[கொக்கு + மூக்கன்.]*

**கொக்குமூக்கு** *kokku-mūkku,* பெ.(n.) வளைந்த மூக்கு; hook-nose; aquiline nose (சா.அக.).

*[கொக்கு + மூக்கு.]*

**கொக்குமேனி** *kokku-mēṉi,* பெ.(n.) 1.தில்லை மரம்; tiger's milk tree. 2. எடை குறைந்த உடல்; slight body (சா.அக.).

*[கொக்கு + மேனி.]*

**கொக்குவம்** *kokkuvam,* பெ.(n.) ***கொக்கோகம்*** பார்க்க; see *kokkōgam.* *"மையறு கொக்குவம் பரதமலி கணிதஞ் சத்தம்" (வள்ள. சுருதி. பாயி.9).*

**Skt.** kokkōha.

*[கொக்குவகன் → கொக்குவம்.]*

கொக்குவகன் என்பவரால் இயற்றப்பட்ட ரதி ரகசியம் என்னும் நூல்.

**கொக்குவாய்** *kokku-vāy,* பெ.(n.) அணிகலனில் உள்ள படுகண்ணியிற் செருகும் பூட்டு; the hook of a clasp in an ornament held by the *paḍukaṇṇi* *"கொக்குவாய் ஒன்றும்" (S.I.I.II,396.150).*

*[கொக்கு + வாய்.]*

**கொக்கூறப்பூடு** *kokkuṟa-p-pūḍu,* பெ.(n.) நெருஞ்சில்; caltrops tribulus terrestrics (சா.அக.)

*[கொக்கல் → கொக்கறை + (பூண்டு) பூடு.]*

**கொக்கேறி** *kokkēṟi,* பெ.(n.) நெட்டி (L.); solapith.

*[கொக்கு + ஏறி.]*

**கொக்கை** *kokkai,* பெ.(n.) ***கொக்கி*** பார்க்க; see *kokki.*

பட. கொக்கெ.

*[கொள் → கொட்கு → கொக்கை.]*

**கொக்கைக்கல்** *kokkai-k-kal,* பெ.(n.) ஆட்டுக்காற் கல் (வின்.); coral stone.

*[கொக்கை + கல்.]*

**கொக்கைச்சத்தகம்** *kokkai-c-cattagam,* பெ.(n.) ஒருவகைச் சிறுகத்தி (வின்.); small bill hook.

*[கொக்கை + சத்தகம்.]*

**கொக்கைச்சால்** *kokkai-c-cāl,* பெ.(n.) உழவுச்சால் படாத தரை (யாழ்ப்.); balk in ploughing.

*[கொக்கை + சால். ஒருகா. பொக்கை → கொக்கை.]*

**கொக்கோகம்** *kokkōgam,* பெ.(n.) வரகுணராம பாண்டியனால் வடமொழியினின்றும் மொழி பெயர்க்கப்பட்ட ஒரு காமநூல்; a treatise on erotics translated from Sanskrit by Varaguṇarāma Pāṇḍiyaṉ.

**மறுவ.** கொக்குவம்.

*[கொக்குவகன் – கொக்குவகம் → கொக்கோகம்.]*

கொக்குவகனால் இயற்றப்பட்ட நூல். இது முதலில் தமிழில் எழுதப்பட்டு வடமொழியாக்கம் பெற்றதென்றும் அதன் பின்னர் வடமொழியிலிருந்து தமிழாக்கம் பெற்றதென்றும் கூறுவர். கொக்குவகன் என்னும் பெயரே தமிழாயிருத்தல் காண்க.

**கொக்கோடு**[1] *kokkōḍu,* பெ.(n.) கோயில் மேல் தளத்தை மேவப் பயன்படும் ஒருவகைச் சிறிய ஓடு; a kind of small printed tile used for roofing temples.

**மறுவ.** கூரோடு.

**ம.** கொக்கோடு.

*[கொக்கு + ஓடு.]*

**கொக்கோடு**[2] *kokkōḍu,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[கொக்கு + கோடு – கொக்குக்கோடு → கொக்கோடு.]*

# கொக்கு வகைகள்



பிணந்தின்னிக் கொக்கு



பூங்கொக்கு





வெண் கழுத்திக் கொக்கு



கருமூக்கன் கொக்கு



கரண்டிக் கொக்கு

**கொக்கோவெனல்** *kokkō-v-enal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. of cackling, clucking.

*[கொக்கோ + எனல்.]*

**கொகராஞ்சி** *kogarāñji,* பெ.(n.) கணவாய் மீனின் முதுகு ஒடு (பரத. கலைச்.சொ.அக.); back of the skeleton of kanava fish.

**கொகுடி** *kogudi,* பெ.(n.) முல்லைக்கொடிவகை; a variety of jasmine creeper. *"குவிமுகையன கொகுடி" (சூளா. தூது. 4).*

**Persi**. yāsemin, yāsmin; **E.** jasmine; **M.Fr.** jasmin; **Cotta.** jessemin; **It.** gesmino; **Sp.** jazmin; **Fr.** yasmin.

*[கொக்கு → கொக்குள் → கொக்குளி → கொகுளி → கொகுடி.]*

**கொகுடிக்கோயில்** *kogudi-k-kōyil,* பெ.(n.) கோயில் கூடக (விமான) அமைப்புகளுள் ஒன்று; a kind of shrine in temple.

*[கொகுடி + கோயில். கொகுடிக்கோயில் (கொகுடி என்னும் முல்லைக் கொடியின் சிற்ப வேலைப்பாடு அமைந்த கோயில்).]*

**கொங்கடி** *kongadi,* பெ.(n.) 1. மழைக்காலத்தில் குடைபோல் பயன்படுத்தும் ஓலையால் முடைந்த கூர்ங்கூடை; a rain cover made of ruds and leaves. 2. தலையில் கவித்துக் கொள்ளும் உள்மடித்த சாக்குத்துணி; a tucked in gunny bag used as a raincoat.


கொங்கடி

**மறுவ.** கொங்கணி, சம்மங்கூடு.

*[கொங்கு - வளைவு, கொங்கு → கொங்கடி.]*

**கொங்கணக்கத்தி** *kongana-k-katti,* பெ.(n.) வளைந்த அமைப்புடைய ஒருவகைக் கத்தி; a kind of curved knife.

**ம.** கொங்கணம் கத்தி; **து.** கொங்கணகத்தி.

*[கொங்கணம் + கத்தி.]*

**கொங்கணநாயனார்** *kongana-nāyanār,* பெ.(n.) பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்களுளொருவர் (சிற்.அக.); a poet of fifteenth century.

*[கொங்கணம் + நாயன் + ஆர்.]*

**கொங்கணம்**[1] *konganam,* பெ.(n.) 1.மேற்குத் தொடர்ச்சி மலைக்கு மேற்கும், அரபிக்கடலுக்குக் கிழக்கும், கூர்ச்சரத்திற்குத் தெற்கும், கோவாவுக்கு வடக்குமாக உள்ளதும், ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்றுமான நாடு (நன்.272. மயிலை.); Konkan, the low country of Western India between the ghats and the Arabian sea extending from Goa to Gujarat, one of 56 Nādu. 2. தமிழ் நூல்களிற் கூறப்படும் பதினெட்டு மொழிகளுள் ஒன்று (திவா.); language of *Kongan,* one of 18 languages referred to in Tamil works.

**ம.** கொங்கணம்; **க., தெ., து.** கொங்கண.

கொங்கணம் > **Skt.** Konkaṇa.

*[கொண்கானம் → கொங்கணம்.]*

**கொங்கணம்**[2] *konganam,* பெ.(n.) வளைந்த தன்மை; the state of being curved.

*[கொங்கு + அணம். அணம் - சொல்லாக்க ஈறு.]*

**கொங்கணர்**[1] *konganar,* பெ.(n.)1.கொங்கண நாட்டார்; inhabitants of *Kongan.* 2. பண்டைத் தமிழ்ச் சித்தருள் ஒருவர்; an ancient Tamil Šiddha.

**ம.** கொங்கணன்.

*[கொங்கணம் → கொங்கணர்.]*

**கொங்கணர்**[2] *konganar,* பெ.(n.) கன்னட நாட்டின் மங்களூர்ப் பகுதியினர்; people around Mangalore state. "கோசலர் சிங்களர் தெலுங்கர்" (S.I.I. XXVI, 37-9, p.28).

*[கொங்கணம் → கொங்கணர்.]*

**கொங்கணர்**[3] *konganar,* பெ.(n.) கள்ளர்குடிப் பட்டப்பெயர்களுள் ஒன்று (கள்ளர் சரித்.ப.98); a caste title of Kallars.

*[கொங்கணம் + அர்.]*

**கொங்கணவர்** *konganavar,* பெ.(n.) ***கொங்கணர்*** பார்க்க; see *konganar.* ***கொக் கென்று நினைத்தாயோ கொங்கணவா? (தனிப்பா.)***

*[கொங்கணம் →கொங்கணவர்.]*

**கொங்கணவன்** *koṅgaṇavaṉ,* பெ.(n.) நாகரிகமில்லாதவன்; uncivilised person.

[*கொங்கணன் → கொங்கணவன்.*]

**கொங்கணி**[1] *koṅgaṇi,* பெ.(n.) கொங்கண நாட்டான்; inhabitant of Konganam.

ம., க. கொங்கணி.

[*கொங்கணம் → கொங்கணி.*]

**கொங்கணி**[2] *koṅgaṇi,* பெ.(n.) மழையைத் தடுக்கத் தலையிற் கவிக்கும் நீண்டு உள்வளைந்த சம்பங்கூடை அல்லது அதைப் போன்ற பாதுகாப்பு அமைப்பு; a covering against rain made of camban reeds, palm leaf or grass, etc.

மறுவ. கொங்காடை, கொங்கடி, கொங்காணி.

[*கொங்கு + அணி – கொங்கணி (வளைத்து மூடிய அணி).*]

**கொங்கணிப்பூண்டு** *koṅgaṇi-p-pūṇḍu,* பெ.(n.) பயிரின் களையாகிய பூண்டுச்செடி (இ.வ.); a kind of weed.

[*கொங்கணி + பூண்டு.*]

**கொங்கணியான்** *koṅgaṇiyāṉ,* பெ.(n.) மீன்வகை (யாழ். அக.); a kind of fish.

[*கொங்கணி → கொங்கணியான்.*]

**கொங்கணையன்** *koṅgaṇaiyaṉ,* பெ.(n.) பழிச்சொல்; a term of abuse.

[*கொங்கு → கொங்கணவன் → கொங்கணையன்.*]

**கொங்கம்** *koṅgam,* பெ.(n.) 1. ***கொங்கு*** பார்க்க; see *Koṅgu* a portion of the Tamil country. 2. கோளக வைப்பு நஞ்சு; a mineral poison.

[*கொங்கு → கொங்கம்.*]

**கொங்கம்பட்டி** *kongam-paṭṭi,* பெ.(n.) மதுரை மாவட்டம் மேலூர் வட்டத்தில் உள்ள திருமணி முத்தாற்றை ஒட்டி அமைந்துள்ள ஊர்; a village situated near Thirumanimutharu river in Melur Taluk Madurai Dt.

[*கொங்கன் + பட்டி – கொங்கன்பட்டி → கொங்கம்பட்டி*]

**கொங்கம்பாளையம்** *koṅgam-pāḷaiyam,* பெ.(n.) ஈரோடு மாவட்டத்துச் சிற்றூர்; a village in Erode Dt.

[*கொங்கம் + பாளையம்.*]

**கொங்கமுடி** *koṅgamuḍi,* பெ.(n.) தலையின் ஒரு பக்கத்தில் கொண்டை அமையுமாறு முடியப்பட்ட மகளிர் தலைமுடி; a particular hair-do of woman, mode of tying the hair on one side of the head.

ம.கொங்கமுடி.

[*கொங்கு + முடி.*]

**கொங்கர்கோமான்** *koṅgar-kōmāṉ,* பெ.(n.) கொங்குநாட்டை வென்ற மன்னர்கள் சூடிக் கொண்ட பட்டம்; chieftain of *Koṅgu* country.

[*கொங்கர் + கோமான்.*]

**கொங்கரத்தி** *koṅgaratti,* பெ.(n.) சிவகங்கை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Sivagangai Dt.

[*கொங்கு + ஆரத்தி.*]

**கொங்கரம்** *koṅgaram,* பெ.(n.) வளைகை; bending.

தெ. கொங்கர.

[*கொங்கு → கொங்கரம்.*]

**கொங்கராயர்** *koṅgarāyar,* பெ.(n.) தென்னார்க் காட்டு மாவட்டம் கள்ளக்குறிச்சி வட்டம், கொங்க ராய பாளையத்திலுள்ள, உடையாரினத்தைச் சார்ந்த பாளையக்காரர்களின் பட்டப்பெயர்; title of Poligars of the *Udaiyār* caste, probably from *Koṅgarāya Pāḷaiyam* in *Kalla-kuṟicci* taluk of Villupuram Dt. 2. கள்ளர்குடிப் பட்டப்பெயர் களுளொன்று (தஞ்.); a caste title of Kaḷḷars.

[*கொங்கம் + இராயர்.*]

**கொங்கராயனூர்** *koṅga-rāyaṉ-ūr,* பெ.(n.) கோவை மாவட்டத்தில் அமைந்த ஊர்; a village situated in Coimbattur Dt.

[*கொங்குராயன் + ஊர்.*]

கொங்குதேசச் சிற்றரசர்களுள் ஒருவரான கொங்குராயர் ஆண்டமையால் இப் பெயர் பெற்றதாம்.

**கொங்கரி** *koṅgari,* பெ.(n.) ஏல அரிசி (மலை.); cardamom.

[*கொங்கு + அரிசி.*]

**கொங்கரையர்** *koṅgaraiyar,* பெ.(n.) கள்ளர்குடிப் பட்டப்பெயர்களுள் ஒன்று (கள்ளர் சரித்.ப.98); a caste title of Kaḷḷars.

[*கொங்கு + அரையர்.*]

**கொங்கல் நகரம்** *koṅgal-nagaram,* பெ.(n.) கோவை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kovai Dt.

[*கொங்கல் + நகரம்.*]

**கொங்கவேம்பு** *konga-vēmbu,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[கொங்கன் + வேம்பு.]*

**கொங்களம்** *kongaḷam,* பெ.(n.) கொங்கண மொழி (யாழ். அக.); language of the Kongan country.

*[கொண்கானம் → கொங்கணம் → கொங்களம் (கொ.வ.).]*

**கொங்கன்** *koṅgaṉ,* பெ.(n.) 1.கொங்கநாட்டான்; inhabitant of the Kongu country. *"ஒளிறுவாட் கொங்கர்" (குறுந். 393).* 2. சேரன் (திவா.) Cēra king.

ம. கொங்ஙன்; க. கொங்க; து. கொங்கெ.

**கொங்கன்குளம்** *koṅgaṉ-kuḷam,* பெ.(n.) திருநெல்வேலி மாவட்டம் இராசபாளையத்திற்கு அருகேயுள்ள ஒரு சிற்றூர்; a village near Rajapalayam in Tirunelveli Dt.

*[கொங்கன் + குளம்.]*

கொங்கன் என்னும் சிற்றரசன் இவ் ஊரில் வெட்டிய குளமொன்று அமைந்திருந்ததாகவும் அதன் அடிப்படையில் இப் பெயர் வழங்கி வருவதாகவும் கருதப் படுகிறது.

**கொங்கனேந்தல்** *koṅgaṉ-ēndal,* பெ.(n.) சிற்றூரொன்றின் பெயர்; a name of a village.

*[கொங்கன் + ஏந்தல் (ஏரி).]*

**கொங்காடை** *koṅgāḍai,* பெ.(n.) கொங்குநாட்டில் மழை காலத்தில் மடித்துத் தலையில் கவிழ்த்துக் கொள்ளும் துப்பட்டி அல்லது சாக்குத்துணி; coarse cloth or sack which is used to protect the head from rain in Kongu country.

*[கொங்கு + ஆடை – கொங்காடை.]*

**கொங்காணி** *koṅgāṇi,* பெ.(n.) மழையைத் தாங்க உடலிற் கவிக்கும் சம்பங்கூடை; covering against rain, made of palm leaf, grass or reeds.

மறுவ. கொங்கூடி, கொங்காடை.

*[கொங்கு → கொங்காணி.]*

**கொங்காரதி** *koṅgāradi,* பெ.(n.) பிடங்குநாறி என்னும் தேக்குமரம்; fire - brand teak (சா.அக.).

*[குங்கு → கொங்கு → கொங்காரதி.]*

**கொங்காரம்** *koṅgāram,* பெ.(n.) குங்குமமரம்; a species of fragrant tree.

*[குங்கு → கொங்கு → கொங்காரம்.]*

**கொங்கார மாசுக்கீரை** *koṅgāra-māśu-k-kīrai,* பெ.(n.) பிண்ணாக்குக் கீரை (சித்.அக.); a herb.

*[கொங்கர் + மசியல் + கீரை – கொங்கர்மசியல் கீரை → கொங்காரமாசிக்கீரை (கொ.வ.).]*

**கொங்காழி** *koṅgāḻi,* பெ.(n.) இரண்டு நாழியும் ஒரு உரியும் (2½ நாழி) கொண்ட ஒரு தவச அளவு; a measure of grain which contains two and a half standard *nāḻis.*

ம. கொங்காழி.

*[கொங்கு + ஆழி.]*

**கொங்காளம்** *koṅgāḷam,* பெ.(n.) பதினெண் மொழிகளுள் ஒன்று; one among the eighteen languages. (இரு.நா.).

மறுவ. கொங்கணம்.

*[கொங்கு → கொங்காளம்.]*

**கொங்காளன்** *koṅgāḷaṉ,* பெ.(n.) குதிரைவகை (அசுவசா.151.); a breed of horses probably of the Kongu country.

*[கொங்கு → கொங்காளன்.]*

**கொங்கான்**[1] *koṅgāṉ,* பெ.(n.) கொங்கணன்; a man of Kongānam.

*[கொங்கு + ஆன்.]*

**கொங்கான்**[2] *koṅgāṉ,* பெ.(n.) அறிவிலி; ignorant person.

*[கொங்கன் → கொங்கான்.]*

**கொங்கி** *koṅgi,* பெ.(n.) நாரை; crane (சா.அக.).

*[கொங்கு → கொங்கி.]*

**கொங்கிணிமுள்ளு** *koṅgiṇi-muḷḷu,* பெ.(n.) காட்டுச்சோளம்; wild sage (சா.அக.).

*[கொங்கிணி + முள்ளு.]*

**கொங்கிலவு** *koṅgilavu,* பெ.(n.) 1. கோங்கிலவு; dipterocarp dammer. 2. முள்ளிலவு; red cotton tree. 3. தணக்கு; odal tree. 4.கள்ளிச்சாரம்; mordant of *kaḷḷi* tree (சா.அக.).

*[கொங்கு + இலவு.]*

**கொங்கிளங்கோசர்** *koṅgiḷaṅ-kōśar,* பெ.(n.) கொங்குநாட்டில் குடியேறிய கோசர்; Kōśar immigrants into Kongu country.

*[கொங்கு + இளம் + கோசர்.]*

**கொங்கிற்பொன்** *koṅgiṟ-poṉ,* பெ.(n.) கொங்கு நாட்டுப் பொற்காசு; gold coin of Kongu country.

*"கொங்கிற் பன்னு துலைப்பசும் பொன்" (பெரியபு. இடங்கழி.செப்.3), (கல்.அக.).*

*[கொங்கில் + பொன்.]*

**கொங்கு**[1] *kongu,* பெ.(n.) 1. கோவை, ஈரோடு, சேலம், நாமக்கல், தருமபுரி மாவட்டங்களும் எருமையூர் (மைசூர்)ச் சீமையின் ஒரு பகுதியுமாக அடங்கிய தமிழ்நாட்டுப் பகுதி; the Tamil country comprising the districts of Coimbatore, Erode, Salem, Namakkal and Dharmapuri and portion of Mysore. *கொங்கிளங் கோசர் (சிலப். உரைபெறு.2).* 2. பூந்தாது; farina, pollen of flowers. *"கொங்குமுதிர் நறுவழை" (குறிஞ்சிப். 83).* 3. நறுமணம்; fragrance, odour. *"கொங்கு விம்முபூங் கோதை மாதரார்" (சீவக. 2680).* 4. தேன்; honey. *"கொங்குகவர்....சேவல்" (சிறுபாண்.184).* 5. கள் (பிங்.); toddy. 6. கருஞ்சுரை (மலை.); a dark kind of bottle - gourd. 7. புறத்தோல்; husk.

**ம.** கொங்ஙு; **க.** கொங்கு; **து.** கொஙக; **கோத.**கொங்க்; **துட.** க்விக்.

*[குங்கு → கொங்கு.]*

**கொங்கு**[2] *kongu,* பெ.(n.) 1. வளைந்த தன்மை; the state of being bent, crooked, etc. 2. குழப்பம்; confusion. 3. ஒழுங்கின்மை; irregular.

**க.** கொங்கு; **தெ.** கொங்கி, கொங்கா; **து.** கொங்கு; **பட.** கொக்கு (வளைவு).

*[குல் → குள் → குங்கு → கொங்கு.]*

**கொங்கு**[3] *kongu,* பெ.(n.) மலையின் சரிவுப் பகுதி; slopes of mountain.

**ம.** கொங்ஙு; **க.** கொங்கு; **து.** கொங்க; **கோத.** கொங்க்.

*[குல் → குள் → குங்கு → கொங்கு.]*

**கொங்குகா** *konguga,* பெ.(n.) பிரவொட்டி; an unknown black magic plant used for invoking or adjusting a demon (சா.அக.).

*[கொங்கு + கா.]*

**கொங்குகி** *kongugi,* பெ.(n.) கருஞ்சுரை; hedge - caper (சா.அக.).

*[கருஞ்சுரை → கங்குரி → கொங்குகி.]*

இது பூதங்களை அழைப்பிக்கும் மூலி என்பர்.

**கொங்குகிர்** *kongugir,* பெ.(n.) வளைந்த உகிர், பறவையின் கூருகிர்; a bent nail or claw.

**க.** கொங்குகுர்.

*[கொங்கு + உகிர்.]*

**கொங்குசீர்** *kongu-sir,* பெ.(n.) கொங்கர் பின்பற்றும் சடங்கு; a rite among *Kongu* people.

*[கொங்கு + சீர்.]*

**கொங்குடையாம்பாளையம்** *kongudaiyām-pālaiyam,* பெ.(n.) சிற்றூர்ப் பெயர்; name of a village.

*[கொங்கு + உடையான் + பாளையம்.]*

**கொங்குத்தரம்** *kongu-t-taram,* பெ.(n.) காங்கேயத்து மூவகை எருதுகளைப் பிரிக்கும் பகுப்பாகும்; the *Kāngēyam* bull.

*[கொங்கு + தரம்.]*

**கொங்குநாடு** *kongu-nādu,* பெ.(n.) பண்டைய தமிழகத்திலிருந்த நாடுகளிலொன்று; a country in ancient Tamil nadu.

*[கொங்கு + நாடு.]*

**ம.** கொங்ஙுநாடு, கொங்ஙநாடு, கொங்கர் நாடு; **க.** கொங்கு; **து.** கொங்க; **கோத.** கொங்க்.

இன்றைய கோயம்புத்தூர், ஈரோடு, சேலம் மாவட்டங்களடங்கிய நிலப்பகுதி. இதைப்பற்றிய பாடல்களையும் கொங்கு மண்டல சதகத்தையும் கொண்டு பார்க்கும்போது மேற்கே வெள்ளிமலையும், கிழக்கே சேர்வராயன் மலை பச்சைமலை, கொல்லி மலை ஆகிய மலைகளையும், வடக்கே தலைமலை பிளிகிரிரங்கன் மலைகளையும், தெற்கே பழனி மலையையும் கொண்ட நிலவெளியாகும்.

**கொங்குமுட்டி** *kongu-mutti,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanadhapuram Dt.

*[கொங்கு + முட்டி.]*

**கொங்குமுளை** *kongu-mulai,* பெ.(n.) பழைய நாணய வகை (பணவிடு.132); an ancient coin.

*[கொங்கு + (மிளை) முளை.]*

**கொங்குரான்வயல்** *konguran-vayal,* பெ.(n.) புதுவை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Puduvai Dt.

*[கொங்கரையன் → கொங்குரான் + வயல்.]*

**கொங்குரை** *kongurai,* பெ.(n.) மாற்றுயர்ந்த பொன்; gold of Kongu, the quality of which is high "கொங்குரை யாற்றிலிட்டு" (மதுரைக்க. 74)

*[கொங்கு → கொங்குரை.]*

**கொங்குவஞ்சி** *kongu-vañji,* பெ.(n.) கருவூர்; Karuvoor in Kongu.

*[கொங்கு + வஞ்சி.]*

**கொங்குவேண்மாக்கதை** *konguvēṇ-mākkadai,* பெ.(n.) கொங்குவேள் இயற்றிய பெருங்கதை என்னும் இலக்கியம்; a Tamil literary work by Konguvēḷ.

*[கொங்குவேள் + மாக்கதை.]*

**கொங்குவேள்** *kongu-vēḷ,* பெ.(n.) பெருங்கதை யென்னுந் தமிழ்ப்பாவியம் (காவியம்) இயற்றிய ஆசிரியர்; author of the Tamil classical work as Perungadai. *"கொங்குவேள் மாக்கதையைக் கூறேம்" (சீவக. முகவுரை,13).*

*[கொங்கு + வேள்.]*

**கொங்குவேளாளர்** *kongu-vēḷāḷar,* பெ.(n.) கொங்குநாட்டு வேளாளர்; Velalas of the *Kongu* country.

*[கொங்கு + வேளாளர்.]*

**கொங்கூர்** *kongūr,* பெ.(n.) பல்லடம் வட்டம் கொழுமம் அருகிலுள்ள ஊர்; a place near Koḷumam in Palladam taluk in Coimbatore Dt. *"இட்ட நிலம் கொங்கூர்க் குளத்துக் கீழைத்தூம்பில்" (S.I.I.V.273:9).*

*[கொங்கு + ஊர்.]*

**கொங்கெழு சிவாலயம்** *kongeḷu-śivālayam,* பெ.(n.) கொங்குநாட்டில் உள்ள தேவாரப் பாடல்பெற்ற ஏழு சிவன் கோயில்கள். *"திருமுடி பெற்றுக்கொண்டு கொங்கெழு சிவாலயமும் சேவித்து" (கொங்கு நாட்டு சமுதாய ஆவணங்கள், கொங்கு காணியான பட்டயம். 3).*

*[கொங்கு + எழு (ஏழு) + சிவன் + ஆலயம்.]*

**கொங்கை** *kongai,* பெ.(n.) 1.முலை; woman's breast. *"கொங்கை முன்றிற் குங்கும மெழுதாள்" (சிலப்.4:49).* 2. மரத்தின் முருடு (வின்.); protuberances or knots of a tree. 3. கம்புத் தவசத்தின் உமி (இ.வ.); kambu husk. 4. மரக்கிளை ; branch of a tree. வடக்கே போற கொங்கையை வெட்டு (நெல்.வழ.).

ம. கொங்க; க. கொங்கெ; கூய். கன்குடி.

*[கொம்பு → கொங்கு → கொங்கை.] (தமி.வ.219)*

**கொங்கைக்கட்டி** *kongai-k-katti,* பெ.(n.) முலைக் கட்டி; mammary abscess (சா.அக.).

*[கொங்கை + கட்டி.]*

**கொங்கைக்குத்தல்** *kongai-k-kuttal,* பெ.(n.) முலையின் கோளத்திற் காணும் குத்தல் வலி; pain in the mammary gland (சா.அக.).

*[கொங்கை + குத்தல்.]*

**கொங்கைக்கோளம்** *kongai-k-kōḷam,* பெ.(n.) பால் சுரக்கும் கோளம்; lactogenic gland (சா.அக.).

*[கொங்கை + கோளம்.]*

**கொங்கைநீர்** *kongai-nīr,* பெ.(n.) முலைப்பால்; woman's breast milk (சா.அக.).

*[கொங்கை +நீர்.]*

**கொங்கைப்பால்** *kongai-p-pāl,* பெ.(n.) பெண் முலைப்பால்; woman's breast milk (சா.அக.).

*[கொங்கை + பால்.]*

**கொங்கைபவனி** *kongai-bavaṉi,* பெ.(n.) சுழல் வண்டு; a beetle whirling in water (சா.அக.).

*[கங்கை → கொங்கை + பவனி.]*

**கொங்கைவலி** *kongai-vali,* பெ.(n.) முலையுள் வலி; pain in the mamma (சா.அக.).

*[கொங்கை + வலி.]*

**கொங்கைவிம்மு-தல்** *kongai-vimmu-,* 5 செ.கு.வி.(v.i.) காமவிச்சையால் பெண்கள் முலை இறுகிப் பருத்தல்; to becoming distended and rigid as woman's brests by a force acting from sexual desire (சா.அக.).

*[கொங்கை + விம்மு-.]*

**கொச்சக்கயிறு** *kocca-k-kayiṟu,* பெ.(n.) தெங்கின் கதம்பை நாரால் செய்யப்படுங் கயிறு; rope made of coconut fibre.

ம. கொச்சம் (சிறிய இழைக்கயிறு).

*[கொச்சம் + கயிறு.]*

**கொச்சகக் கலிப்பா** *koccaga-k-kalippā,* பெ.(n.) தரவு, தரவிணை, சிஃறாழிசை, பஃறாழிசை, மயங்கிசை என்னும் ஐம்பிரிவுடைய கலிப்பாவகை *(யாப். வி.81)*; a species of *Kali* verse, of five varieties, viz., *taravu, taraviṇai, cikṟāḷiśai pakṟāḷiśai, mayangiśai.*

*[கொச்சகம் + கலிப்பா.]*

**கொச்சகம்**[1] *koccagam,* பெ.(n.) ***கொச்சகக் கலிப்பா*** (காரிகை. செய்.12.) பார்க்க; see *koccaga-k-kalippā.* 2. ஆடையுள் ஒருவழிக் கொய்தடுக்கிக் கட்டுவது (தொல்.பொருள்.433, உரை); ornamental

pleating of a cloth when worn. 3. அம்போதரங்க வுறுப்புகளுள் ஒன்று (தொல். பொருள்.464); one of the elements of *ambōdaraṅgam*. 4. பரிபாட லுறுப்புகளுள் ஒன்று (தொல்.பொருள்.433); one of the elements of *Paripāḍal*.

ம. கொச்சகம்.

*[கொய்சு → கொச்சு → கொச்சகம்.]*

**கொச்சகம்**[2] *koccagam*, பெ.(n.) ***கொச்சை***[1] பார்க்க; see *koccai*. சிறப்பில்லாததனை ஒரு சாரார் கொச்சையென்றும் கொச்சக மென்றும் வழங்குவர் (யாப்.வி.79).

*[கொச்சு → கொச்சகம்.]*

**கொச்சகவொருபோகு** *koccaga-v-oru-pōgu*, பெ.(n.) "கலிப்பாவின் வகைகளுள் ஒன்று" (தொல்.பொருள்.செய்யுள்.143); a kind of kalippā.

*[கொச்சகம் + ஒரு + போகு.]*

தரவு முதலான உறுப்புகளுள், தரவின்றித் தாழிசை முதலிய உறுப்புகள் பெற்றும், தாழிசையின்றித் தரவு முதலியன உடைத்தாகியும், எண்ணாகிய உறுப்புகளை இடையிட்டுத் தனிச்சொல் வாராது தொழியினும்; சுரிதகமின்றித் தரவு தானே நிமிர்ந்தொழுகி முடியினும்; ஒத்தாழிசையின் யாக்கப்பட்ட யாப்பினும் அதற்குரித்தாக ஓதப்பட்ட கடவுள் வாழ்த்துப் பொருண்மையின்றிக் காமப் பொருளாக வருவதுமாகிய ஒருவகைக் கலிப்பா.

**கொச்சங்காய்** *koccaṅgāy*, பெ.(n.) தென்னையின் இளங்காய்; undeveloped coconut fruit.

ம. கொச்சங்ங.

*[கொச்சு + அம் + காய்.]*

**கொச்சம்**[1] *koccam*, பெ.(n.) ***கொச்சக்கயிறு*** பார்க்க; see *kocca-k-kayiṟu*.

ம. கொச்சம் (சிறிய இழைக்கயிறு).

*[கொச்சு → கொச்சம்.]*

**கொச்சம்**[2] *koccam*, பெ.(n.) பீர்க்கு; luffa gourd (சா.அக.).

*[கொச்சு → கொச்சம்.]*

**கொச்சம்**[3] *koccam*, பெ.(n.) கரையையொட்டி எழும் இருவேறு அலைகட் கிடைப்பட்ட நீர்ப்பகுதி; plain water surface between two waves near shore.

*[கொச்சு → கொச்சம்.]*

**கொச்சம்**[4] *koccam*, பெ.(n.) சிறியது, கடைப்பட்டது; that which is small, inferior.

ம. கொச்சம்.

*[கொச்சு + அம்.]*

**கொச்சவாடை** *koccavāḍai*, பெ.(n.) இறைச்சி நாற்றம்; foul smell.

ம. கொச்சம்.

*[குழை → குழைச்சு → கொச்சு → கொச்சல் + வாடை.]*

**கொச்சன்** *koccaṉ*, பெ.(n.) சிறுபையன்; young boy.

ம. கொச்சன்.

*[கொச்சு → கொச்சன்.]*

**கொச்சாம்பாறை** *koccām-pāṟai*, பெ.(n.) சிறிய பாறைமீன்வகை;a kind of fish.

*[கொச்சம் + பாறை – கொச்சம்பாறை → கொச்சாம் பாறை.]*

**கொச்சாளை** *koccāḷai*, பெ.(n.) மீன்வகை (வின்.); a kind of fish.

*[கொச்சு → கொச்சாளை.]*

**கொச்சாறு** *koccāṟu*, பெ.(n.) சிறிய ஆறு; a small river, brook.

ம. கொச்சாறு.

*[கொச்சு + ஆறு.]*

**கொச்சி**[1] *kocci*, பெ.(n.) 1. கொச்சிநாடு; (an erst-while state in Kerala) Cochin state. 2.கொச்சிநகர்; Cochin town. 3. பூண்டின் முதற்பெயர்; plant's first term as கொச்சிமிளகாய் etc. 4. மும்முறை வைத்த சவ்வீர வைப்பு; mercury chloride sublimated three times formerly in Cochin state (சா.அக.).

*[கொச்சு → கொச்சி.]*

**கொச்சி**[2] *kocci*, பெ.(n.) விளாம்பழத்தின் உள்ளீடு (வின்.); pulp of the wood apple.

*[குச்சில் → குச்சி → கொச்சி.]*

**கொச்சி**[3] *kocci*, பெ.(n.) ***ஊசிமிளகாய்*** (மலை.) பார்க்க; see *ūsimiḷagāy*

மறுவ. கொச்சி மிளகாய்.

*[குச்சி → கொச்சி.]*

**கொச்சி**[4] *kocci*, பெ.(n.) நெருப்பு (அக.நி.); fire.

ம. கொச்சி; க. குச்சு (கொதிக்கவை).

*[கிச்சு → கொச்சு → கொச்சி.]*

**கொச்சி**[5] *kocci,* பெ.(n.) இளங்கொட்டங்காய்ச்சில் (யாழ்ப்.); dry shell of a young coconut after the kemel is taken out.

*[காய் + சில் - காய்ச்சில் → கச்சில் → கொச்சி.]*

**கொச்சிக்கடா** *kocci-k-kaḍā,* பெ.(n.) ஒருவகை ஆடு; a species of goat.

*[கொச்சி + கடா.]*

**கொச்சிக்காய்** *kocci-k-kāy,* பெ.(n.) ஊசி மிளகாய்; sharp chilli.

*[கொச்சி + காய்.]*

**கொச்சிக்குழந்தை** *kocci-k-kuḷandai,* பெ.(n.) ஒருவகை வைப்பு நஞ்சு; a prepared arsenic.

*[கொச்சி + குழந்தை]*

**கொச்சித்தமரத்தை** *kocci-t-tamarattai,* பெ.(n.) புளிச்சக்காய் அல்லது புளிமா; sour bilimby (சா.அக.).

*[கொச்சி + தமரத்தை.]*

**கொச்சிநாய்** *kocci-nāy,* பெ.(n.) கொச்சியி லிருந்து வரும் சிறுநாயினம் (இ.வ.); a small species of dog from Cochin.

*[கொச்சி + நாய்.]*

**கொச்சிநீலப்பூச்சி** *kocci-nīla-p-pūcci,* பெ.(n.) கொச்சியில் உண்டாகும் ஒருவித நீலப்பூச்சி; Cochineal insect (சா.அக.).

*[கொச்சி + நீலம் + பூச்சி.]*

**கொச்சிப்பன்னீர்** *kocci-p-pannīr,* பெ.(n.) கொச்சியில் வடிக்கும் பன்னீர்; rose-water distilled in olden days in Cochin (சா.அக.).

*[கொச்சி + பன்னீர்.]*

**கொச்சிப்புத்தன்** *kocci-p-puttan,* பெ.(n.) பணத்தில் 5/16 பாகம் கொண்ட பழைய நாணயம்; an old coin worth 5/16 *panam.*

**ம.** கொச்சிப்புத்தன்.

*[கொச்சி + புத்தன் (புதியது).]*

**கொச்சிபேதம்** *kocci-pēdam,* பெ.(n.) குறட்டைப் பழத்திலுள்ள தசைப்பற்று; the pulp of the fruit of *kuraṭṭai* (சா.அக.).

*[கொச்சி + பேதம்.]*

**கொச்சிமஞ்சள்** *kocci-mañjaḷ,* பெ.(n.) மஞ்சள் வகை (வின்.); wild turmeric.

*[கொச்சி + மஞ்சள்.]*

**கொச்சிமஞ்சாடி** *kocci-mañjāḍi,* குன்றிமணி; crab's eye (சா.அக.).

*[கொச்சி + மஞ்சாடி.]*

**கொச்சிமிளகாய்** *kocci-miḷagāy,* பெ.(n.) ஊசிமிளகாய் (M.M.170); small variety of chilli.

*[கொச்சி + மிளகாய்.]*

**கொச்சிமிளகு** *kocci-miḷagu,* பெ.(n.) கொச்சி நாட்டுக் கெட்டிமிளகு; solid pepper of Cochin (சா.அக.).

**மறுவ.** குருமிளகு.

*[கொச்சி + மிளகு.]*

**கொச்சியேலம்** *kocci-y-ēlam,* பெ.(n.) கொச்சி நாட்டு ஏலம்; Cochin cardamom (சா.அக.).

*[கொச்சி + ஏலம்.]*

**கொச்சில்** *koccil,* பெ.(n.) சிறிய பழம்; small fruit.

**ம.** கொச்சில்.

*[கொச்சு → கொச்சில்.]*

**கொச்சிலித்தி** *kocci-litti,* பெ.(n.) ஒருவகைச் சிற்றிலைப் புல்; ring worm killer (சா.அக.).

**ம.** கொச்சிளச்சிப்புல்லு.

*[கொச்சு + இலைச்சி – கொச்சிலைச்சி. கொச்சிலித்தி (கொச்சு : சிறிய.) (கொ.வ.)]*

**கொச்சிலித்திப்புல்** *koccilitti-p-pul,* பெ.(n.) மேகப் படைபைப் போக்கும் புல்வகை (M.M.229); ring-worm killer.

*[கொச்சிலித்தி + புல்.]*

**கொச்சிவீரம்** *kocci-vīram,* பெ.(n.) மும்முறைப் பதனிட்ட சவ்வீரவைப்பு; corrosive sublimate prepard formerly in Cochin, three times (சா.அக.).

*[கொச்சி + வீரம்.]*

**கொச்சு**[1]**-தல்** *koccu,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. வெட்டுதல்; to cut. 2. துண்டாக்குதல்; to cut into pieces.

**க.** கொச்சு.

*[குச்சு → கொச்சு.]*

**கொச்சு**[2] *koccu,* பெ.(n.) குஞ்சம் (கோவிலொ.97); tassel.

*[குச்சு → கொச்சு.]*

**கொச்சு**[3] *koccu,* பெ.(n.) கத்தரிக்காய், மாங்காய் முதலியவற்றில் புளி, மிளகாய், உப்பு முதலிய வற்றைச் சேர்த்துப் பக்குவப்படுத்திய குழம்புவகை; a thick mess of boiled brinjals, mangoes, etc., seasoned with tamarind, chillies, salt, etc.

**மறுவ.** கொத்சு.

**க.** தொச்சு (gojju)

*[கொச்சுதல் : சிறிதாதல், சுண்டுதல். குச்சு → கொச்சு.]*

**கொச்சு**[4] *koccu,* பெ.எ. (adj.) சிறிய; small, young. கொச்சுப் பையன் (இ.வ.) 2. இளைய; junior. 3.சுருங்கிய; brief, short. 4. இழிந்த, தாழ்வான; low, base, mean.

**ம.** கொச்சு; **க., தெ.** குச்சு; **து.** குசு.

*[குல் → குள் → குச்சு → கொச்சு.]*

**கொச்சுகொச்செனல்** *koccukoccenal,* பெ.(n.) சிறு மீன்கள் எழுப்பும் ஒலி; sound produced by small fish.

*[கொச்சு + கொச்சு + எனல்.]*

**கொச்சை**[1] *koccai,* பெ.(n.) 1.கழிவு; meanness, despicableness. *"கொச்சை மானுடர்" (கம்பரா. யுத்.மந்திரப். 101).* 2. இழிந்தவன்; mean despicable person. *"கொச்சைத் துன்மதி" (கம்பரா.யுத். மந்திரப்.112).* 3. ***கொச்சைச் சொல்*** பார்க்க; see *koccai-c-col.* 4. ***கொச்சைநாற்றம்***[2] பார்க்க; see *koccai-nārram.* 5.இழிமை; vulgarity. *இப் படத்தில் கொச்சையான காட்சிகள் இடம்பெற்றுள்ளன (உ.வ.).*

*[கழி → கழிச்சு → கச்சு → கொச்சு → கொச்சை.]*

**கொச்சை**[2] *koccai,* பெ.(n.) சீர்காழி; *Śirkāḷi,* "கொச்சை *வேந்தன்" (தேவா.1035:11).*

*[காழி → காழிச்செ → கழிச்செ → கொச்சை.]*

**கொச்சை**[3] *koccai,* பெ.(n.) 1.ஆடு (திவா.); sheep 2.வெள்ளாடு (திவா.); goat.

*[கச்சை → கொச்சை.]*

**கொச்சைக்கயிறு** *koccai-k-kayiru,* பெ.(n.) ***கொச்சக்கயிறு*** (இ.வ.) பார்க்க; see *kocca-k-kayiru.*

*[கொச்சை + கயிறு.]*

**கொச்சைச்சொல்** *koccai-c-col,* பெ.(n.) 1.திருந்தாப்பேச்சு; lisping, rustic or unrefined speech. 2. இழிசொல்; vulgar language.

*[கொச்சை + சொல்.]*

**கொச்சைநாற்றம்** *koccai-nārram,* பெ.(n.) 1.ஆட்டுப்பால் நாற்றம்; smell of sheep's milk. 2. பால், தாய்ப்பால் முதலியவற்றின் முடைநாற்றம்; offensive smell of milk, mother's milk, etc. 3. மீன் அழுகுவதால் உண்டாகும் நாற்றம்; stench or smell from rotten fish.

**மறுவ.** மொச்சை நாற்றம், கொச்சை வீச்சம், கொச்சைவாடை.

*[கொச்சை + நாற்றம்.]*

**கொச்சைப்படுத்து-தல்** *koccai-p-paduttu-,* 5 செ.கு.வி.(v.t.) இழிவுபடுத்துதல்; vulgarize.

*[கொச்சை + படுத்து-.]*

**கொச்சைப்பழக்கம்** *koccai-p-palakkam,* பெ.(n.) 1. கெட்ட பழக்கம்; bad habbit. 2. கீழ்மையான சேர்க்கை; low association (சா.அக.).

*[கொச்சை + பழக்கம்.]*

**கொச்சைப்பால்** *koccai-p-pāl,* பெ.(n.) வெள்ளாட்டுப்பால்; goat's milk (சா.அக.).

*[கொச்சை + பால்.]*

**கொச்சைப்பேச்சு** *kocci-p-pēccu,* பெ.(n.) திருந்தாத பேச்சு; barbarous or vulgar speech (சா.அக.).

*[கொச்சை + பேச்சு.]*

**கொச்சைமீன்** *koccai-min,* மீனுக்குண்டாவதோர் வாடை; the smell of fish.

*[கொச்சை + மீன்.]*

**கொச்சைமுனி** *koccai-muni,* பெ.(n.) சீர்காழியில் பிறந்த திருஞானசம்பந்தர்; Tiruñāna-šambandar, as born in Širkāḷi. *"சிட்டர்புகழ் கொச்சைமுனி" (திருவாலவா. 38:1).*

*[கொச்சை + முனி.]*

**கொச்சைமொழி** *koccai-moli,* பெ.(n.) இழிந்தசொல்; vulgar language. இப்படத்தில் கொச்சையான உரையாடல்கள் இடம்பெற்றுள்ளன (உ.வ.).

*[கொச்சை + மொழி.]*

**கொச்சையர்** *koccaiyar,* பெ.(n.) 1.இடையர்; cowherds, sheepherds. *"கொச்சையர் மனையிலிடைச்சியர்" (திருப்பு. 255).* 2.இளையார்; young persons. *"கொச்சைய ரெண்மர்கள்" (திருமந்.1394).*

*[கொச்சை → கொச்சையர்.]*

**கொச்சைரோசனை** *koccai-rōšaṉai,* பெ.(n.) வெள்ளாட்டு வயிற்றிலிருந் தெடுக்கும் மணத்தி; goats bezoar.

*[கொச்சை + ரோசனை.]*

**கொச்சைவயம்** *koccai-vayam,* பெ.(n.) சீர்காழி; *śirkāḷi.* *"கொடியோடு கொச்சைவயமே" (தேவா.124:1).*

*[கொச்சை + வயம்.]*

**கொசக்காரன்** *koša-k-kāraṉ,* பெ.(n.) உரிமை யாவணத்தார் (இ.வ.); paṭṭādār, land owner.

**கொசகம்** *košagam,* பெ.(n.) ***கொய்சகம்*** பார்க்க; see *koyšagam.*

*[கொய்சகம் → கொசகம்.]*

**கொசப்பட்டு** *koša-p-paṭṭu,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்தில் அமைந்த ஒரு சிற்றூர்; a village in kāñjipuram Dt.

**மறுவ.** கொசப்பூர் (த.நா.ஊர்.பெ.)

*[குயவர் + பட்டு – குயவர்பட்டு. கொசவர் + பட்டு – கொசவர்பட்டு→ கொசப்பட்டு]*

மட்பாண்டத் தொழில் செய்யும் குயவர் அதிகம் வாழ்ந்தமையால் இப் பெயர் பெற்றதாம்.

**கொசமசக்கு** *koša-mašakku,* பெ.(n.) ***குசமசக்கு*** பார்க்க; see *kuša-mašakku.* ஏமாற்றுவது, தெரியாமல் ஏமாற்றுவது; என்னமோ கொசமசக்கு நடந்து போச்சி (நெல்லை).

*[குசமசக்கு → கொசமசக்கி.]*

**கொசர்** *košar,* பெ.(n.) ***குசர்*** பார்க்க; see *kušar.*

*[குசர் → கொசர்.]*

**கொசலி** *košali,* பெ.(n.) 1. ***குசலை*** பார்க்க; see *kušalai.* 2. கட்டட எழுதகவேலையின் மறுபெயர்; cornice work.

மறுவ. கொசவேலை.

*[குசலை → கொசலி.]*

**கொசலை** *košalai,* பெ.(n.) ***குசலை*** பார்க்க; see *kušalai.*

*[குசலை → கொசலை.]*

**கொசவம்** *košavam,* பெ.(n.) ***கொய்சகம்*** (கொ.வ.) பார்க்க; see *koysagam.*

*[கொய்சகம் → கொசகம் → கொசவம்.]*

**கொசவம்பாளையம்** *košavam-pāḷaiyam,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[குயவன்→ கொசவன் + பாளையம்.]*

**கொசவேலை** *koša-vēlai,* பெ.(n.) கட்டட எழுதக வேலை; cornice work.

*[குசலை → கொசலை → கொச + வேலை.]*

**கொசாம்** *košām,* பெ.(n.) ***கொய்சகம்*** பார்க்க; see *koy-šagam.*

*[கொய்சகம் → கொசாம்.]*

**கொசான்** *košāṉ,* பெ.(n.) ***கொய்சகம்*** பார்க்க; see *koyšagam.*

*[கொய்சகம் → கொசான் (கொ.வ.)]*

**கொசிகம்** *košigam,* பெ.(n.) ஆடை (அக.நி.); cloth.

*[கோசிகம் → கொசிகம்.]*

**கொசு**[1] *košu,* பெ.(n.) கச்சம் (வின்.); loose inner end or corner of a cloth brought between the legs and tucked in behind.

*[கொதுகு → கொது → கொசு.]*

**கொசு**[2] *košu,* பெ.(n.) 1.பெருங்கொதுகு; mosquito, gnat. 'கொசுக்கு அஞ்சி குடிபோகிறதா' (பழ.). 2. சிறுகொதுகு (கொ.வ.); eyefly which gathers in clusters on hanging threads.

**மறுவ.** கொதுகு, கொசுகு, கொசுகான்.

*[கொத்து→ கொத்துகு → கொதுகு→ கொசுகு→ கொசு.]*

**கொசுக்கட்டை** *košu-k-kaṭṭai,* பெ.(n.) நுண்ணிச் சிறை என்னும் குருவி (யாழ்.அக.); a very small bird.

*[கொசு + கட்டை.]*

**கொசுக்கடி** *košu-k-kaḍi,* பெ.(n.) கொசுவினால் உண்டான கடி; mosquito bite (சா.அக.).

*[கொசு + கடி.]*

**கொசுக்குடி** *košu-k-kuḍi,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanada puram Dt.

*[கோசு→ கொசு + குடி.]*

**கொசுகம்** *košugam,* பெ.(n.) ***கொய்சகம்*** பார்க்க; see *koyšagam.*

*[கொய்சகம் → கொசுகம்.]*

**கொசுகாந்தேன்** *košugāndēṉ,* பெ.(n.) ***கொசுத்தேன்*** (யாழ்ப்.) பார்க்க; see *košu-t-tēṉ.*

*[கொதுகு → கொசுகு + ஆம் + தேன்.]*

**கொசுகு** *košugu,* பெ.(n.) ***கொசு***[2] பார்க்க; see *košu.* *"எறிபுனல் சாம்பர் கரியுமி கொசுகு ஈ யென்புதீ யெய்திடம்" (காசிக. 40:17).*

*[கொதுகு → கொசுகு.]*

**கொசுகுதலை** *košugu-talai,* பெ.(n.) நெல்வகை (A.); a kind of paddy.

*[கொசுகு + தலை.]*

**கொசுத்திராவகம்** *košu-t-tirāvagam,* பெ.(n.) கொசுமுட்டையினின்று அணியமாகும் ஒருவகை நீர்மம்; a fluid, probably referring to a serum prepared from the eggs of mosquitoes (சா.அக.).
**மறுவ.** கொசுநீர்மம்.
*[கொசு + திராவகம் (எரிநீர்).]*

**கொசுத்தேன்** *košu-t-tēṉ,* பெ.(n.) சிறுகொசு வினங்கள் சேர்த்து வைக்குந் தேன் (வின்.); honey gathered and accumulated by eyeflies.

*[கொசு + தேன்.]*

**கொசுத்தேனீ** *košu-t-tēṉi,* பெ.(n.) சிறு தேனீவகை (M.M. 870.); mosquito bee.

*[கொசு + தேனீ.]*

**கொசுமிளகாய்** *košu-milagāy* பெ.(n.) ஊசி மிளகாய்; bird-pepper

*[கொசு + மிளகாய்.]*

**கொசுமூட்டம்** *košu-mūṭṭam,* பெ.(n.) கொசுக் களைப் போக்குதற்கு மூட்டும் புகை (வின்.); smoke to drive off mosquitoes.

*[கொசு + மூட்டம்]*

**கொசுமுட்டை** *košu-muṭṭai,* பெ.(n.) கொசு இடும் முட்டை; egg of mosquitoes.

*[கொசு + முட்டை.]*

**கொசுமெழுகு** *košu-meḻugu,* கொசுத்தேனீக் கூட்டிலிருக்கும் மெழுகு; wax collected by mosquito bee (சா.அக.).

*[கொசு + மெழுகு.]*

**கொசுவத்தி** *košu-vatti,* பெ.(n.) கொசுக்களை விரட்டும் வேதிப்பொருள்களால் செய்யப்பட்ட சுருள்; mosquito coil; a coil that produces smoke to keep off mosquitoes.

*[கொசு + வத்தி.]*

**கொசுவம்** *košuvam,* பெ.(n.) ***கொய்சகம்*** (கொ.வ.) பார்க்க; see *koyšagam* (சா.அக.).

*[கொய்சகம் → கொசுவம்.]*

**கொசுவலை** *košu-valai,* பெ.(n.) கொசுவராமல் தடுக்கும் வலை; mosquito-net, mosquito-curtain.

**ம.** கொதுவேல.

*[கொசு + வலை.]*

**கொசுவு-தல்** *košuvu-,* 12 செ.குன்றாவி.(v.t.) ஆடையைக் கொய்து அடுக்கிச் செருகுதல் (கொ.வ.); to plait, gather into folds by using finger, as the end of a cloth when wearing. *எப்படிக் கொசுவ வேண்டுமென்று சொல்லித்தாருங்கள் (உ.வ.).*


கொசுவுதல்

*[கொய்சு → கொசுவு.]*

**கொசுவுள்ளான்** *košu-v-uḷḷāṉ,* பெ.(n.) சிறிய உள்ளான்வகை; small snipe. *"கொசுவுள்ளான் றன்கறியை" (பதார்த்த. 884).*


கொசுஉள்ளான்

*[கொசு + உள்ளான்.]*

**கொஞ்சக்குலம்** *koñja-k-kulam,* பெ.(n.) தாழ்ந்த குலம்; inferior caste. *"கொஞ்சக் குலமல்லவோ" (வள்ளி.கதை.Ms.).*

*[கொஞ்சம் + குலம்.]*

**கொஞ்சங்கொஞ்சமாய்** *koñjaṅ-koñjam-āy,* வி.எ.(adv.) சிறிது சிறிதாய் (கொ.வ.); little by little, by degrees.

**தெ.** கொஞ்செமு கொஞ்செமுகா.

*[கொஞ்சம் + கொஞ்சம் + ஆய்.]*

**கொஞ்சத்தனம்** *koñja-t-taṉam,* பெ.(n.) எளிமை; sorry plight, pitiable condition, meanness. *"கொஞ்சத் தனத்தை யறிந்து" (குற்றா.குற.112:1).*

*[கஞ்சம் → கொஞ்சம் + தனம்.]*

**கொஞ்சநஞ்சம்** *koñja-nañjam,* பெ.(n.) மிகச் சிறிதளவு; a little, very small quantity. கொஞ்ச நஞ்ச மிருந்ததையும் கொடுத்துவிட்டான் (உ.வ.).

*[கொஞ்சம் + நஞ்சம்.]*

**கொஞ்சநேரம்** *koñja-nēram,* பெ.(n.) சிறிது பொழுது; a short time (சா.அக.).

*[கொஞ்சம் + நேரம்.]*

**கொஞ்சப்படு-த்தல்** *koñja-p-paḍu-,* பெ.(n.) ***கொஞ்சப்படுத்து-தல்*** பார்க்க.see *koñja-p-paḍuttu.*

*[கொஞ்சம் + படு-.]*

**கொஞ்சப்படுத்து-தல்** *koñja-p-paḍuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. இழிவுபடுத்துதல்; to slight, disregard, treat with contempt. 2. குறை படுத்துதல்; decreasing.

*[கொஞ்சம் + படுத்து-.]*

**கொஞ்சப்பேர்** *koñja-p-pēr,* பெ.(n.) 1.புகழின்மை (யாழ்ப்.); ill-fame, bad reputation. 2. சிலர்; a few persons.

*[கொஞ்சம் + பேர்.]*

**கொஞ்சப்பொழுது** *koñja-p-poḻudu,* பெ.(n.) குறையாயுள்; short life (சா.அக.).

*[கொஞ்சம் + பொழுது.]*

**கொஞ்சம்**[1] *koñjam,* பெ.(n.) 1.சிறிது; little, small quantity. *"கொஞ்சந்தங் கின்பந்தந்து" (திருப்பு.609).* 2. சிறிய அளவு; a bit. *உணவில் கொஞ்சம் உப்பு அதிகமாகிவிட்டது.* 3. எளிமை; simplicity.

**தெ.** கொஞ்செமு, கொஞ்சயமு.

*[குஞ்சு = சிறியது, பறவைக்குஞ்சு. குஞ்சு → குஞ்சி = சிறியது, பறவைக்குஞ்சி. குஞ்சிப்பெட்டி = சிறுபெட்டி. குஞ்சியப்பன் = சிற்றப்பன். குஞ்சு → குஞ்சன் = சிறியவன், குறளன். குஞ்சு → கொஞ்சு → கொஞ்சம் → கிஞ்சும் = சிறிது. கிஞ்சும் > கிஞ்சித் (வ.) (வ.மொ.வ.131).]*

**கொஞ்சம்**[2] *koñjam,* பெ.(n.) அருள்கூர்ந்து; requesting a little co-operation; please. நான் தேர்வுக்குப் படிக்கவேண்டும்; கொஞ்சம் பேசாமல் இருக்கிறீர்களா? (உ.வ.).

*[கொஞ்சு → கொஞ்சம்.]*

**கொஞ்சமாக்கு-தல்** *koñjam-ākkudal,* 5 செ. குன்றாவி.(v.t.) குறைத்தல்; to decrease (சா.அக.).

*[கொஞ்சம் + ஆக்கு-.]*

**கொஞ்சல்** *koñjal,* பெ.(n.) 1. மழலைச்சொல் (திவா.); childish prattle. 2. இன்பந்தரு மினிய பேச்சு; amorous talk. *"வஞ்சிமீர் கொஞ்சும் வாயிதழே"* (தனிப்பா. இரண். 375.). 3. செல்லங் கொஞ்சுகை; fondling, caressing.

*[கொஞ்சு → கொஞ்சல்.]*

**கொஞ்சவிலக்கம்** *koñja-vilakkam,* பெ.(n.) சிறிதாக வரும் விடாய்ச் சூதகநீர் (M.L.); scanty menses.

*[கொஞ்சம் + விலக்கம்.]*

**கொஞ்சன்** *koñjaṉ,* பெ.(n.) இழிமகன்; mean person. *"வஞ்சன் கொஞ்சன்" (திருப்பு.609).*

*[கொஞ்சம் → கொஞ்சன்.]*

**கொஞ்சி** *koñji,* பெ.(n.) 1.காட்டுக்கொளுஞ்சி; opal orange. 2. சீமைக்கொளுஞ்சி; China-box. 3.பூவை மரம்; gum-lac tree.

**மறுவ.** கிஞ்ஞா, கொஞ்சி வஞ்சி.

*[கொளுஞ்சி → கொஞ்சி.]*

**கொஞ்சு**[1]**-தல்** *koñju-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1.மழலை பேசுதல்; to lisp, to prattle, as children. *"கொஞ்சிய வுன்சொற் கேட்டு" (உத்தரரா. சம்புவ.21).* 2. இன்பமாய்ப் பேசுதல்; to talk softly or amorously, as young women. 3. செல்லங்கொஞ்சுதல்; to fondle, caress. 4. முத்தமிடுதல் (யாழ்ப்.); to kiss. 5. இனிதாய் ஒலித்தல்; to sound sweetly. *"செம்மணி வெயில்வரு சிலம்பு கொஞ்சவே" (பாரத. அருச்சுனன்றவ. 148).*

**ம.** கொஞ்சுக; **க.** கொச்சு; **து.** கொச்சுனி.

**Fin.** keha (to praise, to talk); **Est.** kehelda; **Hung.** kegy; **Jap.** kuchia; **Q.** quichua, keshua.

*[குஞ்சு → கொஞ்சு.]*

**கொஞ்சு**[2] *koñju,* பெ.(n.) மீன்வகையுளொன்று; a kind of fish.

**ம.** கொஞ்சு.

*[குஞ்சு → கொஞ்சு.]*

**கொஞ்சுகிளி** *koñju-kiḷi,* பெ.(n.) குதலை பேசுங் கிளி; lisping parrot.

*[கொஞ்சு + கிளி.]*

**கொஞ்சுகுதிரை** *koñju-kudirai,* பெ.(n.) மென்னடையுள்ள குதிரை; horse whose pace is easy.

*[கொஞ்சு + குதிரை.]*

**கொஞ்சுநடை** *koñju-naḍai,* பெ.(n.) மெதுவான நடை (வின்.); easy pace.

*[கொஞ்சு + நடை.]*

**கொட்கு-தல்** *koṭku-,* 5 செ.கு.வி.(v.i.) 1.சுழலுதல்; to whirl round. *"வளிவலங் கொட்கு மாதிரம்" (மணிமே. 12:91).* 2.சூழவருதல்; to move in an orbit, revolve. "காலுண வாகச் சுடரொடு கொட்கும்" (புறநா.43). 3.திரிதல்; to roam, wander. *"கொடும்புலி கொட்கும் வழி" (சிறுபஞ்.80).* 4.வெளிப்படுதல்; to be revealed, to come to view. *"கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை" (குறள்.663).*

*[கொள் → கொட்கு.]*

**கொட்டக்கச்சி** *koṭṭa-k- kacci,* பெ.(n.) ***கொட்டங்கச்சி*** பார்க்க; see *koṭṭāṅ-kacci.*

**மறுவ.** கொட்டாங்கச்சி, கொட்டாஞ்சி.

*[கொட்டான் + காய் + சில் – கொட்டாங்காய்ச்சில் → கொட்டாங்கச்சி → கொட்டக்கச்சி.]*

**கொட்டக்கவிச்சிவிளை** *koṭṭa-k-kavicci-viḷai,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[கொட்டம் + கவிச்சி + விளை.]*

**கொட்டக்காரன்**[1] *kottakkāran,* பெ.(n.) 1. திப்பிலி; long pepper. 2. தீய கண்ணுடையோன்; one who has evil eyes.

*[கொட்டம் + காரன்.]*

**கொட்டக்காரன்**[2] *koṭṭa-k-karan,* பெ.(n.) 1. அடாபிடிக்காரன் (வின்.); mischievous person. 2. காரல் மீன்வகை; a kind of fish.

*[கொட்டம் (திமிர்) + காரன்.]*

**கொட்டக்காவல்** *koṭṭa-k- kāval,* பெ.(n.) சிற்றூரொன்றின் பெயர்; a name of a village.

*[கொட்டம் + காவல்.]*

**கொட்டக்குடி** *koṭṭa -k-kuḍi,* பெ.(n.) தேனி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Theni Dt.

*[கொட்டன் + குடி.]*

**கொட்டக்குடிகீழ்ப்பாத்தி** *koṭṭa-k-kuḍi-kiḻppātti,* பெ.(n.) சிவகங்கை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Sivagangai Dt.

*[கொட்டன் + குடி + கீழ்ப்பாத்தி.]*

**கொட்டகச்சி** *koṭṭa-kacci,* பெ.(n.) 1. சிரட்டை (யாழ்.அக.); coconut shell. 2. ***கொட்டாங் காய்ச்சில்*** பார்க்க; see *koṭṭāṅ-kāyccil.*

**மறுவ.** கொட்டாங்கச்சி, கொட்டாஞ்சி, கொட்டாங் காய்ச்சி.

*[கொட்டான் (வித்து) + காய் + சில் – கொட்டாங்காய்ச்சில் → கொட்டாங்கச்சி → கொட்டகச்சி (கொ.வ.).]*

**கொட்டகம்**[1] *koṭṭagam,* பெ.(n.) ***கொட்டகை*** (வின்.) பார்க்க; see *koṭṭagai.*

**மறுவ.** கொட்டாய்.

*[கொள் → கொட்டு → கொட்டகம்.]*

**கொட்டகம்**[2] *koṭṭagam,* பெ.(n.) சிற்றில்; house, built by children. ஊரில், பெண்களாய்க் கொட்டகமெடுத்து விளையாடித் திரிகிறவர்களுடைய (திவ்.பெரியாழ். 1,29, வியா. ப.48).

*[கொட்டில் → கொட்டகம்.]*

**கொட்டகாரம்**[1] *koṭṭagāram,* பெ.(n.) நெல்முதலிய பண்டம் வைக்கும் அறை; store-room; granary. *"நெற்கூட்டி னிரைசெறிந்த புரிபலவா நிலைக் கொட்ட காரத்தில்" (பெரியபு.இடங்கழி.7).*

*[கொட்டகம் → கொட்டகாரம்.]*

**கொட்டகாரம்**[2] *koṭṭagāram,* பெ.(n.) 1. அரண்மனை இல்லாத ஊரில் மன்னர் தங்கும் மண்டபம்; building with a large hall where the king takes rest. 2. நெற்களஞ்சியம், சரக்கறை; a granaray, a store house.

**ம.** கொட்டகாரம்.

*[கொட்டகம் → கொட்டகாரம்.]*

**கொட்டகை** *kottagai,* பெ.(n.) 1. பந்தல்வகை; shed with sloping roofs. 2. ஆநிரைக் கொட்டில்; cow-shed. 3. திருமணப்பந்தல்; marriage pandal. *"கொட்டகைத் தூண்போற் காலிலங்க" (குற்றா.குற.84.4).*

**மறுவ.** கொட்டாய்.

**ம.** கொட்டக, கொட்ட; **க.** கொட்டகெ, கொடிகெ, கொட்டிகெ; **தெ.** கொட்டுமு; **ப.** கொட்டகெ.

*[கொட்டு → கொட்டம் = வட்டமான தொழு, நூற்குங் கொட்டை. கொட்டு → கொட்டகை = சாய்ப்புப்பந்தல் (வ.மொ.வ.6).]*

**கொட்டங்கச்சி** *kottānkacci,* பெ.(n.) தேங்காய் ஒடு; empty shell of a coconut.

*[கொட்டாங்கச்சி → கொட்டங்கச்சி.]*

**கொட்டங்கரை** *kottānkarai,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[கொட்டன் + கரை.]*

**கொட்டங்காய்** *kottangāy,* பெ.(n.) தேங்காய் (மூ.அக.); coconut.

*[கொட்டை (நெற்று) + காய்.]*

**கொட்டங்காய்ச்சி** *kottan-kāycci,* பெ.(n.) தேங்காய் ஓட்டின் ஒருபகுதி; portion of a coconut shell.

**ம.** கோட்டாங்கச்சி.

*[கொட்டான் (நெற்று, கொட்டை) + காய் + சில் – கொட்டான்காய்ச்சில் → கொட்டாங்காய்ச்சி (கொ.வ.).]*

**கொட்டங்கைச்சி** *kottan-kaicci,* பெ.(n.) ***கொட்டாங்காய்ச்சி*** பார்க்க; see *kottān-kāycci.*

*[கொட்டான் + காய் + சி – கொட்டான்காய்ச்சி → கொட்டாங்காய்ச்சி → கொட்டாங்கச்சி.]*

**கொட்டச்சேடு** *kotta-c-cēdu,* பெ.(n.) சேலம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Salem Dt.

*[கொட்டன் + தோடு (சிற்றோடை) – கொட்டத்தோடு → கொட்டச்சேடு (கொ.வ.).]*

**கொட்டடி[1]–த்தல்** *kottadi-,* 4 செ.கு.வி. (v.i.) மத்தளம் போன்றவற்றை அடித்தல்; to beat the drum.

*[கொட்டு + அடி–.]*

**கொட்டடி[2]–த்தல்** *kottadi-,* 4 செ.கு.வி. (v.i.) மறைபொருளை ஊரறியப் பரப்புதல்; to spread a secret. இதைப்போய்க் கொட்டடிக்கலாமா?

*[கொட்டு + அடி–.]*

**கொட்டடி[3]** *kottadi,* பெ.(n.) 1.சமையல் முதலிய வற்றிற்கு உதவும் அறை; room, as kitchen, store-room. 2. மாட்டுக்கொட்டில்; cattle-shed. 3.சிறைச் சாலை அறை; prisoner's cell. 4. நெல் கொட்டி விற்குமிடம்; paddy selling place, shed.

*[கொட்டில் + அடி – கொட்டிலடி → கொட்டடி.]*

**O.E., E.** cote; **AS.** cot, cote, cyte; **Du.** kot; **Ice.** kot, **Gr.** koth; **Wel.** cuet.

**கொட்டடி[4]** *kottadi,* பெ.(n.) பூவேலைப்பாடுகள் அச்சிடப்பட்ட சேலைவகை; a variety of printed sarees.

*[கொட்டு + அடி – கொட்டடி + சேலை.]*

**சதுர அமைப்பில் கோட்டுக் கட்டங்கள் உள்ள புடவை கொட்டடிச்சேலை எனப்பட்டது.**

**கொட்டடியாசாமி** *kottadi-y-āšāmi,* பெ.(n.) கரடிக்கூடத்தில் பயின்ற வல்லாளன் (இ.வ.); gymnast, athlete trained in the Muhammadan methods of bodily exercise, as practiced in a *karadikkūdam.*

*[கொட்டடி + ஆசாமி.]*

**கொட்டடியாத்தூர்** *kottadi-y-āttūr,* பெ.(n.) சிவகங்கை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Sivagangai Dt.

*[கொட்டடி+ (ஆற்றூர்) ஆத்தூர் – கொட்டியாத்தூர்.]*

**கொட்டடைப்பன்** *kottadaippan,* பெ.(n.) மாட்டுநோய் வகை (பெரியமாட்.62); a disease of cattle.

*[கொட்டு + அடைப்பன்.]*

**கொட்டணக்காரி** *kottana-k-kāri,* பெ.(n.) கூலிக்கு நெற்குத்துபவள் (இ.வ.); woman who lives by rice-pounding.

**ம.** கொட்டணக்காரி.

*[கொட்டு (குத்து) → கொட்டணம் + காரி.]*

**கொட்டணச்சோறு** *kottana-c-cōru,* பெ.(n.) தவிடு நீங்காத அரிசிச் சோறு; rice prepared from unbranned rice.

**ம.** கொட்டணச் சோறு.

*[கொட்டணம் + சோறு.]*

**கொட்டணம்** *kottanam,* பெ.(n.) 1. தவிடுநீங்காத அரிசி; unbranned rice. 2. தவிடு நீங்காத அரிசிச் சோறு; cooked unbranned rice. 3. தவிடு

சேதப்படாமல் நெற்குத்துகை; pounding or husking paddy, husking in such a manner as the bran is not lost.. 4.பஞ்சு கொட்டுகை (இ.வ.); carding.

**ம.** கொட்டணம்; **க.** கொட்டண; **தெ.** கொட்டணமு; **குரு.** கொட்னா; **மா.** க்வொடெ; **Pali.** *kottana.*

*[கொட்டு + அணம். கொட்டுதல் = இடித்தல், குத்துதல். அணம் = சொல்லாக்க ஈறு.]*

**கொட்டணை** *kottanai,* பெ.(n.) சதுப்புநிலத்தில் வளரும் ஒருவகைப் பூடு (வின்.); a herb growing in marshy places.

**மறுவ.** கொட்டணைக்காய்.

*[கொட்டு + அணம் → அணை.]*

**கொட்டத்திரட்சி** *kotta-t-tiratci,* பெ.(n.) திராய் மலை; mountain containing impure zinc or sphelter (சா.அக.).

*[கொட்டம் + திரட்சி.]*

**கொட்டம்**[1] *kottam,* பெ.(n.) 1.இறுமாப்பு; superciliousness, arrogance. *"வேடர் கொட்டம தடங்க"* *(தாயு.சிற்சு.4).* 2.குறும்பு; mischievousness. கொட்டக்காரன் (உ.வ.) 3.கடுகடுப்பு (இ.வ.); petulance. 4.முழக்கம்; roaring, trumpeting. *"கொட்ட மிடுங்கெசம்" (இராமநா.பாலகா.18).* 5.பொல்லாங்கு; evil, vice, evilness. 6. நீர் முதலியன ஒழுகுகை; flowing, pouring. *"கொடுங்காற் குண்டிகைக் கொட்டம் ஏய்ப்ப" (பெருங். உஞ்சைக் 43:130).*

*[குல் → குலவு. குலவுதல் = வளைதல். குல → குள் → குளம் = வளைந்த நெற்றி, வெல்ல வுருண்டை. குல் → குர் → குரங்கு. குரங்குதல் = வளைதல். குல் → குன் → குனி. குனிதல் = வளைதல், உடம்பு வளைதல். குல் → குள் → கொள் = வளைந்த காயுள்ள பயற்றுவகை, சாய்த்து உள்ளீட்டை வீழ்த்துதல். கொட்டு → கொட்டம் = வட்டமான தொழு, நூற்குங் கொட்டை (வே.க.164).]*

**கொட்டம்**[2] *kottam,* பெ.(n.) 1. மாட்டுத்தொழுவம்; cattle-shed; எருது நினைத்தவிடத்திற் கொட்டங் கட்டுவார்களா? 2. மூங்கிற் கொட்டு; cattle shed of bamboo.

**ம.** கொட்ட; **குட.** கொட்டி.

**Skt.** gōstha

*[கொள் → கொட்டு → கொட்டம்.]*

**கொட்டம்**[3] *kottam,* பெ.(n.) ஒருவகை நறுமணப் பொருள்; costus root. *"கொட்டமே கமழும்... மொய்குழல்" (சீவக. 2575).*

**ம.** கொட்டம்.

*[கோட்டம் → கொட்டம்.]*

**கொட்டம்**[4] *kottam,* பெ.(n.) மாடுகளுக்கு மருந்து, நீர் முதலியன கொடுக்கும் மூங்கிற் குழாய் (இ.வ.); a hollow piece of bamboo for orally administering medicine, water etc. to cattle.

**மறுவ.** கத்துக்குழாய்.

**ம.** கொட்டமு, **க.** கொட்ட, தொட்ட;**தெ.** தொட்டமு.

*[கொள் → கொடு → கொட்டம்.]*

**கொட்டம்**[5] *kottam,* பெ.(n.) சிறிய ஓலைப் பெட்டி; small ōla basket. *"கொழுங்கொடி முசுண்டை கொட்டங் கொள்ளவும்" (சிறுபாண்.166).*

**ம.** கொட்டம்.

*[கொட்டம் → கோட்டம்.]*

**கொட்டம்**[6] *kottam,* பெ.(n.) வீடு; house. *"ஒரு கொட்டம் ஒழிச்சுக் குடுத்துருங்கோ" (எங்களூர்.47).*

*[கொட்புல் → கொட்டம்.]*

**கொட்டமடக்கி** *kottam-adakki-,* பெ.(n.) குதிரைப் படையை எதிர்கொண்டடக்கியவர்; *"வைகை வளநடையின் கொட்ட மடக்கி" (சேது.செப்.1–12).*

*[கொட்டம் + அடக்கி.]*

**கொட்டமடி-த்தல்** *kottam-adi-,* 4 செ.கு.வி.(v.i.) மனம்போனபடி குறும்புசெய்தல்; to be mischievous or turbulent, as an unruly boy.

*[கொட்டம் + அடி-.]*

**கொட்டமலழகி** *kottamalalagi,* பெ.(n.) **ஆவிரை** பார்க்க; see *āvirai.*

*[கோட்டு + அழல் + அழகி.]*

**கொட்டமுடிச்சு** *kotta-mudiccu,* பெ.(n.) வடமுடிச்சு; knot at the end of a rope.

*[கோடு → கொட்டம் + முடிச்சு.]*

**கொட்டமுத்துப்போடு-தல்** *kotta-muttu-pōdu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. எதிரியை அழித்தல்; (எதிரி கோட்டையை அழித்து ஆமணக்கு முத்து விதைத்தல்) to ruin the fort of the enemy and sow the useless seeds. நாம் இருக்கிற நிலையறிச்சில்லே பய கொட்டமுத்து போடுவின் (நெல்லை). 2. பெரியம்மை நோய்காணுதல்; to be affected with small pox.

*[கொட்டை + முத்து + போடு-.]*

**கொட்டமேடு** *kotta-mēdu-,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kāñjipuram Dt.

*[கொட்டன் + மேடு.]*

**கொட்டரை** *koṭṭarai,* பெ.(n.) பெரம்பலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Perambalur Dt.

*[கொட்டன் + (தலை) தரை - கொட்டந்தரை → கொட்டரை.]*

**கொட்டல்** *koṭṭal,* பெ.(n.) 1. கொட்டுதல்; stinging as of scorpion. 2. கைதட்டல்; clapping hands. 3. அடித்தல்; to hammer, beat. 4. அப்புதல்; to stick, clap as with the hand (சா.அக.).

*[கொட்டு + அல்.]*

**கொட்டவாக்கம்** *koṭṭa-vākkam,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kāñjipuram Dt.

*[கொட்டம் + (பாக்கம்) வாக்கம் - கொட்டவாக்கம்.]*

**கொட்டவாடி** *koṭṭa-vāḍi,* பெ.(n.) சேலம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Salem Dt.

*[கொட்டம் + (பாடி) வாடி.]*

**கொட்டவாயன்** *koṭṭa-vāyaṉ,* பெ.(n.) ஒரு கடல் மீன் வகை; a kind of sea fish.

*[கொட்டம் + வாயன்.]*

**கொட்டவி** *koṭṭavi,* பெ.(n.) உடலில் ஆடையில்லாப் பெண்; a naked woman (சா.அக.).

*[கட்டவிழி → கொட்டவி.]*

**கொட்டவிடல்** *koṭṭa-viḍal,* பெ.(n.) தேன்குளவி போன்றவற்றை விட்டுப் பல தடவையும் கொட்டும்படி செய்தல்; the flogging of a part with repeated stings of a scorpion or wasp (சா.அக.).

*[கொட்டம் + விடல்.]*

**கொட்டறை** *koṭṭaṟai,* பெ.(n.) ***கொட்டடி*** (வின்.) பார்க்க; see *koṭṭaḍi.*

ம. கொட்டற.

**Mar.** koṭṭhāra; **U.** kōtari.

*[கொட்டு + அறை.]*

**கொட்டன்** *koṭṭaṉ,* பெ.(n.) 1. கொட்டாப்புளி (யாழ்ப்.); mallet. 2. பருத்த–வன்–வள்–து; fat man or woman or animal. 3. நெற்கள முதலியவற்றிற் பயன்படுத்தும் தேங்காய்; coconut, as used at the threshing-floor.

*[கொட்டு → கொட்டன்.]*

**கொட்டன்கட்டை** *koṭṭaṉ-kaṭṭai,* பெ.(n.) கொட்டாப்புளி (யாழ்ப்.); mallet.

*[கொட்டன் + கட்டை.]*

**கொட்டன்பொல்லு** *koṭṭaṉ-pollu,* பெ.(n.) குறும்பொல்லு, பருத்தியில் கொட்டை நீக்குவதற்காக அடிக்கப் பயன்படும் கோல்; a stick, a cane.

*[கொட்டான் = வித்து நீக்காத பருத்தி. பொல்லு = சிறுகோல். கொட்டான் + பொல்லு.]*

**கொட்டாக்குளம்** *koṭṭā-k-kuḷam,* பெ.(n.) திருநெல்வேலி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tirunelvēli Dt.

*[கொட்டன் + குளம் - கொட்டன்குளம் → கொட்டாக்குளம்.]*

**கொட்டாகை** *koṭṭā-kai,* பெ.(n.) கொட்டில் (யாழ்.அக.); shed.

*[கொட்டதை → கொட்டாகை.]*

**கொட்டாங்கச்சி** *koṭṭāṅ-kacci,* பெ.(n.) 1. தேங்காய் ஓட்டின் ஒரு பகுதி; portion of a part of coconut shell. 2. ***கொட்டம்***[1] பார்க்க; see *koṭṭam.*

ம. கோட்டாங்கச்சி.

*[கொட்டான் + காய் + சில்.]*

**கொட்டாங்கச்சித்தாட்டுப்பத்திரி** *koṭṭāṅ-kacci-t-tāṭṭu-p-pattiri,* பெ.(n.) சேலைவகை; a kind of saree.

*[கொட்டாங்கச்சி + தாட்டு + பத்திரி.]*

**கொட்டாங்கரந்தை** *koṭṭāṅ-karandai,* பெ.(n.) ***கொட்டைக்கரந்தை*** (யாழ்.அக.) பார்க்க; see *koṭṭai-k-karandai.*

*[கொட்டை → கொட்டா + கரந்தை.]*

**கொட்டாங்காய்ச்சில்** *koṭṭāṅ-kāy-c-cil,* பெ.(n.) தேங்காய் ஓடு; coconut shell.

*[கொட்டான் + காய் + சில் (ஓடு).]*

**கொட்டாங்குழல்** *koṭṭāṅ-kuḻal,* பெ.(n.) கொருக் கலப்பையில் விதைபோடும் பகுதியில் முப்பிரிவாகச் செல்லும் குழாய்; sowing three way implement attached to the plough.

*[கோடு → கோட்டம் → கொட்டம் + குழல்.]*

**கொட்டாங்கோரை** *koṭṭāṅ-kōrai,* பெ.(n.) கோரைவகை; a kind of sedge.

*[கொட்டான் + கோரை.]*



கொட்டாங்கோரை

**கொட்டாஞ்சி** *kottāñji*, பெ.(n.) 1. ஒருவகைப் பழம்; a kind of fruit. 2.தேங்காய் ஓடு; coconut shell (சா.அக.).

*[கொட்டு → கொட்டாஞ்சி.]*

**கொட்டாட்டு**[1] *kottāttu*, பெ.(n.) மத்தளத்தின் தாள இன்னோசைக்கேற்ப ஆடும் ஆட்டம்; dance performed according to beat of mattalam.

*[கொட்டு + ஆட்டு.]*

**கொட்டாட்டு**[2] *kottāttu*, பெ.(n.) ஊர்ப்பறை அல்லது போர்ப்பறையின் முழக்கோசைக்கேற்ப ஆடும் ஆட்டம்; dance performed according to the beat of local drum or war drum.

*[கொட்டு + ஆட்டு.]*

**கொட்டாட்டுப்பாட்டு** *kottāttu-p-pāttu*, பெ.(n.) கொட்டுமுழக்கோடு பாடும் பாட்டு; a dance with music and drums.

*[கொட்டு + ஆட்டு + பாட்டு.]*

**கொட்டாணிமறவன்** *kottāṇi-maravan*, பெ.(n.) மறவருள் ஓர் இனத்தார்; (E.T.); a subsect of *Maravās*.

*[கொட்டாணி + மறவன்.]*

**கொட்டாத்திருக்கை** *kottā-t-tirukkai*, பெ.(n.) வலிய பற்களைக் கொண்ட திருக்கை மீன்வகை; sting ray.

*[கொட்டா + திருக்கை.]*

**கொட்டாநத்தம்** *kottā-nattam*, பெ.(n.) திண்டுக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dindukkal Dt.

*[கொட்டான் + நத்தம்.]*

**கொட்டாப்பி-த்தல்** *kottāppi-*, 4 செ.குன்றாவி. (v.t.) மக்கள் அல்லது விலங்குகள் உண்ணுதல் (யாழ்ப்.); to eat, as men or beasts.

*[கொட்டு + ஆப்பு - கொட்டாப்பு (விழுங்குதல்) → கொட்டாப்பி.]*

**கொட்டாப்பிடி** *kottā-p-pidi*, பெ.(n.) ***கொட்டாப் புளி*** பார்க்க; see *kottā-p-puli*.

*[கொட்டாப்பு + உளி - கொட்டாப்புளி → கொட்டாப்பிடி (கொ.வ.).]*

**கொட்டாப்பு** *kōttāppu*, பெ.(n.) 1. கொட்டுதல், அடித்தல்; to beat. 2. இடித்துக்கெட்டிப்படுத்துதல்; solidification of loose soil of the ground floor in construction. தரைத்தளத்தில் கொட்டாப்பு வேலை நடக்கிறது (உ.வ.).

*[கொட்டு + ஆப்பு (சொல்லாக்க ஈறு).]*

**கொட்டாப்புளி** *kottā-p-puli*, பெ.(n.) உளிமேல் அடிக்கும் கருவி; beater, wooden mallet.

*[கொட்டாப்பு + உளி.]*

**கொட்டாப்பெட்டி** *kottā-p-petti*, பெ.(n.) ***கொட்டைப்பெட்டி*** பார்க்க; see *kottai-p-petti*.

*[கொட்டைப்பெட்டி → கொட்டாப்பெட்டி.]*

**கொட்டாபி-த்தல்** *kottāpi-*, 4 செ.குன்றாவி.(v.t.) உண்ணுதல்; to eat.

*[கொட்டாவி → கொட்டாபி.]*

**கொட்டாம்பட்டி** *kottām-patti*, பெ.(n.) மதுரை மாவட்டத்திலுள்ள பறம்புமலையைப் பின்னணியாகக் கொண்டு பாலாற்றுக்கருகே அமைந்த ஓர் ஊர்; a village situated at the foot of the Parambu hill and near Pālāru river in Madurai Dt.

*[கொட்டம் + பட்டி - கொட்டம்பட்டி → கொட்டாம்பட்டி]*

**கொட்டாமட்டை** *kottā-mattai*, பெ.(n.) ஓலையை இளைதாயிருக்கும் பொழுது வெட்டிவிடுவதால், நார் நிரம்பி இறுகியிருக்கும் பனைமட்டையின் அடிப்பகுதி (யாழ்ப்.); stem of a palmyra leaf grown fibrous and tough from the leaf being cut off when young.

*[கொட்டு + ஆம் + மட்டை.]*

**கொட்டாமத்தகி** *kottā-mattagi*, பெ.(n.) மருளூமத்தை; burr-weed (சா.அக.).

*[கொட்டை + (ஊமத்தை) ஊமத்தகி.]*

**கொட்டாய்** *kottāy*, பெ.(n.) ***கொட்டகை*** பார்க்க; see *kottagai*.

**கொட்டாரப்புலி** *kottāra-p-puli*, பெ.(n.) சிவகங்கை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Sivagangai Dt.

*[கொட்டாரம் + புலி.]*

**கொட்டாரம்**[1] *kottāram*, பெ.(n.) 1.தவசக் களஞ்சியம்; granary. *"படைக்கலக் கொட்டிலும்*



கொட்டாரம்

புடைக்கொட் டாரமும்" (பெருங்.மகத.14:19). 2. நெல் முதலிய தவசம் குத்துமிடம்; place where paddy or other grains are husked. 3. யானைக்கூடம் (இ.வ.); elephant stall. 4.அரண்மனை (இ.வ.); palace. 5.அரண்மனை முதலியவற்றின் தலை வாயில் (வின்.); principal entrance of a palace etc., porch. 6. கோபுரவாயில்; entrance of a temple. 7. உப்புக் கொட்டி வைக்குமிடம்; salt depot. 8. தீவனப் படைப்பு, களம், குப்பைக்குழி இவை ஒருசேர அமைந்த இடம்; a place around threshing floor.

ம. கொட்டாரம், கோட்டகாரம்.

Skt. kōsthāgāra.

*[கொட்டகாரம் → கொட்டாரம்.]*

**கொட்டாரம்**[2] *koṭṭāram*, பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[கொட்டம் → கொட்டாரம்.]*

**கொட்டாவி** *koṭṭāvi*, பெ.(n.) மயக்கம், களைப்பு ஆகியவற்றின் காரணமாக வாயைத் திறந்து உள்ளிழுத்து வெளிவரும் காற்று (திவ்.பெரியாழ். 1:4:6); yawning. கொட்டாவி கொள்கின்றான்.

ம. கொட்டாவி, கோட்டாவி.

*[கொட்டு + ஆவி]*

**கொட்டாவிக்கால்** *koṭṭāvi-k-kāl*, பெ.(n.) கொட்டாவியை எழுப்பும் தேவதத்தன் என்னும் பத்துவகைக் காற்றிலொன்று; one of the ten vital airs, which is exhaled in yawning (சா.அக.).

*[கொட்டாவி + கால் (காற்று).]*

**கொட்டாவிச்சுரம்** *koṭṭāvi-c-curam*, பெ.(n.) கொட்டாவி முதலியவற்றோடு கூடிய சுரநோய் வகை (சீவரட்.48.); a fever attended with yawning and hiccoughing.

*[கொட்டாவி + சுரம்]*

**கொட்டாவிப்பித்தம்** *koṭṭāvi-p-pittam*, பெ.(n.) ஒருவகைப் பித்தநோய்; a kind of bilious disease marked by frequent yawning (சா.அக.).

*[கொட்டாவி + பித்தம்.]*

**கொட்டாவிவிட்டிறுக்கி** *koṭṭāvi-viṭṭiṟukki*, பெ.(n.) ***நாயுருவி*** (மலை.) பார்க்க; see *nāyuruvi* a plant growing in hedges and thickets.

*[கொட்டாவி + விட்டு + இறுக்கி.]*

**கொட்டாவிவிடு-தல்** *koṭṭāvi-viḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. மயக்கம், களைப்பு ஆகியவற்றின் காரணமாக வாயைத் திறந்து காற்றை உள்ளிழுக்கும் நெட்டுயிர்ப்பு; yawning. 2. இறத்தல் (கொ.வ.); to die, suffer the last gasp, used in jest. 3. களைத்துப்போதல் (இ.வ.); to be fatigued or exhausted, as by work.

*[கொட்டாவி + விடு-.]*

**கொட்டாறா** *koṭṭāṟā*, பெ.(n.) ஒருவகை மீன்; a kind of fish.

*[கொட்டு + ஆறா.]*

**கொட்டாறு** *koṭṭāṟu*, பெ.(n.) உப்பளம் (W.G.); salt pan.

*[கொட்டு + ஆறு]*

**கொட்டான்**[1] *koṭṭāṉ*, பெ.(n.) கொட்டை நீக்காத பருத்தி; cotton with seed. கொட்டான் பத்துப் பொதி ஆயிற்று (நெல்லை.). கொல்லன் கொடுத்த கதிர் இருக்கு, கொட்டான் விளையக் காடிருக்கு நூறுவயசு வரை நூற்றுப் பிழைச்சுக்கம்மா (நாட்டுப்பா.)

த. கொட்டான் > E. cotton.

*[கொட்டை → கொட்டான் (கொட்டையுள்ள பகுதி).]*

ஆங்கிலேயரின் ஆட்சிக் காலத்தில் கொட்டையோடு உள்ள பருத்தியை ஏற்றுமதி செய்தனர். இப் பருத்தி கொட்டான் எனப்பட்டது. இதுவே ஆங்கிலத்தில் cotton ஆயிற்று.

**கொட்டான்**[2] *koṭṭāṉ*, பெ.(n.) ***கொட்டன்***[1] (யாழ்ப்.) பார்க்க; see *koṭṭaṉ*(f.).

Gk. kampsa.

*[கொட்டன் → கொட்டான்.]*

**கொட்டான்**[3] *koṭṭāṉ*, பெ.(n.) சிறிய ஓலைப்பெட்டி; small oḷā basket.

*[குட்டான் → கொட்டான்.]*

**கொட்டான்**[4] *koṭṭāṉ*, பெ.(n.) 1. கொட்டை நீக்காத பஞ்சு; cotton crop with seed. 2. நூற்பதற்கு அணியம் செய்த பஞ்சு; spining cotton.

*[கொட்டை → கொட்டான்.]*

த. கொட்டான் > E. cotton.

**கொட்டி**[1] *koṭṭi*, பெ.(n.) நீர்க்கொடிவகை; an aquatic plant. "கொட்டியு மாம்பலு நெய்தலும்" (வாக்குண். 17). ஒருவகைக் கிழங்கு; a kind of root.

ம. கொட்டி.

*[கொட்டு → கொட்டி.]*

**கொட்டி**[2] *koṭṭi* பெ.(n.) ***கொடுகொட்டி*** பார்க்க (சிலப்.3.14, உரை); see *koḍu-koṭṭi*. 2. தாளம் (இசை.); time measure. *"கொட்டி யளந்தமையாப் பாடலும்" (திரிகடு.57).*

ம. கொட்டி.

*[கொட்டு → கொட்டி (பறைகொட்டி ஆடும் ஆட்டம்).]*

**கொட்டி**[3] *koṭṭi* பெ.(n.) 1. கோபுரவாயில்; tower gate in temple. 2.வாயில் (அக.நி.); gate.

ம. கொட்டி, Skt. kōṭṭāra.

*[கொட்டில் → கொட்டி.]*

**கொட்டி**[4] *koṭṭi* பெ.(n.) கூட்டம் (அக.நி.); assembly, gathering.

*[கோட்டி → கொட்டி.]*

**கொட்டி**[5] *koṭṭi* பெ.(n.) செம்புகொட்டி; a tinker.

ம. கொட்டவன்.

*[கொட்டு → கொட்டி.]*

**கொட்டி**[6] *koṭṭi* பெ.(n.) 1. முரசு அறைபவன்; a drummer. 2. சுத்தி; a hammers.

ம. கொட்டி.

*[கொட்டு → கொட்டி.]*

**கொட்டி**[7] *koṭṭi* பெ.(n.) மலடி; barrien woman.

மறுவ. கொட்டு.

க.,தெ. கொட்டி.

*[கொட்டி = கொட்டி என்னும் நீர்க்கொடி. இது காய்த்துக் கனிதராதது போன்று பிள்ளைப்பேறு வாய்க்காத பெண்ணும் கொட்டி எனப்பட்டாள்.]*

**கொட்டிக்காகம்** *koṭṭi-k-kāgam,* பெ.(n.) கழி முகத்தில் பறந்தலைந்து மீனை உணவாகக் கொள்ளும் ஒருவகைக் காகம்; a kind of crow, inhabitant of lagoons, which takes fish as food.

*[கொட்டி + காகம்.]*

**கொட்டிக்கொடு—த்தல்** *koṭṭi-k-koḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1.அதிகமாகக் கொடுத்தல்; to give liberally. 2. அடிக்கடி கண்டித்தல் (இ.வ.); to check or rebuke constantly.

*[கொட்டி + கொடு-.]*

**கொட்டிக்கொள்(ளு)—தல்** *koṭṭi-k-koḷ(ḷ)u-,* 16 செ.குன்றாவி.(v.t.) 1.நிரம்ப உண்ணுதல்; to gulp down in large quantities. 2. மேற்போட்டுக் கொள்ளுதல்; to take the responsibility of; to draw down upon oneself, as the consequence of an act. என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளாதே (உ.வ.).

*[கொட்டி + கொள்(ளு)-.]*

**கொட்டிக்கொள்ளல்** *koṭṭi-k-koḷḷal,* பெ.(n.) 1. தகடா யடித்தல்; beating into a sheet. 2. உண்ணுதல்; eating (சா.அக.).

*[கொட்டி + கொள்ளல்.]*

**கொட்டிக்கோரை** *koṭṭi-k-kōrai,* பெ.(n.) ஒரு வகைக் கோரை; a kind of sedge - grass.

மறுவ. கொட்டாங்கோரை.

*[கொட்டி + கோரை.]*

**கொட்டிச்சாந்து** *koṭṭi-c-cāndu,* பெ.(n.) ஒரு கடைப்பொருள்; a bazaar drug (சா.அக.).

*[கொட்டி + சாந்து.]*

**கொட்டிச்சேதம்** *koṭṭi-c-cēdam,* பெ(n.) ***கொடு கொட்டி*** பார்க்க; see *koḍu-koṭṭi*. *"இமைய்வ னாடிய கொட்டிச் சேதம்" (சிலப்.28:75).*

மறுவ. கொடுகொட்டு.

ம. கொட்டிச்சேதம்.

*[கொட்டி + சேதம்.]*

கொட்டிச்சேதம் என்பது கொடு கொட்டி ஆடலின் மறுபெயர். சேதம் என்பது விலக்குறுப்புகள் பதினான்கனுள் ஒன்று. ஆரியம் தமிழ் எனச் சேதம் இருவகைப்படும்.

ஆரியம் தமிழெனுச் சீர்நட மிரண்டினும்
ஆதிக் கதையை யவற்றிற் கொப்பச்
சேதித் திடுவது சேதமென்றாகும்
(சிலப்.3:13 உரை).

**கொட்டிட்டை** *koṭṭiṭṭai,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் கருவிலி என்னும் பாடல்பெற்ற இடத்திலுள்ள சிவன்கோயில்; the shrine of Śiva in Karuvili in Tanjāvūr Dt. *"கருவிலிக் கொட் டிட்டை யுறைவான் கழல் கூடுமே" (தேவா. 602:1).*

*[கொட்டில் → கொட்டி + இட்டிடை கொட்டியிட்டிடை → கொட்டிட்டை.]*

**கொட்டித்தலை—த்தல்** *koṭṭi-t-talai-,* 5 செ.குன்றாவி.(v.t.) சிதறடித்தல்; to scatter, disperse.

*[கொட்டி + தலை-.]*

**கொட்டிப்பேசு-தல்** *koṭṭi-p-pēsu-*, 5 செ.குன்றாவி. (v.t.) குத்திப்பேசுதல் (இ.வ.); to sting with cutting remarks.

*[கொட்டு + பேசு-.]*

**கொட்டிமத்தளம்** *koṭṭi-mattaḷam*, பெ.(n.) பெரிய மத்தளம்; big drum. *"கொட்டி மத்தளம் வாசிப்பான்" (S.I.I.II.254).*

*[கொட்டி + மத்தளம்.]*

**கொட்டிமம்** *koṭṭimam*, பெ.(n.) செந்நகரப்பட்டை; the fragrant bark of olive linden tree (சா.அக.).

*[கொட்டி → கொட்டிமம்.]*

**கொட்டியப்பூச்சி**[1] *koṭṭia-p-pūcci*, பெ.(n.) ஒரு வரிவகை; a tax.

*[கொட்டியம் + பூச்சி.]*

**கொட்டியப்பூச்சி**[2] *koṭṭia-p-pūcci*, பெ.(n.) பயிரையழிக்கும் ஒருவகைப் புழு; a kind of worm, in crops.

*[கொட்டியம் + பூச்சி.]*

**கொட்டியம்** *koṭṭiyam*, பெ.(n.) 1.எருது (சூடா.); bull, ox. 2. பொதிமாட்டுத் திரள் (வின்.); herd or pack-bullocks.

**ம.** கொட்டியம்; **Skt.** gōstha.

*[கோடு → கோட்டியம் (கொம்புள்ளது) → கொட்டியம்.]*

**கொட்டியம்பலம்** *koṭṭi-y-ambalam*, பெ.(n.) முகடு வேய்ந்த வாசல் நடை (நாஞ்.); a gate with a small roofing at the top.

*[கொட்டி + அம்பலம்.]*

**கொட்டியாம்பூண்டி** *koṭṭiyām-pūṇḍi*, பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villupuram Dt.

*[கொட்டியான் + பூண்டி (நீர்நிலை).]*

**கொட்டியான்** *koṭṭiyāṉ*, பெ.(n.) 1.சுமைகாரன் (இ.வ.); carrier. 2. பயிரில்விழும் நோய்வகை; a blight affecting growing paddy. 3.கெடுதியை உண்டுபண்ணுவது; that which brings disaster. அந்த ஊருக்கு அவன் குடியிருக்கப்போனது ஒரு கொட்டியான் விழுந்தது போலாயிற்று (இ.வ.).

*[கொட்டு → கொட்டியான். கொட்டுதல் = தாக்குதல்.]*

**கொட்டில்** *koṭṭil*, பெ.(n.) 1.மாட்டுக்கொட்டம்; cow-stall. *"ஏறு கட்டிய கொட்டி லரங்கமே" (தனிப்பா.1.88,174).* 2. வில்வித்தை பயிற்றுவிக்கு மிடம்; school for archery. *"கல்லூரி நற் கொட்டிலா" (சீவக.995).* 3. கொட்டகை; shed. *"கொட்டில் விளங்குதேர் புக்கதன்றே" (சீவக.471).* 4. சிறுகுடில்; hut. *"பன்னூறாயிரம் பாடிக் கொட்டிலும்" (பெருங். உஞ்சை. 43:199).*

**ம.** கொட்டில்; **க.** கொட்டிகெ; **தெ.** கொட்டாமு; **து.** கொட்ய; **குட.** கொட்டி; **பட.** கொட்டகெ; Pkt.gōttha.

*[குள் → கொள் → கொட்டி = வளைவு, சுழற்சி, சுற்றுகை. கொள் → கொட்டு = வட்டமான நெற்கூடு. கொட்டு → கொட்டில் = வட்டமான தொழுவம் (வ.மொ.வ.5) (வே.க.165).]*

**கொட்டிலம்** *koṭṭilam*, பெ.(n.) கோட்டம்; Arabian costus (சா.அக.).

*[கொட்டில் + அம்.]*

**கொட்டிலாம்சல்லி** *koṭṭilām-calli*, பெ.(n.) முன்னோர் பயன்படுத்திய ஒரு செம்பு நாணயம்; a copper coin current in ancient days (சா.அக.).

*[கொட்டில் + அம் + சல்லி.]*

**கொட்டிவாக்கங்குப்பம்** *koṭṭivākkaṅ-kuppam*, பெ.(n.) உப்பங்கழியில் மீன்தொழில் செய்வோர் வாழும் ஊர்; a village of fishermen.

*[கொட்டிவாக்கம் + குப்பம்.]*

**கொட்டிவாக்கம்** *koṭṭi-vākkam*, பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டம் மதுராந்தகம் வட்டத்தில் அமைந்த ஓர் ஊர்; a village situated in Madurantagam Taluk in Kañjipuram Dt.

*[கொட்டி + வாக்கம்.]*

இவ் வூரில் கொட்டி என்னும் நீர்நிலைக் கொடிவகை அதிகம் வளர்ந்து வந்தமையால் இப் பெயர் பெற்றிருக்கலாம்.

**கொட்டு**[1]**-தல்** *koṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1.மத்தளங் கொட்டுதல்; to beat, as a drum, a tambourine. *"மத்தளங் கொட்ட" (திவ். நாய்ச். 6:6).* 2. கம்மியர் சம்மட்டியால் அடித்தல்; striking with hammer as blacksmiths. *"கொட்டுவினைக் கொட்டிலும்" (பெருங்.மகத.4:16).* 3. கையால் தட்டுதல்; to clap, strike with the palms. *"கொட்டி னான்றோள்" (கம்பரா.சம்புமா.18).* 4. பஞ்சரைத்தல்; to card out, as cotton. *"கொட்டிய பஞ்சுபோல்" (இராமநா. அயோத்.5).* 5.நெற்குத்துதல்; to pound as paddy. *"கொட்டி வீழுமி குத்தல்" (பிரபுலிங். சித்தரா.9).* 6.அடித்தல்; to strike, beat. 7. தேள், குளவி முதலியன கொட்டுதல்; to sting, as a scorpion, a wasp. *"கருங்குளவி கொட்டும்" (அரிச். பு. நகர்நீங்.41).* 'திருடனைத் தேள் கொட்டினது போல' (பழ.). 8.சொரிதல்; to pour forth, shower down.

shed. 9. கூடை, சாக்கு முதலியவற்றி னின்றும், பண்டங்களைக் கவிழ்த்தல்; to cast out or empty the contents of a basket or sack as grain, sand. 10. பொருள்களைக் கலத்தில் ஒருசேர இடுதல்; to throw or cast into a vessel. 11.அப்புதல்; to besmear, as sandal or other fragrant paste. *"பூங்கேழ்த் தேய்வை... இளமுலை கொட்டி" (திருமுருகு. 35).* 12.விழுதல்; fall off. 13. குவித்தல்; pile up. 14. இமைத்தல்; bat. கொட்டாது பார்க்கிறான்.

**ம.** கொட்டுக; **க.** கொட்டண (உமியைத் தட்டுதல்); **தெ.** கொட்டு; **து.** கொடபுணி; **கோத.** கொட்க; **துட.** க்விட்க; **கோண்.** கொட்ட்; **பர்.** கொட்ட்; **குரு.** கொட்னா; **மா.** க்வொடெ; **குட.** கொட்ட.

*[கொள் → கொட்டு.] (வே.க.164).*

**கொட்டு[2]–தல்** *kottu-,*5 செ.கு.வி. (v.i.) 1.அறைந்து கொள்ளுதல்; to beat, as upon the breast. *"கைகளான் முலைமேற் கொட்டி" (கம்பரா. இராவணன்சோக. 44.)* 2. பல்லிசொல்லுதல்; to chirp, as a lizard. *"கொட்டாய் பல்லிக்குட்டி" (திவ்.பெரியதி. 10,10:4).* 3.உதிர்தல்; to drop, as leaves; to fall of, as hair. *மயிரெல்லாம் கொட்டிப் போயிற்று (இ.வ.).*

*[கொள் → கொட்டு.]*

**கொட்டு[3]** *kottu,*பெ.(n.) 1.அடி; beat, stroke. 2. மத்தளம் அல்லது மேளத்தினது அடிப்பு; drum-beat. *"மள்ளர் கொட்டின் மஞ்ஞை யாலும்" (ஐங்குறு.371).* 3.வாச்சியம்; drum, tomtom, tabour. *"பதினோ ராடலும் பாட்டுங் கொட்டும்" (சிலப்.3:14).* 4.தாளத்தில் அரை மாத்திரைக் காலம் (சிலப்.3:16, உரை); a duration of time measure consisting of half a *mattirai.* 5.தேள் முதலிய கொட்டுகை; stinging. 6.சொரிகை; pouring, throwing, emptying. 7.கத்துதல்; chirp as a lizard. பல்லி கொட்டும் ஓசை கேட்கிறது (உ.வ.). 8. மேளம் அல்லது தவுல்; musical instrument, drum.

**ம.** கோட்டு (அகழ்வதற்குப் பயன்படும் ஒரு கருவி); **க.** குறு (மண் திருப்புதல்): **தெ.** கோராடு: **து.** கோர் (அகழ்தல்).

**Pkt.** kottana.

*[குட்டு → கொட்டு. குட்டுதல் : முட்டியால் தலையைத் தாக்குதல். கொட்டுதல் : முட்டியால் ஒன்றைத் தாக்குதல்.]*

குச்சியினால் பறையை அடித்தல், சுத்தியலால் ஒன்றைத் தட்டுதல். கொட்டுப்பிடி, செம்புகொட்டி முதலிய பெயர்களை நோக்குக (மு.தா.88).

**கொட்டு[4]** *kottu.* பெ.(n.) 1. தோண்டுகருவி வகை (பழ.388. உரை); hoe with short handle, weeding-hoe. 2.மண்வெட்டி; spade. *"யான்கல்லுங் கொட்டைப் பறித்தார்" (பெரியபு.தண்டி.16).* 3.உடம்பு; body. *உயிர் அங்கே, கொட்டு இங்கே (வின்.).* 4.நெற்கூடு (பழ.388, உரை); granary. 5.பிரப்பங்கூடை (இ.வ.); basket made of rattan. 6. பனந்துண்டு (யாழ்ப்.); trunk of a palmyra tree. 7. கிணற்றுக்கட்டு; parapet wall of well.

**ம.** கோட்டு; **து.** கொட்டு; **பர்., கட.** கொடல்.

*[குள் → கொள் → கொட்டு, கொட்டுதல் : கொள்கலத்தைச் சாய்த்து உள்ளீட்டை வீழ்த்துதல். கொள் → கொட்டி : வளைவு, சுழற்சி, சுற்றுகை. கொள் → கொட்டு : வட்டமான நெற்கூடு.]*

**கொட்டு[5]** *kottu,* பெ.(n.) மலடி (இ.வ.); barren woman.

**மறுவ.** கொட்டுச் சிறுக்கி.

**க., பட.** கொட்டி; **து.** கொட்டு.

**கொட்டுக்கலியாணம்** *kottu-kaliyānam,* பெ.(n.) கைம்பெண் அல்லது மணவிலக்குப் பெற்ற பெண்ணுக்கு மேளத்தோடு செய்யும் மறுமணம்; remarriage of a widow or a divorced woman cele brated with tom tom, among certain castes (as distinct from கட்டுத்தாலி - the same without tom tom.

*[கொட்டு + கலியாணம்.]*

**கொட்டுக்கன்னார்** *kottu-k-kannār,* பெ.(n.) செம்படிக்குங் கன்னார் (வின்.); braziers who work by beating plates into shape and not by casting.

*[கொட்டு + கன்னார்.]*

**கொட்டுக்காரன்** *kottu-k-kāran,* பெ.(n.) 1.மத்தளம் முதலிய தாளக் கருவிகளை இயக்குபவன் (இ.வ.); drummer. 2. மேளம் வாசிக்கும் இனத்தவர்; a caste of drummers.

*[கொட்டு + காரன்.]*

**கொட்டுக்கிடாரம்** *kottu-k-kidāram,* பெ.(n.) பெரிய கொப்பரை (வின்.); large boiler of beaten brass.

*[கொட்டு + கிடாரம்.]*

**கொட்டுக்கிணறு** *kottu-k-kinaru,* பெ.(n.) பனந்துண்டுகளை வைத்துக் கட்டிய கிணறு (யாழ்ப்.); a well, walled with hollow palmyra trunks.

*[கொட்டு + கிணறு.]*

**கொட்டுக்குடவை** *kottu-k-kudavai,* பெ.(n.) உடுக்கைபோல் வடிவமைந்த ஏனம் (இ.வ.); a kettle - shaped vessel.

*[கொட்டு + குடவை.]*

**கொட்டுக்கூடை** *kottu-k-kūdai,* பெ.(n.) 1.கிண்ணவடிவான கூடை (வின்.); a cup-shaped basket. 2.கூடைபோன்ற வடிவுள்ள மாழையிலான ஏனம் (இ.வ.); a basket-shaped metal vessel. 3. வெண்கலத்தாலான சிறு உண்கலம்; a vessel made of bell metal. 4. சென்னாக்கூனியை அளந்தறிதற்குரிய சிறு கூடை; a small basket to measure the fish (மீ.பிடி.தொ.அக.).

*[கொட்டு + கூடை.]*

**கொட்டுக்கோல்** *kottu-k-kōl,* பெ.(n.) மேளம் முதலிய தாளக் கருவிகளை அடிக்கப் பயன் படுத்தும் கோல்; stick used for drumming, drum-stick.

ம. கொட்டுக்கோல், கொட்டுகம்பு.

*[கொட்டு +கோல்]*

**கொட்டுச்சீட்டு** *kottu-c-cittu,* பெ.(n.) குலுக்கி யெடுக்கும் சீட்டு (இ.வ.); a chit transaction in which the prize at each instalment is determined by the drawing of lots, dist. fr. *ēlaccittu.*

*[கொட்டு +சீட்டு]*

**கொட்டுச்செத்தல்** *kottu-c-cettal-,* பெ.(n.) அறக்காய்ந்த தேங்காய் (யாழ்.அக.); fully dried coconut.

*[கொட்டு +செத்தல். கொட்டை → கொட்டு. செத்தல் = நெற்று.]*

**கொட்டுச்செம்பு** *kottu-c-cembu,* பெ.(n.) தகடடித்துச் செய்த தாமிரச் செம்பு (வின்.); a copper pot made by beating plates into shape.

*[கொட்டு + செம்பு.]*

**கொட்டுத்தட்டு** *kottu-t-tattu,* பெ.(n.) மத்தளத்தின் வலந்தரையின் நடுப்பகுதி; the central part of right hand side of the music instrument mirudangam.

*[கொட்டு + தட்டு.]*

**கொட்டுப்படாதவன்** *kottu-p-padādavan-,* பெ.(n.) ஏச்சு வாங்காதவன், வடுப்படாதவன் (இ.வ.); one of unblemished character.

*[கொட்டு + படாதவன்.]*

**கொட்டுப்பனை** *kottu-p-panai,* பெ.(n.) தறிக்கப்பட்ட பனையினடி; chopped root of a palm.

*[கொட்டு + பனை.]*

**கொட்டுப்பிடி** *kottu-p-pidi,* பெ.(n.) கொட்டாப்புளி; wooden mallet. *"கொட்டுப்பிடி போலுங் கூனும்" (சீவக.2798).*

குட்டு → கொட்டு.

*[கொட்டு + பிடி.]*

**கொட்டுப்பித்தளை** *kottu-p-pittalai,* பெ.(n.) கொட்டுவேலை செய்ய உதவும் பித்தளை; brass for the (work) use of smith.

*[கொட்டு + பித்தளை.]*

**கொட்டுப்புரி** *kottu-p-puri,* பெ.(n.) சிறுதுடைப்ப வகை; a kind of small broom; brush.

*[கொட்டு + புரி.]*

**கொட்டுப்பூசல்** *kottu-p-pūšal,* பெ.(n.) சிறு சண்டை; street fight. "ஊரழிஞ்சி தொறுக்கொள்ள கொட்டுப்பூசல் போய்" (ஆவ.6–4, ப.16). (செங்கம் நடுகல். 971/57).

*[கொட்டு (பறைமுழக்கம்) + பூசல்.]*

**கொட்டுமண்** *kottu-man,* பெ.(n.) எடுத்துக் கொண்டுவந்து இடும் மண்; loose earth thrown to improve land, repair a road, etc., dist. fr. *nilai-man.*

மறுவ. போடுமண்.

*[கொட்டு + மண்.]*

**கொட்டுமண்வெட்டி** *kottu-man-vetti,* பெ.(n.) மண்வெட்டி வகைகளுள் ஒன்று; a kind of hoe, spade.

*[கொட்டு + மண் + வெட்டி.]*

**கொட்டுமம்பட்டி** *kottumampatti,* பெ.(n.) தேய்ந்த மண்வெட்டி; blunt spade.

*[கொட்டு + (மண்வெட்டி) மம்பட்டி (கொ.வ.).]*

**கொட்டுமுழக்கு** *kottu-mulakku,* பெ.(n.) விழாக்காலை இன்னிசை முழக்கம்; sounding of drums and pipes on festive occasions.

*[கொட்டு + முழக்கு.]*

**கொட்டுமுறி** *kottu-muri,* பெ.(n.) உயர்ந்த பித்தளை வகை (வின்.); a superior kind of brass.

*[கொட்டு + முறி.]*

**கொட்டுமேளம்** *kottu-mēlam,* பெ.(n.) 1. பறை, தாரை, தப்பட்டை முதலான இசைக் கருவிகள்; drums and pipes.2. முறையான திருமணம்; legal marriage. கொட்டுமேளமா கட்டுதாலியா? (உ.வ.).

*[கொட்டு + மேளம்.]*

**கொட்டுரசம்** *koṭṭu-rašam,* பெ.(n.) பருப்பிடாத சாறு; a kind of pepper-water prepared without dhal. **மறுவ.** கொட்டுச்சாறு.

*[கொட்டு + ரசம்.]*

**கொட்டுவலை** *koṭṭu-valai,* பெ.(n.) நீண்ட மீன்வலை; long fishing net.

*[கொட்டு + வலை.]*

**கொட்டுவாய்** *koṭṭu-vāy,* பெ.(n.) 1.தேள் முதலியவை கொட்டின இடம்; the spot stung by a scorpion or other poisonous insects. *கொட்டுவாயில் மருந்தைப்போடு.* 2.நெருக்கடி யான நேரம்; nick of time. கொட்டுவாயில் வந்து கேட்கிறான் (உ.வ.).

*[கொட்டு + வாய்.]*

**கொட்டுவான்**[1] *koṭṭuvāṉ,* பெ.(n.)1. கொட்டாப்புளி; mallet. கொட்டுவானால் அடித்துத் தகரத்தைச் சமனாக்கு. 2. தேள் முதலியவை; scorpion. கொட்டுவான் கொட்டியதால் வலி தாங்க முடியவில்லை. 3 புற்செதுக்குங் கருவிவகை; hoe with a long handle.

*[கொட்டு → கொட்டுவான்.]*

**கொட்டுவான்**[2] *koṭṭuvāṉ,* பெ.(n.) கொட்டுக் கன்னான்; brazier who works by beating plates into shape. *நெளிந்த குடத்தைச் கொட்டுவானிடம் கொடுத்துச் சரிசெய் (உ.வ.).*

*[கொட்டு → கொட்டுவான்.]*

**கொட்டுவிடக்காலி** *koṭṭuviḍa-k-kāli,* காலினால் கொட்டும் செங்குளவி; a red species of wasp having its sting in its legs (சா.அக.).

*[கொட்டு + விடம் + காலி.]*

**கொட்டுவிடம்** *koṭṭu-viḍam,* பெ.(n.) தேள் கொட்டலால் ஏற்பட்ட நஞ்சு; poison due to scorpion sting (சா.அக.).

*[கொட்டு + விடம்.]*

**கொட்டுவிரியன்பாம்பு** *koṭṭu-viriyaṉ-pāmbu,* பெ.(n.) ஆழ்கடலில் வாழும் ஒருவகைப் பாம்பு; a kind of snake living in deep sea.

*[கொட்டு + விரியன் + பாம்பு]*

**கொட்டுவேலை**[1] *koṭṭu-vēlai,* பெ.(n.) கொட்டுக் கன்னார் வேலை (வின்.) beaten work, dist. fr. *vārppuvēlai.*

**ம.** கொட்டுபணி.

*[கொட்டு + வேலை.]*

**கொட்டுவேலை**[2] *koṭṭu-vēlai,* பெ.(n.) துணியில் அச்சடித்தல்; print on cloth (சிற்பரத்.முன்.ப.9).

*[கொட்டு + வேலை.]*

**கொட்டுளு** *koṭṭuḷu,* பெ.(n.) ஊமைச்சி மீன்; trunk fish.

**ம.** கொட்டுள்.

*[கொட்டு + உளு.]*

**கொட்டெரிச்சல்** *koṭṭericcal,* பெ.(n.) 1. கொட்டு வதனா லுண்டாகும் எரிவு; burning sensation due to stinging by a scorpion (சா.அக.).

*[கொட்டு + எரிச்சல்.]*

**கொட்டேணி** *koṭṭēṇi,* பெ.(n.) பன்மாடிக்கட்டடம் கட்டுவோர் ஆழ்துளைக் கற்காறை அடிமானம் இடுதற்காகப் பயன்படுத்தும் எந்திர ஏணி இடிப்புப் பொறி; pile driver used to lay pile foundation for multistoreyed buildings.

*[கொட்டுதல் = இடித்தல், ஏணி = ஏணி போன்ற இயந்திரம். கொட்டு + ஏணி.]*

**கொட்டை**[1] *koṭṭai,* பெ.(n.) 1.விதை (பிங்.); seed of any kind not enclosed in chaff or husk, nut, stone, kernel. 2. விதைக்கொட்டை; testicles. 3.தாமரைக்கொட்டை; pericarp of the lotus flower. *"தாமரை வள்ளிதழ் பொதிந்த கொட்டை போல" (பெருங். உஞ்சைக். 38:258).* 4.பலாபூசணிகளின் பிஞ்சு (கொ.வ.); fruit bud of the jack; very small green pumpkin. 5. உருண்டை வடிவம்; large rounded form, as in writing. கொட்டையெழுத்து.

**ம.** கொட்ட; **க., து.** கொட்டெ; **தெ.** குலிடி; **பட.** கொட்டெ; **குரு.** கொடா.

*[குள் → கொள் → கோள் → கோளம் = வட்டம், உருண்டை. கொள் → கொட்டு → கொட்டை (வே.க.165.) (ஒ.நோ. 173.)]*

**கொட்டை**[2] *koṭṭai,* பெ.(n.) 1. தங்கத்தாலான மகளிர் தலையணி வகை; a gold ornament for women's hair. 2. கிடுகுதாங்குங் கால் முதலியவற்றின் தலைப்பகுதி; head of a pole used as a prop. *"மணிபுனை செம்பொற் கொட்டை" (சீவக.113).* 3.யானையின் தலையணிச் சிறப்பு; an ornament for elephant 4. சும்மாடு (வின்.); pad for the head in carrying a load. 5. சிறு தலையணை; small round pillow, cushion. *"பஞ்சின் நெட்டணை யருகாக் கொட்டைகள் பரப்பி" (பதினொ. திருவிடைம. மும்.19).*

*[கொள் → கொட்டு → கொட்டை.]*

**கொட்டை**[3] *kottai,* பெ.(n.) 1.**கொட்டையிலந்தை** பார்க்க; see *kottai-y-ilandai.* 2. **ஆமணக்கு** பார்க்க; see *āmaṇakku.* 3. **கொட்டைக்கரந்தை** (மலை.) பார்க்க; see *kottai-k-karandai.*

*[கொள் → கொட்டு → கொட்டை.]*

**கொட்டை**[4] *kottai,* பெ.(n.) 1.பாதக்குறட்டின் குமிழ்; knob of wooden sandals. *"பவழக் கொட்டை பொற் செருப் பேற்றி" (பெருங். மகத.22:202).* 2. ஆடைத்தும்பினை அழகுபடுத்துதற்காகத் திரள முடிந்த முடிச்சு; knots made of warp threads at the end of a cloth, as ornament, etc. *"கொட்டைக் கரைய பட்டுடை நல்கி" (பொருந.155).* 3.ஆடைத் தும்பு (பொருந.155,உரை.); warp threads at the end of the cloth, hanging loosely and not made into knots.

*[கோடு → கொடு → கொட்டை.]*

**கொட்டை**[5] *kottai,* பெ.(n.) 1.நூற்குங் கதிரின் கொட்டை; base of a hand-spindle. கப்பல் ஓடிப் பட்ட கடன் கொட்டை நூற்றா விடியும் (பழ.). 2. பஞ்சுச்சுருள்; rolls of cotton prepared for spinning. *"கொட்டைத் தலைப்பால் கொடுத்து" (திவ். பெரியாழ். 3,5:1).* 3. காதுவளர்க்குந் திரி (இ.வ.); plug or tent of cloth to widen the ear-holes for jewels; 4. மகளிர் காதணிவகை (பிங்.); a kind of ear-ornament for women.

*[கொள் → கொடு → கொட்டை.]*

**கொட்டை**[6] *kottai,* பெ.(n.) ஒருவகை மீன்; a kind of fish.

*[கொள் → கொடு → கொட்டை.]*

**கொட்டை**[7] *kottai,* பெ.(n.) நெல்வகை (தண்.கன.பன்.ப.62); a kind of paddy.

*[குள் → குடு (வளைவு, வட்டம்) கொடு → கொட்டை = தடிப்பான நெல்வகை.]*

**கொட்டைக்கச்சி** *kottai-k-kacci,* பெ.(n.) **கொட்டாங்காய்ச்சில்** பார்க்க; see *kottān-kāy-c-cil.*

*[கொட்டான் + காய் + சில் - கொட்டாங்காய்ச்சில் கொட்டைக்கச்சி (கொ.வ.).]*

**கொட்டைக்கட்டு-தல்** *kottai-k-kattu-,* 5 செ.கு.வி. (v.i.) 1.இலுப்பைக்காய் வைத்துச் சூதாடுதல் (வின்.); to gamble with mahua seeds. 2. நாய்ப்புலி யென்னும் ஆட்டத்திற் புலியைக் கட்டுதல் (இ.வ.); to checkmate the tiger in the game of *nāyppuli.*

*[கொட்டை + கட்டு-.]*

**கொட்டைக்கரந்தை** *kottai-k-karandai,* பெ.(n.) செடிவகை; Indian globe - thistle.

*[கொட்டை + கரந்தை.]*

**கொட்டைக்களா** *kottai-k-kaḷā,* பெ.(n.) ஒரு வகைத் தணக்கு; whirling nut (சா.அக.).

*[கொட்டை + களா.]*

**கொட்டைக்காய்** *kottai-k-kāy,* பெ.(n.) 1. விதைகள் பெருத்தும் நிறைந்தும் உள்ள காய்; fruit, the seeds or stones of which are disproportionately large or numerous. 2. காய்ந்து சுருங்கிய பொருள்; a shrunk and dried object.

*[கொட்டை + காய்.]*

**கொட்டைக்காய்ச்சி** *kottai-k-kāycci,* பெ.(n.) தசைப்பற்று அதிகமின்றிக் கொட்டை பருத்துள்ள காய்காய்க்கும் மாமரம்; a species of mango yielding fruits of large stones with a small quantity of pulp.

*[கொட்டை + காய்ச்சி.]*

**கொட்டைக்கூலி** *kottai-k-kūli,* பெ.(n.) வரி வகை; a tax (SII.VIII. 139).

*[கொட்டை + கூலி.]*

**கொட்டைக்கையில்** *kottai-k-kaiyil,* பெ.(n.) கொட்டங்காய்ச்சில் (யாழ்ப்.); portion of coconut shell.

மறுவ. கொட்டாஞ்சி, கொட்டாங்கச்சி (தஞ்.வ.).

*[கொட்டை + (காய் + சில்) கயில்.]*

**கொட்டைக்காலி** *kottai-k-kāli,* பெ.(n.) **கொட்டைச் சேம்பு** பார்க்க; see *kottai-c-cēmbu.*

ம. கொட்டக்காலி.

*[கொட்டை + காலி.]*

**கொட்டைக்கொடி** *kottai-k-kodi,* பெ.(n.) ஆண் கருவுயிர்மக் கொடி; spermatic cord (சா.அக.).

*[கொட்டை + கொடி.]*

**கொட்டைச்செத்தல்** *kottai-c-cettal,* பெ.(n.) **கொட்டைத் தேங்காய்** (யாழ்ப்.) பார்க்க; see *kottai-t-tēngāy.*

*[கொட்டை + செத்தல்.]*

**கொட்டைச்சேம்பு** *kottai-c-cēmbu,* பெ.(n.) ஒருவகைச் சேம்பு; a kind of caladium.

ம. கொட்டச்சேம்பு.

*[கொட்டை + சேம்பு.]*

**கொட்டைசுடு-தல்** *kottai-cudu-,* 17 செ.குன்றாவி. (v.t.) முந்திரிக்கொட்டைகளைத் தீயிலிட்டு எடுத்தல்; to fry the cashewnut.

*[கொட்டை + சுடு-.]*

**கொட்டைசெத்தவன்** *kottai-cettavan,* பெ.(n.) கையாலாகாதவன் (கொ.வ.); lit. an emasculated person, coward, nerveless man.

*[கொட்டை + செத்தவன்.]*

**கொட்டைத்தணக்கு** *kottai-t-tanakku,* பெ.(n.) தணக்குவகை (L); whirling-nut.

*[கொட்டை + தணக்கு.]*

**கொட்டைத்தேங்காய்** *kottai-t-tēngāy,* பெ.(n.) கொப்பரைத் தேங்காய் (யாழ்ப்.); dry coconut in which the kernel rattles.

**ம.** கொட்டத்தேங்ங.

*[கொட்டை + தேங்காய்.]*

**கொர்ட்டைதாழ்த்து-தல்** *kottai-tālttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பழக்கொட்டையை நிலத்தில் விதைத்தல் (வின்.); to plant fruit-stones.

*[கொட்டை + தாழ்த்து-.]*

**கொட்டைநண்டு** *kottai-nandu,* பெ.(n.) முதுகில் முள்ளுடைய கடல்நண்டு; a kind of sea crab which has thorn on the back.

*[கொட்டை + நண்டு.]*

**கொட்டைநாகம்** *kottai-nāgam,* பெ.(n.) நாவல் மரவகை (L.); jamoon plum.

*[கொட்டை + நாகம்.]*

**கொட்டைநாவல்** *kottai-nāval,* பெ.(n.) ***கொட்டை நாகம்*** (யாழ்ப்) பார்க்க; see *kottai-nāgam.*

**மறுவ.** நரிநாவல், சிறுநாவல்.

*[கொட்டை + நாவல்.]*

**கொட்டைநாளம்** *kottai-nālam,* பெ.(n.) ***கொட்டைக் கரந்தை*** பார்க்க; see *kottai-k-karandai* (சா.அக.).

*[கொட்டை + நாளம்.]*

**கொட்டைநூல்-தல் (கொட்டைநூற்றல்)** *kottai-nūl-,* 9 செ.குன்றாவி.(v.t.) 1. பஞ்சுநூற்றல்; to spin cotton; கப்பலோடிப் பட்ட கடன், கொட்டை நூற்றுத் தீருமோ? 2. பயனற்ற வேலை செய்தல் (உ.வ.); to be engaged in an unprofitable work. 3. வீண்காலம் போக்குதல் (உ.வ.); to waste or idle away one's time.

*[கொட்டை + நூல்.]*

**கொட்டைநெய்** *kottai-ney,* பெ.(n.) சிற்றாமணக் கெண்ணெய்; oil from small castor seeds (சா.அக.).

*[கொட்டை + நெய்.]*

**கொட்டைப்பயறு** *kottai-p-payaru,* பெ.(n.) மணற்பாங்கான நிலத்தில் புரட்டாசியில் விதைத்து நான்கு மாதங்களில் விளையும் பயறுவகை (M.M. 329.); a kind of pulse raised in sandy soil, sown in *Purattāśi* and maturing in four months.

*[கொட்டை + பயறு.]*

**கொட்டைப்பருந்து** *kottai-p-parundu,* பெ.(n.) பருந்து வகை; black kite.

*[கொட்டை + பருந்து.]*

**கொட்டைப்பருப்பு** *kottai-p-paruppu,* பெ.(n.) கொட்டைப்பயறுள்ளிருக்கும் பருப்பு; kernel inside the nut (சா.அக.).

*[கொட்டை + பருப்பு]*

**கொட்டைப்பனை** *kottai-p-panai,* பெ.(n.) தாளிப்பனை; talipot palm (சா.அக.).

*[கொட்டை + பனை.]*

**கொட்டைப்பாக்கன்ஏந்தல்** *kottai-p-pākkan-ēndal,* பெ.(n.) புதுக்கோட்டை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Pudukkottai Dt.

*[கொட்டை + பாக்கன் + ஏந்தல் (ஏரி).]*

**கொட்டைப்பாக்கு** *kottai-p-pākku,* பெ.(n.) வேகவைக்காமல் உணக்கிய முழுப்பாக்கு; areca-nut dried without boiling, raw areca-nut. *"கொட்டைப்பாக் கென்றுரைக்கிற் கோழைமலம் போம்"(பதார்த்த. 1437).*

**ம.** கொட்டப்பாக்கு, கொட்டடய்க்க.

*[கொட்டை + பாக்கு.]*

**கொட்டைப்பாக்குத்தலை** *kottai-p-pākku-t-talai,* பெ.(n.) மிகச் சிறிய தலை; an abnormally small head - microceaphalus. cf. மாங்காய்த்தலை.

*[கொட்டைப்பாக்கு + தலை.]*

**கொட்டைப்பாக்குத்தலைப்பா** *kottai-p-pākku-t-talai-p-pā,* பெ.(n.) குஞ்சுத்தலைப்பா (யாழ்.அக.); a kind of turban.

*[கொட்டை + பாக்கு + தலைப்பா.]*

**கொட்டைப்பாசம்** *kottai-p-pāšam,* பெ.(n.) குளிர்தாமரை; floating lotus (சா.அக.).

*[கொட்டை + பாசம்.]*

**கொட்டைப்பாசி** *kottai-p-pāši,* பெ.(n.) நீர்ப்பாசி வகை; a kind of moss. *'கொட்டைப் பாசியின் வேரையொத்த சிதரின சீரையை' (பெரும்பாண். 468, உரை).*

*[கொட்டை + பாசி.]*

**கொட்டைப்பாய்** *kottai-p-pāy,* பெ.(n.) முரட்டுப் பாய்; a rough or dry mat.

ம. கொட்டப்பாய.

*[கொட்டை + பாய்.]*

**கொட்டைப்பாலை** *kottai-p-pālai,* பெ.(n.) ***கொட்டைக் கரந்தை*** பார்க்க; see *kottai-k-karandai* (சா.அக.).

*[கொட்டை + பாலை.]*

**கொட்டைப்புளி** *kottai-p-puli,* பெ.(n.) விதை யெடுக்காத புளி; pulp of tamarind fruits with the seeds.

*[கொட்டை + புளி.]*

**கொட்டைப்பூவரசு** *kottai-p-pūvarašu,* பெ.(n.) கொட்டை முதிர்ந்த காய்கள் காய்க்கும் பூவரசு; portia tree yielding fruit of matured seeds (சா.அக.).

*[கொட்டை + பூவரசு.]*

**கொட்டைப்பெட்டி** *kottai-p-petti,* பெ.(n.) 1. (தாம்பூலப்) பெட்டி (வின்.); betel-box, basket for betel, areca-nuts. 2. நெசவுக்குரிய பஞ்சுச்சுருள் வைக்கும் பெட்டி; basket for cotton yarn. 3. பனைநாராற் செய்த சிறுபெட்டி வகை; a small basket of palmyra leaves or fibres.

*[கொட்டை + பெட்டி.]*

**கொட்டைப்பை** *kottai-p-pai,* பெ.(n.) 1. விதைப் பை; testicle sac. 2. விதையைக் கவர்ந்துகொண் டிருக்கும் பை; a pouch investing the testicle (சா.அக.).

*[கொட்டை + பை.]*

**கொட்டைபரப்பு-தல்** *kottai-parappu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பகைவரது நாட்டை அழித்துத் தரைமட்டமாக்குதல்; to destroy completely, raze to the ground, as an enemy's town. *"திரிபுரஞ் சுட்டுக் கொட்டை பரப்புங் குரிசில்" (திருப்பு.).*

மறுவ. கொட்டைமுத்து விதைத்தல்.

*[கொட்டை + பரப்பு-.]*

**கொட்டைபருத்தல்** *kottai-p-paruttal,* பெ.(n.) விதை பெரிதாதல்; enlargement of the testicles (சா.அக.).

*[கொட்டை + பருத்தல்.]*

**கொட்டைபற்றுதல்** *kottai-parrudal,* பெ.(n.) ***கொட்டைபிடித்தல்*** பார்க்க; see *kottai-pidittal.*

*[கொட்டை + பற்றுதல்.]*

**கொட்டைபிசைதல்** *kottai-p-pišai-,* பெ.(n.) 1. விதையைப் பிசைதல்; squeezing the testicles. 2. ஒருவகைக் கொலை; a mode of causing death (சா.அக.).

*[கொட்டை + பிசை.]*

**கொட்டைபிடித்தல்** *kottai-pidittal,* பெ.(n.) பிஞ்சுகளுக்குக் கொட்டை பிடித்தல்; embryonic formation of nut in an immature fruit (சா.அக.).

*[கொட்டை + பிடித்தல்.]*

**கொட்டைபோடு-தல்** *kottai-pōdu-,* 19 செ.குன்றாவி. (v.t.) 1. விதை விதைத்தல்; to sow seeds in garden - beds. 2. பலாமரம் முதலியன பிஞ்சுவிடுதல் (இ.வ.); to shoot forth fruit-buds, as the jack-tree. 3. தொழில் முதலியவற்றில் பழக்கப்படுதல் (கொ.வ.); to be experienced, as in a profession. 4. இறத்தல் (இ.வ.); to die.

*[கொட்டை + போடு-.]*

**கொட்டைமறைவு** *kottai-maraivu,* பெ.(n.) விதை பிடுக்கினுள்ளிறங்காமல் வயிற்றினுள்ளே மறைந்து நிற்றல்; concealment of the testicles within the abdomen (சா.அக.).

*[கொட்டை + மறைவு.]*

**கொட்டைமுத்து** *kottai-muttu,* பெ.(n.) ஆமணக்கு முத்து; the seed of the castor plant.

மறுவ. சிற்றாமணக்கு விதை (மலை.)

*[கொட்டை + முத்து.]*

**கொட்டைமுத்தூற்று-தல்** *kottai-muttūrru-,* 5 செ.கு.வி.(v.i.) ஆமணக்கு விதையிலிருந்து எண்ணெயெடுத்தல்; extracting oil from castor seed by boiling process (சா.அக.).

*[கொட்டைமுத்து + ஊற்று-.]*

**கொட்டைமுத்தெண்ணெய்** *kottai-muttenney;* பெ.(n.) விளக்கெண்ணெய்; castor oil (சா.அக.).

*[கொட்டை + முத்து + எண்ணெய்.]*

**கொட்டைமுதல்** *kottai-mudal,* பெ.(n.) 1. கைமுதல்; initial capital of a business. 2. விதைத்தல்; to sow seed.

மறுவ. விதைமுதல்.

*[கொட்டை+முதல்.]*

**கொட்டைமுதிர்ச்சி** *kottai-mudircci,* பெ.(n.) பழத்தினுள்ளிருக்கும் விதை முதிர்ந்து பெரிதாதல்; maturity of the nut in a fruit (சா.அக.).

*[கொட்டை + முதிர்ச்சி.]*

**கொட்டைமுந்திரி** *kottai-mundiri,* பெ.(n.) மரவகை; cashewnut tree.

*[கொட்டை + முந்திரி.]*

**கொட்டைமுந்திரிகை** *kottai-mundirigai,* பெ.(n.) முந்திரியின் பருப்பு; cashewnut.

*[கொட்டை+முந்திரிகை.]*

**கொட்டைமூலம்** *kottai-mūlam,* பெ.(n.) கொட்டிக் கிழங்கு; a kind of cyprus root (சா.அக.).

*[கொட்டை+மூலம்.]*

**கொட்டையடி-த்தல்** *kottai-y-adi-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஆடு மாடுகளுக்கு விதையடித்தல்; castration as in bulls (சா.அக.).

*[கொட்டை + அடி-.]*

**கொட்டையடித்தவன்** *kottai-y-adittavan,* பெ.(n.) விதையெடுக்கப்பட்டவன்; one in whom the testicles have been removed (சா.அக.).

*[கொட்டை + அடித்தவன்.]*

**கொட்டையரைஞாண்** *kottai-y-araiñāṇ,* பெ.(n.) குழந்தையணிவகை (பெரியபு.சிறுத்.60); a child's ornament.

*[கொட்டை + அரைஞாண்.]*

**கொட்டையவரை** *kottai-y-avarai,* பெ.(n.) முதிர்ந்த அவரை; matured bean in which the seed portion alone is edible (சா.அக.).

*[கொட்டை + அவரை.]*

**கொட்டையழுகு-தல்** *kottai-y-alugu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. பழத்தினுள் கொட்டை அழுகுதல்; rotten condition of the nut inside a fruit. 2. பெண்நோயால் ஆண்விதை அழுகல்; putrid state of the testicles from venereal disease (சா.அக.).

*[கொட்டை + அழுகு-.]*

**கொட்டையாண்டார்** *kottai-y-āṇḍār,* பெ.(n.) ***கோட்டையாண்டார்*** பார்க்க; see *kōttai-y-āṇḍār.*

*[கோட்டை → கொட்டை + ஆண்டார்.]*

**கொட்டையிடு-தல்** *kottai-y-idu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. ***கொட்டைபோடு-,*** பார்க்க ; see *kottai-pōdu-,* 2. பஞ்சுச்சுருள் செய்தல் (வின்.); to prepare cotton roll.

*[கொட்டை + இடு-.]*

**கொட்டையிலந்தை** *kottai-y-ilandai,* பெ.(n.) இலந்தை மரவகை (L.); woody, fruited jujube.

*[கொட்டை + இலந்தை.]*

**கொட்டையிலாப்பழம்** *kottai-y-ilā-p-palam,* பெ.(n.) 1. விதையில்லாத பழம்; seedless fruit. 2. விதையில்லாத பிடுக்கு; indicating scrotum deprived of testicles which lie concealed in the abdomen (சா.அக.).

*[கொட்டை + இல்லா + பழம்.]*

**கொட்டையிலாமுந்திரி** *kottai-y-ilā-mundiri,* பெ.(n.) விதையில்லாக் கொடிமுந்திரி (திராட்சை); seedless raisin (சா.அக.).

மறுவ. கிசுமிசுப்பழம்.

*[கொட்டை + இல்லா + முந்திரி.]*

**கொட்டையிலான்** *kottai-y-ilāṉ,* பெ.(n.) விதை யில்லான்; one deprived of testicles (சா.அக.).

*[கொட்டை + இல்லான்.]*

**கொட்டையிலை** *kottai-y-ilai,* பெ.(n.) ***கொட்டைக் கரந்தை*** (சங்.அக.) பார்க்க; see *kottai-k-karandai.*

*[கொட்டை + இலை.]*

**கொட்டையீனம்** *kottai-y-īnam,* பெ.(n.) விதை பிடுக்கினுள் இறங்காமை; a condition in which the testicles have not descended into the scrotum (சா.அக.) (கொ.வ.).

*[கொட்டை + ஊனம் – கொட்டையூனம் → கொட்டையீனம்.]*

**கொட்டையீனன்** *kottai-y-iṉaṉ,* பெ.(n.) பிடுக்கில் கீழிறங்காது மேலேறி நிற்கும் விதையுள்ளவன்; one in whom the testicles fails to descend into the scrotum (சா.அக.).

*[கொட்டை + (ஊனன்) ஈனன்.]*

**கொட்டையூர்** *kottai-y-ūr,* பெ.(n.) தஞ்சைமாவட்டம், கும்பகோணம் அருகே அமைந்துள்ள ஓர் ஊர்; a village situated near Kumbakonam in Thanjavur Dt.

*[கொட்டை + ஊர்.]*

ஆமணக்குக் கொட்டை மிகுதியாக விளைந்துள் ளமையால் இப் பெயர் பெற்றதாம். அவ்வூரில் அமைந்துள்ள திருக்கோயிலின் காவஞ் [தல] மரம் ஆமணக்குச் செடி. சிவக் கொழுந்து தேசிகர் வாழ்ந்த ஊர் என்பது குறிப்பிடத்தக்கது [த.நா.ஊ.பெ.].

**கொட்டையெடு-த்தல்** *kottai-y-edu-,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. பேடியாக்கல்; making effeminate by depriving virility - emasculating (சா.அக.). 2. முந்திரி மரத்தினின்று கொட்டைகளை எடுத்தல்; to reap the cashewnut. 3. புளிபோன்ற பழங்களிலிருந்து கொட்டையை நீக்குதல்; to remove the nut as of tamarind.

*[கொட்டை + எடு-.]*

**கொட்டைவலி** *kottai-vali,* பெ.(n.) விதையில் ஏற்படும் வலி; pain of the testicles (சா.அக.).

*[கொட்டை + வலி.]*

**கொட்டைவாங்கு-தல்** *kottai-vāṅgu-,* 5 செ. குன்றாவி. (v.t.) ஆடு மாடுகளுக்கு விதையடித்தல்; castration (சா.அக.).

*[கொட்டை + வாங்கு-.]*

**கொட்டைவாழை** *kottai-vālai,* பெ.(n.) கொட்டை மிகுந்திருத்தலால் உண்ண உதவாத கனியுடைய வாழை வகை (இ.வ.); a kind of plantain yielding stony fruit, not edible.

*[கொட்டை + வாழை.]*

**கொட்டைவீக்கம்** *kottai-vikkam,* பெ.(n.) விதை பருத்துக் காணல்; enlargement of the testicles (சா.அக.).

*[கொட்டை + வீக்கம்.]*

**கொட்பாட்டன்** *kot-pāttan,* பெ.(n.) ***கொள்ளுப் பாட்டன்*** பார்க்க; see *kollu-p-pāttan.*

*[கொள் + பாட்டன் → கொட்பாட்டன்.]*

**கொட்பு**[1] *kotpu,* பெ.(n.) 1. சுழற்சி; whirling, revolving. *"கொட்புறு கலினப் பாய்மா"* (கம்பரா. மிதிலை. 13). 2. சுற்றித்திரிகை (திவா.); wandering, rambling, going about. 3. மனச்சுழற்சி (சீவக. 540, உரை); perturbation, agitation. 4. நிலையின்மை; inconstancy, instability. *"கொட்பின்றி யொல்லும்வா யூன்றும் நிலை"* (குறள், 789). 5. வளைவு (வின்.); curve, bend.

*[கொள் → கொட்பு.]*

**கொட்பு**[2] *kotpu,* பெ.(n.) கருத்து; intention, idea. *"கூட வைக்கும் கொட்பின ளாகி"* (மணிமே. 21, 77).

*[கொள் → கொட்பு.]*

**கொட்பூ** *kotpū,* பெ.(n.) ஒருவகைக் காதணி (கல்.அக.); ear jewel.

*[கொள் → கொட்பு.]*

இது மேற்காதில் அணியப்படும் பூ வடிவினதான காதணி.

**கொட்பேரன்** *kot-pēran,* பெ.(n.) ***கொள்ளுப்பேரன்*** பார்க்க; see *kollu-p-pēran. "பிரமதேவனுக்குக் கொட்பேரன்" (இராமநா. ஆரணி.19).*

*[கொள்ளுப்பேரன் → கொட்பேரன்.]*

**கொடகம்** *kodagam,* பெ.(n.) ***குறிஞ்சா*** (L.) பார்க்க; see *kuriñjā.*

*[குடகம் → கொடகம்.]*

**கொடகன்** *kodagan,* பெ.(n.) ஒரு புளி; Malabar gamboge (சா.அக.).

*[கோட்டகன் → கொடகன்.]*

**கொடகு** *kodagu,* பெ.(n.) குடகுமொழி, கருநாடக மாநிலம் குடகு மாவட்டத்தில் 80,000 மக்கள் பேசிவரும் திருந்திய திராவிட மொழி; a Dravidian language spoken by 80,000 people in Coorg Dt. of Karnataka State.

*[குடகு → கொடகு (கொ.வ.).]*

**கொடகுத்துவா** *koda-kuttuvā,* பெ.(n.) ***கோடகத்துவா*** பார்க்க; see *kōda-kattuvā.*

*[கோடு + கத்துவாய் - கோடகத்துவாய் → கோடகத்துவா → கொடகத்துவா (கொ.வ.)]*

**கொடகொடப்பு** *koda-kodappu,* பெ.(n.) ஒலிக் குறிப்புச் சொல்; onom.expression.

*[கொட + கொடப்பு.]*

**கொடட்டி** *kodatti,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanada puram Dt.

*[கோடு + (பட்டி) அட்டி → கோடட்டி → கொடட்டி.]*

**கொடப்பட்டினம்** *koda-p-pattinam,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanjipuram Dt.

*[குட → கொட + பட்டினம்.]*

**கொடமநல்லூர்** *kodama-nallūr,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvallur Dt.

*[குடவன் → குடமன் → கொடமன் + நல்லூர்.]*

**கொடமாண்டப்பட்டி** *kodamānda-p-patti,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[குட → கொட + மாண்டன் + பட்டி.]*

**கொடரிச்சட்டி** *kodari-c-catti,* பெ.(n.) எழுத்தாணி போன்ற பூவுள்ள ஒருவகைப் பூண்டு; style plant, having a style - like flower (சா.அக.).

**மறுவ:** கொடரி, எழுத்தாணிக்கூர், எழுத்தாணிப் பூண்டு, எழுத்தாணிப் பச்சிலை, எழுத்தாணிப் பச்சை, கடற்கொழுப்பை.

*[கோடரி → கொடரி + சட்டி.]*

**கொடலி** *kodali,* பெ.(n.) பிறந்தமேனி; nudity (சா.அக.).

*[கோடி = ஆடை. கோடி + இலி – கோடிலி → கொடலி.]*

**கொடவப்புரசு** *kodava-p-puraśu,* பெ.(n.) குடவப் புரசு; East Indian stain wood (சா.அக.).

**மறுவ.** கரும்புரசு.

*[குடவம் + புரசு.]*

**கொடவர்** *kodavar,* பெ.(n.) கோயிற் கொத்துகளுள் ஒரு பிரிவினர்; a class of temple - servants *"கொடவர் கொடுவா ளெடுப்பார்" (கோயிலொ. 44).*

*[குடவர் → கொடவர்.]*

**கொடவண்டி** *koda-vandi,* பெ.(n.) வண்டி குடை சாய்கை; to be upset as a cart, to be overturned. கொடவண்டி தூக்கிப் போட்டு அவனுக்குப் பெரிய காயம் (நெல்லை.).

*[குடை (குடைசாய்ந்த) → கொட + வண்டி (கொ.வ.).]*

**கொடவாகம்** *koda-vāgam,* பெ.(n.) வெண் தோன்றி; November flower plant (சா.அக.).

**மறுவ.** கொசாலகம்.

*[குடவாகம் → கொடவாகம்.]*

**கொடவான்** *kodavān,* பெ.(n.) கொத்துமல்லியைத் தாக்கும் ஒருவகை நோய்; a disease attacking coriander plant.

*[கொடுவன் → கொடவான்.]*

**கொடவிளாகம்** *koda-vilāgam,* பெ.(n.) நாகைச் சிற்றூர்; a village in Nagai Dt.

*[குட → கொட + விளாகம்.]*

**கொடா** *kodā,* பெ.(n.) நச்சுவித்துகளைக் கொண்ட மரம்; nux - vomica tree (சா.அக.).

**மறுவ.** எட்டி.

*[கொடு → கொடவு → கொடா.]*

**கொடாக்கண்டன்** *kodā-k-kandan,* பெ.(n.) சிறிதும் ஈயாத இவறன் (கொ.வ.); confirmed miser, as stubborn in refusing to give, opp. to *vidākkandan* (சா.அக.).

*[கொடா(த) + கண்டன்.]*

**கொடாரி** *kodāri,* பெ.(n.) கோடரி; axe. *"கிளையைச் சாடுங் கொடாரியின் காம்பு போன்றாய்"* (பிரபோத. 2, 28).

*[கோடரி → கொடாரி.]*

**கொடாவி** *kodāvi,* பெ.(n.) நாயுருவி; Indian - burr (சா.அக.).

*[கொறுவி → கொடுவி → கொடாவி.]*

**கொடி**[1] *kodi,* பெ.(n.) 1. படர்கொடி; creeper, climber, *"நுடங்குகொடி மருங்கின்" (பெருங். உஞ்சைக். 41: 80).* 2. ***சித்திரமூலம்*** (மூ.அக.) பார்க்க; see *cittira-mūlam.* 3. ஆடை உலர்த்துங் கொடி; clothes - line, clothes post. 4. கொப்பூழ்க் கொடி; umbilical cord.

**ம., தெ., து., குட.** கொடி; **க.** குடி; **கோத.** கொட்ய்; **கோண்.** கொட்டி; **மா.** க்வொரு; **பட.** குடி.

*[கொடு → கொடி = வளைந்து படரும் நிலைத்திணை வகை (வ.மொ.வர.7.) (வே.க.167).]*

**கொடி**[2] *kodi,* பெ.(n.) 1. மகளிர் கழுத்தணி வகை; gold string or chain for women's neck. *"மென்றோட் கொடியென" (பெருங். உஞ்சைக். 41:71).* 2. அரை ஞாண் (S.I.I.II, 5); gold or silver thread worn round a person's waist. 3. ஏற்றத்தின் கோல் அல்லது கயிறு (வின்.); rope or pole of a well - sweep. 4. கண்வரி முதலியன (வின்.); fine streaks of red capillary veins, as in the eye.

*[கொடு → கொடி.]*

**கொடி**[3] *kodi*, பெ.(n.) 1. ஒழுங்கு; orderliness. *"கருங்கொடிப் புருவம்"* (சீவக. 658). 2. நீளம்; length. *"பழன வெதிரின் கொடிப்பிணை யலளே"* (ஐங்குறு. 91.). 3. சிறு கிளைவாய்க்கால் (இ.வ.); a small branch channel. 4. ஏரியிலிருந்து வழியும் நீரைக் கொண்டு செல்லும் வாய்க்கால் (W.G.); a channel for carrying off the surplus water of a reservoir.

*[கொடு → கொடி.]*

**கொடி**[4] *kodi*, பெ.(n.) 1. துணிக்கொடி, பதாகை; banner, flag, standard, streamer. *"கொடியுங் கவரியும்"* (பெருங். உஞ்சை. 57:57.). 2. காற்றாடி (யாழ்ப்.); kite, paper-kite. 3. காலக்கொடி என்னும் ஓகம்; Yama's ensign, an inauspicious yoga. *"பிரம தண்டங் கொடியென்று பொல்லா யோகங்கள்" (விதான. குணாகுண. 34).* 4. காக்கை; crow. *"நல சேட்டைக் குலக்கொடியே" (திருக்கோ. 235).* 5. கீழ்த்திசை; east. *"கொடிக்கொண்ட கோடையால்" (கலித். 150:15).* 6. கொடியடுப்பு; side - oven. கொடி யெரிகிறதா? 7. பறவை (அவிட்டம்) என்னும் 23ஆவது உடு; the 23rd *naksatra*.

*[கொடு → கொடி.]*

**கொடி**[5] *kodi*, பெ.(n.) கட்டுகயிறாகப் பயன்படுத்தும் நாற்றுச் சோளப்பயிர் அல்லது நனையப் போட்ட கேப்பைத் தாள்; stalk of certain crops used to bind the bundle.

*[குல் → குள் → குடு → கொடு → கொடி.]*

**கொடிக்கச்சி** *kodi-k-kacci*, பெ.(n.) கழற்சிக் கொட்டைச் செடி அல்லது கெச்சக்காய்ச் செடி; eagle stone creeper or nicker tree (சா.அக.).

*[கொடி + கச்சி.]*

**கொடிக்கச்சீருகம்** *kodikka-c-cirugam*, பெ.(n.) பொடுதலை; creeping vervain (சா.அக.).

*[கொடி + கச்சீருகம்.]*

**கொடிக்கத்தரி** *kodi-k-kattari*, பெ.(n.) நீண்ட கத்தரிக்காய்; a species of long brinjal. cf. கண்டங்கத்தரி (சா.அக.).

*[கொடி + கத்தரி.]*

**கொடிக்கப்பல்** *kodi-k-kappal*, பெ.(n.) கொடிகட்டிய சிறுமரக்கலம் (இ.வ); galley or cruiser flying a pennon.

**ம.** கொடிக்கப்பல்.

*[கொடி + கப்பல்.]*

**கொடிக்கம்பம்** *kodi-k-kambam*, பெ.(n.) கோயில்களின் முன்புறம் கொடியேற்றுவதற்காக நடும் மரம்; flag staff in a temple. *"திருக்கொடிக் கம்பத்திலே" (கோயிலொ. 73).*

**மறுவ.** கொடிமரம்.

*[கொடி + கம்பம்.]*

**கொடிக்கயிறு**[1] *kodi-k-kayiru*, பெ.(n.) 1.வீணாத் தண்டின் நடுவில் ஓடும் கயிறு போன்ற அமைப்பு; the cord-like structure passing through the spinal channel and extending from the brain. 2. இடுப்பில் கட்டிக்கொண்டு மீன்பிடி வலையினை இழுக்க உதவும் கயிறு; the rope used for pulling out the fishing net by tying with hip (மீ.பிடி.தொ.).

*[கொடி + கயிறு.]*

**கொடிக்கயிறு**[2] *kodi-k-kayiru*, பெ.(n.) 1. முறுக் கேறின கயிறு; well-twined rope. *"கொடிக் கயிற் றொடுங் கொணர்ந்தனர்" (உபதேசகா. சிவநாம. 155.).* 2. கொடியாகக் கட்டுங்கயிறு; rope used as a clothes-line. 3. கொடியேற்ற, இறக்கப் பயன்படும் கயிறு; rope used to hoist or lower flags.

**ம.** கொடிக்கயிறு.

*[கொடி + கயிறு.]*

**கொடிக்கருக்கு** *kodi-k-karukku*, பெ.(n.) வாயில் நிலைகள், தூண்கள் போன்றவற்றில் செய்யப்படும் சிற்பவேலைப்பாடு; decorative workmanship of architectural things in pillars and door frames (சா.அக.).



கொடிக்கருக்கு

*[கொடி + கருக்கு.]*

**கொடிக்கருணை** *kodi-k-karunai*, பெ.(n.) கருணை வகை (இ.வ.); a tuberous-rooted plant.

*[கொடி + கருணை.]*

**கொடிக்கரும்பு** *kodi-k-karumbu,* பெ.(n.) நேராக வளர்ந்த கரும்பு; straight sugarcane. "*கொடிக்கரும் புடுத்த வேலி*" (சீவக. 1184).

*[கொடி + கரும்பு.]*

**கொடிக்கருவேல்** *kodi-k-karuvēl,* பெ.(n.) கருவேலன் கொடி; babool creeper (சா.அக.).

*[கொடி + கருவேல்.]*

**கொடிக்கல்** *kodi-k-kal,* பெ.(n.) சர்க்கரைவள்ளி; sweet potato creeper - Dioscorea sative (சா.அக.).

*[கொடி + கல்.]*

**கொடிக்கவி** *kodi-k-kavi,* பெ.(n.) தில்லையிலுள்ள கோயிலிற் கொடியேறும்படி உமாபதி சிவாசாரி யாரால் இயற்றப்பெற்றதும், மெய்கண்டசாத்திரம் பதினான்கனுள் ஒன்றுமான சைவ சமய நூல்; a short treatise on the šaiva-siddhanda philosophy, by Umāpati-šivaccariyar, one of 14 Mey-kanda-cāttiram q.v., believed to have been composed for raising the temple flag at Chidambaram.

*[கொடி + கவி.]*

**கொடிக்கழல்** *kodi-k-kalal,* பெ.(n.) ***கழற்சி*** பார்க்க; see *kalarci.*

**ம.** கொடிக்கழல்.

*[கொடி + கழல்.]*

**கொடிக்கழற்சி** *kodi-k-kalarcci,* பெ.(n.) கழற்சிக் கொடி; a creeper of two spicies.

**மறுவ.** கழற்கொடி.

*[கொடி + கழற்சி.]*

**கொடிக்கள்ளி** *kodi-k-kalli,* பெ.(n.) 1. கொடிவகை; moon-creeper. 2. கள்ளிவகை; beak-flowered creeping milk-hedge. "*கொடிக்கள்ளிப் பாலுக்குக் கூறு*" (*பதார்த்த. 124).*

*[கொடி + கள்ளி.]*

**கொடிக்காக்கட்டான்** *kodi-k-kākkattān,* பெ.(n.) காக்கட்டான் வகை; sky-blue bindweed.

*[கொடி + காக்கட்டான்.]*

**கொடிக்காசரை** *kodi-k-kāšarai,* பெ.(n.) கொடிக் காசரை; a kind of edible greens (சா.அக.).

*[கொடி + காசரை.]*

**கொடிக்காசினி** *kodi-k-kāšini,* பெ.(n.) 1. மல்லிகை; Arabian jasmine. 2. படர்மல்லிகை; large - flowered jasmine (சா.அக.).

*[கொடி + காசினி.]*

**கொடிக்காய்** *kodi-k-kāy,* பெ.(n.) கொடிகளில் காய்க்கும் மருத்துவத்திற்குரிய காய்கள்; the vegetables useful to medicine. கீழ்க்காணும் கொடிகளில் காய்க்கும் காய்கள்.

*[கொடி + காய்.]*

**வகைகள்:** 1. கலியாணப் பூசணிக்காய். 2. பறங்கிக் காய். 3. குமட்டிக்காய். 4. சுரைக்காய். 5. வெள்ளரிக்காய். 6. கொட்டையவரைக்காய். 7. மொச்சைக்காய். 8. பீர்க்கங்காய். 9. புடலங்காய். 10. பாகற்காய். 11. அதளங்காய். 12. தூதுளங்காய். 13. கொடிவழுதுளங் காய். 14. பயற்றங்காய். 15. கோவைக்காய். 16. மிளகுகாய் (சா.அக.).

**கொடிக்கால்**[1] *kodi-k-kāl,* பெ.(n.) 1. வெற்றிலைக் கொடி படருங் கொம்பு (வின்.); stake or stick set to support the betel creeper. 2. வெற்றிலை (மலை.); betel. 3. வெற்றிலைத்தோட்டம்; betel garden. 4. காய்கறித்தோட்டம் (இ.வ.); vegetable garden. 5. கொடிக்கம்பம்; flagstaff of a temple. "*கோயிலின் முன்னுற்ற கொடிக்காலை*" (*தனிப்பா. 1:361:98).*

**ம.** கொடிக்கால்.

*[கொடி + கால்.]*

**கொடிக்கால்**[2] *kodi-k-kāl,* பெ.(n.) வெற்றிலை பயிரிடும் நிலம்; land where betal is grown. "*அக்கவி மூலையில் கொடிக்கால் கிணறும்*" (நத்தம். *ஆய்வேடு. ப.174–24).*

*[கொடி + கால்.]*

**கொடிக்கால்கத்தரி** *kodikkāl-kattari,* பெ.(n.) 1. கருங்கொடிக் கத்தரி; a species of black brinjal. 2. வெற்றிலைத் தோட்டத்தில் பயிராகும் கத்தரி; brinjal cultivated in betel-vine yard (சா.அக.).

*[கொடிக்கால் + கத்தரி.]*

**கொடிக்கால்மரம்** *kodikkāl-maram,* பெ.(n.) அகத்திமரம்; sesbane tree (சா.அக.).

*[கொடிக்கால் + மரம்.]*

**கொடிக்கால்மூலை** *kodikkāl-mūlai,* பெ.(n.) 1. வெற்றிலைத் தோட்டமுள்ள திசை; lit., betel-garden quarter. 2. ஊரின் வடமேற்கு மூலை; the north-west corner of a village. கொடிக்கால் மூலையில் மின்னினால் உறுதியாய் மழைவரும் (இ.வ.).

*[கொடிக்கால் + மூலை.]*

**கொடிக்கால்வேளாளன்** *kodi-k-kāl-vēlālan,* பெ.(n.) கொடிக்காற் பயிர் செய்யும் வேளாள

cultivating betel.

*[கொடிக்கால் + வேளாளன்.]*

**கொடிக்காற்கீரை** *koḍikkāṟ-kīrai*, பெ.(n.) அகத்திக்கீரை; sesbane leaves used as edible greens (சா.அக.).

*[கொடிக்கால் + கீரை.]*

**கொடிக்கிழங்கு** *koḍi-k-kiḻaṅgu*, பெ.(n.) கொடியின் அடியில் விளையும் கிழங்கின் வகை; the several varieties of medicinal and esculent bulbous roots under the stem of creepers.

*[கொடி + கிழங்கு.]*

கொடிக்கிழங்கு வகைகள்: 1. சீந்திற் கிழங்கு 2. கருடன் கிழங்கு 3. கூகைக்கிழங்கு 4. புளிநரளைக் கிழங்கு 5. மாகாளிக்கிழங்கு 6. தண்ணீர்விட்டான் கிழங்கு 7. தாமரைக் கிழங்கு 8. செவ்வல்லிக்கிழங்கு 9. நெய்தற் கிழங்கு 10. செங்கழுநீர்க்கிழங்கு; 11. கொட்டிக்கிழங்கு 12. பூமி சருக்கரைக் கிழங்கு 13. சருக்கரைவள்ளிக்கிழங்கு 14.கருணைக் கிழங்கு 15. நிலப்பனைக் கிழங்கு 16. மரவள்ளிக்கிழங்கு (சா.அக.).

**கொடிக்கிழிவு** *koḍi-k-kiḻivu*, பெ.(n.) பெண்கள் கொடி மூலத்தில் கருவுயிர்த்தலால் உண்டாகும் பிளவு; laceration of the perineum (சா.அக.).

*[கொடி + கிழிவு.]*

**கொடிக்குலி** *koḍi-k-kuli*, பெ.(n.) நூலாஞ்செடி; common cherry nutmeg (சா.அக.).

*[கொடி + குலி.]*

**கொடிக்குளம்** *koḍi-k-kuḷam*, பெ.(n.) மதுரைத் தெற்கு மாவட்டத்தில் அமைந்த ஓர் ஊர்; a village situated south of Madurai.

*[கோடி + குளம் – கோடிக்குளம் → கொடிக்குளம்.]*

ஆனைமலையின் ஒரு கோடியில் இவ்வூர் அமைந்திருப்பதால் முதலில் கோடிக்குளம் என்று பெயர்பெற்று நாளடைவில் கொடிக்குளம் என மருவி வந்ததாம் (த.நா.ஊ.பெ.).

**கொடிக்குறிஞ்சா** *koḍi-k-kuṟiñjā*, பெ.(n.) சிறு குறிஞ்சா; small Indian ipecacuanha; a climber (சா.அக.).

*[கொடி + குறிஞ்சா.]*

**கொடிக்கூடை** *koḍi-k-kūḍai*, பெ.(n.) 1. நாணற் கூடை (வின்.); wicker-basket. 2. கட்டுக் கொடியாலான கூடை; a basket made of binding creeper.

*[கொடி + கூடை.]*

**கொடிக்கூந்தல்** *koḍi-k-kūndal*, பெ.(n.) 1. கொடிகளில் மயிர்க்கூந்தல் போலிருக்கும் ஒரு திரட்சி; a slender turining growth by which a plant attaches itself to something for support. 2. அம்மையார் கூந்தல்; sister's thread.

மறுவ. கொடியார் கூந்தல்.

*[கொடி + கூந்தல்.]*

**கொடிக்கெண்டை** *koḍi-k-keṇḍai*, பெ.(n.) ஒரு வகைக் கெண்டைமீன்; a kind of fish (மீ.பிடி.தொ.).

*[கொடி + கெண்டை.]*

**கொடிக்கையான்** *koḍi-k-kaiyāṉ*, பெ.(n.) கையாந்தகரை வகை (வின்.); a plant growing in wet places.

*[கொடி + கையான்.]*

**கொடிக்கொத்தான்**[1] *koḍi-k-kottāṉ*, பெ.(n.) 1. முடக்கொத்தான்; palsy curer. 2. கொத்தான்; green thread creeper (சா.அக.).

*[கொடி + கொத்தான்.]*

**கொடிக்கொத்தான்**[2] *koḍi-k-kottāṉ*, பெ.(n.) ***கொற்றான்*** பார்க்க; see *koṟṟāṉ*.

*[கொடி + கொத்தான்.]*

**கொடிகட்டிநில்-தல்(கொடிகட்டி நிற்றல்)** *koḍi-kaṭṭi-nil-*, 14 செ.கு.வி.(vi.) 1. ***கொடிகட்டு***[1,2] பார்க்க; see *koḍi-kaṭṭu-*. 2. உறுதிப்பாட்டுடன் முயற்சியை மேற்கொள்ளுதல்; to set about a thing with the utmost zeal and promptness. 3. நோயாளி முதலியோர் கயிற்றைப் பிடித்துக்கொண்டு நிற்றல் (யாழ்ப்.); to stand by, holding a rope attached to a beam, as a woman in labour, a sick person etc.

*[கொடிகட்டி + நில்-.]*

**கொடிகட்டிப்பற-த்தல்** *koḍi-kaṭṭi-p-paṟa-*, 3 செ.கு.வி. (v.i.) மிகுந்த செல்வாக்கோடு வாழ்தல்; to live in great prosperity, flourish.

*[கொடி + கட்டி + பற-.]*

**கொடிகட்டிவாழ்-தல்** *koḍi-kaṭṭi-vāḻ-*, 3 செ.கு.வி. (v.i.) மிகுந்த செல்வ வாழ்க்கையில் இருத்தல் (கொ.வ.); to live in great prosperity.

*[கொடிகட்டி + வாழ்-.]*

**கொடிகட்டு-தல்** *koḍi-kaṭṭu-*, 5 செ.கு.வி (v.i.) 1. ***கொடியெடுத்தல்,*** பார்க்க; see *koḍi-y-eḍu-*, 2. போருக்குவருதல்; to declare hostility,

challenge. 3. ***கொடியேற்று-தல்,*** பார்க்க; see *kodi-y-ērru-.*

*[கொடி + கட்டு-.]*

**கொடிகம்** *kodigam,* பெ.(n.) ஒருவகை வெந்தயம்; horse-shoe fenugreek (சா.அக.).

*[கொடு → கொடுகம் → கொடிகம்.]*

**கொடிகிழிதல்** *kodi-kili-,* பெ.(n.) கருவுயிர்த்தலில் பெண்களுக்குக் கொடிமூலம் பிளத்தல்; laceration of the perineum (சா.அக.).

*[கொடி + கிழி-.]*

**கொடிங்கியம்** *kodingiyam,* பெ.(n.) கோவை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kovai Dt.

*[கொடிங்கு → கொடிங்கியம்.]*

**கொடிச்சண்பகம்** *kodi-c-canbagam,* பெ.(n.) ***கொடிச்சம்பங்கி*** (வின்.) பார்க்க; see *kodi-c-cambangi.*

*[கொடி + சண்பகம்.]*

**கொடிச்சம்பங்கி** *kodi-c-cambangi,* பெ.(n.) கொடிவகை; creeper champak.

மறுவ. காமப்பூ.

*[கொடி + சம்பங்கி.]*

**கொடிச்சல்லிமூலம்** *kodi-c-calli-mūlam,* பெ.(n.) 1. நஞ்சுக்கொடி; umbilical cord. 2. குடல்; intestines (சா.அக.).

*[கொடி + சல்லி + மூலம்.]*

**கொடிச்சாறு** *kodi-c-cāru,* பெ.(n.) 1. சிறுபிள்ளையின் சிறுநீர்; boy's or girl's urine. 2. மாதவிலக்கு; menstrual blood. 3. பெண் காமநீர்; semen muliebre (சா.அக.).

*[கொடி + சாறு.]*

**கொடிச்சி**[1] *kodicci,* பெ.(n.) 1. தண்ணீரைக் கட்டும் கொடி; water bounding plant. 2. காவட்டம்புல்; citronella grass. 3. சித்திரமூலம்; Ceylon leadwort. 4. புற்றாஞ்சோறு; burrow of white-ants. 5. இரத்த நஞ்சு; a poisonous substance in blood. 6. குண்டுமணி; crab's eye. 7. மூவிலைக் குருந்து; three-leaved spring creeper. 8. குறிஞ்சி நிலத்துப் பெண்; a woman inhabiting a hilly tract. *"கொடிச்சி காக்கும் பெருங்குர லேனல்" (ஐங்குறு. 296).* 9. கன்னம்; cheek. 10. தாடை; jaw. 11. வெண்மை; whiteness (சா.அக.).

*[கொடி → கொடிச்சி.]*

**கொடிச்சி**[2] *kodicci,* பெ.(n.) 1. குறிஞ்சிநிலத்துப் பெண்; woman of the hilly tract. 2. ***கொடுவேலி*** (மலை.) பார்க்க; see *kodu-vēli,* Ceylon leadwort. 3. ***காமாட்சிப்புல்***[2] பார்க்க; see *kāmātci-p-pul* (வே.க.167.).

ம., தெ., து. கொடி.

*[கொடி → கொடித்தி → கொடிச்சி (கொடி - நுனி, மலைமுகடு).]*

**கொடிச்சி**[3] *kodicci,* பெ.(n.) கொடிறு (சங்.அக.); jaws, mandibles.

*[கொடி → கொடிச்சி]*

**கொடிச்சி**[4] *kodicci,* பெ.(n.) ***கொடிச்சை*** பார்க்க; see *kodiccai.*

*[கொடி → கொடிச்சி]*

**கொடிச்சிங்கேரி** *kodi-c-cingēri,* பெ.(n.) கருடக்கொடி (சித்.அக.); Indian birthwort.

*[கொடி + சிங்கேரி.]*

**கொடிச்சித்தாமரை** *kodicci-t-tāmarai,* பெ.(n.) நீலத்தாமரை (சித்.அக.); blue nelumbo.

*[கொடிச்சி + தாமரை.]*

**கொடிச்சிதம்** *kodiccidam,* பெ.(n.) கொடிவேல்; American sumech (சா.அக.).

*[கொடிச்சி → கொடிச்சிதம்.]*

**கொடிச்சியர்** *kodicciyar,* பெ.(n.) குறிஞ்சிநிலப் பெண்கள்; women in the land of forecters, mountainers.

*[கொடிச்சி + அர்.]*

**கொடிச்சிவால்** *kodicci-vāl,* பெ.(n.) நுனி வெண்மையான பசுவின் வால் (யாழ்ப்.); cow's tail white at the tip.

*[கொடிச்சி + வால்]*

**கொடிச்சிவாலி** *kodicci-vāli,* பெ.(n.) நுனி வெளுத்த வாலுள்ள பசு (யாழ்ப்.); cow with tail white at the tip.

*[கொடிச்சி + வாலி.]*

**கொடிச்சீத்தல்** *koḍi-c-cīttal,* பெ.(n.) கொடிவேல்; American sumach (சா.அக.).

*[கொடி + சீத்தல்.]*

**கொடிச்சீத்தா** *koḍi-c-cīttā,* பெ.(n.) சீத்தாக்கொடி; custard apple creeper (சா.அக.).

*[கொடி + சீத்தா.]*

**கொடிச்சீலை** *koḍi-c-cīlai,* பெ.(n.) 1. கொடியின் செண்டா; pennon, flag. 2. சித்திரப்படாம்; variegated painted cloth. 3. துகிற்கொடி; flag, banner as a badge of honour.

மறுவ. விருதுக்கொடி.

*[கொடி + சீலை.]*

**கொடிச்சூரை** *koḍi-c-cūrai,* பெ.(n.) சூரைவகை (வின்.); creeper species of jujube.

*[கொடி + சூரை.]*

**கொடிச்செங்கழற்சி** *koḍi-c-ceṅgaḻaṟci,* பெ.(n.) சிவப்புக் கழற்சிக்கொடி; red bondue creeper (சா.அக).

*[கொடி + செம்மை + கழற்சி.]*

**கொடிச்சேணி** *koḍi-c-cēṇi,* பெ.(n.) பெருந்தக்காளி; cape gooseberry (சா.அக).

*[கொடி + சேணி.]*

**கொடிச்சை** *koḍiccai,* பெ.(n.) 1. கன்னம்; cheek. 2. தாடை; jaw.

ம. கொடிஞ்ஞு.

*[கொடி → கொடிச்சை]*

**கொடிசிலடக்கல்** *koḍišil-aḍakkal,* பெ.(n.) வாயிலடக்கல்; holding in the mouth as a pill (சா.அக.)

*[கொடிறு → கொடிசு + இல் + அடக்கல்.]*

**கொடிசு** *koḍišu,* பெ.(n.) கொடிறு; the joint of the jaw-bones (சா.அக.).

*[கொடிறு→ கொடிசு (கொ.வ.).]*

**கொடிசுற்றிப்பிற–த்தல்** *koḍi-šuṟṟi-p-piṟa-,* 3 செ.கு.வி. (v.i.) பெற்றோர்க்கும் தாய் மாமனுக்கும் தீங்குவிளைதற்கு அறிகுறியாகத் தொப்பூழ்க்கொடி சுற்றிக்கொண்டு குழந்தை பிறத்தல் (உ.வ.); to be born, as a child, with umbilical cord, around the neck, deemed ominous to parents and maternal uncle.

*[கொடி + சுற்றி + பிற–.]*

**கொடிசுற்று–தல்** *koḍi-cuṟṟu-,* 5 செ.கு.வி (v.i.) தொப்பூழ்க்கொடி குழந்தையைச் சுற்றிக்கொள்ளுதல்; umblical cord encircling the child.

*[கொடி + சுற்று–.]*

**கொடிசை** *koḍišai,* பெ.(n.) 1. கன்னம்; cheek. 2. நரம்பு; nerve.

மறுவ. துப்பு.

*[கொடிறு → கொடிசு → கொடிசை.]*

**கொடிஞ்சி** *koḍiñji,* பெ.(n.) 1. கைக்குதவியாகத் தேர்த்தட்டின் முன்னே நடப்பட்டுத் தாமரைப்பூ வடிவுள்ள அழகு பொதிந்த உறுப்பு; ornamental staff in the form of a lotus, fixed in front of the seat in a chariot and held by the hand as support. *"மணித்தேர்க் கொடிஞ்சி கையாற் பற்றி"* (மணிமே. 4:48.). 2. தேர்; car, chariot. *"கொய்யுளை கொடிஞ்சி குஞ்சரம்"* *(ஞானா. 7:18).*

*[கொடி - நுனி, முகடு. கொடி → கொடிஞ்சி (தேர் மொட்டு).]*

**கொடிஞ்சில்** *koḍiñjil,* பெ.(n.) ***கொடிஞ்சிற்பலகை*** பார்க்க; see *koḍiñjiṟ-palagai,*

*[கொடி → கொடிஞ்சில்.]*

**கொடிஞ்சிலடி–த்தல்** *koḍiñjil-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) கொடிஞ்சிற் பலகையால் ஆற்றுக்கால் தோண்டுதல்; to dredge a river - channel with a shovel.

*[கொடிஞ்சில் + அடி–.]*

**கொடிஞ்சிற்பலகை** *koḍiñjiṟ-palagai,* பெ.(n.) எருதுகளைக் கொண்டு ஆற்றுக்கால் தோண்டும் பலகை; large wooden shovel or scoop for dredging river-channels.

*[கொடிஞ்சில் + பலகை.]*

**கொடிஞாழல்** *koḍi-ñāḻal,* பெ.(n.) மயிர்க்கொன்றை; Barbados flower fence (சா.அக).

*[கொடி + ஞாழல்.]*

**கொடித்தக்காளி** *koḍi-t-takkāḷi,* பெ.(n.) தென்னமெரிக்க நாட்டைச் சார்ந்த தக்காளிவகை (மூ.அக.); tomato, pailing plant introduced from South America.

ம. கொடித்தக்காளி.

*[கொடி + தக்காளி.]*

**கொடித்தட்டு**[1] *koḍi-t-taṭṭu-,* பெ.(n.) காற்றாடிச் சண்டை (வின்.); competition with two kites to see which cuts the other's string.

*[கொடி + தட்டு.]*

**கொடித்தட்டு**[2]**–தல்** *koḍi-t-taṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நல்லபாம்பு கடித்தல்; to bite, as of cobra.

*[கொடி + தட்டுதல். கொடி அசைந்துபடுதல், கொடிபோன்ற பாம்புகடித்தல்]*

மொழித்துறையில் அவர் *[தமிழர்]* நாகரிகம் அடைந்திருப்பது போன்று பண்பாடும் அடைந்திருந்தனர். ஒன்றிற்கு இரண்டிற்குப் போதலை இடக்கரடக்கல் என்றும், சாதலைப் பெரும்பிறிது என்றும் நல்லபாம்பு கடித்தலைக் கொடித்தட்டல் என்றும் மங்கலவழக்காயும் கூறிவந்தனர் [பண். தமி. பண். நா.106].

**கொடித்தடக்கி** *koḍi-t-taḍakki,* பெ.(n.) 1. மரவகை (மூ.அக.); a tree. 2. நாய்க்காலின் மேல்விரல் (யாழ்.அக.); small projection near the toes of a dog.

*[ கொடி + தடக்கி.]*

**கொடித்தடம்** *koḍi-t-taḍam,* பெ.(n.) ஒற்றையடிப் பாதை (இ.வ.); footpath.

*[கொடி + தடம்.]*

**கொடித்தடுக்கல்** *koḍi-t-taḍukkal,* பெ.(n.) பாம்பு தீண்டல்; to bite as of cobra.

*[கொடி+ தடுக்கல்.]*

**கொடித்தடை** *koḍi-t-taḍai,* பெ.(n.) 1. கொடியால் உண்டாகுந் தடை; lit., prohibition by a stage. 2. கொடியேற்றியுள்ள திருவிழாக்காலத்தில் ஊர் விட்டு ஊர்செல்லக் கூடாதென்னுங் காப்புத்தடை; prohibition against travel during a temple-festival.

*[கொடி + தடை.]*

**கொடித்தண்டு** *koḍi-t-taṇḍu,* பெ.(n.) ***கொடிக்கம்பம்*** பார்க்க; see *koḍi-k-kambam,* *'கருடப்புள் ளெழுதிய கொடித்தண்டு' (சிலப். 11:136, உரை).*

*[கொடி + தண்டு.]*

**கொடித்தம்பட்டன்** *koḍi-t-tambaṭṭaṉ,* பெ.(n.) வாளவரை வகை; fat - podded sword-bean.

*[கொடி + தம்பட்டன்.]*

**கொடித்தம்பம்** *koḍi-t-tambam,* பெ.(n.) கொடி கட்டுந் தறி; a post for tying a flag.

*[கொடி + தம்பம்.]*

**கொடித்தரம்** *koḍi-t-taram,* பெ.(n.) 1. கதிரவன் தோன்றும்போது அல்லது மறையும்போது வானுச்சியில் தோன்றும் எட்டாம் நாள் நிலவு (வின்.); the waxing or waning moon in the 8th, sometimes also in the 7th or 9th phase, when it is in the meridian at sunrise or sunset.

*[கொடி + தரம்.]*

**கொடித்தாலி** *koḍi-t-tāli,* பெ.(n.) ***சரட்டுத்தாலி*** (இ.வ.) பார்க்க; see *caraṭṭu-t-tāli.*

*[கொடி + தாலி]*

**கொடித்தி** *koḍi-t-ti,* பெ.(n.) ***கொடிச்சி***[1] (தைலவ. தைல.17) பார்க்க; see *koḍicci.*

*[கொடிச்சி → கொடித்தி. கொடித்தி என்னும் சொல்லை கொடித்தீ என செ.அக. குறிப்பது தவறு.]*

**கொடித்திப்பிலி** *koḍi-t-tippili,* பெ.(n.) 1. திப்பிலிக் கொடி; pepper creeper. 2. சிறுதிப்பிலி; a small variety of pepper (சா.அக).

*[கொடி + திப்பிலி.]*

**கொடித்திருப்பாடகம்** *koḍi-t-tiru-p-pāḍagam,* பெ.(n.) ஒருவகைக் காலணி; a kind of shoe.

*[கொடி + திரு + பாடகம்]*

**கொடித்திரும்பு–தல்** *koḍi-t-tirumbu-,* 5 செ.கு.வி. (v.i.) கோள்கள் வானுச்சியைக் கடத்தல்; to pass the meridian, as the sun or other heavenly body. *"கொடித்திரும்பின உடனே"* (யாழ்ப்.).

*[கொடி + திரும்பு-.]*

**கொடித்தீ** *koḍi-t-tī,* பெ.(n.) சித்திரமூலம்; Ceylon leadwort (சா.அக.).

**மறுவ.** கொடிச்சி.

*[கொடித்து → கொடித்தி → கொடித்தீ (கொ.வ.).]*

**கொடித்துத்தி** *koḍi-t-tutti,* பெ.(n.) சிறுதுத்திவகை (வின்.); membranous carpelled evening - mallow.

*[கொடி + துத்தி.]*

**கொடித்தூண்** *koḍi-t-tūṇ,* பெ.(n.) கொடியோடும் வீணாத்தண்டு; the vertebaral column through which the spinal cord passes (சா.அக.).

*[கொடி + தூண்.]*

**கொடித்தோட்டம்** *koḍi-t-tōṭṭam,* பெ.(n.) மிளகு அல்லது வெற்றிலைத் தோட்டம்; pepper or betel grove.

ம. கொடித்தோட்டம்.

*[கொடி + தோட்டம்.]*

**கொடித்தோதிகம்** *kodi-t-tōdigam*, பெ.(n.) நீராரை; pseudoferuns marselia qudri-folia (சா.அக.).

*[கொடி + தோதிகம்.]*

**கொடிதினம்** *kodidinam*, பெ.(n.) ***கொடிநாள்*** பார்க்க; see *kodi-nāḷ*.

*[கொடி + தினம்.]*

**கொடிது** *kodidu*, பெ.(n.) கொடியது; that which is virulent, harsh. "*வறுமைகொடிது*".

*[கொடியது → கொடிது.]*

**கொடிதூக்கு-தல்** *kodi-tūkku-*, 5 செ.குன்றாவி. (v.t.) புணர்ச்சிக்காக உடையை உயர்த்துதல்; to lift a woman's cloth for the purpose of sexual inter course.

*[கொடி + தூக்கு]*

**கொடிநஞ்சுமாவு** *kodi-nañju-māvu*, பெ.(n.) நஞ்சுக்கொடி; umbilical cord (சா.அக.).

*[கொடி + நஞ்சு.]*

**கொடிநடு** *kodi-nadu*, பெ.(n.) கொடிக்கயிற்றின் நடுவே ஓடுவதாகச் சொல்லப்பட்ட ஓர் காணா பாதை; a subtte passage supposed to be running in the centre of the spinal cord (சா.அக.).

*[கொடி + நடு.]*

**கொடிநரம்பு** *kodi-narambu*, பெ.(n.) 1. மேலேழும்பிக் காணும் உடம்பின் பச்சை நரம்பு; veins seen prominent by raised above the surface of the body. 2. உடம்பில் கொடியைப்போற் படர்ந்து காணும் நரம்பின் கூட்டம்; spinal nerves with their ramifi-cations extending to several parts of the body. 3. உடம்பின் நடுப்பாகத்தில் இதயம், வயிறு, அடிவயிற்றுப்பகுதி ஆகியவற்றில் வலைபோற் காணப்படும் நரம்புக் கூட்டம்; the great net-work of nerves or veins upon the heart, about the stomach and other abdominal viscera (சா.அக.).

*[கொடி + நரம்பு.]*

**கொடிநாட்டியழை-த்தல்** *kodi-nāṭṭi-y-aḷai-*, 4 செ.கு.வி (v.i.) உயிர்ப்பிழைக்க கையை நீட்டிச் செய்கை மூலம் உதவி வேண்டுதல்; ask for some help by showing hands to save the life (மீ.பிடி.தொ.).

*[கொடி + நாட்டி + அழை-.]*

**கொடிநாய்** *kodi-nāy*, பெ.(n.) சோணங்கி நாய் (வின்.); grey-hound.

*[கொடி + நாய்.]*

**கொடிநாரத்தன்** *kodi-nārattaṉ*, பெ.(n.) ***கொடி நாரத்தை*** (அ.வை.ர.1667) பார்க்க; see *kodi-nārattai*.

*[கொடி + நாரத்தன்.]*

**கொடிநாரத்தை** *kodi-nārattai*, பெ.(n.) நாரத்தை வகை (சித்.அக.); a kind of citron.

*[கொடி + நாரத்தை.]*

**கொடிநாவல்** *kodi-nāval*, பெ.(n.) நாவல் வகை (வின்.); species of jambolanum.

*[கொடி + நாவல்.]*

**கொடிநாள்** *kodi-nāḷ*, பெ.(n.) முன்னாள் படைவீரர் மேம்பாட்டிற்காக நிதி திரட்டும் வகையில் குறிப்பிட்ட நாள்; flag day, observed to raise funds for ex-service men.

*[கொடி + நாள்.]*

முன்னாள் படைவீரர்களுக்கெனக் குறிப்பிடப்பட்ட முத்திரை அச்சிடப்பட்ட முத்திரைத்தாள், துணி முதலியன விற்கப்படும் நாள்.

**கொடிநாளம்** *kodi-nāḷam*, பெ.(n.) 1. பச்சை நரம்பு; vein. 2. காரிரத்தக்குழாய்களடங்கிய வலைபோன்ற கூட்டம்; a great net-work of veins (சா.அக.).

*[கொடி + நாளம்.]*

**கொடிநிம்பியம்** *kodi-nimbiyam*, பெ.(n.) வேர்க்கடலை; ground nut (சா.அக.).

*[கொடி + நிம்பியம்]*

**கொடிநிலை** *kodi-nilai*, பெ.(n.) 1. கடவுளர்தம் கொடிகளுள் ஒன்றனோடு அரசன் கொடியை உவமித்துப் புகழும் புறத்துறை (பு.வெ. 9,36); theme eulogising the king's flag as resembling that of Brahmā, Viṣṇu or Śiva. 2. கீழ்த்திசையில் நிலையாக எழுஞ்சூரியன்; the sun regularly rising in the east. "*கொடிநிலை கந்தழி வள்ளி*" (தொல். பொருள். 88).

*[கொடி = உச்சி. நுனிமேல் கதிரவனை உச்சிக்கிறான் என்பதை ஒப்பு நோக்குக. கொடி + நிலை.]*

**கொடிநெட்டி** *kodi-netti,* பெ.(n.) ***நீர்ச்சுண்டி*** (மலை.); பார்க்க; see *nir-c-cundi,* water mimosa.

*[கொடி + நெட்டி.]*

**கொடிநெல்லி** *kodi-nelli,* பெ.(n.) படர்நெல்லி; gooseberry creeper (சா.அக.).

*[கொடி + நெல்லி.]*

ஒரு காயசித்தி மூலி. சூதத்தை மணியாகப் பண்ணும்.

**கொடிநெல்வாயல்** *kodi-nel-vāyal,* பெ.(n.) திருவள்ளுர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tiruvallur Dt.

*[கொடிநெல்லி → கொடிநெல் + வாயல்]*

**கொடிநேத்திரிகம்** *kodi-nēttirigam,* பெ.(n.) பெருங்குன்றிமணி; a big variety of red bead vine (சா.அக.).

*[கொடி + நேத்திரிகம் (நேத்திரிகம் – வ.மொ. (விழி போல்) இருப்பதால் இப் பெயர் பெற்றிருக்கலாம்.]*

**கொடிநை** *kodinai,* பெ.(n.) சுண்டி; water mimosa (சா.அக.).

*[கொடி → கொடிநை.]*

**கொடிப்பசலை** *kodi-p-pašalai,* பெ.(n.) 1. மஞ்சட்செம்முள்ளி; common yellow nail-dye. 2. பசலைக்கொடி; spinach creeper. 3. சிறுபசலை; small - leaved Indian spinach (சா.அக.).

*[கொடி + பசலை.]*

**கொடிப்பசளை** *kodi-p-pašalai,* பெ.(n.) ***கொடிப் பசலை*** (இ.வ.) பார்க்க; see *kodi-p-pašalai.*

*[கொடி + (பசலை) பசளை.]*

**கொடிப்பட்டை** *kodi-p-pattai,* பெ.(n.) நீரிறைக்கும் ஓலைப்பட்டை (வின்.); *ōla*-bucket.

*[கொடி + பட்டை.]*

**கொடிப்படை** *kodi-p-padai,* பெ.(n.) சேனையின் முன்னணிப்படை; front rank of an army, van. *"கொடிப்படை போக்கிப் படிப்படை நிறீஇ" (பெருங். மகத. 24:39).*

**மறுவ.** தூசிப்படை (தூசு : துணிக்கொடி)

*[கொடி + படை.]*

**கொடிப்பந்தர்** *kodi-p-pandar,* பெ.(n.) கொடிகள் படர்ந்த பந்தல்; a power or shady retreat made of interwining creepers. *"எழுநிலை மாடமு மிடுகு கொடிப்பந்தரும்" (பெருங். இலாவாண. 15:11).*

*[கொடி + (பந்தல்) பந்தர்.]*

**கொடிப்பயறு** *kodi-p-payaru,* பெ.(n.) பயறுவகை (வின்.); a kind of pulse that puts forth tendrils.

*[கொடி + பயறு.]*

**கொடிப்பலாசம்** *kodi-p-palāšam,* பெ.(n.) கொடி முருக்கம்; species of palaus climber - Butea superba (சா.அக.).

*[கொடி + பலாசம்.]*

**கொடிப்பவழம்** *kodi-p-pavalam,* பெ.(n.) ***பவழம்*** பார்க்க; see *pavalam. "கொளுவொடு படாஅக் கொடிப்பவ ழத்து"* (பெருங். இலாவாண. 2:127).

*[கொடி + பவழம்.]*

**கொடிப்பவளம்** *kodi-p-pavalam,* பெ.(n.) பவளக்கொடி; brittle epidermis of the stem of coral.

*[கொடி + பவளம்.]*

**கொடிப்பவுத்திரம்** *kodi-p-pavuttiram,* பெ.(n.) குதத்திற்கும் குய்யத்திற்கும் நடுவே கொடிபோல் நீளமாக ஓடும் ஒருவகை மூலநோய்; a kind of fistula or opening near the line of perinellu communicating with the anus or rectum; a fistula through the premium into the anus (சா.அக.).

*[கொடி + பவுத்திரம்.]*

**கொடிப்பாகல்** *kodi-p-pāgal,* பெ.(n.) கொடியில் விளையும் பாகற்காய்; spiked bitter cucumber - Momondica charantia (சா.அக.).

*[கொடி + பாகல்.]*

**கொடிப்பாசி** *kodi-p-pāši,* பெ.(n.) நீர்ப்பாசிவகை (M.M. 668.); a kind of moss creeping upon water.

**மறுவ.** சுனைப்பாசி.

*[கொடி + பாசி.]*

**கொடிப்பாசூரி** *kodi-p-pāšūri,* பெ.(n.) நத்தைச்சூரி; bristly button weed (சா.அக.).

*[கொடி + பாசூரி.]*

**கொடிப்பாதை** *kodi-p-pādai,* பெ.(n.) ***கொடித்தடம்*** (இ.வ.) பார்க்க; see *kodi-t-tadam.*

*[கொடி + பாதை.]*

**கொடிப்பாலை** *kodi-p-pālai* பெ.(n.) 1. பாலைவகை (L.); greenwax-flower. 2. பாலையாழ்த்திறவகை (திவா.); an ancient secondary melody - type of the *pālai* class.

ம. கொடிப்பால.

*[கொடி + பாலை.]*

**கொடிப்பாவை** *kodi-p-pāvai* பெ.(n.) 1. ***காட்டுக் கொடி*** பார்க்க; see *kāttu-k-kodi*. 2. கொடியைப் போன்ற பெண்; a girl slender and wring like a creeper (சா.அக.).

*[கொடி + பாவை.]*

**கொடிப்பிணை** *kodi-p-pinai* பெ.(n.) வங்கமணல் (யாழ். அக.); lead ore.

*[கொடி + பிணை.]*

**கொடிப்பிணையல்** *kodi-p-pinaiyal* பெ.(n.) நீளப் புனையும் மாலைவகை; a kind of garland.

*[கொடி + பிணையல்.]*

**கொடிப்பிரட்டி** *kodi-p-piratti* பெ.(n.) ஒருவகைச் செடி; an unidentified plant (சா.அக.).

*[கொடி + பிரட்டி.]*

**கொடிப்பிரண்டை** *kodi-p-pirandai* பெ.(n.) பிரண்டைக் கொடி; adamant creeper (சா.அக.).

*[கொடி + பிரண்டை.]*

**கொடிப்பிள்ளை** *kodi-p-pillai* பெ.(n.) 1. காக்கைக் குஞ்சு; the young of a crow. 2. பள்ளையாடு; a dwarf goat. 3. கொடிசுற்றிப் பிறந்த பிள்ளை; child born with navel-cord round its neck (சா.அக.).

*[கொடி + பிள்ளை.]*

**கொடிப்புங்கு** *kodi-p-pungu*, பெ.(n.) ***கொடிப்புன்கு*** பார்க்க; see *kodi-p-pungu*.

*[கொடி + புன்கு - கொடிப்புன்கு → கொடிப்புங்கு.]*

**கொடிப்புடவை** *kodi-p-pudavai* பெ.(n.) அறுதலி (விதவை)க்கு முதலாண்டுப் பயன்பாட்டிற்கெனச் சுற்றத்தார் கொடியிலிடும் புதுச்சேலை; new cloth which relatives of a *arudali* place on a clothes-line for use during the first year of her widowhood.

*[கொடி + புடவை.]*

**கொடிப்புல்** *kodi-p-pul*, பெ.(n.) ***அறுகு*** பார்க்க; see *arugu*. *"கொடிப்புல் லென்று கறிப்பான்"* (சீவக. 932).

மறுவ. கொடியறுகு.

*[கொடி + புல்.]*

**கொடிப்புலி** *kodi-p-puli* பெ.(n.) நீண்ட வேங்கைப் புலி; a long and thin tiger; a tiger of an extended body resembling a grey-hound (சா.அக.).

*[கொடி + புலி.]*

**கொடிப்புன்கு** *kodi-p-pungu*; பெ.(n.) கொடிவகை (L.) hog creeper.

மறுவ. சுரபுன்கு.

*[கொடி + புன்கு.]*

**கொடிப்பூ** *kodi-p-pū*, பெ.(n.) நால்வகைப் பூக்களுட் கொடிகளிற் பூப்பது; flower of creepers, one of *nāl-vagaippū*. *"சின்னப்பூ வணிந்துங் கொடிப்பூக் கொய்தும்"* (பெருங். இலாவாண. 12:130).

*[கொடி + பூ.]*

**கொடிப்பூகம்** *kodi-p-pūgam*, பெ.(n.) காமப்பூ; creeper champauk (சா.அக.).

மறுவ. கொடிச்சம்பங்கி.

*[கொடி + பூகம்.]*

**கொடிப்பூளை** *kodi-p-pūlai* பெ.(n.) பூளைக்கொடி; a species of climbing woolplant - Aerua seandens (சா.அக.).

*[கொடி + பூளை.]*

**கொடிப்பை** *kodi-p-pai* பெ.(n.) 1. பொன்னாங் கண்ணி; sessile plant. 2. ஒரு மீன்; a fish (சா.அக.).

மறுவ. கொடுப்பை.

**கொடிபடர்-தல்** *kodi-padar-*, 3 செ.கு.வி.(v.i.) கொடி சூழ்தல்; spreading of creeper (சா.அக.).

*[கொடி + படர்-.]*

**கொடிபிடி-த்தல்** *kodi-pidi-*, 4 செ.கு.வி.(v.i.) 1. வேலை நிறுத்தம் மேற்கொள்ளல்; to go on strike. 2. முரணாகச் செயல்படுதல்; to act perversely.

*[கொடி + பிடி-.]*

**கொடிபிள-த்தல்** *kodi-pila-*, 4 செ.கு.வி.(v.i.) ***கொடிகிழி-தல்*** பார்க்க; see *kodi-kili-*

*[கொடி + பிள-.]*

**கொடிபோடு-தல்** *kodi-pōdu-*, 19 செ.குன்றாவி. (v.t.) போருக்கு அழைக்கவேணும் வெற்றி குறிக்க

வேனும் கொடி நாட்டுதல்; to hoist a flag as a challenge or signal of victory. 2. உறுதியா யிருத்தல்; to be determined. 3. தன்னதாக்க வழிபண்ணுதல் (யாழ்.அக.); to device ways and means of appropriating.

*[கொடி + போடு-.]*

**கொடிமங்கலம்** *kodi-mangalam,* பெ.(n.) மதுரை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Madurai Dt.

*[கொடி + மங்கலம்.]*

**கொடிமணி** *kodi-mani,* பெ.(n.) 1. மணிக்குடல்; mesentery retaining the intestines and their appendages. 2. ***கொடிமாதுளை*** பார்க்க (சா.அக.); see *kodi-mādulai.*

*[கொடி + மணி.]*

**கொடிமந்தாரை** *kodi-mandārai,* பெ.(n.) மந்தாரைக் கொடி; climbing mountain ebony (சா.அக.).

*[கொடி + மந்தாரை.]*

**கொடிமப்பு** *kodi-mappu,* பெ.(n.) கொடிபோன்று நீளமாகக் காட்சி தரும் மேகம்; a cloud in the shape of creeper.

மறுவ. கொடிமேகம்.

*[கொடி + மப்பு.]*

**கொடிமரம்** *kodi-maram,* பெ.(n.) 1. கொடியைக் கட்டுவதற்காக நடப்படும் மரம்; a flag-staff. 2. கோவில் கொடிமரம்; flag-staff in a temple.



கொடிமரம்

ம. கொடிமரம்; து.கொடிமர; பட. கொடிமொர.

*[கொடி + மரம்.]*

**கொடிமல்லிகை** *kodi-malligai,* பெ.(n.) 1. மல்லிகை (பிங்.); Arabian jasmine. 2. சாதிமல்லிகை (L.); large flowered jasmine.

*[கொடி + மல்லிகை.]*

**கொடிமாசிகள்** *kodi-māšigal,* பெ.(n.) நிலையற்றோடும் மேகங்கள் (வின்.); flitting clouds.

*[கொடி + மாசி.]*

**கொடிமாடு** *kodi-mādu,* பெ.(n.) 1. நீண்டு தளர்ந்த மாடு (வின்.); bullock, lank and long. 2. கதிரடித்த வைக்கோலில் ஒட்டியுள்ள நெல்மணிகளை அறவே நீக்க மாடுகளைப் பக்கவாட்டில் இணைத்துச் சுற்றிவரச் செய்தலில் (கிடாவடி) வலக்கைப்பக்கம் முதலில் நிற்கும் மாட்டின் பெயர்; the bullock on the right most end of team of bullocks used to go round & round for threshing out the remaining grains from the straw from which most of the paddy has been threshed out by hand.

*[கொடி + மாடு.]*

**கொடிமாதளத்தி** *kodi-mādalatti,* பெ.(n.) வேளை; *vēlay* (சா.அக.).

*[கொடி + மாதளத்தி.]*

**கொடிமாதுளை** *kodi-mādulai,* பெ.(n.) 1. துரிஞ்சி மாதுளை; creeping anaur. 2. கொம்மட்டி மாதுளை; pomegranate lime.

*[கொடி + மாதுளை.]*

**கொடிமாதுளைச்சோறு** *kodi-mādulai-c-cōru,* பெ.(n.) கொடிமாதுளையின் உட்சதைப்பற்று; the pulp of creeper of pomegranate lime (சா.அக.).

*[கொடி + மாதுளை + சோறு.]*

**கொடிமாமரம்** *kodi-māmaram,* பெ.(n.) தரையோடு படர்ந்திருக்கும் ஒட்டு மாமரம்; graft mango tree (சா.அக.).

*[கொடி + மரம்.]*

**கொடிமின்** *kodi-min,* பெ.(n.) ***கொடிமின்னல்*** பார்க்க; see *kodi-minnal.*

*[கொடி + மின்.]*

**கொடிமின்னல்** *kodi-minnal,* பெ.(n.) கொடிபோல் வீசி ஒளிரும் மின்னல்; extended streak of lightning.

*[கொடி + மின்னல்.]*

**கொடிமின்னை** *kodi-minnai,* பெ.(n.) மூக்குத்திக் கொடி; pointed leaved hogweed - Boerhaavia rependa alias B. Verticillata (சா.அக.).

*[கொடி + மின்னை.]*

**கொடிமுடி** *kodi-mudi,* பெ.(n.) கிளைகள் பிணைத் திருக்கும் செடிவகை (வின்.); a shrub with intertwined branches.

*[கொடி + முடி.]*

**கொடிமுடிந்தவழக்கு** *kodi-mudinda-valakku,* பெ.(n.) ஓயாத சிக்கல் வழக்கு (இ.வ.); intricate, never - ending dispute.

*[கொடி + முடிந்த + வழக்கு.]*

**கொடிமுடிபருவதம்** *kodi-mudi-paruvadam,* பெ.(n.) வெள்ளிமலை; mountain containing silver ore (சா.அக.).

*[கொடி + முடி + பருவதம்.]*

**கொடிமுடியன்** *kodi-mudiyan,* பெ.(n.) ***கொம்பேறி மூக்கன்*** (யாழ்ப்.) பார்க்க; see *komberi-mūkkan.*

*[கொடி + முடி +அன். அன் – சொ. ஆ.ஈறு]*

**கொடிமுடிவாயில்** *kodimudi-vāyil,* பெ.(n.) அறமன்றம்; court of justice.

*[கொடிமுடி + வாயில்.]*

**கொடிமுண்டி** *kodi-mundi,* பெ.(n.) 1. கொடிமுந்திரி; a kind of grape plant. 2. கொட்டைக்களா; false wild jujube (சா. அக.).

*[கொடி + முந்தி – கொடிமுந்தி → கொடிமுண்டி.]*

**கொடிமுதன்மருந்து** *kodi-mudan-marundu,* பெ.(n.) 1.சமூலம்; herbaceous creeper as a whole. 2. பெண்ணின் முதல் தீட்டு; the blood in first menstruation. 3. தலைச்சன் பிள்ளை நச்சுக்கொடி யினின்று தயாரிக்கும் ஓர் சுண்ண மருந்து; a calcium compound prepared from the navel - cord of a first born child (சா.அக.).

*[கொடி + முதல் + மருந்து.]*

**கொடிமுந்திரி** *kodi-mundiri,* பெ.(n.) திராட்சை (பதார்த்த.762); grape vine.

**ம.** கொடிமுந்திரி.

*[கொடி + முந்திரி.]*

**கொடிமுந்திரிகை** *kodi-mundirigai* பெ.(n.) ***கொடி முந்திரி*** பார்க்க; see *kodi-mundiri.*

*[கொடி + முந்திரிகை.]*

**கொடிமுரிதம்** *kodi-muridam,* பெ.(n.) நேர்வாளம்; croton plant (சா.அக.).

*[கொடி + முரிதம்.]*

**கொடிமுருக்கம்** *kodi-murukkam,* பெ.(n.) கொடிப் பலாசம்; a species of palaus climber (சா.அக.).

*[கொடி + முருக்கம்.]*

**கொடிமுல்லை** *kodi-mullai,* பெ.(n.) ஊசிமுல்லை (சா.அக.); eared jasmine.

*[கொடி + முல்லை.]*

**கொடிமுறுக்கு** *kodi-murukku,* பெ.(n.) நன்றாக ஏறின முறுக்கு (இ.வ.); inextricable twist, as of a twine.

*[கொடி + முறுக்கு.]*

**கொடிமுன்னிகம்** *kodi-munnigam,* பெ.(n.) கொடிமுல்லை; eared jasmine.

*[கொடி + முள் + இகம் – கொடிமுள்ளிகம் → கொடி முண்ணிகம் → கொடிமுன்னிகம்.]*

**கொடிமுன்னை** *kodi-munnai,* பெ.(n.) மூக்குத்திக் கொடி (L.); pointed leaved hogweed.

*[கொடி + முன்னை.]*

**கொடிமூக்கு** *kodi-mūkku,* பெ.(n.) நீண்ட மூக்கு; long slender nose. *"ஒழுகுபொற் கொடிமூக்கும்"* (சீவக.165).

*[கொடி + மூக்கு.]*

**கொடிமூகாக்கினி** *kodi-mūgā-k-kini,* பெ.(n.) நெல்லி; gooseberry tree Phyllanthus emblica (சா.அக.).

*[கொடி + முகம் + அக்கினி – கொடிமூகாக்கினி (கொ.வ.).]*

**கொடிமூட்டு[1]–தல்** *kodi-mūttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பெண்கள் கருவுயிர்த்தலில் கிழிந்த கொடி மூலத்தைத் தைத்தல்; suturing the torn or lacerated portion of the perineum during child birth; plastic surgery of the perineum (சா.அக.).

*[கொடி + மூட்டு–.]*

**கொடிமூட்டு[2]** *kodi-mūttu,* பெ.(n.) கொடிமூலத்தின் தையல்; suture of the perineum (சா.அக.).

*[கொடி + மூட்டு.]*

**கொடிமூலக்கழலை** *kodi-mūla-k-kalalai,* பெ.(n.) குதத்திற்கும் குய்யத்திற்கும் நடுவிலுண்டாகும் கழலை; any tumour in the perineum (சா.அக.).

*[கொடி + மூலம் + கழலை.]*

**கொடிமூலம்** *kodi-mūlam,* பெ.(n.) 1.நஞ்சுக்கொடி; umbilical cord. 2. வழலை; fuller's earth. 3. கொடியின் அடிவேர்; root of creeper. 4. மரத்தின் மேல் படர்ந்த கொடி; creeper on a tree.

5. குதத்திற்கும் குய்யத்திற்கும் நடுவே கொடியின் இரு பக்கமுள்ள சதைப்பகுதி; the space or area between the anus and the genital organs, perineum. 6. கொடியின் கிழங்கு; the root of a creeper. 7. கொடிக்கயிற்றின் பிறப்பு; the beginning of the spinal cord in the sacral region (சா.அக.).

*[கொடி + மூலம்.]*

**கொடிமூலி** *kodi-mūli*, பெ.(n.) 1. சிவப்புச் சித்திர மூலம்; rosy flowered leadwort. 2. மூலிகைக் கொடிகள்; medicinal creepers (சா.அக.).

*[கொடி + மூலி.]*

**கொடிய** *kodiya*, பெ.எ.(adj.) கடுமையான, கொடுமையான; terrible, cruel, severe, intense.

ம. கொடிய.

*[கொடு → கொடிய.]*

**கொடியகடுந்தீ** *kodiya-kadunti*, பெ.(n.) 1. கொடிவேலி; leadwort. 2. புடத்திற்குப் போடும் காடாக்கினி; conflagration of fire or great fire used in calcination (சா.அக.).

*[கொடிய + கடும் + தீ.]*

**கொடியகற்பி** *kodiya-karpi*, பெ.(n.) கற்ப மூலிகையான நீலஞ்சோதி எனும் திருகுகள்ளி வேர்; root of twisted milk spurge (சா.அக.).

*[கொடிய + கற்பி.]*

**கொடியசுரம்** *kodiya-šuram*, பெ.(n.) 1. வெப்பக் காய்ச்சல்; thermic fever. 2. கடுமையான காய்ச்சல்; high degree of fever (சா.அக.).

*[கொடிய + சுரம்.]*

**கொடியடுப்பு** *kodi-y-aduppu*, பெ.(n.) 1. அடுப்புப் புகை; a kind of domestic oven. 2. பக்க அடுப்பு; side-oven.

ம. கொடியடுப்பு.



கொடியடுப்பு

*[கொடி + அடுப்பு.]*

**கொடியணிவட்டம்** *kodi-y-ani-vattam*, பெ.(n.) சுவர்த்தூணில் அமைக்கப்படும் அழகு அணி; a kind of decoration made in wall pillars.

*[கொடி + அணி + வட்டம்.]*

**கொடியத்தி** *kodi-y-atti*, பெ.(n.) **நீரத்தி** (மலை.) பார்க்க; see *nir-atti*.

*[கொடி + அத்தி.]*

**கொடியதகம்** *kodi-y-adagam*, பெ.(n.) கொடிவேலி சித்திரமூலம்; Plumbago genus (சா.அக.).

*[கொடி + அதகம்.]*

**கொடியந்தம்** *kodi-y-andam*, பெ.(n.) வீணாத்தண்டு வழியாய் மூளையில் போய் ஒடுங்கும் கொடிக் கயிற்றின் முடிவு. the terminal portion of the spinal cord running through the vertebral column and connecting with brain (சா.அக.).

*[கொடி + அந்தம்.]*

**கொடியநிறக்குன்னி** *kodiyanira-k-kunni*, பெ.(n.) கருநொச்சி; black *notci* (சா.அக.).

*[கொடிய + நிறம் + குன்னி.]*

**கொடியபீசம்** *kodiya-pišam*, பெ.(n.) சீதாங்க நஞ்சு; a mineral poison (சா.அக.).

*[கொடிய + பீசம்.]*

**கொடியமன்னன்** *kodiya-mannan*, பெ.(n.) **கோடாசொரி வைப்புநஞ்சு** (யாழ்.அக.) பார்க்க; see *kōdāsori-vaippu-nañju*.

*[கொடிய + மன்னன்.]*

**கொடியரசு** *kodi-y-arašu*, பெ.(n.) 1. அரசுவகை; wild pipal. 2. **அவரை** (மலை.) பார்க்க; see *avarai*.

*[கொடி + அரசு.]*

**கொடியராகு** *kodiya-rāgu*, பெ.(n.) கோமேதகம் (யாழ்.அக.); cinnamon stone, a species of garnet.

*[கொடிய + ராகு.]*

**கொடியவர்** *kodiyavar*, பெ.(n.) கொடுமையான குணங்களையுடையவர்; one who is harsh (குறள், 550. பரிமே.) (உரை சொ. 2).

ம. கொடியவன்.

*[கொடு → கொடியவர்.]*

**கொடியவருக்கை** *koḍiya-varukkai,* பெ.(n.) பெருந்தும்பை; bitter leucus (சா.அக.).

*[கொடிய + வருக்கை.]*

**கொடியவரை** *koḍi-y-avarai,* பெ.(n.) அவரை; country bean creeper-Dolichos albus (சா.அக.).

*[கொடி + அவரை.]*

**கொடியவியாதி** *koḍiya-viyādi,* பெ.(n.) ***கொடிய நோய்*** பார்க்க ; see *koḍiya-nōy.*

*[கொடிய + வியாதி.]*

**கொடியவீரன்** *koḍiya-vīraṉ,* பெ.(n.) ***கோடாசொரி வைப்புநஞ்சு*** (வின்.) பார்க்க; see *kōḍāsori-vaippu-nañju.*

*[கொடிய + வீரன்.]*

**கொடியழிஞ்சில்** *koḍi-y-aḻiñjil,* பெ.(n.) கூவழிஞ்சில்; alangiam creeper.

மறுவ. கூவழிஞ்சில்.

*[கொடி + அழிஞ்சில்.]*

**கொடியறுகு** *koḍi-y-aṟugu,* பெ.(n.) அறுகுவகை; a species of Bermuda grass.

*[கொடி + அறுகு.]*

**கொடியன்**[1] *koḍiyaṉ,* பெ.(n.) தீயன் (சூடா.); cruel man.

*[கொடுமை → கொடியன்.]*

**கொடியன்**[2] *koḍiyaṉ,* பெ.(n.) செங்கோள் (கேது) (சூடா.); the descending node.

*[கொடுமை → கொடியன்.]*

**கொடியனல்ராகு** *koḍiyaṉal-rāgu,* பெ.(n.) கோமேதகம்; sardonyx (சா.அக.).

*[கொடியனல் + ராகு.]*

**கொடியாச்சி** *koḍi-y-ācci,* பெ.(n.) பிள்ளைத் தாய்ச்சிக் கொடி; an unknown plant, probably a creeper useful to pregnant woman (சா.அக.).

*[கொடி + ஆய்ச்சி.]*

**கொடியாடு** *koḍi-y-āḍu,* பெ.(n.) ஆண்டிற் கொருமுறை ஒரு குட்டி ஈனும் நீண்ட காலுள்ள ஆடு; long legged goat which annually begets one kid, opp. to *pallāḍu.* *"கொடியாடு நற்கறியாம்" (பதார்த்த. 845.).*

மறுவ: வெள்ளாடு.

*[கொடி + ஆடு.]*

கொடியாட்டுக்கறியை அதிகாலையில் சமைத்துச் சாப்பிட இடுப்புவலி, ஈளை, வெட்டைச் சூடு போகும் எனச் சா.அக. கூறும்.

**கொடியாடை** *koḍi-y-āḍai,* பெ.(n.) ***கொடிச்சீலை*** பார்க்க; see *koḍi-c-cīlai.* *"கொடியாடை முதலானது களைத் தைக்கிறதும்"* (கோவிலொ. 94).

ம. கொடியாட.

*[கொடி + ஆடை.]*

**கொடியாந்தரம்** *koḍi-y-āndaram,* பெ.(n.) கொடுமை; cruelty.

*[கொடிய + அந்தரம்.]*

**கொடியாம்பல்** *koḍi-y-āmbal,* பெ.(n.) 1. ஆம்பல் கொடி; Indian water lily. 2. நீராம்பல் என்னும் ஒரு வகைப் பாண்டு நோய்; a kind of ascites (சா.அக.).

*[கொடி + ஆம்பல்.]*

**கொடியார்கூந்தல்** *koḍiyār-kūndal,* பெ.(n.) கொடியார் கூந்தலெனும் பூண்டுவகை; a kind of plant called *koḍiyār-kūndal.*

மறுவ. அம்மையார் கூந்தல்.

*[கொடியார் (பெண்டிர்) + கூந்தல்.]*

**கொடியால்** *koḍi-y-āl,* பெ.(n.) ஆலமரவகை (வின்.); a kind of banyan.

*[கொடி + ஆல்.]*

**கொடியாலம்** *koḍi-y-ālam,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்தில் காவிரித் தென்கரையில் அமைந்த பண்டைய ஊர்; a village in *Thanjāvūr* Dt. *"தென்கரைராச கம்பீர வளநாட்டுக் கொடியாலம் ஊர் ஒன்று" (தெ.இ.கல்.329, 2).*

*[கொடி + ஆலம்.]*

**கொடியாள்**[1] *koḍi-y-āḷ,* பெ.(n.) கொடி போன்ற பெண்; slender and beautiful lady as a vine. *"கொடியாளை.... மருமானுக் கருள்செய்ய"* (சீவக. 1057).

ம. கொடியாள்.

*[கொடி → கொடியாள்.]*

**கொடியாள்**[2] *koḍiyāḷ,* பெ.(n.) கொடுமையானவள்; cruel woman. *"உள்ளமுங் கோடிய கொடியாள்"* (கம்பரா. மந்தரை.81).

ம. கொடியாள்.

*[கொடுமை → கொடியாள்.]*

**கொடியாள்கூந்தல்** *kodiyāḷ-kūndal,* பெ.(n.) ***கொடியார்கூந்தல்*** (வின்.) பார்க்க; see *koḍiyār-kūndal*.

*[கொடியாள்[1] + கூந்தல்.]*

**கொடியாளம்** *koḍi-y-āḷam,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[கொடியாலம் →கொடியாளம்]*

**கொடியாளன்** *koḍi-y-āḷaṉ,* பெ.(n.) கோடா கௌரி செய்நஞ்சு; a kind of prepared arsenic (சா.அக.).

*[கொடு → கொடி + ஆளன்.]*

**கொடியான்** *koḍiyāṉ,* பெ.(n.) கொடுமையானவன்; cruel man. *"கொடியான் வருமென்று குலாவுவதோ" (கம்பரா. உருக்காட்டு.9).*

*[கொடியன்[1] → கொடியான்.]*

**கொடியிடை** *koḍi-y-iḍai,* பெ.(n.) சிற்றிடை; slim waist, or loins (suggestive of slender shapeliness of a female).

ம. கொடியிட, கொடிநடுவு.

*[கொடி + இடை.]*

**கொடியிலஞ்சு** *koḍiyil-añju,* பெ.(n.) கொடியில் காய்க்கின்ற கறிகள் ஐந்து; creeper vegetables fruits. *"அடைக்காயமுது இலையமுது கொம்பில் அஞ்சு கொடியில் அஞ்சுமுதல் கறியமுதும்" (S.I.I.XXIV.412).*

*[கொடி + இல் + (ஐந்து) அஞ்சு.]*

**கொடியிலந்தை** *koḍi-y-ilandai,* பெ.(n.) இலந்தை வகை (வின்.); a spreading shrub.

*[கொடி + இலந்தை.]*

**கொடியிலாஞ்சு** *koḍi-y-ilāñju,* பெ.(n.) கொடியில் காய்க்கின்ற கறிகள் ஐந்து; creeper vegetable fruits five.

*[கொடி + இலாஞ்சு.]*

**கொடியிலை[1]** *koḍi-y-ilai,* பெ.(n.) மருந்துக்குப் பயன்படும் இலை வகைகள் (பதார்த்த குண சிந்தாமணியிற் சொல்லியுள்ளவை); creeper leaves useful in medicine as laid down in Tamil Materia medica viz.

*[கொடி + இலை.]*

**வகைகள்:** 1. தூதுளையிலை, 2. பறங்கியிலை, 3. சுரையிலை, 4. பேய்ச்சுரையிலை, 5. பாகலிலை, 6. அவரையிலை, 7. காராமணியிலை, 8. கொடிக் குறிஞ்சாவிலை, 9. கறிவேப்பிலை, 10. ஊசிப்பாலை யிலை, 11. கோவையிலை, 12. முசுமுசுக்கையிலை, 13. கோழி யவரையிலை, 14. முயற்காதிலை, 15. கழற்சி யிலை, 16. வெண் கழற்சியிலை, 17. வரிக்கும்மட்டியிலை, 18. சிறு பூனைக் காலியிலை, 19. வேலிப்பருத்தியிலை, 20. துராயிலை, 21.செந்துராய் இலை, 22. நச்சு மூங்கிலிலை, 23.சதாப்பிலை, 24.கடற்பாலையிலை, 25. நொச்சியிலை, 26. தழுதாழையிலை.

**கொடியிலை[2]** *koḍi-y-ilai,* பெ.(n.) வாழையிலையின் நுனிப்பகுதி; the tip of the plantain leaf (சேரநா.).

ம. கொடியில.

*[கொடி + இலை.]*

**கொடியிறக்கம்** *koḍi-y-iṟakkam,* பெ.(n.) முடிவு பண்ணுதல் (யாழ்.அக.); concluding, finishing.

*[கொடி + இறக்கம்.]*

**கொடியிறக்கு[1]-தல்** *koḍi-y-iṟakku-,* 5 செ. குன்றாவி.(v.t.) முடிவு பண்ணுதல்; to conclude.

ம. கொடியிறக்குக.

*[கொடி + இறக்கு-.]*

**கொடியிறக்கு[2]-தல்** *koḍi-y-iṟakku-,* 5 செ. குன்றாவி.(v.t.) 1. ஏற்றின கொடியைத் தாழ்த்துதல்; to strike or lower a flag. 2. திருவிழா முடிவாகக் கொடியைக் கீழிறக்கிவிடுதல்; to take down the temple flag, as indicating the close of a festival. 3. காற்றாடியை இறக்குதல் (யாழ்ப்.); to pull or haul down a kite.

*[கொடி + இறக்கு-.]*

**கொடியீச்சு** *koḍi-y-īccu,* பெ.(n.) ***சவ்வரிசி*** பார்க்க; see *cavvariśi*.

*[கொடி + ஈச்சு.]*

**கொடியீச்சை** *koḍi-īccai,* பெ.(n.) ***சீமையீச்சை***; common Indian fern.

*[கொடி + ஈச்சை.]*

**கொடியீசு** *koḍi-yīśu,* பெ(n.) ***கொடியீச்சை*** பார்க்க; see *koḍi-yīccai* (சா.அக.).

*[கொடி + ஈசு.]*

**கொடியூசிதம்** *koḍi-y-ūšidam,* பெ.(n.) பச்சைத் திப்பிலி; green plant of long pepper (சா.அக.).

*[கொடி + ஊசிதம்.]*

**கொடியூமத்தை** *koḍi-y-ūmattai,* பெ.(n.) ஊமத்தைக் கொடி; datura creeper (சா.அக.).

*[கொடி + ஊமத்தை.]*

**கொடியூர்** *koḍi-y-ūr,* பெ.(n.) திருவண்ணாமலை அருகே அமைந்துள்ள சிற்றூர்; a small village near Thiruvannāmalai.

*[கொடி + ஊர்.]*

ஆரல் விளக்கணி [கார்த்திகைத்தீபம்] விழாவிற் குரிய கொடியினை இவ் வூரிலிருந்து எடுத்துச் செல்வதால் இவ் வூர் கொடியூர் எனப் பெயர் பெற்றதாம்.

**கொடியெடு-த்தல்** *koḍi-y-eḍu-,* 4 செ.கு.வி. (v.i.) அறைகூவுகை, வெற்றி என்பவற்றின் அறிகுறியாகக் கொடி பிடித்தல்; to raise the standard as a signal of a challenge or victory. *"நுண்கலை நீத்த நீந்திக் கொடியெடுத் தவர்க்கு நல்கு"* (சீவக. 291).

*[கொடி + எடு-.]*

**கொடியெலுமிச்சை** *koḍi-y-elumiccai,* பெ.(n.) எலுமிச்சை வகை (பதார்த்த. 678.); Italian lemon.

*[கொடி + எலுமிச்சை.]*

**கொடியேற்றம்** *koḍi-y-ērṟam,* பெ.(n.) திருவிழாத் தொடக்கத்தில் கொடிமரத்தில் கொடியை யுயர்த்துகை; hoisting a flag in the temple at the commencement of a periodical festival.

ம. கொடியேற்றம்.

*[கொடி + ஏற்றம்.]*

**கொடியேற்று[1]-தல்** *koḍi-y-ērṟu-,* 5 செ.கு.வி.(v.i.) திருவிழாத் தொடக்கத்தில் கொடியை உயர்த்துதல்; to hoist a flag in a temple indicating the beginning of a periodical festival. *"திருக்கொடி யேற்று நான்று" (S.I.I. II, 125).*

ம. கொடியேற்றுக.

*[கொடி + ஏற்று-.]*

**கொடியேற்று[2]** *koḍi-y-ērṟu,* பெ.(n.) ***கொடியேற்றம்*** பார்க்க; see *koḍi-y-ērṟam. "காமன் கொடி யேற்றென வியப்ப" (குமர. பிர. முத்துக். 77).*

*[கொடி + ஏற்று.]*

**கொடியேறு** *koḍi-y-ēṟu,* பெ.(n.) திருவிழாத் தொடங்குவதைக் குறிக்கக் கொடியேறுதல்; the flag to be hoisted in temples as an indication of festival.

ம. கொடியேறுக.

*[கொடி + ஏறு.]*

**கொடியொட்டி** *koḍi-y-oṭṭi,* பெ.(n.) கருப்பையை அடுத்து ஒட்டிக்கொண்டிருக்கும் நஞ்சுக்கொடியின் சதைப் பாகம்; that part of the placenta which comes next to uterine wall (சா.அக.).

*[கொடி + ஒட்டி.]*

**கொடியோடு-தல்** *koḍi-y-ōḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1.கொடியுண்டாகிப் படர்தல் (இ.வ.); to shoot forth tendrils. 2. கை அல்லது கண் வரைவு (ரேகை) நீளுதல்; to be marked with long-lines as palm; to be marked with fine red capillary streaks, as eyes, etc., 3. இறக்குங்காலத்தில் மூச்சு இழைதல்; to be feeble, as breath at the time of death.

*[கொடி + ஓடு-.]*

**கொடியோன்[1]** *koḍiyōṉ,* பெ.(n.) தீயவன்; cruel man. *"கொடியோர்த் தெறுதலும்"* (புறநா. 29:9).

ம. கொடியோன்.

*[கொடு (கொடுமை) → கொடியோன்.]*

**கொடியோன்[2]** *koḍiyōṉ,* பெ.(n.) 1. ***கற்றாழை*** (மலை.) பார்க்க; see *kaṟṟāḻai.* 2. கறிப்புடோல்; vegetable gourd or snake gourd. 3. கற்பூரம்; champor. 4. வீரம்; corrosive sublimate.

*[கொடி → கொடியோன்.]*

**கொடிலி** *koḍili* பெ.(n.) விட்டில்பூச்சி; kokra laurel (சா.அக.).

*[கூடு + இல்லி – கூடில்லி → கொடில்லி → கொடிலி (கொ.வ).]*

**கொடிவகை** *koḍi-vagai,* பெ.(n.) கொடி; creeper.

*[கொள் → கொடு → கொடி. கொள் = பற்று.]*

**கொடிவங்கம்** *koḍi-vaṅgam,* பெ.(n.) வங்கமணல்; lead ore (சா.அக.).

*[கொடி + வங்கம்.]*

**கொடிவசலி** *koḍi-vašali,* பெ.(n.) நல்ல பாலை; green - wax flower (சா.அக.).

மறுவ. கொடிப்பாலை.

*[கொடி + வசலி.]*

**கொடிவசலை** *kodi-vaśalai,* பெ.(n.) 1. மஞ்சட் செம்முள்ளி; common yellow nail-dye-Barberia prionitis. 2. பசலைக்கொடி; spimach creeper. 3. சிறுபசலை; small leaved Indian spinach (சா.அக.).

**மறுவ.** கொடிப்பசலை.

**ம.** கொடிவசள.

*[கொடி + (பசலை) வசலை.]*

**கொடிவஞ்சி** *kodi-vañji,* பெ.(n.) வஞ்சிக்கொடி; slender rattan (சா.அக.).

*[கொடி + வஞ்சி.]*

**கொடிவட்டக்கல்** *kodi-vaṭṭa-k-kal,* பெ.(n.) நஞ்சுக் கொடியில் உண்டாகும் கல் அல்லது மணலைப் போன்ற திரட்சி; calcareous or sabulus deposits contained in the placenta (சா.அக்.)

*[கொடி + வட்டம் + கல்.]*

**கொடிவட்டப்பிறை** *kodi-vaṭṭa-p-pirai,* பெ.(n.) கருவில் இரட்டைப் பிள்ளை உண்டாகியிருக்கும் போது சில வேளை ஏற்படும் பிறையைப் போன்ற கொடி; a crescentic form of placenta, sometimes occuring in twin pregnancy (சா.அக.).

*[கொடி + வட்டம் + பிறை.]*

**கொடிவட்டம்** *kodi-vaṭṭam,* பெ.(n.) நஞ்சுக்கொடி கருப்பையில் ஒட்டிக்கொண்டிருக்கும் வட்டப்பகுதி; the round, flat organ within the uterus which establishes communication between the mother and child by means of the umbilical cord - Placenta (சா.அக.).

*[கொடி + வட்டம்.]*

**கொடிவடாகிகம்** *kodi-vaḍākigam,* பெ.(n.) காமப்பூ; creeper champauk (சா.அக.).

*[கொடி + (வளங்கம் (பிறை) → வடங்கம்) வடாகிகம்.]*

**கொடிவயலை** *kodi-vayalai,* பெ.(n.) ***கொடிப் பசலை*** பார்க்க; see *kodi-p-paśalai.*

*[கொடி + (வசலை) வயலை.]*

**கொடிவலசை** *kodi-valaśai-,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tiruvallur Dt.

*[கொடி + வலசை.]*

**கொடிவலி[1]-த்தல்** *kodi-vali-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1.காற்றாடிக் கயிற்றை இழுத்தல்; to draw in the string of a kite. 2. வளார்களைச் செடியினின்றும் எடுத்தல்; to draw out a withe for use.

*[கொடி + வலி-.]*

**கொடிவலி[2]** *kodi-vali,* பெ.(n.) குதத்திற்கும் குய்யத்திற்கும் இடையே பெண்களுக்குக் காணும் வலி; a chronic rupture in females between the rectum and the vagina - perineal rupture (சா.அக.).

*[கொடி + வலி.]*

**கொடிவலை** *kodi-valai,* பெ. (n.) இரண்டு தூண்களை இணைக்கும் சிறிய உத்தரம்; a cross beam which connects two pillars (கட்.தொ.)

*[கொடி + வலை.]*

**கொடிவழி** *kodi-vaḻi,* பெ.(n.) 1.ஒற்றையடிப்பாதை (இ.வ.); foot-path. 2. குடிவழி; genealogical tree.

*[கொடி + வழி.]*

**கொடிவழித்தீர்த்தம்** *kodi-vaḻi-t-tirttam,* பெ.(n.) திருப்பதி மலையிலுள்ள ஒரு நல்வினைச் சுனை; a sacred spring on Tirupati hills. *'கொடிவழித் தீர்த்த முதலிய மிக்க... வேங்கடம்' (சிலப். 11:41, உரை).*

*[கொடி + வழி + தீர்த்தம்.]*

**கொடிவழுதலை** *kodi-vaḻutalai,* பெ.(n.) வழுதுணைவகை (யாழ். அக.); a kind of night shade.

*[கொடி + வழுதலை.]*

**கொடிவாகனன்** *kodi-vāganan,* பெ.(n.) காக்கையை ஊர்தியாகக் கொண்ட (சனி) காரிக்கோள்; Planetary god šani with crow in his standard.

*[கொடி + வாகனன்.]*

**கொடிவிசி** *kodi-viśi,* பெ.(n.) வட்டமான கட்டுநார்; round ligament (சா.அக.).

*[கொடி + விசி. விசி - கட்டு.]*

**கொடிவிடு-தல்** *kodi-viḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. ***கொடியோடு[1]-,*** பார்க்க; see *kodi-y-ōḍu-,* 2. மிகுதியாதல்; to increase, shoot up. *"காமங் கொடிவிட" (பரிபா. 6:103).*

*[கொடு + விடு-.]*

**கொடிவிதை** *kodi-vidai,* பெ.(n.) மோதிரக்கண்ணி; climbing flax (சா.அக.).

*[கொடி + விதை.]*

**கொடிவிரியன்** *kodi-viriyan,* பெ.(n.) செவ்விரியன்; red viper (சா.அக.).

*[கொடி + விரியன்.]*

**கொடிவிரை** *kodi-virai,* பெ.(n.) கொடிச்சணல்; creeping falsah; climbing flax (சா.அக.).

*[கொடி + விரை.]*

**கொடிவீசு-தல்** *kodi-visu-,* 15 செ.கு.வி.(v.i.) ***கொடியோடு***[1] பார்க்க; see *kodi-y-ōdu-.*

*[கொடி + வீசு-.]*

**கொடிவீடு** *kodi-vidu-,* பெ.(n.) படர்கொடிகளால் அமைந்த வீடு (பெருங். உதயணன்சரித். ப. 199); arbour, summer - house.

*[கொடி + வீடு.]*

**கொடிவேம்பு** *kodi-vēmbu,* பெ.(n.) கொடியாகப் படர்ந்த வேம்பு; margosa creeper (சா.அக.).

*[கொடி + வேம்பு.]*

**கொடிவேர்** *kodi-vēr,* பெ.(n.) 1. தலைச்சன் பிள்ளை; the first- born child of a woman. 2. கொடியின்வேர்; the root of a creeper. 3. ***கொடிவேலி*** பார்க்க;see *kodi-vēli.* 4. நஞ்சுக்கொடி வட்டம்; placenta (சா.அக.).

*[கொடி + வேர்.]*

**கொடுவேரி** *kodu-vēri,* பெ.(n.) ***கொடுவேலி*** பார்க்க; see *kodu-vēli* (வேளாண்.கலை.அக.).

*[கொடு + வேரி.]*

**கொடிவேல்** *kodi-vēl,* பெ.(n.) வேலன்கொடி; acacia creeper (சா.அக.).

*[கொடி + வேல்.]*

**கொடிவேலம்** *kodi-vēlam,* பெ.(n.) 1. முள்ளில்லாத வேல்; American sumach. 2. ஒருவகைப் பெரிய நீண்ட கத்தரிக்காய்; a variety of large and long shapped brinjal (சா.அக.).

*[கொடி + வேல் (அம் - சொ.ஆ.ஈறு).]*

**கொடிவேலன்** *kodi-vēlan,* பெ.(n.) ***திவிதிவி*** பார்க்க; see *divi-divi.*

*[கொடி + வேலன்.]*

**கொடிவேலி** *kodi-vēli,* பெ.(n.) 1. ***கொடுவேலி*** பார்க்க; see *kodu-vēli.* 2. கொடு வேலி வகை (L.); rosy flowered leadwort.

மறுவ. சித்திரமூலம்.

*[கொடுவேலி → கொடிவேலி.]*

**கொடிற்றுக்கோல்** *kodirru-k-kōl,* பெ.(n.) செங்கல் முதலியவற்றைப் பெயர்த்தெடுப்பதற்குக் கள்வர் பயன்படுத்துங்கருவி (சிலப்.16:142, உரை); jemmy, crow-bar, one of the implements of a burglar for removing stones from a wall.

*[கொடிறு + கோல்.]*

**கொடிற்றுச்சன்னி** *kodirru-c-canni,* பெ.(n.) பற்கள் பூட்டிக்கொள்ளும்படி செய்யும் நரப்பிசிவு வகை; lock-jaw, tetanus.

*[கொடிறு + சன்னி.]*

**கொடிறு**[1] *kodiru,* பெ.(n.) 1. கதுப்பு; cheek, jaw. *"கொடிறுடைக்குங் கூன்கையர்" (குறள். 1077).* 2. யானை மதச்சுவடு (பிங்.); marks of elephant's must. 3. குறடு; pincers. *"கொடிறும் பேதையுங் கொண்டது விடா" (திருவாச. 4:63).*

*[கொடு → கொடிறு.]*

**கொடிறு**[2] *kodiru,* பெ.(n.) எட்டாவது கோள், மீன், பூசம்; eigth naksatra pūšam.

*[கொடு→ கொடிறு (குறடு).]*

**கொடு**[1]**-த்தல்** *kodu-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1.ஈதல்; to give, grant, supply. *"கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க்கு" (குறள்,1005).* 2.பெற்றெடுத்தல்; to bring forth. *"பார்வதி யேழுலகுங் கொடுத்தாள்" (பிரமோத். 9:61).* 3. பங்கிடுதல்; to divide, distribute, as a sum of money. இந்தத் தொகையைப் பத்துப்பேருக்குக் கொடு (இ.வ.). 4. விற்றல்; to sell. *"தில்லைமுன்றிற் கொடுக்கோ வளை" (திருக்கோ. 63).* 5. உடன்படுதல்; to allow, permit. *"மலரன்றி மிதிப்பக் கொடான்" (திருக்கோ. 303).* 6. சாகக் கொடுத்தல்; to lose by death, as giving to Yama. *"நீபயந்த கோட்டானைத் தானே கொடு" (தனிப்பா. 1,35:68).* 7. திட்டுதல்; to abuse roundly. நன்றாய்க் கொடுத்தாளா? வேணும், வேணும் (இ.வ.). 8. அடித்தல்; to belabour, thrash.

*[கொள் → கொடு.]*

**கொடு**[2] *kodu-,* து.வி. (aux.v.) ஒரு துணை வினை; an auxilary verb, as in. சொல்லிக்கொடு, முடித்துக்கொடு.

*[கொள் → கொடு.]*

**கொடு**[3] *kodu,* பெ.(n.) 1. வளைந்த; crooked. 2. கொடிய; violent. 3. கோணல்; crookedness (சா.அக.).

*[கொள் → கொடு.]*

*kodu* **Tam. Mal.** fierce, extreme, rough, lit., crooked - e.g., *kodukku,* **Tam.** The claws of the crab; *kodi-il,* **Mal.** pincers comp. **Sans.** kut, crooked (GDFL.584).

**கொடு⁴-த்தல்** *kodu-,* பெ.(n.) 1.பறிகொடுத்தல்; losing by death. 2. மருந்து கொடுத்தல்; administering or giving internally as medicine. 3. கொடுத்தல்; (in alchemy) nourishing a metal in fusion with cross-powders (சா.அக.).

*[கொள் → கொடு.]*

**கொடுக்கல்வாங்கல்¹** *kodukkal-vāṅgal,* பெ.(n.) பணங் கொடுத்து வாங்குகை (உ.வ.), வட்டித் தொழில்; money transactions, lending and borrowing.

*[கொடுக்கல் + வாங்கல்.]*

**கொடுக்கல்வாங்கல்²** *kodukkal-vāṅgal,* பெ.(n.) பெண் கொடுத்துவாங்குகை, எதிர் பெண் எடுத்தல்; to take bride in exchange.

*[கொடுக்கல் + வாங்கல்.]*

**கொடுக்கறு-த்தல்** *kodukkaṟu-,* 4 செ.குன்றாவி.(v.t.)(தேட்கொடுக்கை நறுக்குதல்) குறும்புத் தனத்தை அடக்குதல்; to break down one's mischievous tendency. lit. to cut off the sting of a scorpion .

*[கொடுக்கு + அறு-.]*

**கொடுக்கறுவாள்** *kodukkaṟuvāḷ-,* பெ.(n.) ஒருவகை அறுவாள்; a kind of knife.

*[கொடு - கொடுக்கு (வளைவு) + அறுவாள்.]*



கொடுக்கறுவாள்

**கொடுக்கன்¹** *kodukkaṉ,* பெ.(n.) தேள்வகை (யாழ்ப்.); a kind of scorpion (வே.க. 166).

*[கொடு → கொடுக்கன்.]*

**கொடுக்கன்²** *kodukkaṉ,* பெ.(n.) மகன்; son. வயிர மேகனார் கொடுக்கன் சிற்றன்புலியூர் நாடன்(S.I.I.-VII, 32).

**தெ.** கொடுக்கு

*[த. குழகன் → தெ. கொடுக்கு. குழகன் → குடகன் → கொடுக்கன்.]*

**கொடுக்காடுபிடிக்கை** *kodukkādu-pidikkai,* பெ.(n.) ***கொழுத்தாடு பிடிக்கை*** பார்க்க; see *koluttādu-pidikkai.*

*[கொடுக்கு + ஆடு + பிடிக்கை.]*

**கொடுக்காய்** *kodu-k-kāy,* பெ.(n.) ***கொடுக்காய்ப் புளி*** பார்க்க; see *kodukkāy-p-puḷi.*

*[கொடு + காய்.]*

**கொடுக்காய்ப்புளி** *kodukkāy-p-puḷi,* பெ.(n.) மரவகை; Manilla tamarind.

*[கொடுக்காய் + புளி. கொடு = வளைவு, கொடுக்காய் = வளைந்தகாய்.]*

**கொடுக்கான்** *kodukkāṉ,* பெ.(n.) 1. நட்டுவாய்க் காலி; black lobster mouthed - legged scorpion (சா.அக.). 2. தேள்; scorpion.

*[கொடுக்கன் → கொடுக்கான்.]*

**கொடுக்கிலை** *kodukkilai,* பெ.(n.) 1. தேட்கொடுக்கி யிலை; leaf of scorpion plant. 2. தேள்கொடுக்கி; scorpion plant. 3. வயற்கொடுக்கி; field scorpion plant (சா.அக.).

*[கொடுக்கு + இலை.]*

**கொடுக்கு¹** *kodukku,* பெ.(n.) 1. கவர்; divarication of branches 2. பின் (கோவணம்); back-lap.

*[குள் → கொடு → கொடுக்கு.]*

**கொடுக்கு²-தல்** *kodukku-,* 18 செ.கு.வி.(v.i.), ***கொடு¹-த்தல்*** பார்க்க; see *kodu-.*

*[கொடு → கொடுகு.]*

**கொடுக்கு³-தல்** *kodukku-,* 5 செ.கு.வி.(v.i.) நடுக்குதல் (இ.வ.); to cause one to shudder.

*[கொடு → கொடுகு → கொடுக்கு.]*

**கொடுக்கு⁴** *kodukku,* பெ.(n.) 1.தேள் முதலிய வற்றின் கொட்டும் உறுப்பு; sting of a wasp, hornet, scorpion. தேளுக்குக் கொடுக்கிலே நஞ்சு, தேவடியாளுக்கு உடம்பிலே நஞ்சு (பழ). 2. நண்டு முதலியவற்றின் இடுக்கிக் கால் (உ.வ.); claws of a crab, lobster. 3. குறும்பன், தீக்குணப் பையன்; mischievous lad. 4. ஆடை முதலியவற்றிற் கட்டிவிடுந் தொங்கல்; ornamental hangings or ends of cloth in wear. *"கச்சை புனைந்ததிலே விட்டான் பெருங் கொடுக்கு" (திருவாலவா.30:9).*

5. மூலத்தாறு; cloth passed between the legs and tucked up behind.

*[கொடு → கொடுக்கு.]*

**கொடுக்கு**[5] *kodukku*, பெ.(n.) மகன் (இ.வ.); son.

*[த. குழகன்; தெ. கொடுக்கு.]*

**கொடுக்குக்கட்டிநில்-தல் (நிற்றல்)** *kodukku-k-katti-nil-*, 14 செ.கு.வி.(v.i.) 1.விடாப்பிடியா யிருத்தல்; to stand with a firm resolve; to be resolute or determined 2. ஊக்கமாயிருத்தல்; to be earnestly engaged, as in an enterprise.

*[கொடுக்குக்கட்டி + நில்.]*

**கொடுக்குப்பிடி-த்தல்** *kodukku-p-pidi-*, 18 செ.குன்றாவி. (v.t.) ஒருவனை விடாது ஊழியன் போன்று, பின்தொடர்ந்து திரிதல்; to act as a person's satellite or underling.

*[கொடுக்கு + பிடி-.]*

**கொடுக்குமால்** *kodukku-māl*, பெ.(.n.) கலத்தின் முன்பகுதியில் காப்புக்காக அமைக்கப்பட்ட முக்கோணம் போன்ற காப்புப் பகுதி; jib, triangular portion of the boat or ship.

*[கொடுக்கு + மால்.]*

**கொடுக்கூர்** *kodukkūr*, பெ.(n.) சேரநாட்டில் புகழ் பெற்ற ஊர்களிலொன்று; a famous village in *Cēra* kingdom.

*[கொடுக்கு + ஊர்.]*

**கொடுக்கூர்ப்போர்** *kodukkūr-p-pōr*, பெ.(n.) சேரன் செங்குட்டுவன் செய்த போர்களில் குறிப்பிடத்தக்கது; site of a remarkable battle waged by *Cēran Šenguttuvan* and Pandiya etc., kings.

*[கொடுக்கூர் + போர்]*

சேரன் செங்குட்டுவன் கொங்கர் செங்களத்தே நடந்த போரில் தன்னை எதிர்த்த கொங்கர், சோழர், பாண்டியர் ஆகியோரை வென்றதாக இளங்கோவடி களால் குறிப்பிடப்பட்டுள்ளது.

**கொடுகணி** *kodu-kani*, பெ.(n.) 1.சிற்றாமுட்டி; rose coloured sticky mallow. 2. சிறுகாஞ்சொறி; small climbing nettle. 3. காட்டெலுமிச்சை; wild lime (சா.அக.).

*[கொடு + (கள்) கணி]*

**கொடுகிலை** *kodugilai-*. பெ.(n.) நகுதலிலை; common cherry nutmeg.

*[கொடுகு + இலை.]*

**கொடுகு**[1]**-தல்** *kodugu-*, 5 செ.கு.வி.(v.i.) 1.குளிரால் நடுங்குதல் (இ.வ.); to shrink or shiver with cold. 2. பற்கூசுதல்; to have the teeth set on edge (மு.தா.84.). பற்கொடுகுதல் அதிகமா யிருக்கிறது (உ.வ.).

ம. கோடுக.

*[குள் → குடு → கொடு → கொடுகு.]*

**கொடுகு**[2]**-தல்** *kodugu-*, 10 செ.கு.வி.(v.i.) கொடுமையாதல்; to be cruel, ruthless. *"கொடுகு வெஞ்சிலை வடுக வேடுவர்" (தேவா. 918:1).*

*[கொடு → கொடுகு.]*

**கொடுகொட்டி** *kodu-kotti*, பெ.(n.) 1. பதினோராடல் களுள், முப்புரம் எரித்தஞான்று சிவனாடிய கூத்து; Šiva's dance on the destruction of Tiripuram, one of 11 *kūttu*. *"இமையவ னாடிய கொடுகொட்டி யாடலும்" (சிலப். 6:43).* 2. ஒருவகைப் பறை; a kind of drum. *"குடமுழவங் கொடுகொட்டி குழலு மோங்க" (தேவா. 225:2).*

*[கொடுங்கொட்டி → கொடுகொட்டி (நச்.).]*

எண்திசையும் தீ எரியக்கண்டு இரங்காது கைகொட்டி நின்று ஆடுதலிற் கொடுமை யுடைத்தாதல் நோக்கி கொடுகொட்டி என்று பெயராயிற்று [அடியார்க். சிலப். 6:43].

கொடுங்கொட்டி கொடுகொட்டி எனத்திரிபுற்றது. எல்லாவற்றையும் அழித்து நின்று ஆடுதலின் கொடுங்கொட்டி என்றார். கொட்டுவது கொட்டி. கொட்டப்படும் இசைக்கருவிகளின் பாடலுக்கு இசைந்தனவும் ஆடலுக்கு இசைந்தனவும் என இருவகைப்படும். இங்கு கொட்டி என்பது ஆடலுக்கு இசைந்த கைகொட்டு ஓசையைக் குறித்தது. கொடுகொட்டி ஆடலைக் கொட்டிச் சேதம் எனவும் கூறுவர்.

**கொடுகொடு-த்தல்** *kodukodu-*, 4 செ.கு.வி.(v.i.) 1. குளிரால் நடுங்குதல்; to shiver or tremble with cold. 2. சடுதிப்படுதல் (இ.வ.);to be hasty.

*[குடுகுடு → கொடுகொடு.]*

**கொடுங்கண்** *kodun-kan*, பெ.(n.) தீமை விளை விக்கும் பார்வை (இ.வ.); evil-eye.

*[கொடும் + கண்.]*

**கொடுங்கரி** *kodun-kari*, பெ.(n.) பொய்ச்சாட்சி (யாழ். அக.); false witness.

*[கொடுமை + கரி.]*

**கொடுங்களூர்** *kodungalūr*, பெ.(n.) சேர அரசர்களது தலைநகரம்; *Kodungalūr*, the

capital of the *Cēra* kings who ruled *Cēranāḍu*.

ம.கொடுங்ஙல்லூர்,கொடுங்ஙுல்லூர், கொடுங்ஙொல் லூர், கொடுங்ஙோளூர்

*[கொடும் + (கோளூர்) களூர்.]*

**கொடுங்காய்** *koḍuṅ-kāy,* பெ.(n.) வெள்ளரி; lit., crooked fruit cucumber. *"வாள்வரிக் கொடுங் காய்" (சிலப். 16:25).*

*[கொடுமை + காய். கொடு = வளைவு.]*

**கொடுங்காரம்** *koḍuṅkāram,* பெ.(n.) 1.தாலம்பச் செய்நஞ்சு; a kind of arsenic. 2.கொடிய காரம்; strong alkali (சா.அக.).

*[கொடுமை + காரம்.]*

**கொடுங்காரல்** *koḍuṅ-kāral,* பெ.(n.) காரல்மீன்; a small kind of fish (மீன்.பிடி.தொ.).

*[கொடும் + காரல்.]*

**கொடுங்கால்**[1] *koḍuṅ-kāl,* பெ.(n.) 1. உள்வளைந்த கால்; inner arched post, pillar. 2. கோயில் மண்டபத் தூண்களில் போதிகையைத் தாங்கும் சிறிய அமைப்புடைய தூண் (கட்.தொ.); a small curved plank which connects the pillars and entablature.

*[கொடும் + கால்.]*

**கொடுங்கால்**[2] *koḍuṅkāl,* பெ.(n.) ஈன்றவுடன் எழுந்து நிற்கும் கன்றின் வளைந்த முன்கால்; bent foreleg of the calf.

*[கொடும் + கால்.]*

**கொடுங்காலம்** *koḍuṅ-kālam,* பெ.(n.) கொடுமை யான காலம்; a time of death, scarcity, drought, general suffering - oppression, cruelly.

*[கொடுமை + காலம்.]*

**கொடுங்காறல்** *koḍuṅ-kāṟal,* பெ.(n.) சுதுப்பு நாங்காறல் மீன்; horse-mackerel (செ.அக.).

*[கொடும் + காறல்.]*

**கொடுங்கீறு** *koḍuṅ-kīṟu,* பெ.(n.) கிழிந்த கீற்று; palm frond mat which is torn.

*[கொடும் + கீறு.]*

**கொடுங்கு-தல்** *koḍuṅgu-,* 11 செ.கு.வி.(v.i.) ***கொடுகு-தல்*** பார்க்க; see *koḍugu-*.

*[கொடுகு → கொடுங்கு.]*

**கொடுங்குழை** *koḍuṅ-kuḻai,* பெ.(n.) வளைந்த காதணி; twisted ear-ornament, one of sixteen kinds of ear-ornament.

*[கொடு + குழை.]*

**கொடுங்குளம்** *koḍuṅkuḷam,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[கொடும் + குளம்.]*

**கொடுங்குன்றம்** *koḍuṅ-kuṉṟam,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள பிரான்மலை (தேவா.); Pirāṉmalai, a hill and a town in the Ramanathapuram Dt.

*[கொடும் + குன்றம்.]*

**கொடுங்கூற்று** *koḍuṅ-kūṟṟu,* பெ.(n.) கொடிய நமன்; god of death, Yama.

*[கொடும் + கூற்று.]*

**கொடுங்கை** *koḍuṅ-gai,* பெ.(n.) 1.மடித்த கை; folded arm. *"மன்னர் மன்னவன் கொடுங்கைமேற் றுயின்றனள்" (நைடத. கான்புகு. 21).* 2. வீடு முதலியவற்றின் வெளிப்புறம் நீண்டு வளைந்துள்ள உறுப்பு; curved cornice or projection on the sides or front of a building, car, etc. *"மரகதக் கொடுங்கை சுற்றமைய வைத்தனன்" (தணிகைப்பு. வள். 12).* 3. கொடுமை (யாழ்ப்.); severity, harshness, oppression.


கொடுங்கை

*[கொடும் + கை.]*

**கொடுங்கைத்தாடி** *koḍuṅgai-t-tāḍi,* பெ.(n.) நீண்டு வளைந்த தாடி (வின்.); a long, rounded beard.

*[கொடுங்கை + தாடி.]*

**கொடுங்கையூர்** *koḍuṅgai-y-ūr,* பெ.(n.) சென்னை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Chennai Dt.

*[கொடுங்கை + ஊர்.]*

**கொடுங்கொடிச்சிலை** *koḍuṅkoḍi-c-cilai,* பெ.(n.) மஞ்சட்கல்; yellow ochre.

*[கொடும் + கொடி + சிலை.]*

**கொடுங்கோடாசூரி** *koḍuṅ-kōḍā-šūri,* பெ.(n.) அகத்தியர் செய்த நஞ்சுமுறிநூல்; a treatise on poisons with their antidotes and treatment compiled by Agastiya (சா.அக.).

*[கொடும் + கோடா + சூரி.]*

**கொடுங்கோபிச்சிலை** *koḍuṅ-kōpi-c-cilai,* பெ.(n.) 1. ஒருவகை மஞ்சள்நிறக் கல் (வின்.); a kind of yellow stone. 2. சுண்ணாம்புக்கல்; lime-stone.

*[கொடுங்கோபி + சிலை.]*

**கொடுங்கோல்** *koḍuṅ-kōl,* பெ.(n.) முறை (நீதி) தவறிய அரசாட்சி (lit., curved sceptre); unjust or unrighteous rule, despotic government, tyranny opp. to *Ceṅgōl.* "கொடுங்கோ லுண்டுகொல்" (சிலப்.23:111).

*[கொடுமை + கோல்.]*

செம்மை நேர்மை; கொடுமை வளைவு; முறை தவறிய ஆட்சி கொடுங்கோல்.

**கொடுங்கோவையுருக்கி** *koḍuṅ-kōvai-y-urukki,* பெ.(n.) சத்திசாரணை; spreading hogweed (சா.அக.).

*[கொடுங்கோவை + உருக்கி.]*

**கொடுங்கோள்** *koḍuṅ-kōḷ,* பெ.(n.) புறம்பே வசைகூறல், speak reproachfully behind the back, back biting.

*[கொடும் + கோள்.]*

**கொடுங்கோளூர்**[1] *koḍuṅ-kōḷūr,* பெ.(n.) 1. சேர நாட்டிலிருந்த ஒரு பழைய தலைநகரம்; a capital city in *Cēra* kingdom. 2. கழறிற்றறிவார் என்னும் சேரநாட்டு மன்னரான சிவனடியாரின் தலைநகரம்; capital city of the šaiva saint and king of the *cēra* country.

*[கடும் + கோ – கடுங்கோ + வேள் + ஊர் – கடுங்கோவேளூர் → கொடுங்கோவேளூர் → கொடுங்கோளூர் (கொ.வ.). கடுங்கோ என்பது சேரர்களின் இயற்பெயர். இதில் அகரமுதல் கொகர முதலாகத் திரிந்ததால் கடுங்கோ → கொடுங்கோ எனத் திரிந்தது. இருங்கோவேள் என்பது இருங்கோள் எனத் திரிந்தது போன்று கொடுங்கோவேள் →கொடுங்கோள் + ஊர் எனத் திரிந்தது.]*

மேற்குக் கடற்கரையில் அமைந்துள்ள சேரமாணின் தலைநகர். இப்பொழுது கொடுங்கனூர் எனப்படுகிறது.

**கொடுங்கோளூர்**[2] *koḍuṅ-kōḷūr,* பெ.(n.) கேரள மாநிலத்தில் பகவதியம்மனைக் கண்ணகியாக வழிபடும் ஊர்; a place in *Kērala* where Bhagavadi is worshipped as Kaṇṇagi. (சதாசிவ பண்டாரத்தாரின் பிற்காலச் சோழர் வரலாறு ப.106).

*[கொடும் + கோளூர்.]*

**கொடுங்கோன்மை** *koḍuṅ-kōṉmai,* பெ.(n.) செங்கோன்மையின் கோடுதல் தன்மை (நேர்மையற்ற ஆட்சி); unrighteous rule. opp. to *ceṅgōṉmai.*

**கொடுசூரி** *koḍu-šūri,* பெ.(n.) ***கொடுசூலி*** பார்க்க; see *koḍu-šūli.*

*[கொடு + சூலி →சூரி.]*

**கொடுசூலி** *koḍu-šūli,* பெ.(n.) கடுஞ்சினத்தள்; cruel, wicked woman, as *Kāḷi.*

*[கொடு + சூலி → சூரி.]*

**கொடுசூலித்தனம்** *koḍu-šuli-t-taṉam,* பெ.(n.) மிக்க கடுஞ்சினத்தன்மை (உ.வ.); extreme wickedness or cruelty applied to women.

*[கொடுஞ்சூலி + தனம்.]*

**கொடுஞ்சி** *koḍuñji,* பெ.(n.) ***கொடிஞ்சி*** பார்க்க; see *koḍiñji, "பூண்ட பொன்னுகக் கொடுஞ்சி.... கடுஞ்செல லாழித் திண்டேர்" (பெருங். உஞ்சைக். 48:15).*

*[கொடி → கொடிஞ்சி → கொடுஞ்சி.]*

**கொடுஞ்சுரம்** *koḍuñ-curam,* பெ.(n.) 1. நஞ்சுச்சுரம்; malignant fever. 2. கடுங்காய்ச்சல்; high degree of fever (சா.அக.).

*[கொடும் + சுரம்.]*

**கொடுஞ்சூரி** *koḍuñ-jūri,* பெ.(n.) 1. கொடியவன்; wickedman. 2.***கொடுசூரி*** (வின்.) பார்க்க; see *koḍu-šūri.*

*[கொடுமை + சூரி.]*

**கொடுஞ்சொல்** *koḍuñ-col,* பெ.(n.) வன்சொல்; rude language harsh speech.

*[கொடு → கொடும் + சொல்.]*

**கொடுஞ்சொறி** *koḍuñ-coṟi,* பெ.(n.) விலங்குகளுக்குக் காணுஞ் சொறிநோய்வகை; mango, scab or itch in animals.

*[கொடும் + சொறி.]*

**கொடு–த்தல்** *koḍu-,* 4 செ.கு.வி.(v.i.) ஈதல்; to give, to gift, to grant.

*[கொள் → கொடு.]*

கொடுத்தலும் பலவகைப்படும். அவை, வழக்கத்திற் கொடுத்தல், உரிமையிற் கொடுத்தல், அச்சத்தில் கொடுத்தல், பாவனையிற் கொடுத்தல், உவகையிற் கொடுத்தல், வெகுளியிற் கொடுத்தல், அவலத்தில் கொடுத்தல் முதலியன [ஆறு. நன். 298] [வரை.சொ.க.].

**கொடுத்துவை[1]–த்தல்** *koḍuttu-vai-,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. நம்பிக்கையாய் ஒருவரிடம் பொருளை வைத்தல்; to entrust or charge with. 2. எதிர்பாராத வாய்ப்புப் பெறுதல்; to get unexpected chance. குபேரன் பட்டணம் கொள்ளையானாலும் கொடுத்து வைக்காதவனுக்கு ஏதுமில்லை (பழ).

*[கொடுத்து + வை–.]*

**கொடுத்துவை[2]–த்தல்** *koḍuttu-vai-,* 4 செ.கு.வி. (v.i.) முற்பயனால் உதவுதல்; to be lucky. *உன்னைத் திருமணம் செய்து கொள்ள அவனுக்குக் கொடுத்து வைக்கவில்லை.*

*[கொடுத்து + வை.]*

**கொடுத்துவைத்தது** *koḍuttu-vaittadu,* பெ.(n.) நற்பேறு; luck.

*[கொடுத்து + வைத்தது.]*

**கொடுத்துவைத்தவன்** *koḍuttu-vaittavaṉ,* பெ.(n.) நற்பேறு அடைபவன்; lucky person.

*[கொடுத்து + வைத்தவன்.]*

**கொடுதலை** *koḍutalai,* பெ.(n.) பணம் முதலியன செலுத்துகை (இ.வ.); giving paying.

*[கொடு + தலை]*

**கொடுதலைமடிப்பு** *koḍutalai-maḍippu,* பெ.(n.) ***கொடுமுடிச்சு*** பார்க்க; see *koḍu-muḍiccu.*

*[கொடுதலை + மடிப்பு.]*

**கொடுதலைமுடிச்சு** *koḍutalai-muḍiccu,* பெ.(n.) ***கொடுமுடிச்சு[1]*** பார்க்க; see *koḍu-muḍiccu.*

*[கொடுதலை + முடிச்சு.]*

**கொடுதலைவிற்பூட்டு** *koḍutalai-viṟpūṭṭu,* பெ.(n.) ***கொடுதலை முடிச்சு*** பார்க்க; see *koḍutalai-muḍiccu.*

*[கொடுதலை + விற்பூட்டு.]*

**கொடுதி** *koḍudi,* பெ.(n.) 1. மரவாணி (யாழ்ப்.); peg for fastening a tenon in a mortise. 2. மடிப்புத் தொழில்; folding work (இரு.நூ.).

**ம.** கொடுதி.

*[கொடு → கொடுதி.]*

**கொடுந்தமிழ்** *koḍun-tamiḻ,* பெ.(n.) செந்தமிழ் நாட்டைச் சூழ்ந்திருக்கும் நிலங்களில் வழங்கும் தமிழ்மொழி (நன்.273, உரை); Tamil dialects current in regions surrounding *Centamiḻnāḍu.*

**ம.** கொடுந்தமிழ்.

*[கொள் (கொண்.) கொடு = வளைவு, வளைவான. கொடும் + தமிழ் – கொடுந்தமிழ் = செந்தமிழினின்று திரிந்த தமிழ். (வ.மொ.வ.7.).]*

இலக்கணம் நிரம்பிய சிறந்த செப்பமான தமிழ் செந்தமிழ். அது திரிந்தது கொடுந்தமிழ். செம்மை நேர்மை, கொடுமை வளைவு, செங்கோல், கொடுங்கோல் என்னுஞ் சொற்களை நோக்குக.

**கொடுந்தமிழ்நாடு** *koḍun-tamiḻ-nāḍu,* பெ.(n.) கொடுந்தமிழ் பேசப்படுவனவாகிய தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா, வேணாடு, பூழி, பன்றி, அருவா, அருவாவடதலை, சீதம், மலாடு, புனனாடு என்னும் பன்னிருநிலங்கள் (நன். 273, உரை); (தொல்.சொல் 400. சேனா.); regions where *koḍun-tamiḻ* is spoken, 12 in number, viz., *Teṉ-pāṇḍi, Kuṭṭam, Kuḍam, Karka, Vēṉāḍu, Pūḻi, Paṉṟi, Aruvā, Aruvā-Vaḍatalai, Cīḍam, Malāḍu, Puṉaṉāḍu,* Cenavaraiyar giving *Pongar-nāḍu* and Olinadu, instead of *Venāḍu* and *Puṉaṉāḍu.*

*[கொடுந்தமிழ் + நாடு.]*

தொல்காப்பியர் காலத்தில் இவையெல்லாம் செந்தமிழ் நிலமே. பிற்காலத்தில் செந்தமிழ் நிலப்பரப்பு மிகச் சுருங்கிய பின்னர் இப் பன்னிரண்டும் கொடுந்தமிழ்நாடு எனக் கணக்கிடப்பட்டன – பாவாணர் [தமிழ் வரலாறு 1967 ப.46].

**கொடுந்தலை** *koḍun-talai,* பெ.(n.) வளைந்த தலை.

*[கொடு → கொடும் + தலை.]*

**கொடுந்தலைப்பாறை** *koḍun-talai-p-pāṟai,* பெ.(n.) கொடிய பார்வையுடைய பாறைமீன்; a kind of fish having wild sight (மீன்.பிடி.தொ.).

*[கொடும் + தலை + பாறை.]*

**கொடுந்தலைப்பொருவா** *koḍun-talai-p-poruvā,* பெ.(n.) அறுவிரல் நீளமும், பொன்மை கலந்த வெண்ணிறமும் உள்ள கடல்மீன்வகை; anchovy, a sea-fish, silvery, tinged with gold, attaining 6 inches in length.

*[கொடும் + தலை + பொருவா.]*

**கொடுந்தறி** *koḍun-tari,* பெ.(n.) வளைந்த முளைக்கோல்; curved marking stick. *"செங்கேழ் வட்டஞ் சுருக்கிக் கொடுந்தறிச் சிலம்பி வானூல்" (நெடுநல்.58).*

*[கொடும் + தறி.]*

**கொடுந்தாள்** *koḍun-tāḷ,* பெ.(n.) கோடியிருந்த தாள்; bended leg.கொடுந்தாள் அலவன்.

*[கொடும் + தாள்.]*

**கொடுந்திண்ணை** *koḍun-tiṇṇai,* பெ.(n.) சுற்றுத்திண்ணை; a curved raised floor or veranda either out side or inside of the house (கட்.தொ.).

*[கொடும் + திண்ணை.]*

**கொடுந்துயர்** *koḍun-tuyar,* பெ.(n.) மிக்க துயரமாகிய இறப்பு; death. *"குரவர்க் குற்ற கொடுந்துயர் கேட்டு" (மணிமே.3:18).*

*[கொடுமை + துயர்.]*

**கொடுந்துன்பம்** *koḍun-tuṉbam,* பெ.(n.) 1. தாங்க வொண்ணாத் துயரம்; unbearable suffering. 2. புண்ணால் ஏற்பட்ட பெருந்துன்பம்; grievous hurt (சா.அக.).

*[கொடும் + துன்பம்.]*

**கொடுந்தொழில்** *koḍun-toḻil* பெ.(n.) கொடுமை யான செய்கை; cruel deed.

*[கொடுமை + தொழில்.]*

**கொடுந்தொழிலாளன்** *koḍun-toḻil-āḷaṉ,* பெ.(n.) 1.கொடுஞ்செய்கையுள்ளவன்; lit. one given to cruel deeds. 2. எமன்; Yama *"கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்ப" (மணிமே. 6:100).*

*[கொடும் + தொழிலாளன்.]*

**கொடுநஞ்சு** *koḍu-nañju,* பெ.(n.) 1.கொல்லுந் தன்மையுள்ள நஞ்சு; fatal poison, venom. 2. வெள்ளை வைப்புநஞ்சு. (வின்.); a mineral poison.

*[கொடு → கொடும் + நஞ்சு.]*

**கொடுநா** *koḍu-nā,* பெ.(n.) சித்திரமூலம் என்னும் மூலிகை; leadwort (சா.அக.).

மறுவ. கொடுவேலி.

*[கொடு + (நாவி) →நா.]*

**கொடுநாக்கு** *koḍu-nākku,* பெ.(n.) கருநாக்கு; vile tongue *(karunākku).*

*[கொடு + நாக்கு.]*

**கொடுநாக்கெறி-தல்** *koḍu-nākkeṟi-,* 2 செ.கு.வி. (v.i.) நாக்கைச் சப்புக்கொட்டல்; to beat the tongue against the palate.

*[கொடு + நாக்கு + எறி-.]*

**கொடுநாவி** *koḍu-nāvi,* பெ.(n.) கொடுவேலி, சித்திரமூலம்; plumbago genus.

*[கொடு + நாவி.]*

இது மூவகைப்படும்; மருத்துவக் குணம் உடையது [சா.அக.].

**கொடுநீபம்** *koḍu-nībam,* பெ.(n.) மஞ்சட் கடம்பு; yellow cadamba (சா.அக.).

*[கொடு + நீபம்.]*

**கொடுநீர்** *koḍu-nīr,* பெ.(n.) கழுதையின் சிறுநீர்; ass's urine (சா.அக.).

*[கொடு + நீர்.]*

**கொடுநுகம்** *koḍu-nugam,* பெ.(n.) 1.நுகத்தடி; yoke. *"கொடுநுக நுழைந்த கணைக்கா லத்திரி" (அகநா. 350).* 2. கலப்பை; plough. 3. ***மகம்*** பார்க்க; see *magam.*

*[கொடு + நுகம்.]*

**கொடுநோய்** *koḍu-nōy,* பெ.(n.) மாட்டுநோய் வகை; a disease of cattle.

*[கொடு + நோய்.]*

**கொடுப்பக்குழி** *koḍuppa-k-kuḻi,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[கொடுப்பு + குழி - கொடுப்புக்குழி → கொடுப்பக்குழி.]*

**கொடுப்பரளை** *koḍu-p-paraḷai,* பெ.(n.) வாய்நோய் வகை; a disease of the mouth.

*[கொடு + பரளை.]*

**கொடுப்பனவு** *koḍu-p-paṉavu,* பெ.(n.) 1.கொடுக்குந்தன்மை; 2. பெண்ணைத் திருமணம் செய்து கொடுத்தல்; giving a girl in marriage. 3. கொடுக்க வேண்டிய தொகை; amount to be paid.

*[கொடு + பனவு.]*

**கொடுப்பனை** *koḍu-p-paṉai,* பெ.(n.) ***கொடுப் பனவு*** பார்க்க; see *koḍu-p-paṉavu.*

*[கொடு + பனை.]*

**கொடுப்பினை** *koḍuppiṉai,* பெ.(n.) 1. நற்பேறு, கொடுத்து வைத்தது; luck. *எங்களுடைய கொடுப்பினை அவ்வளவுதான்.* 2. கொள்வினை கொடுப்பினை; giving and taking girl in marriage.

*[கொடுப்பு → கொடுப்பினை.]*

**கொடுப்பு**[1] *koḍuppu,* பெ.(n.) 1.கதுப்பு; jaw including cheek (சா.அக). 2. கடைவாய்; region in the mouth near molar teeth.

*[கொள் (கொண்) → கொடு = வளைவு, வளைவான. கொடு → கொடுப்பு = குறடுபோன்ற கதுப்பு (அலகு) (வ.மொ.வ.1)*

**கொடுப்பு**[2] *koḍuppu,* பெ.(n.) 1.கொடுக்கை; giving. 2. விளையாட்டாக அடிக்கை (வின்.); playful dealing of blows.

**ம.** கொடுப்பு.

*[கொடு → கொடுப்பு.]*

**கொடுப்புப்பல்** *koḍuppu-p-pal,* பெ.(n.) 1.மெல்லும் பல்; molar teeth. 2. கடைவாய்ப் பல்; grinders (சா.அக.).

*[கொடு → கொடுப்பு + பல்.]*

**கொடுப்புப்பீறி** *koḍuppu-p-pīṟi,* பெ.(n.) கன்னத் திற்கும் தாடைக்கும் இடையே யுண்டாகும் ஒரு சிலந்தி; cancer arising between the cheeck and the jaw (சா.அக.).

*[கொடு → கொடுப்பு + பீறி.]*

**கொடுப்புலியார்** *koḍu-p-puliyār,* பெ.(n.) கள்ளர்குடிப் பட்டப்பெயர்களுள் ஒன்று (கள்ளர் சரித்.ப.98); a caste title of Kaḷḷars.

*[கொடும் + புலி + ஆர். கொடும்புலி → கொடுப்புலி.]*

**கொடுப்பை** *koḍuppai,* பெ.(n.) பொன்னாங்காணி (மலை.); sessile plant, a plant, growing in damp places.

**ம.** கொடுப்பை.

*[கொடுப்பு → கொடுப்பை.]*

**கொடுப்பைத்தைலம்** *koḍuppai-t-tailam,* பெ.(n.) பொன்னாங்கண்ணித் தைலம்; medicated oil prepared with sessile plant as chief ingredient (சா.அக.).

**மறுவ.** கொடுபைநெய்.

*[கொடுப்பை + தைலம்.]*

இது மூளைக்குக் குளிர்ச்சியைத் தரும்.

**கொடுப்பைநெய்** *koḍuppai-ney,* பெ.(n.) பொன்னாங்கண்ணி நெய்; a medicated ghee prepared with dry sessile plant mixed with other ingredients (சா.அக.).

**மறுவ.** கொடுபைக்கிருதம்.

*[கொடுப்பை + நெய்.]*

**கொடுபச்சை** *koḍu-paccai,* பெ.(n.) 1.பொன்னாங் கண்ணி; sessile plant. 2. ஒருவகை மீன்; a fish (சா.அக.).

*[கொடு + பச்சை.]*

**கொடுபடு-தல்** *koḍu-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) கடன் முதலியன செலுத்தப்படுதல்; to be discharged or paid, as a debt, to be returned, as borrowed article.

*[கொடு + படு-. படு - து.வி.]*

**கொடுபாடு** *koḍu-pāḍu,* பெ.(n.) ***கொடுதலை*** (இ.வ.) பார்க்க; see *koḍu-talai.*

*[கொடு + பாடு.]*

**கொடுபோ-தல்** *koḍu-pō-,* 8 செ.குன்றாவி.(v.t.) கொண்டு செல்லுதல்; to carry. *"தன்பொருள் கொடுபோந் தென்ன" (கந்தபு. ஆற்று.30).*

*[கொடு + போ-.]*

**கொடும்பகல்** *koḍum-pagal,* பெ.(n.) நண்பகல் (இ.வ.); mid-day.

*[கொடும் + பகல்.]*

**கொடும்பறை** *koḍum-paṟai,* பெ.(n.) கண்கள் வளைந்த பறை; a drum with a curved central spot. *"கொடும்பறைக் கோடியர் கடும்புடன் வாழ்த்தும்" (மதுரைக்.523).*

*[கொடும் + பறை.]*

**கொடும்பனி** *koḍum-paṉi,* பெ.(n.) கடும்பனி; severe cold, frost.

*[கொடும் + பனி.]*

**கொடும்பனிக்காலம்** *koḍum-paṉi-k-kālam,* பெ.(n.) பனி மிகுந்துள்ள கும்ப, மீன மாதங்கள் (பிங்.); the months of Māśi and Paṅguṉi, season of heavy dews.

*[கொடும் + பனி + காலம்.]*

**கொடும்பாடன்** *koḍum-pāḍaṉ,* பெ.(n.) கொடியவன்; cruel man. ***"கண்ணறையன்***

கொடும்பாட னென்றுரைக்க வேண்டா" (தேவா. 670:9).

[கொடும்பாடு → கொடும்பாடன்.]

**கொடும்பாடு** *kod um-pāḍu,* பெ.(n.) 1. கொடுமை, துன்பம்; cruelty, severity, hardship. "கோவலர் வாழ்க்கையோர் கொடும்பா டில்லை" (சிலப். 15:1121). 2. மாறுபாடு; perversit. "கொடும்பா டறியற்க வெம்மறிவு" (பரிபா.2:76).

[கொடுமை + பாடு – கொடும்பாடு.]

**கொடும்பாதகம்** *koḍum-pādagam,* பெ.(n.) 1. அல்நயன், அறக்கேடு (அநீதி); injustice. 2. கொடிய ஏய்ப்பு (வஞ்சனை) deceit.

[கொடும் + பாதகம்.]

**கொடும்பாவி**[1] *koḍum-pāvi,* பெ.(n.) 1.கொடுஞ் செயற்காரன்; heinous sinner. "பயமெனுமோர் கொடும்பாவிப் பயலே" (அருட்பா,vi. தான் பெற்ற.17). "கொடும்பாவியானாலும் கொண்ட மாமியார் வேண்டும்" – பழ. 2. எதிர்ப்பைத் தெரிவிக்கும் வகையில் தெருவில் இழுத்துச் சென்று எரிக்கும் உருவம்; effigy (as a protest.). கொடுமைக் காரனுக்குக் கொடும்பாவி எரித் தார்கள் (உ.வ.).

[கொடும் + பாவி.]

**கொடும்பாவி**[2] *koḍum-pāvi,* பெ.(n.) பஞ்ச முதலியன உண்டான காலங்களில் அவை தீரும்படி, ஊர்த்தெருக்களிற் கட்டியிழுத்துக் கொளுத் தப்படும் வைக்கோலுருவம் (உ.வ.); straw effigy representing the most heinous sinner, dragged through the village streets in time of drought and then burnt to expiate public crime and bring rain.

[கொடுமை + பாவி – கொடும்பாவி.]

**கொடும்பாவை** *koḍum-pāvai,* பெ.(n.) ***கொடும்பாவி***[2] பார்க்க; see *koḍum-pāvi.*

[கொள் → கொடு → கொடுமை → கொடும் + பாவை.]

**கொடும்பாளூர்** *koḍum-pāḷūr,* பெ.(n.) புதுக்கோட்டைச் சீமையில் உள்ள வரலாற்றுப் புகழ்மிக்க ஒரூர்; a village in *Puḍukkōṭṭai* state noted for its historical interest. "கோனாட்டுக் கொடிநகரங் கொடும்பாளூர்" (பெரியபு. இடங்கழி.).

[கொடும்பை (குளம், நீர்நிலை) + ஆளூர் கொடும்பையாளூர் → கொடும்பாளூர்.]

பெரிய நீர்நிலைகள் அமைந்திருந்தமையால் பிற்காலத்தில் கொடும்பாளூர் என்றும் வழங்கி இருக்கலாம். கி.பி.768–815 –இல் பராந்தக நெடுஞ்செழியனால் எழுதப்பட்ட வேள்விக்குடிச் செப்பேட்டில் 'கொடும்பாளூர்' என்று குறிப்பிட்டுள்ளதை ஒப்பு நோக்கலாம்.

**கொடும்பாளூர் அரையர்** *kōḍumbāḷūr-araiyar,* பெ.(n.) கள்ளர்குடிப் பட்டப்பெயர்களுள் ஒன்று (கள்ளர்சரித்.ப.98); a caste title of Kaḷḷars.

[கொடும்பாளூர் + அரையர்.]

**கொடும்பு**[1] *koḍumbu,* பெ.(n.) கொடுமை; cruelty, severity.

[கொள் → (கொண்) கொடு = வளைவு, வளைவான. கொடு → கொடுமை = வளைவு, தீமை, கடுமை. கொடு → கொடும்பு = கொடுமை.]

**கொடும்பு**[2] *koḍumbu,* பெ.(n.) 1.சிம்பு; small fibrous rising on a surface of thread or string. 'வெண்சிறு கடுகளவும் கொடும்பில்லை யாம்படி தீற்றி' (மலைபடு. 24, உரை). 2. தவிட்டுப்பொடி (இ.வ.); bran. 3. முறுக்கு மிகுதியான கயிறு; highly twisted rope (மீன்.பிடி.தொ.).

[கொடு → கொடும்பு.]

**கொடும்புராயர்** *koḍumburāyar,* பெ.(n.) ***கொடும்பாளூர் அரையர்*** பார்க்க; see *koḍumpāḷūr-araiyar.*

[கொடும்பை → கொடும்பு + அரையர்.]

**கொடும்புரி** *koḍum-puri,* பெ.(n.) 1. ***கொடி முறுக்கு*** பார்க்க; see *koḍi-murukku.* 2. கடுஞ்சூழ்ச்சி (வின்.); deep-laid plot.

[கொடும் + புரி.]

**கொடும்புலி** *koḍum-puli,* பெ.(n.) 1. அரிமா (சிங்கம்) (உரி.நி.); lion. 2. மடங்கல் (சிங்கராசி); leo, a constellation of the zodiac.

[கொடும் + புலி.]

**கொடும்பேதி** *koḍumpēdi,* பெ.(n.) 1. மச்சமுனி யென்னும் சித்தன் வசமிருந்த ஒரு கவன குளிகை; animated mercurial pill in possession of a šiddha named Maccamuni, for flying in the sky. 2. கொடிய வயிற்றுப்போக்கு; diarrhoea of virulent type; violent purging. 3. கக்கல் கழிச்சல்; cholera (சா.அக.).

[கொடும் + பேதி.]

**கொடும்பை**[1] *koḍumbai,* பெ.(n.) 1. நீர்வீழ்ச்சி (அக.நி.); waterfall. 2. குன்றம் (அக.நி.); bill, hil-lock. 3. குளம் (அக.நி.); tank. 4. தூம்பு (சது.); gutter, drain. 5. தாம்பு (அக.நி.); rope,halter.

6. பச்சிலைப்பூடுவகை (அக.நி.); a kind of evergreen shrub with medicinal properties.

*[குடும்பு + கொடும்பு → கொடும்பை.]*

**கொடும்பை**[2] *kodumbai,* பெ.(n.) 1. ***கொடும் பாளூர்*** பார்க்க; see *kodumbālūr.* *"கொடும்பை நெடுங்குளக் கோட்டகம்" (சிலப். 11:71).* 2. ஒரு பச்சிலை; a medicineal green leaf.

*[கொடும்பு → கொடும்பை.]*

**கொடும்பைத்தியம்** *kodum-paittiyam,* பெ.(n.) 1.கொடிய கிறுக்கு; dangerous lunacy; extreme insanity. 2. ஊறு செய்யும் கிறுக்கு; insanity leading to acts of violence (சா.அக.).

*[கொடும் + பைத்தியம்.]*

**கொடும்பைப்பட்டி** *kodumbai-p-patti,* பெ.(n.) கரூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Erode Dt.

*[கொடும்பை + பட்டி.]*

**கொடும்போக்கு** *kodum-pōkku,* பெ.(n.) வீட்டிற்குத் திரும்பிவருங்கருத்தின்றி வெளியேறுகை (இ.வ.); departure, as from home, with no intention of returning.

*[கொடும் + போக்கு.]*

**கொடுமச்சேறு** *kodumaccēru,* பெ.(n.) கடலடிச்சேறு; mire in the bottem of the sea (மீன்.பிடி.தொ.).

*[கொடும் + அடிச்சேறு – கொடுமடிச்சேறு → கொடுமச்சேறு.]*

**கொடுமடி** *kodu-madi,* பெ.(n.) பண்டம் இடுதற்காக வளைத்துக் கட்டிய மடி; cloth at the waist folded to hold things, as in a bag. *"கொடுமடி யுடையர் கோற்கைக் கோவலர்" (அகநா. 54:10).*

*[கொடு + மடி.]*

**கொடுமணம்** *kodu-manam,* பெ.(n.) அணிகலன் களுக்குப் பேர்பெற்ற பழையதோர் ஊர்; an ancient town noted for manufacture of jewellery. *"கொடுமணம் பட்ட வினைமா ணருங்கலம்" (பதிற்றுப். 74).*

*[கொடு + மணம்.]*

கொடுவூர், கொடூர் என்பன கொடையளிக்கப்பட்ட ஊர்களின் பெயர்கள். கொடுமணம் என்பது திருமணக் கொடையாக வழங்கப்பட்ட ஊராகலாம்.

**கொடுமணல்** *kodu-manal,* பெ.(n.) ஈரோடு மாவட்டத்துச் சிற்றூர்; a village in Erode Dt.

*[கொடு + மணல்.]*

கொடு= வளைந்த. ஆற்றங்கரையின் வளைந்த மணல் மேட்டருகில் அமைந்த ஊராகலாம்.

**கொடுமரம்** *kodu-maram,* பெ.(n.) 1.வில்; bow. *"கொடுமரந் தேய்த்தார்" (கலித். 12).* 2. சிலை (தனு)யோரை (சூடா.); Sagittarius, a constellation of the zodiac. 3. ஏணிப்பழு; rung of a ladder. *"கொடுமரம் பற்றி நெட்டிதண் பொலிந்தும்" (கல்லா. 22:98).*

*[கொடு + மரம். கொள் → (கொண்) → கொடு = வளைவு.]*

**கொடுமலையாளம்** *kodu-malai-y-ālam,* பெ.(n.) 1.அரிதிற் பொருள்படும் மலையாள மொழிவகை; a Malaiyalam dialect considered difficult to be understood. 2. கொடுமலையாளம் பேசும் மலையாள நாட்டுப் பகுதி; that part of Malabar where Kodumalaiyālam is spoken. *"கொடுமலை யாளக் குடியிருப் புடையோன்" (மனோன். பாயி.).*

*[கொடு + மலையாளம் → கொடுமலையாளம் எளிதில் விளங்காத பழமலையாளம் (மலையாள் + அம்).]*

**கொடுமன்** *koduman,* பெ.(n.) 1. சரிவு, சாரல்; slope. 2. கொடுமைக்காரன்; wicked person.

*[கொடு + அன் – கொடுவன் → கொடுமன்.]*

**கொடுமனூர்** *koduman-ūr,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kadalur Dt.

*[கொடுமன் (சரிவு, சாரல்) + ஊர்.]*

**கொடுமுடி** *kodu-mudi,* பெ.(n.) 1.மலையுச்சி; summit of a mountain, peak. 2. உப்பரிகை; terrace or top of a mansion. *"கோடுயர் மாடத்துக் கொடுமுடி" (பெருங்.மகத.8:15).* 3. ***பாண்டிக் கொடுமுடி*** பார்க்க; see *Pāndi-k-kodumudi.*

*[கொடு + முடி.]*

**கொடுமுடிச்சு** *kodu-mudiccu,* பெ.(n.) 1.அவிழ்க்க முடியாத முடிச்சு; hard, inextricable knot. 2. கேடு சூழும் சூழ்ச்சி; malignant plot, vile conspiracy.

*[கொடு + முடிச்சு.]*

**கொடுமுடிந்த வழக்கு** *kodu-mudinda-valakku,* பெ.(n.) ***கொடிமுடிந்த வழக்கு*** பார்க்க; *kodi-mudinda-valakku.*

*[கொடி → கொடு + முடிந்த + வழக்கு.]*

**கொடுமுடிப்பூடு** *kodumudi-p-pūdu,* பெ.(n.) கோபுரங்களில் வளர்ந்துள்ள செடிவகை; plants growing in vimanas of temple (சா.அக.).

*[கொடுமுடி + பூடு.]*

**கொடுமுண்டி** *koḍu-muṇḍi,* பெ.(n.) சொத்தைக் களா (L.); bushy roundish - leaved sweet thorn.

*[கொடு + முண்டி.]*

**கொடுமுறுக்கு** *koḍu-muṟukku,* பெ.(n.) 1. நூலின் மிகச் சுற்றியேறிய முறுக்கு; inextricable twisting of strands or inextricable knots in a string. 2. சிம்பு(பத்துப்.ப. 607, கீழ்க்குறிப்பு); small fibrous risings on the smooth surface of a string.

*[கொடு + முறுக்கு.]*

**கொடுமூலி** *koḍu-mūli,* பெ.(n.) செங்கொடிவேலி; a runnig plant whose root is a powerful caustic; rose coloured leaved-wort (சா.அக.).

*[கொடு + மூலி.]*

**கொடுமூலை** *koḍu-mūlai,* பெ.(n.) எளிதில் அறிந்து செல்லக்கூடாத மூலையிடம் (இ.வ.); out-of the way corner.

*[கொடு + மூலை.]*

**கொடுமை**[1] *koḍumai,* பெ.(n.) 1.மாந்தத் தன்மையற்ற கொடுஞ்செயல்; cruelty, tyranny. inhumanity. *"கொடுமைபல செய்தன" (தேவா. 945:1)*. 2. கடுமை (கந்தபு. பார்.6);severity, harshness. 3. முருட்டுத் தன்மை; roughness, uncouthness. 4. தீமை; vileness, wickedness. *"கூனுஞ் சிறிய கோத்தாயுங் கொடுமை யிழைப்ப" (கம்பரா. மந்திரப். 1).* 5. வேண்டா வார்த்தை (அக.நி.); harsh words, slander.

ம.கொடும.

*[கொடு → கொடுமை.]*

**கொடுமை**[2] *koḍumai,* பெ.(n.) 1.வளைவு (சிலப். 11: 20.); crookedness, obliquity. 2 மனக்கோட்டம்; partiality. *"கொடுமையுஞ் செம்மையும்" (பரிபா. 4 : 50).* 3. ஒருபாற்கோடுதல் (நீதிதவறுதல்); injustice. *"கொடியோர் கொடுமை" (தொல்.பொருள். 147).* 4. கரிசு, பாவம் (இ.வ.); sin. 5. வக்கிராந்த வைப்பு நஞ்சு (சங்.அக.); a mineral poison.

*[கொள் → கொண் → கொடு → கொடுமை.]*

அறனழியப் பிறரைச் சூழும் சூழ்ச்சி [தொல். பொருள். 270, இளம்.] கேடுசூழ நினையும் தீவினையுள்ளம் [தொல். பொருள். 257, பேரா.] [உரை.சொ.க.].

**கொடுமைசொல்(லு)-தல்** *koḍumai-col(lu)-,* 8 செ.குன்றாவி.(v.t.) தீமை பயக்கும் கொடுஞ் சொற்களைக் கூறுதல் (கொ.வ.); to speak harsh or cruel words.

*[கொடுமை + சொல்-.]*

**கொடுமைத்தானம்** *koḍumai-t-tāṉam,* பெ.(n.) பிறப்போரைக்கு எட்டாமிடம் (சங்.அக.); the eigth house from the ascendant.

*[கொடுமை + தானம். தானம் = இடம்.]*

**கொடுவரி** *koḍu-vari,* பெ.(n.) வளைந்த வரிகளை யுடைய புலி; lit., that which has curved stripes, tiger. *"கொடுவரி வழங்குங் கோடுயர் நெடுவரை" (புறநா. 135:1).*

மறுவ. வேங்கை, வரிப்புலி, கொடுவாய்.

*[கொடு(வளைந்த).+ வரி]*

**கொடுவலை** *koḍu-valai,* பெ.(n.) ஒருவகை மீன் வலை; a kind of fishing net (பரத.கலை. சொ.அக).

*[கொடு + வலை.]*

**கொடுவா**[1]**-தல் (கொடுவருதல்)** *koḍu-vā-,* 15 செ.குன்றாவி.(v.t.) கொண்டுவருதல்; to bring. *"கொடுவருதி ரிரதமெனக் கூற லோடும்" (கந்தபு. தாரக. 31).*

*[கொண்டு → கொடு + வா-.]*

**கொடுவா**[2] *koḍuvā,* பெ.(n.) ஒருவகைமீன்; a kind of fish.

*[கொடு → கொடுவாய்]*

**கொடுவாக்குட்டி** *koḍuvā-k-kuṭṭi,* பெ.(n.) சிறு கொடுவா மீன்; a kind of small fish (மீன்.பிடி.தொ.).

*[கொடுவாய் + குட்டி →கொடுவாக்குட்டி]*

**கொடுவாஞ்சி** *koḍu-vāñji,* பெ.(n.) கொட்டாஞ்சி; *Koṭṭāñji*, which see (சா.அக.).

*[கொடு + வாஞ்சி.]*

**கொடுவாத்திருக்கை** *koḍuvāt-tirukkai,* பெ.(n.) ஒருவகைத்திருக்கை மீன்; a kind of fish.

*[கொடு + வாய் + திருக்கை.]*



கொடுவாத்திருக்கை

**கொடுவாய்**[1] *kodu-vay,* பெ.(n.) 1.வாள் முதலியவற்றின் வளைந்த வாய்; curved or bent edge, as of a bill-hook. *"கொடுவாய்க் குயத்து" (சிலப். 16:30).* 2. குறளை (பிங்.); tale-bearing, back-biting. 3. பழிச்சொல்; reproach. *"கன்னிகா காமியெனுங் கொடுவாய்" (சீகாழித். கொச்சை.31).* 4. ஐந்தடி நீளமும் சாம்பல் நிறமும் உள்ள மீன்வகை (M.M.195.); cockup, grey, attaining 5ft. in length. 5. புலிவகை (இ.வ.); a species of tiger. 6. தூங்கும்போது வழியும் எச்சில்; saliva flowing out of mouth during sleep.

*[கொடு (வளைந்த) + வாய்.]*

**கொடுவாய்**[2] *kodu-vāy,* பெ.(n.) ***கோடைவாய்*** பார்க்க; see *kōdai-vāy.*

*[கொடுமை + வாய்.]*

**கொடுவாய்**[3] *kodu-vāy,* பெ.(n.) ***கொட்டுவாய்*** பார்க்க; see *kottu-vāi.*

*[கொட்டு → கொடு + வாய்.]*

**கொடுவாய்**[4] *kodu-vāy,* பெ.(n.) ஈரோடு மாவட்டத்துச் சிற்றூர்; a village in Erode Dt.

*[கொடு + வாவல் - கொடுவாவல் →கொடுவாவு → கொடுவாய்.]*

**கொடுவாய்க்கத்தி** *kodu-vāi-k-katti,* பெ.(n.) வளைந்த கத்தி; curved knife.

*[கொடுவாள் + கத்தி - கொடுவாள்கத்தி → கொடுவாய்க்கத்தி.]*

**கொடுவாயிரும்பு** *kodu-vāy-irumbu,* பெ.(n.) தூண்டில் முதலியவற்றிலுள்ள இரும்புக் கொக்கி; iron hook, as of an angle. *"கொடுவா யிரும்பின் கோளிரை துற்றி" (அகநா. 36:2).*

*[கொடு (வளைந்த) + வாய் + இரும்பு.]*

**கொடுவால்முறுக்கு-தல்** *koduvāl-murukku-,* 5 செ.குன்றாவி.(v.t.) வண்டியில் பூட்டிய மாட்டின் வாலை விரைவாகச் செல்வதற்காக முறுக்குதல்; to twist the tail of the ox to drive it fast.

*[கொடுவால் + முறுக்கு-.]*

**கொடுவாவல்** *kodu-v-vāval,* பெ.(n.) ***கொடுவாய்***[4] பார்க்க; see *kodu-vāy.*

*[கொடு + வாவல்.]*

**கொடுவாள்** *kodu-vāl,* பெ.(n.) 1.அரிவாள்; amputating knife, bill-hook, sickle. 2. மழு; battle axe. *"வலக்கை யஞ்சுடர்க் கொடுவாள் பிடித்தோள்" (சிலப். 23:8).*

*[கொடு + வாள்.]*

**கொடுவாளை** *kodu-vālai,* பெ.(n.) 1. ஓர் ஆற்று மீன்; a river fish Indian perch. 2. பனையேறி மீன்; nayar fish - lates fish (சா.அக.).

*[கொடு+வாளை.]*

**கொடுவிலார்பட்டி** *kodu-vilār-patti,* பெ.(n.) தேனி மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Tēni* Dt.

*[கொடு + வி(ல்)லார் + பட்டி.]*

**கொடுவிழுதை** *kodu-viludai,* பெ.(n.) பெருநெல் வகை (இ.வ.); a kind of paddy.

*[கொடு+விழுதை.]*

**கொடுவினை** *kodu-vinai,* பெ.(n.) முற்பிறவியில் செய்த தீவினை; evil deeds of former births. *"கொடுவினையா ரென்றும் குறுகாவடி" (தேவா. 969:2).*

*[கொடு + வினை.]*

**கொடுவூர்** *kodu-v-ūr,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village donated in olden days in Ramanadhapuram Dt.

*[கொடு + ஊர் - கொடுவூர் (கொடையளித்த ஊர்).]*

**கொடுவேரி** *kodu-vēri,* பெ.(n.) ***கொடுவேலி*** பார்க்க; see *kodu-vēli. "செங்கொடு வேரி தேமா மணிச்சிகை"(குறிஞ்சிப்.64).*

ம. கொடுவேரி.

*[கொடு + (வேலி) வேரி.]*

**கொடுவேலி** *kodu-vēli,* பெ(n.) சித்திரமூலம் என்னும் கொடி (மலை.); Ceylon leadwort, climber.

**மறுவ.** அகனாதி, அணிஞ்சகம், அணிஞ்சில், அதிகநாறி, அதிபநிங்கி, அரி, அருணவேலி, அழல், அழற்சூடி, அனல், அனலம், ஆங்காரசத்தி, ஆண்கொடிவேலி, ஆதிமகாமூலி, இலதை வன்னி, உக்கன், உடல்வேதிச்சி, உதகவன், உதங்கன், உமிழ்நீர்பெருக்கி, எழுநா, ஒலிகைச்செடி, கனலி, காணீலம், காரிகை, காரிமை, காரீமை, காவிக்கருப்பி, கானலிந்தரின்கொடி, சூரியவன்னி, கொடிச்சி, கொடிவேர், கொடிவேலி, கொடுவேரி, கோணுங்காகிலம், கோமுச்சிரவல்லி, சத்தி, சதாவேதா, சதாவேதை, சாத்துவாதி, சித்தர்மூலம், சித்திமூலம், சித்திரக்கொடி, சித்திரகம், சிலைமண், சிவம், செருக்கன், சோதி காந்தம், தணலாகினி, தணலாற்றி, தபனகம், தமரகி, தழல், தழற்கொடி, தாகம், திகனாதி, திசைநாச்செடி, துவயாக்கினி, நடக்கையறிவாள், நெருப்புமூலி,

பகப்பாதி, பாடினம், மகந்தம், வங்கி, வச்சகாரம், வசகம், வசங்கம், வஞ்சகாரம், வறாளம், வன்னி, வனமா, வாளகச்சிகை, வெண்கொடிமூலம்.

*[கொடு + வேலி.]*

**கொடுவை** *koḍuvai,* பெ.(n.) கெட்டவியல்பு; wickedness. *'கொடுவைப் பசுக்களை' (ஈடு. 4, 8:4).*

*[கொடு → கொடுகு. கொடுகுதல் = கொடிதாதல். கொடு → கொடுவை = தீயதன்மை.(வ.மொ.வ.).]*

**கொடூர்** *koḍūr,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvallur Dt.

*[கொடு + ஊர் – கொடுவூர் → கொடூர் (கொடையளித்த ஊர்).]*

**கொடூரம்** *koḍūram,* பெ.(n.) கொடுமை; cruelty, severity, harshness.

*[கொடு → கொடுரம் → கொடூரம்..]*

**கொடை**[1] *koḍai,* பெ.(n.) உயிர், உடம்பு, உறுப்பு முதலிய எல்லாப் பொருளும் கொடுக்கை (தொல். பொருள். 257); the act of gift as of life body and parts of body.

*[கொடு → கொடை]*

**கொடை**[2] *koḍai,* பெ.(n.) 1. ஈகை; giving away, as a gift, donation. *"இல்லான் கொடையே கொடைப்பயன்" (நாலடி. 65).* இலுப்பை சக்கரைக் கொடையாம் துரைகள் மெச்சின நடையாம் (பழ). 2. கைக்கொண்ட நிரையை, இரவலர்க்கு வரையாது கொடுக்கும் புறத்துறை; Puram theme of a king distributing liberally to the poor the enemy's cattle captured by him. *"உண்டாட்டுக் கொடையென" (தொல். பொருள்.58).* 3. சிற்றூர்த் தெய்வத்திற்கு மூன்று நாள் செய்யும் திருவிழா (G.M.D.I. 117); three day festival of a village deity. 4. வசவு, திட்டு, அடி, round abuse, round blows. அவள் கொடுத்த கொடை ஏழுசன்மத்திற்குப் போதும். 5. அடி; round blows.

*[கொடு → கொடை..]*

**கொடைக்கடம்** *koḍai-k-kaḍam,* பெ.(n.) கொடையாகிய கடமை; charity - giving considered a duty. *"கொடைக் கடம்பூண் கொள்கை யனாகி" (பெருங்.நரவாண.8:43).*

*[கொடை + (கடன்) → கொடை...]*

**கொடைக்கானல்** *koḍai-k-kāṉal,* பெ.(n.) பழனி மலைத் தொடரின் தென்பால் 7000 அடிக்குமேல் உயரமுள்ள மலைப்பகுதி; the southern ridge of the Palaṉi Hills, more than 7,000 ft. high. 2. கோடைக்கானல் மலையின் உச்சியில் குளிர்ச்சிக் காகத் தங்கும் ஒரு மலைநகர்; a sanatorium at the top of *Kōḍaikkāṉal.*

*[கோடைக்கானல் → கொடைக்கானல்.]*

கோடைக்காற்று வீசும் மேற்குத் திசை கோடை எனப்படும். கோடைக்கானல் என்பது மேற்கு மலைக்காடு எனப் பொருள்படும். கானல் = சோலை, அடர்ந்த காடு.

**கொடைக்கை** *koḍa-k-kai,* பெ.(n.) வீட்டின்முகடு; ridge of a roof.

*[கொடு → கொடை + கை.]*

**கொடைசாலி** *koḍai-šāli,* பெ.(n.) ஈகையாளன்; a liberal man, banefactor.

*[கொடை + சாலி. ஒருகா. கொடையாளி → கொடைசாலி (கொ.வ.).]*

**கொடைத்தம்பம்** *koḍai-t-tambam,* பெ.(n.) ஈகத்திற்கு அறிகுறியாக நாட்டு தம்பம்; pillar commemorating one's munificence.

*[கொடை + தம்பம்.]*

**கொடைநம்பிகள்** *koḍai-nambigaḷ,* பெ.(n.) திருவாய்மொழிக்கு "மனத்தாலும் வாயாலும்" என்னுந் தனியனைப் பாடியவர்; a *Vaisṇavite* poet who contributed eulogical preface to one of *Tiruvāimoḻi* hymns.

*[கொடை + நம்பிகள்.]*

**கொடைநேர்**[1]**–தல்** *koḍai-nēr-,* 2 செ.குன்றாவி. (v.t.) மகளை மணம் செய்துகொடுக்க உடன்படுதல்; to agree to give one's daughter in marriage (இ.வ.). *"ஆர்வுற் றெமர்கொடை நேர்ந்தார்" (கலித். 104:75).*

*[கொடு → கொடை + நேர்தல்.]*

**கொடைநேர்**[2]**–தல்** *koḍai-nēr-,* 2 செ.கு.வி.(v.i.) சிறுதெய்வத்திற்கு விழா எடுக்கத் தீர்மானித்தல்; to promise or mentally resolve the celebration of a festive worship to a deity.

*[கொடு → கொடை + நேர்தல்.]*

**கொடைப்பணக்காரன்** *koḍai-p-paṇakkāraṉ,* பெ.(n.) மிகுந்த செல்வமுள்ளவன்; man of great wealth.

*[கொடை + பணக்காரன்.]*

**கொடைப்பொருள்** *koḍai-p-poruḷ,* பெ.(n.) கொடுக்கப்படும் பொருள்; material that is gifted.

*[கொடை + பொருள்.]*

**கொண்டைபோடு-தல்** *kondai-pōdu-,* 19 செ.கு.வி.(v.i.) கல்வியறிவின்மை, நாகரிக மின்மையைக் குறித்தல்; indicative of an illiterate and uncultured person. இதையெல்லாம் கொண்டை போட்ட ஆளைப்பார்த்துச் சொல் (உ.வ.).

*[கொண்டை + போடு-.]*

**கொடைமடம்** *kodai-madam,* பெ.(n.) வரை வின்றிக் கொடுக்கை (இ.வ.); unrestricted munificence. *"கொடைமடம் படுத லல்லது" (புறநா. 142:5).*

*[கொடை + மடம். கொடைமடம் = கொடுப்பதில் நேரும் அறியாமையின் வெளிப்பாடு.]*

யாருக்கு எது எப்போது எக்காரணத்திற்காகத் தருதல் வேண்டும் என்று ஆய்ந்து நோக்காமல், பரிவும் அன்பும் மட்டுமே கருதி உடனே கேட்டதைத் தருதலும், கேளாமலே அதன் பின்விளைவு நோக்காமல் தருதலும் கொடைமடம் எனப்படும்.

**கொடைமடம்படு-தல்** *kodai-madam-padu-,* 20 செ.கு.வி. (v.i.) ***கொடைமடம்*** பார்க்க; see *kodai madam.*

*[கொடை + மடம் + படு.]*

**கொடைமுடி** *kodai-mudi,* பெ.(n.) சரக்கொன்றை; Indian laburnum.

*[குடை → கொடை + முடி.]*

**கொடைமை** *kodaimai,* பெ.(n.) கொடைத்தொழில்; munificence *"கொடுத்த லெய்திய கொடையமை யானும்" (தொல்.பொருள்.63).*

*[கொடு → கொடைமை.]*

**கொடையாளன்** *kodai-y-ālan,* பெ.(n.) ஈகையுள்ளவன்; munificent person (இ.வ.) *"கோலக்கா மேவுங் கொடையாளா" (அருட்பா. i. விண்ணப். 16).*

*[கொடை + ஆளன்.]*

**கொடையாளி** *kodai-y-āli,* பெ.(n.) ***கொடையாளன்*** பார்க்க; see *kodai-y-ālan.*

*[கொடை + ஆளி. ஒ.நோ. பாட்டாளி.]*

**கொடையெதிர்-தல்** *kodai-y-edir-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. கொடுத்தலை மேற்கொள்ளுதல் (இ.வ.); to make a gift offering. *"குத்தொக வரூஉங் கொடை யெதிர் கிளவி" (தொல்.சொல். 99. இளம்.).* 2. கொடுப்பதனை யேற்றல் (இ.வ.); to accept or receive. *"கொடையெதிர் கிளவியெனக் கொள்வோ னாகவும்" (இலக்.கொத்.ப.5).*

*[கொடை + எதிர்.]*

**கொடையோன்** *kodaiyōn,* பெ.(n.) ***கொடையாளன்*** (பிங்.) பார்க்க; see *kodai-y-ālan.*

*[கொடையான் → கொடையோன்.]*

**கொடைவஞ்சி** *kodai-vañji,* பெ.(n.) போரில் வென்றுகொண்ட பொருளைப் பாடிய பாணர்க்கு அரசன் பரிசாக அளிப்பதைக் கூறும் புறத்துறை (பு.வெ.3,16); (Purap.) theme of a king liberally rewarding his panegyrists with the spoils of war.

*[கொடை + வஞ்சி.]*

**கொடைவினா** *kodai-vinā,* பெ.(n.) 1. கொடுக்கும் நோக்கத்தோடு கேட்கும் வினா; a question implying willingness to give as Has he no dress?. 2. அறுவகை வினாக்களிலொன்று; one of the six kinds of interrogation. 'சாத்தற்கு ஆடை யில்லையோ என்பது கொடைவினா' (நன்.385, உரை).

*[கொடை + வினா.]*

**கொடைவீரம்** *kodai-vīram,* பெ.(n.) மிகு கொடையினா லுண்டாகும் வீரம்; heroism, magnanimity created by the exercise of munificence.

*[கொடை + வீரம்.]*

**கொண்கன்** *kongan,* பெ.(n.) 1. கணவன்; husband. 2. தலைவன்; hero, leader. 3. நெய்தனிலத் தலைவன் (திவா.); hero of maritime tract.

*[கொள்கு → கொண்கு + அன்.]*

**கொண்காகிதம்** *konkāgidam,* பெ.(n.) முயற்புல்; hare's tail grass (சா.அக.).

மறுவ. மூகைப்புல்.

**கொண்கானம்**[1] *kon-kānam,* பெ.(n.) மலை யொன்றின் பெயர்; a name of a mountain. *"பொன்படு கொண்கான நன்னன்" (நற்.391) (புறநா.154,உரை).*

*[கொண்மூ (மேகம்) → கொண் + கானம்.]*

**கொண்கானம்**[2] *kon-kānam,* பெ.(n.) ஒரு மலை; Mt. Konkana. *"பொன்படு கொண்கான நன்னன்" (நற்.391).*

*[கொண்மூ (மேகம்) → கொண் + கானம்.]*

**கொண்ட**[1] *konda,* வி.எ.(adv.) 1. எடுக்கப்பட்ட; having taken. 2. வாங்கப்பட்ட; received. 3. விலைக்கு வாங்கப்பட்ட; purchased.

ம. கொண்ட.

*[கொள் → கொண் → கொண்ட.]*

**கொண்ட**[2] *konda,* இடை.(part.) ஓர் உவமச்சொல்; a word denoting comparison. *"யாழ்கொண்ட விமிழிசை" (கலித்.29:17).*

*[கொள் → கொண்ட.]*

**கொண்டக்கரை** *konda-k-karai,* பெ.(n.) சிறுகரை; small bund.

*[கொண்டம் + கரை.]*

**கொண்டக்காரர்** *konda-k-kārar,* பெ.(n.) பரதவ இனத்தாருள் ஒரு பிரிவினர்; a sub caste of fishermen.

*[கொண்டை + காரர்.]*

**கொண்டக்கிரி** *konda-k-kiri,* பெ.(n.) ஒருவகைப் பண் (யாழ்.அக.); a kind of musical mode.

*[கொண்டைக்கிரி → கொண்டக்கிரி.]*

மேகராகக் குறிஞ்சியின் ஒருவகையாகலாம்.

**கொண்டகம்புகு-தல்** *kondagam-pugu-,* 21 செ.கு.வி. (v.i.) பெருந்திணைத் துறைகளு ளொன்று; one of the themes in love poetry which explains the lust. *"கண்டுகளித்துக் கயலுண்கண் நீர்மல்கக் கொண்டகம் புக்காள் கொடியன்னாள்" (பு.வெ.12:3).*

*[கொண் + அகம் + புகு-.]*

**கொண்டகரை** *konda-karai,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tiruvallur Dt.

*[கொண்டன் + கரை.]*

**கொண்டகாரிகுப்பம்** *kondakāri-kuppam,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanjipuram Dt.

*[கொண்டன் + காரி + குப்பம்.]*

**கொண்டகி** *kondagi,* பெ.(n.) நச்சுவித்துகளைக் கொண்ட மரம்; strychnos nux-vomica (சா.அக.).

*[கள் → கண்டு→ கண்டகி → கொண்டகி.]*

**கொண்டகுண்டம்** *konda-kundam,* பெ.(n.) ***கொண்டகி*** பார்க்க; see *kondagi.*

*[கண்டு →கண்ட + குண்டம் – கண்டகுண்டம் → கொண்டகுண்டம்.]*

**கொண்டகுளம்** *konda-kulam,* பெ.(n.) எட்டிமரம் (மலை.); with a piosonous and very bitter fruit.

*[கள் → கண்ட + குளம் → கொண்டகுளம்.]*

**கொண்டங்கி** *kondangi,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanjipuram Dt.

*[கொண்டன் + அங்கி. அணங்கு → அணங்கி → அங்கி.]*

**கொண்டங்குறவான்** *kondankuravān,* பெ.(n.) வெண்மை கலந்த சிவப்பு வரியையுடைய ஒரு வகைக் கடல்மீன்; a sea-fish with white and red stripes (சா.அக.).

*[கண்டங்கறையன் → கொண்டங்குறவான்.]*

**கொண்டச்சானி** *konda-c-cāni,* பெ.(n.) நஞ்சறுப்பான்; a medicinal creeper.

*[கண்டம் + சாலி – கண்டசாலி →கொண்டச்சானி.]*

**கொண்டச்சானிக்கிழங்கு** *konda-c-cāni-k-kilangu,* பெ.(n.) நஞ்சறுக்கும் கிழங்குவகை; root of above creeper.

*[கண்டம் → சாலி + கிழங்கு.]*

**கொண்டசமுத்திரம்** *konda-samuttiram,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Viluppuram Dt.

த. கடலன் > **Skt.** samuttiram.

*[கொண்டன் + சமுத்திரம்.]*

இவ்வூரின் பழைய பெயர் கொண்டன்கடலனூர்.

**கொண்டசிரம்** *konda-śiram,* பெ.(n.) 1. கடற்கரையிலுள்ள தாழை; sea-weed. 2. செந்தாழை; false tragacanth (சா.அக.).

**மறு.** 1. கொந்தாழை.

*[கண்டல் + சிரம் – கொண்டசிரம்.]*

**கொண்டஞ்சேரி** *kondañ-cēri,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tiruvallur Dt.

*[கொண்டன் + சேரி.]*

**கொண்டடை**[1]**-தல்** *kondadai-,* 2 செ.குன்றாவி. (v.t.) பகுதிபகுதியாகக் கூரைவேய்தல்; to cover the sloping roof (with *ōlās*) in part by part (கட்.தொ.).

*[கொண்டு (பகுதியாகக் கொண்டு) +அடை-.]*

**கொண்டடை**[2] *kondadai,* பெ.(n.) கூரைவேயும் போது பகுதி பகுதியாகக் கட்டப்படும் ஒரு பகுதி; a portion tied at the time of covering the roof with *ōlās* (கட்.தொ.).

*[கொண்டு (பகுதியாகக் கொண்டு) + அடை.]*

**கொண்டதும்பை** *konda-tumbai,* பெ.(n.) மலைத் தும்பை; stooping toombay (சா.அக.).

**மறுவ.** கவிழ்தும்பை.

*[கொண்டை + தும்பை.]*

**கொண்டப்பநாயக்கன்பட்டி** *kondappa-nāyakkan-patti,* பெ.(n.) சேலம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Salem Dt.

*[கொண்டப்பன் + நாயக்கன் + பட்டி.]*

**கொண்டப்பனை**[1] *konda-p-panai,* பெ.(n.) பனை மடலில் தீ மூட்டும் விழா; a festival of fire using palm leaves.

**மறுவ.** காந்தம்பனை, கூந்தற்பனை.

*[குண்டம் → கொண்டம் + பனை.]*

**கொண்டப்பனை**[2] *konda-p-panai,* பெ.(n.) 1. ஈர்ப்புப் பனை; hill arecanut palm. 2. மலைப்பனை; hill toddy palm. 3. குடைப்பனை; umbrella palm (சா.அக.).

*[கொண்டை + பனை.]*

**கொண்டபாகம்** *konda-pāgam,* பெ.(n.) 1. நிறை சுமை; full weight. 2. பொறுக்கக்கூடிய சுமை; weight which one could bear (சா.அக.).

*[குண்டைபாகம் → கொண்டபாகம்.]*

**கொண்டபாடு** *konda-pādu,* பெ.(n.) கோட்பாடு; opinion, belief. 'நெறியன்றி ஒருவர் தம்மை மனத்தின்கட் கொண்டக்கால் அக்கொண்ட பாட்டினின்றும் மீட்டுத் தெருட்டுதல்' (பழ.37, உரை).

*[கொண்ட + பாடு.]*

**கொண்டபாரம்** *konda-pāram,* பெ.(n.) நிறை சுமை; full load (யாழ்.அக.).

*[கொள் → கொண்ட (நிறைந்த) + பாரம்.]*

**கொண்டபாளையம்** *konda-pālaiyam,* பெ.(n.) ஊர்ப்பெயர்; name of a place.

*[கொண்டன் + பாளையம்.]*

**கொண்டம்**[1] *kondam,* பெ.(n.) குறிஞ்சா; an edible and medicinal creeper.

*[குண்டம் → கொண்டம்.]*

**கொண்டம்**[2] *kondam,* பெ.(n.) மேட்டுநிலத்தில் பாய்ச்சுதற்காகத் தேக்கிய நீர்நிலை; small reservoir formed by damming a river or channel for irrigating field on a high level.

*[குண்டம் → கொண்டம்.]*

**கொண்டம்பட்டி** *kondam-patti,* பெ.(n.) கோவை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kovai Dt.

*[கொண்டன் + பட்டி.]*

**கொண்டமங்கலம்** *konda-mangalam,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanjipuram Dt.

*[கொண்டன் + மங்கலம்.]*

**கொண்டமாந்தம்** *konda-māndam,* பெ.(n.) குழந்தைகளுக்குண்டாகும் ஒருவகை மாந்த நோய்; indigestion in children due to derangement of the three humours in the system (சா.அக.).

*[கண்டல் → கொண்டல் → கொண்ட + மாந்தம்.]*

**கொண்டயனேரி** *kondaya-nēri,* பெ.(n.) சிவகங்கை வட்டத்தில் சோழபுரம் கோயிலுக்கு வழங்கப்பட்ட ஏரி; a lake donated to the temple, at Cholapuram in Sivagangai Dt. *"துடையனூர் முட்டத்து திருச்சேலூரும் அமண்புரத்தூரும் கொண்டைய னேரியும்" (S.I.I. XXVI.526).*

*[கொண்டயன் + ஏரி.]*

**கொண்டராங்கி கீரனூர்** *kondarāngi-kiranūr,* பெ.(n.) திண்டுக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dindukkal Dt.

*[கண்டிரக்கோ → கண்டிரங்கோ → கொண்டரங்கோ. கொண்டராங்கி + கீரனூர்.]*

**கொண்டல்**[1] *kondal,* பெ.(n.) 1.கொள்ளுகை; taking. *"உணங்கற் றலையிற் பலிகொண்ட லென்னே" (தேவா. 614:5).* 2. மேகம் (இ.வ.); cloud. *"கொண்டல் வண்ணா குடக்கூத்தா" (திவ். திருவாய்.8:5,6).* 3. மழை (ஞான. 43:14, உரை); rain. 4. மேழவோரை, மேடராசி (சாதகசிந். காலநிக. 24); aries a constellation of the zodiac. 5. ***கொண்டற் கல்*** பார்க்க; see *kondar-kall*(சங்.அக.). 6. மகளிர் விளையாட்டுவகை; a girls' game.

*[கொள் → கொண்டு → கொண்டல்.]*

**கொண்டல்**[2] *kondal,* பெ.(n.) 1. கீழ்காற்று (இ.வ.); east wind. *"கொண்டன் மாமழை பொழிந்த.... துளி" (புறநா. 34:22).* 2. காற்று (பிங்.); wind. 3. கிழக்கு; east.

*[குள் → குணக்கு (கிழக்கு) → குண்டல் → கொண்டல்.]*

**கொண்டல்**[3] *kondal,* பெ.(n.) 1. மந்தாரச்சிலை; black - stone species (mineral). 2. நெருப்பு; fire (சா.அக.).

*[கொள் → கொண்டு → கொண்டல்.]*

**நீரை முகந்துகொள்வதால் மேகத்தையும் எதையும் பற்றிக்கொள்வதால் தீயையும் குறித்தது.**

**கொண்டல்தொவகரை** *kondal-tovakarai,* பெ.(n.) கிழக்கிலிருந்து மேற்காய்ச் செல்லும் கடல்

நீரோட்டம்; under water current in sea which passes from east to west (மீன்.பிடி.தொ.).

[கொண்டல் → (தொகுவரை) தொவகரை (கொ.வ.).]

**கொண்டல்நீர்** *koṇḍal-nīr,* பெ.(n.) கிழக்கிலிருந்து மேற்காய் வரும் கடல்நீரோட்டம்; under water current in sea that passes from east to west (மீன்.பிடி.தொ.).

[கொண்டல் + நீர்.]

**கொண்டல்மிதி-த்தல்** *koṇḍalmidi-,* 4 செ. குன்றாவி. (v.t.) தீ மிதித்தல்; fire walking (யாழ்.அக.).

[கொண்டல் + மிதி. கொண்டல் = நெருப்பு. **கொண்டல்**[3] பார்க்க; see *koṇḍal*[3].]

**கொண்டல்மேனி** *koṇḍal-mēṉi,* பெ.(n.) நீலத் தாமரை; blue lotus (சா.அக.).

[கொண்டல் + மேனி.]

**கொண்டல்வண்ணன்** *koṇḍal-vaṇṇaṉ,* பெ.(n.) மேகநிறமுடையவன்; Viṣṇu as the cloud-coloured. *"கொண்டல் வண்ணனை" (திவ். அமலனாதி.10).*

[கொண்டல் + வண்ணன்.]

**கொண்டலடித்தல்** *koṇḍal-aḍi,* பெ.(n.) மகளிர் விளையாட்டிலொன்று; a kind of woman's play.

[கொண்டல் + அடித்தல்.]

**கொண்டலவ்வம்** *koṇḍalavvam,* பெ.(n.) இலவங்கப்பட்டை (சா.அக.); wild cinnamon, cassia lignia or cassia bark.

[கொண்டை + இலவங்கம் - கொண்டையிலவங்கம் → கொண்டலவ்வம்.]

**கொண்டலாங்குப்பம்** *koṇḍalāṅ-kuppam,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

[கொண்டலான் + குப்பம்.]

**கொண்டலாத்தி**[1] *koṇḍalātti,* பெ.(n.) 1.கொண்டையை அசைக்கும் ஒரு குருவி; mountain bulbul with crest erected at will. 2. சிவப்புக் கொண்டலாத்தி; red-whiskered bulbul. 3. கொண்டைக் குருவி; crested bird. 4. புழுக்கொத்தி; a large kind of crested bird (சா.அக.).


கொண்டலாத்தி

[கொண்டை + கிளாறு → கொண்டைலாறு → கொண்டலாத்தி (கொ.வ.).]

**கொண்டலாத்தி**[2] *koṇḍalātti,* பெ.(n.) கொண்டைக் கிளாத்தி என்னும் மீன்வகை; a kind of fish.

ம. கொண்டலாத்த; தெ. கொண்டலாடி.

[கொண்டை + (கிளாத்தி) லாத்தி → கொண்டைலாத்தி → கொண்டலாத்தி (கொ.வ.).]

**கொண்டலுப்பு** *koṇḍal-uppu,* பெ.(n.) கறுப்புப்பு; black salt (சா.அக.).

[கொண்டல் + உப்பு.]

**கொண்டலை** *koṇḍalai,* பெ.(n.) 1. கொண்டல் மரம்; sea side Indian oak. 2. ***சமுத்திரக் கடம்பு*** பார்க்க; see *śamuttira-k-kaḍambu.*

[கொண்டல் → கொண்டலை.]

**கொண்டவலை** *koṇḍa-valai,* பெ.(n.) ***கொண்டை வலை*** பார்க்க; see *koṇḍai-valai.*

மறுவ. இருவலை.

[கொண்டை → கொண்டவலை (கொ.வ.).]

**கொண்டவன்** *koṇḍavaṉ,* பெ.(n.) 1. பொருளைப் பெற்றுக்கொண்டவன்; one who receives the material. 2. கணவன்; husband. கொண்டவன் தன்பக்கம் இருந்தால் கூரையேறிச் சண்டை யிடலாம் (பழ).

ம. கொண்டவன்; பட. கொண்டம.

[கொள் → கொண்டு → கொண்டவன்.]

**கொண்டவன் கொடுத்தவன்** *koṇḍavaṉ koḍuttavaṉ,* பெ.(n.) ***கொண்டான் கொடுத்தான்*** பார்க்க; see *koṇḍāṉ-koḍuttāṉ.*

[கொண்டவன்+ கொடுத்தவன்.]

**கொண்டவாக்கம்** *koṇḍa-vākkam,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanjipuram Dt.

[கொண்டன் + (பாக்கம்) வாக்கம்.]

**கொண்டவாகை** *koṇḍa-vāgai,* பெ.(n.) கொண்டைவாகை பார்க்க; see *koṇḍai-vāgai.*

[கொண்டைவாகை → கொண்டவாகை (கொ.வ.).]

**கொண்டற்கல்** *kondar-kal,* பெ.(n.) ***கொண்டற் சிலை*** பார்க்க; see *kondar-cilai* (சா.அக.).

*[கொண்டல்+ கல்.]*

**கொண்டற்சிலை** *kondar-cilai,* பெ.(n.) மந்தாரச் ***சீலை***; a species of black stone (mineral) thought capable of converting camphor into copper (சா.அக.).

*[கொண்டல் + சிலை.]*

இதனால் கற்பூரம் செம்பாகும் எனக் கருதினர்.

**கொண்டற்பகை** *kondar-pagai,* பெ.(n.) காற்று; wind, air as enemy of clouds or rain (சா.அக.).

*[கொண்டல் + பகை.]*

**கொண்டா** *kondā,* பெ.(n.) ஆந்திரப்பிரதேசம் விசாகப்பட்டிணம், திரு (ஸ்ரீ)காகுளம் மாவட்டங்களில் 40000 பழங்குடிமக்கள் பேசும் திராவிட மொழி. கூயி, கூவி மொழிகளுடன் தொடர்புடையது. a Dravidian language spoken by tribals in Višakapattinam, SriKakulam districts of Andhra Pradesh.

*[குன்று > தெ. கொண்டா (மலை, மலைவாழ் மக்களின் மொழி).]*

இந்தக் "கொண்டா" மொழிபற்றிக் காண்க: Sanford B. Steever(Ed.) The Dravidian Languages; 1998, London, Routledge see Ch.IX (pp.241-269): "Konda" by Bh. Krishnamurthi and Brett A. Bentham.

**கொண்டாச்சான்** *kondāccān,* பெ.(n.) ***ஒட்டை மரம்*** பார்க்க; see *ottai-maram.*

*[குண்டு → கொண்டு + ஆச்சான்.]*

**கொண்டாட்டக்காரன்** *kondātta-k-kāran,* பெ.(n.) 1. மகிழ்ச்சியுள்ளவன்; cheerful man. 2. தோழன்; companion.

*[கொண்டாட்டம் + காரன்.]*

**கொண்டாட்டம்**[1] *kondāttam,* பெ.(n.) 1.பொழுது போக்கு; pastime. 2. சிறப்பு நிகழ்ச்சி; celebration. விடுதலைநாள் கொண்டாட்டம். 3. திருவிழா; festival. கடை கெட்ட மூளிக்குக் கோபம் கொண்டாட்டம் (பழ).

ம. கொண்டாட்டம்; க., து. கொண்டாட; தெ. கொண்டாட்டு.

*[கொள் → கொண் → கொண்டு + ஆட்டம். ஆடு → ஆட்டம். (ஏதையேனும் கையில் கொண்டு அல்லது வெற்றி கொண்டு ஆடுதல்).]*

**கொண்டாட்டம்**[2] *kondāttam,* பெ.(n.) 1. கொண்டாட்டு; joy. *'காதலன் கொண்டாட்டத்தாலே களித்து' (சீவக. 229,உரை).* 2. களிப்பு; delight.

*[கொண்டு + ஆட்டம்.]*

மகிழ்ச்சிக்குரிய இனிய நினைவை அல்லது நிகழ்ச்சியை மனத்துட் கொண்டு ஆடுதல். ஒன்றனை அல்லது ஒருவரைத் தலைமேற் கொண்டு ஆடுதல்.

**கொண்டாட்டு** *kondāttu,* பெ.(n.) 1. கொள்கை; policy. 2. சீராட்டு; civilities, great attention to a guest. 3. பாராட்டல்; praise, appreciation, fond ling, caressing. *"கொண்டாட்டும் குலம்புனைவும்" (திவ்.திருவாய்.4,9:3).*

*[கொண்டு + ஆட்டு.]*

**கொண்டாடல்** *kondādal,* பெ.(n.) 1. கொண்டாடுதல்; celebrate. 2. பேயாடல்; dancing through the influence of devils (சா.அக.).

*[கொண்டு + ஆடல்.]*

**கொண்டாடு-தல்** *kondadu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. கூடிக்குலவுதல்; to enjoy a person's society. 2.பாராட்டுதல் (இ.வ.); to praise. *"கொண்டாடுதல் புரியாவரு தக்கன்" (தேவா.908:9).* 3. விழா முதலியன கொண்டாடுதல்; celebrating a festival. 4. பலர் அறியும்படி தெரிவித்தல்; claim; சொத்துக்கு உரிமை கொண்டாட வந்துவிட்டான் (உ.வ.).

ம. கொண்டாடுக; க.,தெ.,து.கொண்டாடு ; துட. கொண்டார்.

*[கொண்டு + ஆடு-.]*

**கொண்டாபுரம்** *konda-puram,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tiruvallur Dt.

*[கொண்டான் + புரம்.]*

**கொண்டாரணியம்** *kondāraniyam,* பெ.(n.) நுழைய முடியாத பெருங்காடு; thick impenetrable forest. *"கொண்டாரணியமான இடம்".*

*[கள் → (முள்) → கண்டு → கொண்டு + ஆரணியம். ஆரணியம் = காடு → அரண் → அரணியம் → ஆரணியம்.]*

**கொண்டாழி** *kondāli,* பெ.(n.) நிலத்தின் பெயர்; name of a land. இறையிழிச்சின நிலம் தேவதானம் கொண்டாழி என்னும் பழம்படி நிலம் ஐஞ்சும் (S.I.I. XXII, 389).

*[ஒருகா. கொண்டன் + வாழி.]*

**கொண்டான்**[1] *kondāṉ*, பெ.(n.) 1.***கொண்டவன்*** பார்க்க (இ.வ.);see *kondavaṉ*. *"கொண்டானிற் றுன்னிய கேளிர் பிறரில்லை" (நான்மணி.56).* 2. ***கொண்டல்*** பார்க்க; see *kondal*. 3. ஒரு விளையாட்டு; a kind of play.

*[கொண்டவன் → கொண்டான்.]*

**கொண்டான்**[2] *kondāṉ*, பெ.(n.) தமிழை இழித்துக்கூறிய குயக்கொண்டான்; *kuya-k-kōndāṉ*, who under estimated Tamil by making false remarks.

*[குயக்கொண்டான் → கொண்டான் (முதற்குறை)* ***கொண்டான்மார்*** *பார்க்க; see kondāṉmār.]*

**கொண்டான்கொடுத்தான்** *kondāṉ-koduttāṉ*, பெ.(n.) கொண்டுங் கொடுத்தும் மணத்தொடர்பு செய்தோர்; persons who have entered into matrimonial alliance by the marriage of their sons and daughters in exchange.

**மறுவ.** விழைவர் (சம்பந்தி), உறவாடி.

*[கொண்டவன் + கொடுத்தவன் → கொண்டான் கொடுத்தான்.]*

பழ : 'கொண்டானும் கொடுத்தானும் ஒண்ணு; இந்தக் கலியாணத்தைக் கூட்டி வைத்தவன் வாயில் மண்ணு'.

**கொண்டான்மார்** *kōndāṉ-mār*, பெ.(n.) 1. காட்டிக் கொடுப்பவர்; இரண்டகர்; traitors. 2. நம்பவைத்து ஏய்ப்பவர்கள்; cheats, deceivers. 3. இரண்டகம் செய்வோர்; betrayers; treacherous people.

**மறுவ.**ஐந்தாம்படை, இரண்டகர், காட்டிக்கொடுப்பவர், கோடரிக்காம்பு, கருங்காலி.

*[குயக்கொண்டான் → கொண்டான் + மார் - கொண்டான்மார் (முதற்குறை).]*

குயக்கொண்டான் என்பவன் தமிழனாய் இருந்தும் தமிழ்மீதும் தமிழினத்தின் மீதும் சிறிதும் பற்றும் பரிவும் இல்லாமலும் தமிழ் வரலாறு தமிழர் வரலாறு ஆகியவற்றின் உண்மை நிலைகளை யுணராமலும் '''ஆரியம் நன்று தமிழ் தீது'' என முற்றிலும் வேண்டுமென்றே உண்மைக்குப் புறம்பாகத் தமிழைத் தாழ்த்தியுரைத்தான். தமிழுக்கும் தமிழினத்துக்கும் இரண்டகம் செய்தான். நன்றி கெட்ட இவன் பெயரை, நன்றி கெட்டுத் தன்னினத்தைத் தானே காட்டிக் கொடுக்கும் அனைவர்க்கும் ஆள்வது வழக்கமாயிற்று. இவன் ஒரு குயக்கொண்டான் என்றும் பேசலாயினர். இதன் பலர்பால் வடிவம் கொண்டான்மார்.

குயக்கொண்டானின் இழிசெயலை,

"ஆரியம் நன்று தமிழ்தீது என்றுரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானை"

என்னும் வெண்பாவாலும் அறியலாம்.

**கொண்டானடித்தல்** *kondāṉadittal*, பெ.(n.) ஒருவகை விளையாட்டு; a kind of game. *"கொண்டானடிக்கிறாக்" (நந்தனார் சரித்திரம்).*

*[கொண்டான் + அடித்தல்]*

**கொண்டானடி-த்தல்** *kondāṉ-adi-*, 4 செ.கு.வி. (v.i.) மகிழ்ச்சியால் தடுத்தாடுதல்; to dance in merriment. *"பேயெழும்பி யெழும்பிக் கொண்டானடிக்க" (இராமநா. உயுத்.78).*

*[கொண்டான் + அடி-.]*

**கொண்டி**[1] *kondi*, பெ.(n.) 1.பிறர் பொருளைக் கொள்ளுகை; getting possession of somebody else's property. *"நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டி மகளிர்" (மதுரைக்.583).* 2. களவு; theft. *"கொண்டியிலே பிடியுண்டு" (ஈடு.7,7:2).* 3. கொள்ளை; plunder. *"கொண்டியும் பெரிதென" (புறநா.78:6.).*

**ம.** கொண்டி,கொள்ள; **க.**கொள்ளெ; **தெ.**கொல்ல.

*[கொள் → கொண் → கொண்டி (வே.க.166).]*

**கொண்டி**[2] *kondi*, பெ.(n.) கப்பம்; tribute. *"கொண்டி வேண்டுவ னாயின்" (புறநா.51:6).*

**மறுவ.** திறை.

*[கொள் → கொண்டி (வே.க.199).]*

**கொண்டி**[3] *kondi*, பெ.(n.) 1. மிகுதி; abundance. *"கொண்டி யுண்டித் தொண்டையோர்" (பெரும் பாண்.454).* 2. அடங்காத-வன்-வள்-து; haughty person or animal. *"கொண்டி யாயினவா றென்றன் கோதையே" (தேவா.710:73.).* 3. பரத்தை; prostitute. *"வீழ்ந்த கொண்டி மல்லன் மார்பு மடுத்தனள்" (நற்.174).*

**தெ.** தொண்டி.

*[கொள் → கொண்டி.]*

**கொண்டி**[4] *kondi*, பெ.(n.) 1. கதவுக் குடுமி; corner pin of a door on which it swings. 2. சங்கிலி மாட்டும் இரும்பு; clamp, cleat of a door lock. 3. ஏர்க்கொழு மாட்டும் ஆணி; the pin that holds the share to the plough. 4. கொக்கி; a hook. 5. கழுத்தணி, வளையல் போன்றவற்றில் இணைக்கும் வளைந்த பகுதி; the clasp or hook of a chain or bracelet.

க., தெ., து., பட. கெண்டி; பார். கொண்டு.

*[கொள் → கொண்டி.]*

**கொண்டி**[5] *kondi,* பெ.(n.) ஒருவகை மகளிர் விளையாட்டு; a kind of play of girls.

*[கொண்டல் → கொண்டி.]*

**கொண்டி**[6] *kondi,* பெ.(n.) உணவு; food. *"கட்கொண்டிக் குடிப்பாக்கத்து" (மதுரைக்.137).*

*[கொள் → கொண்டி.]*

**கொண்டி**[7] *kondi,* பெ.(n.) 1. மனவருத்தம்; grievance. உனக்கு அவன்மீது என்ன கொண்டி? இப்படிப் பேசுகிறாயே? 2. பகைமை;ill-feeling. *கொண்டியினால் ஒன்றுங் கூறவில்லை.* 3. புறங்கூறுகை; tale-bearing, back-biting.

*[கொண்டியம் → கொண்டி.]*

**கொண்டிக்கடுக்கன்** *kondi-k-kadukkan,* பெ.(n.) காதணிவகை; a kind of ear-ring.

*[கொண்டி + கடுக்கன்.]*

**கொண்டிக்கதவு** *kondi-k-kadavu,* பெ.(n.) குடுமிக்கதவு; door that turns on projecting pins at the corners.

*[கொண்டி + கதவு.]*

**கொண்டிக்கல்** *kondi-k-kal,* பெ.(n.) தாழ்வாரம் அமைக்கச் சுவரில் பொருத்தப்படும் கல்; a stone fixed to the wall to form a sloped roof (சா.அக.).

*[கொண்டி + கல்.]*

**கொண்டிக்காரன்பட்டி** *kondikkāran-patti,* பெ.(n.) தேனி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Theni Dt.

*[கொண்டிக்காரன் + பட்டி.]*

**கொண்டிக்காவல்** *kondi-k-kāval,* பெ.(n.) ஊர்ப்பொதுவிலிருந்து புன்செய் புறம்போக்கு களுக்குப் போடப்படும் காவல்; a guarding system for the dry waste land of the village for which expenses are met by it own fund.

*[கொண்டி + காவல்.]*

கொண்டி என்பது பகைவர் நாட்டிலிருந்து கொள்ளையடித்து வந்த பொருள்களைக் குறிக்கும். அவற்றைக் காப்பது பொதுக்கடமையானது போன்று ஊர்ப்பொது நிலைதைக் காப்பதும் அதே சொல்லால் அழைக்கப்படுவதாயிற்று.

**கொண்டிச்செட்டிப்பட்டி** *kondi-c-cetti-p-patti,* பெ.(n.) நாமக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Namakkal Dt.

*[கொண்டி + செட்டி + பட்டி.]*

**கொண்டிசொல்(லு)-தல்** *kondi-šol(lu)-,* 8 செ. குன்றாவி.(v.t.) ***கொண்டிபேசு-தல்*** பார்க்க; see *kondi-p-pēšu-.*

*[கொண்டி + சொல்(லு)-.]*

**கொண்டித்தனம்** *kondi-t-tanam,* பெ.(n.) அடங்காத தன்மை; insubordination.

*[கொண்டி + தனம்.]*

**கொண்டித்தொட்டி** *kondi-t-totti,* பெ.(n.) ***கொண்டித்தொழு*** பார்க்க; see *kondit-t-tolu.*

*[கொண்டி + தொட்டி.]*

**கொண்டிப்பணம்** *kondi-p-panam,* பெ.(n.) ஆடுமாடுகள் பட்டி மேய்தலுக்கு இடும் தண்டம்; fine imposed for graying cattle in prohibited area (வின்.).

*[கொண்டி + பணம்.]*

**கொண்டிப்பாறை** *kondi-p-pārai,* பெ.(n.) ஒருவகை மீன்; a kind of fish.

*[கொண்டி + பாறை.]*

**கொண்டிபேசு-தல்** *kondi-pēšu-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. பகைமையால் கொடுமை பேசுதல்; speak ill of any one out of ill-feeling. 2. கோட்சொல்லுதல்; to tell tales. 3. குறை கூறுதல்; to point out one's defect. 4. குற்றம் சுமத்திப் பேசுதல்; to accuse.

*[கொண்டி + பேசு-.]*

**கொண்டிமகளிர்** *kondi-magalir,* பெ.(n.) 1.சிறை பிடிக்கப்பட்ட மகளிர் (இ.வ.); captive women. *"கொண்டி மகளி ருண்டுறை மூழ்கி" (பட்டினப். 246).* 2. பரத்தையர் (இ.வ.); prostitutes. *"வண்டிற் றுறக்குங் கொண்டி மகளிரை" (மணிமே. 18:109).*

*[கொண்டி + மகளிர்.]*

**கொண்டிமாடு** *kondi-mādu,* பெ.(n.) பட்டிமாடு; stray cattle.

*[கொண்டி + மாடு.]*

**கொண்டிமேய்-தல்** *koṇḍi-mēy-,* 2 செ.கு.வி.(v.i.) பட்டி மேய்தல்; to graze stealthily in prohibited areas.

*[கொண்டி + மேய்-.]*

**கொண்டியம்** *koṇḍiyam,* பெ.(n.) 1. குறளை; calumny, back - biting (பிங்.) 2. புறங்கூறல்; asperse, slander. 3. பொய்ச்சொல்; falsehood, lie.

**க.** கொண்டெய; **தெ.** கொண்டெமு.

*[கொள் → கொண்டி (வளைவு) → கொண்டியம்.]*

**கொண்டியாரம்** *koṇḍi-y-āram,* பெ.(n.) 1. நிந்தை மொழி; invective. 2. பிறர் செயலில் தலையிடுகை; meddling. 3. செருக்கு; haughtiness. 4. சிறப்பு; elegance.

**ம.** கொண்டியாரம்; **க.** கொண்டய; **தெ.** கொண்டெமு.

*[கொண்டி +ஆரம் (சொல்லாக்க ஈறு).]*

**கொண்டியோட்டி** *koṇḍi-y-ōṭṭi,* பெ.(n.) கொண்டித் தொழுவுக்குப் பட்டிமாட்டைச் செலுத்துவோன்; (G.T.D.i.241) impounder of stray cattle.

*[கொண்டி + ஒட்டி.]*

**கொண்டிரு-த்தல்** *koṇḍiru-,* 2 செ.குன்றாவி. (v.t.) ஒத்திருத்தல்; look like. குழந்தை யாரைக் கொண்டிருக்கிறது அம்மாவையா? அப்பாவையா? (உ.வ.).

*[கொண்டு + இரு-.]*

**கொண்டிலாத்தி** *koṇḍilātti,* பெ.(n.) ***கொண்டலாத்தி*** பார்க்க; see *koṇḍalātti.*

**மறுவ.** கொண்டைக் கிளர்த்தி, கொண்டிலான்.

*[கொண்டைலாத்தி → கொண்டலாத்தி → கொண்டிலாத்தி (கொ.வ.).]*

**கொண்டிலான்** *koṇḍilāṉ,* பெ.(n.) ***கொண்டலாத்தி*** பார்க்க; see *koṇḍalātti.*

**ம.** கொண்டிலான்; **தெ.** கொண்டலாடி.

*[கொண்டை → கொண்டில் + ஆன்.]*

**கொண்டின்னி** *koṇḍiṉṉi,* பெ.(n.) தும்பை (சங்.அக.); black gaub.

*[கொண்டி : தேள்கொடுக்கு, நஞ்சு. கொண்டி + தின்னி (நஞ்சு முறிப்பது).]*

**கொண்டு**[1] *koṇḍu,* பெ.(n.) 1. முதல்; from beginning with. *"அடியிற்கொண்டு முடிகாறும்" (இறை. 3:45).* 2. குறித்து (இ.வ.); towards, in the direction of. *"குடதிசைக் கொண்டு" (சிலப். 10:34).*

*[கொள் → கொண்டு.]*

**கொண்டு**[2] *koṇḍu,* இடை.(part.) 1. மூன்றாம் வேற்றுமைச் சொல்லுருபு (பி.வி.6, உரை); a sign of the instrumental case. வாள்கொண்டு மரத்தை அறுத்தார்கள். 2. அசைநிலை; expletive. *"எனக்குமுன் றனக்குங் கொண்டு" (திருவிளை. நரிபரி. 83).*

**ம., து.** கொண்டு.

*[கொள் → கொண்டு.]*

**கொண்டுகட்டுவணிகம்** *koṇḍu-kaṭṭu-vaṇigam,* பெ.(n.) பண்டங்களை மலிந்தபோது வாங்கிக் கட்டி, விலையேறின காலத்தில் விற்கை; trading in articles bought cheap in retail and stored up awaiting a favourable market.

*[கொண்டு + கட்டு + வணிகம்.]*

**கொண்டுகடவோம்** *koṇḍu-kaḍavōm,* வி. (v.) கைக்கொண்டு செலுத்துவோம்; to pay at own risk. *"இப் பொன்கொண்டு கடவோம்" (தெ.கல். தொ.12. கல்.71).*

*[கொள் → கொண்டு + கடவு + ஓம் (ஓம் : தன்மைப் பன்மை ஈறு).]*

**கொண்டுகண்மாறு-தல்** *koṇḍu-kaṇ-māṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நட்புக்கொண்டு புறக்கணித்தல் (இ.வ.); to make friends and then ignore. *"கொண்டுகண் மாறல் கொடுமையிற் றுவ்வாது" (முது. காஞ்.37).*

*[கொண்டு + கண் + மாறு.]*

**கொண்டுகூட்டல்** *koṇḍu-kūṭṭal,* பெ.(n.) மருந்துப்பொருள்களை நன்கு அறிந்து அதன் பின் பயன்படுத்துதல் அல்லது சேர்த்தல்; using or mixing up ingredients after studying the drug well (சா.அக.).

*[கொண்டு + கூட்டல்.]*

**கொண்டுகூட்டு** *koṇḍu-kūṭṭu,* பெ.(n.) 1. எண் வகைப் பொருள்கோளுள் செய்யுளின் அடிகள் பலவற்றிலும் உள்ள சொற்களைப் பொருளுக்கு ஏற்றவிடத்தில் எடுத்துக் கூட்டிப் பொருள் கொள்ளு முறை; mode of construing a stanza in which words are appropriately transposed to arrive at the proper meaning, one of eight *poruḷ-kōḷ*

*"கோப்புடை மொழிகளை ஏற்புழி யிசைப்பது கொண்டு கூட்டே" (நன். 418).* 2. உடன்படு; accept.

*[கொண்டு + கூட்டு.]*

தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட
பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி
யஞ்சனத் தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்

என்னும் பாடலுள் வங்கத்துச் சென்றார்வரின். அஞ்சனத்தன்ன பைங்கூந்தல் உடையாளது மாமேனி மேவ் தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட கோழி வெண் முட்டை யுடைத்தன்ன பசலை தணிவாம் எனக் கூட்டுவது கொண்டுகூட்டாம்.

**கொண்டுகூற்று** *kondu-kūṟṟu,* பெ.(n.) அயலார் நேரிற் சொல்வதாகக் கூறும் மொழி (இ.வ.); direct speech. 'கொண்டுகூற்றாகக் கூறப்படுவனவும்' (தொல்.பொருள்.115, உரை).

*[கொண்டு + கூற்று.]*

**கொண்டுகொடு-த்தல்** *kondu-kodu-,* 4 செ. குன்றாவி.(v.t.) பெண்ணைக் கொண்டுங் கொடுத்தும் மணவுறவு கொள்ளுதல்; to give and take in marriage as a girl.

*[கொண்டு + கொடு-.]*

**கொண்டுகொடுப்பனை** *kondu-koduppanai,* பெ.(n.) பெண்ணைக் கொண்டுங் கொடுத்துஞ் செய்யும் திருமண வுறவு; giving and taking a girl in marriage in exchange,.

மறுவ. எதிர்பெண்.

*[கொண்டு + கொடுப்பனை.]*

**கொண்டுகொடுப்பு** *kondu-koduppu,* பெ.(n.) ***கொண்டு கொடுப்பனை*** பார்க்கவும்; see *kondu-koduppanai.*

*[கொண்டு + கொடுப்பு.]*

**கொண்டுசெலுத்து-தல்** *kondu-šeluttu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. தடைபல கடந்து செயலை முடிவுவரை நடத்துதல்; carry to completion though with difficulty, to succeed against odds. 2. ஆளுவம் செய்தல் (நிருவகித்தல்); to be able to manage.

*[கொண்டு + செலுத்து-.]*

**கொண்டுணி** *konduni,* பெ.(n.) கோட் சொல்வோன்; slanderer.

மறுவ. குண்டுணி.

*[கொள் → கோள் → கொண்டு → கொண்டுணி.]*

**கொண்டுதலைக்கழிதல்** *kondu-talai-k-kalidal,* பெ.(n.) தலைவன் தலைவியை உடன்கொண்டு போதலைக் கூறும் அகத்துறை; theme describing the elopement of the hero with his lady-love (தொல்.பொருள்.).

*[கொண்டு + தலை + கழிதல்.]*

**கொண்டுநடத்து-தல்** *kondu-nadattu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. ***கொண்டுசெலுத்து-தல்*** பார்க்க; *kondu-šeluttu-.* 2. கொடுக்கல் வாங்கல்; to do banking business.

*[கொண்டு + நடத்து-.]*

**கொண்டுநிலை** *kondu-nilai,* பெ.(n.) குரவைக் கூத்தில் தலைவனது வரைவு வேண்டிப் பாடும்பாட்டு (இ.வ.); Kuravai song praying for the hero's union in wedlock with the heroine. *"என்றியாங் கொண்டு நிலைபாடி யாடுங் குரவையை" (சிலப் : 24. இறுதிப்பாட்டுமடை.)*

மறுவ. திருமணம், மன்றல், மணம், வரைவு, கலியாணம்.

*[கொண்டு + நிலை.]*

**கொண்டுநிலைக்கூற்று** *kondu-nilai-k-kūṟṟu,* பெ.(n.) இகந்துபடாமல் தலைமகனைத் தாங்கிக் கூறுந் தோழியின் சொல்; words of encouragement by the heroine's maid, dissuading the hero from desperate action. 'இதனைக் கொண்டுநிலைக் கூற்றென்று சொல்வது' (இறை. 9, உரை).

*[கொண்டு + நிலை + கூற்று.]*

**கொண்டுநிலைகூறல்** *kondu-nilai-kūṟal,* பெ.(n.) மடல் விலக்கிற்குரிய கிளவிகளு ளொன்று (அகப்.9,26); words dissuading a hero from serious action.

*[கொண்டு + நிலை + கூறல்.]*

**கொண்டுபோ-தல்** *kondu-pō-,* 8 செ.குன்றாவி. (v.t.) 1. எடுத்துக்கொண்டு செல்லுதல்; to carry. *"கொண்டுபோவான் வந்து நின்றார்" (திவ். பெரியாழ். 2, 2:7).* 2. அழைத்துச் செல்லுதல்; to lead escoort. குருடனை வெளியிற் கொண்டுபோய் விடு.

3. கவர்ந்து செல்லுதல்; to carry away (இ.வ.). *"செங்கண்மால் தான் கொண்டு போனான்" (திவ். பெரியாழ்.3, 8:4).* 4. நடத்துதல்; to conduct. நூலாசிரியர் கதையை விறுவிறுப்பாகக் கொண்டு போயிருக்கிறார். 5. நெறிப்படுத்துதல்; to direct. திரைக்கதையை எப்படிக் கொண்டுபோவதென்று தெரியாமல் இயக்குநர் திணறி இருக்கிறார் (உ.வ.).

*[கொண்டு + போ-.]*

**கொண்டுமிஞ்சு-தல்** *kondu-miñju-,* 5.செ. குன்றாவி.(v.t.) மிகு வரவு; excess income. 'கொண்டு மிஞ்சிப் போச்சி கொடுக்கல் வாங்க லாச்சி' (கோமாளிப்பாட்டு).

*[கொண்டு + மிஞ்சு-.]*

**கொண்டுமுதல்** *kondu-mudal,* பெ.(n.) வணிக மூலதனம்; business capital.

மறுவ. கொள்முதல்.

*[கொள் → கொண்டு + முதல்.]*

**கொண்டுமொழி-தல்** *kondu-moli-,* 2 செ. குன்றாவி.(v.t.) அயலார் சொல்லை அவர் சொல்வதாகவே எடுத்துக் கூறல்; to report a person's speech in direct form.

*[கொண்டு + மொழி-.]*

**கொண்டுலங்கம்** *kondulangam,* பெ.(n.) பேராமுட்டி; fragrant pavonia (சா.அக.).

*[கொண்டல் + அங்கம்.]*

**கொண்டுவந்தவள்** *kondu-vandaval,* பெ.(n.) அதிகமாகச் சீர் கொண்டுவந்த மருமகள்; the daughter-in-law who brought more money. கொண்டுவந்தவளாக இருப்பதால் மாமியாரைத் திட்டுவதா? (உ.வ.).

*[கொண்டு + வந்தவள்.]*

**கொண்டுவரு-தல்** *kondu-varu-,* 15 செ. குன்றாவி. (v.t.) 1. அழைத்து வருதல்; to bring as of a man. நோயாளியை முன்னரே என்னிடம் கொண்டு வந்திருக்கலாம். 2. எடுத்து வருதல் (உ.வ.); to bring, as of a thing. நான் சொன்ன பொத்தகங்களைக் கொண்டுவந்தாயா?. 3. தீர்மானத்தை முன் வைத்தல்; to bring a motion to an assembly. எதிர்க்கட்சியினர் கொண்டு வந்த நம்பிக்கை யில்லாத் தீர்மானம் தோற்றுப்போயிற்று (உ.வ.). 4. சட்ட முன்வரைவை அறிமுகப்படுத்துதல்; to bring a bill before the assembly.

*[கொண்டு + வரு-.]*

**கொண்டுவலை** *kondu-valai,* பெ.(n.) மீன்பிடி வலை வகையுளொன்று; a kind of fishing net.

*[கொண்டு + வலை.]*

**கொண்டுவில்-தல் (கொண்டுவிற்றல்)** *kondu-vil-,* 9 செ.குன்றாவி. (v.t.) 1. அப்போதைக்கப்போது வணிகத்திற்காகப் பண்டங்களை வாங்கி விற்றல்; to carry on a petty trade by buying and selling things every now and then. *"கொண்டு விற்றல் கூலித்தொழில்" (தணிகைப்பு. அகத். 197).* 2. பணவணிகம் முதலியவை செய்தல்; to carry-on money lending business.

*[கொண்டு + வில்-.]*

**கொண்டுவிலை** *kondu-vilai,* பெ.(n.) பண வணிகம் முதலியன; money-lending business, trade etc.

*[கொண்டு + விலை.]*

**கொண்டுவிற்றல்** *kondu-virral,* பெ.(n.) போட்டி வணிகம், எதிர்ச் செட்டு; competition in trade; buying and selling again directly at a small profit.

*[கொண்டு + விற்றல்.]*

**கொண்டூர்** *kondūr,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kadalur Dt.

*[குண்டு (குளம்) → கொண்டு + ஊர்.]*

**கொண்டேசன்** *kondēsan,* பெ.(n.) சுக்கு (மூ.அக.); dry ginger.

*[குன்று + உச்சல் → குன்றுச்சல் → குண்டச்சல் → கொண்டோசன் → கொண்டேசன் (கொ.வ.).]*

**கொண்டோசனக்கிழங்கு** *kondōsana-k-kilangu,* பெ.(n.) திப்பிலி மூலம்; root of long-pepper (சா.அக.).

*[குன்று + உச்சல் → குன்றுச்சல் → குண்டச்சல் → கொண்டோசன் + கிழங்கு.]*

இது நறுமணமாகவும், சிவப்பாகவும் இருக்கும்.

**கொண்டை**[1] *kondai,* பெ.(n.) 1. பெண்களின் ஐம்பான்முடியுள் கூந்தலைத் திரளாகச் சேர்த்துக் கட்டும் முடிவகை; tuft dressing of hair in large coil on the head, one of *aimpānmudi* of ladies. குடல் கூழுக்கு அழுகிறதாம்; கொண்டை பூவுக்கு அழுகிறதாம் (பழ). 2. சொருக்கு; dressing of hair by turning up and folding. 3. குழந்தைகளுக்கு உச்சிக்கொண்டை கட்டப் பயன்படும் நார்வளையம்; fibre ring used in dressing the hair of child. 4. பறவைச்சூட்டு; crest of a bird. 5. ஆணி, பம்பரம் முதலியனவற்றின் குமிழ்த்தலை; head, as of a nail, round top. 6. திமில்; hump.

**தெ.** கொண்டெ; **ம.** கொண்ட; **க.** கொண்டே, கொண்டெ; **து.**, குட., பட. கொண்டே; **கோத.** கொண்ட்; **துட.** க்விட்; **பிரா.** கண்ட்.

[குள் → குண்டு → கொண்டை.]

வகைகள்: 1. இடுமுடிக் கொண்டை, 2. முத்துமுடிக் கொண்டை, 3. வளையம்புக் கொண்டை, 4. புரிக்கொண்டை, 5. கூட்டுக்கொண்டை.

**கொண்டை**[2] *kondai,* பெ.(n.) இலந்தை; the jujube, a thorny tree yielding a small fruit like the mulberry.

[குண்டை → கொண்டை.]

**கொண்டை**[3] *kondai,* பெ.(n.) திமில்; hump (தஞ்சை.).

[குள் → குண்டு → கொண்டை.]

**கொண்டைஆறு** *kondai-āru,* பெ.(n.) திண்டுக்கல் மாவட்டம் பழனிமலைப் பகுதியில் உள்ள ஆறு; a river in Palani hill area.

[குண்டை → கொண்டை + ஆறு.]

**கொண்டைக்கட்டி** *kondai-k-katti,* பெ.(n.) வேளாளருள் ஒருவகை; a group of agriculturists.

மறுவ. கொண்டைக்கட்டி வேளாளர்.

[கொண்டை + கட்டி.]

**கொண்டைக்கடலை** *kondai-k-kadalai,* பெ.(n.) கடலை; Bengal gram (சா.அக.).

[கொண்டை + கடலை.]

**கொண்டைக்கரிச்சான்** *kondai-k-kariccān,* பெ.(n.) உச்சிச் சூட்டுள்ள கரிக்குருவி வகை; hair crested king-crow.

[கொண்டை + கரிச்சான்.]

**கொண்டைக்காரன்** *kondai-k-kāran,* பெ.(n.) 1.தலைமயிரைத் திரளாக முடித்துக் கட்டியவன்; one who wears his hair in a knot. 2. மென்மை யுடையவன்; respectable person. 3. செருக்குடை யவன்; haughty man.

[கொண்டை + காரன்.]

**கொண்டைக்காரி** *kondai-k-kāri,* பெ.(n.) மயிர்க் கொண்டையிட்ட பெண்; a woman having a tuft of hair tied into a coiled knot (சா.அக.).

[கொண்டை + காரி.]

**கொண்டைக்கிரி** *kondai-k-kiri,* பெ.(n.) முல்லை நிலப் பண்வகை (பிங்.); a secondary melody-type of the mullai class.

[கொண்டை + கிரி. ஒருகா. கொண்டைஆகிரி.]

**கொண்டைக்கிருட்டி** *kondai-k-kirutti,* பெ.(n.) கொண்டையை அசைக்கும் ஒரு குருவி; mountain bulbul with crust erected at will (சா.அக.).

[கொண்டை + (கிளர்த்தி) கிருட்டி.]

**கொண்டைக்கிலாத்தி** *kondai-k-kilātti,* பெ.(n.) ***கொண்டைக்கிளர்த்தி*** பார்க்க; see *kondai-k-kilartti.*

[கொண்டை + (கிளர்த்தி) கிலாத்தி.]

**கொண்டைக்கிளர்த்தி** *kondai-k-kilartti,* பெ.(n.) கொண்டையை அசைக்கும் குருவி; mountain bulbul which shakes crust at will.

[கொண்டை + கிளர்த்தி.]

**கொண்டைக்கிளாறு** *kondai-k-kilāru,* பெ.(n.) ***கொண்டைகிளர்த்தி*** பார்க்க (சா.அக.); see *kondai -kilartti.*

[கொண்டை + (கிளர்த்தி) கிளாறு.]

**கொண்டைக்கிளிஞ்சான்** *kondai-k-kiliñjān,* பெ.(n.) ஒருவகைக் கடல்மீன்; a kind of sea-fish.

[கொண்டை + கிளிஞ்சான்.]

**கொண்டைக்குச்சு** *kondai-k-kuccu,* பெ.(n.) 1. சடைக்குச்சு; a hair-ornament with pendants. 2. கொண்டையில் செருகும் ஊசிவகை;ornamented hair-pin.

[கொண்டை + குச்சு.]

**கொண்டக்குலாத்தி** *konda-k-kulātti,* பெ.(n.) ***கொண்டடைக் கிளர்த்தி*** பார்க்க; see *kondai kilartti.* "*கொண்டைக் குலாத்தியும் மாடப் புறாவும்*" (*குற்றா.குற. 87:2*).

[கொண்டை + (கிளர்த்தி) குலாத்தி.]

**கொண்டைக்கோல்** *kondai-k-kōl,* பெ.(n.) 1.தலையிற் கொண்டையுள்ள கழி; a staff with a knob at its head. 2. ஆழத்திற்கு அறிகுறியாக நீரிடையில் நடுங்கோல்; a post planted to indicate the depth of water. '*ஆழங்காலிலே இழிந்து அமிழ்ந்துவார் அவ்விடத்தே கொண்டைக்கோல் நாட்டு மாபோலே*' (*ஈடு,10,7:1*). 3. மகிழ்ச்சி காரணமாக உயர்த்தி யசைக்கும் ஆடை கட்டிய கோல்; a staff with cloth uplifted and flourished as a sign of joy. "*கொண்டைக் கோலொடு குணலை யிட்டார்*" (*கோயிற்பு. இரணிய. 130*). 4. எல்லை குறிக்கும் கோல்; boundary post. அளக்கும் பிரதேசத்துக்கு கொண்டைக்கோல் நாட்டுகிறார் (திவ். திருநெடுந். 5 விலா.).

[கொண்டை + கோல்.]



# கொண்டை வகைகள்



விடுமுடிக் கொண்டை



முத்துமுடிக் கொண்டை



வளையம்பிக் கொண்டை



புரிக் கொண்டை



கூட்டுமுடிக் கொண்டை

**கொண்டைகட்டிமறவன்** *kondaikatti-maravan,* பெ.(n.) மறவர் வகை; a sub-sect of Maravar caste.

*[கொண்டை + கட்டி + மறவன்.]*

**கொண்டைகட்டிவேளாளர்** *kondaikatti-vēlālar,* பெ.(n.) திருமணத்திற் கொண்டையாகத் தலை மயிரை முடிக்கும் வேளாளவகையினர்; a sub-sect of Velalas who put up the hair in a peculiar fashion during marriage.

**மறுவ.** கொண்டைகட்டி.

*[கொண்டை + கட்டி + வேளாளர்.]*

**கொண்டை குலைந்துபோ-தல்** *kondai-kulaindu pō-,* 8 செ.கு.வி.(v.i.) அவமானப்படுதல்; to suffer loss of honour.

*[கொண்டை + குலைந்து + போ-.]*

**கொண்டைச்சாணி** *kondai-c-cāni,* பெ.(n.) 1.நஞ்சறுப்பான்; a creeper used as an antidote for poison. 2. நாய்ப்பாலை; Indian ipecacuanha. 3. கழுதைப்பாலை; common Indian ipecacuanka (சா.அக.).

**மறுவ.** கழுதைப்பாலை, கொண்டைச்சீனிக் கிழங்கு, கொண்டைச்சாணிக் கிழங்கு.

*[கொண்டை (சீனி) + சாணி.]*

**கொண்டைச்சுத்தியல்** *kondai-c-cuttiyal,* பெ.(n.) தட்டார் கருவிகளுள் ஒன்று; goldsmith's or braziers hammer.

*[கொண்டை + சுத்தியல்.]*

**கொண்டைத்தலை** *kondai-t-talai,* பெ.(n.) மயிர்முடித் தலை; head with a hair knot.

*[கொண்டை + தலை.]*

**கொண்டைத்திருகி** *kondai-t-tirugi,* பெ.(n.) கதவுக்குடுமி செருகுந்துளை; hole in the sill into which the corner pin of a door is fitted (கட்.தொ.).

*[கொண்டை + திருகி.]*

**கொண்டைத்திருகு** *kondai-t-tirugu,* பெ.(n.) மகளிர் தலையிலணியும் செவ்வந்திப்பூ வடிவிலான தாகிய திருகாணிவகை; ornament for hair in the shape of a chrysanthemum flower with a spiral wire underneath, worn by women.

*[கொண்டை + திருகு.]*

**கொண்டைத்தும்பை** *kondai-t-tumbai,* பெ.(n.) கவிழ்தும்பை; stooping tommbay.

**மறுவ.** மலைத்தும்பை.

*[கொண்டை + தும்பை.]*

**கொண்டைத்துலா** *kondai-t-tulā,* பெ.(n.) கயிறு நழுவிவிடாதபடி கொண்டை கட்டிய துலாவகை; picottah with a crest-like projection at the end to prevent the rope from slipping.

*[கொண்டை + துலா.]*

**கொண்டைப்புல்** *kondai-p-pul,* பெ.(n.) மயிற் கொண்டைப்புல்; trail grass (சா.அக.).

ம. கொண்டப்புல்.

*[கொண்டை + புல்.]*

**கொண்டைப்பூ** *kondai-p-pū,* பெ.(n.) ***கொண்டைத் திருகு*** பார்க்க; see *kondai-t-tirugu.*

ம. கொண்டைப்பூ.

*[கொண்டை + பூ.]*

**கொண்டைமார்சா** *kondai-māršā,* பெ.(n.) கரைப்பரப்பினின்று ஆழக் கடல்நோக்கிச் செல்லும் கடலலை; wave moving from coast towards the deep sea.

*[கொண்டை (கிழக்கு) + மார்சா.]*

கிழக்கு நோக்கிய அலை என்பதேயாம். மார்தல் = நீளுதல், ஓங்குதல்.

**கொண்டைமாறு** *kondai-māru,* பெ.(n.) 1. கொண்டை போன்ற அடிப்பக்கமுடைய வளார்; twigs of a shrub with knob-like root. 2. மரத்தின் உச்சியிலிருந்தெடுக்கும் சிறுசுள்ளி; twigs gathered from the top-most part of the trees. 3. கொண்டையுள்ள விளக்குமாறு; a kind of broom with a knob-like handle.

*[கொண்டை + மாறு.]*

**கொண்டைமுசு** *kondai-mušu,* பெ.(n.) பெரிய கருங்குரங்கு வகை; a large black-faced monkey.

மறுவ. கொண்டை முசுடு, கொண்டைமுசுறு, முசாண்டலம், முசுகோத்தி.

*[கொண்டை + முசு.]*

**கொண்டைமுசுறு** *kondai-mušuru,* பெ.(n.) ***கொண்டைமுசு*** பார்க்க; see *kondai-mušu.*

**மறுவ.** கொண்டை முகிறு, கொண்டை முசுடு.

*[கொண்டை + (முசு) முசுறு.]*

**கொண்டைமுடி-தல்** *kondai-mudi-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. ஏமாற்றுதல்; to deceive. 2. அணியுறக் கூந்தலை அள்ளி முடித்தல்; to tie the hair knot.

*[கொண்டை + முடி-.]*

**கொண்டைமேற்காற்றடிக்க** *kondaimēr-kāṟṟaḍikka,* வி.எ. (adv.) (தலைமயிரின்மேல் காற்று வீசும்படி) மகிழ்ச்சியாக; the breeze playing about the tuft. *'கொண்டைமேல் காற்றடிக்கத் திரியப் பெறாதே' (திருவிருத். 23: வியா. ப. 150).*

*[கொண்டை + மேல் + காற்று + அடிக்க.]*

**கொண்டையங்கோட்டை மறவன்** *koṇḍaiyaṅ-kōṭṭai-maṟavaṉ,* பெ.(n.) ***கொண்டைகட்டி மறவன்*** பார்க்க; see *koṇḍai-kaṭṭi-maṟavaṉ.*

*[கொண்டை + அம் + கோட்டை + மறவன்.]*

**கொண்டையடுப்பு** *koṇḍai-y-aḍuppu,* பெ.(n.) சூட்டடுப்பு; a kind of domestic oven.

*[கொண்டை + அடுப்பு.]*

**கொண்டையம்** *kondayam,* பெ.(n.) 1. உச்சி; top. 2. மலைமுகடு; hill top. கொண்டையத்தில் ஏறாதே (உ.வ.). 3. வீட்டின் முகடு, கூரையின் உச்சி; top of the thatched house.

*[கொள் → கொண்டு → கொண்டையம் (முடிச்சு).]*

**கொண்டையழகி** *koṇḍai-y-aḷagi,* பெ.(n.) கூந்தழலகி; a woman with flowing hairs long enough to be dressed into a large coil, which adds to her beauty (சா.அக.).

*[கொண்டை + அழகி.]*

**கொண்டையன்** *koṇḍaiyaṉ,* பெ.(n.) உச்சிக் கொண்டையுள்ள பருந்துவகை; a species of crested kite.

*[கொண்டை → கொண்டையன்.]*

**கொண்டையாணி** *koṇḍai-y-āṇi,* பெ.(n.) 1. மேற் கொண்டையுள்ள ஆணி; nail with round head stud. 2. கடையாணி; axle pin of a wheel.

*[கொண்டை + ஆணி.]*

**கொண்டையூசி** *koṇḍai-y-ūśi,* பெ.(n.) 1. குண்டூசி; pin. 2. கொண்டை அவிழாதபடி செருகும் கம்பி; hair-pin to keep the hair intact.

*[கொண்டை + ஊசி.]*

**கொண்டையூசிவளைவு** *koṇḍai-y-ūśi-vaḷaivu,* பெ.(n.) கொண்டைஊசி வளைவு; hair-pin bend.



கொண்டைஊசி வளைவு

*[கொண்டை + ஊசி + வளைவு.]*

**கொண்டைலாத்தி** *koṇḍailātti,* பெ.(n.) ***கொண்டைக்கிளர்த்தி*** பார்க்க; see *koṇḍai-k-kiḷartti.*

*[கொண்டை + (கிளர்த்தி) லாத்தி.]*

**கொண்டைவலை** *koṇḍai-valai,* பெ.(n.) அலைவாயிலிருந்து வீசி மீனைப் பிடிக்கும் ஒருவகை வலை; a kind of shore-net used in catching sea-fish.

*[கொண்டை + வலை.]*

**கொண்டைவலைப்பு** *koṇḍai-valaippu,* பெ.(n.) நேர்தொலைவாய் மீன் வலைக்கை; fishing from due distance.

*[கொண்டை + வலைப்பு.]*

**கொண்டைவாகை** *koṇḍai-vāgai,* பெ.(n.) வாகைமர வகை; doon siriss tree.

*[கொண்டை + வாகை.]*

**கொண்டோசனை** *koṇḍōśaṉai,* பெ.(n.) ஒருவகை மூலிகை; a kind of medicinal plant. ***"தட்டிவாக் கொண்டோசனைக் கிழங்கு" (தெய்வச். விறலிவிடு. 407).***

*[கண்டு → கொண்டு → கொண்டோசனை.]*

**கொண்டோடி** *koṇḍōḍi,* பெ.(n.) ஏற்றத்தில் துலாவையும் அதன் கொடியையும் பிணிக்குங் கயிறு (யாழ்.அக.); rope fastening the pole to the beam of the picotta.

*[கொண்டு + ஓடி.]*

**கொண்டோன்** *koṇḍōṉ,* பெ.(n.) கணவன் (இ.வ.); husband. ***"கொண்டோ னல்லது தெய்வமும் பேணாப் பெண்டிர்" (மணிமே. 18:101).***

ம. கொண்டோன்.

*[கொண்டான் → கொண்டோன்.]*

**கொன்னாட்டிவிளை** *konnātti-vilai,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanniyakumari Dt.

*[கொண்ணன் + (பட்டி) அட்டி + விளை (நிலம்).]*

**கொண்முடிபு** *kon-mudibu,* பெ.(n.) முடிந்த முடிவு (சித்தாந்தம்); well established conclusion, settled opinion or doctrine received or admitted truth.

*[கொண் + முடிபு]*

**கொண்மூ** *konmū,* பெ.(n.) 1. முகில்; cloud. *"நீருடைக் கொண்மூ" (பெருங்.உஞ்சைக்.43).* 2. வானம் (பிங்.) ; sky.

*[கொள் → கொண்ம் → கொண்மூ (நீரை முகந்து கொண்டிருப்பது).]*

**கொண்மூமுத்து** *konmū-muttu,* பெ.(n.) முகிலிற் பிறந்த கதிர்நிற முத்து; a pearl formed in the cloud.

*[கொண்மூ + முத்து.]*

வானிலிருந்து வீழ்ந்த எரிகல் அல்லது கொள்ளிக்கல்லை மேகமுத்தாகக் கருதியிருக்கலாம்.

**கொணக்கலவாடி** *kona-k-kala-vādi,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[குணக்கு (கிழக்கு) + கல் + பாடி – குணக்குக்கல்பாடி → குணக்கல்வாடி → குணக்கலவாடி → கொணக்கலவாடி.]*

**கொணக்கு-தல்** *konakkku-,* 5 செ.கு.வி.(v.i.) கெடுத்தல்; to spoil. இந்தக் கலியாணத்திலே தேவையில்லாம கொணக்கிட்டாளே (நெல்லை).

**கொணகொண-த்தல்** *kona-kona-,* பெ.(n.) மூக்கின் வழியாய்ப் பேசல்; the nasal quality of voice (சா.அக.).

*[கொண + கொண-.]*

**கொணங்கு**[1] *konangu,* பெ.(n.) 1. குறிஞ்சா; an edible and medicinal creeper. 2. முறையற்று ஓடுகிற (பொறி) எஞ்சின் கொணங்கிப் போச்சு (நெல்லை).

*[குணங்கு → கொணங்கு.]*

**கொணங்கு**[2]**-தல்** *konangu,* 5 செ.கு.வி.(v.i.) சரியில்லாமல் போதல்; to get disordered. இயந்திரம் கொணங்கிப் போச்சு (நெல்லை).

*[குணங்கு → கொணங்கு.]*

**கொணசில்** *konašil,* பெ.(n.) கோணல்; curve.

மறுவ. கொணக்கு.

*[குணகு → கொணசில்.]*

**கொணட்டு-தல்** *konattu-,* 5 செ.கு.வி.(v.i.) பகட்டுதல்; to make show. காரியம் முடிவதற்காகக் கொணட்டுகிறான் (நெல்லை).

*[குணட்டு → கொணட்டு.]*

**கொணமங்கலம்** *konamangalam,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[குண்ணல் → கொண்ணல் → கொணல் + மங்கலம்.]*

**கொணமணப்பிள்ளை** *konamana-p-pillai,* பெ.(n.) திருமணச் சடங்கில் பொம்மையொன்றைப் பிள்ளையாகப் பாவித்துப் பெண், மாப்பிள்ளையிடங் கொடுத்துத் திரும்பப் பெற்றுக்கொள்ளுஞ் சடங்கு; a marriage ceremony in which the bride presents the bridegroom with a doll representing a child, which he returns back to her (loc.).

*[குழமணம் → கொணமனம் + பிள்ளை.]*

**கொணலவாடி** *konalavādi,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[குண்ணல் → கொண்ணல் + பாடி – கொண்ணப்பாடி → கொணலவாடி.]*

**கொணலூர்** *konalūr,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[குண்ணல் → கொண்ணல் + ஊர் – கொண்ணலூர் → கொணலூர்.]*

**கொணா-தல் (கொணர்-தல்)** *konā-,* 13 செ.குன்றாவி.(v.t.) கொண்டுவருதல்; to bring. *"அருந்தவனைக் கொணர்துமென" (கம்பரா. திருவவ. 38, நன்.160, மயிலை.).*

*[கொண்டுவா → கொணா (கொ.வ.).]*

**கொணாரம்** *konāram,* பெ.(n.) எருமையின் உக்காரம்; bellowing of a buffalo.

மறுவ. முக்காரம், சிலைப்பு, உக்காரம்.

*[குணல் → குணர் → குணாரம் → கொணாரம்.]*

**கொணி** *koni,* பெ.(n.) மரத்திலுள்ள காய், பழம் போன்றவற்றை வீழ்த்த எறியும் தடி; a stick thrown to fall fruits etc., from trees (சேரநா.)

ம. கொணி.

*[கொள் → கொண் + இ.]*

**கொணிகை** *konigai,* பெ.(n.) ஒருவகை வரி; a kind of tax. *"திருமுக் காட்சி நல்லெருது நற்பசு கொணிகை விரிமுட்டு தறியிறை" (S.I.I.IV,415:2).*

*[கொள் → கொளிகை → கொணிகை.]*

**கொத்தகரை** *kotta-karai,* பெ.(n.) பேரரத்தை; greater galangal (சா.அக.).

ம. கொத்தச்சக்கை.

*[கோ + தகரை – கோத்தகரை → கொத்தகரை.]*

**கொத்தகுறிக்கி** *kotta-kurikki,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[த. கொல் (புதிய) > தெ. கொத்த + (த. குறிச்சி) > க. குறிக்கி.]*

**கொத்தங்குடி** *kottaṅ-kudi,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kadalur Dt.

*[கொற்றன் → கொத்தன் + குடி.]*

**கொத்தச்சக்கை** *kotta-c-cakkai,* பெ.(n.) பலாப்பிஞ்சு; tender jack-fruit.

*[கொத்தை + சக்கை. கொத்தை : முற்றாதது.]*

**கொத்தட்டை** *kottaṭṭai,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kadalur Dt.

*[கொற்றன் → கொத்தன் + தட்டை (மேட்டுநிலம்).]*

**கொத்தடிமை** *kottadimai,* பெ.(n.) குடும்பத்தோடு அடிமையாதல்; servitude of a family. *"கொத்தடிமை யான குடிநான் பராபரமே" (தாயு. பராபரக். 148).*

*[கொத்து + அடிமை.]*

**கொத்தடியேந்தல்** *kottadi-y-ēndal,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanadhapuram Dt.

*[கொத்து + அடி + ஏந்தல் (ஏரி).]*

**கொத்தணி** *kottaṇi,* பெ.(n.) குன்றிமணி; a seed of a medicinal climber yielding a beautiful bean (சா.அக.).

*[கொத்து + அணி.]*

**கொத்தப்பருத்தி** *kottaa-p-parutti,* பெ.(n.) கழிவுப் பருத்தி; cotton waste.

*[கழித்தல் → கத்தல் → கொத்தல் + பருத்தி.]*

**கொத்தப்பிரார்** *kottappirār,* பெ.(n.) கள்ளர்குடிப் பட்டப்பெயர்களுள் ஒன்று (கள்ளர் சரித்.ப.98); a caste title of Kaḷḷars.

*[கொற்றப்பிரியர் → கொத்தப்பிரியர்.]*

**கொத்தப்புள்ளி** *kotta-p-puḷḷi,* பெ.(n.) திண்டுக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dindukkal Dt.

*[கொற்றன் → கொத்தன் + (பள்ளி) புள்ளி (கொ.வ.).]*

**கொத்தம்**[1] *kottam,* பெ.(n.) எல்லை (பிங்.); boundary, limit.

*[கொல் → கொத்து + அம்.]*

**கொத்தம்**[2] *kottam,* பெ.(n.) கொத்தன் வேலை, கட்டடத் தொழில்; masonry (பண்.த.நா.பண்.98).

*[கொத்து → கொத்தம்.]*

**கொத்தம்**[3] *kottam,* பெ.(n.) புதுமை; newness.

தெ. கொத்த (புதிய).

*[குல் → குது → கொத்து + அம்.]*

எதுவும் தோன்றியவுடன் புதுமையாயிருக்குமாதலால், தோன்றற் கருத்தில் புதுமைக் கருத்துத் தோன்றிற்று [குது] – கொத்தம் [மு.தா. 42].

**கொத்தம்**[4] *kottam,* பெ.(n.) கொத்துமல்லி; coriandar leaf. *"கடுகிங்கு கொத்தம் மதுரம் வசம்பு" (சரசோதி.).*

*[கொத்து → கொத்தம்.]*

**கொத்தம்**[5] *kottam,* பெ.(n.) புதிய நிலம்; new land. *"வடபாற்கெல்லை மெழுக்குப் புறத்துக்கு வடவெல்லைக் கொத்தத்துக்குத் தெற்கும்" (S.I.I. XIII.125:25).*

*[கொத்து → கொத்தம்.]*

**கொத்தம்பரி** *kottampari,* பெ.(n.) கொத்துமல்லி; a bunch of coriandar leaf (கல். அக.).

க. கொத்தம்பரி, கொத்துமிரி, கொத்தமரி.

*[கொத்துமல்லி > க. கொத்துமரி → கொத்தம்பரி (கொ.வ.).]*

**கொத்தம்பாக்கம்** *kottam-bākkam,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[கொற்றன் → கொத்தன் + பாக்கம்.]*

**கொத்தம கண்டகம்** *kottama-kaṇḍagam,* பெ.(n.) பற்பாடகம்; fever plant (சா.அக.).

*[கொத்து → கொத்தமம் + கண்டகம்.]*

**கொத்தமங்கலம்** *kotta-maṅgalam,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[கொற்றன் → கொத்தன் + மங்கலம்.]*

**கொத்தமல்லி** *kottamalli,* பெ.(n.) ***கொத்துமல்லி*** பார்க்க ; see *kottumalli.*

**ம., தெ., பட.** கொத்தமல்லி.

*[கொத்து + மல்லி – கொத்துமல்லி → கொத்தமல்லி.]*

**கொத்தமல்லிக் கீரை** *kottamalli-k-kīrai,* பெ.(n.) கறிக்குதவும் பச்சைக் கொத்துமல்லியிலை; green coriander leaves used in curry (சா.அக.).

**மறுவ.** கொத்தமல்லித்தழை.

*[கொத்து + மல்லி – கொத்தமல்லி + கீரை.]*

**கொத்தமல்லிச்சூரணம்** *kottamalli-c-cūraṇam,* பெ.(n.) கொத்தமல்லி விதையைப் பொடி செய்து மற்றக் கடைப்பொருள்களுடன் சேர்த்துச் செய்த மருந்துப் பொடி; powder of coriander seeds mixed with other medicinal ingredients (சா.அக.).

*[கொத்தமல்லி + சூரணம்.]*

**கொத்தமல்லிசூரி** *kottamalli-šūri,* பெ.(n.) கொப்புளிப்பான் நோய்; chicken-pox or measles.

**மறுவ.** நீர்க்கொளுவன், கொத்தமல்லியம்மை.

*[கொத்தமல்லி + (வைசூரி) சூரி]*

**கொத்தமல்லித் தைலம்** *kottamalli-t-tailam,* பெ.(n.) ***கொத்தமல்லியெண்ணெய்*** பார்க்க; see *kottamalli-y-eṇṇey.*

*[கொத்தமல்லி + தைலம்.]*

**கொத்தமல்லிமணி** *kottamalli-maṇi,* பெ.(n.) மகளிர் கழுத்தணி வகை; a kind of necklace worn by women.

*[கொத்தமல்லி + மணி.]*

**கொத்தமல்லியம்மை** *kottamalli-y-ammai,* பெ.(n.) ***கொப்புளிப்பான்*** பார்க்க; see *koppuḷippāṉ.*

**ம.** கொத்தமல்லியம்ம.

*[கொத்தமல்லி + அம்மை.]*

**கொத்தமல்லியெண்ணெய்** *kottamalli-y-eṇṇey,* பெ.(n.) கொத்தமல்லி விதையை வாலையிலிட்டு வடிக்கும் எண்ணெய்; a volatile oil extracted from coriander seeds (சா.அக.).

*[கொத்தமல்லி + எண்ணெய்.]*

**கொத்தமல்லி விதை** *kottamalli-vidai,* பெ.(n.) உருளரிசி; common coriander seed (சா.அக.).

*[கொத்தமல்லி + விதை.]*

**கொத்தமுரி** *kottamuri,* பெ.(n.) ***கொத்தமல்லி*** பார்க்க; see *kottamalli.* *'உருளரிசி கொத்தமுரி யென்றாற் போல'* (இறை. 2, உரை).

*[கொத்து + மல்லி – கொத்துமல்லி → கொத்தமுரி.]*

**கொத்தயம்** *kottayam,* பெ.(n.) திண்டுக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dindugul Dt.

*[கொத்து + ஆயம் – கொத்தாயம் → கொத்தயம்.]*

**கொத்தர்குப்பம்** *kottar-kuppam,* பெ.(n.) கட்டடத்தொழில் மேற்கொள்வோர் வாழும் ஊர்; a village where masons are living.

*[கொத்தர் + குப்பம்.]*

கட்டடத்தொழில் வல்லவர்கள் இப்பகுதியில் பெரும்பான்மையினர் வாழ்ந்தமையால் இப்பெயர் பெற்றிருக்கலாம்.

**கொத்தரல்** *kottaral,* பெ.(n.) ***கொத்தறல்*** பார்க்க; see *kottaṟal.*

*[கொத்து + (அறல்) அரல்.]*

**கொத்தரி–த்தல்** *kottari-,* 4 செ.குன்றா.வி. (v.t.) கொத்திடுதல்; to chisel, pick. இதைக் கொத்தரித்து விடு (உ.வ.).

*[கொத்து → கொத்தரி.]*

**கொத்தரி** *kottari,* பெ.(n.) சிவகங்கை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Sivagangai Dt.

*[கொடித்தலம் → கொத்தலம் → கொத்தரி.]*

**கொத்தரிவாள்** *kottarivāḷ,* பெ.(n.) அரிவாள் வகை; a kind of sickle.

*[கொத்து + அரிவாள்.]*

**கொத்தல்** *kottal,* தொ.பெ.(vbl.n.) 1. பாம்பு கடித்தல்; biting as a snake. 2. கறிகொத்துதல்; chopping as of meat. 3. பறவை மூக்கினால் மோதல்; striking with the beak as birds. *"நெடுங்கணார் தோட்கிளி கொத்தலின்"* (சீகாளத். பு. நக்கீர. 30). 4. இரை

கொத்தியெடுத்தல்; picking up grains as birds (சா.அக.). 5. தோண்டுதல்; delving, digging the ground with a spade. 6. களைகொத்தல்; to remove weeds by using hoe.

ம. கொத்தல்.

*[குல் → குத்து → கொத்து → கொத்தல்.]*

**கொத்தல பெத்தாம்பட்டி** *kottala-pettāmpaṭṭi*, பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[கொடித்தலம் → கொத்தலம் + பெத்தன் (பெரியவன்) பட்டி.]*

**கொத்தலரி** *kottalari*, பெ.(n.) அடுக்கலரிப்பூ; cluster oleander.

*[கொத்து + அலரி.]*

**கொத்தவரங்காய்** *kottavaraṅkāy*, பெ.(n.) கொத்தாய்க் காய்க்கும் அவரைவகைகளி லொன்று; a kind of cluster bean.

*[கொத்து + அவரை + காய்.]*

**கொத்தவரங்காய்ப்பின்னல்** *kottavaraṅ-kāy-p-piṉṉal*, பெ.(n.) கொத்தவரங்காய் போலக் குழந்தைகட்குப் பின்னும் பின்னல் வகை; plaiting the hair of a child in the form of a cluster bean.

*[கொத்தவரங்காய் + பின்னல்.]*

**கொத்தவரை** *kottavarai*, பெ.(n.) கொத்துக் கொத்தாகக் காய்க்கும் அவரை வகை; cluster bean.

ம. கொத்தவர.

*[கொத்து + அவரை.]*

**கொத்தவன்** *kottavaṉ*, பெ.(n.) முடக்கற்றான்; palsy curer (சா.அக.).

*[முடக்கற்றான் → கொற்றான் → கொத்தான் → கொத்தவன்.]*

**கொத்தவாசல்** *kotta-vāšal*, பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kadalur Dt.

*[கொற்றன் → கொத்தன் + (வாயல்) வாசல்.]*

**கொத்தவாஞ்சேரி** *kottavāñjēri*, பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kadalur Dt.

*[கொற்றவன் + சேரி – கொற்றவன்சேரி → கொத்தவாஞ்சேரி.]*

**கொத்தவாற்சாவடி** *kottavāṟ-cāvaḍi*, பெ.(n.) 1. காவல்நிலையம்; police station. 2. நகர நடுவில் உணவுப் பொருள்கள் முதலியன விற்கப்படும் வணிக மையம்; central place in some towns serving as a market for provisions etc.

*[கோட்டை + வாசல் – கொத்தவாசல்+ (தாவடி) சாவடி.]*

**கொத்தழி-தல்** *kottaḻi-*, 2 செ.கு.வி. (v.i.) முற்றுமழிதல் (வின்.); to lie waste or desolate, to be in ruins.

*[கொத்து (முழுவதும்) + அழி-.]*

**கொத்தள-த்தல்** *kottaḷa-*, 2 செ.கு.வி. (v.i.) கூலியாகத் தவசங் கொடுத்தல்; to pay wages in kind, as to an artisan. *"கூலிவேலை செய்தால் கொத்தளக்குமாறு போல" (சி.சி. 2: 21. மறைஞா.).*

*[கொத்து = நெற்கட்டு, கதிர்த்தாள் கட்டு (ஒரு தாள் கட்டில் உதிர்த்த தவசம்) கொத்து + அள-.]*

**கொத்தளம்** *kottaḷam*, பெ.(n.) கோட்டை மதிலுறுப்புகளுள் ஒன்று (பிங்.); part of a rampart, bastion, defensive erection on the top of a rampart.

ம. கொத்தளம்; க. கொத்தள; தெ. கொத்தடமு, க்ரொத்தட, க்ரொத்தளமு, கொத்தள; து. கொத்தள, கொத்தல். Pāli. koṭṭaka.

*[கொத்து + அளம் (சொல்லாக்க ஈறு).]*

**கொத்தளி** *kottaḷi*, பெ.(n.) ***கொத்தளிப்பாய்*** (வின்.) பார்க்க; see *kottaḷi-p-pāy*.

*[கொத்து → கொத்துளி → கொத்தளி.]*

**கொத்தளிப்பாய்** *kottaḷi-p-pāy* பெ.(n.) புற்பாய் (பிங்.); mat made of rushes.

*[கொத்தளி + பாய்.]*

**கொத்தளை** *kottaḷai*, பெ.(n.) கூட்டமாய்த் திரியும் மீன்வகை; a kind of fish which moves as a group.

*[கொத்து → கொத்தல் → கொத்தலை → கொத்தளை (கொ.வ.).]*

**கொத்தறுவாள்** *kottaṟuvāḷ*, பெ.(n.) ஆட்டுக் கறியை அறுப்பதற்கும் கொத்துவதற்கும் பயன்படும் அறுவாள் ; knife used to choping meat.

*[கொத்து + அறுவாள்.]*

**கொத்தன்**[1] *kottaṉ*, பெ.(n.) கட்டட வேலை செய்வோன்; mason, brick-layer (வே.க.179).

*[கொத்து → கொத்தன்.]*

**கொத்தன்**[2] *kottaṉ,* பெ.(n.) கோயிற் திறவுகோல் (சாவிக்) கொத்தினை வைத்திருக்க உரிமையுள்ள குடியினன்; an authorised man to keep the temple key bunch.

*[கொத்து + அன்.]*

**கொத்தன்**[3] *kottaṉ,* பெ.(n.) ***சவண்டிக்கொத்தன்*** பார்க்க; see *cavaṇḍi-k-kottaṉ.*

*[கொத்து + அன்.]*

**கொத்தன்**[4] *kottaṉ,* பெ.(n.) ***கொத்தச்சக்கை*** பார்க்க; see *kotta-c-cakkai.*

*[ம. கொத்தச்சக்கெ (பலாப்பிஞ்சு) → கொத்தன்.]*

**கொத்தன்குளம்சேரி** *kottaṉ-kuḷam-cēri,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[கொத்தன் + குளம் + சேரி.]*

**கொத்தனாம்பட்டி** *kottaṉām-paṭṭi,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kadalur dt.

*[கொற்றன் → கொத்தன் + பட்டி.]*

**கொத்தனார்** *kottaṉār,* பெ.(n.) தலைமைக் கொத்தன்; head mason.

*[கொத்தன் → கொத்தனார்.]*

**கொத்தனிக்கோட்டை** *kottaṉi-k-kōṭṭai,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanadhapuram Dt.

*[கொற்றன் → கொத்தன் + தனி + கோட்டை.]*

**கொத்தனூர்** *kottaṉūr,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kadalur Dt.

*[கொற்றன் → கொத்தன் + ஊர்.]*

**கொத்தனை** *kottaṉai,* பெ.(n.) கூட்டமாகச் செல்லும் சிறுமீன் வகை; a kind of small fish living in shoals. *"கொத்தனை யுகளு நன்னீர்" (பாரத. சூதுபோர்.14).*

*[கொத்து → கொத்தல் → கொத்தலை → கொத்தனை.]*

**கொத்தாங்கொளுஞ்சி** *kottāṅ-koḷuñji,* பெ.(n.) கொழிஞ்சிவகை (பெரியமாட். 113.); a plant.

*[கொற்றான் → கொத்தான் + கொளுஞ்சி.]*

**கொத்தாபட்டி** *kottā-paṭṭi,* பெ.(n.) தேனி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Theni Dt.

*[கொத்தன் + பட்டி – கொத்தன்பட்டி → கொத்தாபட்டி.]*

**கொத்தார்குழவி** *kottār-kuḻavi,* பெ.(n.) சீவக மூலி; wild sarsaparilla (சா.அக.).

*[கொத்து + ஆர் + குழவி.]*

**கொத்தாள்** *kottāḷ,* பெ.(n.) 1. வேளாண் தொழிற் கூலியாள்; hired labourer in agricultural operations. 2. அடிமை; slave.

*[கொத்து + ஆள்.]*

**கொத்தான்**[1] *kottāṉ,* பெ.(n.) ***கொற்றான்*** பார்க்க; see *koṟṟāṉ.*

*[கொற்றான் → கொத்தான்.]*

கொத்தான் வகை :1.எருமைக்கொத்தான்,2. கொடிக் கொத்தான், 3. சங்கொத்தான், 4. கறிக்கொத்தான், 5. முடக் கொத்தான், 6. வேரிலாக்கொத்தான், 7. முட் கொத்தான் (சா.அக.).

**கொத்தான்**[2] *kottāṉ,* பெ.(n.) நத்தை (Pond.); snail.

*[குழை → குழைத்து → கொத்து → கொத்தான.]*

**கொத்தான் இஞ்சி** *kottāṉ-iñji,* பெ.(n.) பச்சை இஞ்சி; green ginger (சா.அக.).

*[கொத்தான் + இஞ்சி.]*

**கொத்தான் சூரிகை** *kottāṉ-šūrigai,* பெ.(n.) பச்சைமிளகு; green pepper (சா.அக.).

*[கொத்தான் + சூரிகை.]*

**கொத்தான் வாகை** *kottāṉ-vāgai,* பெ.(n.) வாகைவகை (பு.வெ.8: 2. கொளு, உரை); a species of sirissa.

மறுவ. வெண்கண்ணி.

*[கொத்தான் + வாகை.]*

**கொத்தி**[1] *kotti,* பெ.(n.) மீன்கொத்திப் பறவை; king-fisher (சா.அக.).

*[கொத்து → கொத்தி]*

**கொத்தி**[2] *kotti,* பெ.(n.) 1. குருட்டு விலங்கு; blind animal. 2. பூனை; cat.

மறுவ. பூசை.

**E.** cat; **O.E.** cattle; **M.E.** cattes; **L.L.** cattus, catta; **ONF.** chat; **O.N.** kottr; **O.H.G.** kazza.

*[கொத்து → கொத்தை. கொத்தை : குருடு.]*

**கொத்திக்கொண்டுபோ-தல்** *kotti-k-koṇḍu-pō-,* 8 செ.குன்றாவி.(v.t.) தவறவிடாமல்

கைப்பற்றுதல்; swoop away. உன் அழகிற்கு யாராவது உன்னைக் கொத்திக்கொண்டு போய்விடுவார்கள் (உ.வ.).

[கொத்தி + கொண்டு + போ-.]

**கொத்திடல்** *kottiḍal*, பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanadha puram Dt.

[கோ (அரசன்) + திடல் – கோத்திடல் → கொத்திடல்.]

**கொத்தித்தின்(னு)-தல்** *kotti-t-tiṉṉu-*, 14 செ.குன்றாவி. (v.t.) 1. கொத்தி யுண்ணுதல்; lit., to peck and eat. 2. மிகுதியாகத் துன்பப்படுத்துதல் (கொ.வ.); to harass, torment.

[கொத்தி + தின்(னு)-.]

**கொத்திதழி** *kottitaḻi*, பெ.(n.) ***சரக்கொன்றை*** பார்க்க (தைலவ.தைல. 135, 26.); see *cara-k-koṉṟai*

[கொத்து + இதழி.]

**கொத்திப்பறத்து-தல்** *kotti-p-paṟattu-*, 5 செ.குன்றாவி. (v.t.) துன்பப்படுத்தி வெருட்டுதல்; to torment and drive off.

[கொத்து → கொத்தி + பறத்து-.]

**கொத்திப்பிடுங்கு-தல்** *kotti-p-piḍuṅgu-*, 5 செ.குன்றாவி. (v.t.) ***கொத்தித்தின்(னு)-தல்,*** பார்க்க; see *kotti-t-tiṉ(ṉu)-*.

[கொத்தி + பிடுங்கு-.]

**கொத்திமங்கலம்** *kotti-maṅgalam*, பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanjipuram Dt.

[கொத்தி + மங்கலம்.]

**கொத்தியரி-த்தல்** *kotti-y-ari-*, 4 செ.குன்றாவி. (v.t.) நாசமாக்குதல்; to destroy.

[கொத்தி + அரி-.]

**கொத்தியார்கோட்டை** *kottiyār-kōṭṭai*, பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanadhapuram Dt.

[கொற்றியார் → கொத்தியார் + கோட்டை.]

**கொத்தியெடு-த்தல்** *kotti-y-eḍu-*, 4 செ.குன்றாவி. (v.t.) மூக்கால் கொத்தியெடுத்தல்; picking up grains as by fowls, pigeons etc. (சா.அக.).

[கொத்தி + எடு-.]

**கொத்திலை** *kottilai*, பெ.(n.) 1. நிலவேம்பு; ground neem.

**மறுவ.** காக்கைப்பிலை, காகோளி.

[கைத்து → கொத்து + இலை.]

**கொத்து[1]-தல்** *kottu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. நிலத்தைக் கிண்டுதல்; to grub up, hoe. 2. அலகால் குத்தியெடுத்தல்; to peck, as a bird. *"கழுகு கொத்திடக் களத்திடைக் கவிழ்ந்தனர்" (காசிக. தக்கன்வேள்வியை.48).* 3. குத்திக் கடித்தல்; to bite, as a snake. 4. வெட்டுதல்; to chop, hack, mince. கொல்லிமலைப் பக்கங்களில் பலாக்காய் கொத்துகிறார்கள். 5. எழுத்து முதலியன செதுக்குதல்; to carve, engrave. 6. பிளத்தல்; split; *விறகு கொத்த ஆள் கிடைக்க வில்லை (கிரி.) (வே.க. 178).* 7. அம்மி, உரல் முதலியவற்றில் கொத்துதல், உளியால் கொத்துதல்; to chisel, to chop.

**ம.** கொத்துக; **க.** கொத்து; **தெ.** குச்சு; **குட.** கொத்த; **துட.** க்விந்த்க்; **கோத.** கொத்ய்.

**Bāli.** n-getep, nu-get. **ME.** cutten, kutten; **Swed.** kuta, kota; **Ice.** kuta.

[குத்து → கொத்து.]

**கொத்து[2]** *kottu*, பெ.(n.) 1. கொத்துவகை; grubbing; mincing; pecking, as birds, grabbing, as fish; biting, as a serpent; gashing, engraving. 2. கொத்துவேலை; masonry, work of a mason. 3. கொத்தனது ஒரு நாள் வேலை; a day's work of a mason. 4. கொத்துவேலை செய்பவன்; a mason, dist. fr. cittu. 5. களை பறிக்கப் பயன்படும் சிறு களைக்கொட்டு (இ.வ.); a small hoe used for rooting out weeds.

[குத்து → கொத்து.]

**கொத்து[3]** *kottu*, பெ.(n.) 1. பூ முதலியவற்றின் குலை; bunch, cluster, collection of things of the same kind. *"கொத்துறு போது மிலைந்து" (திருவாச. 6:30).* 2 திரள்; assembly, multitude. *"அனைத்துக் கொத்துப் பரிஜனங்களும்" (குருபரம்.).* 3. குடும்பம்; family. *அவன் கொத்துக் கொடியை அறியேன் (வின்.).* 4. ***சவண்டிக் கொத்தன்*** பார்க்க; see *cavaṇḍi-k-kottaṉ*. 5. ஆடையின் மடி (இ.வ.); a piece of cloth. 6. தவசமாகக் கொடுக்குங் கூலி (இ.வ.); wages paid in kind, as grain, etc. 7. சோறு; cooked rice. *"அரும்புக்கும் கொத்துக்கும் வந்தார்" (தனிப்பா. 1, 87: 174).* 8. கைப்பிடி அளவு; handful, as of cooked rice. ஒரு கொத்துச் சோறு கொடு (உ.வ.). 9. நாழி (யாழ்ப்.); a standard measure = about a quart. 10. ஒன்றாகச் சேர்ந்திருக்கும் நிலை;

bunch, cluster. கொத்துக் கொத்தாக மலர்கள் பூத்திருந்தன (உ.வ.). வித்தாரக் கள்ளி விறகொடிக்கப் போனாளாம் கத்தாழை முள்ளு கொத்தோட தைத்ததாம் (பழ).

**ம., க.** கொத்து., **தெ.** கொதரு (அதிகமாதல்).

*[குத்து = திரட்சி; குத்து → கொத்து.]*

guccha, guñja, gutra, a bunch, a bundle, a bunch of flowers, a cluster of blossoms, Lf.D. kottu, gutti, gudi, goñcal, gonci, gōne, gole, the so - called Tbhs. kuccu, koccu, and the terms S. kude, K.K.E.D.XIII.

**கொத்து**[4] *kottu*, பெ.(n.) ஒன்றேகால் கல்லெடைக்கு (கிலோவுக்கு)ச் சமமான அளவுகொண்ட முகத்தல் அளவை; a measure roughly equal to one and a quarter kilogram.

*[குத்து → கொத்து.]*

**கொத்துக்கட்டி** *kottu-k-katti*, பெ.(n.) மண்கட்டி (யாழ்ப்.); clods hoed up.

*[கொத்து + கட்டி.]*

**கொத்துக்கடம்பை** *kottu-k-kaḍambai*, பெ.(n.) குத்தாக வளரும் ஒரு சிறிய செடி; a small shrub growing dense, known as buttermilk leaf plant (சா.அக.).

*[குத்து → கொத்து + கடம்பை.]*

**கொத்துக்கணக்கு**[1] *kottu-k-kaṇakku*, பெ.(n.) கொடிவழிக் கணக்கு வேலை (இ.வ.); hereditary office of accountant.

*[கொத்து + கணக்கு.]*

**கொத்துக்கணக்கு**[2] *kottu-k-kaṇakku*, பெ.(n.) கொத்தன் சம்பளக் கணக்கு (இ.வ.); account of mason's wages.

*[கொத்து + கணக்கு.]*

**கொத்துக்கத்தரி** *kottu-k-kattari*, பெ.(n.) ***சுண்டை*** பார்க்க; see *śuṇḍai*.

*[கொத்து + கத்தரி.]*

**கொத்துக்கம்பு** *kottu-k-kambu*, பெ.(n.) கம்புவகை (G.Sm.D.I.I.219.); a variety of millet.

*[கொத்து + கம்பு.]*

**கொத்துக்கரண்டி** *kottu-k-karaṇḍi*, பெ.(n.) கொத்துவேலைக்குரிய அரசிலைக் கரண்டி; mason's trowel.

*[கொத்து + கரண்டி.]*

**கொத்துக்களா** *kottu-k-kaḷā*, பெ.(n.) 1. ஒரு வகைக் களா; fascicled leaved berberry. 2. மலைக் களா; Indian cranberry (சா.அக.).

*[கொத்து + களா.]*

**கொத்துக்கறி** *kottu-k-kaṟi*, பெ.(n.) சிறுசிறு துண்டுகளாக நறுக்கிய இறைச்சி; chopped meat.

*[கொத்து + கறி.]*

**கொத்துக்காடு** *kottu-k-kāḍu*, பெ.(n.) உழவினாலன்றிக் கொத்திப் பயிரிடுவதற்குரிய நிலம் (G.Sm.D.I., II, 43.); land cultivable by hoeing and not by ploughing, opp. to *uḻavukkāḍu.*

*[கொத்து + காடு.]*

**கொத்துக்காரச்சம்மட்டி** *kottu-k-kāra-c-cammatti*, பெ.(n.) ஒரு மருந்துச்செடி; a medicinal plant.

*[கொத்துக்காரன் + சம்மட்டி.]*

**கொத்துக்காரன்**[1] *kottu-k-kāraṉ*, பெ.(n.) 1. வேலையாள்களின் தலைவன் (இ.வ.); head of a company of labourers, as of those engaged in reaping. 2. ***சவண்டிக்கொத்தன்*** பார்க்க; see *cavaṇḍi-k-kottaṉ.*

*[கொத்து + காரன்.]*

**கொத்துக்காரன்**[2] *kottu-k-kāraṉ*, பெ.(n.) 1. கொத்துவேலை செய்பவன்; mason, brick layer. 2. கல்வேலை செய்பவன்; stone mason. 3. ஊர்த் தலைவன்; village head. 4. பண்ணை மேலாளர்; manager of a farm.

*[கொத்து + காரன்.]*

**கொத்துக்காரனுளி** *kottu-k-kāraṉ-uḷi*, பெ.(n.) உளிவகை; gouge (புதுவை).

*[கொத்துக்காரன் + உளி.]*

**கொத்துக்காரி** *kottu-k-kāri*, பெ.(n.) கோயிலிற் கொடிவழி உரிமையுடைய நாட்டிய மங்கை (இ.வ.); dancing girl holding hereditary rights in a temple.

*[கொத்து (கொத்தடிமை) + காரி.]*

**கொத்துக்காரை** *kottu-k-kārai*, பெ.(n.) 1. பெருங்காரை; divine jasmine. 2. பூங்காரை; poisonous fruit (சா.அக.).

*[கொத்து + காரை.]*

**கொத்துக்கிளை** *kottu-k-kiḷai,* பெ.(n.) நகு தாளிலை; cherry nutmeg (சா.அக.).

*[கொத்து + கிளை.]*

**கொத்துக்கீரை** *kottu-k-kīrai,* பெ.(n.) கறிவகை (நாஞ்.); a kind of dish.

*[கொத்து + கீரை.]*

**கொத்துக்குறடு** *kottu-k-kuṟaḍu,* பெ.(n.) நண்டு; crab.

*[கொத்து + குறடு.]*

**கொத்துக்கூலி** *kottu-k-kūli,* பெ.(n.) 1. உழவுத் தொழிலின்பொருட்டுக் கொடுக்குங்கூலி; wages for various forms of agricultural work. 2. கொத்தர்க்குக் கொடுக்குங் கூலி; wage for masonry work.

*[கொத்து + கூலி.]*

**கொத்துக்கோரை** *kottu-kōrai,* பெ.(n.) கோரை வகை; wet-land sedge.

*[கொத்து (தொகுதி) + கோரை.]*

**கொத்துக்கோவை** *kottu-k-kōvai,* பெ.(n.) 1. காக்கைப் பிலை; esculent leaved false kamela. 2. காகோளி; downy-leaved false hamela (சா.அக.)

*[கொத்து + கோவை.]*

**கொத்துங்குறடு** *kottuṅ-kuṟaḍu,* பெ.(n.) 1. நண்டு (யாழ்.அக.); crab. 2. கொத்துதற்குக் குறடு போன்ற உறுப்புடையது; lit. that which has pincer-like mandibles to strike.

*[கொத்தும் + குறடு.]*

**கொத்துங்குறையுமாய்** *kottuṅ-kuṟaiyumāy,* கு.வி.எ. (adv.) அரைகுறையாய் (வின்.); in an incomplete or unfinished state.

*[கொத்தும் + குறையும் + ஆய்.]*

**கொத்துங்கூற்றானுள்ளோன்** *kottuṅ-kūṟṟān uḷḷōṉ,* பெ.(n.) நண்டு; crab (சா.அக.).

மறுவ. கொத்துங்குறடு.

*[கொத்தும் + கூற்றான் + உள்ளோன்.]*

**கொத்துச்சட்டி** *kottu-c-catti,* பெ.(n.) 1. உணவு பரிமாறப் பயன்படும் ஏன வகை (கொ.வ.); a cluster of cups, used in serving food. 2. கட்டட வேலைக்குப் பயன்படும் இருப்புச்சட்டி; small receptacle of iron sheet, used by masons for keeping mortar.

மறுவ. குத்துச்சட்டி.

*[கொத்து + சட்டி.]*

**கொத்துச்சரப்பணி** *kottu-c-cara-p-paṇi,* பெ.(n.) மகளிர் கழுத்தணிவகை; a kind of gold chain for the neck, worn by women.

*[கொத்து + சரப்பணி.]*

**கொத்துச்சரப்பளி** *kottu-c-cara-p-paḷi,* பெ.(n.) ***கொத்துச்சரப்பணி*** பார்க்க; see *kottu-c-carappaṇi.*

*[கொத்து (சரப்பணி) + சரப்பளி.]*

**கொத்துச்சரம்** *kottu-c-caram,* பெ.(n.) பொன் மணியாலாகிய மாலை (வின்.); strings of golden beads.

*[கொத்து + சரம்.]*

**கொத்துச்சவடி** *kottu-c-cavaḍi,* பெ.(n.) ***கொத்துச்சரப்பணி*** பார்க்க; see *kottu-c-carappaṇi.*

*[கொத்து + சவடி.]*

**கொத்துணி** *kottuṇi,* பெ.(n.) 1. பலர்க்குப் பொதுவான அடிமை; slave owned in common by several persons. 2. பலர்க்குப் பொதுவான தோட்டம்; garden owned by several persons.

*[கொத்து + (கூட்டம், பொது) உண் – கொத்துண் → கொத்துணி.]*

**கொத்துத்தம்பட்டன்** *kottu-t-tambaṭṭaṉ,* பெ.(n.) கொடித்தம்பட்டன்; sword-bean (சா.அக.).

*[கொத்து + தம்பட்டன்]*

**கொத்துத்தாழ்வடம்** *kottu-t-tāḻvaḍam,* பெ.(n.) பவளங்கள் இடையிட்டு முகப்பில் தங்கக் கட்டமைந்த உருத்திராக்க மாலை (இ.வ.); string of rudraksa beads inter-spersed with coral.

*[கொத்து + தாழ்வடம்.]*

**கொத்துத்தூர்வை** *kottu-t-tūrvai,* பெ.(n.) கொத்துதலாலாகுந் தரையின் இளக்கம் (யாழ்ப்.); looseness of earth caused by hoeing.

*[கொத்து + தூர்வை.]*

**கொத்துப்பசலை** *kottu-p-pašalai,* பெ.(n.) ஒரு வகைக் கீரை; a kind of green plant.

*[கொத்து + பசலை. பசளை → பசலை.]*

**கொத்துப்பசளை** *kottu-p-pašaḷai,* பெ.(n.) ***கொடிப்பசளை*** (M.M. 461.) பார்க்க; see *kodi-p-pašaḷai.*

*[கொத்து + பசளை.]*

**கொத்துப்பணி** *kottu-p-paṇi,* பெ. (n.) ***கொத்து வேலை*** பார்க்க; see *kottu-vēlai.*

ம. கொத்துப்பணி.

*[கொத்து + பணி]*

**கொத்துப்பத்துவேலை** *kottu-p-pattu-vēlai,* பெ.(n.) கோபுரம், விமானம் போன்றவற்றில் சுதை யுருவங்கள் செய்யும் வேலை; stucco structure on temple towers (கட்.தொ.).

*[கொத்து + (பற்று) பத்து + வேலை.]*

**கொத்துப்பலகை** *kottu-p-palagai,* பெ.(n.) பாத்தியில் படிந்திருக்கும் உப்பை வாருவதற்கு ஏந்தாகக் கொத்தும் பலகை; a plank used to grub up the salt to facilitate the collection of salt from salt pan (பரத. கடற். சொ.).

*[கொத்து + பலகை.]*

**கொத்துப்பற்று—தல்** *kottu-p-parru-,* 5 செ.கு.வி. (v.i.) 1. பலனடைதல் ; to reap the fruit of one's labours. 2. கூலித்தவசம் பெறுதல்; lit., to receive wages in kind.

*[கொத்து + பற்று—.]*

**கொத்துப்பாசி** *kottu-p-pāši,* பெ.(n.) பாசிவகை யுளொன்று; a kind of moss.

*[கொத்து + பாசி.]*

**கொத்துப்புங்கன்** *kottu-p-puṅgaṉ,* பெ.(n.) 1. காய்கள் கொத்தாக விடும் புன்கு; Indian beech yielding fruits in clusters. 2. சரப்புன்கு; hog-creeper.

*[கொத்து + புங்கன்.]*

**கொத்துப்புடல்** *kottu-p-puḍal,* பெ.(n.) புடலைவகை (வின்.); a kind of snake-gourd.

*[கொத்து + புடல்.]*

**கொத்துமணி** *kottu-maṇi,* பெ.(n.) பல மணிகள் சேர்ந்த மணிக்கொத்து ; cluster of bells.

*[கொத்து + மணி.]*

**கொத்துமல்லி** *kottu-malli,* பெ.(n.) 1. ஒருவகைச் செடி; annual plant with aromatic fruit, coriander. 2.சம்பாரப் பண்டங்களுள் ஒன்றாகிய கொத்துமல்லி விதை ; coriander seed, used as a condiment.

ம.,தெ.,பட. கொத்துமல்லி; க. கொத்துமலி, கொத்துமிலி, கொத்தும்பரி; **Skt.** kusrumburu.

*[கொத்து + மல்லி.]*

**கொத்துமாலை** *kottu-mālai,* பெ.(n.) பல பூச்சரங்கள் சேர்த்து ஒன்றாகக் கட்டிய பூமாலை; garland of many wreaths. *'கொத்துமாலை நிறைந்த பெரிய தோளினையும்' (திருக்கோ. 391, உரை).*

*[கொத்து + மாலை.]*

**கொத்துமானம்** *kottu-māṉam,* பெ.(n.) அணிகலன்களில் நுண்ணுளியால் செய்யப்படும் அழகு வேலைப்பாடு ; fine chisel - workmanship in gold or silver.

*[கொத்து + மானம்.]*

**கொத்துமானவேலை** *kottu-māṉa-vēlai,* பெ.(n.) ***கொத்துமானம்*** பார்க்க; see *kottu-māṉam.*

*[கொத்து + மானம் + வேலை.]*

**கொத்துமேகம்** *kottu-mēgam,* பெ.(n.) கொத்துக் கொத்தாயிருக்கும் முகில்; an assemblage of clouds.

*[கொத்து + மேகம்.]*

**கொத்துலதம்** *kottuladam,* பெ.(n.) மாமரம்; mango tree.

*[கொத்து + அதுலம் → கொத்ததலம் → கொத்துலதம் (கொ.வ.).]*

**கொத்துவசளை** *kottu-vašaḷai,* பெ.(n.) கொடிப் பசளை; heart leaved Malabar night shade (சா.அக.).

*[கொத்துப்பசளை → கொத்துவசளை.]*

**கொத்துவலை** *kottu-valai,* பெ.(n.) அறுபட்டு இருகூறான மீன்பிடி வலை; a portion of the fishing net which is cut into two pieces (மீன்.பிடி.தொ.).

*[கொத்து + வலை.]*

**கொத்துவாய்** *kottu-vāy,* பெ.(n.) வெட்டுவாய்; a long deep cut made in the flesh; an incision of considerable length particularly of flesh (சா.அக.).

*[கொத்து + வாய்.]*

**கொத்துவால்** *kottu-vāl,* பெ.(n.) தேளின் கொடுக்கைப் போன்ற கொட்டும் வால்; stinging tail as of a scorpion (சா.அக.).

*[கொட்டுவால் → கொத்துவால் (கொ.வ.)]*

**கொத்துவான்** *kottuvāṉ,* பெ.(n.) மண்வெட்டி; spade.

*[கொத்து → கொத்துவான்.]*

**கொத்துவானம்** *kottu-vāṉam,* பெ.(n.) முகில்கள் கொத்துக் கொத்தாகவுள்ள வானம் (வின்.); mackerel sky.

*[கொத்து + வானம்.]*

**கொத்துவேலை** *kottu-vēlai,* பெ.(n.) 1. உளியாற் கொத்திச் செய்யும் சித்திரவேலை; carved work, engraving, statuary. 2. கட்டட வேலை; masonry, brick laying. 3. உரல் ஆட்டுக்கல் போன்றவற்றை உளியாற் கொத்திச் செப்பனிடுதல்; shaping mortar, wetgrinder, etc.

ம. கொத்துபணி, கொத்துவேல.

*[கொத்து + வேலை.]*

**கொத்துவேலைச்செம்பு** *kottu-vēlai-c-cembu,* பெ.(n.) வேலைப்பாடுள்ள செம்பு (வின்.); a copper pot of fine workmanship.

*[கொத்துவேலை + செம்பு.]*

**கொத்துளி** *kottuḷi,* பெ.(n.) உளிவகை (Pond.) a kind of chisel.

*[கொத்து + உளி.]*

**கொத்தை**[1] *kottai,* பெ.(n.) 1. சொத்தை; rottenness. 2. ஈனம்; blot, blemish, defect. *'அவர் வமிசத்துக்குக் கொத்தையாங் காண்' (ஈடு. 5: 4: 7).* 3. நூல் முதலியவற்றின் சிம்பு; fibrous rising on cloth, scab, scale. *'கொத்தையும் நெருடுமான சீலை' (வின்.).* 4. அரைகுறை; incompleteness. *'வெந்தது கொத்தையாக வாயிலிடுமாபோலே' (ஈடு. 1,3:1).* 5. குருடன்; blind man. *"கொத்தைக்கு மூங்கர் வழி காட்டுவித்து" (தேவா. 1040:2).* 6. கரிசன்; sinner. *"கொத்தைபோ னிரயக்குழி கூடுவார்" (சிவதரு.கோபுர.271).* 7. சமய அறிவில்லாமை; spiritual ignorance. *"கொத்தை மாந்தர்" (சங்கற்ப. பாடாணவாதி சங்கற்ப. வரி,38).*

*[குல் → குந்து → குத்து → கொத்தை.]*

**கொத்தை**[2] *kottai,* பெ.(n.) குருடு; blindness. கண்ணாற் கொத்தை காலால் முடவன் (உருபு மயக்கம், உரைக்குறிப்பு).

*[கொள் → கொத்து → கொத்தை.]*

**கொத்தைநூல்** *kottai-nūl,* பெ.(n.) சிம்புவிழுந்த பருத்தி நூல் (வின்.); ill-cleaned cotton yarn.

*[கொத்தை + நூல்.]*

**கொதக்கு** *kodakku,* பெ.(n.) பயனற்ற; useless.

*[குந்து → கொந்து → கொதக்கு.]*

**கொதகொதத்தல்** *kodakodattal-,* தொ.பெ. (vbl.n.) சிரங்கு, புண் அழிதல்; putrefaction of itch, wounds, injuries, sores etc. (சா.அக.).

*[கொத + கொதத்தல்.]*

**கொதப்பல்** *kodappal,* தொ.பெ.(vbl.n.) 1. மெல்லாது வாயை அசைத்தல்; eating with the lips close. 2. மெல்லுதல்; masticating. 3. உதப்புதல்; shiffing the mouth with food (சா.அக.).

*[குதப்பு → கொதப்பு + அல்.]*

**கொதி**[1]**-த்தல்** *kodi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. நீர் முதலியன காய்ந்து பொங்குதல்; to boil, bubble up from heat, effervesce. *"குண்டிகை யிருந்த நீருங்... கொதித்த தன்றே" (கம்பரா. வருணனை. 61).* 2. சூடுடையதாதல்; to be heated, as the body, ground, etc. உடம்பு கொதிக்கிறது (உ.வ.). 3. சினத்தல் (பிங்.); to be infuriated, enraged, to burn with indignation. 4. வருத்தமுறுதல்; to be offended; to be distressed; to be moved with pity. அவன் செய்த தீங்கால் என் நெஞ்சு கொதிக்கிறது. 5. ஆசை மிகக் கொள்ளுதல்; to burn with desire, hanker after. அவன் உன்னைப் பார்க்கக் கொதிக்கிறான் (இ.வ.). 6. வயிறு நழுக்குதல்; to have slight diarrhoea.

ம. கொதிக்குக; க., பட. குதி; து. குதி, கொதி.

*[குல் → குதி → கொதி.]*

**கொதி**[2] *kodi,* பெ.(n.) 1. நீர் முதலியவற்றின் கொதிப்பு; bubbling up, as of boiling water or oil. *"கொதியடக்கச் சிவிறி" (தைலவ. வைத்.14).* 2. வெப்பம்; heat, as of fire, weather etc. 3. உடம்பிற் காணும் காங்கை; sensation of heat, in the body. 4. காய்ச்சல்; fever. மாந்தக்கொதி; ஊதைக்கொதி (வின்.). 5. **கொதிக்கழிச்சல்** (வின்.) பார்க்க; see *kodi-k-kaliccal.* 6. சினம்; anger, rage. 7. மிகுசினம்; fierceness, as of anger. *"கொதியி*

*னால்வரு காளிதன் கோபம்" (தேவா. 485: 4).* 8. வருத்தம்; grief, sorrow. 9. செருக்கு; pride, arrogance. கொதியிறக்க (இ.வ.). 10. ஆசை; desire, greed. 11. தெய்வத்திற்குப் படைக்கும் சோறு (S.I.I.VII.22); food offering to the deity.

க., பட. குதி.

*[குல் → குதி → கொதி.]*

**கொதி**[3] *kodi,* பெ.(n.) இஞ்சி; ginger. *"சற்கரையமுது எண்ணூற் றிருபதின்பலமும் மிளகமுது னாழி உழக்கும் பயற்றமுது னாலு மரக்காலும் கொதி இரண்டு மரக்காலும் (திருப்.கல்.தொ.உ.எண்.134:12).*

*[கொள் → கொத்தி → கொதி.]*

**கொதி**[4] *kodi,* பெ.(n.) திருப்படையல் (பிரசாதம்); food offering to the deity (S.I.I.VII.22).

*[கொதி = கொதித்தல், வேகவைத்த உணவு.]*

**கொதிக்கண்** *kodi-k-kan,* பெ.(n.) ***கொடுங்கண்*** பார்க்க; see *kodun-gan.*

*[கொதி + கண்.]*

**கொதிக்கவை-த்தல்** *kodikka-vai-,* 4 செ. குன்றா.வி.(v.t.) 1. குழம்பு முதலியவற்றை அடுப்பில் வைத்துக் கொதிக்கும்வரை சூடேற்றல்; boiling broth or sauce to a stage till its contents are completely cooked or baked; the operation of boiling while cooking. 2. உடம்பில் பற்றுப் போடுவதற்காகக் கரைத்த மருந்துகளைக் கரண்டியி லிட்டுக் கொதிக்கும் வரை சூடுகாட்டல்; heating a solution of medicine in a big spoon to a boiling point for external application. 3. கருக்கு (கியாழம்) வற்றும்படி கொதிக்கும்வரை சூடேற்றல்; boiling down decoction till it is sufficiently reduced in quantity (சா.அக.).

க., பட. குதக.

*[கொதிக்க + வை-.]*

**கொதிக்கழிச்சல்** *kodi-k-kaliccal,* பெ.(n.) வெப்பத்தால் உண்டாகும் வயிற்றுப்போக்கு; diarrhoea attended with flux.

*[கொதி + கழிச்சல்.]*

**கொதிகஞ்சி** *kodi-kañji,* பெ.(n.) உலைநீரில் கொதிக்கும் அரிசியினின்று வடிக்கும் கஞ்சி; rice-water taken hot in cooking.

*[கொதி + கஞ்சி.]*

**கொதிகருப்பஞ்சாறு** *kodi-karuppañcāru,* பெ.(n.) கொதிக்க வைத்த கரும்பின் சாறு; boiled sugarcane juice (சா.அக.).

*[கொதி + கரும்பு + அம் + சாறு.]*

**கொதிகருப்பநீர்** *kodi-karuppa-nīr,* பெ.(n.) 1. சுட வைத்த இனிப்புக்கள் (யாழ்ப்.); heated sweet toddy. 2. பனிக்குடத்து நீர் ; amniotic fluid.

*[கொதி + கருப்பநீர்.]*

**கொதிகலன்** *kodi-kalan,* பெ.(n.) நீராவி உண்டாக்கப் பயன்படுத்தும் கலன்; boiler.

*[கொதி + கலன்.]*

**கொதிகிளம்பக்காய்ச்சல்** *kodi-kilamba-k-kāyccal,* பெ.(n.) குமிழியெழும்பும்படி காய்ச்சுதல்; heating to the boiling point (சா.அக.).

*[கொதி + கிளம்ப + காய்ச்சல்.]*

**கொதிகுடல்** *kodi-kudal,* பெ.(n.) 1. பசியினால் கொதிக்கும் குடல்; bowels easily excited by hunger. 2. பசியைத் தாங்க முடியாத வயிறு; stomach incapable of bearing hunger (சா.அக.).

*[கொதி + குடல்.]*

**கொதிகுடலன்** *kodi-kudalan,* பெ.(n.) பசி தணியாத வயிறுள்ளவன் (யாழ்ப்.); a man of insatiable appetite.

*[கொதி + குடல் + அன்.]*

**கொதிகொதி-த்தல்** *kodi-kodi-,* 4 செ.கு.வி. (v.i.) உலைப்பெய்த அரிசி முதலியவற்றினின்றும் கொதியெழும்புதல்; to bubble up, as boiling rice.

*[கொதி + கொதி-.]*

**கொதிகொள்ளல்** *kodi-kollal,* பெ.(n.) 1. கொதி யுண்டாதல்; reaching the boiling point. 2. உடலின் வெக்கை; developing excessive heat in the system. 3. அரத்தக் கழிச்சலால் உடம்பு சுடுதல்; being attacked with or suffering from dysentery. 4. காய்ச்சலினால் உடம்பு காந்துதல்; generating heat from the body as in fever (சா.அக.).

*[கொதி + கொள்ளல்.]*

**கொதிதண்ணீர்** *kodi-tannīr,* பெ.(n.) 1. வெந்நீர் (யாழ்.அக.); boiling water. 2. சோறு கொதிக்கும் போது வடித்த நீர்; water seethed with rice (சா.அக.).

*[கொதி + தண்ணீர்.]*

**கொதிதைலம்** *kodi-tailam,* பெ.(n.) 1. எண்ணெயில் மருந்துப் பொருள்களைக் கூட்டிக் காய்ச்சிக் கொதிக்க வைத்து இறக்கிய எண்ணெய்; medicated oil prepared by mixing up drugs in oil and then boiling it sufficiently. 2. முத்துக்கொட்டை முதலிய விதைகளை இடித்துத் தண்ணீரிற் கலந்து கொதிக்கவைப்பதனால் இறங்கும் எண்ணெய்ச் சத்து; oil extracted from castor seeds by boiling process (சா.அக.).

*[கொதி + தைலம்.]*

**கொதிநிலை** *kodi-nilai,* பெ.(n.) கொதிக்கும் வெப்ப அளவு; boiling point.

*[கொதி + நிலை.]*

**கொதிநிலையம்** *kodi-nilaiyam,* பெ.(n.) ***கொதிநிலை*** பார்க்க; see *kodi-nilai.*

*[கொதி + நிலை. அம் – செல்லாக்க ஈறு.]*

**கொதிநீர்** *kodi-nir,* பெ.(n.) கொதிக்கின்ற நீர்; boiling water (சா.அக.).

*[கொதி + நீர்.]*

**கொதிப்படக்கி** *kodippaḍakki,* பெ.(n.) உடம்பினுள்ள வெப்பத்தைப் போக்கும் மருந்துகள்; medicinal agents tending to soothe or allay the irritation and assuage pain (சா.அக.).

**மறுவ.** கொதிப்பாற்றி.

*[கொதிப்பு + அடக்கி.]*

**கொதிப்பாற்றி** *kodippāṟṟi,* பெ.(n.) வெப்பந் தணிக்கும் மருந்து (இ.வ.); sedative, palliative.

*[கொதிப்பு + ஆற்றி.]*

**கொதிப்பி[1]–த்தல்** *kodippi-,* 18 செ.குன்றாவி. (v.t.) சுடச் செய்தல்; to be boiled.

*[கொதி + பி. பி – பிறவினை ஈறு.]*

**கொதிப்பி[2]–த்தல்** *kodippi-,* 4 செ.கு.வி. (v.i.) சிற்றுணா உண்ணுதல்; to take small refreshment.

*[கொதி → கொதிப்பி.]*

**கொதிப்பு** *kodippu,* பெ.(n.) 1. பொங்குகை; boiling, bubbling up, effervesce. 2. வெப்பம்; heat. 3. காய்ச்சல்; fever. 4. சினம்; rage, anger. *"மறவன் கொதிப்புரைத்தன்று" (பு.வெ.8:27, கொளு).* 5. வயிற்றெரிச்சல்; grief, sorrow. 6. பரபரப்பு; flutter, flurried state of mind. *"கொழுநரைத் தழுவுறுங் கொதிப்பால்" (கம்பரா. இலங்கையெரி. 27).*

*[கொதி → கொதிப்பு.]*

**கொதிப்புக்கணம்** *kodippu-k-kaṇam,* பெ.(n.) கருப்பச் சூட்டினால் குழந்தைகளுக்கேற்படும் கணநோய்; mesenteric fever in children due to congenital causes (சா.அக.).

*[கொதிப்பு + கணம்.]*

**கொதிப்புக்கொள்ளல்** *kodippu-k-koḷḷal,* பெ.(n.) 1. உடம்பு சுடுகை; getting heated in constitution. 2. கொதிக்கை; bubbling by heat. 3. சினத்தால் வெப்புக்கொள்ளல்; getting hot or violent through anger (சா.அக.).

*[கொதிப்பு + கொள் + அல்.]*

**கொதிப்பேறல்** *kodippēṟal,* பெ.(n.) 1. உடம்பில் வெப்பம் கொள்ளல்; getting heated in the system. 2. உடம்பிற் சூடு அதிகப்படல்; the system becoming increased in heat (சா.அக.).

*[கொதிப்பு + ஏறல்.]*

**கொதிபிடி–த்தல்** *kodi-piḍi-,* 4 செ.கு.வி.(v.i.) உண்ணும்போது நேர்ந்த தீக்கண் பார்வையால் உண்டி குன்றிப் போகை (இ.வ.); being affected in the appetite by the greedy eyes of a person looking on when one is taking meals.

*[கொதி + பிடி–.]*

**கொதிபோடு–தல்** *kodi-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ***கொதி[1.5]*** பார்க்க; see *kodi[1.5].*

*[கொதி + போடு–.]*

**கொதிமந்தம்** *kodi-mandam,* பெ.(n.) வெப்பால் வரும் மந்த நோய் (யாழ்.அக.); indigestion caused by excess of heat in the system.

*[கொதி + மந்தம்.]*

**கொதியல்** *kodiyal,* பெ.(n.) 1. ***கொதிப்பு*** (வின்.) பார்க்க; see *kodippu.* 2. நெகிழ்ந்த அணிகல னுறுப்பை இறுகச் செய்யும் வேலை; the work of tightening the loose parts of an ornament.

*[கொதி → கொதியல்.]*

**கொதியல்போடு–தல்** *kodiyal-pōḍu-,* 18 செ. குன்றாவி.(v.t.) நெகிழ்ந்த அணிகலனுறுப்பை இறுகச் செய்தல் (இ.வ.); to tighten the loose parts of an ornament.

*[கொதியல் + போடு–.]

**கொதியன்** *kodiyaṉ,* பெ.(n.) உணவில் ஆசை மிக்கவன் (இ.வ.); one who hankers after food.

*[கொதி → கொதியன்.]*

**கொதியிறங்கு-தல்** *kodi-iṟaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) செருக்குக் குறைதல்; to deminish as pride, vanity, haughtiness, anger etc.

*[கொதி + இறங்கு-.]*

**கொதியெடு-த்தல்** *kodi-y-eḍu-,* 4 செ.கு.வி.(v.i.) ***கொதியிறங்கு-தல்*** பார்க்க; see *kodi-y-iṟaṅgu-.*

*[கொதி + எடு-.]*

**கொதியெண்ணி** *kodi-y-eṇṇi,* பெ.(n.) உணவுண்ணக் காத்திருப்போன் (யாழ்.அக.); one who waits for meals.

*[கொதி + எண்ணி.]*

**கொதியெண்ணெய்** *kodi-eṇṇey,* பெ.(n.) கொதிக்க வைத்தெடுத்த மருந்தெண்ணெய் வகை; a medicinal oil, as boiled (வின்.).

*[கொதி + எண்ணெய்.]*

**கொதியெழும்பு-தல்** *kodi-y-eḻumbu-,*5 செ.கு.வி.(v.i.) 1. கொதித்தல்; to boil. 2. உட்சுரங் காய்தல்; to have a slight internal fever (சா.அக.).

*[கொதி + எழும்பு-.]*

**கொதிவரக்காய்ச்சு-தல்,** *kodivara-k-kāyccu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கொதியெழும்பக் காய்ச்சுதல்; heating to the boiling point (சா.அக.).

*[கொதிவர + காய்ச்சு-.]*

**கொதிவா-தல்** *kodi-varu-,* 18 செ.கு.வி.(v.i.) ***கொதியெழும்பு-தல்*** பார்க்க; see *kodi-eḻmbu-.*

*[கொதி + வா-.]*

**கொதிவெந்நீர்** *kodi-vennīr,* பெ.(n.) கொதிக்கும் நீர்; boiling water (சா.அக.).

*[கொதி + வெந்நீர்.]*

**கொதுக்கென்று போ-தல்** *kodukkeṉṟu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) சூட்டால் மலத்தோடு இரத்தம் கழிதல்; the fluxing or discharging of mucus matter in stools as in dysentry or diarrhoea (சா.அக.).

*[கொதுக்கு + என்று + போ-.]*

**கொதுக்கொதுக்கென்றுபோ-தல்** *kodu-k-kodukkeṉṟu-pō-,* 8 செ.கு.வி.(v.t.) செரியாமையால் அடிக்கடி சிற்றளவு மலங்கழிதல்; having looseness of bowels, due to indigestion (சா.அக.).

**மறுவ.** கொதுக்கொதுக்கெனக் கொட்டல்.

*[கொதுக்கு + கொதுக்கு + என்று + போ-.]*

**கொதுகு** *koduku,* பெ.(n.) கொசு; mosquito, gnat, fly. *"கொதுகறாக் கண்ணி னோன்பிகள்" (தேவா. 381: 9).*

**ம.** கொதுகு.

**Fin.** koi; **Est.** koi; **Mari.** koje; **Mansi.** kij; **Turk.** kuja;**Kirghig.** kujo; **Kazakh.** koja; **Jap.** ka.

*[கொத்து → கொது → கொதுகு.]*

கொத்துவதனால் கொதுகு எனப் பெயர் பெற்றது. கொதுகு → கொசு எனத் திரிந்தது. 'கு' சொல்லாக்க ஈறு. முயலை → முயல்கு என்றும் யானையைத் தெலுங்கில் ஏனிகு என்றும் வழங்குவதுபோன்று கொத்து → கொது → கொதுகு என வழங்கினர்.

**கொதுகுலசவையார்** *kodu-kula-šavaiyār,* பெ.(n.) தூதர் எனப்படும் இனத்தார்; the caste of *Tūdar. "கொதுகுல சவையாரிற் சூரியன்" (T.A.S.).*

*[கொத்து + குலம் + (அவை) சவை + ஆர்.]*

**கொதுகுலம்** *kodu-kulam,* பெ.(n.) மழலை கொஞ்சுகை (யாழ்.அக.); lisping.

*[குதுகலி → கொதுகுலம்.]*

**கொதுகுலவன்** *kodukulavaṉ,* பெ.(n.) முந்தைய மரக்காலின் பெயர்; name of grain measure in the Tirunedungalam area in Lalkudi Tk. *"இந்நெல்லு முப்பதின் கலமும் கொதுகுலான் என்னும் மரக்காலால் நிசதம்முற்றத்து அட்டி" (S.I.I. XXVI.738:5).*

*[குதுகலம் → குதுகலவன் → கொதுகுலவன்.]*

**கொதுகுலி-த்தல்** *kodu-kuli-,* 4 செ.கு.வி.(v.i.) குழைந்துருகுதல் (யாழ்.அக.); to melt.

*[குதுகலித்தல் → கொதுகுலி.]*

**கொதுகொது-த்தல்** *kodukodu-,* 4 செ.கு.வி.(v.i.) ஒலிக்குறிப்பு; onom. expr. to throb with pain.

*[கொது + கொது-.]*

**கொதுகொதுப்பு** *kodu-koduppu,* பெ.(n.) 1. கொஞ்சமாய் உடம்பு காய்தல்; slight febrile affection. 2. சினத்தாலுண்டாகும் சூடு; heat felt in

an agitated or excited state (சா.அக.). 3. குளிரால் நடுங்குகை ; shivering with cold.

*[குது → கொது + கொதுப்பு.]*

**கொதுகொதெனல்** *kodu-kodeṉal,* பெ.(n.) 1. நோவெடுத்தற் குறிப்பு (வின்.); onom. expr. of throbbing, as with pain. 2. சிறு காய்ச்சற் குறிப்பு ; slight rise of temperature in the body. 3. புண் அல்லது கட்டி வீங்கிப் பழுத்திருத்தற் குறிப்பு; highly inflamed condition, as of a sore.

*[கொது + கொது + எனல்.]*

**கொதும்பு** *kodumbu,* பெ.(n.) கதம்பை நார் (இ.வ.); coconut fibre (சா.அக.).

*[கோது → கதும் → கொதும்பு.]*

**கொதுவா** *koduvā,* பெ.(n.) ஒருவகை மீன்; a kind of fish.

*[கதுவு → கதுவா → கொதுவா.]*

**கொதுவை**[1] *koduvai,* பெ.(n.) மரத்தை உளியால் தோண்டுகை; cut made in wood with a chisel.

*[கொத்து → கொத்துகை → கொதுவை.]*

**கொதுவை**[2] *koduvai,* பெ.(n.) அடைமானம்; pledge, pawn, mortgage.

*[குத்தவை → கொதுவை.]*

**கொதை** *kodai,* பெ.(n.) மரத்தில் உளியால் தோண்டுகை; chiselling wood with chisel.

*[கொத்து → கொதை.]*

**கொந்தக்குலம்** *konda-k-kulam,* பெ.(n.) மதுரைக்கு அருகிலுள்ள கொந்தகையூரினரும் பாண்டியர் படைத்தலைவருமான பழைய வேளாள மரபினர்; the family of Vēḷāḷas in Kondagai near Madurai, formerly commanders under the Pāṇḍiyās. *"உயர் கொந்தக் குலத்துட்டோன்றி" (திருவாலவா.39:1).*

*[கொந்தகை → கொந்தகன் + குலம்.]*

**கொந்தகன்** *kondagaṉ,* பெ.(n.) படைத்தலைவன்; commander of an army. *"கொந்தகன் வாக்கிது" (திருவாலவா. 30:45).*

*[கொந்தகை → கொந்தகன்.]*

**கொந்தகன்பெருங்கரை** *kondagaṉ-peruṅkarai,* பெ.(n.) சிவகங்கை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Sivagangai Dt.

*[கொந்தன் → கொந்தகன் + பெரும் + கரை.]*

**கொந்தகை** *kondagai,* பெ.(n.) சிவகங்கை மாவட்டத்தில் அமைந்த ஓர் ஊர்; a village in Šivagangai Dt.

*[குந்தவை → கொந்தவை + கொந்தகை]*

கி.பி. 985 – 1014 காலச் சோழ மன்னரான இராசராசனின் மகள் குந்தவையின் நினைவால் இவ் வூருக்கு அப் பெயர் வழங்கி இருக்கலாம். [த.நா.ஊ.பெ.]

**கொந்தம்** *kondam,* பெ.(n.) மயிர்க்குழற்சி; fine wavy, dense curls of hair. *"கொந்தக் குழலை" (திவ். பெரியாழ். 2, 5:8).*

*[கொந்தளம் → கொந்தம். கொந்தளம் = பெண்கள் தலைமயிர்ச் சுருள்.]*

**கொந்தமணி** *konda-maṇi,* பெ.(n.) மகளிர் கழுத்தணி வகை (இ.வ.); a kind of necklace worn by women.

*[கொத்து → கொந்து + மணி – கொந்தமணி.]*

**கொந்தமூர்** *kondamūr,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[கொந்தன் + ஆமூர் – கொந்தாமூர் → கொந்தமூர்.]*

குந்தம் = ஒரு படைக்கலன். கையில் குந்தப் படைக்கலன் ஏந்தியவன் குந்தகன் – கொந்தகன்; கொந்தகன் → கொந்தன் + ஆமூர் – கொந்தன் ஆமூர் → கொந்தமூர் [கொ.வ.].

**கொந்தரிவாள்** *kondarivāḷ,* பெ.(n.) முட்செடிகளை வெட்டியழித்து நீக்கப் பயன்படும் அரிவாள் வகை (இ.வ.); sickle, long-handled bill-hook, as for clearing prickly-pear.

*[கொந்து + அரிவாள்.]*

**மறுவ.** கொந்தறுவாள்.

**கொந்தல்** *kondal,* பெ.(n.) 1. கொத்துகை; picking, nibbling. 2. பறவை முதலியவற்றாற் கொத்துப்பட்ட கனி; fruits injured by birds, reptiles, etc. 3. தணியாச் சினம் (பிங்.); wrath, fury. 4. கடுங்குளிர்; biting cold. கொந்தலிற் கொடுகிக் கிடக்கிறான் (உ.வ.). 5. போலியொழுக்கம் (ஆசாரம்); feigned orthodoxy.

*[கொத்து → கொந்து → கொந்தல்.]*

**கொந்தல்மாங்காய்** *kondal-māṅgāy,* பெ.(n.) சேதப்பட்ட மாங்காய் (யாழ்ப்.); mango fruit injured or stunted in growth.

*[கொந்தல் + மாங்காய்.]*

**கொந்தவக்காய்** *kondava-k-kāy*, பெ.(n.) ***கொந்தளங்காய்*** பார்க்க; see *kondalangāi*.

*[கொந்து+ஆவக்காய்-கொந்தாவக்காய் → கொந்தவக்காய்.]*

**கொந்தவர்** *kondavar*, பெ.(n.) கட்டுக்கோப்பான படையினர்; diciplined warriors. *"இராசராசதேவர் படைவில்லாள் கொந்தவரில்" (கல்வெட்டு அறிக்கை – எண். 92/1895. கல்.அக.).*

*[கொத்து → கொந்து → கொந்தவர்.]*

**கொந்தழல்** *kondalal*, பெ.(n.) 1. முறுகிய தீ; raging fire. *"கொந்தழற் புண்ணொடு" (பெருங். வத்தவ. 13: 71).* 2. பெருந்தீ; great fire (சா.அக.).

ம. கொந்தழல்.

*[கொந்து + அழல்.]*

**கொந்தழற்புண்** *kondalar-pun*, பெ.(n.) பற்றி எரியும் தீச்சுட்ட புண்; extensive burns caused by a raging fire (சா.அக.).

*[கொந்து + அழல் + புண்.]*

**கொந்தளங்காய்** *kondalan-gāy*, பெ.(n.) சமுத்திராப் பழம்; sea-side Indian oak (சா.அக.).

*[கொந்தளம் + காய்.]*

**கொந்தளம்**[1] *kondalam*, பெ.(n.) 1. கொந்தளங் காய்; sea-side Indian oak. 2. கல்யானை என்னும் காண்டாமிருகம்; rhinoceros. 3. சுருட்டை மயிர்; curly hair. 4. விலங்கின் குட்டி; young of an animal. 5. பெண்ணின் கூந்தல்; woman's hair. 6. மயிர்க் குழற்சி; lock of hair (சா.அக.).

ம. கொந்தளம்; **Skt.** kundala.

*[கொத்து → கொந்து → கொந்தளம்.]*

**கொந்தளம்**[2] *kondalam*, பெ.(n.) 1. குழப்பம்; confusion, turmoil. *"கொந்தள மாக்கி" (திவ். நாய்ச்.12:9).* 2. கூத்துவகை ; a kind of dance.

*[கொந்தளி → கொந்தளம்.]*

**கொந்தளம்**[3] *kondalam*, பெ.(n.) காதணி வகை; an ear-ornament. *"காதுக்குக் கொந்தளம் அணிந்து" (தமிழறி. 64).*

*[கொத்து → கொந்து → கொந்தளம்.]*

**கொந்தளம்**[4] *kondalam*, பெ.(n.) எல்லா ஏந்து (வசதி)களுமுள்ள இடம் (இ.வ.); a site with conveniences of every kind.

*[ஒருகா. கொத்தளம் → கொந்தளம்.]*

**கொந்தளம்**[5] *kondalam*, பெ.(n.) ஈரோடு மாவட்டத்துச் சிற்றூர்; a village in Erode Dt.

*[கொந்து → கொந்தளம்.]*

**கொந்தளம்**[6] *kondalam*, பெ.(n.) சாளுக்கியர் ஆண்ட நாடு (S.I.I. II, 230.); an ancient kingdom ruled by *Calukyās*.

*[குந்தளம் → கொந்தளம்.]*

**கொந்தளவரசர்** *kondala-v-arašar*, பெ.(n.) மேலைச் சாளுக்கிய அரசர்; western Calukkia king. *"கொந்தள வரசர் தந்தள மிரிய" (முதற் குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி) (கல். அக.).*

*[குந்தளம் → கொந்தளம் + அரசர்.]*

**கொந்தளி-த்தல்** *kondali-*, 4 செ.கு.வி. (v.i.) பொங்கியெழுதல்; to be rough or boisterous; to swell, as the sea; to be stormy, tumultuous. *'திரைகள் மேல்நோக்கிக் கொந்தளித்து' (திவ்.திருவிருத். 52:292, வியா.).*

*[கொதி → கொந்தளி.]*

**கொந்தளிப்பு** *kondalippu*, பெ.(n.) 1. குழப்பம், கெற்சிதம்; emotional, upheaval. 2. மும்முரம்; excitement.

*[கொதி → கொந்தளி → கொந்தளிப்பு.]*

**கொந்தளை**[1] *kondalai*, பெ.(n.) 1. பேய்க் கொம்மட்டி; bitter apple. 2. ***கொந்தளங்காய்*** பார்க்க; see *kondalangāy* (சா.அக.).

*[கொந்தளம் → கொந்தளை.]*

**கொந்தளை**[2] *kondalai*, பெ.(n.) கடற்பக்கத்து மரவகை (L.); seaside Indian oak.

*[கொந்தாழை → கொந்தளை.]*

**கொந்தறுவாள்** *kondaruvāl*, பெ.(n.) முட் செடிகளை வெட்டியழிக்க உதவும் அறுவாள்; sickle, long handled bill-hook as for clearing prickly-pear.

*[கொந்து + அறுவாள்.]*

**கொந்தாங்கொள்ளை** *kondān-kollai*, பெ.(n.) நிறைய; abundance. கொந்தாங் கொள்ளையாய்த் தின்பானுக்குக் கொட்டியழு (இ.வ.).

*[கொந்து + ஆம் + கொள்ளை.]*

**கொந்தாலி** *kondāli*, பெ.(n.) ***குந்தாலி*** (யாழ்ப்.) பார்க்க; see *kundāli*.

*[குந்தாலி → கொந்தாலி.]*

**கொந்தாழம்** *kondāḷam*, பெ.(n.) 1. கடற்கரையிலுள்ள தாழை; sea-weed. 2. செந்தாழை; false tragacanth. 3. ஒரு மருந்து; a medicine. 4. ***கொந்தாளம்*** பார்க்க; see *kondāḷam* (சா.அக.).

*[கொந்து + ஆழம்.]*

**கொந்தாழை** *kondāḷai*, பெ.(n.) கடற்றாழை (வின்.); sea-weed.

*[கொத்து → கொந்து + தாழை.]*

**கொந்தாளம்** *kondāḷam*, பெ.(n.) நஞ்சை நீக்குமோர் மூலிகை; medicinal plant used as an antidote for poison (சா.அக.).

*[கொந்து + தாளம்.]*

**கொந்தாளி-த்தல்** *kondāḷi-*, 4 செ.கு.வி. (v.i.) ***கொந்தளி-த்தல்,*** (யாழ்.அக.) பார்க்க; see *kondāḷi-*.

*[கொந்தளி → கொந்தாளி.]*

**கொந்தி**[1] *kondi*, பெ. (n.) வீட்டின் மூலைப் பகுதி (கட்.தொ.); a corner of the house.

*[கொந்து → கொந்தி.]*

**கொந்தி**[2] *kondi*, பெ.(n.) வரிக்கூத்து வகை (சிலப். 3: 13, உரை); mask, masquerade dance.

*[குந்தி → கொந்தி.]*

**கொந்திக்காய்**[1] *kondi-k-kāy*, பெ.(n.) மகளிர் கைமுட்டுக்குமேல் அணியும் அணிவகை (இ.வ.); a string of gold or coral beads worn by women above the elbow.

*[கொந்தி + காய்.]*

**கொந்திக்காய்**[2] *kondi-k-kāy*, பெ.(n.) மிடறு (இ.வ.); throat.

*[கொந்தி + காய்.]*

**கொந்து**[1]**-தல்** *kondu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. கொத்துதல்; to peck, pick, mince. 2. பழம் முதலியவற்றை அலகாற் குதறுதல்; to injure fruits by pecking, gnawing. 3. அச்சுறுத்தல்; to threaten, intimidate, terrify. *"கொந்தி யிரும்பிற் பிணிப்பர் கயத்தை" (நான்மணி. 12).* 4. குத்துதல்; to gore, pierce. *"கொந்தியயி லலகம்பால்" (பெரியபு. கண்ணப்.145).*

*[கொத்து → கொந்து.]*

**கொந்து**[2]**-தல்** *kondu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. ஒற்றைக் காலாற் குதித்தல்; to hop, as in a game. 2. மிகு தூய்மையும் ஒழுக்கமும் காட்டிக் கொள்ளுதல்; to pretend to be very orthodox.

*[கிந்து → கொந்து-.]*

**கொந்து**[3]**-தல்** *kondu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. எரிதல்; to burn, to be in flames. *"கொந்தழல்" (சீவக. 1499).* 2. சினம் மூளுதல் (பிங்.); to be enraged, furious, to be inflamed with anger. *"இந்தனக் குழுவைக் கொந்தழ லடூஉம்" (ஞானா. 63: 11).*

*[குல் → குந்து → கொந்து.]*

**கொந்து**[4]**-தல்** *kondu-*, 5 செ.குன்றாவி.(v.t.) 1. மகளிர் ஆட்டத்தில் மேலெறிந்த காய் விழுவதற்குள் தரையிலுள்ள காய்களை எடுத்தல்; to pick up shells, etc., from the floor before a thrown-up shell comes down, as in game played by girls. *அவள் புளியவிதையைக் கொந்தி விளையாடுகிறாள் (கொ.வ.).* 2. கொடியி லிருக்கும் ஆடையைக் கோல்கொண்டு எடுத்தல்; to remove a cloth from the clothe's line with stick.

*[கொள் + து → கொந்து.]*

**கொந்து**[5] *kondu*, பெ.(n.) 1. பூங்கொத்து; cluster of flowers. *"கொந்தா ரிளவேனில்" (சிலப். 8, வெண்பா.1).* 2. திரள்; gathering multitude. *"கொந்தினாற் பொலியும் வீதி" (இரகு. இரகுவ. 53).* 3. கொத்துமாலை; garland of many wreaths. *"கொந்தார் தடந்தோள்" (திருக்கோ. 391).* 4. பூந்தாது; pollen. *"கொந்துசொரிவன கொன்றையே" (தக்கயாகப்.62).*

*[கொத்து → கொந்து.]*

**கொந்து**[6] *kondu*, பெ.(n.) இடைப்பட்ட நிலம், பகுதி; side, region. இந்த மழை கன்னியாகுமரிக் கொந்திற் பெய்யவில்லை.

*[கொத்து → கொந்து.]*

**கொந்துகம்** *kondugam*, பெ.(n.) 1. குதிரைவாலிச் சம்பா; horse tail paddy. 2. குதிரைவாலிச் சாமை; horse tail millet. 3. குதிரைவாலிப் புல்; horse tail grass. 4. குதிரைவாலி போன்ற பூடுவகை; equisetacae family of plants (சா.அக.).

*[கூந்தல் → கொந்து → கொந்துகம்.]*

**கொப்பகரை** *koppa-karai*, பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[குப்பன் → கொப்பன் + கரை.]*

**கொப்பணன்** *koppaṇaṉ*, பெ.(n.) கம்பணஉடையார் காலத்துக் காஞ்சிபுரத்துக் கோயிலலுவலர்; temple officer of Kanjipuram during the period of Kambana Udaiyar. *“இவை கொப்பணன் எழுத்து” (S.I.I.I:87).*

*[கொப்பு + அண்ணன்.]*

**கொப்பம்**[1] *koppam*, பெ.(n.) யானை பிடிப்பதற்காக வெட்டும் பெருங்குழி; keddah for elephants. *“கைம்மலைசெல் கொப்பத்து வீழ” (குமர. பிர. மீனாட். பிள்ளை. 11).*

*[குல் → குப்பு → (கப்பல்), → கப்பம் (குழி) → கொப்பம்.]*

**கொப்பம்**[2] *koppam*, பெ.(n.) 1. ஒரு நாடு; a country. *“பப்பரம் கொப்பம் வங்கம்” (பாரத. படை. 19).* 2. பெல்லாரி மாவட்டத்தையடுத்து நிசாம் ஆளுகைக்குட்பட்ட ஓர் ஊர்; a town in the Nizam dominious bordering Bellary district. *“கொப்பத் தொருகளிற்றாற் கொண்டோனும்” (விக்கிரம. உலா, 40).*

*[குப்பம் → கொப்பம்.]*

**கொப்பம்**[3] *koppam*, பெ.(n.) சேலம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Salem Dt.

*[குப்பன் → குப்பம் → கொப்பம்.]*

**கொப்பயம்பட்டி** *koppayam-paṭṭi*, பெ.(n.) தேனி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Theni Dt.

*[குப்பையன் → கொப்பயன் + பட்டி.]*

**கொப்பரம்** *kopparam*, பெ.(n.) 1. முழங்கை; elbow. 2. மற்போர் வகை; a mode of grappling the arms in wrestling.

**ம.** கொப்பரம்; **தெ.** கொப்பரமு; **Skt.** kūrpara.

*[குப்பரம் → கொப்பரம்.]*

**கொப்பரம்பாய்ச்சு**[1]**–தல்** *kopparam-pāyccu-*, 5 செ.கு.வி. (v.i.) மல்லுக்குக் கைகோத்தல் (யாழ்.அக.); to grapple an antagonist, as in wrestling.

*[குப்பரம் → கொப்பரம் + பாய்ச்சு–.]*

**கொப்பரம் பாய்ச்சு**[2]**–தல்** *kopparam-pāyccu-*, 5 செ.குன்றாவி. (v.t.) அதட்டுதல்; to upbraid, bluster.

*[குப்பரம் → கொப்பரம் + பாய்ச்சு–.]*

**கொப்பரி** *koppari*, பெ.(n.) ***கொப்பரை***[2] (பிங்.) பார்க்க; see *kopparai.*

*[கொப்பரை → கொப்பரி.]*

**கொப்பரை**[1] *kopparai*, பெ.(n.) கைப்பிடியோடு கூடிய பெரிய ஏனம்; brass or copper boiler with rings for handles, cauldron. *“கும்பம் வட்டகை கொப்பரை” (பிரபோத. 11:31).*

*[கப்பரை → கொப்பரை.]*

**கொப்பரை**[2] *kopparai*, பெ.(n.) 1. நீர் வைக்கும் ஏனம்; kettle; water jar made of brass or copper. 2. கடாரம்; boiler (சா.அக.).

**ம.** கொப்பர; **க** கொப்பர, காப்பரிகெ; **தெ.** கொப்பெர.

*[கப்பரை → கொப்பரை.]*

**கொப்பரை**[3] *kopparai*, பெ.(n.) நீர்வற்றிய தேங்காய்; dried coconut kernel, copra.

**ம.** கொப்பர, கொப்ர; **க.** கொப்பரி **தெ.** கொப்பரி, கொப்பர; **து.** கொப்பரி, கொப்பர; **பட.** கொப்பர; **U.** khōprā

*[குப்பல் (உட்குழிந்தது) → கப்பல் → கப்பரை → கொப்பரை.]*

**கொப்பரைக்கல்** *kopparai-k-kal* பெ.(n.) 1. கல் வகைகளுளொன்று; a kind of stone. 2. குறிஞ்சி நிலத்தமைந்த பாறைவகைகளு ளொன்று (சங்.தொ.); a kind of rock which is found in the hilly tracts.

*[கொப்பரை + கல்.]*

**கொப்பரைவெட்டு** *kopparai-veṭṭu*, பெ.(n.) பழைய நாணய வகை (பணவிடு. 136); an ancient coin.

*[கொப்பரை + வெட்டு.]*

**கொப்பளம்** *koppaḷam*, பெ.(n.) ***கொப்புளம்*** பார்க்க; see *koppuḷam.*

*[கொப்புளம் → கொப்பளம்.]*

**கொப்பளி–த்தல்** *koppaḷi-*, 4 செ.குன்றாவி. செ.கு.வி. (v.t. & v.i.) ***கொப்புளி–த்தல்,*** பார்க்க; see *koppuḷi-. “புறத்திற் கழுவிக்கை கொப்பளிக்க” (சைவச. பொது. 314).* குடிக்கிறது கூழ் கொப்பளிக்கிறது பன்னீர் (பழ).

*[கொப்புளி → கொப்பளி. கும்முதல் = திரளுதல், மேலெழும்புதல். கும்மு → குப்பு → குப்புள் → குப்புளித்தல் → கொப்பளித்தல்.]*

**கொப்பாட்டன்** *koppāṭṭaṉ*, பெ.(n.) மூன்றாம் பாட்டன் (யாழ்ப்.); great-great-grandfather.

*[கோ + பாட்டன் = கோப்பாட்டன் → கொப்பாட்டன்]*

**கொப்பாடை** *koppāḍai,* பெ.(n.) அம்மைநோயில் ஒருவகை; a kind of small pox.

*[கொப்பு + ஆடை.]*

**கொப்பாந்தேன்** *koppān-dēṉ,* பெ.(n.) ***கொம்புத் தேன் (யாழ்ப்.)*** பார்க்க; see *kombu-t-tēṉ.*

*[கொம்பு + ஆம் + தேன்.]*

**கொப்பி** *koppi,* பெ.(n.) கும்மியாட்டம்; a game of young girls attended with clapping of hands, singing and dancing.

*[கும்மி → கொம்மி → கொப்பி.]*

**கொப்பிகொட்டு-தல்** *koppi-koṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) கும்மியடித்தல்; to clap hands in *kummi* dance.

*[கும்மி → கொம்மி → கொப்பி + கொட்டு-.]*

**கொப்பிப்பொங்கல்** *koppi-p-poṅgal,* பெ.(n.) குப்பிப்பொங்கல்; feast observed by Hindu girls on the first day of the month of *'Tai'.*

*[கும்மி → கொம்மி → கொப்பி + பொங்கல்.]*

**கொப்பு[1]** *koppu,* பெ.(n.) மரக்கிளை; branch of a tree.

**ம.** கொப்பு; **க.** கொம்பை; **தெ.** கொம்மு; **து.** கொம்பு; **குட.** கொம்பி; **நா.**கொம்ம், **கொலா.** கொம், **கோத.** கொப் **Skt.** kūrpara.

*[கொம்பு → கொப்பு. (வ.மொ.வ.7).]*

**கொப்பு[2]** *koppu,* பெ.(n.) 1. மகளிர் காதணிவகை; woman's ear ornament worn at the top of the helix, as flower-shaped. *''கொப்பிட்ட வுமைபாகர்'' (தண்டலை. சத.12).* துப்பற்ற நாரிக்குக் கொப்பு அழுகைப்பார் (பழ). 2. மயிர்முடி (பிங்.); chignon; coil of hair (பிங்.) 3. கொண்டை; to tie hair in a knot.

**ம.,க.,தெ.,து.** கொப்பு; **குட.** கொப்பும்பி.

*[கொம்பு → கொப்பு (வ.மொ.வ.7).]*

**கொப்பு[3]** *koppu,* பெ.(n.) தலைமுடியை அள்ளிச் செருகுகை; wearing the hair in a bunch.

*[கொள் → கொப்பு.]*

**கொப்பு[4]** *koppu,* பெ.(n.) 1. ஒருவகைச் சிவப்பு; a reddish colour (விறலிவிடு.713). 2. பவளத்தால் செய்யப்பட்ட காதணி; an ear ornament. *"திருக்காதில் பொன்னின் மகரம் இரண்டும் பவளத்தின் கொப்பு ஒன்றும்'' (திருப்ப. கல்.தொ.1, கல்.8,2).*

*[கோப்பு → கொப்பு.]*

**கொப்புக்குடை** *koppu-k-kuḍai* பெ.(n.) கொப்பணியிலிருந்து தொங்கும் குடைவடிவான உறுப்பு; umbrella shaped pendants hanging from 'koppu' ornaments.

*[கொப்பு + குடை.]*

**கொப்புசம்புல்** *koppu-sampul,* பெ.(n.) காதணி வகை; a kind of ear ornament (தாசில்தார்நா.20).

**மறுவ.** கொப்புக்குடை.

*[கொப்பு + சம்புல்.]*

**கொப்புமயிர்மாட்டி** *koppu-mayir-māṭṭi,* பெ.(n.) மகளிர் கூந்தலில் மாட்டும் காதணிவகை; golden hair-hook connecting 'koppu' ornament to a strand of hair behind the ear, worn by women.

*[கொப்பு + மயிர் + மாட்டி.]*

**கொப்புவர்ணம்** *koppu-varnam,* பெ.(n.) சேலைவகை; a kind of saree. *"கொப்பு வர்ணமாய்த் தீர்ந்த கொப்புவர்ணம்" (விறலிவிடு. 713).*

*[கொப்பு + (வண்ணம்) வர்ணம்.]*

**கொப்புவாளி** *koppu-vāḷi,* பெ.(n.) மகளிர் அணியும் வாளி என்னும் காதணி வகை; woman's ornament for the helix of the ear having a knob and a pendant.

*[கொப்பு + வாளி.]*

**கொப்புள்[1]** *koppuḷ,* பெ.(n.) உந்தி; navel. கொப்புள் கொடி அறுத்தார்கள் (உ.வ.).

*[குல் → கும்மு → குப்பு → குப்புள் → கொப்புள்.]*

**கொப்புள்[2]** *koppuḷ,* பெ.(n.) ***கொப்புளம்*** பார்க்க; see *koppuḷam. ''வாதக் கொப்புளொடு வருத்தங் கொண்டகொல்'' (பெருங். மகத. 8:16).*

*[கொப்புள்[1] → கொப்புள்[2].]*

**கொப்புள்பால்இறங்கு-தல்** *koppuḷpāl-iraṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) மாடு ஈனுமுன் மடி கனத்தல்;

*[கொப்புள் + பால் + இறங்கு-.]*

**கொப்புளப்பற்று** *koppuḷa-p-paṟṟu,* பெ.(n.) 1. கொப்புளத்தின்மேல் காணும் பக்கு; blister scab. 2. கொப்புளத்திற்குப் போடும் பற்று; medicinal coat over blister or boil (சா.அக.).

*[கொப்புளம் + பற்று.]*

**கொப்புளம்** *koppuḷam,* பெ.(n.) 1. குமிழி (பிங்.); bubble. 2. *சீழ்* நிரம்பிய மெல்லிய சிறு புடைப்பு; pustule; blister, vesicle, as of chicken-pox. *"கோவத் தன்ன கொப்புளம்" (பெருங். உஞ்சைக். 54:59).*

**Fin.** kupla (bubble, blister); **Est.** kubl; **Hung.** hupolyag; **Jap.** kobu.

*[கொப்புளி → கொப்புளம்.]*

**கொப்புளவண்டு** *koppuḷa-vaṇḍu,* பெ.(n.) எரிவண்டு; spanish fly, an insect, which strikes against the eye ball causing severe smarting. (சா.அக.).

*[கொப்புளம் + வண்டு.]*

**கொப்புளவாதம்** *koppuḷa-vādam,* பெ.(n.) வளி மற்றும் பித்தம் மிகையுள்ள பண்டங்களை உண்ணுவதால் உச்சி முதல் உள்ளங்கால் வரை உண்டாகும் கொப்புளங்கள்; lesions occuring in the skin in groups and characterised by dense eruptions all over the body arising from eating excessively articles of fare promoting acute disorders of the two humours viz. wind and bile in the system (சா.அக.).

*[கொப்புளம் + வாதம்.]*

**கொப்புளி[1]-த்தல்** *koppuḷi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. கொப்புளங் கொள்ளுதல்; to blister. *"எடுத்தடி கொப்புளிக்க" (தனிப்பா.1;146:44).* 2. நீர் முதலியவை குமிழியிட்டு வெளிவருதல்; to rise in bubbles, as water. 3. வாய் குமிழ்த்தல்; to puff out the cheeks and blow. *"செய்யவாய் கொப்புளிப்ப" (திவ்.பெரியாழ். 3, 6:8).*

*[கொப்புள் → கொப்புளி.]*

**கொப்புளி[2]-த்தல்** *koppuḷi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. நீர் முதலியவற்றால் வாயை அலசி உமிழ்தல்; to gargle, rinse. 2. நீர் முதலியவற்றை வெளிவிடுதல்; to discharge in jets. *"குருதிகொப் புளிக்கும் வேலான்" (சீவக. 1889).*

*[குப்புளி → கொப்புளி.]*

**கொப்புளிக்குநீர்** *koppuḷikku-nīr,* பெ.(n.) வாய் கொப்புளிக்கும் மருந்துநீர்; fluid preparation used for gargling (சா.அக.).

*[கொப்புளிக்கும் + நீர்.]*

**கொப்புளிச்சுறா** *koppuḷi-c-cuṟā,* பெ.(n.) சுறாமீன் வகைகளி லொன்று; a kind of shark (மீன்.பிடி.தொ.).

*[கொப்புளி + சுறா.]*

**கொப்புளிப்பான்** *koppuḷippāṉ,* பெ.(n.) அம்மை நோய் வகை; a kind of chicken-pox or measles.

*[கொப்புளி → கொப்புளிப்பான்.]*

**கொப்புறக்கோலா** *koppuṟa-k-kōlā,* பெ.(n.) பறக்குந் தன்மையுள்ள கோலாமீன்; flying fish as of *kōlā.*

*[குப்புறு → கொப்புறு + கோலா.]*

**கொப்பூர்** *koppūr,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvallur Dt.

*[குப்பூர் → கொப்பூர்.]*

**கொப்பூழ்** *koppūḻ,* பெ.(n.) 1. உந்தி; navel, umbilicus. *"மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரை" (பரிபா. ப. 174).* 2. கொப்புளம்; boil. *"நங்கை சீறடி நீர்க்கொப் பூழி னறியன தொடர்ந்து சென்று" (கம்பரா. தைல. 53).*

*[கொப்புள் → கொப்பூழ்.]*

**கொப்பூழ்க்கொடி** *koppūḻ-k-koḍi,* பெ.(n.) 1. உந்திக் கொடி; umbilical cord, navel string, funis. 2. நஞ்சுக்கொடி; umbilical cord.

*[கொப்பூழ் + கொடி.]*

**கொப்பூழறு-த்தல்** *koppūḻ-aṟu-,* 4 செ.குன்றாவி. (v.t.) பிறந்த குழந்தையின் உந்திக் கொடியை அறுத்தல்; to cut the umbilical cord of a new born infant.

*[கொப்பூழ் + அறு-.]*

**கொப்பெனல்** *koppeṉal,* பெ.(n.) விரைவுக்குறிப்பு; onom. expr. of moving quickly, swiftly or suddenly. *கொப்பென வந்தார்கள் (வின்.).*

*[குப்பு → கொப்பு + எனல்.]*

**கொப்பை[1]** *koppai,* பெ.(n.) கல்லுப்பு; sea-salt (சா.அக.).

*[கொப்பு → கொப்பை.]*

**கொப்பை[2]** *koppai,* பெ.(n.) **கொப்பம்[2]** பார்க்க; see koppam. *"கொப்பையிற் பொருகளத்திலே" (கலிங்.191).*

*[கொப்பம் → கொப்பை.]*

**கொம்படி-த்தல்** *kombaḍi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. கொம்பால் முட்டிப் பொருதல் (யாழ்.அக.); to fight

with horns, as oxen, buffaloes, rams, goats etc. 2. மேலாண்மை செலுத்துதல்; to impose one's authority.

*[கொம்பு + அடி-.]*

**கொம்படிப்பட்டி** *kombadi-p-patti,* பெ.(n.) சேலம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Salem Dt.

*[கொம்பு + அடி + பட்டி.]*

**கொம்பத்தாள்** *kombattāl,* பெ.(n.) ***கொம்பாள்*** (வின்.) பார்க்க; see *kombāl.*

*[கொம்பு + அத்து, அத்து - சாரியை. கொம்பத்து + ஆள்.]*

**கொம்பர்** *kombar,* பெ.(n.) ***கொம்பு*** பார்க்க; see *kombu. "நாறு மலர்க்கொம்பர்" (சீவக. 2019).*

*[கொம்பு → கொம்பர் (வே.க.168).]*

**கொம்பரக்கு** *kombarakku,* பெ.(n.) அரக்கு வகை (தைலவ. தைல. 94, 20.); stick lac.

*[கொம்பு + அரக்கு.]*

**கொம்பரக்குமரம்** *kombarakku-maram,* பெ.(n.) கிளைகளில் அரக்கு உண்டாகும் மரம்; croton-lac tree (சா.அக.).

*[கொம்பரக்கு + மரம்.]*

**கொம்பரண்டை** *kombarandai* பெ.(n.) கட்டு மரத்தின் ஒருறுப்பு; a part of a *catamaran*

*[கொம்பர் + அரண்டை.]*

**கொம்பரணை** *kombaranai,* பெ.(n.) மர ஆணி; a wooden nail.

*[கொம்பு + அரணை.]*

**கொம்பரி** *kombari,* பெ.(n.) இலவ மரத்தி லுண்டாகும் பிசின்; gum from silk-cotton tree (சா.அக.).

*[கொம்பு → கொம்புரி → கொம்பரி.]*

**கொம்பரை** *kombarai,* பெ.(n.) மாட்டுநோய் வகை (தஞ். சர. III. 119.); a disease in cattle.

*[கொம்பு → கொம்பரை.]*

**கொம்பளவு** *kombalavu,* பெ.(n.) கொம்பை முதலிற் கொண்ட எழுத்தாகிய ளகரம் (இ.வ.); the letter ḷa ('ள') as beginning with 'ெ'

*[கொம்பு → அளவு.]*

**கொம்பன்**[1] *kombaṉ,* பெ.(n.) வல்லாளன்; one who is proficient.

ம. கொம்பன்.

*[கொம்பு + அன்.]*

உனக்கென்ன கொம்பு முளைத்திருக்கிறதா என்பது உலக வழக்கு. இது தலைவேட்ட மாடும் நாகர் வழக்கத்தினின்று தோன்றியிருக்கலாம். பண்டை மூவேந்தர் முடியும் கொம்பு வடிவில் குவித்திருந்தது கவனிக்கத்தக்கது.

**கொம்பன்**[2] *kombaṉ,* பெ.(n.) 1. ஆண்யானை; male-elephant. 2. ஒரு நீண்ட பாகல்; a long bitter fruit of momordica genus. 3. கொம்புள்ள விலங்கு; horned animal. 4. கொம்புள்ள கெளுத்தி மீன்வகை; a kind of fish with horn (சா.அக.).



கொம்பன்

*[கொம்பு → கொம்பன். கொம்பு + அன். அன் - உடைமை குறித்த ஈறு. (வே.க.168).]*

**கொம்பன்**[3] *kombaṉ,* பெ.(n.) 1. ஒருவகை அம்மை நோய்; a kind of small-pox. 2. அம்மை அல்லது கழிச்சல் நோய்வகை; a virulent type of cholera chiefly epidemic (சா.அக.).

*[கொம்பு → கொம்பன்.]*

**கொம்பன்**[4] *kombaṉ* பெ.(n.) மகன்; son. *"உனக்கொரு கொம்பன் பிறப்பான்"* என்பது *குடுகுடுப்பாண்டிக் குறி கூற்று.*

*[கொம்பு (-கிளை) → கொம்பன்.]*

**கொம்பன்ஆனை** *kombaṉ-āṉai,* பெ.(n.) தந்தங்கள் உள்ள ஆண்யானை; male-elephant, tusker. *"மகராசா அவர்களும் இந்த நன்றிக்காக ஏகோசி மகராசா அவர்களுக்கு கும்பினி ஒரு கொம்பன் ஆனையும் ரொக்கமும் கொடுக் கிறோமென்று" (தஞ்.மரா.செப்.50-1-40).*

*[கொம்பு + அன் + ஆனை.]*

**கொம்பன்கெளுத்தி** *kombaṉ-keḷutti,* பெ.(n.) கொம்புள்ள கெளுத்தி மீன்; a fresh water fish.

*[கொம்பன் + கெளுத்தி.]*

**கொம்பன்சம்பா** *kombaṉ-cambā,* பெ.(n.) ஆடவை (ஆனி), கன்னி (புரட்டாசி) மாதங்களில் விதைக்கப்பட்டு 5 மாதத்தில் விளையும் சம்பா நெல்வகை (இ.வ.); a kind of cambā paddy, sown between *Aṉi* and *Puraṭṭāśi,* maturing in five months.

*[கொம்பன் + சம்பா.]*

**கொம்பன்சுறா** *kombaṉ-śuṟā,* பெ.(n.) சாம்ப னிறத்துடன் 7 அடிவரை நீண்டுவளரக்கூடிய சுறாமீன் வகை (M.M. 850.); hammer-headed shark, deep grey, attaining 7 ft. in length.


கொம்பன் சுறா

*[கொம்பன் + சுறா.]*

**கொம்பன்திருக்கை** *kombaṉ-tirukkai,* பெ.(n.) நீல நிறமுள்ளதும் 18 அடிக்குமேல் வளர்வதுமான கடல் மீன்வகை; sea-devil, deep purplish, attaining 18 ft. and upwards across the disc which is twice as broad as long.

*[கொம்பன் + திருக்கை.]*

**கொம்பன்பாகல்** *kombaṉ-pāgal,* பெ.(n.) ***கொம்புப் பாகல்*** (கொ.வ.) பார்க்க; see *kombu-p-pāgal.*

*[கொம்பன் + பாகல்.]*

**கொம்பன்பிலால்** *kombaṉ-pilāl,* பெ.(n.) உருப் பருத்த மீன்வகை; a kind of fish with heavy body.

*[கொம்பன் + பிலால்.]*

**கொம்பன்யானை** *kombaṉ-yāṉai,* பெ.(n.) பெரிய. கொம்புகளுடைய யானை (இ.வ.); big tusked elephant.

ம. கொம்பனான.

*[கொம்பன் + யானை.]*

**கொம்பனார்** *kombaṉār,* பெ.(n.) கொம்புபோல் ஒல்குந் தன்மையுள்ள பெண்டிர்; women, slender and supple as the twig of a plant. *"கொம்பனார்க் கெல்லாங் கொழுந்தே" (திவ். திருப்பா. 17).*

ம. கொம்பல்.

*[கொம்பு + அன்னார்.]*

**கொம்பாடி** *kombāḍi,* பெ.(n.) மதுரை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Madurai Dt.

*[கொம்பன் + பாடி – கொம்பன்பாடி → கொம்பாடி.]*

**கொம்பாப்பிள்ளை** *kombā-p-piḷḷai,* பெ.(n.) lit., man with horns. 1. செல்வ முதலிய தகுதிகளால் உயர்ந்தவன்; man of rank or wealth, used ironically. கொம்பு முளைத்தவன்; 2. அதிகாரக் குடியிற் பிறந்தோன் (யாழ்.அக.); one born in an aristocratic family.

*[கொம்பு + ஆம் + பிள்ளை.]*

**கொம்பாலயம்** *kombālayam,* பெ.(n.) தெய்வம் தங்குவதாகக் கொண்டு பூசிக்கப்பெறும் சில மரக்கிளைகள் (இ.வ.); branches of certain trees considered as the seat of a deity and worshipped.

*[கொம்பு + ஆலயம்.]*

**கொம்பாள்** *kombāḷ,* பெ.(n.) 1. மரத்திலேறியிருந்து காவல் புரிவோன் (வின்.); man engaged in watching from a tree. 2. உளவாள் (இ.வ.); a look-out, spy.

*[கொம்பு + ஆள்.]*

**கொம்பி**[1] *kombi,* பெ.(n.) காரி (சனி); saturn, *"கொம்பி யருக்கன் குசன்" (சினேந். 198).*

*[கொம்பு → கொம்பி.]*

**கொம்பி**[2] *kombi,* பெ.(n.) வல்லாண்மை மிக்கவள்; a female who is proficient.

*[கொம்பன் – ஆ.பா. கொம்பி – பெ.பா.]*

**கொம்பிலேயேறு–தல்** *kombilē-y-ēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) வீண் செருக்குக் கொள்ளுதல்; to be haughty.

*[கொம்பு + இல் + ஏறு–.]*

**கொம்பிற்கொள்கை** *kombiṟ-koḷgai,* பெ.(n.) தந்தப்பூண் கட்டிய கோல்; *"கொம்பிற் கொள்கை*

*ஒன்றிலத் தடவிக்கட்டின மாணிக்கம்" (தெ.இ.கல். தொ. II, கல்.11–38).*

*[கொம்பு + இல் + கொள்கை.]*

**கொம்பிறுக்கை** *kombiṟukkai,* பெ.(n.) கட்டுமரத்தின் ஓர் உறுப்பு; a part in a *catamaran*

*[கொம்பு + (இருக்கை) இறுக்கை.]*

**கொம்பினர்** *kombiṉar,* பெ.(n.) ***கொம்பனார்*** பார்க்க; see *kombaṉār.* *"குளிர்மணற் கேணியுட் கொம்பினர் படர்ந்தும்" (கல்லா.71:31).*

*[கொம்பு + அன்னார் – கொம்பனார் → கொம்பினர்.]*

**கொம்பீரம்** *kombīram,* பெ.(n.) பச்சைக் கற்பூரம்; crude camphor (சா.அக.).

*[கொம்பு → கொம்பீரம்.]*

**கொம்பு[1]–தல்** *kombu-,* 5 செ.கு.வி. (v.i.) முயலுதல் (யாழ்.அக.); to try.

*[கும்பு → கொம்பு.]*

**கொம்பு[2]–தல்** *kombu-,* 5 செ.கு.வி. (v.i.) சினத்தல்; to get angry. *"ஈசன்மேற் கொம்பி" (பஞ்ச. திருமுக. 107).*

*[குண்மு → கும்மு → கொம்மு → கொம்பு.]*

**கொம்பு[3]** *kombu,* பெ.(n.) 1. மரக்கிளை; bough, branch, twig. *"வளியெறி கொம்பின் வருந்தி" (மணிமே. 24: 86).* 2. நாற்றுமுளை (இ.வ.); seedling. 3. கோல் (Madr.); stick, staff, pole. 4. பல்லக்கு முதலியவற்றின் கொம்பு; poles of palanquin, etc. *"முற்கொம்பு தாங்கி முன்னடக்கும் ... முனிவன்" (திருவிளை. இந்திரன். 65).* 5. விலங்கின் கொம்பு; horn of an animal.குதிரை குணமறிந்து அல்லவோ தம்பிரான் கொம்பு கொடுக்க வில்லை (பழ). 6. யானை முதலியவற்றின் தந்தம்; tusk of an elephant or hog. *"யானையின் கொம்பினைப் பறித்து" (திவ். பெரியதி. 4, 2.4).* 7. ஊதுகொம்பு; horn, pipe, cornet. *'கொம்பு ஒலிப்ப' (மதுரைக்.185,உரை).* 8. நீரை வீசுங் கருவி; squirt, tube for discharging fluids in jets. *"சிவிறியுங் கொம்புஞ் சிதறு விரைநீரும்" (மணிமே. 28:10).*



கொம்பு

**தெ.** கொம்ம; **ம.**கொம்பு; **பட.** கொம்பு; **குட.** கொம்பி; **குவி.** கோம, கொம்ம; **கொலா.**கொம்; **துட.** கூப்.

*[கொள் → கொண் → (கொண்டி). கொம்பு = வளைந்த மரக்கிளை, கிளை, கிளை போன்ற விலங்குக் கொம்பு. (வே.க.167).]*

**கொம்பு[4]** *kombu,* பெ.(n.) 1. 'கெ', 'கோ' முதலிய எழுத்துகளில் முற்பகுதியா யமைந்திருக்கும் அடையாளக் குறிகள்; the symbol 'ெ', 'ே' in certain Tamil letters as 'கெ, கொ'. *"வரைந்திடுந் திறனடைந்த கொம்பு போல" (திருவேங். கலம். 27).* 2. ஏரிகரையின் கோடி (இ.வ.); farthest end of a tank bund.

*[கொள் (கொண்பு) (எழுத்தின் கொம்பு போன்ற வரிவடிவப் பகுதி (வே.க.167).]*

ஒரு சுழி பெற்று வருவது ஒற்றைக் கொம்பு என்றும் இரு சுழி பெற்று வருவது இரட்டைக் கொம்பு என்றும் வழங்கும்.

**கொம்பு[5]** *kombu,* பெ.(n.) கிடைக்கொம்பு, குளத்துக் கண்மாயின் தொடக்கம் அல்லது இறுதிப் பகுதியின் பெயர்; beginning or end of the canal. *சேதுபதி மன்னர்கள் செப்பேடுகள் (பக்.50, எஸ்.எம்.கமால்).*

*[கொப்பு →கொம்பு.]*

**கொம்பு ஆசு** *kombu-āsu,* பெ.(n.) தச்சரின் கருவி வகை; an implement of carpenter (உருளையைச் சரிசெய்ய உதவுவது).

*[கொம்பு + ஆசு.]*

**கொம்புக்கட்டை** *kompu-k-kaṭṭai,* பெ.(n.) கானாதடியைக் கட்டுமரத்தில் நிறுத்தப் பயன்படும் ஒருறுப்பு; a part in *catamaran* which is used to keep the *kāṉāṭaḍi* (மீன்.பிடி.தொ.).

*[கொம்பு + கட்டை.]*

**கொம்புக்கடமை** *kombu-k-kaḍamai,* பெ.(n.) மீன் படகுக்கு உரிய வரி (வின்.); tax on fishing boats.

*[கொம்பு + கடமை.]*

**கொம்புக்கயிறு** *kompu-k-kayiṟu,* பெ.(n.) 1. உப்பங்கழியில் வலைக்குமோர் வலைக்கூறு; a part of fishing net used in salt-pan (மீன்.பிடி. தொ.). 2. மாட்டின் இரு கொம்புகளைச் சுற்றிக் கட்டும்


கொம்புக்கயிறு

நெற்றிக்கயிறு; a rope for tying around the horns of a cow.

*[கொம்பு + கயிறு.]*

**கொம்புக்கள்ளி** *kombu-k-kaḷḷi,* பெ.(n.) கள்ளிவகை (L.); a variety of milk-hedge.

*[கொம்பு + கள்ளி.]*

**கொம்புக்காரல்** *kompu-k-kāral,* பெ.(n.) காரல் மீன்வகை; a kind of fish by name *kāral.*

*[கொம்பு + காரல்.]*

**கொம்புக்காரன்** *kombu-k-kāraṉ,* பெ.(n.) 1. கொம்பு இசைக் கருவி ஊதுபவன்; horn-blower. 2. கக்கற்கழிச்சலுக்குரிய தெய்வம்; cholera-deity.

ம. கொம்புகாரன்.

*[கொம்பு + காரன்.]*

**கொம்புக்கால்** *kombu-k-kāl,* பெ.(n.) 1. முகடு தாங்கும் கவட்டு மரம்; forked support for a roof-tree. 2. கொ, கோ முதலியவற்றில் உள்ள கொம்புங்காலும் (வின்.); the symbols, 'ெ', 'ே' and 'ா' as in ko, (கொ) kō (கோ).

*[கொம்பு + கால்.]*

**கொம்புக்கெளிறு** *kombu-k-keḷiṟu,* பெ.(n.) ஆறடி நீளமும் வெளிர் நீலநிறமும் உள்ளதாய் நன்னீரில் வாழும் கெளிற்று மீன்வகை; a fresh-water fish, bluish-leaden, attaining 6 ft. in length.

*[கொம்பு + கெளிறு.]*

**கொம்புக்கெளுத்தி** *kombu-k-keḷutti,* பெ.(n.) நன்னீரில் வாழும் கெளுத்திமீன்; a kind of fish living in fresh water (மீன்.பிடி.தொ.).

*[கொம்பு + கெளுத்தி.]*

**கொம்புகன்** *kombugaṉ,* பெ.(n.) நீண்ட பாகற்காய்; long balsam-pear (சா.அக.).

*[கொம்பு → கொம்புகன்.]*

**கொம்புகாவி** *kombu-kāvi,* பெ.(n.) பல்லக்குத் தூக்குவோன் (யாழ்ப்.); palanquin-bearer.

*[கொம்பு + (காவு) காவி.]*

**கொம்புகொள்(ளு)-தல்** *kombu-koḷ(ḷu)-,* 16 செ.கு.வி. (v.i.) ஆணி முதலியவற்றில் பட்டு ஆடை கிழிதல் (கொ.வ.); to be torn, as a cloth caught by a nail.

*[கொம்பு + கொள்(ளு)-.]*

**கொம்புச்சிமிழ்** *kombu-c-cimiḻ,* பெ.(n.) மருந்து வைப்பதற்காக விலங்கின் கொம்பு அல்லது தந்தத்தினாற் செய்த பரணை; a small case or box made of horn or ivory for preserving medicine (சா.அக.)

*[கொம்பு + சிமிழ்.]*

**கொம்புச்சுத்தியல்** *kombu-c-cuttiyal,* பெ.(n.) தட்டார் பயன்படுத்துஞ் சுத்தியல் வகை (இ.வ.); a kind of hammer used by gold-smiths.

*[கொம்பு + சுத்தியல்.]*

**கொம்புச்சுழி** *kombu-c-cuḻi,* பெ.(n.) 1. *சுழி* பார்க்க; see *cuḻi.* The circular portion in the symbol 'ெ'. 2. மாட்டின் கொம்புகளுக்கிடையேயுள்ள சுழி; circular or curved marks on the head between horns of the cow.

*[கொம்பு + சுழி.]*

**கொம்புச்சுளை** *kombu-c-cuḷai,* பெ.(n.) பருத்திக் காட்டில் மடிப்பருத்தி குவித்து வைக்குமிடம்; a place for storing cotton.

*[கொம்பு + சுளை.]*

**கொம்புச்சொளை** *kombu-c-coḷai,* பெ.(n.) பருத்திக் காட்டில் மடிப்பருத்தி குவித்து வைக்குமிடத்தில், அடையாளத்திற்காக ஒரு சுளைப்பருத்தியை ஒரு செடியின் உச்சியில் அடையாளமாக வைத்தல்; a single cotton stick kept above the heap of harverted cotton as an indication.

*[கொம்பு + சொளை.]*

**கொம்புசாய்-தல்** *kombu-śāy-,* 2 செ.கு.வி. (v.i.) கதிர்முற்றிச் சாய்தல் (வின்.); to bow down with weight, as ripe corn.

*[கொம்பு + சாய்-.]*

**கொம்புசீவிவிடு-தல்** *kombu-śivi-viḍu-,* 20 செ.குன்றாவி. (v.t.) 1. சண்டை மூட்டி விடுதல்; to incite quarrel. 2. ஆர்வப்படுத்துதல் (இ.வ.); to encourage; to egg on.

*[கொம்பு + சீவி + விடு-.]*

**கொம்புசுற்று-தல்** *kombuśuṟṟu-,* 5 செ.கு.வி. விளையாட்டில் எதிரியை மடக்கி வெல்லல்; to corner and defeat oponent in sport. இவன் கொம்பு சுற்றி விளையாடுவதில் வல்லவன் (நெல்.வழ.).

*[கொம்பு + (சுத்து) சுற்று.]*

**கொம்புத்தண்டு** *kombu-t-taṇḍu,* பெ.(n.) மரக்கலத்தின் வேகத்தைக் குறைக்க அதன் முன்பகுதியில் நிற்கும் துடுப்பு; an oar, or paddle in the front, used to reduce the speed of a boat (மீன்.பிடி.தொ.).

*[கொம்பு + தண்டு.]*

**கொம்புத்துறை** *kombu-t-tuṟai,* பெ.(n.) மரம், இரும்பு போன்றவற்றைக் கொண்டு கடலில் உண்டாக்கும் துறைமுகம்; structure of iron or wood, open below running out into sea, used as landing stage.

*[கொம்பு + துறை.]*

**கொம்புத்தேன்** *kombu-t-tēṉ,* பெ.(n.) மரக் கொம்பிலுள்ள தேன்கூட்டிலிருந்து எடுக்கப்பட்ட தூய்மையான தேன் (பதார்த்த.198.); lit., honey gathered from the honey combs on the branch of a tree. pure honey.

*[கொம்பு + தேன்.]*

**கொம்புத்தேனீ** *kombu-t-tēṉi,* பெ.(n.) தேனீவகை (M.M.); tree-bee, found on the plains and low hill ranges.

*[கொம்பு + தேன் + ஈ.]*

**கொம்புதூக்கி** *kombu-tūkki,* பெ.(n.) சேலம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Salem Dt.

*[கொம்பு + தூக்கி.]*

**கொம்புநங்கூரம்** *kombu-naṅgūram,* பெ.(n.) மரக்கலத்தைக் கடலில் நிறுத்திடப் பயன்படும் ஒருறுப்பு; a kind of instrument used to anchor the boat in the sea (மீன்.பிடி.தொ.).

*[கொம்பு + நங்கூரம்.]*

**கொம்புப்பயறு** *kombu-p-payaṟu,* பெ.(n.) தவச வகை (வின்.); a kind of pulse.

*[கொம்பு + பயறு.]*

**கொம்புப்பழம்** *kombu-p-paḻam,* பெ.(n.) எலுமிச்சை; lime (சா.அக.).

*[கொம்பு + பழம்.]*

**கொம்புப்பாகல்** *kombu-p-pāgal,* பெ.(n.) நீண்ட பாகல்வகை (பதார்த்த.712); long balsam-pear, climber.

*[கொம்பு + பாகல்.]*

**கொம்புப்பிடி** *kombu-p-piḍi,* பெ.(n.) கத்தி போன்றவற்றிற்குக் கொம்பு முதலியவற்றாற் செய்த பிடி (இ.வ.); handle, as of a knife, made of horn, tusk, etc.

*[கொம்பு + பிடி.]*

**கொம்புப்பிறை** *kombu-p-piṟai,* பெ.(n.) பெரியார் சீர்திருத்த எழுத்துகள் புழக்கத்திற்கு வருமுன் ணொ, ணோ முதலிய எழுத்துகளில் இருந்த கொம்பும் பிறையும்; the symbols 'ெ' 'ே' ' ' and as in forms ணொ, ணோ (ணொ, ணோ).

*[கொம்பு + பிறை.]*

**கொம்புப்புடல்** *kombu-p-puḍal,* பெ.(n.) 1. குட்டைப் புடல் (யாழ்ப்.); short snake-gourd, climber. 2. புடல் வகை; palwal snake-gourd, extensive climber.

*[கொம்பு + புடல்.]*

**கொம்புபடு-தல்** *kombu-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ***கொம்புகொள்-தல்*** பார்க்க; see *kombu-koḷ-.*

*[கொம்பு + படு-.]*

**கொம்புபிடி-த்தல்** *kombu-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) கொம்பையூதுதல் (வின்.); to blow a horn.

*[கொம்பு + பிடி-.]*

**கொம்புமண்வீசு-தல்** *kombumaṉ-viśu-,* 5 செ.குன்றாவி.(v.t.) கொம்புகளால் மாடு தரையைப் பெயர்த்தெறிதல்; cattle plunging their horn into earth. இந்தத் தொம்பக்காளை கொம்புமண் வீசிக் கொண்டே யிருக்கும் (நெல்லை).

*[கொம்புமண் + வீசு-.]*

**கொம்புமிளகு** *kombu-miḷagu,* பெ.(n.) ஒருவகை மிளகு; a kind of pepper (சா.அக.).

*[கொம்பு + மிளகு.]*

# கொம்பெருது



உச்சிக்கொம்பன்



கொம்பெருது





சிந்துவெளி எருது உச்சிக்கொம்பன்



எகுபது நாட்டுப் பண்டைய படகின் ஒரு முனையில்
உச்சிக்கொம்பன் உருவம்.



கொட்டேணி

**கொம்புமுட்டை** *kombu-muṭṭai*, பெ.(n.) மரக் கொம்பிலிடும் முட்டை; eggs laid on branches of trees (சா.அக.).

*[கொம்பு + முட்டை.]*

**கொம்புமுளை-த்தல்** *kombu-mulai-*, 4 செ.கு.வி. (v.i.) பிறர்க்கில்லாத சிறப்புண்டாயிருத்தல்; to have special merits or excellences, used ironically. அவன் கொம்பு முளைத்தவன் (உ.வ.).

*[கொம்பு + முளை-.]*

**கொம்புவேளா** *kombu-vēlā*, பெ.(n.) தலையின் முன்பக்கத்தே கொம்புடைய வேளாமீன்; a kind of fish having horn on the fore-head (மீன்.பிடி.தொ.).

*[கொம்பு + வேளா.]*

**கொம்பூதி**[1] *kombūdi*, பெ.(n.) 1. கொம்பூதுவோன் (யாழ்ப்.); horn blower, trumpeter. 2. நத்தை (சங். அக.); snail.

ம. கொம்பூதி, கொம்புகாரன்.

*[கொம்பு + ஊதி. ஊது + இ.]*

**கொம்பூதி**[2] *kombūdi*, பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanadha puram Dt.

*[கொம்பு + ஊதி.]*

**கொம்பெருது** *komberudu*, பெ.(n.) உச்சிக் கொம்பன், ஒற்றைக்கொம்புள்ள எருதினத்தைச் சார்ந்த விலங்கு; unicorn.

மறுவ. உச்சிக்கொம்பன்.

க. ஒக்கோடு நந்தி

*[கொம்பு + எருது.]*

ஒரே கொம்புள்ள எருது அறப்பழங்காலத்தில் இருந்ததாகப் பழங்கதைகள் கூறுகின்றன. ஒற்றைக் கொம்புள்ள எருதிற்கு உச்சிக்கொம்பன் என்னும் பெயர் பழங்காலத்தில் வழங்கியதைச் சாம்பசிவம் பிள்ளையின் மருத்துவ அகரமுதலி எடுத்துக்காட்டுகிறது. சிந்துவெளி முத்திரைகள் பெரும்பாலானவற்றில் ஒற்றைக் கொம்பெருதின் உருவம் தெளிவாகப் பொறிக்கப்பட்டுள்ளது. இது ஒருகாலத்தில் உலகத்தில் வாழ்ந்த உயிரினமா அல்லது கற்பனை வடிவமா என்பது குறித்து அறிஞர்கள் இன்னும் எந்த முடிவுக்கும் வரவில்லை. வரலாற்றுக்கு முந்தைய அறப்பழங்காலத்திலிருந்தே ஒற்றைக் கொம்பெருது எனப்படும் உச்சிக்கொம்பன் பற்றிய கருத்து தென்னாட்டு மக்களிடமும் நிலவி வந்துள்ளது. இன்றைய கருநாடக மாநிலத்தின் மேற்குப் பகுதிகளில் வாழும் மக்கள் மாரியம்மன் கோயிலுக்கு நேர்த்திக்கடனாக தச்சர்களின் வாயிலாக ஒற்றைக்கொம்புள்ள மரப்பொம்மைகளைச் செய்து கோயில் காணிக்கை செலுத்துகிறார்கள். இத்தகைய ஒற்றைக்கொம்பு மரப்பொம்மைகளை மைசூர் பல்கலைக்கழகத்திலுள்ள ஊரக அருங்காட்சியகத்தில் [Folklore Museum] பார்வைக்கு வைத்திருக்கிறார்கள்.

தமிழ்நாட்டில் சேலம் மாவட்டத்தில் மேட்டூர் அணையைச் சார்ந்த காவேரிபுரத்திற்கு அருகிலுள்ள கோட்டையூர் மாரியம்மன் கோவிலில் ஆண்டுதோறும் ஆடி 18-ஆம் நாளை அடுத்து வரும் காரிக்கிழமை [சனி] அன்று 14 ஊரினர் சேர்ந்து கூட்டாகப் பொன்னேர் கட்டும் விழா நடத்துகின்றனர். அந்தப் பொன்னேரில் மாடுகளைக் பூட்டர்மல் திருமணமாகாத இரு இளைஞர்களை எருதாகப் பூட்டி, கோயிலைச்சுற்றி மூன்றுமுறை பொன்னேர் உழும் விழா நடத்துகின்றனர். பொன்னேரின் எருதுகளாகச் செயற்படும் இரு இளைஞர்களின் தலையில் ஒருவனுக்கு ஒற்றைக்கொம்புத் தலைப்பாகையும் மற்றொருவனுக்கு இரட்டைக் கொம்புத் தலைப்பாகையும் அணிவிக்கின்றனர். இந்நிகழ்ச்சி ஆண்டுதோறும் நடைபெற்று வருகின்றது. ஒற்றைக்கொம்பு எருதினை ஏரில் பூட்டும் வழக்கம் பண்டைய மக்களிடையே ஏதோ ஒரு காலத்தில் நிலவியதை இந்நிகழ்ச்சி நினைவூட்டுவதாகவும் அறிஞர் சிலர் கருதுகின்றனர்.

ஒற்றைக்கொம்புடைய விலங்கைப்பற்றிய கருத்து பிற நாடுகளிலும் பழங்காலத்திலேயே பரவியிருந்தது. எகுபது நாட்டில் கிடைத்த ஒப்பனை செய்யப்பட்ட படகு ஒன்றில், ஒருமுனையில் ஒற்றைக்கொம்புடைய விலங்கின் தலையும் மற்றொரு முனையில் இரட்டைக்கொம்புள்ள விலங்கின் தலையும் காணப்படுகின்றன. அவற்றின் முகத்தோற்றம் திருகு கொம்புடைய இரலைமான் தலையை ஒத்துள்ளது. சிந்துவெளி முத்திரையில் உள்ள உச்சிக்கொம்பனும், தமிழ்நாட்டு ஒற்றைக்கொம்பெருதும் எருதின் இனங்களாக இருப்பதால் தமிழ்நாடு முதல் சிந்துவெளி வரை ஒரே நம்பிக்கையுடைய ஒரே இனத்தைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்திருக்கலாம் எனக் கருதுவதற்கு இது இடம் தருகிறது.

**கொம்பேரிப்பட்டி** *komberi-p-paṭṭi*, பெ.(n.) திண்டுக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dhindukkal Dt.

*[கோம்பு + ஏரி + பட்டி - கோம்பேரிப்பட்டி → கொம்பேரிப்பட்டி.]*

**கொம்பேறிமூக்கன்** *kombēṟi-mūkkaṉ*, பெ.(n.) மரப்பாம்பு வகை (M.M.206.); tree-snake, non-poisonous.

மறுவ. கொம்பேறி, கொம்பேறிமூர்க்கன்.

*[கொம்பு + ஏறி + மூக்கன்.]*

**கொம்பேறிமூர்க்கன்** *kombēṟi-mūrkkaṉ*, பெ.(n.) ***கொம்பேறி மூக்கன்*** (வின்.) பார்க்க; see *kombēṟi-mūkkaṉ*.

*[கொம்பேறி + மூர்க்கன்.]*

**கொம்பேறியேந்தல்** *kombēṟi-ēndal*, பெ.(n.) சிவகங்கை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Sivagangai Dt.

*[கோம்பு + ஏறி + ஏந்தல் - கோம்பேறியேந்தல் → கொம்பேறியேந்தல்.]*

**கொம்மகப்பேடு** *kommaga-p-pēḍu*, பெ.(n.) திருவள்ளுவர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvalluvar Dt.

*[கொம்பு → கொம்பகன் + பேடு]*

**கொம்மசமுத்திரம்** *komma-šamuttiram*, பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[கொம்பன் + சமுத்திரம்.]*

**கொம்மட்டி** *kommaṭṭi*, பெ.(n.) 1. கொடிவகை (சைவச. பொது. 297.); a small water-melon, climber. 2. தும்மட்டி (M.M. 371.); country cucumber; climber. 3. நீர்முலாம்பழம்; a kind of fruit as of water-melon.

மறுவ. கொமட்டி.

*[கும்மட்டி + கொம்மட்டி.]*

**கொம்மட்டிக்காய்** *kommaṭṭi-k-kāy*, பெ.(n.) தும்மட்டிக்காய்; a kind of bryonia (சா.அக.).

*[கொம்மட்டி + காய்.]*

**கொம்மட்டிக்கீரை** *kommaṭṭi-k-kīrai*, பெ.(n.) செங்கீரை (வின்.); cockscomb greens.

*[கொம்மட்டி + கீரை.]*

**கொம்மட்டிக்கொடி** *kommaṭṭi-k-koḍi*, பெ.(n.) பேய்க்கொம்மட்டி, water-melon (சா.அக.).

*[கொம்மட்டி + கொடி.]*

**கொம்மட்டிச் சீரகம்** *kommaṭṭi-c-cīragam*, பெ.(n.) ***கருஞ்சீரகம்*** பார்க்க; see *karuñjīragam*(சா.அக.).

*[கொம்மட்டி + சீரகம்.]*

**கொம்மட்டிச்சுரை** *kommaṭṭi-c-curai*, பெ.(n.) கறிக்குரிய சுரைச்செடி வகை (வின்.); a gourd used for curry.

மறுவ. காட்டுச்சுரைக்காய்.

*[கொம்மட்டி + சுரை.]*

**கொம்மட்டி மரம்** *kommaṭṭi-maram*, பெ.(n.) கசப்பு மாதுளை; bitter pomegranate tree (சா.அக.).

*[கொம்மட்டி + மரம்.]*

**கொம்மட்டி மாதுளை** *kommaṭṭi-māduḷai*, பெ.(n.) மரவகை (சிலப். 16:25, உரை); citron, a tree.

மறுவ. கொடிமாதுளை, துரிஞ்சி.

*[கொம்மட்டி + மாதுளை.]*

இதனை உண்பதனால் பாடவல்ல இனிய குரலோசை உண்டாகுமாம் (சா.அக.).

**கொம்மடி** *kommaḍi*, பெ.(n.) கொம்மட்டிவகை; a kind of water-melon. *"சிற்றவரைக் கொம்மடிகள்" (தேசிகப். 18:4).*

*[கொம்மட்டி → கொம்மடி.]*

**கொம்மம்பட்டு** *kommam-paṭṭu*, பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[கொம்மம் + பட்டு.]*

**கொம்மலகுட்டை** *kommala-kuṭṭai*, பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[கும்மலன் → கொம்மலன் + குட்டை.]*

**கொம்மன்தாங்கல்** *komman-tāṅgal*, பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvallur Dt.

*[கொம்மன் + தாங்கல்.]*

**கொம்மாதி** *kommādi*, பெ.(n.) நெட்டிலிங்க மரம்; Indian mast tree (சா.அக.).

*[கொம் → கொம்மாதி.]*

**கொம்மி**[1] *kommi*, பெ.(n.) கோட்டம்; common bottle-flower (சா.அக.).

*[கும்மி → கொம்மி.]*

**கொம்மி**[2] *kommi*, பெ.(n.) ***கும்மி***[1] பார்க்க; see *kummi*, a kind of dance accompanied with singing and clapping of hands. *"மடவார் கொம்மியே பாடி" (அருட்பா, vi, மாயாவிள. 7).*

*[கும்மி → கொம்மி.]*

**கொம்மெனல்** *kom-m-eṉal*, பெ.(n.) 1. ஓர் ஒலிக்குறிப்பு; an imitative sound. *"கூர நாண்குரல் கொம்மென வொலிப்ப" (பரிபா. 19:44).* 2. பெருக்கக் குறிப்பு (தொல். சொல். 298, உரை); expr. denoting luxuriance. 3. விரைவுக் குறிப்பு; expr. denoting haste. *"கொம்மென வெழுந்தனள்" (கந்தபு. தெய்வயானை. 9).*

*[கொம் + எனல்.]*

**கொம்மேடு** *kommēḍu*, பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[கொம்மை + மேடு.]*

**கொம்மை**[1] *kommai*, பெ.(n.) 1. வட்டம் (பிங்.); circle, circularity. 2. பெருமை; largeness, bigness. *"அம்மையு மழகுங் கொம்மையொடு கழுமி" (பெருங். உஞ்சைக். 40:210).* 3. திரட்சி (சூடா.); conicalness, roundness, rotundity. 4. இளமுலை; breast of a youthful woman. *"வாரணி கொம்மை" (பரிபா. 22:30).* 5. இளமை (திவா.) youth. 6. அழகு (பிங்.); beauty. 7. மார்பு (பிங்.); breast, chest. 8. வலிமை (பிங்.); strength.

**ம.** கொம்ம; **க.** கொம்மெ; **தெ.** கொம்ம.

*[கும் → கும்மை → கொம்மை.]*

**கொம்மை**[2] *kommai*, பெ.(n.) 1. மேடு (பிங்.); elevated place, mound. 2. வீடு; house. உன் கொம்மையிலே போய் முடங்கிக் கொள் (இ.வ.). 3. கொத்தளம் (வின்.); rampart, bulwark.

**ம.** கொம்ம.

*[கும்மை → கொம்மை.]*

**கொம்மை**[3] *kommai*, பெ.(n.) 1. அடுப்புக்குமிழ் (இ.வ.); projecting knobs of an oven. 2. கதவுக் குடுமி; projecting pin of a door. 3. அழுக்குத் துணியிடும் பெட்டி; clothes-basket. 4. கை குவித்துக் கொட்டுகை (திவா.); clapping of hands, as in dancing.

**ம.** கொம்ம.

*[கும் → கும்மி → கும்மை → கொம்மை.]*

**கொம்மை**[4] *kommai*, பெ.(n.) 1. கொம்மட்டி (மலை.); a small water-melon, climber. 2. கன்னி (புரட்டாசி)யில் விதைத்துச் சிலை (மார்கழி)யில் அறுவடை செய்யும் கம்புவகை (G.Sm.D I, I. 219.); a variety of millet sown in *Puratāsi* and harvested in *Mārkaḻi*. 3. சிறு கூலங்களின் உமி (பாவாணர்); chaff of minor grains like ragi. 4. சக்கையின் உதிரி; thin and immature grain in the husk, chaff.

**ம.** கொம்ம

**Fin.** kamara (surface, skinï rindï crust); **Est.** kamarï kammar; **Hung.** haml; **Mong.** kemi; **Tur.** kamik; **Jap.** kawa, kapa.

*[குல் → கொல் → கொய → கொம் → கொம்மை.]*

**கொம்மைகொட்டு—தல்** *kommai-koṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. தட்டியழைத்தல்; to call a person by clapping hands; to invite. *"கூற்றத்தைக் கொம்மை கொட்டி" (சீவக. 1109).* 2. புகழ்தற் குறியாக முதுகைத் தட்டிக்கொடுத்தல்; to pat on the back, as in appreciation. *"குடங்கையாற் கொம்மை கொட்டுவ போன்றவே" (சீவக. 529).* 3. மகளிர் கைகொட்டிப் பாடியாடும் விளையாட்டு; dance with clapping of hands to time and singing, especially among girls.

*[கும் → கொம் → கொம்மை. கொம்மை + கொட்டு-.).*

**கொமட்டு—தல்** *komaṭṭu-*, 6 செ.கு.வி.(n.) 1. ஓங்கரித்தல்;to vomit. 2. ***குமட்டு—தல்*** பார்க்க; see *kumaṭṭu-.*

*[குமட்டு → கொமட்டு.]*

**கொமடிப்பட்டு** *komaḍi-p-paṭṭu*, பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[கோம்பு + அடி + பட்டு - கோம்படிப்பட்டு → கொமடிப்பட்டு)*

**கொமரப்பாறை** *komara-p-pāṟai*, பெ.(n.) 1. ***கொமாரப்பாறை*** பார்க்க; see *komāra-p-pāṟai* (பரத. கலை. சொ. அக.). 2. ஐந்தடி நீளமுள்ளதும் பசுமை நிறத்ததுமான கடல்மீன் வகை; horse-mackerel, glossy-green, attaining 5 ft. in length.

*[கும்மாரம் → கொமாரம் + பாறை.]*

**கொமருகாரியம்** *komaru-kāriyam*, பெ.(n.) பெண்ணின் திருமண தொடர்பான ஏற்பாடுகள்; arrangements regarding the marriage of maiden (நெல்லை.).

*[குமரி → குமரு → கொமரு + காரியம் (கொ.வ.).]*

இது குமரி காரியம் என்றிருத்தல் வேண்டும்.

**கொமாளிப்பட்டி** *komāḷi-p-paṭṭi*, பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[கோமாளி → கொமாளி + பட்டி.]*

**கொய்**[1]**—தல்** *koy-*, 1 செ.குன்றாவி. (v.t.) 1. பறித்தல்; to pluck, cull, as flowers. *"பனிமலர் கொய்தும் பாவை புனைந்தும்" (பெருங். இலாவாண. 19:161).* 2. அறுத்தல்; to cut, reap. *"சிறுதினை கொய்ய" (மதுரைக். 271).* 3. கத்தரித்தல்; to shear, crop, as hair; to trim, as plants, to snip off. *"கொய்தார் மன்னவன்" (பு.வெ.3:3.கொளு).* 4. தெரிந்தெடுத்தல்; to choose, select. *"பொருந்துவதொன் றெமக்குக் கொய்துரை" (கோயிற்பு. பதஞ். 54).* 5. சீலை கொய்தல்; to plait, gather into folds, as ends of a cloth. *"கோடிப் பூந்துகில் கொய்து" (பெருங். இலாவாண.5:165).* 6. சிலிர்த்தல்; to bristle, as manes of a horse. *"கொய்சுவற் புரவி" (மலைபடு. 572).*

ம. கொய்க; க. கொய், கும்; கெ. கோயு; து. கொய்பிணி, கொயிபிணி; கோத., குட.,பா., கொய்; துட. க்விய்; கோண்; கோயியானா, கொய்தான; குவி. கொய்யலி; கூ. கோவகொய்; குரு. கொய்னா; பட., கூய்., மா. க்வொயெ.

**Fin.** kokea (to choose, investigate); **Kare.** kuottele; **Est.** koeta.

*[குல் → குள் → கொள் → கொய் → கொய்தல் (வேக.174).]*

**கொய்²–தல்** *koy-*, 1 செ.குன்றாவி. (v.t.) கவர்ந்து கொள்ளுதல் (ஈடு, 1,4:7); to take away.

*[கொய்¹ → கொய்².]*

**கொய்³** *koy*, பெ.(n.) 1. எட்டரை அங்குலம் நீள முள்ளதும் நன்னீரில் வாழ்வதும் பசியநிறத்ததுமான மீன்வகை; a fresh-water fish, rifle-green, attaining 8 1/2 in. in length. *"செம்புனல் கொய்யனைத் துங் கொணரும்" (தேவா. 196:3).* 2. ஒருவகை ஆற்றுமீன்; a kind of river fish (சா.அக.).

ம. கொய்ல; U.khowai.

*[குய் → கொய்.]*

**கொய்கை** *koigai*, பெ.(n.) 1. அறுவை; reap. 2. பறிக்கை; pluck. 3. மடிக்கை; plait.

*[கொய் → கொய்கை. ஒ.நோ: செய் → செய்கை.]*

**கொய்கைமேனி** *koygai-mēṉi*, ஒருவகைத் தென்னை; a species of coconut (சா.அக.).

*[கொய்கை + மேனி.]*

**கொய்ச்சாளை** *koy-c-cāḷai*, பெ.(n.) மீன்வகை (யாழ்.அக.); a kind of fish.

*[குய் → கொய் + சாளை.]*

**கொய்சகம்¹** *koyšagam*, பெ.(n.) ஓரங்கொய்து சுருக்கப்பட்ட உடை; puckered or tucked-up ends of a cloth, as a woman's; ornamental pleating in a woman's dress hanging from the right hip. *'கொய்சக மருங்குறச் சேர்த்தி' (கம்பரா. தேரேறு. 6).*

*[கொய்து → கொய்சு → கொய்சகம் (மடித்து உடுப்பது).]*

**கொய்சகம்²** *koyšagam*, பெ.(n.) அணிவகை; an ornament. *"செருந்திப்பூ இரண்டும் கொய்சகம் இரண்டும் உளப்பட பொன் முப்பத்திரு கழஞ்செ காலும்"* (S.I.I.V.520:17).

*[கொய்து → கொய்சு → கொய்சகம்.]*

**கொய்சுவனம்** *koyšuvaṉam*, பெ.(n.) ***கொய்சகம்*** (கொ.வ.) பார்க்க; see *koyšagam*.

*[கொய்சு → கொய்சுவனம்.]*

**கொய்துகூட்டு–தல்** *koydu-kūṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) நெறிபிடித்துக் கட்டுதல்; to develop a swelling of lymph glands or nodes.

*[கொய்து + கூட்டு–.]*

**கொய்ப்பசிரிக்கீரை** *koy-p-paširi-k-kīrai*, பெ.(n.) நீருமரி (L.); sea side Indian saltwort.

*[கொய்ப்பசிரி + கீரை.]*

**கொய்மீன்** *koy-mīṉ*, பெ.(n.) மீன்வகை; a kind of fish. *"கொய்மீன் செப்பலி" (குருகூர்ப். 20).*

*[கொய் + மீன்.]*

**கொய்யக்காரன்** *koyya-k-kāraṉ*, பெ.(n.) தேங்காய், பனங்காய் போன்றவற்றைப் பறிப்பவன்; a person authorised to pluck coconuts, arecanuts etc.,

ம. கொய்யக்காரன்.

*[கொய் + அ + காரன்.]*

**கொய்யகச்சட்டி** *koyyaga-c-caṭṭi*, பெ.(n.) விளிம்பகன்ற சட்டிவகை (வின்.); a kind of earthen pot with brim.

*[கொய்யுகம் + சட்டி.]*

**கொய்யகம்** *koyyagam*, பெ.(n.) 1. ***கொய்சகம்*** பார்க்க; see *koyšagam*. 2. மண்டபத்தில் அழகுபடுத்தி மேலே தொங்கவிடப்பட்ட ஆடை; ornamental folds of cloth used as hangings in a hall. *"பசும்பொ னுடுக்கை கொய்யக மீப்பட நாற்றினர்" (உபதேசகா. சிவபுண்ணிய. 62).*

*[கொய் + அகம்.]*

**கொய்யடி** *koy-y-aḍi*, பெ.(n.) ***கொய்யடிநாரை*** (வின்.) பார்க்க; see *koyyaḍi-nārai*.

*[கொய் + அடி.]*

**கொய்யடிநாரை** *koy-y-aḍi-nārai*, வண்டானம் என்ற நாரைவகை (திவா.); pelican ibis.

*[கொய்யடி + நாரை.]*

**கொய்யல்** *koyyal*, பெ.(n.) 1. சிறியது; that which is small. 2. சிறிய மரவகை; a tree of smaller size. *"கொங்கார் கோடலொடு கொய்யல்" (பெருங். உஞ்சைக். 51:51).*

*[கொய் → கொய்யல்.]*

**கொய்யன்விளை** *koyyaṉ-viḷai,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[குய்யன் (குயவன்) → கொய்யன் + விளை.]*

**கொய்யா**[1] *koyyā,* பெ.(n.) மரவகை (பதார்த்த. 744.); guava tree.

*[கொய்யல் (சிறியது) → கொய்யா.]*

**கொய்யா**[2] *koyyā,* பெ.(n.) நெய்வார் கருவிவகை (யாழ்.அக.); a weaving instrument.

*[குய்யல் → கொய்யல் → கொய்யா.]*

**கொய்யாக்கட்டை** *koyyā-k-kaṭṭai,* பெ.(n.) 1. இடுக்கிச் சட்டம்; (C.E.M.); cleat. 2. அச்சின் மீது இரண்டருகுகளிலும் வண்டிச் சட்டத்தைத் தாங்கும்படி குறுக்காக வைக்கப்படும் கட்டைகள் (இ.வ.); wooden pieces placed on either side of the axle supporting the cart-frame. 3. சாளரக் கதவை மூடப் பயன்படும் சிறிய மரத்துண்டு; a piece of wood used to close the window door.

*[கொய்யல் + கட்டை.]*

**கொய்யாக்கம்** *koyyākkam,* பெ.(n.) யுனானி மருந்துக்குப் பயன்படும் ஒரு மரம்; *a tree useful in* preparing *unāṉi* medicine.

*[கொய் → கொய்யாக்கம்.]*

**கொய்யாக்கயிறு** *koyyā-k-kayiṟu,* பெ.(n.) நெசவுக் கருவிவகை; a weaving instrument.

*[கொய்யல் → கொய்யா + கயிறு.]*

**கொய்யாக்குறிஞ்சி** *koyyā-k-kuṟiñji,* பெ.(n.) குறிஞ்சிப் பண்; tunes peculiar to hilly tracts.

*[கொய்யா + குறிஞ்சி.]*

**கொய்யான்** *koyyāṉ,* பெ.(n.) 1. மண்ணாலான பரணி (யாழ்.அக.); earthen jar. 2. பருமலையையும் பாயின் நடுப்பகுதியையும் இணைக்கும் வளைவுக் கயிறு; a rope used to connect the sail and the mast of a vessel (மீன்பிடி. தொ.).

*[கொய் → கொய்யான்.]*

**கொய்யின்கீரை** *koyyiṉ-kīrai,* பெ.(n.) அறுகீரை (கொ.வ.). அறைக்கீரை; a pot herb, a kind of edible green.

**மறுவ.** கொய்கீரை.

*[கொய்யல் → கொய்யின் + கீரை.]*

**கொய்யுளை** *koy-y-uḷai,* பெ.(n.) 1. குதிரைப் பிடரிமயிர்; horse's mane. *"ஐயீ ராயிரங் கொய்யுளைப் புரவியும்" (சிலப். 26:134).* 2. குதிரை; horse. *"கொய்யுளை கொடிஞ்சி குஞ்சரம்" (ஞானா. 7:18).*

*[கொய் + உளை – கொய்யுளை (வெட்டிய பிடரிமயிர்).]*

**கொய்யோ** *koyyō,* பெ.(n.) இடை. (int.). வெற்றிக் குறிப்புச் சொல் (யாழ்.அக.); an exclamation of victory.

*[கொல் → கொய் → கொய்யோ. ஒ.நோ:கொல்லோ.]*

**கொய்யோக்கூறல்** *koiyō-k-kūṟal,* வெற்றிகூறல்; to exclaim victory.

*[கொய்யோ + கூறல்.]*

**கொய்னானிகம்** *koyṉ-āṉigam,* பெ.(n.) பண்ணைக் கீரை; cock's comb greens (சா.அக.).

*[கொயின் + ஆனிகம்.]*

**கொயிர்சேறு** *koyir-šēṟu,* பெ.(n.) கடலடிச்சேறு; mire in the bottom of the sea (மீன்பிடி.தொ.).

*[கயில் - அடிப்பாகம்; கயில் → கொயில் → கொயிர் + சேறு.]*

**கொரக்கவலி** *korakka-vali,* பெ.(n.) கைகால் கோணிக் கொண்டு போதல்; limbs to get disorder. 'யப்பா; இதென்ன இந்த விரலு இப்படிக் கொரக்களிச்சிட்டுப் போகுது' (நெல்லை).

*[கொரக்கம் + வலி.]*

**கொரக்கவாடி** *korakka-vāḍi,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kadalur Dt.

*[கோரக்கன் → கொரக்கன் + (பாடி) வாடி.]*

**கொரக்களி** *korakkaḷi,* பெ.(n.) குறும்பு; mischievousness. *'இந்தக் கொரக்களித்தளம்தானே வேண்டாங்கறேன்' (நெல்லை).*

*[குரங்கு → குரக்கு → குரக்களி → கொரக்களி.]*

**கொரக்கன்** *korakkaṉ,* பெ.(n.) ஒருவகை மீன்; a kind of fish.

*[குரக்கன் → கொரக்கன்.]*

**கொரக்கூடை** *kora-k-kūḍai,* பெ.(n.) உப்பிட்ட மீனை நிரல்பட வைத்தற்குரிய மூங்கிற்கூடை; a basket made of bamboo which is used to keep the salted fish in order (மீ.பிடி.தொ.).

*[குரக்கன் → கொர + கூடை.]*

**கொரக்கை** *korakkai*, பெ.(n.) குறட்டை (நீலகேசி, 375, உரை); snoring.

க. கொருக்கு.

*[குர் → கொர → கொரக்கை.]*

**கொரகா** *koraga*, பெ.(n.) கருநாடக மாநிலம் தென் கன்னடத்தில் வாழும் சுமார் 4000 மக்கள் பேசும் திராவிட மொழி; a Dravidian language spoken in South Kannada District. (The Koraga language; Linguistic Survey of India Series, Poona, 1971).

*[குரகர் → கொரகா.]*

**கொரட்டு** *korattu*, பெ.(n.) வீட்டின் முற்றம்; the court-yard in a house.

*[குறடு → குறுட்டு → கொரட்டு.]*

**கொரட்டூர்** *korattūr*, பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvallur Dt.

*[கரள் → கரட்டு → கொரட்டு + ஊர்.]*

**கொரடா** *koradā*, பெ.(n.) குதிரைச்சவுக்கு; horse-whip, whip, scourge.

*[குறடு → கொரடா.]*

**கொரண்டம்** *korandam*, பெ.(n.) குறிஞ்சி; a thorny shurb growing in mountain (சா.அக.).

*[குறிஞ்சி → குறஞ்சி → குறண்டம் → கொரண்டம்.]*

**கொரண்டி** *korandi*, பெ.(n.) 1. முட்குறண்டி; thorny coranday. 2. கட்டாந்தரையில் முளைக்கும் ஒரு முட்செடி; a thorny shrub which grows on barren land (சா.அக.).

*[குல் → குறு → குறண்டி → கொரண்டி.]*

**கொரணி** *korani*, பெ.(n.) காட்டு வரகு; wild *varagu* (millet) (சா.அக.).

*[குறம் → குறணி → கொரணி.]*

**கொரப்பு** *korappu*, பெ.(n.) கட்டட வேலைக்குப் பயன்படும் மரவகைகளுளொன்று; a kind of tree used for building works (கட். தொ.).

*[குரப்பு → கொரப்பு.]*

**கொரம்பாடு-தல்** *koram-pādu-*,12 செ.குன்றாவி. (v.t.) இரக்கம் வருமாறு மன்றாடுதல்; a sincere merciful prayer. என்ன இழவு அவன் கொரம் பாடுதான் (நெல்லை.).

*[கோரி → கோரம் → கொரம் + பாடு.]*

குறைபாடுதல் என்பது நெல்லையில் கொரம்பாடுதல் எனவும் வடகொங்கு பகுதிகளில் கொரமாடுதல் எனவும் திரிந்து சொச்சை வழக்குகளாயின.

**கொரல்குட்டை** *koral-kuttai*, பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[கொரலி → கொரல் + குட்டை.]*

**கொரலி** *korali*, பெ.(n.) 1. தினை (M.M. 893.); Italian millet. 2. வெண்தினை (M.M. 894.); white Italian millet (சா.அக.).

மறுவ. குதிரைவாலி, கோராலி.

*[குதிரைவாலி → கோராலி → கொரலி.]*

**கொரவநந்தல்** *korava-nandal*, பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[குறவன் → கொரவன் (கொ.வ.) + நந்தல்.]*

**கொரவை** *koravai*, பெ.(n.) **குரவை** பார்க்க; see *kuravai*.

*[குரவை → கொரவை.]*

**கொரளன்வயல்** *koralan-vayal*, பெ.(n.) புதுக்கோட்டை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Pudukkottai Dt.

*[கரள் → கரளன் → கொரளன் + வயல்.]*

**கொரளிவித்தை** *korali-vittai*, பெ.(n.) குட்டிச் சாத்தன்வழிச் செய்யும் ஒரு கலை; magical tricks aided by *kurali* devil.

மறுவ. குறளிவித்தை.

*[குறளி → கொரளி + வித்தை.]*

**கொரளூர்** *koralūr*, பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[கரள் → கொரள் + ஊர்.]*

**கொராங்கரி** *korāngari*, பெ.(n.) மல்லிகை; jasmine (சா.அக.).

*[கூரங்கலி → கொராங்கரி.]*

**கொராலி** *korāli*, பெ.(n.) குட்டி ஈனாத ஆடு; *sheep not calved.*

*[குறையாளி → கொறாளி → கொராலி (கொ.வ.).]*

**கொராலு** *korālu*, பெ.(n.) ஆட்டின் வகை; a kind of goat.

*[குறி(கம்பளியாடு) → குறால் → கொராலு.]*

**கொரி** *kori*, பெ.(n.) கன்றின் வாய்ப்பூட்டு (இ.வ.); muzzle of a young calf.

[கொளி → கொலி → கொரி.]

**கொரிக்கடி** *kori-k-kaḍi*, பெ.(n.) எழுத்தாணிப்பூடு; a plant whose flower shoots up in the form of a style.

**மறுவ.** கொரிக்கம், கொரிக்கலம்.

[கூரி + செடி – கூரிச்சொடி → கொரிக்கடி.]

**கொரிக்கியம்** *korikkiyam*, பெ.(n.) கொழிஞ்சி; the orange tree.

**மறுவ.** கொமுஞ்சி.

[கொழிஞ்சி → கொரிக்கி → கொரிக்கியம்.]

பூவாது காய்க்கும் மரம்.

**கொரிக்கும்பல்** *korikkum-pal*, பெ.(n.) முன்பல்; incisor.

[கொரிக்கும் + பல்.]

**கொரிகா** *korigā*, பெ.(n.) கொடுக்காய்ப் புளி; Manilla tamarind.

[கொடுக்காய் → கொரிகா.]

**கொரிகை** *korigai*, பெ.(n.) ***கொரிக்கடி*** பார்க்க; see *kori-k-kaḍi*.

[கூரிச்செடி → கொரிகை.]

**கொரித்தலை** *kori-t-talai*, பெ.(n.) நிலவேம்பு; a medicinal plant.

[கொரி + தலை.]

**கொரிந்தை** *korindai*, பெ.(n.) 1. காட்டுத் கத்தரிச் செடி; hedge bringal sepiaria. 2. காட்டுக் கண்டங்கத்தரி; wild Indian (சா.அக.).

[கூரி → கொரி → கொரிந்தை.]

**கொரிவி** *korivi*, பெ.(n.) 1. கோரன்; a kind of shrub. 2. சுளுந்துக்கட்டை; torch for traveling made of dry sticks of the shrub *kōraṉ* (சா.அக.).

[கொளுவி → கொரிவி (கொ.வ.).]

**கொரு** *koru*, பெ.(n.) நகையுணர்வோடு குறை பேசுகை;redicule. கொருப்பேசுறதுலே ஒண்ணும் குறைச்சலில்லே (நெல்லை).

[குறை → கொரு (கொ.வ.).]

**கொருக்கந்தாங்கல்** *korukkan-tāṅgal*, பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanjipuram Dt.

[கோரக்கன் → கொருக்கன் + தாங்கல்.]

**கொருக்கலப்பை** *koru-k-kalappai*, பெ.(n.) மூன்று அல்லது நான்கு பற்கள் கொண்ட கலப்பை; a plough with three or four spikes.


கொருக்கலப்பை

[கூர் → கூரு → கொரு → கொரு + கலப்பை.]

ஒவ்வொரு பல்லும் 1 1/4 அல்லது 1 1/2 அடி இடைவெளி கொண்டது. இந்தக் கலப்பையை உழுது கொண்டு போகும் போதே, வித்துக் கொட்டானிலிருந்து பல்லுகளுக்குப் போய்ச்சேரும் குழாய் வழியாக விதைகள் விழும் அமைப்புக் கொண்டது. மாடுகளால் இழுக்கப்படுவது [பல் = கலப்பையின் உழுகிற நுனி].

**கொருக்கன்தண்டலம்** *korukkaṉ-taṇḍalam*, பெ.(n.) திருவள்ளுவர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tiruvalluvar Dt.

[கோரக்கன் → கொருக்கன் + தண்டலம்.]

**கொருக்காப்புளி** *korukkā-p-puḷi*, பெ.(n.) ***கொடுக்காய்ப்புளி*** பார்க்க; see *koḍu-k-kāy-p-puḷi*.

[கொடுக்காய் (வளைந்த காய்) → கொருக்காய் + புளி.]

**கொருக்கு** *korukku*, பெ.(n.) ***கொறுக்கு*** (M.L.) பார்க்க; see *koṟukku*.

[கொறுக்கு → கொருக்கு.]

**கொருக்கை**[1] *korukkai*, பெ.(n.) ஒருவகை மீன்; a kind of fish.

[குரக்கன் → கொரக்கன் → கொருக்கை.]

**கொருக்கை**[2] *korukkai*, பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kadalur Dt.

[கொருக்கு → கொருக்கை (புல் வகை).]

**கொருக்கைத்தோட்டம்** *korukkai-t-tōṭṭam*, பெ.(n.) தஞ்சை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tanjai Dt.

[கொருக்கை + தோட்டம்.]

**கொருடன்**[1] *koruḍaṉ*, பெ.(n.) கொவ்வைக் கொடி; hedge creeper.

[குருள் → கொருள் → கொருடன்.]

**கொருடன்**[2] *korudaṉ*, பெ.(n.) 1. கோவைக்கொடி; a hedge creeper. 2. கொல்லன்கோவை; a climbing shrub. 3. *காரை* பார்க்க; see *kārai*.

*[கொருடன்' → கொருடன்.]*

**கொருணர்வாசம்** *korunar-vāšam*, பெ.(n.) வெண்கருங்காலி; egg fruited ebony (சா.அக.).

*[குருள் → கொருண் → கொருணர் + வாசம்.]*

**கொருவாய்** *koruvāy*, பெ.(n.) பல் உடைந்து ஓட்டையாய் இருக்கை; row of teeth with one or more gaps. பானை விளிம்பு உடைந்து கொருவாயாய்ப் போகிறது (நெல்.வழ.).

*[ஒருவு : விலகியிருத்தல், இடைவெளி.ஒருவு → கொருவு.]*

**கொருவோடு** *koru-v-ōḍu*, பெ.(n.) தட்டோடு (சென்னை); flat tile.

*[கொரு (இடைவெளி) + ஓடு.]*

**கொல்**[1]**(லு)-தல்** *kol(l)u-*, 3 செ.கு.வி. (v.i.) 1. அலட்டல்; to tease, importune, annoy, perplex. 2. அழித்தல்; to destroy, exterminate, annihilate (இரு. நா.).

*[குல் → கொல் → கொல்(லு)-தல்.]*

**கொல்**[2]**(லு)-தல்** *kol(lu)-*, 8 செ.குன்றாவி. 1. உயிரைப் பறித்தல்; to kill, slay, murder. *"கொன்றன்ன வின்னா செயினும்" (குறள். 109).* 2. அழித்தல்; to destroy, ruin. *"கொன்றான்காண் புரமூன்றும்" (திருவாச. 12:16).* 3. பாழாக்குதல்; to fell, cut down. "மரங்கொஃ றச்சர்" (சிலப்.5:29). 5. கதிறுத்தல்; to reap, as the heads of grain. *'நெற்கதிரைக் கொன்று களத்திற் குவித்து' (தொல். பொருள். 76, உரை).* 6. துன்பப்படுத்துதல்; to afflict, tease. *"நின்னலங் காட்டி யெம்மைக்கொன் றாயென" (சீவக. 642).* 7. இதளியம் முதலியவற்றின் நச்சுத் தன்மையைக் கெடுத்தல்; to neutralize metallic properties by oxidation. 8. அலட்டல்; to tease.

**ம.** கொல்லுக; **க.** கொல்லு, கொலு, கொல்; **தெ.,குட.,பட.** கொல்லு **கோத.** கொல்; **து.** க்வல்ப்; **து.** கொலெ (கொலை) பிரா. கில்லிங்க் (அடித்தல்).

**Fin.** kallita (to hammer steel); **Kare.** kallita; **Mordvin.** kalgodo; **Q.** killai. **Dāhri.** kāti-ise; **Magar.** gnāp; **Manipuri.** hato-o; **Angami Naga.** Du-khiawe; **Nāmsāng naga.** Ri-kvāto. **Ar.** katala; **Georgian.** wklav(kl); **Jap.** korosū, koroshi. **Basq.** criotu, criokatu; **E.** kill **Mod.** killen, cullen; **OHG.** chollen, **OE.** cwellan. **Semitic. Ar.** katala.

*[குல் → கொல் → கொல்லு-தல்.]*

kol, to kill. comp. Russian kolyu, to stab; and especially the English kill and quell (C.G.D.F.L.593).

**கொல்**[3] *kol*, பெ.(n.) 1. கொலைத்தொழில்; act of killing, murdering. *"கொல்லார் மழுவாட் படையாய்" (தேவா. 966:1.).* 2. வருத்தம் (சூடா.); affliction. 3. கொற்றொழில்; working in iron. 4. கொல்லன்; blacksmith. 5. பூட்டு (பிங்.); lock. 6. கதவு முதலியவற்றில் தைக்கும் இரும்பு முதலியவற்றா லாகிய பட்டை (இ.வ.); brass or iron bar nailed across a door or gate.

*[குல் → கொல்.]*

**கொல்**[4] *kol*, இடை.(int.) 1. ஐயப்பொருளில் வரும் ஒரு வியப்பிடைச்சொல் ; an affix implying doubt. *"யாதுகொன் மற்றிவ் வேந்தல் பணி" (பெருங். உஞ்சைக். 34:70).* 2. பெரும்பாலும் செய்யுளில் வரும் ஓர் அசைநிலை (நன். 435.); an expletive, chiefly in poetry.

**Fin.** ko (interrogative derivative); **Kare.** ko, go; **Est.** kas; **Jap.** ka; **Q.** cu (negative interrogative enclic).

*[குல் → கொல்.]*

**கொல்**[5] *kol*, பெ.(n.) 1. இரும்பு; iron. "மின்வெள்ளி *பொன் கொல்லெனச் சொல்லும்" (தக்கயாகப். 550).* 2. மாழை (உலோகம்) (நாமதீப.318); metal.

*[கொல் : தட்டி வடிமைத்தல். கொல்' → கொல்[5].]*

**கொல்**[6] *kol*, பெ.(n.) ஒலிக்குறிப்புச் சொல்; onom.expression.

*[குல் → கொல்.]*

**கொல்குறும்பு** *kol-kurumbu*, பெ.(n.) பாலை நிலத்தூர் (கொல்லும் வேடர் நிறைந்த சிற்றூர்) (இறை.1:18.); village in a desert tract, as inhabited by murderous tribes of hunters.

*[கொல் + குறும்பு.]*

**கொல்சட்டம்** *kol-caṭṭam*, பெ.(n.) தேர்ச்சக்கரத் தின் வெளிப்பகுதிச் சட்ட அமைப்பு (கட்.தொ.); the outer frame part of a car wheel.

*[கொல் + சட்டம்.]*

**கொல்லங்கொண்டபாண்டியன்** *kollaṅ-konda-pāndiyaṉ*, பெ.(n.) கி.பி. 1274இல் சேரநாட்டின்மீது

படையெடுத்த குலசேகரபாண்டியனின் மறுபெயர்; another name of *Kulašēgara-Pāṇḍiyaṉ* since he conquered Kollam.

*[கொல்லம் + கொண்ட + பாண்டியன்.]*

**கொல்லங்கொவ்வை** *kollaṅ-kovvai,* பெ.(n.) கொடிவகை (பதார்த்த. 346.); a climbing shrub.

*[கொல்லம் + கொவ்வை.]*

**கொல்லங்கோடு** *kollaṅ-kōḍu,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[கொல்லன் + கோடு.]*

**கொல்லச்சேரி** *kolla-c-cēri,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanjipuram Dt.

*[கொல்லன் + சேரி.]*

**கொல்லச்சேவகன்** *kolla-c-cēvagaṉ,* பெ.(n.) கருவூலத்தில் பணிபுரியும் நம்பிக்கையான வேலையாள்; a trustworthy employee in treasury.

*[கொல்லம் + சேவகன்.]*

**கொல்லத்தங்குறிச்சி** *kollattaṅ-kuṟicci,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kadalur Dt.

*[கொல்லத்தன் + குறிச்சி.]*

**கொல்லப்பட்டறை** *kolla-p-paṭṭaṟai,* பெ.(n.) கொல்லன் உலைக்கூடம்; blacksmith's workshop.

*[கொல்லன் + பட்டறை.]*

**கொல்லப்பட்டி** *kolla-p-paṭṭi,* பெ.(n.) திண்டுக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dhindukkal Dt.

*[கொல்லன் + பட்டி.]*

**கொல்லப்பாக்கம்** *kolla-p-pākkam,* பெ.(n.) ***கொல்லர்பாக்கம்*** பார்க்க; see *kollar-pākkam.*

*[கொல்லர் + பாக்கம்.]*

**கொல்லம்** *kollam,* பெ.(n.) 1. கடல் கொண்டதாகக் கருதும் தென்றமிழ் நாடுகளுள் ஒன்று; an ancient division of Tamil land believed to have been submerged under sea. "*குமரி கொல்ல முதலிய பன்மலை நாடும்*" *(சிலப். 8:1. உரை).* 2. சேர நாட்டிலுள்ள ஒரு கடற்கரைப் பட்டினம்; a town on the west-coast in Kerala. 3. ***கொல்லமாண்டு*** (T.A.S. IV. 9.) பார்க்க; see *kollam-āṇḍu.*

*[கொல் - நீறூற்று. கொல் → கொல்லம்.]*

**கொல்லம்பாகல்** *kollam-bāgal,* பெ.(n.) ஒருவகைப் பாகல்; a kind of bitter-gourd.

*[கொல்லம் + பாகல்.]*

**கொல்லமருது** *kolla-marudu,* பெ.(n.) கருப்பு மருது; black marudhu (சா.அக.).

*[கொல்லம் + மருது.]*

**கொல்லமா** *kolla-mā,* பெ.(n.) 1. ***கொட்டை முந்திரி*** பார்க்க; see *koṭṭai-mundiri.* 2. ***ஆனைக் குரு*** (L.) பார்க்க; see *āṉai-k-kuru.*

ம. கொல்லமாவு.

*[கொல்லம் + மா.]*

**கொல்லமாண்டு** *kollam-āṇḍu,* பெ.(n.) கி.பி.824ஆம் ஆண்டு தொடங்கித் தென்தமிழ் நாட்டிலும் கேரளத்திலும் வழங்கும் ஆண்டுமானக் கணக்கு; Kollam era which commenced in 824 A.D.

ம. கொல்லம்.

*[கொல்லம் + ஆண்டு.]*

**கொல்லமிளகு** *kolla-miḷagu,* பெ.(n.) 1. மேற்கத்தி மிளகாய்; chilly from the west coast. 2. கொல்லத்தில் விளையும் மிளகு; pepper grown in Kollam (சா.அக.).

ம. கொல்லமுளகு.

*[கொல்லம் + மிளகு.]*

**கொல்லர்** *kollar,* பெ.(n.) அரண்மனை வாயில் காப்போர்; watchmen at the entrance-gate of a palace. "*கொல்லரெனை யாரென்றா ரப்பாநான் வித்துவா னென்று சொன்னேன்*" *(விறலிவிடு. 1035).*

ம. கொல்லர்.

*[கொல் - இடுப்பு, படைக்கலன்; கொல் → கொல்லர்.]*

**கொல்லர்பாக்கம்** *kollar-pākkam,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்தில் அமைந்துள்ள ஒரு ஊர்; a village situated in Kanjipuram Dt.

*[கொல்லர் + பாக்கம்.]*

கொல்லுத்தொழில் செய்வோர் பெரும்பான்மையினராக வாழ்ந்தமையால் இப் பெயர் அமைந்ததாகலாம்.

**கொல்லலகுப்பம்** *kollala-kuppam,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village Tiruvallur Dt.

*[கோவாளர் (ஆயர்) > தெ. கொல்லலு + குப்பம். கொல்லலுகுப்பம் →கொல்லலகுப்பம் (ஆயர் குப்பம்).]*

**கொல்லற்றுக்காரன்** *kollarru-k-kāraṉ,* பெ.(n.) கொத்தன் (C.E.M.); brick-layer, mason.

*[கொல் → கொலுவு → கொலுத்துக்காரன் → கொல்லத்துக்காரன் → கொல்லற்றுக்காரன்.]*

**கொல்லற்றுவேலை** *kollarru-vēlai,* பெ.(n.) கொத்துவேலை; masonry.

*[கொல்லற்று + வேலை – கொல்லற்றுவேலை.]*

**கொல்லறு** *kollaṟu,* பெ.(n.) கொத்தன் கரண்டி (C.E.M.); mason's trowel.

**மறுவ.** கொல்லுறு.

*[கொல் - கொத்துதல்; கொல்லுறு → கொல்லறு.]*

**கொல்லன்**[1] *kollaṉ,* பெ.(n.) 1. கருமான்; blacksmith. *"மென்றோன் மிதியுலைக் கொல்லன்" (பெரும்பாண். 207).* கொல்லன் தெருவிலே ஊசி விற்கிறதா? (பழ). 2. தச்சன்; carpenter. 3. கம்மியன்; blacksmith (மு.தா. 213). கொல்லத் தெருவில் ஊசி விற்றாற் போல (பழ.)

**ம.** கொல்லன்; **பட.** கொல்ல; **கோத.** கொலெல்; **துட.** க்வலல்; **குட.** கொல்லெ.

*[கொல் → கொல்லன்.]*

**கொல்லன்**[2] *kollaṉ,* பெ.(n.) கருவூலக்காரன் (P.T.L.); custodian of treasury (மு.தா. 213).

**தெ.** கொல்லா.

*[கொல் → கொல்லன்.]*

**கொல்லன்ஏந்தல்** *kollaṉ-ēndal,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanadhapuram Dt.

*[கொல்லன் + ஏந்தல் (ஏரி).]*

**கொல்லன்கிட்டம்** *kollaṉ-kiṭṭam,* பெ.(n.) இருப்புக்கிட்டம்; iron dross (சா.அக.).

*[கொல்லன் + கிட்டம்.]*

**கொல்லன்குதம்பை** *kollaṉ-kudambai,* பெ.(n.) பலாமி; an unknown plant (சா.அக.).

*[கொல்லன் + குதம்பை.]*

**கொல்லன்குளம்** *kollaṉ-kuḷam,* பெ.(n.) மதுரை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Madurai Dt.

*[கொல்லன் + குளம்.]*

**கொல்லன்கூதகம்** *kollaṉ-kūdagam,* பெ.(n.) பல்லிப்பூடு; lizard plant.

*[கொல்லன் + கூதகம்.]*

**கொல்லன்கோவை** *kollaṉ-kōvai,* பெ.(n.) 1. ***கொல்லங்கொவ்வை*** பார்க்க; see *kollaṅ-kovvai.* 2. ***காக்கணம்*** பார்க்க; see *kākkaṇam* (மு.தா. 213).

*[கொல்லன் + கோவை.]*

**கொல்லன்சேரி** *kollaṉ-cēri,* பெ.(n.) ***கொல்லர் பாக்கம்*** பார்க்க; see *kollar-pākkam.*

*[கொல்லன் + சேரி.]*

**கொல்லன்பகை** *kollaṉ-pagai,* பெ.(n.) அஞ்சன வைப்புநஞ்சு (மூ.அக.); a mineral poison.

*[கொல்லன் + பகை.]*

**கொல்லன்பட்டடை** *kollaṉ-paṭṭaḍai,* பெ.(n.) அடைகல் (C.G.); anvil.

*[கொல்லன் + பட்டடை.]*

**கொல்லன்பட்டரை** *kollaṉ-paṭṭarai,* பெ.(n.) ***கொல்லன்பட்டறை*** பார்க்க; see *kollaṉ-paṭṭaṟai.*

*[கொல்லன் + பட்டறை.]*

**கொல்லன்பட்டறை** *kollaṉ-paṭṭaṟai,* பெ.(n.) கொல்லன் உலைக்களம்; smithy.

**மறுவ.** கொல்லனுலை.

*[கொல்லன் + (பட்டடை) பட்டறை. பட்டடை உள்ள இடம்.]*

**கொல்லன்விளை** *kollaṉ-viḷai,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[கொல்லன் + விளை.]*

**கொல்லனுலை** *kollāṉulai,* பெ.(n.) கொல்லனின் உலைக்களம்; blacksmith's worshop, smithy.

*[கொல்லன் + உலை.]*

**கொல்லா** *kollā,* பெ.(n.) கருவூலத்திற் பணியாற்றும் நம்பிக்கையான வேலையாள் (இ.வ.); a trust-worthy employee in public treasuries.

**ம.** கொல்லர்; **தெ.** கொல்லா.

*[கொல்லன்[2] → கொல்லா (கொ.வ.).]*

**கொல்லாக்கொலை** *kollā-k-kolai,* பெ.(n.) வதைத்தல் (இ.வ.); torture.

**ம.** கொல்லாக்கொல.

*[கொல் + ஆ + கொலை. ஆ - எதிர்மறை இடைநிலை.]*

**கொல்லாகிகம்** *kollāgigam*, பெ.(n.) செம்முள்ளி; yellow nail dye (சா.அக.).

*[கொல்லங்கோவை → கொல்லங்கோகி → கொல்லலாகிகம் (கொ.வ.).]*

**கொல்லாநோன்பியர்** *kollā-nōṉbiyar*, பெ.(n.) 1. கொல்லாமையை நோன்பாக உடையவர்; those who have vowed to abstain from killing. "கொல்லா விரதியர் நேர்நின்ற முக்கட் குருமணியே" (தாயு.பாயப்புலி நூல், 22). 2. சமணர்; Jains.

*[கொல்லா + நோன்பியர்.]*

**கொல்லாநோன்பு** *kollā-nōṉbu*, பெ.(n.) உயிர் களைக் கொல்லாமையாகிய வொழுக்கம்; vow of abstaining from killing. "கொல்லா விரதங் குவலயமெல் லாம்ஓங்க" (தாயு.பராபர.54.).

*[கொல்லா + நோன்பு.]*

**கொல்லாப்பண்டி** *kollā-p-paṇḍi*, பெ.(n.) உயர் நிலையிலுள்ளோர் ஏறிச்செல்லும் பண்டைக் காலத்துத் தேர்; a car like vehicle drawn by bullocks, used in ancient times by persons of rank.

*[கொல்லி (வளைந்த மேற்கூண்டு) கொல்லா + பண்டி (வண்டி, தேர்).]*

**கொல்லாமறை** *kollā-maṟai*, பெ.(n.) கொல்லா மையை வற்புறுத்தும் சமண மதநூல் (வின்.); Jain scriptures, as enjoining abstinence from killing.

*[கொல் + ஆ + மறை.]*

**கொல்லாமை** *kollāmai*, பெ.(n.) உயிர்க்கொலை செய்யாமை (குறள். அதி.26); abstinence from killing, as a virtue.

*[கொல் + ஆ + மை.]*

**கொல்லாவண்டி** *kollā-vaṇḍi*, பெ.(n.) ***கொல்லாப்பண்டி*** பார்க்க; see *kollā-p-paṇḍi*. 'உருவுதிரையையுடைய கொல்லா வண்டி' (சீவக. 858, உரை.).

*[கொல்லி (வளைந்தமேற்கூண்டு) → கொல்லா + வண்டி.]*

**கொல்லாவேதம்** *kollā-vēdam*, பெ.(n.) ***கொல்லாமறை*** பார்க்க; see *kollā-maṟai*.

*[கொல் + ஆ + வேதம்.]*

**கொல்லாவேதன்** *kollā-vēdan*, பெ.(n.) கொல்லாவேதத்தை அருளிச் செய்தவனாகிய அருகன் (சூடா); Arhat, as the author of *kollā vēdam.*

*[கொல் + ஆ + வேதன்.]*

**கொல்லி**[1] *kolli*, பெ.(n.) 1. நெருப்பு; fire. 2. ஆட்கொல்லி; gold. 3. உயிரைக் கொல்லும் பூடு; plant which kills an animal. 4. செய்நஞ்சு; poison. 5. கொல்லும் தன்மையது; anything of a destructive nature. 6. மொழியிறுதியில் பல பூண்டின் பெயர்களைக் குறிக்கும் சொல்; a second term, it occurs in the names of different plants (சா.அக.).

*[கொல் → கொல்லி.]*

**கொல்லி**[2] *kolli*, பெ.(n.) 1. கொல்லு–பவன்–பவள்–வது; that which kills. *"சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி" (குறள். 306).* 2. கொல்லிப் பாவை; killing figure of a lady by her beauty.

*[கொல் → கொல்லி (வினையாலணையும் பெயர்).]*

**கொல்லி**[3] *kolli*, பெ.(n.) நீரூற்று; fountain.

*[குல் → கொல் → கொல்லி.]*

**கொல்லி**[4] *kolli*, பெ.(n.) வளைவு; curve, bend.

*[குல் → கொல் → கொல்லி.]*

**கொல்லி**[5] *kolli*, பெ.(n.) 1. திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ள ஒரு மலை; range of hills in Tiruciráppaḷḷi Dt. *"கொல்லி யாண்ட வல்வி லோரியும்" (புறநா. 58:5).* 2. மருதயாழ்த் திறவகை (பிங்.); an ancient secondary melody-type of the marudam class. 3. ***கொல்லிப்பாவை*** பார்க்க; see *kolli-p-pāvai.* *"வகையமை கொல்லியின் வசையறத் துடைத்து" (பெருங். இலாவாண. 4:185)*

*[கொல் → கொல்லி.]*

**கொல்லி**[6] *kolli*, பெ.(n.) 1. மலையிடுக்கு, பள்ளத்தாக்கு; a gorge, dale, valley. 2. மூலை; nook, corner, a torraten corner. 3. வேளாளர் பாடும் ஒருவகை இசை; a kind of melody sung by farmers.

**ம.** கொல்லி; **க.** கொல்லி (மூலை, வளைவு); **குட.** கொல்லி, **து.** கொல்லி (பாறையில் வளைந்து செல்லும் ஓடை).

*[குல் (வளைவு) → கொல் → கொல்லி.]*

**கொல்லிக்கிழங்கு** *kolli-k-kiḻaṅgu*, பெ.(n.) கலப்பைக் கிழங்கு; plough root (சா.அக.).

**மறுவ.** காந்தட்கிழங்கு, கார்த்திகைக் கிழங்கு.

*[கொல்லி (வளைவு) + கிழங்கு.]*

இதனைச் சாப்பிட்டால் உயிரைக் கொல்லும். இதனால் இப்பெயர் பெற்றது.

**கொல்லிக்கூற்றம்** *kolli-k-kūṟṟam,* பெ.(n.) ***கொல்லிமலை*** பார்க்க; see *kolli-malai.*

*[கொல்லி + கூற்றம்.]*

**கொல்லிக் கௌவாணம்** *kolli-k-kauvāṇam,* பெ.(n.) முற்காலத்து வழங்கிய ஒருவகைச் சிறுபண் (திவா.); an ancient secondary melody-type.

*[கொல்லி + கௌவாணம்.]*

**கொல்லிகம்** *kolligam,* பெ.(n.) ***ஆற்று முள்ளங்கி*** பார்க்க; see *āṟṟu-muḷḷaṅgi.*

*[கொல்லி → கொல்லிகம்.]*

**கொல்லிச்சி** *kollicci,* பெ.(n.) கொல்லர்குடிப் பெண் (யாழ்.அக.); woman of the blacksmith caste.

*[கொல்லி → கொல்லித்தி → கொல்லிச்சி.]*

**கொல்லிச்சிலம்பன்** *kolli-c-cilambaṉ,* பெ.(n.) கொல்லிமலைத் தலைவனாகிய சேரன் (திவா.); lit. lord of the Kolli hills, Cēra King.

*[கொல்லி + சிலம்பன்.]*

**கொல்லிட்டுப்போ-தல்** *kolliṭṭu-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) ஒலியடங்குதல் (இ.வ.); to be struck dumb; to be calm and silent.

*[கொல் (வளைவு, சாய்வு, அடக்கம்) + இட்டு + போ-.]*

**கொல்லித்திறம்** *kolli-t-tiṟam,* பெ.(n.) முற்காலத்து வழங்கிய பண்வகை; an ancient secondary melody-type.

*[கொல்லி + திறம்.]*

**கொல்லுப்பணி** *kollu-p-paṇi,* பெ.(n.) கொல்லுத் தொழில் ; the job of blacksmith.

ம. கொல்லுப்பணி.

*[கொல் → கொல்லு + பணி.]*

**கொல்லிப்பாவை** *kolli-p-pāvai,* பெ.(n.) கொல்லி மலையில் தேவரால் நிறுவப்பட்டு நோக்குவோரைத் தன்வயப்படுத்தும் அணங்கு (மோகினி)ப் படிமம் (சிலப். 6: 61, உரை); woman-shaped statue in the Kolli-hills believed to have been carved by the celestials and to have the power of fascinating all those who look at it.

*[கொல்லி + பாவை.]*

**கொல்லிமலை** *kolli-malai,* பெ.(n.) சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டத்திலுள்ள குன்றுத்தொடரில் அமைந்துள்ள ஓர் ஊர்; a village situated at hills in Salem Dt. *"கொத்தீட் டியபுதுப் பூத்தேனும் ஊறும் குறிஞ்சியின் தேன்வைத் தீட்டிய கொல்லி மாமலை யுங்கொங்கு மண்டலமே" (கொங்கு மண்டல சதகம்).*

*[கொல்லி (நீரூற்று) + மலை.]*

**கொல்லிமலைக்கிச்சிலி** *kolli-malai-k-kiccili,* பெ.(n.) கொல்லிமலையின்மேல் விளையும் கிச்சிலிப்பழம்; orange (சா.அக.).

*[கொல்லி + மலை + கிச்சிலி.]*

**கொல்லிமழவன்** *kolli-maḻavaṉ,* பெ.(n.) கொல்லி மலையை யாண்ட அரசருள் ஒருவர்; name of a king who ruled th hill Kollimalai.

*[கொல்லி + மழவன்.]*

**கொல்லியங்குணம்** *kolliyaṅ-guṇam,* பெ.(n.) தென்னார்க்காட்டு மாவட்டம் திண்டிவனம் வட்டம் மயிலத்திற்குப் பக்கத்தில் அமைந்துள்ள ஓர் ஊர்; a village situated near Mayilam at Tindivanam taluk in Villupuram Dt.

*[கொல்லி + அம் + குணம்.]*

மயிலை மலைக்குரிய மறுவடிவப் பெயரான கொல்லியங் குன்றம் என்பதே நாளடைவில் கொல்லியங் குணம் என வழங்குவதாயிற்று.

**கொல்லிருப்பு** *kolliruppu,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kadalur Dt.

*[கொல்லன் + இருப்பு - கொல்லனிருப்பு → கொல்லிருப்பு.]*

**கொல்லிவராடி** *kolli-varāḍi,* பெ.(n.) பாலையாழ்த்திற வகை (பிங்.); an ancient secondary melody-type of the *Pālai class.*

*[கொல்லி + (வராளி) வராடி.]*

**கொல்லிவாள்** *kolli-vāḷ,* பெ.(n.) தேய்ந்த வாள்; wornout and hence useless sword.

ம. கொல்லிவாள்.

*[கொல்லி (வளைவு, மழுக்கம்) + வாள்.]*

**கொல்லிவெற்பன்** *kolli-veṟpaṉ,* பெ.(n.) ***கொல்லிச்சிலம்பன்*** (சூடா.) பார்க்க; see *kolli-c-cilambaṉ.*

*[கொல்லி + வெற்பன்.]*

**கொல்லுக்கொலை** *kollu-k-kolai,* பெ.(n.) கொடுங்கொலை; reduplication of கொலை; brutal murder. அவன் கொல்லுக் கொலைக்கு அஞ்சாதவன் (கொ.வ.).

*[கொல்லு + கொலை.]*

**கொல்லுத்தடி** *kollu-t-tadi,* பெ.(n.) கதவுச்சட்டம்; door frame (கட். தொ.).

*[கொல்லு + தடி.]*

**கொல்லுத்தடியாணி** *kollu-t-tadi-y-āṇi,* பெ.(n.) கதவில் தைக்கும் ஆணிவகை (வின்.); large nail for studding doors or gates to add to their strength.

*[கொல்லு + தடி + ஆணி.]*

**கொல்லுத்தொழில்** *kollu-t-toḻil,* பெ.(n.) ***கொல்லுப்பணி*** பார்க்க; see *kollu-p-paṇi.*

ம. கொல்லிவாள்.

*[கொல்லு + தொழில்.]*

**கொல்லுப்பட்டறை** *kollu-p-paṭṭaṟai,* பெ.(n.) ***கொல்லன்பட்டறை*** பார்க்க; see *kollaṉ-paṭṭaṟai.*

*[கொல்லு + பட்டறை.]*

**கொல்லுப்பணி** *kollu-p-paṇi,* பெ.(n.) இரும்புக் கருவிகள் செய்யும் தொழில்; the work of a black smith.

*[கொல் : அடித்தல், சம்மட்டியால் அடித்தல். கொல் → கொல்லு கொல்லு + பணி.]*

**கொல்லுப்பலகை** *kollu-p-palagai,* பெ.(n.) மண் தாங்கிப் பலகை; a board which supports the wall over a door, window (கட்.தொ.).

*[கொல்லு + பலகை.]*

**கொல்லுமருந்து** *kollu-marundu,* பெ.(n.) உயிரைக் கொல்லும் மருந்து; medicinal agents causing death (சா.அக.).

*[கொல்லும் + மருந்து.]*

**கொல்லுமூலி** *kollu-mūli,* பெ.(n.) உயிரைக் கொல்லும் மூலிகை; any herb capable of causing death (சா.அக.).

*[கொல்லும் + மூலி.]*

**கொல்லுலை** *kol-l-ulai,* பெ.(n.) கொல்லனுலை; black-smith's forge. *"கொல்லுலைக் கூடத்தி னால்"* (குமர. பிர. நீதிநெறி. 14).

*[கொல் + உலை.]*

**கொல்லூர்** *kollūr,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt

*[கொல் (புதிய) + ஊர்.]*

**கொல்லெனல்** *kol-l-eṉal,* பெ.(n.) 1. ஓர் ஒலிக்குறிப்பு (பிங்.); an imitative sound. 2. ஒலி யடங்குதல் குறிப்பு (இ.வ.); expr. denoting perfect calm.

*[கொல் + எனல்.]*

*உல் → உலம்பு. உலம்புதல் : அலப்புதல். உலம்பு → அலம்பு. அலம்புதல் : ஒலித்தல். உல் → ஒல் (ஒல்லெனல்) : ஒலிக்குறிப்பு ஒல் → ஒலி. உல் → ஒல் : ஒலி, தாலாட்டு. ஒலாட்டு : தாலாட்டு. ஒல் → ஒலம் : ஒலி, ஒசை, கூவிளி உல் → குல் → குலை → குரை : ஒலி, ஆரவாரம். "நுரைத்தலைக் குரைப்புனல்" (பொருந. 240). "குவவுக் குரையிருக்கை" (பதிற்றுப். 84: 20). குல் → கொல் (கொல்லெனல்) : ஒலிக் குறிப்பு.*

**கொல்லேறுகோடல்** *kollēṟu-kōdal,* பெ.(n.) ஏறு தழுவல்; capture of the bull at large as a proof of bravery, by a man seeking in marriage the hand of a woman, a custom among herdsmen in ancient times.

மறுவ. ஏறுகோள், ஏறுதழுவல், மஞ்சு விரட்டு, சல்லிக்கட்டு.


கொல்லேறு கோடல்

*[கொல்லேறு + கோடல்.]*

பண்டைக் காலத்தில் முல்லை நிலத்திலிருந்த ஆயரிடை, ஏறு தழுவி மணப்பதே குலமரபாக இருந்து வந்தது. ஓர் ஆயர்பாடியில் அல்லது சேரியில், ஒரு பெண் குழந்தை பிறந்தவுடன் அதன் பெயருக்கு ஒரு சேங்கன்றைப் பெற்றோர் ஒதுக்கிவைப்பர். அக் கன்றைக் காயடியாமலும், வேலையில் வயக்காமலும், கொழுத்த ஊட்டங் கொடுத்துக் கொம்பு சீவிக் கூராக்குவர். ஆண்டுதோறும், குறித்த நன்னாளில், மணப்பருவமடைந்த மங்கையர்க்குரிய காளைகளையெல்லாம் ஒரு தொழுவத்தில் அடைத்து வைத்து, ஒவ்வொன்றாகத் திறந்து விடுவர். மக்கள் ஆரவாரத்தையும் ஏறுகோட்பறை முழக்கத்தையும் கண்டும் கேட்டும், மருண்டோடும். ஒவ்வொரு கொல்லேற்றையும், மாணியரான ஆய இளைஞர் பிடித்து

அடக்கி முயல்வர். பலர் கொல்லேறுகளால் குத்திக் கொல்லப் படுவது முண்டு. ஒரு கொல்லேற்றை எவன் பிடித்தடக்கி நிறுத்துகின்றானோ அவன் அவ் ஏற்றிற்குரிய ஆய மகளை மணப்பான். இம் மணமுறை, கலித்தொகை என்னும் சங்க நூலில், முல்லைக் கலியில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. வட நாட்டிற் கண்ணன் ஏழ் ஏறுதழுவி நப்பின்னையை மணந்தது இத் தமிழ் மரபே.

ஏறு தழுவல் என்னும் பண்டை வழக்கமே, இன்று கள்ளர் மறவரிடைச் 'சல்லிக்கட்டு' என்றும் ' மஞ்சுவிரட்டு' என்றும் வழங்கி வருகின்றது [தமிழர் திருமணம் பக்.19,20].

**கொல்லை**[1] *kollai,* பெ.(n.) 1. முல்லைநிலம்; sylvan tract. *"கொல்லை பயின்று வல்லை யோங்கிய" (பெருங். உஞ்சைக். 49:110).* 2. புன்செய் நிலம் (திவா.); dry land. 3. புறம்போக்கு (தரிசு) (அகநா. 89, உரை); uncultivated land. 4. தோட்டம் (கொ.வ.); enclosed garden, grove. 5. புழைக்கடை; backyard, open space behind and attached to a house. 6. மலங்கழிக்குமிடம்; latrine. 7. மலம்; stool. குழந்தைக்குக் கொல்லை எப்படிப் போகிறது? (இ.வ.).

மறுவ. புறக்கடை, பூந்தோட்டம், புழக்கடை, கொல்லை நிலம்.

*[குல் → கொல் → கொல்லை.]*

**கொல்லை**[2] *kollai,* பெ.(n.) வரம்பு கடந்து ஒழுகுபவ-ன்-ள்; one who transgresses conventional bounds. *"கொல்லை யென்பர்கொலோ குணமிக்கன ளென்பர்கொலோ" (திவ். திருவாய். 6:7:4).*

*[குல் → கொல் → கொல்லை.]*

**கொல்லை**[3] *kollai,* பெ.(n.) திருவண்ணாமலை மாவட்டம் போளூர் வட்டத்திலுள்ள பல்லக் கொல்லை என்னும் ஊரின் முன்னாட்பெயர்; old name of the village Pallakkollai in Tiruvannamalai Dt.

*[கொல் → கொல்லை.]*

**கொல்லைக்காடு** *kollai-k-kāḍu,* பெ.(n.) புறம்போக்கு நிலம்; uncultivated land. சூதன் கொல்லையிலே மாடு மேயும் (பழ). கொல்லைக் காட்டு நரி பல்லைக் காட்டினதுபோல (பழ).

*[கொல்லை + காடு.]*

**கொல்லைக்காரன்** *kollai-k-kāraṉ,* பெ.(n.) 1. தோட்டம் வயல் முதலியவற்றில் வேலை செய்பவன் (பஞ்சதந்.); gardener, farmer, cultivator. 2. குப்பையெடுப்பவன் (உ.வ.); scavenger.

*[கொல்லை + காரன்.]*

**கொல்லைக்கிருத்தல்** *kollaikkiruttal,* பெ.(n.) ***கொல்லைக்குப்போ-தல்*** பார்க்க; see *kollaikku-p-pō-.*

*[கொல்லைக்கு + இருத்தல்.]*

**கொல்லைக்கீரை** *kollai-k-kīrai,* பெ.(n.) 1. ***குப்பைக் கீரை*** பார்க்க; see *kuppai-k-kīrai.* 2. கொல்லையில் விளையும் கீரை; greens grown in backyard of houses (சா.அக.).

*[கொல்லை + கீரை.]*

**கொல்லைக்குப்பல்லி** *kollaikku-p-palli,* பெ.(n.) ***கொல்லைப்பல்லி*** பார்க்க; see *kollai-p-palli* (சா.அக.).

*[கொல்லைக்கு + பல்லி.]*

**கொல்லைக்குப்போ-தல்** *kollaikku-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) 1. மலங்கழித்தல்; lit., to go to backyard. 2. கொல்லைப்புறஞ் செல்லுதல்; to go to stool. குழந்தை கொல்லைக்குப் போய்விட்டது (உ.வ.).

மறுவ. கொல்லைப்புறஞ் செல்லுதல், கொல்லைக் கிருத்தல்.

*[கொல்லை + கு + போ-.]*

**கொல்லைக்கோவை** *kollai-k-kōvai,* பெ.(n.) ***கொல்லன்கோவை*** பார்க்க; see *kollaṉ-kōvai* (சா.அக.).

*[கொல்லை → கொல்லன் + கோவை.]*

**கொல்லைத்தறை** *kollai-t-taṟai,* பெ.(n.) புதர்கள் நிறைந்த மேட்டுநிலம்; highland waste. *"இந்நாற் பேர் எல்லைக்கு நடுவுபட்ட கொல்லைத்தறை காடுவெட்டிக் கட்டை பறித்து மேடும் பள்ளமும் திருத்தி நீர் நிலமாக" (SII. VII. 97-13 p.40).*

*[கொல்லை + (தரை) தறை.]*

**கொல்லைப்பயறு** *kollai-p-payaṟu,* பெ.(n.) காட்டுக்கொள், வயற்பயறு (M.M. 329.); wild horse-gram, a climber.

*[கொல்லை + பயறு.]*

**கொல்லைப்பயிர்** *kollai-p-payir,* பெ.(n.) கொள், மொச்சை முதலிய மேட்டுநிலப் புன்செய்ப் பயிர்; grains of dryland such as gram, country bean etc. (சா.அக.).

*[கொல்லை + பயறு.]*

**கொல்லைப்பல்லி** *kollai-p-palli,* பெ.(n.) குடியோட்டிப் பூடு; lizard plant (சா.அக.).

மறுவ. நின்றிடத் தீய்ஞ்சான்.

*[கொல்லை + பல்லி.]*

[இது மந்திரவித்தை செய்யப் பயன்படும் மூலிகை என்பர்.]

**கொல்லைப்புறம்** *kollai-p-puṟam,* பெ.(n.) ***கொல்லை***[1] பார்க்க; see *kollai.*

*[கொல்லை + புறம்.]*

**கொல்லைப்புறவழி** *kollai-p-puṟa-vaḻi,* பெ.(n.) நேர்மையற்ற வழி; unfair means; back door.

*[கொல்லை + புறம் + வழி.]*

**கொல்லைப் பொன்வரி** *kollai-p-poṉ-vari,* பெ.(n.) பொன்வேலை செய்யும் தொழில்வழிக் கிடைக்கும் வருவாய்; revenue through goldsmith. "நரசிங்கராயபுரத்தில் வாசல்வழி தறிக்கடமை நெற்கடமையிலும் கொல்லை பொன்வரியிலும் சந்தை மகிமை குத்தகையிலும் இந்த ஊரை நோக்கி வரும் சகல ஆதாயத்திலும்" (திருப்.கல்.தொ.2, கல்.133–11).

*[கொல்லை + பொன் + வரி.]*

**கொல்லைமுதிரை** *kollai-mudirai,* பெ.(n.) கோதுமை; wheat (சா.அக.).

*[கொல்லை + முதிரை.]*

**கொல்லைமை**[1] *kollai-mai,* பெ.(n.) 1. கொல்லைப் பல்லிப்பூண்டைக் கொண்டு செய்யும் ஒரு மந்திர வித்தை மை; a magic done with an herbal ointment. 2. ***கொல்லைப் பல்லி*** பார்க்க; see *kollai-p-palli* (சா.அக.).

*[கொல்லை + மை.]*

**கொல்லைமை**[2] *kollai-mai,* பெ.(n.) வரம்பழிந்து ஒழுகுகை; act of transgressing or violating conventional bounds. *"ஆய்ச்சியர் தம்மொடுங் கொல்லைமை செய்து" (திவ்.திருவாய்.4:2:2).*

*[கொல்லை + மை.]*

**கொல்லைவிளைவி-த்தல்** *kollai-viḷaivi-,* பி.வி. (caus.v.) தோட்டம் பயிரிடுதல் (யாழ்ப்.); to cultivate a garden.

*[கொல்லை + விளைவி–.]*

**கொல்லைவெளி** *kollai-veḷi,* பெ.(n.) வயல்வெளி (இ.வ.); open uncultivated plots.

*[கொல்லை + வெளி.]*

**கொல்வாத்துவிக்கி** *kolvāttu-vikki,* பெ.(n.) ***ஆனைவணங்கி*** பார்க்க; see *āṉai-vaṇaṅgi.*

*[கொல் + (வாட்டு) வாத்து + விக்கி.]*

**கொலரி** *kolari,* பெ.(n.) சீரில்லாமல் விட்டுவிட்டு அடிக்கும் காற்று; disrupted flow of air.

*[கொலரி + காத்து (கொ.வ.) அரி = காற்று.]*

**கொலாமி** *kolāmi,* பெ.(n.) திருந்தாத் திராவிட மொழிகளுள் ஒன்று; one of the uncultivated languages of Dravidian family.

*[குலம் → குலமி → கொலாமி.]*

**கொலிப்பூடு** *koli-p-pūḍu,* பெ.(n.) 1. கொல்லிப் பூடு; any plant causing death. 2. ***கோலி*** பார்க்க; see *kōli.* 3. மயிர்; hair. 4. இலந்தை; jujuba. 5. உடும்பு; guana. 6. திப்பிலி; long-pepper. 7. பன்றிக்கிழங்கு; pig-root. 8. சிற்றழிஞ்சில்; acute-leaved privet. 9. புங்கன்; elliptic-leaved privet (சா.அக.).

*[கொல்லி + பூடு.]*

**கொலு**[1] *kolu,* பெ.(n.) சித்திரமூலம்; Ceylon leadwort (சா.அக.).

*[கொல் → கொலு.]*

**கொலு**[2] *kolu,* பெ.(n.) 1. ஒலக்க இருப்பு; royal presence, durbar, sitting-in-state; presence of the deity in a temple. *"இருந்திடுங் கொலுவில்" (மச்சபு. நைமிசா. 5).* 2. ஒன்பது நாள் நிகழும் (ஒன்பானிரா) கலை விழாவில் பொம்மை முதலியவற்றை அழகுடன் அமைத்தல்; decorations in a Hindu house at the time of the Navarathiri festival.

ம. கொலுச்சு; க. கொலசு, கொணசு, தெ., பட. கொலுசு; து. கொணசு, கணசு.

*[கோலு → கொலு.]*

**கொலுக்கூடம்** *kolu-k-kūḍam,* பெ.(n.) இறைவன் அல்லது மன்னன் வீற்றிருக்கும் மண்டபம்; presence chamber, as of a deity or king. *"உயர்கொலு மண்டபத் திடையோ" (சிவரக. விசையை. 13).*

*[கோலு → கொலு + கூடம்.]*

**கொலுசு** *kolusu,* பெ.(n.) தங்கம், வெள்ளி ஆகிய மாழைகளால் செய்யப்பட்டுக் காலில் அணியும் மகளிர்அணிவகைகளுளொன்று; a kind of ornament made by metals worn around the ankle.

**Fin.** koliya (chain of gold or silver), kolikko (coin); **Livonian.** kol (ferrule); **Q.** qulgi (silver, coin).

*[கோலு → கொலு → கொலுசு.]*

**கொலுப்பலகை** *kolu-p-palagai,* பெ.(n.) 1. மண்தாங்கிப்பலகை; a board which supports the wall over a door, window (கட்.தொ.). 2. கதவில் அழகிற்கு அமைக்கப்படும் சட்டம்; a decorative frame work in a door.

*[குல் → குல்லு → கொலு + பலகை.]*

**கொலுமகொண்டான்** *koluma-kondān,* பெ.(n.) திண்டுக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tindukkal Dt.

*[கொல்லன் → கொலுவன் → கொலுமன் + கொண்டான்.]*

**கொலுமண்டபம்** *kolu-mandabam,* பெ.(n.) அரசவை; royal court.

**ம.** கொலுமண்டபம்

*[கொலு (கோலு : ஒழுங்காக அமைந்த படிக்கட்டு. கோலு→ கொலு (படிக்கட்டு அமைந்த அரசனின் இருக்கை) + மண்டபம்.]*

**கொலுவீற்றிரு-த்தல்** *kolu-virriru-,* 3 செ.கு.வி. (v.i.) 1. கொலுமண்டபத்தில் அரசன் அரியணையில் அமர்ந்திருத்தல்; to adorn the throne as a king in the royal court. 2. திருமடத்துத் தலைவர், மடத்துக் குருபூசை விழாவில், அடியார்களும், சீடர்களும் புடைசூழ்ந்திருக்கக் கொலுமண்டபத்தில் துறவரசாக வீற்றிருத்தல்; to adorn the holy seat as a great saint.

*[கொலு + வீற்று + இரு-.]*

**கொலுவை-த்தல்** *koluvai-,* 4 செ.கு.வி.(v.i.) ஒன்பான் இரவு (நவராத்திரி) நாள்களில் வீட்டில் பொம்மைகளை அணிகளாக வைத்தல்; to decorate dolls in a Hindu house at the time of Navarathiri festival.

**ம.** கொலுவய்க்குக.

*[கொலு + வை-.]*

**கொலை[1]-த்தல்** *kolai-,* 4 செ.கு.வி. (v.i.) குலைத்தல்; to bark as of dog.

*[குலை → கொலை (கொ.வ.).]*

**கொலை[2]-தல்** *kolai,* 4 செ.கு.வி. (v.i.) குலைதல்; to be disturbed, shatter.

*[குலை → கொலை.]*

**கொலை[3]** *kolai,* பெ.(n.) 1. உயிர்வதை; killing, slaying, murder, assassination. *“கொலையே களவே” (மணிமே. 24: 125).* கொலைக்கே அஞ்சாதவன் பழிக்கு அஞ்சுவானா (பழ). 2. தீங்கு, கொடுமை; vexation, teasing, tormenting. படுகொலை. 3. பொறுத்துக் கொள்ள முடியாத அளவுக்குச் சிதைத்தல்; to damage incorrigibly; spoil. 4. கொல்லுதற்கொருப் படுகை (இளம்.தொல். பொருள்.254) (உரை. சொ.); consent to murder.

**ம.** கொல; **க., து., பட.** கொலெ; **கோத.** கொல்; **துட.** க்வல்ய்

*[குல் → கொல் → கொலை.]*

**கொலைக்கடம்பூட்டு-தல்** *kolai-k-kadam-pūttu-* 5 செ.குன்றாவி. (v.t.) கொலைத்தண்டனை நிறைவேற்றுதல்; to carry out capital sentence. *“குற்றங் காட்டிக் கொலைக்கடம் பூட்டுதும்” (பெருங். மகத. 25: 103).*

*[கொலை + கடம் + பூட்டு-.]*

**கொலைக்களம்** *kolai-k-kalam,* பெ.(n.) 1.கொல்லப்படும் இடம்; place of execution. *“கொலைக்களக் காதை” (சிலப். 16).* 2.கொலை நடந்த இடம் ; a place where killing was done. 3. அழிவைத் தருமிடம் ; place of destruction.

**ம.** கொலைக்களம்.

*[கொலை + களம்.]*

**கொலைக்கும்பல்** *kolai-k-kumbal,* பெ.(n.) 1. கொலை செய்யும் கும்பல்; gang of murderers; criminals. 2. பழிக்கு அஞ்சாத கும்பல்; a gang which will not flinch from any heinous crime.

*[கொலை + கும்பல்.]*

**கொலைக்குற்றம்** *kolai-k-kurram,* பெ.(n.) உயிர்வதை செய்தலாகிய குற்றம் (உ.வ.); offence or crime of murder.

**ம.** கொலைக்குற்றம்.

*[கொலை + குற்றம்.]*

**கொலைக்கொம்பன்** *kolai-k-kombaṉ,* பெ.(n.) கொல்லும் பண்புள்ள கொம்பானை; a vicious tusker.

**ம.** கொலைக்கொம்பன்.

*[கொலை + கொம்பன்.]*

**கொலைகாரன்** *kolaigāraṉ,* பெ.(n.) 1. கொலை செய்பவன்; murderer, assassin. 2. பழிபாவங் களுக்கு அஞ்சாதவன்; one who will not flinch from any heinous crime.

*[கொலை + காரன்.]*

**கொலைச்சிறை** *kolai-c-ciṟai,* பெ.(n.) சிறைச் சாலையில் கொலைக்குற்றம் செய்தவர்களை வைக்கும் அறை; prison-cell of criminals sentenced to death. *"கொலைச்சிறை யிருவரை" (பெருங். இலாவாண. 17:71).*

*[கொலை + சிறை.]*

**கொலைசுற்று-தல்** *kolai-šuṟṟu-,* 8 செ.கு.வி. (v.i.) கொலைப்பழி வழிவழியாகத் தொடர்தல் (உ.வ.); to be encompassed as a person or family, by the sin of murder, kill, slay.

**ம.** கொலைக்குற்றம்.

*[கொலை + சுற்று-.]*

**கொலைசூழ்-தல்** *kolai-šūḻ-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. கொல்லும் வழியை நாடுதல்; to plot against a person's life. 2. ***கொலைசுற்று-தல்*** பார்க்க; see *kolai-cuṟṟu.*

*[கொலை + சூழ்-.]*

**கொலைசூழ்ச்சி** *kolai-šūḻcci,* பெ.(n.) கொல்லுவதற்காகச் செய்யப்படும் கமுக்கத் திட்டம்; conspiracy for murder.

*[கொலை + சூழ்ச்சி.]*

**கொலைசெய்-தல்** *kolai-šey-,* 1 செ.குன்றாவி. (v.i.) கொல்லுதல்; to murder.

*[கொலை + செய்-.]*

**கொலைஞன்** *kolaiñaṉ,* பெ.(n.) 1. ***கொலைகாரன்*** பார்க்க; see *kolai-gāraṉ. "கொலைஞ ருலையேற்றித் தீமடுப்ப" (நாலடி. 331).* 2. வேடன் (சூடா.); hunter. 3. சண்டாளன் (திவா.); candalan, one whose profession is to kill animals (செ.அக.).

*[கொலை → கொலைஞன். ஒ.நோ.:கலை → கலைஞன்.]*

**கொலைத்தீர்ப்பு** *kolai-tīrppu,* பெ.(n.) தூக்குத் தண்டனை; sentence of death.

**மறுவ.** கொலைத்தண்டனை.

**ம.** கொலத்தீர்ப்பு.

*[கொலை + தீர்ப்பு.]*

**கொலைத்தண்டனை** *kolai-t-taṇḍaṉai,* பெ.(n.) தூக்குத் தண்டனை; punishment of hanging death sentence.

**மறுவ.** மரணதண்டனை.

*[கொலை + தண்டனை.]*

**கொலைநவில்(லு)-தல்** *kolai-navil(lu)-,* 2 செ.கு.வி. (v.i.) கொலை செய்தல்; to commit murder. *"கொலைநவில் வேட்டுவர்" (மணிமே. 13:31).*

*[கொலை + நவில்.]*

**கொலைநன்** *kolainaṉ,* பெ.(n.) ***கொலைகாரன்*** பார்க்க; see *kolai-kāraṉ. "வாழுயிர்க் கூற்றமான கொலைநரை" (சீவக. 2770).*

*[கொலைஞன் → கொலைநன்.]*

**கொலைநிலம்** *kolai-nilam,* பெ.(n.) ***கொலைக் களம்*** பார்க்க; see *kolai-k-kaḷam.*

**ம.** கொலநிலம்.

*[கொலை + நிலம்.]*

**கொலைநினைக்கை** *kolai-niṉaikkai,* பெ.(n.) மனத்தில் தோன்றும் தீக்குண மூன்றினொன்று; one of the three bad thoughts in mind, i.e. to kill.

*[கொலை + நினைக்கை.]*

**கொலைப்பசி** *kolai-p-paši,* பெ.(n.) கடும்பசி; state of being famished. *காலையிலிருந்து கொலைப் பசியோடு இருக்கிறேன் (உ.வ.).*

*[கொலை + பசி.]*

**கொலைப்பட்டினி** *kolai-p-paṭṭiṉi,* பெ.(n.) கடுமை யான பசியின்போது எதுவும் சாப்பிடக் கிடைக்காத நிலை; state of utter starvation during extreme hunger. பல நாள்களாகக் கொலைப்பட்டினியில் இருக்கிறேன் (உ.வ.).

*[கொலை + பட்டினி.]*

**கொலைப்பழி** *kolai-p-paḻi,* பெ.(n.) ***கொலைப் பாதகம்*** பார்க்க; see *kolai-p-pādagam.*

*[கொலை + பழி.]*

**கொலைப்பாதகம்** *kolai-p-pādagam,* பெ.(n.) 1. கொலையாலுண்டான அவச்சொல் அல்லது குற்றம் (கொ.வ.); crime or sin of murder. 2. பெருந்தீச்செயல்; any heinous crime.

ம. கொலபாதகம்.

*[கொலை + பாதகம் (பாதிப்பு → பாதகம்).]*

**கொலைப்பாதகன்** *kolai-p-pādagaṉ,* பெ.(n.) கொலைக்குற்றம் போன்ற பெருந்தீங்கு செய்தவன்; one who commits murder or any other heinous crimes.

ம. கொலபாதகன், கொலபாதகி.

*[கொலை + பாதகன்.]*

**கொலைப்பாவம்** *kolai-p-pāvam,* பெ.(n.) கொலை செய்வதால் உண்டாகும் குற்றம்; sin of murder.

*[கொலை + பாவம்.]*

**கொலைப் பைத்தியம்** *kolai-p-paittiyam,* பெ.(n.) கொலை செய்வதற்கு ஆர்வம் உண்டாக்கும் பைத்தியம்; homicidal insanity; a form of mania characterised by a desire to commit murder; an insane tendency to murder (சா.அக.).

*[கொலை + பைத்தியம்.]*

**கொலைபுரிந்தவன்** *kolai-purindavaṉ,* பெ.(n.) ***கொலையாளி*** பார்க்க; see *kolai-y-āḷi.*

*[கொலை + புரிந்தவன்.]*

**கொலைமகள்** *kolai-magaḷ,* பெ.(n.) (பகைவரைக் கொன்றவள்) கொற்றவை; *Koṟṟavai,* as having slain the Aṡurās. *"கொலைமகள் கவினை" (பிரமோத். 7:26).*

*[கொலை + மகள்.]*

**கொலைமரம்** *kolai-maram,* பெ.(n.) கழுமரம்; a gibbet, gallows.

ம. கொலமரம்.

*[கொலை + மரம்.]*

**கொலைமலை** *kolai-malai,* பெ.(n.) கொலை செய்யும் மலைபோன்ற யானை; lit., murderous mountain elephant. *"பெருமதக் கொலைமலை" (கல்லா.4).*

*[கொலை + மலை.]*

**கொலைமறுத்தல்** *kolai-maṟu-,* பெ.(n.) கொலை செய்தல் கூடாதென்பதைப்பற்றிச் சாந்தலிங்க சுவாமிகளால் பாடப்பெற்ற நூல்; a poem by Sāndaliṅga-Ṡuvāmigaḷ disapproving of killing.

*[கொலை + மறுத்தல்.]*

**கொலைமுட்டி** *kolai-muṭṭi,* பெ.(n.) நுரையீரல் இறுகவும், வயிறு வீங்கவும், மூச்சுத் திணறவுஞ் செய்யும் கால்நடை நோய். (M.CM.D. 1887/249); a cattle-disease involving congestion of lungs, swelling of abdomen and difficulty in breathing.

*[கொலை + முட்டி.]*

**கொலைமேற்கொள்-ளல்** *kolai-mēṟkoḷ-,* 13 செ.குன்றாவி. (v.i.) முன்கருத்தோடு கொல்லுதல்; to murder as a duty imposed on oneself (pre-meditated murder) (சா.அக.).

*[கொலை + மேற்கொள்.]*

**கொலையாளன்** *kolai-y-āḷaṉ,* பெ.(n.) ***கொலைகாரன் (பிங்.)*** பார்க்க; see *kolai-kāraṉ.*

ம. கொலயாள்.

*[கொலை + ஆள் + அன்.]*

**கொலையாளி** *kolai-y-āḷi,* பெ.(n.) கொலைகாரன்; murderer. தேடிக் கொண்டிருந்த கொலையாளி பிடிபட்டான் (உ.வ.).

ம. கொலயாளி.

*[கொலை + ஆள் + இ.]*

**கொலையிச்சைக் கிரகம்** *kolai-y-iccai-k-kiragam,* பெ.(n.) ஒருவகைக் கோள்நோய்; a kind of mania attributed to be influence of an evil planet to which the patient is subjected (சா.அக.).

*[கொலை + இச்சை + கிரகம்.]*

**கொலையுண்(ணு)-தல்** *kolai-y-uṇ(ṇu)-,* 15 செ.கு.வி. (v.i.) கொலை செய்யப்படுதல்; to be killed, murdered.

ம. கொலபெட்டுக.

*[கொலை + உண்ணு-.]*

**கொலையோன்** *kolaiyōṉ,* பெ.(n.) துரிசு; green vitriol (சா.அக.).

*[கொலையான் → கொலையோன்.]*

**கொலைவழக்கு** *kolai-vaḻakku,* பெ.(n.) கொலையைப்பற்றிய வழக்கு; a murder-case.

*[கொலை + வழக்கு.]*

**கொலைவன்** *kolaivaṉ,* பெ.(n.) 1. ***கொலைகாரன்*** பார்க்க; see *kolai-kāraṉ. "கொலைவ னல்லையோ கொற்றவ னாயினை" (மணிமே.25: 174).* 2. வேடன்; hunter one who lives by chase. *"கொலைவர் கொடுமரந் தேய்த்தார்" (கலித். 12).* 3. சிவன் (ஊழிக்கடவுள்); Ṡiva, as the destroyer.

"கொலைவன் சூடிய குழவித் திங்கள்" (கலித். 103:14) (செ.அக.).

[கொலை + அன்.]

**கொலைவாள்** *kolai-vāḷ*, பெ.(n.) அரச ஒறுப்பை நிறைவேற்றப் பயன்படுத்தும் வாள்; sword used to execute death sentence.

[கொலை + வாள்.]

**கொலைவாளை** *kolai-vāḷai*, பெ.(n.) ஒருவகை நெல் (இ.வ.); a kind of paddy.

[குலை → கொலை + வாளை.]

**கொலைவிழு-தல்** *kolai-viḻu-*, 3 செ.குன்றா வி. (v.i.) கொல்லுதல்; to result in murder.

[கொலை + விழு-.]

**கொலைவெறி** *kolai-veṟi*, பெ.(n.) கொலை செய்வதற்கு விருப்பம் உண்டாக்கும் கிறுக்கு; homicidal insanity; a form of mania characterised by a desire to commit murder (சா.அக.).

[கொலை + வெறி]

**கொவ்வங்காய்** *kovvaṅ-kāy*, பெ.(n.) ***கொவ்வைக்காய்*** பார்க்க; see *kovvai-k-kay*.

[கொவ்வை → கொவ்வம் + காய்.]

**கொவ்வங்காய்ப்பதம்** *kovvaṅ-kāy-p-padam*, பெ.(n.) ***கொவ்வைக்காய்ப்பதம்*** (யாழ்ப்.) பார்க்க; see *kovvai-k-kāy-p-padam*.

[கொவ்வை + காய் + பதம்.]

**கொவ்வை** *kovvai*, பெ.(n.) 1. கொவ்வைக்கொடி; a common creeper of the hedges. 2. கொவ்வைப் பழம்; red fruits of a common creeper of the hedges. *"கொவ்வைச் செவ்வாய்" (திருவாச. 6:2).*

[குவ்வை → கொவ்வை]

**கொவ்வைக்கனி** *kovai-k-kaṉi*, பெ.(n.) கொவ்வைப் பழம்; riped caped fruit.

[கொவ்வை + கனி.]

**கொவ்வைக்கனிமணி** *kovvai-k-kaṉi-maṇi*, பெ.(n.) கோவரங்கப் பதுமராகம் (யாழ்.அக.); a kind of precious stone.

[கொவ்வை + கனி + மணி.]

**கொவ்வைக்காய்** *kovvai-k-kāi*, பெ.(n.) கொவ்வைச் செடியின் காய்; unriped caped fruit.

[கொவ்வை + காய்.]

**கொவ்வைக்காய்ப்பதம்**[1] *kovvai-k-kāy-p-padam*, பெ.(n.) இளம்பதம்; a stage at which anything is selected when it is only tender and soft (சா.அக.).

[கோவை → கொவ்வை + காய் + பதம்.]

**கொவ்வைக்காய்ப்பதம்**[2] *kovvai-k-kāy-p-padam*, பெ.(n.) கொவ்வைக்காய்போற் பசுமையாய் நெற்பயிரில் தோன்றும் இளம்பதம் (யாழ்ப்.); a stage in the growth of paddy when it is tender and green as a *kovvai* fruit.

[கொவ்வை + காய் + பதம்.]

**கொவ்வைக்கிழங்கு** *kovvai-k-kiḻaṅgu*, பெ.(n.) கோவைக்கிழங்கு; root of common creeper of the hedges (சா.அக.).

[கொவ்வை + கிழங்கு.]

**கொவ்வைத்தண்டு** *kovvai-t-taṇḍu*, பெ.(n.) கோவைக் கொடியின் தண்டு; the stem of Indian caper (சா.அக.).

[கொவ்வை + தண்டு.]

**கொவ்வைப்பழம்** *kovvai-p-paḻam*, பெ.(n.) கனிந்த சிவப்புக் கொவ்வைப் பழம்; red riped caped fruit (சா.அக.).

[கொவ்வை + பழம்.]

**கொவ்வையங்கனி** *kovvaiyaṅkaṉi*, பெ.(n.) ***கொவ்வைக்கனி*** பார்க்க; see *kovvai-k-kaṉi* (சா.அக.).

[கொவ்வை + அம் + கனி.]

**கொவளை** *kovaḷai*, பெ.(n.) ***வெள்ளைத்தகரை*** பார்க்க (L.); see *veḷḷai-t-tagarai*.

[குவளை → கொவளை (கொ.வ.).]

**கொவிந்தம்** *kovindam*, பெ.(n.) செம்முள்ளி; thorny nail dye.

[குருவிந்தம் → கொவிந்தம்.]

**கொவிள்** *koviḷ*, பெ.(n.) மரவகை (L.) white cutch, a tree (செ.அக.).

[குவிள் → கொவிள் (கொ.வ.).]

**கொழஞ்சியப்பர்** *koḻañji-appar*, பெ.(n.) சிறு தேவதை; folk deity.

[கொழஞ்சி + அப்பர்.]

கொழஞ்சியப்பரை, குழந்தையப்பர் எனக் கொள்வது ஒரு மிகைத் திருத்தமே. கொழஞ்சி மரத் தெய்வம் என்ற அடிப்படையில் அமைந்ததே இப் பெயர்.

**கொழி[1]-த்தல்** *koḻi-*, 4 செ.குன்றா.வி.(v.t.) கொப்புளித்தல்; gargling (சா.அக.).

*[கொள் → கொளி → கொழி.]*

**கொழி[2]-த்தல்** *koḻi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. தெள்ளுதல்; to sift in a winnowing fan. *"குற்றபாகு கொழிப்பவர் கோள்" (கம்பரா. நாட்டுப். 29).* 2. ஒதுக்குதல்; to waft ashore, as fine sand by the waves. 3. வாருதல்; to carry or wash away, as a river or flood. *"கிரியுள வெல்லாங் கொழித்து வந்துற வணைதரும் பாலி" (கந்தபு. ஆற்றுப். 23).* 4. பொழிதல்; to emit, as rays; to send forth, as showers. *"கொடிய வெண்டிங்காள் கொழிக்கு நினது கதிர்" (நைடத. சந்திரோ.6) (செ.அக.).*

**ம.** கொழிக்குக; **க.,பட.** கொச்சு; **தெ.** கொடு; **கோத.** கொத்; **துட.** க்விச்; **கோண்.** கொச்சானா; **கூ.** கடோக்ல; **குவி.** கொச்சாலி; **கொலா.** கொன்சிவ்.

*[குல் → குள் → கொள் → கொழு → கொழி.]*

**கொழி[3]-த்தல்** *koḻi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. குற்றங்கூறுதல்; to criticise, expose faults. *"வையங் கொழிக்கும் பழிக்கு" (சீவக. 1149).* 2. ஆராய்தல்; to test, closely examine details of evidence, facts, etc. கொழித்துக் கொளப்பட்ட நண்பி னவரை (பழ.130). 3. பாராட்டிச் சொல்லுதல்; to proclaim, publish. அவன் தன் பெருமையைக் கொழித்துக்கொண்டிருக்கிறான் (கொ.வ.).

*[குல் → குள் → கொள் → கொழு → கொழி.]*

**கொழி[4]-த்தல்** *koḻi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. எதிரொலித்தல் (பிங்.); to sound, resound. 2. மேலே கிளம்புதல்; to come to the surface to rise up. *"கடற்றினன் பொன்கொழிப்ப" (மதுரைக். 274).* 3. செழிப்புறுதல்; to be on the increase flourish. *'செல்வங் கொழிக்கிறது' (செ.அக.).*

**Fin.** kerata (togather, accumulate); **Kare.** kerea; **Komi.** kural; **Est.** korjata; **Mong.** xurija; **Q.** juriy

*[குல் → கலி → கொலி → கொழி.]*

**கொழிஞ்சி** *koḻiñji*, பெ.(n.) 1. கிச்சிலி (L.); sylhet orange, a tree. 2. ***நாரத்தை*** பார்க்க; see *nārattai*. 3. ***கொள்ளுக்காய் வேளை*** பார்க்க; see *koḷḷu-k-kāy-vēḷai*. 4. பூவாது காய்க்கும் மரம் (வின்.); tree or plants, as the figs, which bear fruit without blossoming (செ.அக.).

**ம.** கொழிஞ்ஞில்.

*[கொழி → கொழிஞ்சி.]*

**கொழிதமேனி** *koḻita-mēṉi*, பெ.(n.) 1. குப்பை மேனி; Indian acalypha. 2. குறுக்கு அவரை; Goa bean (சா.அக.). 3. கோழி அவரை; sword bean (சா.அக.).

**மறுவ.** வாளவரை, பெருங்கோழியவரை, கோழிப் பூண்டு.

*[கொழி → கொழிதம் + மேனி.]*

**கொழிதாகிகம்** *koḻitāgigam*, பெ.(n.) நாயுருவி; Indian burr (சா.அக.).

**மறுவ.** முள்துடரி, கொல்லன்கோவிகம், கொழிப் பாயாசம்.

*[கொழிதம் → கொழிதாகிகம்.]*

**கொழிப்பு** *koḻippu*, பெ.(n.) 1. கொழிக்கை; sifting, wafting ashore. 2. செழிப்பு; prosperity. 3. குற்றம் (திவா.); fault, defect.

*[கொழி → கொழிப்பு. ஒ.நோ.: செழி → செழிப்பு.]*

**கொழிப்பூ** *koḻi-p-pū*, பெ.(n.) ***கொழிப்பூண்டு*** பார்க்க; see *koḻi-p-pūṇḍu*.

*[கொழி + (பூண்டு) பூ.]*

**கொழிப்பூண்டு** *koḻi-p-pūṇḍu*, பெ.(n.) குப்பைமேனி (மலை.); rubbish plant Indian acalypha, a shrub.

*[கொழி + பூண்டு.]*

**கொழிபாயசம்** *koḻi-pāyaśam*, பெ.(n.) ***காஞ்சொறி*** பார்க்க; see *kāñjoṟi*.

*[குள் → கொள் → கொழி + (பாயச்சம்) பாயசம்.]*

**கொழிமணல்** *koḻi-maṇal*, பெ.(n.) 1. சிறு மணல்; fine sand. 2. மெருகு மணல்; goldsmith's sand (சா.அக.).

*[கொழி + மணல்.]*

**கொழியல்** *koḻiyal*, பெ.(n.) ***கொழியலரிசி*** பார்க்க; see *koḻiyal-arisi*. *"நெல்லு இடிசல் கொழியல் இல்லாமல்" (கோயிலொ.62).*

**ம.** கொழியல்.

*[கொழி → கொழியல்.]*

**கொழியலரிசி** *koḻiyal-arisi*, பெ.(n.) நன்றாகக் குற்றித் தீட்டப்படாத அரிசி; ill-cleaned rice.

'குற்றாத கொழியலரிசியை' (பெரும்பாண். 275, உரை).

[கொழி → கொழியல் + அரிசி.]

**கொழியால்மட்டி** *koliyāl-matti*, பெ.(n.) சிவப்பு; red colour (சா.அக.).

[கொழியல் + மட்டி.]

**கொழிற்பூண்டு** *kolir-pūndu*, பெ.(n.) குப்பைமேனி; a kind of plant as of vermifuge; an antidote.

[கொழியல் + பூண்டு.]

**கொழு[1]-த்தல்** *kolu-*, 4 செ.கு.வி. (v.i.) 1. செழித்தல்; to prosper, flourish to be rich or fertile, as soil. *"குடிகொழுத்தக் கண்ணும்" (நாலடி. 96).* 2. உடற்கொழுப்பு மிகுதல்; to grow fat; to be plump. *"சிறுமியரெலாங் கொழுத்தே" (தனிப்பா.).* 3. குழம்பாயிருத்தல்; to be of thick consistency, as sandal paste. சந்தனத்தைக் கொழுக்கப் பூசு. 4. திமிர்கொள்ளுதல் (உ.வ.); to be saucy, impertinent, insolent. 5. மண் கொழித்தல், மதர்த்தல் (உ.வ.); to become too rich, to be productive, as land (செ.அக.).

**ம.** கொழுக்குக; **க.** கொர்வு, கொப்பு ; **தெ.** க்ரொச்சு, கொவ்வு; **து.** கொம்மை (கொழுப்பு) ; **கோண்.** கொர்வின்ச்; **கூய்.** க்ரோக ; **குவி.** கொர்வ்; **நா.** கொலா, கொரு; **கோத.** க்வள்ப்; **பிரா.** கும்பேன்.

**Fin.** kuu (fat); **Mari.** koja; **Hung.** haj; **Jap.** koyasu (to enrich, fatten).

[குள் → கொள் → கொழு.]

**கொழு[2]** *kolu*, பெ.(n.) 1. கொழுப்பு; fat. *"குடருங் கொழுவும்" (நாலடி. 46).* 2. திரண்டது; clotted, solid. 3. வழவழப்பு ; surupy, vircons.

**ம.** கொழு.

[கள் → கழு → கொழு.]

**கொழு[3]** *kolu*, பெ.(n.) 1. மாழை (உலோக)க்கோல்; bar of metal, bullion. 2. ஏர்க்காறு; plough share. 3. துளையிடும் பெரிய ஊசி; awl. *'கொழுச்சென்ற வழித் துன்னூசி யினிது செல்லுமாறுபோல' (தொல். பாயி. உரை).* 4. உழும்கருவி (வேளா.கலை.); apparatus for ploughing. "கொழுமீதில் குடிகொண்ட குடிச்செல்வம் செல்வம்" (பழ.).

**ம.** கொழு, கொழுவு; **க.** குழ, குழு; **து.** கொரு; **கோத.** கொவ்.

[உள் → உளு = துளைக்கும் புழு. உளுத்தல் = புழு மரத்தைத் துளைத்தல். உளு → உழு. உழுதல் = நிலத்தைக் கீறுதல். குள் → குழி → குழை → குடை. குடைதல் = துளைத்தல். குழி → கொழி → கொழு = நிலத்தைத் துளைக்கும் ஏருசி.]

**கொழுக்கச்செய்-தல்** *kolukka-c-cey-*, 1 செ. குன்றா வி.(v.t.) வளர்த்தல்; to feed luxuriously; to pamper (சா.அக.).

[கொழுக்க + செய்-.]

**கொழுக்கட்டு-தல்** *kolu-k-kattu-*, 5 செ.கு.வி. (v.i.) கலப்பைக்காறு மாட்டுதல் (வின்.); to fasten the share to the plough.

[கொழு + கட்டு-.]

**கொழுக்கட்டை** *kolu-k-kattai*, பெ.(n.) வெல்லம் முதலியன சேர்த்து அரிசிமாவால் உருண்டை வடிவாகச் செய்யும் சிற்றுண்டிவகை; bolus-like preparation of rice flour usually with coconut scrapings, sugar, etc. கொழுக்கட்டைக்குத் தலையுமில்லை குடியனுக்கு முறையுமில்லை (பழ).

**ம.** கொழுக்கட்ட.

[குள் = உருண்டை; குள் → குழு → கொழு + கட்டை.]

**கொழுக்கட்டைத் தேக்கு** *kolu-k-kattai-t-tēkku*, பெ.(n.) போதக நாறி மரம்; fire-brand teak (சா.அக.).

[கொழுக்கட்டை + தேக்கு.]

இது மருந்துப் பொருளாகப் பயன்படுகிறது.

**கொழுக்கட்டைப்புல்** *kolu-k-kattai-p-pul*, பெ.(n.) கோயம்புத்தூர் மாவட்டத்திலுள்ளதும் கால் நடைகள் மேய்தற்கு உரியதுமாகிய கொழுப்புச்சத்து மிகுந்த புல்வகை; a kind of grass in Coimbatore Dt., very fattening for cattle.

[கொழு + கட்டை + புல்.]

**கொழுக்கட்டைமந்தாரை** *kolukkattai-mandārai*, பெ.(n.) ஒருவகை மந்தாரை; a kind of ebony (சா.அக.).

[கொழுக்கட்டை + மந்தாரை.]

**கொழுக்கரி** *kolu-k-kari*, பெ.(n.) கொழுந்துவிட்டு எரியக்கூடிய கரி; dense or solid charcoal capable of burning with flame (சா.அக.).

[கொழு + கரி.]

**கொழுக்கு** *kolukku*, பெ.(n.) கைப்பிடியுள்ள கோப்பை; cup with handle. *கொழுக்கு நிறையத் தேநீர் கொடுத்தார்கள் (கிரி.).*

[குள் → குழு → கொழு → கொழுக்கு.]

**கொழுக்குத்து** *kol̤u-k-kuttu,* பெ.(n.) எல்லையைக் குறிப்பதற்குப் பூமியில் நாட்டப்பட்டிருக்கும் குத்துக் கல்; (காழ்மரக்கால்) (கல்.அக.); stone mark for identifying the boundary in land, mile-stone.

*[கொழு + குத்து.]*

**கொழுக்கொடு–த்தல்** *kol̤u-k-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. இளக்காரங் கொடுத்தல்; to be indulgent. 'நீ நியமியாமல் கொழுக்கொடுத்தன்றோ இப்படி இவன் தீம்பிலே தகணேற வேண்டிற்று' (திவ். பெரியாழ்.2,9:2.வியா.ப.454.) 2. பெருமையுண் டாக்குதல் (திவ்.பெரியாழ்.2,9:2, ஜீ.); to exalt.

*[கொழு + கொடு–.]*

**கொழுக்கொம்பு** *kol̤u-k-kombu,* பெ.(n.) ***கொழுகொம்பு*** பார்க்க; see *kol̤u-kombu*(வே.க. 198).

*[கொள்கொம்பு → கொழுகொம்பு.]*

**கொழுகழுவுகாலம்** *kol̤u-kal̤uvu-kālam,* பெ.(n.) உழவு முடியுங்காலம் (இ.வ.); time of the year when ploughing is finished.

*[கொழு + கழுவு + காலம்.]*

**கொழுகொம்பு** *kol̤u-kombu,* பெ.(n.) 1. கொடிகள் ஏறிப் படர்தற்கு நடும் கொம்பு; stick or pole for supporting a creeper. *"வேத நறுங்கொடி படருங் கொழுகொம்பே" (செவ்வந்திப்பு. திருமனச்ச. 9).* 2. பற்றுக்கோடு; help, support, aid. 3. மரத்தின் நடுக்கிளை; central upright branch of a tree.

*[கொழு + கொம்பு.]*

**கொழுகொழு–த்தல்** *kol̤ukol̤u-,* 4 செ.கு.வி. (v.i.) 1. மிகுந்த சதைப்பற்றுடன் இருத்தல்; to be chubby. *குழந்தை கொழுகொழுவென் றிருக்கிறது (உ.வ.).* 2. செல்வச்செழிப்பு மிகுதல்; to become rich, prosperous.

*[கொழு + கொழு–.]*

**கொழுகொழுப்பு** *kol̤u-kol̤uppu,* பெ.(n.) 1. செழுமை; luxuriance. 2. ஊழற்சதை; flabbiness (செ.அக.).

ம. கொழுகொழு.

*[கொழு + கொழுப்பு.]*

**கொழுகொழுவெனல்** *kol̤ukol̤u-v-eṉal,* பெ.(n.) உடற்கொழுப்பு மிகுதலைக் காட்டும் குறிப்பு; onom. expr. signifying growing fat.

*[கொழு கொழு + எனல்.]*

**கொழுங்கண்** *kol̤uṅkaṇ,* பெ.(n.) அருள்நோக்கு (கருணைக்கண்); sight with compassion, bene volence.

*[கொழு - கொழுமை. கொழும் + கண்.]*

**கொழுங்காதிகம்** *kol̤uṅgādigam,* பெ.(n.) பீநாறி; fetid tree-Sterculia foctida (சா.அக.).

*[கொழும் + காதிகம்.]*

**கொழுங்கிகா** *kol̤uṅgigā,* பெ.(n.) மல்லிகை; jasmine (சா.அக.).

*[கொழும் + சிகை – கொழுஞ்சிகை → கொழுங்கிகா (கொ.வ.).]*

**கொழுங்கிரி** *kol̤uṅgiri,* பெ.(n.) மல்லிகை (மலை.); jasmine.

*[கொழுஞ்சிகை → கொழுஞ்சிரி → கொழுங்கிரி.]*

**கொழுச்சால்** *kol̤u-c-cāl,* பெ.(n.) ஏர்ச்சால்; a furrow made by the plough share.

ம. கொழுச்சால்.

*[கொழு + சால்.]*

**கொழுச்சிராய்** *kol̤u-c-cirāy,* பெ.(n.) கலப்பையிற் கொழுவை இணைக்கும் மரத்துண்டு (யாழ்ப்.); piece of wood which holds the share to the plough.

*[கொழு + சிராய்.]*

**கொழுஞ்சி** *kol̤uñji,* பெ.(n.) 1. நாய்வேளை (சித்.அக.); a sticky plant. 2. கடற்கரைப் பூண்டு; shrub on the seashore.

*[கொழு → கொழுஞ்சி.]*

**கொழுஞ்சிச்சோளம்** *kol̤uñji-c-cōl̤am,* பெ.(n.) முத்துச்சோளம்; ripe millet (சா.அக.).

*[கொழுஞ்சி + சோளம்.]*

**கொழுஞ்சிநாரத்தை** *kol̤uñji-nārattai,* பெ.(n.) 1. கிச்சிலிப்பழம்; common orange. 2. நாய்வேளை; dog mustard. 3. கொள்ளுக்காய் வேளை; purple wild Indigo (சா.அக.).

மறுவ. கொழுஞ்சிப் பழம்.

*[கொழுஞ்சி + நாரத்தை.]*

**கொழுஞ்சிப்பழம்** *kol̤uñji-p-pal̤am,* பெ.(n.) 1. கிச்சிலி; common orange. 2. தித்திப்பு நாரத்தை; sweet bigarade orange. 3. கொள்ளுக் காய் வேளை; purple wild indigo (சா.அக.).

*[கொழுஞ்சி + பழம்.]*

**கொழுஞ்சியடிவண்டு** *koluñji-y-aḍi-vaṇḍu*, பெ.(n.) கொழுஞ்சிமரத்தின் அடியில் முளைத்திருக்கும் எருக்கஞ் செடியில் பற்றிநிற்கும் ஒருவகை வண்டு; a kind of beette frequenting the madar plant grown under the orange tree. This is very useful for preparing universal quintessence medicine (சா.அக.).

*[கொழுஞ்சி + அடி + வண்டு.]*

**கொழுஞ்சினி** *koluñjiṉi*, பெ.(n.) நாய்வேளை; dog mustard plant (சா.அக.).

*[கொழுஞ்சி → கொழுஞ்சினி.]*

**கொழுஞ்சுடர்** *koluñ-cuḍar*, பெ.(n.) துரிசு; blue vitriol (சா.அக.).

*[கொழுமை + சுடர்.]*

**கொழுத்த**[1] *kolutta*, பெ.எ. (adj.) பருத்த; fatty (சா.அக.).

*[கொழு → கொழுத்த.]*

**கொழுத்த**[2] *kolutta*, பெ.எ. (adj.) 1. மிகுந்த; huge; இன்று கொழுத்த வேட்டை கிடைத்தது (உ.வ.). 2. பெருத்த; big. வணிகம் செய்து கொழுத்த இலாபம் சம்பாதித்தான் (உ.வ.).

*[கொழு → கொழுத்த.]*

**கொழுத்தகயல்** *kolutta-kayal*, பெ.(n.) வளர்ச்சியுற்ற கெண்டைமீன்; developed carp fish (மீன்.பிடி.தொ.).

*[கொழு → கொழுத்த + கயல்.]*

**கொழுத்தசாப்பாடு** *kolutta-šāppāḍu*, பெ.(n.) உயர் உணவு; rich meals (சா.அக.).

*[கொழு → கொழுத்த + சாப்பாடு.]*

**கொழுத்தசுண்ணாம்பு** *kolutta-šuṇṇāmbu*, பெ.(n.) நீர்கலக்கும் போது, அதிக அளவில் வெப்பத்தைக் கக்கிப் பொடியாக நீற்றும் சுண்ணாம்பு; a lime stone which emits more heat when making slaked lime (கட்.தொ.).

*[கொழுத்த + சுண்ணாம்பு.]*

**கொழுத்தட்டு-தல்** *kolu-t-taṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) கொழுவைக் கூர்மையாக்குதல் (வின்.); to sharpen the plough share.

*[கொழு + தட்டு-.]*

**கொழுத்தடை** *kolu-t-taḍai*, பெ.(n.) ***கொழுத்தாடை*** பார்க்க; see *kolu-t-tāḍai*.

*[கொழு + தடை.]*

**கொழுத்தமுரல்** *kolutta-mural*, பெ.(n.) ஏழு அங்குல நீளமுள்ள திருவன் கோலாமீன்; half beak, attaining 7 in. in length.

**மறுவ.** கொழுத்த மூரல்.

*[கொழுத்த + (மூரல்)முரல்.]*

**கொழுத்தமூரல்** *kolutta-mūral*, பெ.(n.) திருவன் கோலா மீன்; a kind of kola fish.

*[கொழுத்த + மூரல்.]*

**கொழுத்தவன்** *koluttavaṉ*, பெ.(n.) 1. அடங்காதவன்; uncontrollable person. கொழுத்தவ னெல்லாம் ஒருநாள் புழுத்து நாறும்போதுதான் உணர்வான் (உ.வ.). 2. பணக்காரன்; very rich man (வழ.சொ.அக.).

*[கொழு → கொழுத்தவன் (வினையா.பெ.).]*

**கொழுத்தவீரல்** *kolutta-v-īral*, கொழுப்படைந்த ஈரல்; liver with fatty accumulation (சா.அக.).

*[கொழுத்த + ஈரல்.]*

**கொழுத்தவுடம்பு** *kolutta-v-uḍambu*, பெ.(n.) பருத்த உடம்பு; corpulent body (சா.அக.).

*[கொழுத்த + உடம்பு.]*

**கொழுத்தாடுபிடிக்கை** *koluttāḍu-piḍikkai*, பெ.(n.) நரி ஆட்டுமந்தையிற் புகுந்து பிடிப்பது போலும் விளையாட்டு; game in imitation of a fox capturing a sheep in a flock.

*[கொழுத்த + ஆடு + பிடிக்கை.]*

**கொழுத்துப்போ-தல்** *koluttu-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) கொழுப்புண்டாதல்; growing fat (சா.அக.).

*[கொழுத்து + போ-.]*

**கொழுதம்பிநத்தம்** *kolutambi-nattam*, பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[கொழு + தம்பி + நத்தம்.]*

**கொழுதாடை** *kolu-tāḍai*, பெ.(n.) கரும்பின் மேல் பாகம்; the top portion of sugarcane stalk (சா.அக.). அவன் கிடக்கிறான் கொழுதாடைப்பயல் (இ.வ.).

*[கழுது → கொழுது + ஆடை.]*

**கொழுது-தல்** *kol̤udu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. குடைதல் (இ.வ.); drill through. *"கொழுதி வண்டிமிருந் தாரான்" (நைடத. சுயம்வர. 155).* 2. பறித்தல் (இ.வ.); to pluck, pick off. *"ஞாழ லஞ்சினைத் தாழிணர் கொழுதி" (நற். 106).* 3. கிழித்தல் (இ.வ.); tear. *"பௌவநீர்ச் சாய்க் கொழுதி" (கலித். 76).*

*[குள் → கொள் → கொழுது → கொழுதுதல்.]*

**கொழுந்தரும்பு** *kol̤undarumbu,* பெ.(n.) பூக்களில் முதலாக உண்டாகும் அரும்பு; the first shoot or growth in a flower; bud (சா.அக.).

*[கொழுந்து + அரும்பு.]*

**கொழுந்தன்** *kol̤undan,* பெ.(n.) 1. கணவன் (இ.வ.); husband . *"கொழுந்தா வென்றாள்" (கம்பரா. பிராட்டி. 9).* 2. கணவனுக்கு இளையவன் (உ.வ.); husband's younger brother.

*[கொள் → கொழு → கொழுந்தன். கொழுந்து இளமை. கொழுந்தன் - கணவனுக்கு இளையவன்.]*

**கொழுந்தன்பு** *kol̤undanbu,* பெ.(n.) இளகிய அன்பு (இ.வ.); doting affection. *"கொழுந்தன்பு செய்தருள் கூர" (திருமந். 280).*

*[கொழுந்து + அன்பு.]*

**கொழுந்தனார்** *kol̤undanār,* பெ.(n.) கணவனுடன் பிறந்தவன்; husband's brother.

*[கொழுந்து → கொழுந்தன் + ஆர். கொழுந்து இளமை. கொழுந்தன் - கணவனுக்கு இளையவன்.]*

**கொழுந்தனூர்** *kol̤undanūr,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tiruvallur Dt.

*[கொழுந்தன் + ஊர்.]*

**கொழுந்தி** *kol̤undi,* பெ.(n.) 1. மனைவியுடன் பிறந்தவள்; wife's sister. 2. உடன்பிறந்தவன் மனைவி (இ.வ.); brother's wife . *"எம்பி நின்றம்பி நீதோழன் மங்கை கொழுந்தி" (கம்பரா. காட்சிப். 23).* 3. ***கொழுந்தன்*** பார்க்க; *see kol̤undan.*

**மறுவ.** கொழுந்தியாள்.

*[கொழுந்து → கொழுந்தி.]*

**கொழுந்தியாள்** *kol̤undiyāl̤,* பெ.(n.) ***கொழுந்தி*** பார்க்க; see *kol̤undi.*

**ம.** கொளந்தயாள்.

*[கொழுந்து → கொழுந்தி + ஆள்.]*

**கொழுந்திராம்பட்டு** *kol̤undirāmpaṭṭu,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[கொழுந்திலை (வெற்றிலை) + பட்டு - கொழுந்திலைப்பட்டு → கொழுந்திராம்பட்டு (கொ.வ.).]*

**கொழுந்திலை** *kol̤undilai,* பெ.(n.) 1. தளிர்; tender leaf. 2. தேயிலை; tea (சா.அக.).

*[கொழுந்து + இலை.]*

**கொழுந்திலோதியம்** *kol̤undi-lōdiyam,* பெ.(n.) பேரகத்தி; West Indian sesbane (சா.அக.).

*[கொழுந்தி + லோதியம்.]*

**கொழுந்து[1]-தல்** *kol̤undu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. ஒளிர்தல்; to be kindled as fire. 2. காய்ச்சப்படுதல் (இ.வ.); to be heated. *"எரியழற் கொழுந்தும் வேலுய்த் திட்டென" (இரகு. யாகப். 27).* 3. வெயிலிற் கருகுதல்; to be burnt as by the sun.

*[குல் (எரிதல்) → குள் → குழு → கொழு → கொழுந்து.]*

**கொழுந்து[2]** *kol̤undu[2]-,* பெ.(n.) 1. இளந்தளிர் (இ.வ.); tender leaf. *"ஏற்ப விரீஇய விலையுங் கொழுந்தும்" (பெருங்.இலாவாண.2:143).* 2. இளமையானது; anything young. *"பிறைக்கொழுந்து" (நைடத.அன். தூது. 12).* 3. மென்மை (இ.வ.); tenderness. *"வாழை ... மடல்போலக் கொழுந்துள செவி" (சூடா. 12:150).* 4. நடுதற்குரிய பதியம்; shoot of plant cut for planting. 5. ***மருக்கொழுந்து*** பார்க்க; see *maru-k-kol̤undu. "கொழுந்து செவ் வந்தி" (கந்தபு. இந்திரன். 42).* 6. வெற்றிலை; betel. 7. ஒளிர்தல் (இ.வ.); fragrance. *"அயற் கொழுந்து" (கந்தபு. இரண்டா. சூர. 359).* 8. படை முதலியவற்றின் முன்னிரை; front rank as of an army (இ.வ.). *"சேனையின் கொழுந்துபோய்க் கொடிமதின் மிதிலையி னெல்லை கூடிற்றே" (கம்பரா. எழுச்சி. 24).* 9. சாமரை முதலியவற்றின் நுனி; tips, as of a *kavari* (இ.வ.). *"கொழுந்துடைய சாமரை" (கம்பரா. கோலங். 25).*

**ம.** கொழுன்னு, கொளுந்து.

*[குள் → கொழு → கொழுந்து (மு.தா. 40).]*

**கொழுந்துக்கால்** *kol̤undu-k-kāl,* பெ.(n.) வெற்றிலைக் கொடிக்கு நடும் கொழுகொம்பு; stick or pole planted to support the betel creeper.

*[கொழுந்து + கால்.]*

**கொழுந்துகிள்ளி** *kol̤undu-kil̤l̤i,* பெ.(n.) நட்புப் பிரிப்பவன்; mischief-maker.

*[கொழுந்து + கிள்ளி.]*

மேலும் துளிர்த்துத் தளிரவிடாமல் கொழுந்துகளைக் கிள்ளிச் செடியின் வளர்ச்சி தடுப்பது போல் குடும்பம் அல்லது நாட்டின் வளர்ச்சி கெடுப்பவனும் நண்பர் உறவினர்க்குத் தீங்கு விளைவிப்பவனும் பெற்ற உருவகப்பெயர்.

**கொழுந்துடைமாது** *koluntudai-mādu*, பெ.(n.) ஒருவகைக் கள்ளி அதாவது கொம்புக்கள்ளி; any spurge of the eupborbia genus grown near a village. But it generally refers to the creeper (சா.அக.).

*[கொழுந்து → கொழுந்துடை.]*

**கொழுந்துதல்** *kolundudal-*, பெ.(n.) 1.வெயிலினால் கருகுதல்; being scorched. 2. கொழுந்து விட்டெரிதல்; burning with a brilliant flame. 3. பழுக்கக் காய்ச்சப்படுதல்; being heated to redness as iron in a forge (சா.அக.).

*[குல் → குள் → குழு → கொழு → கொழுந்து.]*

**கொழுந்து நீரோட்டம்** *kolundu-nirōttam*, பெ.(n.) ***கோலம்²*** பார்க்க; see *kōlam²*.

*[கொழுந்து + நீரோட்டம்.]*

**கொழுந்துபதி-த்தல்** *kolundu-padi-*, 4 செ.கு.வி. (v.i.) கிளைக்கும்படி கொடியை நடுதல்; to plant a stoloniferous stem.

*[கொழுந்து + பதி.]*

**கொழுந்துமணல்** *kolundu-maṇal*, பெ.(n.) மென் மணல்; soft sand with which goldsmiths clean jewels (சா.அக.).

*[கொழுந்து + மணல்]*

**கொழுந்துவிடு-தல்** *kolundu-vidu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. தளிர்விடுதல் (இ.வ.); to send forth tender shoots. *"கொழுந்துவிட் டோடிப் படரும்" (திவ். இராமானுச நூற். 61).* 2. ஒளிர்விடுதல்; to blaze up. *"கொழுந்துவிட் டெரியும் பசித்தழல்" (குசேலோ. குசேலர்மேல் கட. 52).*

*[கொழுந்து + விடு.]*

**கொழுந்துவேர்** *kolundu-vēr*, பெ.(n.) இளவேர்; tender and slender root (சா.அக.).

*[கொழுந்து + வேர்.]*

**கொழுந்தொட்டி** *kolun-totti*, பெ.(n.) புல்வகை (வின்); sticking-grass

*[கொழுமை + தொட்டி.]*

**கொழுந்தோடு-தல்** *kolundōdu-*, 9 பெ.(n.) ***கொழுந்துவிடு-தல்*** பார்க்க;see *kolundu-vidu-* (இ.வ.). *"படர்ந்துகொழுந் தோடுதென் மனப்பந்தலிலே" (தனிப்பா. ii. 137, 347).*

*[கொழுந்து + ஓடு.]*

**கொழுநன்** *kolunaṉ*, பெ.(n.) 1. கணவன் (இ.வ.); husband. *"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழு தெழுவாள்" (குறள். 55).* 2. இறைவன் (சூடா.); Lord.

**Fin.** kosija (suitor); **Turk.** koca (husband); **Jap.** kazoku; **O.Jap.** kasumu (to take by force); **Q.** qusa (husband).

*[கொள் → கொளுவு → கொழுவு → கொழுநன். கொழுவுதல் = அணைத்துக்கொள்ளல். கொழுநன் = மணந்து கொள்பவன்.]*

**கொழுநிழல்** *kolu-nilal*, பெ.(n.) குளிர்ந்த நிழல்; cool shadow, pleasant shadow.

*[கொழு + நிழல்.]*

**கொழுநீர்** *kolu-nir*, பெ.(n.) 1. பெருகிய நீர் (இ.வ.); abundance of water. *"கோமுகி யென்னுங் கொழுநீ ரிலஞ்சி" (மணிமே. 11:39).* 2. மிகப் புளித்த கள்; highly fermented toddy. 3. வியர்வை (யாழ். அக.); sweat. 4. பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கரண்டியின் நுனியை நனைத்துத் தரப்படும் நீர்; water in which hot iron ladle is dipped.

*[கொழு = பெருகிய. கொழு + நீர்.]*

**கொழுப்படை-த்தல்** *koluppadai-*, 4 செ.கு.வி. (v.i.) தொண்டையிற் கொழுப்படைத்தல்; obstruction of the throat by fatty tissue which renders respiration difficult (சா.அக.).

*[கொழுப்பு + அடை.]*

**கொழுப்பமிலம்** *koluppamilam*, பெ.(n.) கொழுப்புப் பொருளுள்ள அமிலம்; fatty acid.

*[கொழுப்பு + அமிலம்.]*

**கொழுப்பயன்** *koluppayaṉ*, பெ.(n.) வேளாண் மையில் கிடைக்கும் வருவாய்; net income or gain in Agriculture.

*[கொழுப்பு + பயன்.]*

**கொழுப்பழிவு** *kolup-p-alivu*, பெ.(n.) உடலில் உள்ள கொழுப்பு நீங்குகை; lypolysis.

*[கொழுப்பு + அழிவு.]*

**கொழுப்பான** *kolu-p-pāṉa*, பெ.எ.(adj.) நிணமுள்ள; lardaceous; plumpy (சா.அக.).

**கொழுப்பிறக்கு-தல்** *kolup-p-irakku-,* 9 செ. குன்றாவி.(v.t.) செருக்கடக்குதல்; to reduce one's pride.

*[கொழுப்பு + இறக்கு.]*

**கொழுப்பு** *koluppu,* பெ.(n.) 1. செழிப்பு (பிங்.); richness. 2. நிணம் (பிங்.); fat. 3. தசைவளம்; plumpness. *"கழிப்புநீ ராரலொடு கொழுப்பிறாக் கொளீஇய" (பெருங். மகத. 4:42).* 4. குழம்பா யிருக்கை; thickness in consistency, as sandal paste. 5. தினவு; sauciness, impudence. 6. நிலத்தின் மதர்ப்பு; state of soil being too rich to be productive. 7. சாந்துப் பூச்சின்மேல் நுண்மையான சுதை அல்லது கெட்டியான சுதைமாக் (சிமிண்ட்) கரைசலை வைத்து அழுத்துவது; pressing the paste like substance on the already pasted area.

**ம.** கொழுப்பு; **க.** கொப்பு, கொர்பு; **தெ.** க்ரொவ்வு, கொவ்வு; **து.** கொம்மெ; **துட.** கோவ், க்வாள்ப்; **கோத.** க்வாள்ப்; க்ரோக; **நா.** கொரு; **பர்.** கொர்.

*[குள் → குழு → கொழு → கொழுப்பு.]*

**கொழுப்புக்கட்டி** *koluppu-k-katti,* பெ.(n.) நிணக்கழலை (இங்.வை. 306); fatty tumour.

*[கொழுப்பு + கட்டி.]*

**கொழுப்புக்கரை-தல்** *koluppu-k-karai-,* 4 செ.கு.வி.(v.i.) உடலில் உள்ள கொழுப்புச் சத்துகளின் அளவு நாளுக்கு நாள் குறைதல்; deterioration of the fatty substance in the tissues; the splitting up of fat (சா.அக.).

*[கொழுப்பு + கரை.]*

**கொழுப்புக்கல்** *koluppu-k-kal,* பெ.(n.) சிவப்புக் கல்வகை (வின்.); a soft red stone.

*[கொழுப்பு + கல்.]*

**கொழுப்புக்கழலை** *koluppu-k-kalalai,* பெ.(n.) 1. கொழுப்பிருக்கும் சவ்வானது வளர்ந்து முடிச்சுப் போல் எழும்பிப் பிறகு நாளாவட்டத்தில் பெரிதாகும் ஒரு கட்டி; a tumour consisting of a mass of fatty matter enclosed in a thin capsule which, at first, resembles a knot and then developes gradually into a large swelling lipoma. 2. ***கொத்துக்கழலை*** பார்க்க;see *kottu-k-kalalai.* 3. பிடுக்கில் உண்டாகும் கொழுப்புக் கழலை; a fatty scrotal tumour (சா.அக.).

**மறுவ.** கொழுப்புக் கட்டி.

*[கொழுப்பு + கழலை.]*

**கொழுப்புக்குடல்** *koluppu-k-kudal,* பெ.(n.) ஆட்டின் சிலுப்பிக் குடல் (வின்.); a part of intestine of sheep or goats.

*[கொழுப்பு + குடல்.]*

**கொழுப்புக்கேடு** *koluppu-k-kēdu,* பெ.(n.) கொழுப்புச் சத்து அழிதல்; necrosis of the fatty tissue (சா.அக.).

**மறுவ.** கொழுப்புளுத்தல்.

*[கொழுப்பு + கேடு.]*

**கொழுப்புக்கொள்(ளு)-தல்** *koluppu-k-kol(lu)-,* 10 செ.கு.வி. (v.i.) 1. கொழுத்தல்; getting fat. 2. கொழுப்பை இழுத்துக்கொள்ளல்; absorbing fat (சா.அக.).

*[கொழுப்பு + கொள்(ளு).]*

**கொழுப்புச்சதை** *koluppu-c-cadai,* பெ.(n.) ஊழற்சதை; flabbiness.

*[கொழுப்பு + சதை.]*

**கொழுப்புப்பிடி-த்தல்** *koluppu-p-pidi-,* 4 செ.கு.வி. (v.i.) கொழுப்புண்டாதல்; formation of fat (சா.அக.).

*[கொழுப்பு + பிடி.]*

**கொழுப்புப்பிண்டம்** *koluppu-p-pindam,* பெ.(n.) 1. கொழுப்புத் திரட்சிப் பிணங்கள் தண்ணீரில் நாட்படக் கிடந்து அழுகுவதாலும், ஈர மண்ணில் புதைந்து கிடப்பதாலும் உண்டாகும் மெழுகு போன்ற பூசான் படிவு; a soft, unctuous or waxy substance formed from the decomposition of dead bodies under certain circumstances as long immersion in water, burial in moist earth etc., adipocere. 2. உறைந்த கொழுப்புருண்டை; a lump of congealed fat (சா. அக.).

*[கொழுப்பு + பிண்டம்.]*

**கொழுப்புமடி** *koluppu-madi,* பெ.(n.) பால் தராத பெருத்த மடி; fleshy udder of a cow, not yielding.

**தெ.** க்ரொவ்வு, கொவ்வு.

*[கொழுப்பு + மடி.]*

**கொழுப்புமயக்கம்** *koluppu-mayakkam,* பெ.(n.) உடம்பில் கொழுப்பினால் உண்டாகும் மயக்கம் அல்லது மூர்ச்சை; faintness or swooning due to fat in the system (சா.அக.).

*[கொழுப்பு + மயக்கம்.]*

**கொழுப்புமிஞ்சுதல்** *koluppu-miñjudal,* 5 செ.குன்றாவி.(v.t.) உடம்பில் கொழுப்பு அளவுக்கு மீறிச் சேர்தல்; excessive accumulation of fat in the body - obesity (சா.அக.).

**மறுவ.** கொழுப்பேறல்.

*[கொழுப்பு + மிஞ்சுதல்.]*

**கொழுப்புமூத்திரம்** *koluppu-mūttiram,* பெ.(n.) குண்டிக்காய் நோயினால் ஏற்படும் கொழுப்புக் கலந்த சிறுநீர்; urine marked by the presence of fat in it (சா.அக.).

*[கொழுப்பு + மூத்திரம்.]*

**கொழுப்புளு–த்தல்** *koluppulu-,* 14 செ.கு.வி.(v.i.) கொழுப்புச்சத்துச் சிதைதல்; necrosis of the fatty tissue (சா.அக.).

*[கொழுப்பு + உளு.]*

**கொழும்காகதாளி** *kolum-kāgatāli,* பெ.(n.) ஆச்சா; Ceylon ebony-Diospyros ebenum (சா.அக.).

*[கொழு → கொழும் + காகதாளி.]*

**கொழும்பு** *kolumbu,* பெ.(n.) இலங்கையின் தலைநகரம் (இ.வ.); modern capital of Sri Lanka. *"கயக்காவி நாறுங் கொழும்பிற் ப்ரசண்டா" (தமிழ்நா.146).*

*[கலம் + கோம்பு – கலக்கோம்பு (கப்பல் தங்கும் கடல்முகம்) கலம்பு → கொலம்பு → கொழும்பு (கொ.வ.).]*

**கொழும்புக்கிழங்கு** *kolumbu-k-kilangu,* பெ.(n.) ***கொழும்புவேர்*** பார்க்க; see *kolumbu-vēr* (யாழ்ப்.).

*[கொழும்பு + கிழங்கு.]*

**கொழும்புக்கொட்டை** *kolumbu-k-kottai,* பெ.(n.) இலங்கையிற் பயிராகும் காப்பிக்கொட்டை; Ceylon coffee.

**மறுவ.** கொழும்புக்கோப்பி.

*[கொழும்பு + கொட்டை.]*

**கொழும்புக்கொட்டைக்களா** *kolumbu-k-kottai-k-kalā,* பெ.(n.) 1. இலங்கைக் கொட்டைக்களா; Ceylon plum. 2. ***கொழும்புப்பழம்*** பார்க்க; see *kolumbu-p-palam.*

*[கொழும்பு + கொட்டை + களா.]*

**கொழும்புகா** *kolumbugā,* பெ.(n.) நன்னாரி வேர்; Indian sarsaparilla (சா.அக.).

*[கொழும் + புகா (உண்ணத்தக்கது).]*

**கொழும்புகை** *kolum-bugai,* பெ.(n.) நறும்புகை; perfume (சா.அக).

*[கொழும் + புகை.]*

**கொழும்புச்சவ்வரிசி** *kolumbu-c-cavvariši,* பெ.(n.) இலங்கைப் பனையிலிருக்கும் சவ்வரிசி; Ceylon sago, a product of Ceylon sago-palm (சா.அக.).

*[கொழும்பு + சவ்வரிசி.]*

**கொழும்புச்சாராயம்** *kolumbu-c-cārāyam,* பெ.(n.) தென்னங்கள்ளினின்று வாலையி லிட்டிறக்கிய சாராயம்; Colombo arrack distilled from the juice of coconut palm (சா.அக.).

*[கொழும்பு + சாராயம்.]*

**கொழும்புச்சிவகரந்தை** *kolumbu-c-civa-karandai,* பெ.(n.) சுரக்கரந்தை; fever toolsy or Ceylon toolsy (சா.அக.).

*[கொழும்பு + சிவகரந்தை.]*

**கொழும்புச்சேவகன்** *kolumbu-c-cēvagaṉ,* பெ.(n.) இலங்கையில் பயிராகும் சிற்றாமுட்டி; Ceylon pavonia (சா.அக.).

*[கொழும்பு + சேவகன்.]*

**கொழும்புத்தேங்காய்** *kolumbu-t-tēngāy,* பெ.(n.) ஈழத்துத் தேங்காய்; Ceylon coconut (சா.அக.).

*[கொழும்பு + தேங்காய்.]*

**கொழும்புத்தேயிலை** *kolumbu-t-tēyilai,* பெ.(n.) 1. இலங்கைத் தேயிலை; Ceylon tea or Indian tea. 2. கருக்குவாலி; deccany olive wood (சா.அக.).

*[கொழும்பு + தேயிலை.]*

**கொழும்புநாரத்தை** *kolumbu-nārattai,* பெ.(n.) ஈழத்து நாரத்தை; green orange of Ceylon.

*[கொழும்பு + நாரத்தை.]*

**கொழும்புநாவல்** *kolumbu-nāval,* பெ.(n.) வெண்ணாவல்; white jammon.

*[கொழும்பு + நாவல்.]*

**கொழும்புப்பட்டை** *kolumbu-p-pattai,* பெ.(n.) ஈழத்து இலவங்கப்பட்டை; Ceylon cinnamon.

*[கொழும்பு + பட்டை.]*

**கொழும்புப்பழம்** *kolumbu-p-palam,* பெ.(n.) மோரீசு கொட்டைப் பழம் எனவும் வழங்கப்படும் ஈழத்துக் கொட்டைக்களா; Ceylon plum-flacourtia

mamontechi. It is also known as Mauritius plum. The nut of this fruit ground with turmeric is prescribed for lying in women to prevent absorption of moisture in the system.

[கொழும்பு + பழம்.]

மறுவ. மோரீசு கொட்டைப்பழம்.

இதனை மஞ்சளுடன் அரைத்துப் பூசக் கருவுயிர்த்த பெண்களுக்கு ஈரம் தங்காது. இதன் முள் அம்மைப்பால் எடுக்க உதவும்.

**கொழும்புப்பனை** *koḻumbu-p-paṉai,* பெ.(n.) ஈழநாட்டுத் தாளிப் பனை; Ceylon fan tree.

[கொழும்பு + பனை.]

**கொழும்புப்பாக்கு** *koḻumbu-p-pākku,* பெ.(n.) ***கொட்டைப்பாக்கு*** பார்க்க; see *koṭṭai-p-pākku.*

[கொழும்பு + பாக்கு.]

**கொழும்புப்பாசி** *koḻumbu-p-pāši,* பெ.(n) இலங்கைக் கடற்பாசி; Ceylon moss.

[கொழும்பு + பாசி.]

**கொழும்புப்பிசின்** *koḻumbu-p-pišiṉ,* பெ.(n.) சோலைப் புளி; Ceylon gamboge (சா.அக.).

[கொழும்பு + பிசின்.]

**கொழும்புமுல்லை** *koḻumbu-mullai,* பெ.(n.) நந்தியா வட்டம்; Ceylon jasmine (சா.அக.).

[கொழும்பு + முல்லை.]

**கொழும்புவேர்** *koḻumbu-vēr,* பெ.(n.) சீனவேர்; China root.

[கொழும்பு + வேர்.]

**கொழும்புவைரம்** *koḻumbu-vairam,* பெ.(n.) ஈழ நாட்டு வைரம் போன்ற ஒரு கல்; a mineral of Ceylon esteemed in jewellery (சா.அக.).

மறுவ. துவரைமல்லி.

[கொழும்பு + வைரம்.]

**கொழுமகொண்டான்** *koḻuma-koṇḍāṉ,* பெ.(n.) திண்டுக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tindukkal Dt.

[கொல்லன் → கொலுவன் → கொலுமன் → கொழுமன் + கொண்டான்.]

**கொழுமடை** *koḻu-maḍai,* பெ.(n.) திருநெல்வேலி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thirunelveli Dt.

[கொழு + மடை.]

**கொழுமம்** *koḻumam,* பெ.(n.) கோவை மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Kōvai* Dt.

[கொழு → கொழுமம்.]

**கொழுமரம்** *koḻu-maram,* பெ.(n.) செம்மரம் (மலை.); Coramandal redwood.

[கொழு + மரம். கொழு = செழுமை, பருமை.]

**கொழுமாமிகம்** *koḻu-māmigam,* பெ.(n.) பேரவுரி; a variety of Indigo plant with large leaves (சா.அக.).

[கொழும் + ஆமிகம்.]

**கொழுமிச்சை** *koḻumiccai,* பெ.(n.) 1. நாரத்தை; bitter orange (மலை.). 2. கிச்சிலி வகை; sylhet orange.

[கொழு → கொழுமித்தை → கொழுமிச்சை.]

**கொழுமீதி** *koḻu-mīdi,* பெ.(n.) அரசுவரிபோக நில உடைமையாளர் அடையும் நில வருமானம் (W.G.); net income from land after paying land Revenue.

[கொழு = ஏர், உழவு. கொழு + மீதி.]

**கொழுமீன்** *koḻu-mīṉ,* பெ.(n.) 1. கழிமீன் வகை (இ.வ.); backwater fish. *"இருங்கழிவாய்க் கொழுமீ னுண்ட வன்னங்களே" (திருக்கோ.188).* 2. எண்ணெய்ச் சத்துள்ள நெத்திலி மீன்; anchovy fish.

ம. கொழுமீன்.

[கொழு + மீன்.]

**கொழுமுகை** *koḻu-mugai,* பெ.(n.) கொழுவிய அரும்பு; fragrant tender shoot (வேளாண்.கலை).

[கொழு + முகை.]

**கொழுமுதல்**[1] *koḻu-mudal,* பெ.(n.) மரத்தின் பருத்த அடிப்பாகம் (இ.வ.); stout stem of a tree. *"கொழு முதற் றெங்கொடு" (பெருங்.மகத.19:40).*

[கொழு + முதல். கொழு - திரண்ட, பருத்த. முதல் = அடிப்பகுதி.]

**கொழுமுதல்**[2] *koḻu-mudal,* பெ.(n.) நில வருவாயில் அரசு வரிபோக நிலவுரிமையாளர் பெறும் பங்கு (யாழ்.அக.); owner's share of the produce of a field after deducting the government dues.

[கொள்முதல் → கொளுமுதல் → கொழுமுதல்.]

**கொழுமுறி** *kol̤u-muṟi*, பெ.(n.) இளந்தளிர்; tender shoot (சா.அக.).

*[கொழு + முறி.]*

**கொழுமை** *kol̤umai*, பெ.(n.) 1. செழுமை (பிங்.); fertility. 2. இளமை (சிலப்.4:39); freshness. 3. அழகு (பொருந.26); beauty. 4. நிறம் (திவா.); colour. 5. குளிர்ச்சி (மதுரைக்.406); coolness.

- **Gk.** kallos, kolos.

*[கொழு → கொழுமை.]*

**கொழுமோர்** *kol̤u-mōr*, பெ.(n.) குழந்தைகள் திடீரென்று கொண்ட அச்சத்தைப் போக்கக் காய்ச்சிய கொழுவைத் தோய்த்துக் கொடுக்கும் மோர் (இ.வ.); buttermilk heated by thrusting a hot iron spoon into it, and given to children when affected with sudden fright.

*[கொழு + மோர்.]*

**கொழுலாபம்** *kol̤u-lābam*, பெ.(n.) ***கொழுப்பயன்*** பார்க்க; see *kol̤u-p-payaṉ*.

மறுவ. கொழுப்பயன், கொழு ஆதாயம்.

*[கொழு = ஏர், உழவு. கொழு + லாபம்.]*

**கொழுவடி-த்தல்** *kol̤u-vaḍi-*, 4 செ.கு.வி. (v.i.) கலப்பை முனையில் பொருத்தப்படும் கொழுக் கம்பியைக் கூராக்குதல்; to make sharp the iron rod of a plough.

*[கொழு + வடி-.]*

**கொழுவனூர்** *kol̤uvaṉūr*, பெ.(n.) புதுக்கோட்டை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Pudukkottai Dt.

*[கொழுவன் + ஊர்.]*

**கொழுவாப்பு** *kol̤u-v-āppu-*, பெ. (n.) கலப்பையின் கொழுக் கழன்று போகாமலிருக்க அடிக்கும் ஆப்பு; wedge used to tight plough share.

ம. கொழுவாப்பு.

*[கொழு + ஆப்பு]*

**கொழுவாரம்** *kol̤u-vāram*, பெ.(n.) குடியானவனுக்கு உரிய வாரம்; cultivators share of the produce. *மேல்வாரம் நீக்கிக் கொழுவாரத்தால் பூசை நடக்கும் (S.I.I.VIII.234).*

*[கொழு + வாரம்.]*

**கொழுவாரி** *kol̤u-vāri-*, பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[கொழு + வாரி (விளைச்சல்).]*

**கொழுவிறக்கு-தல்** *kol̤u-v-iṟakku-*, 4 செ. குன்றாவி.(v.t.) வேளாண்பணி தொடங்குதல்; to start agricultural activities.

ம. கொழுவிறக்குக.

*[கொழு + இறக்கு-.]*

**கொழுவு**[1] *kol̤uvu-*, பெ.(n.) ***கொழுகொழுப்பு*** பார்க்க; see *kol̤u-kol̤uppu*.

*[கொழு → கொழுவு.]*

**கொழுவு**[2]**-தல்** *kol̤uvu-*, 5 செ.குன்றாவி.(v.t.) தொங்கவிடுதல்; to hang. *"குடையைத் தோளில் கொழுவிக் கொண்டு புறப்பட்டான்" (கிரி.).*

*[கொழு → கொழுவு.]*

**கொழுவுகதவு** *kol̤uvu-kadavu*, பெ.(n.) கீற்கதவு; door with hinges.

*[கொழுவு + கதவு.]*

**கொழுவுகோல்** *kol̤uvu-kōl*, பெ.(n.) கொழுகொம்பு (இ.வ.); stick or pole for supporting a creeper. *"கொழுவு கோலுறாக் கொடியென" (வரத.பாகவத. நாரசிங். 64).*

*[கொழுவு + கோல்.]*

**கொழுவை-த்தல்** *kol̤u-vai-*, 4 செ.கு.வி. (v.i.) ***கொழுவிறக்கு-தல்*** பார்க்க; see *kol̤u-v-iṟakku-*.

ம. கொழுவய்க்குக.

*[கொழு + வை-.]*

**கொழை** *kol̤ai*, பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Cudalur Dt.

*[குழை → கொழை.]*

**கொள்(ளு)**[1]**-தல்** *koḷ(ḷu)-*, 10 செ.குன்றாவி. (v.t.) 1. கையில் எடுத்துக்கொள்ளுதல் (இ.வ.); to seize. *"கொண்ட வாளொடும்" (சீவக.430).* 2. பெறுதல் (இ.வ.); to receive as a gift. *"நல்லா றெனினுங் கொளறீது" (குறள்.222).* 3. விலைக்கு வாங்குதல் (இ.வ.); to buy. *"கோதையினுங் கொள்வார்" (நைடத.நகரப்.18).* அறப்படித்தவன் அங்காடி போனால் விற்கவும்மாட்டான், கொள்ளவும் மாட்டான் (பழ). 4. உரிமையாகக் கொள்ளுதல் (இ.வ.); to acquire. *"விடலையைக் காண வோடி...வீதி கொண்டார்" (சீவக.457).* 5. திருமணம் செய்தல் (இ.வ.); to marry. *"தாங்கொண்ட மனையாளை" (நாலடி.3).* 6. கவர்தல் (இ.வ.); carry off.

"மனையாளை மாற்றார் கொள" (நாலடி.3). 7. தன்னுட் கொள்ளுதல் (இ.வ.); to contain. "சிதரரிக் கண்கொண்ட நீர்" (நாலடி. 394). 8. முகத்தல் (இ.வ.); to draw in. "குணகடல் கொண்டு குடகடன் முற்றி" (மதுரைக்.238). 9. கற்றுக்கொள்ளுதல் (இ.வ.); to learn. "கொள்ளுநர் கொள்ள" (கல்லா.11:21). 10. கருதுதல் (இ.வ.); to consider. 'யார்க்குங்கொடுத் தியெனக் கொள்கின்றிலம்' (இலக்.வி.650, உரை). 11. நன்கு மதித்தல் (இ.வ.); esteem. "கொளப்பட்டே மென்றெண்ணி" (குறள். 699). 12. கொண்டாடுதல் (இ.வ.); to celebrate. "தண்பதங் கொள்ளுந் தலை நாட் போல" (சிலப்.6:160). 13. ஒப்பளித்தல் (இ.வ.); approve. "உய்ஞ்சன னிருத்தலு முலகங் கொள்ளுமோ" (கம்பரா.உருக்கா.17). 14. மேற் கொள்ளுதல் (இ.வ.); observe. "குடிப்பிறந்தார் குன்றா வொழுக்கமாக் கொண்டார்" (நாலடி.143). 15. மனம் பொறுத்தல் (தொல்.பொருள்.147, உரை, ப.658); endure. 16. ஒத்தல்; resemble (இ.வ.). "வண்டினம் யாழ்கொண்ட கொளை" (பரிபா.11:125). 17. பொருந்துதல் (இ.வ.); befit. "கொள்ளாத கொள்ளா துலகு" (குறள். 470). 18. உடலிற் காயம்படுதல்; hurt. கல்லுக் காலிற் கொண்டது.

ம. கொள்ளுக; க. கொள், கொளு, கொள்ளு; தெ. கொனு; து. கொனுனி; கோத. கொள்; துட. க்விஸ்; குட. கொள்ளு; நா. கொச; கொய்; கூ. கொட; குவி. கொர்ச்சினை; கொலா. கொச்ல; பட. கொண்ணு.

E. get; Mod. geten; ON. get; OE. gietan; L. hendere; Alb. gen; Weld. gannu.

[குல் → குள் → கொள்.]

**கொள்**[2] *kol-*, து.வி.(aux.v.) 1. தற்பொருட்டில் வரும் ஒரு துணைவினை; an auxilary which makes a verb reflexive as in. பிடித்துக்கொள். 2. எதிர் மறை ஏவல் ஒருமை வினையோடு சேர்க்கப்படும் ஓர் அசை (கலித்.115, உரை); an expletive added to neg.imp.sing.verb, as in அஞ்சாதே கொள்.

[குல் → குள் → கொள்.]

**கொள்**[3] *kol*, பெ.(n.) 1. காணம் (பிங்.); a shrub. 2. குடைவேல்; umbrella thorn-babul. "உண்ணா வர கொடு கொள்வித் தின்று" (வெ.6: 26, கொளு.). 3. முற்காலத்தில் வழங்கிய சிறு நிறையளவு (தொல். எழுத்து. 164, உரை); a small measure of weight used in ancient times.

[குல் (வளைதல்) → குள் → கொள்.]

**கொள்**[4] *kol*, பெ.(n.) வளைந்த காயுள்ள பயற்றுவகை; horse gram. "காயுங் கோணக்காய் சொல்லடா மைத்துனா கதையும் விடுவித்தேன் கொள்ளடா மைத்துனா" (விடுகதை). 'கொள்' என்றால் வாயைத் திறக்கிறது; கடிவாளம் என்றால் வாயை மூடுகிறதா? (பழ).

ம. கொள்; து. குடு; பட. கொள்ளு; பர். கொல்; Skt. kulatta.

மறுவ. காணம்.

[குள் → கொள் (வே.க.163).]

**கொள்கலம்** *kol-kalam*, பெ.(n.) 1. பண்டம் இடுங்கலம் (இ.வ.); receptacle. "இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ" (குறள். 1029). 2. பனை யோலை, மூங்கில் இவற்றால் ஆகிய கூடை; basket made of palm leaf or bamboo.

[கொள் + கலம்.]

**கொள்கிரயம்** *kol-kirayam*, பெ.(n.) 1. **கொள்முதல்** பார்க்க; see *kol-mudal*. 2. விலைக்குக் கொண்ட பொருள்; purchase, anything purchased.

[கொள் + கிரயம்.]

**கொள்கை** *kolgai*, பெ.(n.) 1. பெறுகை; taking. "பலியிடிற் கொள்கை பழுது" (சைவச. பொது.338). 2. கோட்பாடு; doctrine. "குடிப்பிறப் பாளர்தங் கொள்கையிற் குன்றார்" (நாலடி.141). 3. செயற்பாட்டுத்திட்டம்; policy. அரசின் புதிய கல்விக் கொள்கை நன்றாக இருக்கிறது (உ.வ.). 4. நெறிமுறை; principle, tenet, doctrine. 5. நோன்பு; vow. "தாவில் கொள்கை" (திருமுருகு.89). 6. ஒழுக்கம்; conduct. "குலந்தீது கொள்கை யழிந்தக் கடை" (நான்மணி.94). 7. நிகழ்ச்சி; event. "புகுந்த கொள்கை யுடனுறைந் தறிந்தா னென்ன" (கம்பரா.முதற்போர்.132). 8. இயல்பு; quality. "கொம்பினின்று நுடங்குறு கொள்கையார்" (கம்பரா.கிளை.10). 9. செருக்கு; pride. "தங்கிய கொள்கைத் தருநிலைக் கோட்டத்து" (சிலப்.5:145). 10. நட்பு; fondness. 11. ஏன வகை; a kind of vessel (I.M.P.Pd.300).

[கொள் + கை.]

**கொள்கைக்கண்ணோட்டம்** *kolgai-k-kannōttam*, பெ.(n.) கருத்தளவில் நோக்குதல்; theoretical sense.

[கொள்கை + கண்ணோட்டம்.]

**கொள்கைப்பற்று** *kolgai-p-parru*, பெ.(n.) கொண்ட கோட்பாட்டின்மேல் கொண்டுள்ள பிடிப்பு; attachment to principle.

மறுவ. கொள்கைப் பிடிப்பு.

*[கொள்கை + பற்று.]*

**கொள்கையிடம்** *kolgai-y-idam,* பெ.(n.) தவச்சாலை; mutt. *"கோலங் குயின்ற கொள்கை யிடங்களும்" (மணிமே.28:67).*

*[கொள்கை + இடம்.]*

**கொள்கொம்பு** *kol-kombu,* பெ.(n.) 1. கொழுகொம்பு (இ.வ.); supporting post. *"கொள்கொம் பொடியக் கொடிவீழ்ந் ததுபோல்" (கம்பரா. சடாயுவு.130).* 2. சார்பு; dependence. 3. புகலிடம்; place of refuge, asylum.

*[கொள் + கொம்பு.]*

**கொள்பு** *kolbu,* பெ.(n.) கொள்கை; theory.

*[கொள் + பு – கொள்பு (படைத். பாவாணர்).]*

**கொள்பொற்றி** *kol-porri,* பெ.(n.) திருமேனிகட்குக் காதணியாகச் சாத்தும் பொன் அணிகலன்; gold ear ornament to be worn by idol. *"திருக்காதில் சாத்தும் கொள்பொற்றிநால்" (தெ.கல்.தொ.5. கல்.644).*

*[கொள் + பொற்றி.]*

**கொள்முதல்** *kol-mudal,* பெ.(n.) 1. வாங்கின விலை; cost price. 2. பெருமளவில் வாங்குதல்; procurement as a lot. தேவையான சருக்கரையைக் கொள்முதல் செய்ய வெளிநாடு சென்றிருக்கிறார் (உ.வ.).

*[கொள் + முதல்.]*

**கொள்வரி** *kol-vari,* பெ.(n.) நெல்லாய வகை, தவசமாகப் பெறும் வரி வகை; a tax in kind (S.I.I.IV,195).

*[கொள் + வரி.]*

**கொள்வனவு** *kol-vanavu,* பெ.(n.) 1. கொள்ளுகை; receiving, taking, borrowing, buying. 2. பெண் கொள்ளுகை; taking in marriage.

மறுவ. கொள்வினை.

*[கொள்வினை → கொள்வனவு.]*

**கொள்வனை** *kolvanai,* பெ.(n.) 1. கொள்ளுகை; buying, borrowing. 2. பெண் கொள்ளுகை; taking in marriage.

*[கொள்வினை → கொள்வனை.]*

**கொள்வனைகொடுப்பனை** *kolvanai-koduppanai,* பெ.(n.) 1. கொடுக்கல் வாங்கல்; borrowing and lending. 2. பெண்ணைக் கொடுத்துப் பெண்ணை எடுக்கும் திருமணத் தொடர்பு; giving and taking in marriage, intermarrying.

மறுவ. கொள்வினை கொடுப்பினை.

*[கொள்வனை + கொடுப்பனை.]*

**கொள்விலை** *kol-vilai,* பெ.(n.) ***கொள்முதல்*** பார்க்க; see *kol-mudal.*

*[கொள் + விலை.]*

**கொள்விலைக்காணி** *kolvilai-k-kāni,* பெ.(n.) விலைக்கு வாங்கின நிலம்; land acquired by purchase.

*[கொள்விலை + காணி.]*

**கொள்வினை** *kol-vinai,* பெ.(n.) 1. கொள்ளுகை; buying, borrowing. 2. பெண் கொள்ளுகை; taking in marriage.

*[கொள் + வினை.]*

**கொள்வினை கொடுப்பினை** *kolvinai-koduppinai,* பெ.(n.) பெண் கொடுத்தோ பெண்ணெடுத்தோ செய்துகொள்ளும் உறவு; giving or taking a bride in marriage. அடுத்த ஊரில் நாங்கள் கொள்வினை கொடுப்பினை வைத்துக்கொள்வதில்லை (உ.வ.).

மறுவ. கொள்வனை கொடுப்பனை, கொண்டு கொடுத்தல்.

*[கொள்வினை + கொடுப்பினை.]*

**கொள்வோன்** *kolvōn,* பெ.(n.) 1. வாங்குவோன்; buyer one who accepts anything. 2. கற்போன்; student. *"கொள்வோன் கொள்வகை யறிந்து" (நன்.பொது.36).* 3. நான்காம் வேற்றுமை; dative case. *"பலவு மறைந்தனர் கொள்வோன்" (இலக்.கொத்.36).*

*[கொள் + (ஆன்) ஒன்.)]*

**கொள்ள** *kolla,* வி.எ. (adv.) 1. இன்னும்; further on. 2. நிரம்ப; as much as required. உணவு கொள்ளக் கிடைத்தது (இ.வ.). 3. காரணப் பொருளிலேனும் காலப் பொருளிலேனுமுள்ள செயவெனெச்சத்துடன் கூடி வருந் துணைவினை; an auxiliary used, for the sake of emphasis, along with another verbal participle denoting reason or time. நான் போகக் கொள்ளக் காரியம் நடந்தது.

*[கொள் + அ.]*

**கொள்ளட்டு** *kollattu,* பெ.(n.) 1. செடிவகை; ciliate-leaved yellow horse-gram. 2. உண்ணுவதற்காகச்

சமைக்கப்பட்டது; that which is cooked for eating.

*[கொள் + அட்டு. (அடு → அட்டு) அடுதல் : சமைத்தல்.]*

**கொள்ளத்தநல்லூர்** *kollatta-nallūr,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanjipuram Dt.

*[கொள்ளத்தன் + நல்லூர்.]*

**கொள்ளப்படு[1]-தல்** *kolla-p-padu-,* 20 செ.குன்றா வி. (v.t.) மனத்துக் கொள்ளுதல்; to take to heart. *"கொள்ளப் படாது மறப்ப தறிவிலென் கூற்றுக்களே" (திருக்கோ.87).*

*[கொள் + அ + படு-.]*

**கொள்ளப்படு[2]-தல்** *kolla-p-padu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. நன்கு மதிக்கப்படுதல்; to be held in esteem. *"கொளப்பட் டேமென்றெண்ணி" (குறள். 699).* 2. ஒப்பளிக்கப்படுதல்; to be approved.

*[கொள் + அ + படு-.]*

**கொள்ளம்** *kollam,* பெ.(n.) குழை சேறு; mud, slime. *"பாசடை பூத்த கொள்ளம் புகுந்து" (கல்லா.73:17), (பிங்.).*

ம. கொள்ளம்.

*[குள் → கொள் → கொள்ளம்.]*

**கொள்ளம்பாக்கம்** *kollam-bākkam,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanjipuram Dt.

*[கொள்ளன் + பாக்கம்.]*

**கொள்ளம்மை** *kollammai,* பெ.(n.) சுரம், பிதற்றல், மிகுகுளிர் முதலிய குணங்களுண்டாகி மூன்றாம் நாளில் தலையில் குருத்தோன்றிப் பிறகு குரு முதிர்ந்து 13ஆம் நாளில் இறங்கி, பக்குகள் உதிரும் ஓர் அம்மை; a kind of small-pox marked by eruptive fever, raving , delirium, fits etc. In this the eruptions make their appearence on the third day; and then pimples are developed to the size of horse-gram and become vesicles with watery head; and lastly they dry upon or about the 13th day when scabs fall of. cf. பயற்றம்மை (சா.அக.).

*[கொள் + அம்மை.]*

**கொள்ளல்** *kollal,* பெ.(n.) 1. உட்கொள்ளல்; taking in. 2. சாப்பிடுதல் அல்லது குடித்தல்; eating or drinking. 3. உயிர் கொள்ளல்; animation. 4. வேர் கொள்ளல்; taking root. 5. நோய் கொள்ளல்; being affected with illness; contracting a disease. 6. ஏனம் முதலியவற்றினுள்ளே அடங்குதல்; to contain in a vessel etc. 7. மனத்துக்குப் பிடித்தல்; to be contained as in a vessel, taking mind (சா.அக.).

ம. கொள்ளல் (ஏற்றுக்கொள்ளுதல், வாங்குதல்).

*[கொள் + அல்.]*

**கொள்ளளவு** *kol-alavu,* பெ.(n.) 1. பிடிக்குமளவு; as much as can be held-capacity. 2. உட்கொள்ளு மளவு; as much quantity as could be swallowed or eaten (சா.அக.).

*[கொள் + அளவு.]*

**கொள்ளற்பாடு** *kollar-pādu,* பெ.(n.) மேன்மை (யாழ்ப்.); worthiness.

*[கொள்ளல் + பாடு.]*

**கொள்ளன்** *kollan,* பெ.(n.) 1. குதிரைக் கொள்; horse-gram. 2. சிறுவிடுகொள் அல்லது பெருவிடு கொள்; an unknown plant probably referring to Indigo seed, as a collyrium in diseases of the eyes. 3. பண்டைக் காலத்து நிறைஅளவு; a small weight for weighing used in olden days. 4. கொள்ளுத் தவசம்; gram in general (சா.அக.).

*[கொள் + அன்.]*

**கொள்ளனூர்** *kollanūr,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvallur Dt.

*[கொள்ளன் + ஊர்.]*

**கொள்ளாக்குமரி** *kollā-k-kumari,* பெ.(n.) திருமணம் செய்து கொடுக்கப்படாத பெண்; un married girl. இவள் கொள்ளாக்குமரி (நெல்லை.).

*[கொள்ளா + குமரி.]*

கொள்ளாக்குமரி என்பதை கொள்ளாக்குமரு என்பது நெல்லை வழக்கு.

**கொள்ளாக்கொள்ளி** *kollā-k-kolli,* பெ.(n.) தணியாத உண்டிவிருப்ப முள்ளவன் (இ.வ.); a person with insatiable hunger for food.

*[கொள்ளா(த) + கொள் + இ.]*

**கொள்ளாக் கொள்ளை** *kollā-k-kollai,* பெ.(n.) ***கொள்ளாத கொள்ளை*** பார்க்க; see *kollāda-kollai.*

*[கொள்ளாத + கொள்ளை.]*

**கொள்ளாத கொள்ளை** *kollāda-kollai,* பெ.(n.) மிகுதி (யாழ்ப்.); plenty.

*[கொள்ளாத + கொள்ளை.]*

**கொள்ளாதசிறை** *kollāda-śirai*, பெ.(n.) அடிமை போல் உழைப்பவ-ன்-ள் (வின்.); slave-like, assiduous person.

*[கொள்ளாத (மிகுந்த) + சிறை.]*

**கொள்ளாத புகழ்** *kollāda-pugal*, பெ.(n.) அளவு கடந்த புகழ்; unbounded - praise.

*[கொள்ளாத → கொள்ளா + புகழ்.]*

**கொள்ளாமை** *kollāmai*, பெ.(n.) 1. மிகை; excessiveness. 2. பகை; enmity. 3. மனத்துக்குப் பிடியாமை; disagreement.

*[கொள் + ஆ + மை.]*

**கொள்ளார்**[1] *kollār*, பெ.(n.) 1. மனம் பொறாதவர்; envious person (இ.வ.). *'பொறாதாரைக் கொள்ளா ரென்பவாகலின்' (தொல்.பொருள்.147,உரை).* 2. பகைவர் (இ.வ.); enemies, foes. *"கொள்ளார் தேஎங் குறித்த கொற்றமும்" (தொல்.பொருள்.67).*

*[கொள் + ஆர் – கொள்ளார். (ஆ- எதிர்மறை இடைநிலை புணர்ந்து கெட்டது.)]*

**கொள்ளார்**[2] *kollār*, பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[கொள்ளாரை → கொள்ளார்.]*

**கொள்ளி** *kolli*, பெ.(n.) 1. ***கொள்ளிக்கட்டை*** பார்க்க; see *kolli-k-kattai. "புனவர் கொள்ளியில்" (ஐங்குறு. 295).* 2. நெருப்பு; fire. *"கைக்கொள் கொள்ளியர்" (நெடுநல்.8).* 3. பொறாமையும் கடுஞ்சீற்றமுள்ளவன்; jealous, quick - tempered person. 4. கலகம் மூட்டுபவன் (இ.வ.); one who kindles strife. கொள்ளி நாக்கன், வாய் திறந்தால் குடும்பம் அழிந்துவிடும் (பழ.). 5. கொள்ளி வைப்பவன், மகன் (இ.வ.); son. 6. எருமை நாக்கி (மலை.); buffalo - tongue milk hedge. கொள்ளியை இழுத்துப்போட்டால் கொதிக்கிறது அடங்கிவிடும் (பழ).

**ம., பட.**கொள்ளி; **க.** கொன்னி, கொன்னெ; **து.** கொள்ளி, கொல்லி; **கோத.** கொன்ய்; **து.** க்வின்ய்.

*[குல் → குள் → கொள் → கொள்ளி.]*

**கொள்ளிஅறை** *kolli-arai*, பெ.(n.) சுடுகாடு; burning ground. *"கொள்ளி அறையிற் கொளுந் தாமற் காக்கலாம்" (திருமந்.591).*

*[கொள்ளி + கட்டை.]*

**கொள்ளிக்கட்டை** *kolli-k-kattai*, பெ.(n.) எரிகட்டை; firebrand.

*[கொள்ளி + கட்டை.]*

**கொள்ளிக்கட்டைத் தேக்கு** *kolli-k-kattai-t-tekku*, பெ.(n.) பீநாறி; woolly-leaved firebrand teak (L.).

*[கொள்ளிக்கட்டை + தேக்கு.]*

**கொள்ளிக்கட்டை நண்டு** *kolli-k-kattai-nandu*, பெ.(n.) நீளுருட்டாய்த் தோன்றும் கடல் நண்டு; a kind of sea crab of cylinderical shape (மீன்.பிடி.தொ.).

*[கொள்ளிக்கட்டை + நண்டு.]*

**கொள்ளிக்கண்** *kolli-k-kan*, பெ.(n.) தீய கண்; evil eye.

*[கொள்ளி + கண்.]*

**கொள்ளிக்கண்ணன்/கண்ணி** *kolli-k-kannan/kanni*, பெ.(n.) கொடிய பார்வையை யுடையவன்/ள்; man or woman with fiery, evil eyes (சா.அக.).

*[கொள்ளி + கண்ணன்.]*

**கொள்ளிக்கரப்பான்** *kolli-k-karappān*, பெ.(n.) குழந்தைகட்கு வரும் கரப்பான்வகை; a skin disease of children characterised by the development of blobs upon different parts of the body.

*[கொள்ளி + கரப்பான்.]*

**கொள்ளிக்கருவாடு** *kolli-k-karuvādu*, பெ.(n.) ஒருவகைக் கருவாடு; a kind of salted and dried fish (பதார்த்த. 929).

*[கொள்ளி + கருவாடு.]*

**கொள்ளிக்கன்னி** *kolli-k-kanni*, பெ.(n.) வன்னி வாகை; fragrant Acacia.

**மறுவ.** காட்டுத்துரிஞ்சில், சிலையூஞ்சல், கருவாகை.

*[கொள்ளி + கன்னி.]*

**கொள்ளிக்காடு** *kolli-k-kādu*, பெ.(n.) தேவாரம் பெற்ற சிவப்பதிகளில் ஒன்று; a Śiva temple on which Thevaram stanzas exist.

*[கொள்ளி + காடு.]*

**கொள்ளிக்கால்** *kolli-k-kāl*, பெ.(n.) 1. ஒற்றைக் கால் வெளுத்திருத்தலாகிய குதிரைக் குற்றம்; the defect of a horse in having one of its legs white. *"நஞ்ச பாதங் கொள்ளிக்கால் வெள்ளிக் கண்" (திருவாத.பு. குதிரையிட்.35).* 2. நல்வினை வயப்படாத கால்; unlucky foot. அவன் கொள்ளிக் காலுள்ளவன் (உ.வ.).

**ம.** கொள்ளிக்கால்.

*[கொள்ளி + கால்.]*

**கொள்ளிக்காற் குதிரை** *kollikkār-kudirai*, பெ.(n.) ஒரு கால் வெள்ளையான குதிரை; a horse having white in one leg.

*[கொள்ளிக்கால் + குதிரை.]*

**கொள்ளிக்கிழங்கு** *kolli-k-kilangu*, பெ.(n.) மரவள்ளிக் கிழங்கு; tapioca tuber.

ம. கொள்ளிக்கிழங்நு.

*[கொள்ளி + கிழங்கு.]*

**கொள்ளிக்குடம்** *kolli-k-kudam*, பெ.(n.) புது மட்குடம்; new terracotta water vessel. *"ஆற்றுத் தண்ணீ ரமுது தூரணி கொள்ளிக்குடத்தால் நிசதி ஒரு குடம்" (S.II. XIII.88-6 p.42) (கி.பி.9854).*

*[கொல் → கொல்லி → கொள்ளி + குடம்.]*

**கொள்ளிக்கொட்டான்** *kolli-k-kottān*, பெ.(n.) ***கொள்ளியெறும்பு*** பார்க்க; see *kolli-erumbu.*

*[கொள்ளி + கொட்டான்.]*

**கொள்ளிக்கொம்பு** *kolli-k-kombu*, பெ.(n.) மாட்டுக் கொம்பி லொருவகை; a kind of horn feature among cows.

*[கொள்ளி + கொம்பு.]*

கொம்பு முனையில் வெள்ளையிருந்தால் ஆகாது என்பர்.

**கொள்ளிகை** *kolligai*, பெ.(n.) ***எருமை நாக்கி*** பார்க்க; see *erumai-nākki* (சா.அக.).

*[கொள் → கொள்ளிகை.]*

**கொள்ளிச்சட்டி** *kolli-c-catti*, பெ.(n.) இறந்தவரின் உடலத்திற்குத் தீ வைக்க எடுத்துச் செல்லும் மண் சட்டி; pot containing live coal and burning sticks carried to the cremation ground for lighting the funeral pyre.

*[கொள்ளி + சட்டி.]*

**கொள்ளிசுட்டான்** *kolli-šuttān*, பெ.(n.) தீப்பட்ட புண்; injuries caused by fire, burns (சா.அக.).

*[கொள்ளி + சுட்டான்.]*

**கொள்ளிசெருகு-தல்** *kolli-šerugu-*, 5 செ.குன்றாவி. (v.i.) தீமையை யுட்படுத்துதல்; to put into trouble.

*[கொள்ளி + செருகு.]*

**கொள்ளி சொருகு-தல்** *kolli-šorugu-*, வி.(v.) 1. தீ வைத்தல்; to insert a firebrand as an incendiary in the roof of a house. 2. கேடு செய்தல்; to cause or bring about another's ruin.

*[கொள்ளி + சொருகு.]*

**கொள்ளிடம்** *kollidam*, பெ.(n.) காவிரியினின்று பிரியும் ஓர் ஆறு; a branch of *Kāvēri*. *"குங்குமங்க ளுந்திவருங் கொள்ளிடத்தின்" (தேவா.210:6).*

*[கொள் + இடம் – கொள்ளிடம் (வெள்ளப்பெருக்கை வாங்கிக் கொள்ளும் இடமானது).]*

**கொள்ளித்தேள்** *kolli-t-tēl*, பெ.(n.) கடுமையாகக் கொட்டும் தேள்; a kind of scorpion causing intense pain by its sting. *"வெங்கொள்ளித் தேள்போன்ற வினை" (அருட்பா.11.எழுத்தறி.28).*

*[கொள்ளி + தேள்.]*

**கொள்ளிப்பாக்கம்** *kolli-p-pākkam*, பெ.(n.) தொண்டைமண்டலத்தில் இருந்த ஊர்; *"மேற்பாலெல்லெ மணற் பாக்கத்தெல் லெயின்னும் கொள்ளிபாக்கத் தெல்லெயின் கிழக்கும்" (பல்.செ. முப்.ப.167 வ.113, காசாக்குடிச். செ.).*

*[கொள்ளி + பாக்கம்.]*

**கொள்ளிப்பாக்கை** *kolli-p-pākkai*, பெ.(n.) ஐதராபாத்துக்கு வடகிழக்கில் 45 கல் தொலைவில் உள்ள குல்பர்கா எனும் ஊர்; the present Kulburg 45 miles northeast of Hydrabad.

*[கொள்ளி + (பாக்கம்) பாக்கை.]*

**கொள்ளிப்பிசாசு** *kolli-p-pišāšu*, பெ.(n.) ***கொள்ளிப்பேய்*** பார்க்க; see *kolli-p-pēy.*

*[கொள்ளி + பிசாசு.]*

**கொள்ளிப்புண்** *kolli-p-pun*, பெ.(n.) கொள்ளியாற் சுட்ட புண்; injury or wound caused by a fire-brand, black scorched wound (சா.அக.).

மறுவ. தீப்புண்

*[கொள்ளி + புண்.]*

**கொள்ளிப்பேய்** *kolli-pēy*, பெ. (n.) தீயுடன் திரியும் எனக் கருதப்படும் பேய்; a ghost described as moving about with a burning fire brand.

ம. கொள்ளியன்.

*[கொள்ளி + பேய்.]*

**கொள்ளிபெறு-தல்** *kolli-peru-*, 20 செ.குன்றாவி. (v.t.) இறந்த தேவதாசியின் உடலை எரியூட்டக் கோயிலினின்று நெருப்புப் பெறுதல்; to take fire from

a temple for lighting the funeral pyre of a dancing - girl in temple service. *"கொள்ளி பெற்றவர்களா யிருக்கிற எம் பெருமானடியாளுக்கு" (கோயிலொ. 94.)*

*[கொள்ளி + பெறு-.]*

**கொள்ளிபோடு-தல்** *kolli-pōdu-,* 19 செ.குன்றாவி. (v.t.) ***கொள்ளிவை-த்தல்*** பார்க்க; see *kolli-vai-.*

*[கொள்ளி + போடு-.]*

**கொள்ளிமண்டிலம்** *kolli-mandilam,* பெ.(n.) ***கொள்ளிவட்டம்*** பார்க்க; see *kolli-vattam.* *"கொள்ளி மண்டிலம் போல்..... திரிந்திடுவ" (சீவக.1771).*

*[கொள்ளி + மண்டிலம்.]*

**கொள்ளிமாலை** *kolli-mālai,* பெ.(n.) பிணத்திற்கு அணியும் மாலை; wreath of flowers laid upon a corpse. *'கொள்ளி மாலையுங் கொடிபடு கூறையும்' (மணிமே.6:94,உரை).*

*[கொள்ளி + மாலை.]*

**கொள்ளிமீன்**[1] *kolli-mīn,* பெ.(n.) ஒருவகை மீன்; a kind of fish.

ம. கொள்ளிக்கால்.

*[கொள்ளி + மீன்.]*

**கொள்ளிமீன்**[2] *kolli-mīn,* பெ.(n.) விண்மீன் கொள்ளி, எரிமீன்; meteor, shooting star.

ம. கொள்ளிமீன்.

*[கொள்ளி + மீன்.]*

**கொள்ளி முடிவான்** *kolli-mudivān,* பெ.(n.) ஓயாது தீமை தருபவன் (வழ.சொ.அக.); evil doer.

*[கொள்ளி + முடிவான்.]*

**கொள்ளியம்** *kolliyam,* பெ.(n.) 1. உமரி; marsh samphire. 2. புன்கு ; Indian beech. 3. பவழப் பூடு; gloss wort.

*[கொள்ளி → கொள்ளியம்.]*

**கொள்ளியற்றசொத்து** *kolliyarra-cottu-,* பெ.. (n.) பிள்ளை இல்லாதவனின் சொத்து; unclaimed property because of non-succession. கொள்ளித்த சொத்து (நெல்லை.).

*[கொள்ளி + அற்ற + சொத்து.]*

இறந்தபின் கொள்ளி வைத்து ஈமக்கடனாற்று வதற்கு வழியுரிமையாளர் இல்லாத சொத்து கொள்ளியற்ற சொத்து எனப்பட்டது.

**கொள்ளியில்போ-தல்** *kolliyil-pō-,* 8 செ.கு.வி. (v.i.) ***கொள்ளையிற் போ-தல்*** பார்க்க; see *kollaiyir-pō.*

*[கொள்ளி + இல் + போ-.]*

கொள்ளை என்பது பெருங்களவைக் குறிக்கும். கொள்ளை என்பது மிகுதிப் பொருளது. பலரை ஒருங்கே கொல்லும் கொடிய கழிச்சல் நோய். இதனால் கொள்ளை நோய் எனப்பட்டதாம்.

**கொள்ளியெறும்பு** *kolli-y-erumbu,* பெ.(n.) கடியால் மிக்க கடுப்பை உண்டாக்கும் சிற்றெறும்பு வகை (உ.வ.); a species of small ant causing intense pain by its bite.

*[கொள்ளி + எறும்பு.]*

**கொள்ளிலை** *kol-l-ilai,* பெ.(n.) 1. ***கொள்ளுக்காய் வேளை*** பார்க்க; see *kollu-k-kāi-vēlai.* 2.கொள்ளுச் செடியின் இலை; the leaf of horse - gram plant.

*[கொள் + இலை.]*

**கொள்ளிவட்டம்** *kolli-vattam,* பெ.(n.) கொள்ளியைச் சுழற்றுதலிற் றோன்றும் வட்ட வடிவு; imaginary circle in the air caused by swinging round a firebrand. *"கறங்கோலை கொள்ளி வட்டம்" (திருமந்.2313).*

ம. கொள்ளிவட்டம்.

*[கொள்ளி + வட்டம்.]*

**கொள்ளிவாய்க்குணங்கு** *kollivāy-k-kunangu,* பெ.(n.) ***கொள்ளிவாய்ப் பிசாசு*** பார்க்க; see *kollivāy-p-pišāšu.* *"கொள்ளி வாய்க் குணங் குள்ளுதோ றிவறிய" (கல்லா.95:11).*

*[கொள்ளிவாய் + குணங்கு.]*

**கொள்ளிவாய்ச்சர்ப்பம்** *kollivāy-c-carppam,* பெ.(n.) ***கொள்ளி விரியன்*** பார்க்க; see *kolli-viriyan.*

*[கொள்ளிவாய் + சர்ப்பம்.]*

**கொள்ளிவாய்ப்பிசாசு** *kollivāy-p-pišāšu,* பெ.(n.) ***கொள்ளிவாய்ப்பேய்*** பார்க்க; see *kollivāy-p-pēy.*

ம. கொள்ளிவாய்ப்பிசாசு.

*[கொள்ளிவாய் + பிசாசு.]*

**கொள்ளிவாய்ப்பேய்** *kollivāy-p-pēy,* பெ.(n.) வாயில் நெருப்புடையதாகக் கருதப்படும் பேய்வகை;

jack-o-lantern. *"கொள்ளிவாய்ப் பேய்காக்குங் கோபுரமும்" (கலிங்.90).*

*[கொள்ளிவாய் + பேய்.]*

**கொள்ளிவாய்விரியன்** *kollivāi-viriyan*, பெ.(n.) **கொள்ளிவிரியன்** பார்க்க; see *kolli-viriyan.*

*[கொள்ளிவாய் + விரியன்.]*

**கொள்ளிவாயெறும்பு** *kollivāy-erumbu*, பெ.(n.) **கொள்ளியெறும்பு** பார்க்க; see *kolli-erumbu.*

*[கொள்ளிவாய் + எறும்பு.]*

**கொள்ளிவால்** *kolli-vāl*, பெ.(n.) நுதி (நுனி) வெள்ளை வால்; tip of the white tail.

*[கொள்ளி + வால்.]*

**கொள்ளிவாலி** *kolli-vāli*, பெ.(n.) கறுப்புடலும், வெள்ளை வாலுங் கொண்ட ஆன் (மாடு) அல்லது நாய்; cow or dog with dark body and white tail.

*[கொள்ளி + வால்.]*

நன்னிமித்தமும் ஆகுவழி (ராசி)யும் இல்லாத தாகக் கருதப்பட்டதால் கொள்ளிவாலி எனப்பட்டது.

**கொள்ளிவாலெறும்பு** *kollivāl-erumbu*, பெ.(n.) ஒருவகை எறும்பு; a kind of ant.

*[கொள்ளிவால் + எறும்பு.]*

**கொள்ளிவிரியன்** *kolli-viriyan*, பெ.(n.) விரியன் பாம்பு வகை; Russell's viper.

**மறுவ.** கொள்ளிவாய் விரியன்.

*[கொள்ளி + விரியன்.]*

**கொள்ளிவீங்கு** *kolli-vingu*, பெ.(n.) மாட்டுக்கு வரும் தொண்டை நோய்வகை (M.Cm.D. (1887)248); malignant sore throat of cattle.

*[கொள்ளி + வீங்கு.]*

**கொள்ளிவை-த்தல்** *kolli-vai-*, 4 செ.கு.வி.(v.) 1. நெருப்பு வைத்தல்; to set fire to. 2. பிணத்துக்கு எரிசடங்கு செய்தல்; to light the funeral pyre. 3.கேடு விளைத்தல்; ruin a family. 4. கலகமூட்டுதல்; to kindle strife.

**ம.** கொள்ளிவய்க்குக; **பட.** கொள்ளிபீ.

*[கொள்ளி + வை-.]*

**கொள்ளு** *kollu*, பெ.(n.) தட்டையான வெளிர்ப் பழுப்பு நிறத் தவசம்; a kind of gram, horse gram.கொள்ளு என்றால் வாய்திறக்கும் கடிவாளம் என்றால் வாய் மூடிக் கொள்ளும் (பழ).

**மறுவ.** காணம்.

*[கொள் → கொள்ளு. **கொள்**[2] பார்க்க.]*

**கொள்ளுக்கஞ்சி** *kollu-k-kañji*, பெ.(n.) கொள்ளும், அரிசியும் கலந்து வேகவைத்த கஞ்சி; a gruel or light food obtained by boiling rice and gram together.

*[கொள்ளு + கஞ்சி.]*

**கொள்ளுக்காய் வேளை** *kollu-k-kāy-vēlai*, பெ.(n.) கொழுஞ்சிச் செடி; zanzibar Indigo.

*[கொள்ளு + காய் + வேளை.]*

கடுப்புச் சுவையும், ஊதை, சூலை, கண்நோய், வயிற்று நோய் முதலியவற்றைத் தீர்க்கும் மருத்துவத் தன்மையும் உடைய மூலிகை.

**கொள்ளுச்சாறு** *kollu-c-cāru*, பெ.(n.) கொள்ளினை வேகவைத்து வடிகட்டிய சாறு; water extracted from boiled horse-gram.

*[கொள்ளு + சாறு.]*

**கொள்ளுத்தாத்தன்** *kollu-t-tāttan*, பெ.(n.) **கொள்ளுப்பாட்டன்** பார்க்க; see *kollu-p-pāttan.*

**மறுவ.** பூட்டன், கொள்ளுப்பாட்டன்.

*[கொள் → கொள்ளு + தாத்தன்.]*

தாத்தாவின் தந்தையை எள்ளுத்தாத்தன் என்றும் பாட்டியின் தந்தையைக் கொள்ளுத்தாத்தன் என்றும் வழங்கும் வழக்கமும் உள்ளது.

**கொள்ளுத்தாத்தா** *kollu-t-tātta*, பெ.(n.) **கொள்ளுத்தாத்தன்** பார்க்க; see *kollu-t-tāttan.*

*[கொள்ளு + தாத்தன் → கொள்ளுத்தாத்தன். கொள்ளுத்தாத்தா என்னும் விளியை எழுவாயாக ஆள்வது வழு.]*

**கொள்ளுநர்** *kollunar*, பெ.(n.) 1. கொள்வோர்; buyers. 2. கற்போர்; learners. *"கொள்ளுநர் கொள்ளக் குறையா தாதலின்" (கல்லா. 11:21).*

*[கொள்ளு + நர்.]*

**கொள்ளுப்பாட்டன்** *kollu-p-pāttan*, பெ.(n.) பாட்டனுக்குத் தந்தை; great-grand-father.

**மறுவ.** கொள்ளுத் தாத்தன், பூட்டன்,கொப்பாட்டன்.

*[கொள்ளு + பாட்டன்.]*

பாட்டியின் தந்தையைக் கொள்ளுப்பாட்டன் என்றும் பாட்டனின் தந்தையை எள்ளுப்பாட்டன் என்றும் வழங்கும்

வழக்கமும் உள்ளது. பாட்டியின் தாயைக் கொள்ளுப்பாட்டி என்பதை ஒப்பிடுக.

**கொள்ளுப்பாட்டி** *kollu-p-pātti*, பெ.(n.) பாட்டியின் அம்மா; great-grand-mother.

**மறுவ.** பூட்டி.

*[கொள்ளு + பாட்டி.]*

பாட்டனின் தாயை எள்ளுப்பாட்டி என்றும் பாட்டியின் தாயைக் கொள்ளுப்பாட்டி என்றும் அழைப்பது மரபு. *கொள்ளுப்பேரன்* பார்க்க; see *kollu-p-pēran*.

**கொள்ளுப்பூண்டு** *kollu-p-pūndu*, பெ.(n.) காணம்; Madras horse-gram.

*[கொள்ளு + பூண்டு.]*

**கொள்ளுப்பேத்தி** *kollu-p-pētti*, பெ.(n.) பேரனுக்கு மகள்; great grand daughter.

*[கொள்ளு + பேத்தி.]*

பேத்தியின் மகளைக் கொள்ளுப்பேத்தி என்றும் பேரனின் மகளை எள்ளுப்பேத்தி என்றும் அழைப்பது மரபு.

**கொள்ளுப்பேரன்** *kollu-p-pēran*, பெ.(n.) பேரன் மகன்; great-grand son.

*[கொள்ளு + பேரன்.]*

பேரனின் மகனை எள்ளுப்பேரன் என்றும் பேத்தியின் மகனைக் கொள்ளுப்பேரன் என்றும் வழங்குதல் மரபு. மகன்வழி மகனும், போன்வழி மகனும் எள்ளும் நீரும் இறைத்து ஈமக்கடன் செய்தற்குரியர். மகளின் பிள்ளைகளும், பேத்தியின் பிள்ளைகளும் பிறர் மனைக்கு மருமக்கள்மாராகக் கொள்ளப்படுவாதலின் கொள்ளுப் பேரன். கொள்ளுப்பேத்தி என அழைத்தற் குரியராவர்.

**கொள்ளுரசம்** *kollu-rašam*, பெ.(n.) ***கொள்ளுச்சாறு*** பார்க்க; see *kollu-c-cāru*.

**மறுவ.** கொள்ளுச்சாறு.

*[கொள்ளு + ரசம்.]*

**கொள்ளெனல்** *koll-enal*, பெ.(n.) 1. பறை முதலியவற்றின் ஒலிக்குறிப்பு; (onom.expr.); signifying the sound of a drum or other musical instruments. *"கொள்ளென் குரலொடு கோட்பறை கொளீஇ" (பெருங்.வத்தவ.5:62).* 2. மிகுதிக் குறிப்பு (expr.signifying):plenty. *"கொள்ளென்று கிளர்ந் தெழுந்த பெருஞ்செல்வம்" (திவ்.திருவாய். 4. 9:4).*

*[கொள் + எனல்.]*

**கொள்ளை** *kollai*, பெ.(n.) 1. சூறை கொள்ளுகை; robbery. கொள்ளைக்குப் போனாலும் கூட்டு ஆகாது (பழ). 2. மிகுதி; plenty. *"கொள்ளைமா மதத்த நால்வாய்க் குஞ்சரம்" (பாகவ.1,5:14).* 3. கூட்டம்; crowd. *"கொள்ளை யிற்பலர் கூறலும்" (கந்தபு. விண்குடி.14).* 4. பெருவாரிநோய்; plague. 5. தடை; hindrance. அதைச் செய்ய உனக்கு என்ன கொள்ளை? 6. விலை; price. *"சில்பத வுணவின் கொள்ளை சாற்றி" (பெரும்பாண்.64).* 7. பயன்; use. *"நானிருந் தென்ன கொள்ளை" (இராமநா. பாலகா.9).*

**ம., து.** கொள்ள; **க.** கொள்ளெ, கொள் ; **தெ.** கொல்ல; **நா.** கொச் (எடுத்தல்); **கூ.** கொட (எடுத்துச் செல்லுதல்); **கொலா.** கொச்ல (கொண்டு செல்லுதல்)

*[கொள் → கொள்ளை.]*

**கொள்ளைஎகனை** *kollai-ekanai*, பெ.(n.) மலிவு; cheap. இப்ப கத்திரிக்காய் கொள்ளை எகனை (நெல்லை.).

*[கொள்ளை + எகனை. கொள்ளை : மிகுதி. எக்குதல் : உயர்தல். எக்கனை → எகனை.]*

**கொள்ளைக்காய்ச்சல்** *kollai-k-kāyccal*, பெ.(n.) 1. பெருவாரி தொற்றுச் சுரம்; infectious epidemic fever. 2. பெருந்தடுமன்; influenza. 3. ***கோதாரிக் காய்ச்சல்*** பார்க்க; see *kōdāri-k-kāiccal*.

*[கொள்ளை + காய்ச்சல்.]*

**கொள்ளைக்காரன்** *kollai-k-kāran*, பெ.(n.) கொள்ளையடிப்பவன்; dacoit.

**ம.** கொள்ளைக்காரன்; **க., பட.** கொள்ளெகார.

*[கொள்ளை + காரன்.]*

**கொள்ளைக்கூட்டம்** *kollai-k-kūttam*, பெ.(n.) கொள்ளைக்காரர்களின் கூட்டம்; dacoit

**ம.** கொள்ளைக்காரன்; **க., பட.** கொள்ளெகார.

*[கொள்ளை + காரன்.]*

**கொள்ளைகொடு-த்தல்** *kollai-kodu-*, 4 செ.குன் றாவி. (v.t.) பறிகொடுத்தல்; to be robbed.

*[கொள்ளை + கொடு-.]*

**கொள்ளைகொள்ளு[1]-தல்** *kollai-kol(lu)-*, 7 செ.குன்றாவி. (v.t.) மக்கள் பெருவாரி நோயில் இறத்தல்; carrying away lives of people as by epidemics.

**மறுவ.** கொள்ளை நோய்.

*[கொள்ளை + கொள்(ளு)-.]*

**கொள்ளைகொள்ளு[2]-தல்** *kollai-kol(lu)-,* 16 செ.குன்றாவி. (v.t.) 1. உள்ளத்தை மிகவும் கவர்தல்; to entirely captivate the mind and heart. 2. எதிர்பாராத வகையில் எடுத்துக்கொள்ளுதல்; to be taken away unexpectedly. 'கடல் கொள்ளை கொண்ட நகரங்களுள் இதுவும் ஒன்று'. 3. கொள்ளையடித்தல்; to plunder. *'வேற்றுப் புலத்தைக்........கொள்ளைகொண்ட தொழிலை' (பு.வெ.3:15, கொளு உரை).* 4. பறித்தல்; to rob.

*[கொள்ளை + கொள்(ளு)-.]*

**கொள்ளைசாற்று-தல்** *kollai-šārru-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***கொள்ளையூட்டு-*** பார்க்க; see *kollai-y-ūttu-.*

*[கொள்ளை + சாற்று-.]*

**கொள்ளைத்தலைவன்** *kollai-t-talaivan,* பெ.(n.) கொள்ளைக்காரர்களின் தலைவன்; a chief of bandits.

ம. கொள்ளத்தலவன்.

*[கொள்ளை + தலைவன்.]*

**கொள்ளைநாள்** *kollai-nāl,* பெ.(n.) மிகுதியான நாள்; plenty days. 'ஒன்னையப் பார்த்துக் கொள்ளை நாளாச்சிடா!' (நெல்லை).

*[கொள்ளை + நாள்.]*

**கொள்ளைநோய்** *kollai-nōy,* பெ.(n.) பெருவாரி நோய்; epidemic.

*[கொள்ளை + நோய்.]*

**கொள்ளைப்படை** *kollai-p-padai,* பெ.(n.) 1. கொள்ளைக்காரர்களின் போர்; compaign or battle attended with pillage and loot. 2. கொள்ளையர் கூட்டம் ; a band of robbers or decoits.

ம. கொள்ளப்பட.

*[கொள்ளை + படை.]*

**கொள்ளைபோ-தல்** *kollai-pō-,* 8 செ.கு.வி.(v.i.) 1. பொருள் முதலியன பலவாறாக அழிபடுதல்; to be wasted in all ways, as wealth. *"கொள்ளை போகின்ற செல்வம்" (கம்பரா.மாரீச.77).* 2. களவு போதல்; to be plundered.

*[கொள்ளை + போ-.]*

**கொள்ளையடி-த்தல்** *kollai-y-adi-,* 4 செ.குன்றாவி. (v.t.) சூறையாடுதல்; to plunder, to rob.

ம. கொள்ளையடிக்குக.

*[கொள்ளை + அடி-.]*

**கொள்ளையள்(ளு)-தல்** *kollai-y-al(lu)-,* 5 செ.குன்றாவி. (v.t.) திருடுதல்; to rob, steal.

*[கொள்ளை + அள்(ளு)-.]*

**கொள்ளையாடு-தல்** *kollai-y-ādu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***கொள்ளையடி-த்தல்*** பார்க்க; see *kollai-y-adi-. "கொள்ளை யாட்டயர் கொடியகோ லரசனை" (காஞ்சிப்பு.பன்னிரு.336).*

*[கொள்ளை + ஆடு-.]*

**கொள்ளையிடு-தல்** *kollai-idu-,* 18 செ.குன்றாவி. (v.t.) திருடுதல்; to rob, steal.

*[கொள்ளை + இடு-.]*

**கொள்ளையிற்போ-தல்** *kollaiyir-pō-,* 8 செ.கு.வி. (v.i.) கொள்ளை நோயில் இறத்தல்; being carried away in an epidemic. கொள்ளையில போக (நெல்லை).

*[கொள்ளையில் + போ-.]*

**கொள்ளையூட்டு-தல்** *kollai-y-ūttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கொள்ளைகொள்ளும்படி விடுதல்; to give over to plunder. *'வேற்றுப்புலத்தைக் கொள்ளை யூட்டி' (பு.வெ.3:15,கொளு, உரை).*

*[கொள்ளை + ஊட்டு-.]*

**கொள்ளையூதியம்** *kollai-y-ūdiyam,* பெ.(n.) மிகுதியான ஊதியம், எதிர்பார்ப்புக்கு அதிகமான ஊதியம்; over gain.

*[கொள்ளை + ஊதியம்.]*

**கொள்ளையெடு-த்தல்** *kollai-edu-,* 4 செ.குன்றாவி. (v.t.) திருடுதல்; to rob.

*[கொள்ளை + எடு-.]*

**கொள்ளைலாபம்** *kollai-lābam,* பெ.(n.) ***கொள்ளையூதியம்*** பார்க்க; see *kollai-y-ūdiyam.*

ம. கொள்ளைலாபம்.

*[கொள்ளை + லாபம்.]*

**கொள்ளைவை-த்தல்** *kollai-vai-,* 4 செ.குன்றா.வி. (v.t.) ***கொள்ளையடி-த்தல்*** பார்க்க; see *kollai-y-adi-.*

*[கொள்ளை + வை-.]*

**கொளகொள-த்தல்** *kola-kola-*, 4 செ.கு.வி.(v.i.) இறுகலான தன்மை மாறி இளகிப் போதல்; to be soft and loose as an over-ripe fruit. பழம் கொள கொளத்துப் போயிற்று (உ.வ.).

*[குழகுழ → கொளகொள.]*

**கொளகொளெனல்** *kola-kolenal*, பெ.(n.) 1. ஓர் ஒலிக்குறிப்பு; (onom.expr.of) gurgling sound. 2. குழறுதற் குறிப்பு; speaking indistinctly and foolishly. 3. பதமாறி இளகியிருத்தற் குறிப்பு; expr. of being loose and soft as an over-ripe fruit.

*[கொளகொள + எனல்.]*

**கொளச்சிமண்வெட்டி** *kolacci-manvetti*, பெ.(n.) மண்வெட்டி வகைகளுளொன்று; a kind of spade.

*[கொளச்சி + மண்வெட்டி.]*

**கொளஞ்சி** *kolañji*, பெ.(n.) குளஞ்சி மரம்; a kind of orange tree bearing a small reddish fruit.

ம. கொளஞ்ஞில்.

*[குளஞ்சி → கொளஞ்சி.]*

**கொளத்துக்காரர்** *kolattu-k-kārar*, பெ.(n.) ***கொத்தனார்*** பார்க்க; see *kottaṉār*.

*[கொழுத்து + காரர்.]*

**கொளத்துவேலை** *kolattu-vēlai*, பெ.(n.) ***கொத்து வேலை*** பார்க்க; see *kottu-vēlai*.

*[கொழுத்து + வேலை.]*

**கொளத்தூர்** *kolattūr*, பெ.(n.) சேலம் மாவட்டம் மேட்டூர் வட்டத்தில் அமைந்துள்ள ஓர் ஊர்; a village situated in Mettur taluk in Salem Dt.

*[குளம் → குளத்து + ஊர். குளத்தூர் → கொளத்தூர்.]*

**கொளபாத்திரம்** *kola-pāttiram*, பெ.(n.) நீள் உருண்டை வடிவ ஏனம்; cylindrical drinking - vessel.

*[குள் → குள (உருண்டை) → கொள + பாத்திரம்.]*

**கொளம்கொண்டை** *kolam-kondai*, பெ.(n.) நாமக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Namakkal Dt.

*[குளம் → கொளம் + கொண்டை.]*

**கொளமணிவாக்கம்** *kolamaṇi-vākkam*, பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvallur Dt.

*[குளம் + மண்ணி + (பாக்கம்) வாக்கம் - குளமண்ணிவாக்கம் → கொளமணிவாக்கம்.]*

**கொளமா** *kolamā*, பெ.(n.) கும்பாதிரி (L.); gum lac tree.

**கொளல்வினா** *kolal-viṉā*, பெ.(n.) ஒரு பண்டத்தைக் கொள்ளும் நோக்கத்தோடு கேட்கும் கேள்வி (நன்.385, உரை); question implying a desire to obtain a thing. *"பயறுளதா வணிகீரென்பது கொளல்வினா" (நன்.385, உரை).*

*[கொள் → கொளல் + வினா.]*

**கொளறு** *kolāru*, பெ.(n.) கட்டடத்தொழிலாளர் பயன்படுத்தும் கரண்டி; a mason's trowel.

*[கொள்ளுறு → கொளறு.]*

**கொளாஅல்** *kolāal*, பெ.(n.) கொள்ளச் செய்கை; application, as of a grammatical rule.

*[கொளல் → கொளாஅல்.]*

**கொளி[1]-த்தல்** *koli-*, 4 செ.கு.வி.(v.i.) ***கொழி-த்தல்*** பார்க்க; see *koli-*.

*[கொழி → கொளி.]*

**கொளி[2]** *koli*, பெ.(n.) 1. கொண்டவன்; one who preserves. 2. வாங்கிக்கொண்டவன்; one who purchases or takes.

ம. கொளி.

*['கொள் + இ. 'இ' உடைமை குறித்த ஈறு.]*

**கொளிஞ்சிப்பட்டி** *koliñji-p-patti*, பெ.(n.) தேனி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Theni Dt.

*[கொழிஞ்சி → கொளிஞ்சி + பட்டி.]*

**கொளிஞ்சிவாடி** *koliñji-vādi*, பெ.(n.) கோவை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kovai Dt.

*[கொழிஞ்சி → கொளிஞ்சி + வாடி.]*

**கொளினிவலை** *koliṉi-valai*, பெ.(n.) ***கொண்டை வலை*** பார்க்க; see *kondai-valai*.

*[கொள் → கொளினி + வலை.]*

**கொளு[1]** *kolu*, பெ.(n.) செய்யுள் முதலியவற்றின் கருத்தை விளக்கும் சொற்றொடர் (பு.வெ.); gist, as of a poem.

*[கொள் → கொளு.]*

**கொளு**² *kolu,* பெ.(n.) 1. பழுவெலும்பு; rib. *"கொளுமிடை வீணாதண்டு" (ஞானா.7:14).* 2. உருவு திரையை மாட்டுங் கருவி; fastening hook of a curtain. *"கஞ்சிகைக் கொளுவொடு கயிற்று நிலை யமைத்து" (பெருங். உஞ்சைக். 58:52).*

*[கொள் → கொளு.]*

**கொளுக்கி** *kolukki,* பெ.(n.) 1. கொக்கி; hook. 2. கைவலை பின்னும்போது பிணைக்கப்பெறும் கொம்பு; a kind of hook like stick used for netting.

*[கொளுவு → கொளுக்கி.]*

**கொளுகொம்பு** *kolu-kombu,* பெ.(n.) ***கொழு கொம்பு*** பார்க்க; see *kolu-kombu. " கொளு கொம்பிலாத தனிக் கொடிபோல்" (கந்தரலங்.99).*

*[கொழு → கொளு + கொம்பு.]*

**கொளுகொளு-த்தல்** *kolu-kolu-,* 4 செ.கு.வி.(v.i) ***கொளகொள-த்தல்*** பார்க்க; see *kola-kola-.*

*[குழகுழ → கொளுகொளு.]*

**கொளுஞ்சி** *koluñji,* பெ.(n.) ***கொழிஞ்சி*** பார்க்க; see *koliñji.*

ம. கொளஞ்ஞில்.

*[கொழிஞ்சி → கொளுஞ்சி.]*

**கொளுச்சொல்** *kolu-c-col,* பெ.(n.) கருத்து; theme.

*[கொளு + சொல்.]*

**கொளுசு** *kolusu,* பெ.(n.) குழை (யாழ்.அக.); knot.

*[குளைச்சு → கொளுசு.]*

**கொளுத்தி** *kolutti,* பெ.(n.) 1. கொளுத்துகை; burning. கடுகத்துனை நெருப்பானாலும் போரைக் கொளுத்திவிடும் (பழ). 2. அறிவு புகட்டுகை; teaching.

*[கொளுத்து → கொளுத்தி. 'இ' தொ.பெ.ஈறு. ஒ.நோ. போறறு → போற்றி : போற்றுகை.]*

**கொளுத்து**¹**-தல்** *koluttu-,* 5 செ.குன்றா.வி. (v.t.) 1.கொளச்செய்தல்; to cause to hold. *'பூநாற்றத்த வாகிய புகையைக் கொளுத்தி அமைத்த ஊனையும்' (புறநா.14, உரை).* 2. விளக்குதல்; to explain. *"விதியோர் கொளுத்திய வீரிய முடையது" (பெருங்.உஞ்சைக்.38:294).* 3. அறிவுறுத்துதல்; to teach. *"சேணெறி செல்லக் கோணெறி கொளுத்தி" (பெருங்.உஞ்சைக்.58:70).* 4. வீணை முதலியன மீட்டுதல்; to play as on a lute. *"நரம்பினாய கருவியைக் கொளுத்து மாக்கள்" (சூ.ா 2:39).* 5. நாடக முதலியவற்றை நடப்பித்தல்; to cause to enact, as a drama. *"கூடிய நெறியின கொளுத்துங் காலை" (சிலப்.3:17).* 6. கண்டித்தல்; to reprove sharply. நான் அவனை நன்றாய்க் கொளுத்திவிட்டேன். 7. சண்டை மூட்டுதல் (வின்.); to instigate quarrel. 8. தூற்றுதல்; to slander.

*[கொள் → கொளு → கொளுத்து-.]*

**கொளுத்து**²**-தல்** *koluttu-,* 5 செ.கு.வி.(v.t.) 1. வெயில் கடுமையாகக் காய்தல்; to scorch as the sun. 2. வியக்கும்படி காரியம் புரிதல்; to accomplish a task admirably.

கொள்ளுதல் (கற்றுக் கொள்ளுதல், கற்றல்) → கொளுத்துதல் (பி.வி.) (கொள்ளச்செய்தல், அறிவுறுத்துதல்).

*[கொள் → கொளு → கொளுந்து → கொளுத்து.]*

**கொளுத்து**³ *koluttu,* பெ.(n.) 1. உடற்சந்து; joints of the body. 2. அணிகலங்களின் பூட்டு; clasp of a jewel. 'கொளுத்துச் செறிந்த முன்கைக்கணிந்த கடகத் துடனே' (புறநா.150, உரை).

ம. கொளுத்து; க. கொக்கி; தெ. கொலிகி; து. கொல்துலெ, கொள்தளெ.

*[கொள் → கொளு → கொளுத்து.]*

**கொளுத்து**⁴**-தல்** *koluttu-,* 5 செ.குன்றாவி.(v.t.) எரித்தல்; to set fire. ஊர் முழுவதும் கொளுத்தி விட்டார்கள் (உ.வ.)

ம. கொளுத்துக; க. கொளிசு, கொள்ளிசு; குட. கொளித்.

**Fin.** keksia (to detect, findout); **Mong.** kagzi (to begin to flame, to blaze up).

*[கொளுந்து → கொளுத்து → கொளுத்துதல்.]*

**கொளுந்து**¹**-தல்** *kolundu-,* 5 செ.கு.வி.(v.i.) தீப்பற்றுதல்; to burn, as fire. *"தீக்கொளுந் தினவுந் தெரிகின்றிலர்" (கம்பரா. இலங்கையெரி.5). "கொள்ளி அறையிற் கொளுந்தாமற் காக்கலாம்" (திருமந்.591).*

*[கொள் → கொளுந்து → கொளுந்து.]*

**கொளுந்து**² *kolundu,* பெ.(n.) 1. தீக்கொழுந்து; flame. 2. தீப்பந்தம்; fire ball.

*[கொளு → கொளுந்து.]*

**கொளுமீதி** *kolumidi,* பெ.(n.) இறைகொடுத்து மிஞ்சின தவசம்; grain which remains after paying revenues.

*[கொழு → கொளு + மீதி.]*

**கொளுமுதல்** *ko!u-mutal,* பெ.(n.) 1. ***கொளுமீதி*** பார்க்க; see *kolu-miti.* 2. செழிப்பு; flourishing as of crops.

*[கொழு → கொளு + முதல்.]*

**கொளுவம்** *koluvam,* பெ.(n.) கோவைத்துறை உரைநடை; prose of a *kōvai* prosody.

*[கொளு → கொளுவம்.]*

**கொளுவல்** *koluval,* பெ.(n.) 1. குடல்வலி; abdominal pain. 2. குடலிசிவு; cramp of the bowels.

*[கொளுவு → கொளுவல்.]*

**கொளுவி** *koluvi,* பெ.(n.) கொக்கி (யாழ்ப்.); clasp (j).

*[கொளுவு → கொளுவி.]*

**கொளுவிக்கொள்(ளு)-தல்** *koluvi-k-kol(lu)-,* 16 செ.கு.வி. (v.i) பின்னிக்கொள்ளுதல்; to become entangled. சங்கிலி கொளுவிக்கொண்டது.

*[கொளுவு → கொளுவி + கொள்.]*

**கொளுவிப்பிடி¹-த்தல்** *koluvi-p-pidi-,* 4 செ. குன்றாவி. (v.t.) 1. மாட்டிவிடுதல் (வின்.); to hook in. 2. வயப்படுத்துதல் (வின்.); catch.

*[கொளுவி + பிடி.]*

**கொளுவிப்பிடி²-த்தல்** *koluvi-p-pidi-,* 4 செ.கு.வி. (v.i.) வழக்குத்தொடுத்தல் (r); to prosecute a law-suit (R.).

*[கொளுவு → கொளுவி + பிடி.]*

**கொளுவியிழு-த்தல்** *koluvi-y-ilu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. சண்டைக்கிழுத்தல்; to provoke a quarrel. 2. துன்பத்துக்கு உள்ளாக்குதல்; to bring one into trouble or difficulty.

*[கொளுவு → கொளுவி + இழு.]*

**கொளுவிவிடு-தல்** *koluvi-vidu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. காதணி முதலியன பூட்டுதல்; to fasten on, as ear-rings. 2. வேலையில் அமர்த்துதல்; to settle a person in office. 3. தகாத இடத்தில் மணம் புரிவித்தல்; to effect an unequal match. 4. சண்டை மூட்டுதல்; to set by the ears.

*[கொளுவு → கொளுவி + விடு-.]*

**கொளுவு¹-தல்** *koluvu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கொள்ளச் செய்தல்; to cause to hold. *"மலைப் பெருவிற் பாம்புஞாண் கொளீஇ" (புறநா.55:1).* 2. தீமூட்டுதல்; to kindle, as fire. *"தீக் கொளுவும் விடங்க" (திருவாச.6:19).* 3. பூட்டுதல்; to clasp, hook on, lock. *"அறிவென்னுந் தாள் கொளுவி" (திவ். இயற்.3:12).* 4. தூண்டிவிடுதல்; to urge on, as a dog. *"கதநாய் கொளுவுவென்" (கலித்.144:20).* 5. அகப்படுத்துதல் (வின்.); to entangle. 6. கூட்டுச் சேர்த்தல் (யாழ்ப்.); to take into partnership. 7. செருப்பு முதலியன அணிதல்; wearing sandals etc.

*[கொளு → கொளுவு.]*

**கொளுவு²-தல்** *koluvu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. வேலையில் அமர்த்துதல் (வின்.); to be engaged as in an employment. 2. மனத்திற் பதித்தல் (வின்.); to make an impression as on the mind. 3. சிக்குதல் (வின்.); to be ensnared. 4. தந்திரஞ் செய்தல் (வின்.); to contrive manage by artifice or scheming. 5. குடல் தூக்கிக் கொள்ளுதல் (யாழ்ப்.); to have cramp as in the bowels; to have a stitch, as in the sides.

*[கொள் → கொளுவு-.]*

**கொளுவு³** *koluvu,* பெ.(n.) 1. இசிவு; cramp. 2.நெருப்பு; fire (சா.அக).

*[கொள் → கொளுவு.]*

**கொளுவுகயிறு** *koluvu-kayiru,* பெ.(n.) ஏடுகட்டும் கயிற்றின் முடிப்பு (யாழ்ப்.); loop of the tying string of an *ōla* book.

*[கொளுவு + கயிறு.]*

**கொளுவுநிலைமொழி** *koluvu-nilai-moli,* பெ.(n.) சொற்பகுதிகள் ஒன்றுடன் ஒன்று நேரடியாகச் சேர்ந்து சொல்லுண்டாகும் அமைப்புடைய மொழி; agglutinative language.

**மறுவ.** ஒட்டுநிலைமொழி.

*[கொளுவு + நிலை + மொழி.]*

**கொளை¹** *kolai,* பெ.(n.) 1.பிடிப்பு; hold, as of a string in a bow. *"நாரியின் கொளை நீக்கி" (சீகாளத்.பு. சிலந்தி.57).* 2. கோட்பாடு; determination. *"கொளை தளராதவர்" (கலித்.34:17).* 3. பயன்; result. *"தெளி யெனக் கொண்டதன் கொளையன்றோ" (கலித். 132:17).* 4. இசை; melody. *"புரிநரம்பின் கொளை" (பரிபா.7:77).* 5. கைமுதலியவற்றால் தாளமிட்டு ஒற்றறுக்கை; beating time with hands or cymbals. *"கொளைபுணர் சீர்நரம்பு" (சிலப். 17, ஒன்றன் பகுதி 2).* 6. பாட்டு; song. *"படுக ணிமிழ்கொளை" (பரிபா.16:12).*

*[கொள் → கொளை.]*

**கொளை²** *kolai,* பெ.(n) நுனி; tip, top.

E. cone, Gk. kones, fr cone; L. conus.

*[குல் → குள் → குளை → கொளை.]*

**கொளையமை-த்தல்** *kolai-y-amai-,* 4 செ.குன்றாவி. (v.t.) நாணேற்றிடுதல்; to string the bow. *"கொடுவெஞ் சிலையைக் கொளையமைத்து" (சீவக. 1659).*

*[கொளை + அமை-.]*

**கொற்கலுழி** *kor-kaluli,* பெ.(n.) கஞ்சா; ganjah plant (சா.அக).

*[கொல் + கலுழி.]*

**கொற்கை** *korkai,* பெ.(n.) 1. தூத்துக்குடி மாவட்டம் திருவைகுண்டம் வட்டம் திருச்செந்தூர் அருகில் உள்ள ஓர் ஊர்; a village near Thiruchendur at Thiruvaikundam Taluk in Thuthukudi Dt. 2. தாமிர பரணி புகுமுகத்தமைந்த பழைய துறைமுகப் பட்டினம்; an ancient seaport of Pandiyans submerzed. *"கொற்கைக் கோமான் கொற்கையம் பெருந்துறை" (ஐங்குறு.188).*

*[கொல் → கொற்கு → கொற்கை.]*

**கொற்கைகிழான்** *korkai-kilān,* பெ.(n.) வேள்வி செய்து பாண்டியன் பெருவழுதியிடம் கொடை பெற்ற அந்தணர்; a Brahmin who performed yagam and got presents from *Peruvaludi* Pandiyan. *"பிழையாத கொற்கை கிழானற் கொற்றன கொண்ட வேள்வி" (பாண்டி.செப்.பத்.பக்.22.வ.35).*

*[கொற்கை + கிழான்.]*

**கொற்கைவேந்தன்** *korkai-vēndan,* பெ.(n.) 1. பாண்டியர்களின் பெயர்களுள் ஒன்று; 2. அரிகேசரி பராக்கிரம பாண்டியனின் (கி.பி.1463) பட்டப் பெயர்களுள் ஒன்று; one of the titles of Arikēsari Parākkirama-Pāndiyan (1463 A.D.). *'கொற்கை வேந்தன் பணிபவராகி யெந்நாளும் விளங்குவரே' (SII.XXVI.549-9 p.374).*

*[கொற்கை + வேந்தன்.]*

**கொற்சேரி** *kor-sēri,* பெ.(n.) கொல்லர் வாழும் இடம்; blacksmiths' quarters. *"வைகொண்ட வூசி கொற் சேரியின் விற்று" (திருக்கோ.386).*

*[கொல் + சேரி → கொற்சேரி.]*

**கொற்றக்குடை** *korra-k-kudai,* பெ.(n.) அரசக் குடை; umbrella. an emblem of royalty. *"கொற்றக் குடையும் வெற்றி வேலும்" (பெருங்.உஞ்சைக்.57:56). "காமுண்ட சுவாமியும் கொற்றக்குடை பன்மை முந்நூற்று வரும்" (நத்தம் ஆய்வேடு பக்.165-13).*

ம. கொற்றக்குட.

*[கொற்றம் + குடை. கொற்று → கொற்றம்.]*

**கொற்றத்தேவி** *korra-t-tēvi,* பெ.(n.) பட்டத்தரசி; queen-consort. *"கொற்றத்தேவி செற்றந் தீர்க்கும் பெற்றியர்" (பெருங்.வத்தவ.14:18).*

*[கொற்றம் + தேவி.]*

**கொற்றப் பெருங்கணி** *korra-p-perungani,* பெ.(n.) அரசக் கணியன்; state astrologer. *"வெற்றி வேந்தன் கொற்றப் பெருங்கணி" (பெருங். மகத.22:244).*

*[கொற்றம் + பெருங்கணி.]*

**கொற்றம்** *korram,* பெ.(n.) 1.வெற்றி; victory. *"கொற்றங் கொளக்கிடந்த தில்" (குறள்,583).* 2. வீரம்; bravery. *"பெரும்படைக் கொற்றம் பீடழிந்து" (பெருங்.மகத.3:90).* 3. வன்மை (சூடா.); strength. 4.அரசியல்; kingship. *"கொற்றங் கொண்டு கோலினி தோச்சென" (பெருங்.இலாவாண.5:73).*

ம. கொற்றம்.

*[கொற்று → கொற்றம்]*

**கொற்றம்வை-த்தல்** *korram-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) அரசாட்சியை ஒருவரிடம் ஒப்புவித்தல்; to entrust the government to a person. *"நீ யொருவன் மேற் கொற்றம் வைப்பின்" (சீவக.204).*

*[கொற்றம் + வை-.]*

**கொற்றமுரசு** *korra-murasu,* பெ.(n.) அரசுக்குரிய வெற்றி முரசு; trumpet of victory. *"கொற்ற முரசிற் கோடணை கொட்டி" (பெருங்.இலாவாண 11:186).*

*[கொற்று → கொற்றம் + முரசு]*

**கொற்றலிதொட்டி** *korrali-totti,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[குறு + ஆலி - குற்றாலி → கொற்றலி + தொட்டி.]*

**கொற்றவஞ்சி** *korra-vañji,* பெ.(n.)பகைவரை வாளோச்சி அழித்த அரசனது புகழைப் பெருக வுரைக்கும் புறத்துறை (பு.வெ.3:7.); theme extolling a king who destroyed his foes with his sword.

*[கொற்றம் + வஞ்சி]*

**கொற்றவள்ளை** *korra-vallai,* பெ.(n.) 1. பகைவர் நாடு கெடுவதற்கு வருந்துவதைக் கூறுமுகத்தான் அரசன் புகழைச் சொல்லும் புறத்துறை (பு.வெ.3:8); theme indirectly describing the prowess of a king by regretting that the enemy's country will be destroyed. *"குன்றாச் சிறப்பின் கொற்ற வள்ளையும்" (தொல்.பொருள்.புறத்.8).* 2. பகைவர் நாடழிகை (திவா.); devastation of a hostile kingdom. 3. தோற்ற வேந்தன் கொடுக்குந் திறை (தொல்.பொருள். 63, உரை); tribute paid by a defeated king.

*[கொற்றம் + வள்ளை.]*

**கொற்றவன்[1]** *korravan,* பெ.(n) 1.அரசன்; king. *"குடையி னிழற் கொற்றவன்" (சீவக.2544).* 2. வெற்றியாளன்; victor. *"ஊர்கொண்ட வுயர் கொற்றவ" (மதுரைக்.88).*

**ம.** கொற்றவன்.

*[கொற்றம் → கொற்றவன்.]*

**கொற்றவன்[2]** *korravan,* பெ.(n.) முடக்கொற்றான்; baloon-vine.

**மறுவ.** முடக்கொற்றான்.

*[கொற்றான் → கொற்றவன்.]*

**கொற்றவாயில்** *korra-vāyil,* பெ.(n.) அரண்மனை வாயில்; portico at the entrance of a palace or temple. *"கொடிக் கோசம்பிக் கொற்ற வாயில்" (பெருங். மகத.27:194).*

**மறுவ.** ஆசாரவாசல்.

**ம.** கொற்றவாதில்.

*[கொற்றம் + வாயில்.]*

**கொற்றவாயில்சேரி** *korra-vāyil-cēri,* பெ.(n.) மதுரை நகருக்குள் இருந்த குடியிருப்பு; a colony in Madurai. *"அண்டநாட்டு தேவதானந் திருத்துருத்தி தேவர்க்கு மாடமதிரை கொற்றவாயிற் சேரி குன்றஞ் சுந்தரி வைத்த திருநொந்தா விளக்கு" (SII.XXIII.504-4 p.382).*

*[கொற்றம் + வாயில் + சேரி.]*

**கொற்றவி** *korravi,* பெ.(n.) அரசி; queen. *"கொற்றவி மகனை நோக்கிக் கூறினாள்" (சீவக.2609).*

**ம.** கொற்றவி.

*[கொற்றம் → கொற்றவி.]*

**கொற்றவுழிஞை** *korra-v-uliñai,* பெ.(n.) பகைவர் நகரைக் கைக்கொள்ளுதற் பொருட்டு அரசன் படையெடுத்துச் செல்லுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ.6:5); theme describing the march of a king with his army to capture the enemy's city.

*[கொற்றம் + உழிஞை.]*

**கொற்றவை** *korravai,* பெ.(n.) வெற்றிக் குரியவளாகக் கருதப்படும் துர்க்கை; Durga, as the goddess of victory. *"முற்றவை காட்டிக் கொற்றவை பழிச்சி" (பெருங். இலாவாண.2:31).*

**ம.** கொற்றவை..

*[கொற்றம் + அவ்வை.]*

கொற்றம் = வெற்றி. அம்மை → அவ்வை = தாய். கொற்றம் + அவ்வை – கொற்றவ்வை → கொற்றவை.

காளியால் போர் வெற்றி தரப்படுவதென்று கருதி அவளைக் கொற்றவை என்றனர் [தமிழர் மதம், 34].

கொற்றவை [காளி], ஆரிய வருகைக்கு முற்பட்ட குமரி நாட்டுத் தூய தமிழ்த் தெய்வம். ஆரியர் இத் தெய்வத்திற்கு துர்கா என்னும் புதுப்பெயரை இட்டுக்கொண்டனர். காளி என்னும் பெயரைக் காலி என்று கூட்டித் திரித்துக் கொண்டனர் [வண்.மொ.வழு.44].

**கொற்றவைநிலை** *korravai-nilai,* பெ.(n.) காளிக்குப் பலியிட்டுப் பரவும் புறத்துறை; theme of offering sacrifice to Durga and worshipping her. *"மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த கொற்றவை நிலையும்" (தொல்.பொருள்.புறத்.4).*

*[கொற்றவை + நிலை.]*

**கொற்றன்** *korran,* பெ.(n.) 1. கொத்தன்; mason. 2. கற்றச்சன்; stone cutters;artisans.

**ம.** கொற்று.

*[கொற்று → கொற்றன்.]*

**கொற்றன்புத்தூர்** *korran-puttūr,* பெ.(n.) பெருவழுதிப் பாண்டியனால் வழங்கப்பட்ட வேள்விக் குடியின் கிழக்கு எல்லையாக அமைந்த ஊர்; a village, western boundary of *Vēlvikkudi.* *"அற்றம் இல்லாக் கொற்றன் புத்தூர்" (பாண்டி.செ.பத்.ப.30 வ.121 வே.கு.செ.).*

*[கொற்றன் + புத்தூர்.]*

**கொற்றாள்** *korrāl,* பெ.(n.) கல் மற்றும் மண்வேலை செய்பவ–ன்–ள்; labourer working in earth, stone etc. *"என்போலத் திருந்து கொற்றாள் கிடையாது" (திருவாலவா.30:11).*

மறுவ. சிற்றாள்.

*[குறு → குற்று → கொற்று + ஆள். கொற்றாள் என்னும் சிற்றாள் எனப் பொருள்தரும். குறு → குற்று → கொற்று = சிறியது.]*

**கொற்றான்** *korrāṉ*, பெ.(n.) இலையற்ற கொடிவகை (M.M.230) ; parasitic leafless plant.

*[கொற்று (நெருக்கம். புதர்) → கொற்றான்.]*

**கொற்றி**[1] *korri*, பெ.(n.) 1. ஆவின் இளங்கன்று; the young calf of a cow. 2. கருந்தாளி; black satinwood (சா.அக). 3. இளங்கன்றுள்ள ஆன் (யாழ்.அக.); cow having a young calf.

**ம.** கொற்றி; **தெ.** குர்ரி.

*[கொல் → கொற்று → கொற்றி.]*

கொற்றி = இளமை சுட்டிய பெயர். குற்றி என்பதன் திரிபு. மறி, குறி, சென்னை, மூடி, மருக்கை, கன்று, குட்டி, பிள்ளை, பார்ப்பு, குஞ்சு, கயம், குன்னி, முன்னி, முளகு, குளகு, குழவி, மகவு போன்றன இளமைப் பெயர்கள்.

**கொற்றி**[2] *korri*, பெ.(n.) 1. ***கொற்றவை*** பார்க்க; see *korravai*. *"பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய்நொடித் தாங்கு" (கலித்.89).* 2. ஒருவகை வரிக்கூத்து (சிலப்.3:13, உரை); a masquerade dance.

**ம.** கொற்றி; **தெ.** கொட்டமு.

*[கொற்றம் → கொற்றி.]*

கொற்றி இளமைப் பெயராதலின் கன்னி, குமரி என்பவற்றுக்கு நிகராக ஆளப்பட்டது.

**கொற்றி**[3] *korri*, பெ.(n.) 1. சிறியது; that which is small. 2. குட்டி, குஞ்சு; young of an animal or bird. 3. குழந்தை, பிள்ளை; child. 4. பூனை; cat.

**மறுவ.** பூனை, பூசை, பூஞை, பிள்ளை, கொற்றி, கொத்தி.

**ம.** கொற்றி; **க.** குறும்; **துட.,பட.** கொத்தி.

**Asian., Rusia.** kot'm, kotchka, koshka; **Myan.** (Bur), krong, cavn.

**European., Mod.** cat, catt, catte; **L.** catta, catus, **L.L.** cattus, catta; **It.**, gatto; **S.P.** gato; **M.L.G.** Katte; **F.** chat; **O.F.** Cat; **Bret.** Kaz; **O.H.G.** Kazza, Chazza, Chataso; **Gk.** katta, kattos; **Mod.,Gk.** gata; **E.** cat; **O.E., Mod.** cat, catt, catte; **ON.** Kottr, kattus, keta; **M.H.G.** katza, kateso, kates; **Goel.** cat; **Bre.** kaz; **Cor.** cath; **Bulg.** Kotka; **Lith.** kate; **Pro.** cat; **Pol.** kot.

**Sem., Ar.** Qit, tomcat, qitta, cat; **Egypt.** gak.

**African.,Swa.** katta, katta; **Nvb.,** kaids; **Dak.** kat; **Van.** kach; **Copt.** kath.

**Chin.** kichi.

*[குறு → குற்று → குற்றி → கொற்றி (குழந்தை).]*

கொற்றி = குழந்தை இளமைப்பெயர். கன்றோடு கூடிய கறவை மாடும் கொற்றி எனப்படும் இது குற்றி [சிறிய குழந்தை] என்பதன் திரிபு. குற்றி, குஞ்சு, பிள்ளை, என்பன குழந்தையைக் குறிக்கும் இளமைப் பெயர்கள். தமிழில் இச்சொல் இறந்துபட்டது. பழஞ்சேரநாட்டுத் தமிழின் [வடசொற்செறிந்த] திரிபே மலையாளமாயினும் கொற்றி என்னும் இளமைப் பெயரைத் தக்கவைத்துக் கொண்டுள்ளது. வீட்டு வளர்ப்பு விலங்குகள் குழந்தை போன்று கருதப்படுவதால் கிளியைப் பறக்கும் பிள்ளை என்றும், அணிற்பிள்ளையை ஓடும் பிள்ளை என்றும், பூனையை நடக்கும் பிள்ளை என்றும், தென்னை மரத்தை நிற்கும் பிள்ளை என்றும் வழங்கும் பழந்தமிழ்ச் சொல்லாட்சிகளை நோக்குக. பூனையைப் பிள்ளையாகக் கருதிய கரணியத்தால் தெலுங்கு மொழியில் பில்லி [பிள்ளை] எனப்படுகிறது. மலையாளத்தில் 'கொற்றி' [குற்றி] எனப்படுகிறது. கன்னடத்திலும் உலக மொழிகளிலும் கொத்தி எனப்படுகிறது. இதனைச் சரியாகப் பகலில் கண் தெரியாத காரணத்தால் குருட்டுத்தனத்தைக் குறிக்கும் 'கொத்தை' என்னும் சொல்லோடு இணைக்க வேண்டியதில்லை. கொத்தை என்பது குந்து [குறைபாடு, ஊனம்] என்னும் சொல்லிலிருந்து குந்து → கொந்து → கொந்தை → கொத்தை எனத் திரிந்து தமிழில் பார்வைக் குறைபாட்டைக் குறிக்கும் சொல்லாக உருப்பெற்றது "கொத்தைக்கு மூங்கர் வழிகாட்டுவித்து" [தேவா.1040:2].

"இன்னான் என்பது கண்ணாற் கொத்தை காலான் முடவன் என்பன [தொல்.வேற்.11.இளம்.உரை] என்னும் சொல்லாட்சிகளை நோக்குக. ஐரோப்பாவில் கி.பி.3ஆம் நூற்றாண்டுவரை பூனையிருந்ததில்லையென்றும், அது எகுபது நாட்டிலிருந்து இங்குக் கொண்டுவரப்பட்டதென்றும், cat என்னும் அதன் பெயர் எகுபதியச் சொல்லென்றும், மாக்சுமுல்லர் கருதினார். பூனை நீண்ட காலமாக எகுபது நாட்டில் வளர்க்கப்பட்டு வந்ததனாலும், ஓர் எகுபதியப் பெண் தெய்வம் பூனைத்தலை கொண்டிருந்ததனாலும், ஐரோப்பாவிற்கு எகுபது அண்மையிலிருப்பதனாலும், அவர் கூற்றுப் பொருத்தமாகவே தோன்றுகின்றது. ஆயின் குமரிநாடே மாந்தன் பிறந்தகமாதலாலும், தமிழகத்திற்கு எகுபது நாட்டொடு நீண்டகாலமாக நீர் வாணிகமும் நிலவாணிகமும் இருந்து வந்ததனாலும், வெருகு தமிழகக் குறிஞ்சி நிலக் கருப்பொருளாதலாலும், பூனை தமிழகத்தினின்றே எகுபதுக்குச் சென்றிருத்தல் வேண்டும். அதனால் அதன் பெயரும் தமிழ்ச்சொல்லாயேயிருத்தல் வேண்டும் என்று பாவாணர் குறிப்பிட்டுள்ளதை ஒப்பு நோக்குக [செந்தமிழ்ச் செல்வி: பக்.134,136].

**கொற்றிக்கலை** *korri-k-kalai*, பெ.(n) 1. நிலவேம்பு; ground neem.a medicinal plant Justicia paniculata. 2. கொறித்தலை; blotched-head (சா.அக.).

*[கொற்றி + கலை.]*

**கொற்றிக்கோரை** *korri-k-kōrai*, பெ.(n.) கோரை வகை; a kind of sedge.

*[கொற்றி + கோரை.]*

**கொற்றியார்** *korriyār,* பெ.(n.) 1 துளசிமாலை முதலிய சின்னங்களை யணிந்து திருமாலடியாராய்த் திரியும் பெண்துறவிகள்; a sect of Vaisnava female mendicants wearing basil garlands and other religious marks. 2. ஒரு கலம்பக வுறுப்பு; one of the constituent themes of *Kalambagam.* 3.பிள்ளைப் பேற்றின் அதிதேவதை (யாழ்ப்.); Goddess of parturition.

*[கொற்றி + ஆர் – கொற்றியார்.]*

**கொற்றியார்பூசை** *korriyār-pūšai,* பெ.(n) கருவுயிர்த்த பத்தாவது நாள் பெண்ணை முழுக்காட்டி அறையைத் தூய்மை செய்து வீட்டிற்குள் அழைத்து வந்து அன்றிரவு காட்டேரி மனநிறைவு அடையும்படி போடும் பூசை; a ceremonial offering made to the female deity named *Kātteri* responsible for parturition or child birth on the tenth day of delivery. In this the lying in room is ceremoniously cleaned and the woman is given a bath and admitted into the house. The worship is conducted purely by women only (சா.அக.).

*[கொற்றி + ஆர் + பூசை.]*

**கொற்றியாரைவழிவிடு–தல்** *korriyārai-valividu-,* 20 செ.கு.வி.(v.i.) கருவுயிர்த்த ஐந்தாம் நாள் பிள்ளைப்பேற்றின் அதிகாரத் தெய்வத்தை வழியனுப்பும் நோக்கில் கருவுயிர்த்த பெண் படுத்திருந்த பாயுடன் அவள் கொண்ட உணவின் ஒவ்வொரு வகையிலும் சிறிது எடுத்துக்கொள்ளச் சொல்லி மருத்துவச்சியை ஊருக்குப் புறத்தே போகச் செய்தல் (யாழ்ப்.); to bid farewell to the Goddess of Parturiton on the fifth day after child birth. by sending away the midwife to some open place or jungle with the mat used by the mother and morsel of each of the dishes she had tasted.

*[கொற்றியார் + ஐ + வழிவிடு–.]*

**கொற்றியோடு** *korri-y-ōdu,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[கொற்றி + ஓடு (ஓடை).]*

**கொற்றிலக்கை** *korrilakkai,* பெ.(n.) 1. ஒரு பழைய வரி; an ancient tax. 2. ஆள் ஒன்றுக்கமைந்த ஊதியம்; wage for a person.

*[கொற்று + இலக்கை.]*

கொற்று + இலக்கை. இவ் விரு சொற்றொடர் இரண்டு பொருளில் கல்வெட்டுகளில் கூறப்பட்டுள்ளன. உரும் பயனும் பெறுதற்கமைந்த தொகைநிலையில், கொற்றுக்கு உரிய ஊதியமாகும் 'இலக்கை' என்றும், பலர் கூடிச் செய்த பணியில் ஆள் ஒன்றிற்கமைந்த ஊதியம் என்றும் பொருள் தருவதோடு, ஒரு துறைக்கமைந்த பல அதிகாரிகளின் பணியாகிய கொற்றுக்கு, அதிகாரி ஒருவர்க்கு அமைந்த ஊதியமாகப் பெறுதற்கு அரசால் அனுமதிக்கப்பட்ட ஊர்களின் வரி, ஆயம், கடமை முதலிய வருவாய்களும் கொற்றிலக்கை என்னும் பெயரால் கூறப்பெறும்.

இவ்வாறாக, ஊழியத்தின் நாள் ஊதியமாகவும், அதிகாரிகள் பெறுதற்கமைந்த வரியின் பெயராகவும் கொற்றிலக்கை இடம் பெற்றுள்ளமையினைக் கல்வெட்டுச் செய்திகள் கூறுகின்றன.

"திருநந்தவனக் குடிகளுக்கு இலக்கைக்கும் கொற்றுக்கும் உடலான நிலம் இருபத்தைஞ்சுமா" [தெ.கல்.தொ.8, கல்.56].

"கோயில் அதிகாரி கொற்றிலக்கையும்"

"அதிகாரிப் பேறான கொற்றிலக்கையும்" [நாயக்கர் காலம்].

"அதிகாரிப் பேறான கொற்றிலக்கையும்" [தெ.கல்.தொ.17, கல்.269,532].

**கொற்று**[1] *korru,* பெ.(n.) தொழிலாளர் பலர் அமைந்த கூட்டம்; group of labour.

*[கொத்து → கொற்று]*

இத் திருநந்தவனம் செய்ய வேண்டும் பேராய் நிச்சயித்த நாயகம் பேர் ஐஞ்சும் பேர் தொண்ணூற்றைஞ்சும் ஆகப் பேர் நூறு. இதில் நாயகம் பேர் ஐவர்க்கு கொற்றுக்கு நாள் ஒன்றுக்குப் பேர் ஒன்றுக்கு முக்குறுணியாக நெல்லுக் கலனே முக்குறுணியும் புடவை முதல் ஆட்டைக்குப் பேரால் மூன்றாகக் காசு பதினைஞ்சும். பேர் தொண்ணூற்றைவர்க்கு கொற்றுக்கு நாள் ஒன்றுக்கு பேர் ஒன்றுக்கு நெல்லு பதக்காக புடவை முதல் ஆட்டைக்கு பேரால் காசு இரண்டாக காசு நூற்றுத் தொண்ணூறும் [தெ.கல்.தொ.8.கல்.55].

"திருநந்தவனப் புறமாக விலைகொண்ட நிலத்து–ஊர்பழ நிலம் ஏழு மாவும் கொற்றுக்கு உடலாகவும்"

"திருநந்தவனத்துக்கும் திருநந்தவனப்புறமாக கொற்றுக்கும் விலைகொண்ட நிலம்" [தெ.கல்.தொ.12. கல். 151] [கல் .அக.].

தொழிலாளர் பலர் அமைந்த கூட்டம் [தொகுதியர், கூட்டாளர், தொழில்குழு] ஒரு தொழிலுக்கமைந்த பலர் சேர்ந்த குழுவே கொற்று எனப்பட்டது. ஒருசிலர் சேர்ந்து செய்யும் ஊழியமும் கொற்றெனவே கூறப்பெறும். கொற்றும் கொத்தும் கல்வெட்டுகளில் மயங்கக் கூறப்பெறினும் வேறுபட்ட பொருள் கொண்டனவேயாகும்.

**கொற்று**[2] *korru,* பெ.(n.) 1. கொற்று வேலை; masonry. *"கொற்றுள விவரில்" (திருவாலவா.30:23).* 2. கொத்தன் (உ.வ.); mason. 3. ஒரு கொத்தன் செய்யும் வேலையளவு; the measure of work turned out by a mason. இந்தச் சுவர் கட்ட எத்தனை கொற்றுச் செல்லும்?

ம. கொற்று.

*[குறு → குற்று → கொற்று + ஆள். கொற்றாள் : சிற்றாள். சிற்றாள் பலர் கொண்ட குழு. அக் குழுவின் தலைவன் அக் குழுச் செய்யும் ஒருநாள் வேலை அளவு.]*

**கொற்று**[3] *korru,* பெ.(n.) உணவு (I.M.P.S. A.109); food, means of subsistence.

*[குறு → குற்று → கொற்று : கொற்றானுக்குக் கூலியாகத் தரும் உணவு.]*

**கொற்று**[4] *korru,* பெ.(n.) தவசமாகப் பெறும் கூலி; wages in kind. *"பதினாற்கல நெல்லு கொற்று பெறுவதாகவும்" (S.I.I.v.302).*

*[கொள் → கொற்று.]*

**கொற்று**[5] *korru,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கொத்தல்; to make into tiny pieces. 2. கோதுதல்; to preen, run through.

*[கொல் → கொற்று.]*

**கொற்றுவாய்** *korru-vāy,* பெ.(n.) கல்வேலை செய்யும்போது உருவச் சிதைவு ஏற்பட உடைகை; figure getting damaged when a stone is being sculpted.

*[கொற்று + வாய்.]*

**கொற்றுறை** *korrurai,* பெ.(n.) கொல்லன் பட்டடை; blacksmith's workshop. *"கொற்றுறைக் குற்றில" (புறநா.95).*

*[கொல் + துறை.]*

**கொற்றை** *korrai,* பெ.(n.) கொத்தை; blot, blemish, defect. *"ப்ரேமத்துக்குக் கொற்றையாகையாலே" (திவ்.பெரியாழ்.2, 4:1, வியா.ப.310, அரும்).*

*[குழத்தல் → குழத்து → கொத்து → கொத்தை (பழுது) → கொற்றை.]*

**கொறகொறப்பு** *kora-korappu,* பெ.(n.) குளிர்ச்சி யானால் குழந்தைகளுக்குத் தொண்டையில் அல்லது நெஞ்சில் கோழை காட்டிக் காணும் ஒலி; rale or abnormal noise either in the throat or the lungs, generally common in children affected with cold or phlegm (சா.அக.).

*[குறுகுறு → கொறகொற → கொறகொறப்பு.]*

**கொறகொறெனல்** *kora-korenal,* பெ.(n.) ***கொறகொறப்பு*** பார்க்க; see *kora-korappu.*

*[கொறகொற + எனல்.]*

**கொறண்டல் வாதம்** *korandal-vādam,* பெ.(n) ***குறண்டல் வாதம்*** பார்க்க; see *kurandal-vādam* (சா.அக.).

*[குறண்டல் → கொறண்டல் + வாதம்.]*

**கொறவி** *koravi,* பெ.(n.) கடல்மீன் வகையுளொன்று; a kind of a sea fish.

*[குறவி → கொறவி.]*

**கொறாவு-தல்** *korāvu-,* 6 செ.கு.வி. (v.i.) முகப்பொலி விழத்தல் (மீன்.பிடி.தொ.); to lose glamour.

*[குறாவு → கொறாவு.]*

**கொறி[1]-த்தல்** *kori-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1.பல்லாலும் அலகாலும் தவசத்தைப் பிரித்துத் தின்னுதல்; to nip off the husks of grains. *"தினைகள் கொறிப்பமுன் றாவி" (காஞ்சிப்பு. இருபத்.95).* 2. சிறிது சிறிதாகப் பொறுக்கி உண்ணுதல் (இ.வ.); to graze, to pick up food here and there, as cattle, to eat scantily. *"உடுத்திரள் பொரியிற் கொறிப்ப" (கல்லா. முருகன்துதி.).* 3. விட்டுவிட்டு ஒலித்தல் (யாழ்ப்.); to make a ticking or clucking sound. 4.அலப்புதல் (யாழ்ப்.); to chatter.

**தெ.** கொருகு; **க.** கொறுகு; **ம.** கொறி.

*[கொறு → கொறி.]*

**கொறி**[2] *kori,* பெ.(n.) 1. ஆடு; sheep. *"கொறியி னவுணர்தம் வெள்ளங்கள்... கொன்றதிலோ" (அஷ்டப்.திருவரங். மா.32).* 2. மேழவோரை; Aries (சா.அக.). கொறியலவன் (சினேந்.71).

*[குறி → கொறி.]*

**கொறிக்கு-தல்** *korikku-,* 5 செ.குன்றாவி.(v.t.) பல்லாற்கோதுதல்; gnawing.

*[கொறு → கொறிக்குதல்.]*

**கொறித்துப்பார்-த்தல்** *korittu-p-pār-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. குத்துதற்குத் தக்கபடி காய்ந்துள்ளதா என்பதை அறிய அவித்த நெல்லை வாயிலிட்டுப் பதம்பார்த்தல்; to ascertain by tasting whether the paddy, grain that has been boiled is dry enough for the husking. 2.அகங்காரங் கொண்டு வெறித்துப் பார்த்தல்; to stare at with impudence.

*[கொறித்து + பார்-.]*

**கொறிதலை** *koritalai,* பெ.(n) நிலவேம்பு; ground neem.

*[கொறி + தலை.]*

**கொறிப்புத்தம்** *kori-p-puttam,* பெ.(n.) சருக்கரை வேம்பு; margosa tree; the bark of which is sweet to taste (சா.அக.).

*[கொறி + புத்தம்.]*

**கொறு** *koṟu,* பெ.(n.) கன்றின் வாய்ப்பூட்டு; wicket - muzzle of a calf.

மறுவ. கொரி.

*[கொரி → கொறு.]*

**கொறுக்கச்சி** *koṟu-k-kacci,* 1. நாய்வேம்பு; dog neem, same as dog mustard. 2. நிலவேம்பு; ground neem. 3. நாணல் வகை; European bamboo reed.

*[குறுக்கச்சி → கொறுக்கச்சி.]*

**கொறுக்கச்சீரிகம்** *koṟukka-c-cīrigam,* பெ.(n.) பேரவுரி; long-podded Indigo plant.

*[கொறுக்கை + சீரிகம்.]*

**கொறுக்கம்புளி** *koṟukkam-puḷi,* பெ.(n.) ***கொறுக்காய்ப்புளி*** பார்க்க; see *koṟukkāy-p-puḷi.*

*[கொறுக்காய்ப்புளி → கொறுக்கம்புளி.]*

**கொறுக்கல்** *koṟukkal,* பெ.(n.) ***கொறுக்கை*** பார்க்க (இ.வ.); see *koṟukkai.*

*[கொறு → கொறுக்கல்.]*

**கொறுக்கா** *koṟukkā,* பெ.(n.) ***கொறுக்காய்ப்புளி*** (மலை.) பார்க்க; see *koṟukkāi-p-puḷi.*

*[கொடுக்காய் → கொடுக்கா → கொறுக்காய் → கொறுக்கா.]*

**கொறுக்காம்பட்டி** *koṟukkām-paṭṭi,* பெ.(n.) சேலம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Selam Dt.

*[கொறுக்கன் + பட்டி → கொறுக்காம்பட்டி.]*

**கொறுக்காய்** *koṟukkāy,* பெ.(n.) ***கொறுக்காய்ப் புளி*** பார்க்க; see *koṟukkāy-p-puḷi.*

*[கொடுக்காய் → கொறுக்காய்.]*

**கொறுக்காய்ப்புளி** *koṟukkāy-p-puḷi,* பெ.(n.) 1. கொடுக்காய்ப்புளி; Manilla tamarind. 2. ஈழப்புளி Malabar gamboge.

*[கொடுக்காய் → கொறுக்காய் + புளி.]*

ஒரு சிறிய மரம். இதன் காயைப் புளியைப் போல் கறிக்குப் பயன்படுத்துவதும் உண்டு.

**கொறுக்கு** *koṟukku,* பெ.(n.) மேகநோய் வகை; syphilis.

தெ. கொறுக்கு.

*[கொறு + கொறுக்கு.]*

**கொறுக்குக்கொண்டான்** *koṟukku-k-koṇḍān,* பெ.(n.) கொறுக்கு நோயால் பீடிக்கப்பட்டவன்; one who is suffering from chancre (சா.அக.).

*[கொறுக்கு + கொண்டான்.]*

**கொறுக்குவலி** *koṟukku-vali,* பெ.(n.) 1. குரக்குவலி; cramps. 2. வலிப்பு; epilepsy. 3. ஒரு நரம்புவலி; spasm (சா.அக.).

*[குறக்கு → கொறுக்கு + வலி.]*

**கொறுக்கை[1]** *koṟukkai,* பெ.(n.) 1. நாணல்வகை (மலை.); European bamboo reed. 2. கடல்மீன் வகை; a kind of sea fish. 3. ***கொறுக்கு*** (M.L) பார்க்க; see *koṟukku.*

*[குறுக்கை → கொறுக்கை.]*

**கொறுக்கை[2]** *koṟukkai,* பெ.(n.) குறட்டை மூச்சு; (பிங்.); snoring.

*[கொறு → கொறுக்கை.]*

**கொறுக்கைத்தாரி** *koṟukkai-t-tāri,* பெ.(n.) செங்கத்தாரி; false peacock foot tree (சா.அக.).

*[கொறுக்கை + (தாலி) தாரி.]*

**கொறுக்கைப்புல்** *koṟukkai-p-pul,* பெ(n.) நாணல்; European bamboo reed (சா.அக.).

*[கொறுக்கை + புல்.]*

**கொறுக்கைப்புளி** *koṟukkai-p-puḷi,* பெ.(n.) ***கொறுக்காய்ப்புளி*** பார்க்க; see *koṟukkāy-p-puḷi.*

மறுவ. கொறுக்கா ஈழம்புளி, கொறுக்காப்புளி.

*[கொடுக்காய் → கொறுக்காய் + புளி → கொறுக் காய்ப்புளி → கொறுக்கைப்புளி.]*

**கொறுக்கைப்பேணி** *koṟukkai-p-pēṇi,* பெ.(n.) பேய்ப்பாற்சோற்றி; a plant of the species of Indian guttapercha yielding an elastic substance (சா.அக.).

*[கொறுக்கை + பேணி.]*

**கொறுக்கைவலி** *koṟukkai-vali,* பெ.(n.) ***கொறுக்கு வலி*** பார்க்க; see *koṟukku-vali* (சா.அக.).

*[கொறுக்கை + வலி.]*

**கொறுக்கைவிடல்** *koṟukkai-viḍal,* பெ.(n.) குறட்டை விடல்; snoring (சா.அக.).

*[கொறுக்கை + விடல்.]*

**கொறுக்கோல்** *koṟu-k-kōl,* பெ.(n.) ***கொறு*** பார்க்க; see *koṟu.* *'முன்னணைக் கன்று பசுக்களோடே போனால் முலையுண்ணாமைக்குக் கொறுக்கோலென்று அதின் மூஞ்சியிலே கட்டி விடுவார்கள்' (ஈடு, 4, 8:4).*

*[கொறு + கோல்.]*

**கொறுகொறு-த்தல்** *koṟu-u-koṟu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. சினம் காட்டுதல்; to bubble with anger. *"இட்டிடை கோறு நாங்க ளெனக்கொறு கொறுப்ப" (சீவக.2040).* 2. குறட்டை விடுதல்; to snore.

**தெ.** கொறகொறலாடு.

**கொறுகொறுப்பு** *koṟu-koṟuppu,* பெ.(n.) 1. ***கொற கொறப்பு*** பார்க்க; see *koṟa-koṟappu.* 2. அலட்டுகை (யாழ்.அக.); pestering.

*[கொறுகொறு → கொறுகொறுப்பு.]*

**கொறுகொறுவெனல்** *koṟu-koṟu-v-eṉal,* பெ.(n.) 1. ஓர் ஒலிக்குறிப்பு; (onom. expr. signifying) roaring as the sea. *"பாற்கடல் கொறுகொறு வென்ன" (தணிகைப்பு.நாகமருள்.3).* 2. சினக்குறிப்பு (onom. expr.signifying); anger.

*[கொறு + கொறு + எனல்.]*

**கொறுங்கை** *koṟuṅgai,* பெ.(n.) நாணல் வகை; European bamboo reed.

*[கொறுக்கை → கொறுங்கை.]*

**கொறுடு** *koṟuḍu,* பெ.(n.) கன்னம் (ஈ.டு, 8, 3:4); cheek.

*[கொடிறு → கொறுடு.]*

**கொறுவாய்** *koṟuvāy,* பெ.(n.) உடைந்த விளிம்பு (நெல்லை); broken rim or edge.

**மறுவ.** ஒறுவாய், கதுவாய்.

*[கதுவாய் → கொறுவாய்.]*

**கொன்** *koṉ,* பெ.(n.) 1. பயனின்மை (தொல்.சொல். 256); uselessness. 2. அச்சம்; fear. *"கொன் முனை யிரவூர் போல" (குறுந்.91).*

*[கொல் → கொன்.]*

**கொன்**[2] *koṉ,* பெ.(n.) 1. கூர்மை; sharpness. 2. நுனி; tip. 3. காலம் (தொல்.சொல். 256); season. 4. விடியற்காலம்; dawn. *"கொன்னிளம் பரிதி" (சீவக.173).* 5. பெருமை; greatness. *"கொன்னூர் துஞ்சினு மியாந்துஞ் சலமே" (குறுந்.138).* 6. வலி (சூடா.); strength.

*[குல் → கொல் (குத்துதல்) → கொன்.]*

**கொன்றல்** *koṉṟal,* பெ.(n.) கொல்லுதல்; murder.

*[கொல் → கொன்றல்.]*

**கொன்றன்** *koṉṟaṉ,* பெ.(n.) வாழை; plantain tree (சா.அக.).

*[கொல் → கொன்றன.]*

**கொன்றான்சாறு** *koṉṟāṉ-śāṟu,* பெ.(n.) வாழைச் சாறு; the juice of plantain bark (சா.அக.).

*[கொன்றன் → கொன்றான் + சாறு.]*

**கொன்றுண்ணி** *koṉṟuṇṇi,* பெ.(n.) பிற உயிரினைக் கொன்று பிறகு உண்ணும் உயிரி; predator.

*[கொன்று + உண்ணி.]*

**கொன்று-தல்** *koṉṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கொன்னிப் பேசல் அல்லது திக்கிப் பேசல்; stammering. 2. குழறிப் பேசல்; babbling. 3. குழந்தைபோற் பேசல்; prattling like child (சா.அக.).

*[கொன் → கொன்று.]*

**கொன்றை** *koṉṟai,* பெ.(n.) 1. சரக்கொன்றை; Indian laburnum. *"பொலனணி கொன்றையும்" (ஐங்குறு. 435).* 2. செங்கொன்றை; red Indian laburnum. 3. மஞ்சட்கொன்றை; siamese tree. 4. கடுக்கை மரம்; gallnut tree.

**மறுவ.** கொன்னை மரம்.

*[கொல் → கொன்று → கொன்றை (கொத்து).]*

வகைகள்: 1. சரக்கொன்றை 2. மயிற்கொன்றை 3. சிவப்புக் கொன்றை 4. கருங்கொன்றை 5. குளோப் பூக்கொன்றை 6. காட்டுக்கொன்றை 7. மஞ்சட்கொன்றை 8. வரிக்கொன்றை 9. பிரம்புக் கொன்றை 10. மலைக் கொன்றை 11. சீமைக் கொன்றை 12. இராகத்துக் கொன்றை 13. நரிக் கொன்றை 14. சிறு கொன்றை 15. செடிக் கொன்றை 16. பெருமயிற் கொன்றை 17. செழு மலர்க் கொன்றை 18. சொறிக்கொன்றை 19. எருமைக் கொன்றை 20. புலிநகக் கொன்றை 21. மந்தாரக் கொன்றை 22. பெருங்கொன்றை 23. செம்மயிற் கொன்றை 24. பொன்மயிற்கொன்றை 25. முட்கொன்றை 26. வெண் மயிற் கொன்றை 27. குண்டு பூக்கொன்றை 28. சிறு மயிற் கொன்றை 29. காக் கொன்றை 30. மல்லங் கொன்றை 31. நொச்சிக் கொன்றை 32. புளிணைக்காய் கொன்றை 33. ஈசன் தார்க் கொன்றை 34. மாம்பழக் கொன்றை 35. சூரத்துக் கொன்றை (சா.அக.).

**கொன்றைக்களி** *koṉṟai-k-kaḷi,* பெ.(n.) ***கொன்றைப் புளி*** பார்க்க; see *koṉṟai-p-puḷi.*

*[கொன்றை + களி.]*



கொன்றை



கொடிப்பாலை






கொள்ளுக்காய் வேளை



கொடிவயலை



கொடிவேலி

**கொன்றைக்காய்** *konrai-k-kāy,* பெ.(n.) 1. கொன்னைக் காய்; purging cassia pod. 2. ***கொற்றைப்புளி*** பார்க்க; see *korrai-p-puli.*

*[கொன்றை + காய்.]*

இதனை இடித்து வடிகட்டிச் சிறிதளவு சாப்பிட மலத்தை இளக்கும். அதிகளவு சாப்பிடக் கழிச்சலாகும்.

**கொன்றைக்குழல்** *konrai-k-kulal,* பெ.(n.) ***கொன்றைப்பழக்குழல்*** பார்க்க; see *konrai-p-pala-k-kulal.*

*[கொன்றை + குழல்]*

**கொன்றைசூடி**[1] *konrai-šūdi,* பெ.(n.) கொன்றை மாலை சூடியவன், சிவன் (திவா.); šiva, as crowned with *konrai* flowers.

*[கொன்றை + சூடி]*

**கொன்றைசூடி**[2] *konrai-šūdi,* பெ.(n.) சிவகரந்தை; sweet basil (சா.அக.).

*[கொன்றை + சூடி]*

**கொன்றைப்பட்டை** *konrai-p-pattai,* பெ.(n.) கொன்றை மரத்தின் அடிமரத்துப் பட்டை; bark of the stem of cassia tree-cassia bark.

*[கொன்றை + பட்டை]*

இதை இடித்து எண்ணெயிற் குழைத்து அம்மைப் புண், வண்டுகடி, சதை வெடிப்பு முதலியவற்றுக்குப் பூசலாம் [சா.அக.].

**கொன்றைப்பழக்குழல்** *konrai-p-pala-k-kulal,* பெ.(n.) கொன்றைப் பழத்தைத் துளைத்துச் செய்யப்பட்ட ஊதுகுழல்; musical pipe made of the *konrai-pod.* *'கொன்றைப் பழக்குழற் கோவலர்' (சிலப்.17,பாட்டு,உரை).*

*[கொன்றை + பழம் + குழல்]*

**கொன்றைப்புளி** *konrai-p-puli,* பெ.(n.) கொன்றைக் காய்க்குள் விதையைச் சுற்றிலுமுள்ள பசை; mucilaginous pulp surrounding the seeds of cassia.

*[கொன்றை + புளி]*

இது மலம் இளக்கும்; வறுமைக் காலத்தில் உணவாகும். நீரிழிவை நீக்கும். பெண்களுக்குக் குல்கந்துடன் சேர்த்துக் கொடுக்க மலம் இளக்கும். குழந்தைகட்கு வயிற்றுப்பிசத்தால் காணும் வலிக்குத் தொப்புளைச் சுற்றித் தடவுதலும் உண்டு [சா.அக.].

**கொன்றைப்பூ** *konrai-p-pū,* பெ(n.) கொன்றை மரத்தின் பூ; cassia flowers.

*[கொன்றை + பூ]*

இதனைக் கியாழம் இட்டுக் கழிச்சல், சீதக்கழிச்சல் ஆகியவற்றைக் குணமாக்கலாம் [சா.அக.]. சிவனுக்குகந்த மலர்.

**கொன்றைவாருதி** *konrai-vārudi,* பெ.(n.) 1.ஒரு பூண்டு (மலை.); marsh-samphire. 2.பவளப்பூண்டு; species of glasswort (சா.அக.).

*[கொன்றை + வாருதி]*

**கொன்றைவேந்தன்** *konrai-vēndan,* பெ.(n.) ஒளவையார் இயற்றிய 'கொன்றை வேய்ந்த' என்று தொடங்கும் ஒரு நீதிநூல்; a short moral code in Tamil by Avvaiyār commencing with Konraiveynda.

*[கொன்றை + வேய்ந்தன் – கொன்றைவேய்ந்தன் → கொன்றைவேந்தன்.]*

**கொன்னக்குடி** *konna-k-kudi,* பெ.(n.) இராமநாத் புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanadha puram Dt.

*[கொன்னை + குடி.]*

**கொன்னக்குளம்** *konna-k-kulam,* பெ.(n.) சிவகங்கை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Sivagangai Dt.

*[கொன்னை + குளம்.]*

**கொன்னக்கோல்** *konna-k-kōl,* பெ.(n.) கச்சேரியின்போது பக்க இன்னியமாக வாயால் சொல்லப்படும் தாளம்; vocalized rhythmic beat as an accompaniment in a concert.

*[கொன்னை + கோல்]*

**கொன்னத்தான்பட்டி** *konnattān-patti,* பெ.(n.) சிவகங்கை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Sivagangai Dt.

*[கொன்னம் → கொன்னத்தான் + பட்டி.]*

**கொன்னாளர்** *konnālar,* பெ.(n.) கரிசாளர் (பாவிகள்); sinner, contemptible person, wretch.

*[கொன்னாள் + அர்]*

**கொன்னாளன்** *konnālan,* பெ.(n.) 1.பயனற்றவன்; useless person. *"நம்மருளாக் கொன்னாளன்" (கலித்.42:18).* 2. பாழ்வினையன் (பாவி); sinner. *"வடதிசையுங் கொன்னாளர் சாலப் பலர்" (நாலடி, 243).*

*[கொன் + ஆளன்.]*

**கொன்னி–த்தல்** *konni-,* 4 செ.கு.வி. (v.i.) 1. நாத்திரும்பாதிருத்தல்; have an impediment in one's speech. 2. திக்குதல்; to stammer.

*[கொன்னு → கொன்னி.]*

**கொன்னிப்பு** *konnippu,* பெ.(n.) 1. திக்கிப் பேசுகை; stammering. 2. நோய் வகை (பரராச.i, 236); a disease.

*[கொன் → கொன்னிப்பு.]*

**கொன்னிப்பேசு–தல்** *konni-p-pēsu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. தெத்திப் பேசுதல்; to stammer. 2. குழந்தையைப் போற் பேசுதல்; prattle like a child (சா.அக.).

*[கொன்னி + பேசு–.]*

**கொன்னு[1]–தல்** *konnu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. திக்கிப் பேசுதல்; to stammer; stutter. 2. குழறுதல்; to babble. *"ஒன்னார்கள் வாய்கொன்ன" (தனிப்பா. 1.386:38).*

**கொன்னு[2]–தல்** *konnu-,* 5 செ.கு.வி.(v.i.) பெருமையுறுதல் (தணிகைப்பு.நாட்140); to become famous.

**கொன்னெச்சன்** *konneccan,* பெ.(n.) மாட்டிற் பற்றும் ஈவகை; a kind of gadfly biting cattle.

*[கொன் + எச்சன்.]*

**கொன்னே** *konnē,* கு.வி.எ.(adv.) வீணே; for no purpose.

*[கொன் → கொன்னே.]*

**கொன்னை[1]** *konnai,* பெ.(n.) 1. திக்கிப்பேசுகை; stammering. 2. குழறுகை; babbling.

ம. கொஞ்ஞ; **க.,பட.** கொதசு; **கெ.**கொதுகு

*[கொன்னு→ கொன்னை.]*

**கொன்னை[2]** *konnai,* பெ.(n.) தொன்னை (இ.வ.); cup made of leaves.

*[குல் → கொல் → கொன் → கொன்னை.]*

**கொன்னை[3]** *konnai,* பெ.(n.) ***கொன்றை*** பார்க்க; see *konrai.*

*[கொன்றை → கொன்னை.]*

**கொன்னை[4]** *konnai,* பெ.(n.) சிறிய வெற்றிலை யடுக்கு; a bunch of betel leaves.

*[குல் → கொல் → கொன் → கொன்னை.]*

**கொன்னை[5]** *konnai,* பெ.(n.) இகழ்ச்சி; contempt. *"அத்துரு தாசி யாகிக் கொன்னை யுற்றிடுதி" (வேதாரணி. சேடன்.7).*

*[கொன் → கொன்னை.]*

**கொன்னைச்சொல்** *konnai-c-col,* பெ.(n.) இடைநிலையாய்ப் பயன்படும் சொல் (வழ.சொ.அக.); expletive.

*[கொன்னை + சொல்.]*

**கொன்னைத்தெங்கு** *konnai-t-tengu,* பெ.(n.) 1. முடத்தெங்கு, வளைந்த தென்னை; crooked cocopalm. 2. காய்க்காத தெங்கு (நாஞ்.); barren cocoanut palm.

*[கொன் → கொன்னை + தெங்கு.]*

**கொன்னைப்புளி** *konnai-p-puli,* பெ.(n.) ***கொன்றைப்புளி*** பார்க்க; see *konrai-p-puli* (சா.அக.).

*[கொன்றைப்புளி → கொன்னைப்புளி]*

**கொன்னையன்** *konnaiyan,* பெ.(n.) திக்கிப் பேசுபவன்; a man of indistinct or inperfect anticulation.

ம. கொஞ்ஞன்.

*[கொன்னை→ கொன்னையன்.]*

**கொன்னைவாய்** *konnai-vāy,* பெ.(n.) தெத்துவாய்; defective utterance (சா.அக.).

*[கொன்னை + வாய்]*

**கொன்னைவாயன்** *konnai-vāyan,* பெ.(n.) தெத்துவாயன்; stammerer; one who makes faltering speech (சா.அக.).

*[கொன்னை + வாய் + அன்]*

**கொனை** *konai,* பெ.(n.) நுனி; tip end as of a needle. *"பிரம்பின் கொனைபடலால்" (அஷ்டப்.திருவரங். மா.89).*

*[முனை → குனை → கொனை. நுனியைக் கொனை என்பது வடார்க்காட்டு வழக்கு.]*

**Russ.** konesh; **E.** cone, a sold pointed figure; **Fr.** cone; **L.** conus; **Gr.** konos, a peak, a cone eh.E.D. E. hone; **A.S.** han; **Ice.**hein; **Skt.** cana.

கொன்னை, கொன்னையன் முதலிய சொற்கள் கொனை என்பதினின்றும் திரிந்தவையே [த.வி.43, ஒ.மொ.370].

# கோ

**கோ**[1] *kō,* 1. ககர மெய்யும் ஒகார நெடிலும் சேர்ந்த உயிர்மெய்யெழுத்து; the compound of க் + ஓ. 2. ஒலிக்குறிப்பு; word imitative of sounds.

*[க் + ஓ.]*

**கோ**[2]**–த்தல்** *kō-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. மணி முதலியவற்றினூடு நூலைப் புகுத்தி இணைத்தல்; to string, as beads, flowers, *ōlā* leaves; to file; to insert; to thread, as a needle. *"கோத்தணிந்த வெற்பு மணி" (பெரியபு. மானக்கஞ்.22).* இறைச்சி தின்றாலும் எலும்பைக் ,கோத்துக் கழுத்தில் அணிகிறதா (பழ). 2. ஒழுங்கு படுத்துதல்; to compose, compile, arrange, reduce to order; to systematise. *"பார்த்தவிட மெங்கணுங் கோத்தநிலை குலையாது" (தாயு. கருணாகர.4).* 3. முறையாகக் கூறுதல்; to narrate in order; *"பூமியாண் முறையுங் கோத்தார்" (பாரத. சம்பவ.113).* 4. தொகுத்துரைத்தல்; to enumerate, recount. *"கோமின் றுழாய்முடி யாதியஞ் சோதி குணங்களே". (திவ்.திருவாய்.4, 1:7).* 5. நுணுக்கமாகக் கதை முதலியன புனைதல்; to invent, as a story, in a clever and fitting manner. 6. உடுத்துதல்; to put on, to wear. *"கோத்தகல் லாடையும்" (தேவா. 509: 2).* 7. கை பிணைத்தல்; to clasp, join, interlock, as the hands. *"குரவை யாய்ச்சியரோடு கோத்ததும்" (திவ். திருவாய். 6, 4:1).* 8. ஒன்றுசேர்த்தல்; to unite, merge. *"அன்பரைக் கோத்தற விழுங்கிக் கொண்டு" (தாயு. பொருள்வ. 3).* 9. கவிந்து கொள்ளுதல்; to envelop, cover. *"வல்லிருள் கோத்தது கருங்கடல் கொள்ளை கொண்டெடன" (கம்பரா. இலங்கை கேள்வி.3).* 10. எதிர்த்தல்; to oppose, resist. *"கனலி கோப்பக் காரிருளுடைந்த தேபோல்" (சீவக.1290).*

*[கோலு → கோர் → கோர்த்தல் → கோத்தல். கொள் = ஒன்றாகக் கொள்வது, சேர்ப்பது.]*

**கோ**[3] *kō,* பெ.(n.) 1. ஆன் (பசு) (பிங்.); cow. 2. எருது; bull. *'ஒரு கோவை யேறி' (இலக்.வி. 907,உரை).*

**Per.** gāw; or grar. gāuk; **Avest.** gāush; **Tock-A.** ko, ki; **Tock-B.** ken **Mod.** key, kye; **OE.** cu; **OS.** kō; **OFris.** kū; **M.Du.** Coe; **Du.** koe; **OHG.** chuo, kuo; **MHG.** kuo; **Gr.** kuh; **Dan.**, **Swed.** ko; **ON.** kyr; **Norw.** kyr, ko; ō; **Lett.** guous; **O.Slav.** gov; **Czech.** hovado; **Slavak.** hovādo(ox); **O.Gr.** gauk; **Avest.** gaush (ox, bull, cow); **A.s.** cyna, cū(pe)ey; **Rus.** govt.

[கோள் → கோ = கவரப்படும் 'ஆ']

பண்டைக் காலத்திற் கொள்ளைக்காரராலும் அரசராலும் பெரும்பாலும் கவரப்பட்டது 'ஆ'வே. ஊர்கொலை, ஆகோள் பூசல்மாற்றே [தொல். 1004] கோ → கோவன் → கோன்.

கோன் = இடையன் பட்டப்பெயர்.

கோன் → கோனான் = மாட்டிடையன்.

இடையன் → இடையர் = பட்டப்பெயர்.

ஒ.நோ: ஆ → ஆயன் = மாட்டிடையன், இடையன்.

OS., KO., OE., kū; E. cow; **Skt.** go. இச் சொற்கு ஆரிய மொழிகளில் மூலமில்லை. 'கோ' என்னுஞ்சொல் 'ஆ' என்னும் பொருளில் ஆரிய மொழிகளிற் பெரு வழக்காக வழங்குகின்றது. 'கோ' என்னுஞ்சொல், 'ஆ' என்னும் பொருளில் தமிழில் வழங்காமையாலும், ஆரியத்தில் வழங்குவதினாலும் அதை ஆரியச்சொல் என்று கொள்ளற்க. பசுவைக் குறிக்க 'ஆ', பெற்றம் என ஏனைய இரு சொற்கள் வழங்குவதினாலேயே 'கோ' என்னுஞ்சொல் அப் பொருளில் வழக்கற்ற தென்க [வண். மொழி. வழு. 43].

**கோ**[4] *kō,* பெ.(n.) 1. பேரரசர், மன்னர்மன்னன்; emperor. *"கோக்கண்ட மன்னர் குரைகடற் புக்கிலர்" (தமிழ்நா. 126).* கோவுக்கு அழகு செங்கோல் முறைமை (பழ). 2. அரசன் (பிங்.); king. 3. பெருமையிற் சிறந்தோன் (பிங்.); great man, eminent person. 4. தகப்பன்; father. *"நின்கோ வரினு மிங்கே வருக" (கலித். 116).* 5. தலைமை; leadership, domination. *"ஐவர் வந்து கோச்செய்து குமைக்க" (தேவா. 997:6).* 6. மலை; mountain. *"கோக்க டோறு மின்வாள் வீசி" (சிவப்பிர. வெங்கைக்கலம். 84).* 7. குயவன்; potter. *"மூதூர்க் கலஞ்செய் கோவே" (புறநா.256:7).* 8. தாய்; mother. 9. மேன்மை; excellence, superiority. 10. கலைவாணி; goddess of education. 11. வெளிச்சம்; light, brightness.

**Chin.** gōng guo; **Gr.** kuh; **Kore.** kō. **Fin.** kopea (proud, grand bold), kova (hard); **Est.** kobe (strong, hard); **Kare.** kova; **Jap.** kowai; **Q.** japaf.

க.கோவ; ம. கோ.

*[கோவன் → கோன் = இடையன், இடையன் ஆடுகளைக் காப்பதுபோல் மக்களைக் காக்கும் அரசன். கோன் → கோ (பண். த. நா. பண். 112).]*

**கோ**[5] *kō,* பெ.(n.) 1. பேரின்ப வீடு; heaven. *'உயர்கோவைத் தருகோவை' (இலக்.வி.907, உரை).* 2. விசும்பு (பிங்.); aerial region, sky. 3. நிலம் (பூமி) (பிங்.); earth 4. திசை (பிங்.); cardinal points, direction. 5. கதிர் (பிங்.); ray, beam. 6. இந்திரனின் இடிப்படைக்கலன் (வச்சிராயுதம்) (பிங்.); thunder bolt, as the weapon of Indra.

*[கா → கோ (பெரியது).]*

**கோ**[6] *kō*, பெ.(n.) 1. அம்பு (பிங்.); arrow. 2. கண்; eye. *"கோலானைக் கோவழலாற் காய்ந்தார்" (தேவா. 520:7).* 3. சொல் (பிங்.); speech, word. 4. நீர்; water. *'வருகோவைச் சூடி (இலக். வி. 907, உரை).* 5. சாறு (இரசம்); sap, juice (தைலவ.). 6. சூரியன்; sun.

*[கோல் → கோ = நீட்டு.]*

**கோ**[7] *kō*, பெ.(n.) இலந்தை (மலை.); jujube tree.

**Skt.** kōla.

*[கோல்காய் → கோல் → கோ.]*

**கோ**[8] *kō*, பெ.(n.) இரங்கற்குறிப்பு (சூடா.); expr. meaning alas! *'கோ' வென்று கதறினான் (இ.வ.).*

*[ஓ → கோ.]*

**கோஇல்** *kōil*, பெ.(n.) திருக்கோயில்; temple (கல். அக.).

*[கோ + இல் – கோஇல்.]*

இடையில் யகர வகர உடம்படுமெய் புணர்க்காமல் ஆள்வது பண்டையோர் மரபு. கோ = பெரிய எனப் பொருள்படும் குறிப்புப் பெயரெச்சம். கோஇல் = பெரியவீடு, அரசனின் அரண்மனை. இது குறிப்புப் பெயரெச்சத் தொடராதலின் விட்டிசைத்தது. எனவே உடம்படுமெய் புணர்க்கப்படவில்லை. நாளடைவில் விட்டிசை கெடாமல் யகர உடம்படுமெய் சேர்த்து ஆயிடை, மாயிருஞாலம் என வழங்கியதும் உண்டு. இருசொல்லும் ஒட்டி ஒருசொல் நீர்மைத்தாகும்போது ஆவூர், மாவிலை என 'வகர' உடம்படுமெய் பெறும். கோயில்,கோவில் பார்க்க.

**கோக்கணம்** *kō-k-kaṇam*, பெ.(n.) ஆனைத் திப்பிலி; elephant pepper (சா.அக.).

*[கோ + கணம். கோ = பெரிய.]*

**கோக்கதவு** *kō-k-kadavu*, பெ.(n.) பெரிய கதவு; big-door. *களத்திற்குக் கோக்கதவு கூட்டி விட்டிருக் கிறது (நாஞ்.).*

*[கோ + கதவு.]*

**கோக்கருநந்தடக்கன்** *kōkkaru-nandaḍakkaṉ*, பெ.(n.) சேரநாட்டுத் தென்பகுதியை ஆண்ட அரசருள் ஒருவன்; a king who ruled the south Travancore (சிற.பெ.அக.).

*[கோ + கரு + நந்தடக்கன்.]*

**கோக்கலம்** *kō-k-kalam*, பெ.(n.) வெண்கல ஏனம் (நாஞ்.); vessels or utensils made of bell-metal.

*[கோ + கலம்.]*

**கோக்கள்** *kō-k-kaḷ*, பெ.(n.) 1. அரசர்; king. 2. சிறந்தோர்; eminent personality. 3. பெரியோர்; elders.

*[கோ + கள் (பன்மையீறு) – கோக்கள்.]*

**கோக்காமரம்** *kōkkāmaram*, பெ.(n.) ***கோக்கால் மரம்*** பார்க்க; see *kōkkāl-maram.*

*[கோலன் → கோன் → கோ.]*

**கோக்காரை** *kō-k-kārai*, பெ.(n.) சங்கஞ்செடி; mistletoe berry thron (சா.அக.).

*[கோ + காரை.]*

**கோக்கால்மரம்** *kōkkāl-maram*, பெ.(n.) 1. கடலில் செலுத்தும் கட்டுமர வகைகளில் ஒன்று; a kind of raft or catamaran. 2. தூக்குமரம்; scaffold for execution of criminals.

*[கோ + கால் – கோக்கால் + மரம் (கால் கோத்த மரம்)]*

**கோக்காலி** *kō-k-kāli*, பெ.(n.) 1. சட்டிபானை முதலியவை வைப்பதற்குச் சுவரையொட்டி அமைக்கப்படுஞ் சட்டம் (பதிற்றுப். 43, உரை); bracket in a wall for holding pots. 2. நெட்டையானவன்; a tall person. கோக்காலி மாதிரி வளர்ந்ததுதான் மிச்சம் ஒரு கூறு கிடையாது (நெல்லை). 3. உயரமான மொட்டான்; stool for greater heights. 4. வைக்கோலை எடுக்க உதவும் வளைந்த கொம்பு; a pole fixed with a hook to handle hay etc.



கோக்காலி

*[கோ + கால் + இ.]*

**கோக்காளை முறைமை** *kōkkāḷai-muṟaimai*, பெ.(n.) 'கோ' என்பது ஆநிரையையுங் காளையையுங் குறிக்குமெனினும், அச் சொல்லுக்குப்பின் பலீவர்த்தம் என்ற சொல் வருவதானால், அது ஆநிரையையே குறிப்பதாகக் கொள்ளும் முறைமை

(திவ்.பெரியாழ். 2, 1:2. வியா.ப.210); the illustration of the meaning of '*kō*' or cattle being confined to cows' because immediately thereafter *palivartham* or bull is mentioned.

*[கோ + காளை + முறைமை.]*

கறவை = கறக்கும் ஆடு (மாடு, பெற்றம்). கறவை → காவை → காவு → கோவு → கோ. கறவை என்னும் சொல் சோவியத்து மொழிகளில் 'கறவ' என்றும் ஆத்திரேலியப் பழங்குடி மொழிகளில 'கறக்' என்றும் வழங்குவதால் உலகமொழிகள் பிரிவதற்கு முன்பே கால்நடை வளர்ப்புக் காலத்தில் தமிழில் தோன்றிய சொல்லாகலாம். ஆங்கிலத்தில் கறவை – cow என வழங்குதலை ஒப்பிடுக.

**கோக்கிரந்தி** *kō-k-kirandi*, பெ.(n.) ***கோக்கிரந்தை*** பார்க்க; see *kō-k-kirandai.*

*[கோ + கிரந்தி.]*

**கோக்கிரந்தை** *kō-k-kirandai*, பெ.(n.) எருவறட்டி; cowdung cake (சா.அக.).

*[கோ + கிரந்தை. கரள் → கரந்தை → (கட்டி) வ. கிரந்தை.]*

**கோக்கிலம்** *kō-k-kilam*, பெ.(n.) 1. உயரமாய் வளர்ந்த மரம்; any tree rising to a great height; any tall majestic tree. 2. ஒரு முள்மரம்; camel tree; camel thistle.

*[கோ → கோக்கு → கோக்கில் → கோக்கிலம்.]*

**கோக்கிழானடிகள்** *kōkkiḻāṉ-aḍigaḷ*, பெ.(n.) முதல் பராந்தகச் சோழனின் பட்டத்தரசி; (பிற். சோழ. வர.சதாசிவன்.ப.57); Queen of Paranthaga Cholan.

*[கோ + கிழான் + அடிகள்.]*

**கோக்கு** *kōkku*, பெ.(n.) நூலோட்டுகை (இ.வ.); basting, tacking.

*[கோ (கோத்தல்) – கோக்கு. த.கோக்கு > U. kōk.]*

**கோக்குஞ்சம்** *kō-k-kuñjam*, பெ.(n.) அம்பறாத் தூணி; quiver.

*[கோ + குஞ்சம்.]*

**கோக்குமாக்கு** *kōkku-mākku*, பெ.(n.) புரட்டுச் செயல்; juggling. கோக்குமாக்குச் செய்யாதே (உ.வ.).

*[கோக்கு மாக்கு – எதுகை நோக்கி வந்த மரபிணைச் சொல்.]*

**கோக்குளமுற்றனார்** *kōkkuḷa-muṟṟaṉār*, பெ. (n.) கழக்கடைப் புலவருள் ஒருவர்; a poet of šangam age.

*[கோ + குளம் + முற்றம் + அன் + ஆர்.]*

உழவர்களின் துணைகொண்டு பரந்த நன்செய் நிலத்தை உழுவித்துண்டு வந்த வேளாண்மரபினர், அவ்வுரிமையால் பெற்ற பட்டம்தான் 'கோ' என்று நற்றிணைப் பதிப்பாசிரியர் கூறுகிறார்.

**கோக்குற்றம்** *kō-k-kuṟṟam*, பெ.(n.) ஆட்சியாளரிடம் எதிர்நோக்கும் இடையூறு; any hindrance anticipated from the administratiors. *"இன்னெல்லுக்கு கோக்குற்றமும், குடிக்குற்றமும் ஏரிக்குற்றமுஞ் சொல்லாதே ஆட்டாண்டு தோறும்" (SII.XXII.282-43 p.224).*

*[கோ + குற்றம்.]*

ஏரியில் நீரின்றியோ அல்லது வேறு காரணம் பற்றியோ, விளைச்சல் குறைவாக இருந்தாலும், உடன்வாழும் குடிமக்களால் ஏதேனும் இடைஞ்சல் ஏற்பட்டாலும், ஆளுவோரால் ஏதேனும் கோளாறுகள் நேர்ந்தாலும், கோயிலுக்குக் கொடுக்க வேண்டிய நெல்லை ஆண்டுதோறும் தடையின்றி வழங்க வேண்டு மென்பது உட்கருத்து.

**கோக்கோடி** *kō-k-kōḍi*, பெ.(n.) நீர்நிலை; water tank (சா.அக.).

*[கோ = நீர். கோ + கோடி.]*

**கோக்கோதைமார்பன்** *kō-k-kōdai-mārbaṉ*, பெ.(n.) சோழ அரசன்; *Cōḻa* king.

*[கோ (அரசன்) + கோதை + மார்பன்.]*

இயற்பெயருக்கு முன் 'கோ' என்னும் சொல் அடையாகச் சேர்ந்துள்ளது.

**கோகஞ்சம்பா** *kōgañ-jambā*, பெ.(n.) கல்லிடையே விளையும் சம்பாநெல்; *cambā* paddy grown in crevices of rocks or other stony places (சா.அக.).

*[கோலு → கோக்கு → கோக்கன் → கோகன் + சம்பா.]*

கல்லிடை நூல்கோத்தாற் போன்று வேர் விழ்த்து முளைப்பது.

**கோகடம்** *kōkaḍam*, பெ.(n.) முயல்வகை (யாழ்.அக.); a kind of hare.

*[கோ (நீட்சி) + கடம்.]*

நீண்ட காது காரணமாகப் பெற்ற பெயராகலாம்.

**கோகண்டகம்** *kō-kaṇḍagam*, பெ.(n.) ***கோகண்டம்*** பார்க்க; see *kō-gaṇḍam* (சா.அக.).

*[கோ + கண்டகம்.]*

**கோகண்டம்** *kōgaṇḍam*, பெ.(n.) 1. நெருஞ்சி; a small prostrate herb. 2. நீர்முள்ளி; cattle thorn (சா.அக.).

கோ = அம்பு, கூர்மையானது. கண்டம் = துண்டு.

[கோ + கண்டம்.]

**கோகணமுள்** *kōkaṇamuḷ,* பெ.(n.) ***கோகண்டம்*** பார்க்க; see *kōgaṇḍam.*

[கோகண்டம் → கோகணம் + முள்.]

**கோகது** *kōkadu,* பெ.(n.) காட்டுப் புறா; wood pigeon (சா.அக.).

[கோ = புறா; திசையை அறிந்து செல்வது. கோ + (கதுவாலி) கது.]

**கோகதேவன்** *kōka-dēvaṉ,* பெ.(n.) புறா; pigeon (சா.அக.).

[கோகது → கோகதேவன்.]

**கோகந்தம்** *kōkandam,* பெ.(n.) கந்தகச் செய்ந்நஞ்சு (வின்.); a sulphuric mineral poison.

[கோ + கந்தம்.]

**கோகந்தான்** *kōgandāṉ,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanadha puram Dt.

[கோகன் + அந்தை – கோகந்தை → கோகந்தான்.]

**கோகநெய்** *kōka-ney,* பெ.(n.) கோகம் வெண்ணெய்; mate mangosteen kokum butter tree (சா.அக.).

[கோகம் (உயரமான மரம்) + நெய்.]

ஈளை காசம், கண்டமாலை, கை கால் வெடிப்புக்கும் போடலாம். இது கோகம் பட்டர் என்றும் வழங்கப்படும். இது ஒருவகை மங்குசுதான் பழமரம். இதன் விதையில் எண்ணெய் எடுப்பதால் இப் பெயர் வந்தது (சா.அக.).

**கோகம்**[1] *kōgam,* பெ.(n.) 1. சக்கரவாகப் புள் ; ruddy shield-rake. *"கோகங்களெல்லைப் போதிற் றணந்திட" (இரகு. திக்குவி. 247).* 2. செந்நாய்; a species of wolf. 3. தவளை; frog. 4. பல்லி; house-lizard.

[குல் → குக்கம் (வாடியது) → கோகம்.]

**கோகம்**[2] *kōgam,* பெ.(n.) 1. உலர்ந்த பூ (வின்.); dried or withered flower. 2. மலைப் புளிச்சை; hill hemp bendy-Hibiscus fureatus. 3. கோகமரம்; kokum butter tree. 4.துணி; cloth (சா.அக.). 5. பேரீந்து; wild date - palm. 6. சிற்றீந்து (நாநார்த்த.); a variety of date - palm.

[கோ → கோகம்.]

**கோகமுகம்** *kōga-mugam,* பெ.(n.) ஓநாய் முகம்; face resembling that of wolf; wolf face (சா.அக.).

[கோகம் + முகம்.]

**கோகயம்** *kōkayam,* பெ.(n.) தாமரை (மலை.); lotus flower (சா.அக.).

[கோ + கயம்.]

**கோகர்ணம்**[1] *kō-karṇam,* பெ.(n.) 1. ***கோகழி*** பார்க்க; see *kō-kaḻi.* 2. ***கோகன்னம்***[1] பார்க்க; see *kōkaṉṉam.*

**மறுவ.** கோகழி.

[கோ + (கழி) கர்ணம்.]

**கோகர்ணம்**[2] *kōkarṇam,* பெ.(n.) ***கோகன்னம்***[2] பார்க்க; see *kōkaṉṉam.*

[கோ + கன்னம் (காது) – கோகன்னம் > **Skt.** gōkarnam.]

கன்னம் என்னும் காதைக் குறிக்கும் சொல் வடமொழியில் கர்ணம் எனத் திரிந்தது.

**கோகர்ணவாதனம்** *kōkarṇa- v-ādaṉam,* பெ.(n.) ***கோகன்னம்***[2.4] பார்க்க; see *kōgaṉṉam.*

[கோ + கர்ணம் + ஆதனம் (கோ = ஆவு, கர்ணம் = காது).]

**கோகரணம்** *kō-karaṇam,* பெ.(n.) 1. ***கோ கன்னம்***[2.4] பார்க்க; see *kōgaṉṉam*[2.4]. *"கசகரணங்கள் சேர்ந்த கோகரண மார்க்கம்" (திருவேங்.சத.66).* 2. ***கோகர்ணம்***[2]***–2*** பார்க்க; see *kōkarṇam. "கோலக் கோபுரக் கோகரணஞ் சூழா" (தேவா.1182:9).*

[கோ + கரணம்.]

**கோகரந்தபுத்தூர்** *kōkaranda-puttūr,* பெ.(n.) ***கோவிந்தபுத்தூர்*** பார்க்க (தஞ்சை. ஊர்.); see *kōvinda-puttūr.*

[கோகரந்த + புத்தூர்.]

**கோகருணம்**[1] *kō-karuṇam,* பெ.(n.) ***கோகன்னம்*** பார்க்க; see *kōkaṉṉam.*

[கோ + (கரணம்) கருணம்.]

**கோகருணம்**[2] *kō-karuṇam,* பெ.(n.) 1. மோதிர விரற் சாண்; span from tip of ring finger to tip of thumb. 2. மான்வகை; a kind of antelope.

[கோ + (கரணம்) கருணம்.]

**கோகருணி** *kō-karuṇi,* பெ.(n.) 1. பெருங் குரும்பை; the unripe fruit of palmyra. 2. எருக்கு; bow-string hemp (சா.அக.).

[கோ + கருணி.]

**கோகலி** *kōkali,* பெ.(n.) கடம்பு; sea side Indian oak.

*[கோக்காலி → கோகலி.]*

**கோகலிவாழை** *kōkali-vāḻai,* பெ.(n.) காட்டு மல்லிகை; wild jasmine.

*[கோக்காலி → கோகலி + வாழை.]*

**கோகழி** *kōkaḻi,* பெ.(n.) திருவாவடுதுறை என்னும் சிவத்தலம்; Tiruvāvaḍuduṟai a Šiva shrine. *"கோகழி யாண்ட குருமணிதன் றாள்வாழ்க" (திருவா. 1:3).*

*[கோ + கழி.]*

சமணமும் பௌத்தமும் பெருகியிருந்த காலத்தில் கோவா பகுதியைச்சார்ந்த கடற்கழியிலிருந்த சிவன் கோவில் கோகழி எனப்பட்டது. கோகழி என்பதற்குப் பெரிய கழிமுகம் எனப்பொருள் நிலவியது. தொன்மங்கள் [புராணங்கள்] பெருகியபோது ஆவினது செவி [கோகர்ணம்] என்னும் பொருள் பொருத்தப்பட்டது. இக்கோவிலின் பெயரே திருவாவடுதுறைக் கோவிலுக்கும் பெயராயிற்று.

கோகழியிலிருந்த சிவத்தாணு [இலிங்கம்] சதுரத்தின் மேல் அறுகோணம் அதன்மேல் எண்கோணம் அதன்மேல் குமிழ் உருளை வடிவினது என்பர்.

**கோகன்னம்**[1] *kō-gaṉṉam,* பெ.(n.) 1. மலைநாட்டில் சிவன் கோயில் கொண்ட ஓர் இடம்; Šivashrine in Malabar. *"ஆவினது செவிபோல அவ்விலிங்க நிமிர்வுறலால் மேவினது கோகன்ன மெனும் பெயர்" (பிரமோத். 2:55).* 2. **கோகழி** பார்க்க; see *kō-kaḻi.*

*[கோ + கன்னம் (காது).]*

**கோகன்னம்**[2] *kōgaṉṉam,* பெ.(n.) 1. ஆவின் காதைப்போற் காதுகளுடைய ஒருவகை மான்; a species of deer with ears resembling those of the cow. 2. மூக்குச் சட்டி; a vessel with a nozzle for pouring liquids from. 3. ஒரு பெண்பாம்பு; a female serpent (சா.அக.). 4. ஆவினை (பசுவை)ப் போலக் காதை மாத்திரம் அசைத்துக் காண்பிக்கும் ஒரு வித்தை; an art of moving or shaking the ears alone as cows do.

*[கோ + கன்னம் (காது).]*

**கோகன்னம்**[3] *kō-gaṉṉam,* பெ.(n.) ஒக விருக்கையு ளொன்று; a yogic posture. *"கோகன்னங் கேசரமேற் பாதம் (தத்துவப்.108).*

*[கோ + கன்னம் (காது).]*

ஆவின் காதுபோன்ற தோற்றத்தில் அமரும் ஓகவகை.

**கோகனகச்சிலை** *kō-gaṉa-c-cilai,* பெ.(n.) பதுமராகக் கல்; a precious stone, jacinth, hyacinth.

*[கோ + கனகம் + சிலை.]*

**கோகனகம்** *kō-gaṉagam,* பெ.(n.) 1. **கோகனதம்** பார்க்க; see *kōgaṉadam. "கோகனகத்தவள் கேள்வன்" (திவ். திருவாய். 9, 8:2).* 2. செந்தாமரை; red lotus. 3. செவ்வாம்பல்; red Indian water-lily. 4. செந்தும்பை; a red variety of leucas (சா.அக.).

*[கோ + கனகம்.]*

பொன்னிறத் தாமரை கோகனகம் எனப்பட்டது.

**கோகனகை** *kō-gaṉagai,* பெ.(n.) **கோகனதை** (திவா.) பார்க்க; see *kōgaṉadai.*

*[கோ + (கனகம்) கனதை - கோகனதை → கோகனகை.]*

**கோகனதத்தோன்** *kōgaṉadattōṉ,* பெ.(n.) **கோகனதன்** பார்க்க; see *kōgaṉadaṉ. "கோகன தத்தோன் றுண்ட மாகிய விடத்தில்" (கந்தபு. ததீசியுத். 17).*

**கோகனதம்** *kō-gaṉadam,* பெ.(n.) செந்தாமரை; red lotus. *"கோகனத முகங்காட்ட" (தேவா.575:3).*

*[கோ + கனதம்.]*

**கோகனதன்** *kō-gaṉadaṉ,* பெ.(n.) தாமரையிற் பிறந்த நான்முகன்; Brahma as lotus - born. *"கோகனதன் சொற்கொண்டு" (கோயிற்பு. நடரா. 68).*

*[கோ + கனதன்.]*

**கோகனதை** *kō-gaṉadai,* பெ.(n.) தாமரையில் இருப்பவள் (இலக்குமி); Laksmi, as seated on the lotus. *"கோகனதை பிரியாத குழகன் போல" (சேதுபு. சேதுபந். 37).*

*[கோ + (கனகம்) கனதை.]*

**கோகனம்** *kō-gaṉam,* பெ.(n.) 1. கரிசலாங் கண்ணி; a plant found in wet places. 2. நிலக் கடம்பு; a plant. 3. நிலவேம்பு; ground neem.

*[கோ + (கனகம்) கனம்.]*

**கோகாலியம்** *kō-kāliyam,* பெ.(n.) ஒருவகைப் பூடு; a herbal plant (சா.அக.).

*[கோ + காலியம்.]*

**கோகானம்** *kōkāṉam,* பெ.(n.) வேய்ங்குழலோசை; sound produced from flute.

*[கோ + கானம்.]*

**கோகி** *kōki,* பெ.(n.) 1. தும்பைப் பூ; leucas flower. 2. விலாமிச்சு; a fragrant grass. 3. நீர்முள்ளி; water thistle (சா.அக.).

*[கோகு → கோகி.]*

**கோகிதம்** *kōkidam,* பெ.(n.) குதிங்கால் (யாழ். அக.); heel.

*[கோகு → கோகிதம்.]*

**கோகிலநயனம்** *kōkila-nayaṉam,* பெ.(n.) 1. குயில் கண்; eyes like those of the cuckoo. 2. முள்ளுக் கத்தரி; European caper. 3. நீர் முள்ளி; long-flowered nail dye (சா.அக.).

*[கூவு → கூகு → கோகு → கோகிலம் + நயனம்.]*

**கோகிலப்பிரிய** *kōgila-p-piriya,* பெ.(n.) முதனிலைப் பண்களுளொன்று (சங்.சந்.47); a primary *rāga.*

*[கூவு → கூகு → கோகு → கோகிலம் + பிரிய.]*

**கோகிலம்**[1] *kōkilam,* பெ.(n.) 1. குயில்; koel. *"இருளாநின்ற கோகிலமே" (திருக்கோ. 322).* 2. பல்லி (திவா.); wall-lizard. 3. கிளி; parrot.

*[கூவு → கூகு → கோகு → கோகிலம்.]*

**கோகிலம்**[2] *kōkilam,* பெ.(n.) குரங்கு (பிங்.); monkey.

*[குறுகுகு (வளைதல்) → கோகு → கோகிலம்.]*

**கோகிலம்**[3] *kōkilam,* பெ.(n.) 1. துளை; tube; anything tubular. 2. சிறுகுறிஞ்சான் (மலை.); small Indian ipecacuanha. 3. இலந்தை; jujube fruit tree. 4. கரி; carbon. 5. உலக்கை; long round edged heavy wooden pestle. 6. கலப்பை; plough.

*[குள் → குள்கு → கோகு → கோகிலம்.]*

**கோகிலவாசம்** *kōkila-vāšam,* பெ.(n.) குயிலுக்கு இருப்பிடமான மாமரம்; the abode of koels, mango tree.

*[கோகிலம் + வாசம்.]*

**கோகிலவீசம்** *kōkila-vīšam,* பெ.(n.) மஞ்சிட்டி (சித்.அக.); manjeet.

*[கோகிலம் + வீசம்.]*

**கோகிலவெலி** *kōkila-v-eli,* பெ.(n.) குயிலைப் போல் மேலே புள்ளிகளையுடைய எலி; a kind of rat spotted like koel (சா.அக.).

*[கூவு → கூகு → கோகு → கோகிலம் + எலி.]*

**கோகிலா** *kokilā,* பெ.(n.) சிறுகுறிஞ்சான்; small Indian ipecacuanha.

*[கோகிலம் → கோகிலா.* **கோகிலம்** பார்க்க; see *kōgilam* (சா.அக.).*]*

**கோகிலாபுரம்** *kōkilā-puram,* பெ.(n.) தேனி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Theni Dt.

*[கோகிலம் + புரம்.]*

**கோகிலானந்தம்** *kōkilāṉandam,* பெ.(n.) மாமரம் (மூ.அக.); mango tree.

*[கோகிலம் + ஆனந்தம்.]*

**கோகிலி** *kōkili,* பெ.(n.) 1. மணலிக்கீரை; sand greens. 2. மணிப் புங்கு; rusty soap-nut (சா.அக.).

*[கோகுல் → கோகிலி.]*

**கோகினிசம்பை** *kōkiṉi-šambai,* பெ.(n.) சிவகங்கை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Sivagangai Dt.

*[கோகிலி + சண்பை – கோகிலிசண்பை → கோகினி சம்பை.]*

**கோகு** *kōgu,* பெ.(n.) 1. தோள்; shoulder. *"கொற்ற வன்றன் கோகின்மேல் வெற்றிவாளின் வீசினான்" (சூளா. அரசி. 240).* 2. ஏய்ப்பு (கபடம்); guile. *"கொத்தைக்கு மூங்கர் வழிகாட்டு வித்தென்னைக் கோகு செய்தாய்" (தேவா. 1040).* 3. அடைவுகேடு (ஈடு.3.5: 4); irregularity, disorder. 4. கழுதை; ass. *"வீழ்ந்து கோகிறப்புழி" (உபதேசகா. உருத்திரா. 193).*

*[குல் → குகு → கோகு (வளைவு).]*

**கோகுகட்டு-தல்** *kōgu-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) **கோகுதட்டு-தல்** பார்க்க; see *kōgu-taṭṭu-.* *"கோகு கட்டுண் டுழலாதார்" (திவ். திருவாய். 3, 5:4).*

*[கோகு + கட்டு-.]*

**கோகுகம்** *kōgugam,* பெ.(n.) மணிப்புங்கு; rusty soap-nut (சா.அக.).

மறுவ. கோகிலி

*[கோகு → கோகுகம்.]*

**கோகுடி** *kōguḍi,* பெ.(n.) ஒருவகைப் பூ (கோகுடிப்பூ); a kind of flower. *"ஞாழன் மௌவ னறுந்தண் கோகுடி" (குறிஞ்சிப். 18).*

*[கொகுடி → கோகுடி.]*

**கோகுத்தம்** *kōguttam,* பெ.(n.) மல்லிகை (மலை.); Arabian jasmine.

*[கோகுந்தம் → கோகுத்தம்.]*

**கோகுதட்டு-தல்** *kōgu-taṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) ஆரவாரஞ் செய்தல்; to parade one's strength by

patting oneself on the shoulder. *"கோகுதட்டிடு தனஞ்சயன்." (பாரத. நிரைமீட்சி. 68).*

*[கோக்கு → கோகு + தட்டு-.]*

**கோகுந்தம்** *kōgundam,* பெ.(n.) மலைமல்லிகை; hill jasmine or wild jasmine (சா.அக.).

*[கொகுந்தம் → கோகுந்தம்.]*

**கோகுலம்**[1] *kōgulam,* பெ.(n.) கண்ணன் வளர்ந்த ஆயர்பாடி; the village where Krisna was brought up. *"கோகுலத் தாயன் வேட்ட" (திருச்செந். பு.18:26).*

*[கோ + குலம்.]*

**கோகுலம்**[2] *kōgulam,* பெ.(n.) குயில்; koel. *"கோகுலமாய்க் கூவுநரும்" (பரிபா. 9:65).*

**மறுவ.** கோகிலம்.

*[கோகிலம் →கோகுலம்.]*

**கோகுலம்**[3] *kōgulam,* பெ.(n.) துளை; tube.

**மறுவ.** கோகிலம்.

*[கோகிலம் → கோகுலம்.]*

**கோகுலம்**[4] *kōgulam,* பெ.(n.) ***கோகிலம்***[3] பார்க்க; see *kōgilam.*

*[கோகிலம்[3] → கோகுலம்.]*

**கோகுலம்**[5] *kōgulam,* பெ.(n.) கோயில் (நாநார்த்த.); temple.

*[கோ (பெரியது) + குலம்.]*

**கோகுலம்**[6] *kōgulam,* பெ.(n.) 1. கொட்டில்; cattle shed. 2. ஆவினங்கள்; herd of cows.

*[கோ (ஆனிரை) + குலம்.]*

**கோகுல வாய்சகம்** *kōgula-vāyšagam,* பெ.(n.) விளாம்பிசின்; the gum of wood-apple tree (சா.அக.).

*[கோகு → கோகுலம் + வாய்சகம்.]*

**கோகுள்** *kōgul,* பெ.(n.) மரவகை; a kind of tree. *'கோகுளிலையைக் கொண்டு' (ஈடு.7. 2:1).*

*[கோகு → கோகுள்.]*

**கோகொட்டை** *kō-kottai,* பெ.(n.) மஞ்சள்நாங்கு; a species of gamboge.

*[கோ + கொட்டை.]*

**கோகோகிழங்கு** *kōkō-kilangu,* பெ.(n.) சேம்பு, சேப்பங்கிழங்கு; Indian kales, cocoa root (சா.அக.).

*[கோகோ + கிழங்கு.]*

**கோகோசனம்** *kō-kōšanam,* பெ.(n.) ஆன்மணத்தி (கோரோசனை) (மூ.அக.); bezoar.

**மறுவ.** கோரோசனை.

*[கோ + (கோசம்) கோசனம்.]*

**கோகோட்டம்** *kō-kōttam,* பெ.(n.) ஆன்கொட்டில்; place or yard of cow.

*[கோ + கோட்டம்.]*

**கோகோடு** *kōkōdu,* பெ.(n.) நீலகிரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Nilagiri Dt.

*[கோ (உயரம்) + கோடு.]*

**கோகோவெனல்** *kō-kō-v-enal,* பெ.(n.) 1. பேரொலி செய்தற்குறிப்பு; onom. expr. of crying or bawling loudly. *"கோகோவென்று வந்திருகை தலை புடைத்து" (பாரத.பதினேழாம். 254).* 2. இரக்கக் குறிப்பு; onom. expression of sympathy.

*[கோகோ + எனல்.]*

**கோங்கணதூபம்** *kōngana-tūbam,* பெ.(n.) வெள்ளைக் குங்கிலியம்; concan resin; white dammer (சா.அக.).

*[கோங்கணம் + (தூவம்) தூபம்.]*

**கோங்கணம்** *kōnganam,* பெ.(n.) 1. ஒரு பறவை; an unknown bird. 2. ஒருவகை மீன்; a kind of fish. 3. ஒரு நாடு; a nation (சா.அக.).

*[கொங்கணம் → கோங்கணம்.]*

**கோங்கந்தட்டம்** *kōngan-dattam,* பெ.(n.) 1. கோங்கம்பூ; flower of *kōngu* tree. *"கோங்கந் தட்டம் வாங்கினர் வைத்தும்" (பெருங். இலாவாண. 14:24).* 2. கோங்கம் வடிவமாகச் செய்யப்பட்ட தாம்பாளம்; a plate made like *kōngu* flower.

*[கோங்கு + அம் + தட்டம்.]*

**கோங்கம்**[1] *kōngam.* பெ.(n.) ***கோங்கிலவு*** பார்க்க; see *kōngilavu. "முறியிணர்க் கோங்கம்" (ஐங்குறு. 366).*

*[கோங்கு → கோங்கம்.]*

**கோங்கம்**[2] *kōngam,* பெ.(n.) நெல்லி; emblic myrobalan.

*[கோரங்கம் → கோங்கம்.]*

**கோங்கல்** *kōṅgal*, பெ.(n.) 1. நெல்லி; Indian gooseberry. 2. கோங்கிலவு; false tragacanth. 3. கோளகச் செய்நஞ்சு; a mineral poison (சா.அக.).

*[கோங்கு → கோங்கல்.]*

**கோங்கலர்** *kōṅgalar*, பெ.(n.) முற்காலத்து வழங்கிய ஒருவகைத் துகில் (சிலப். 14:108, உரை); a garment of ancient time.

*[கோங்கு + அலர்.]*

**கோங்காடு** *kōṅgāḍu*, பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanjipuram Dt.

*[கோன் + காடு.]*

**கோங்கிமார்** *kōṅgimār*, பெ.(n.) கோனார்கள் (யாதவர்கள்); sheperd community. *"எனக்கு கோங்கிமாற்கள் ரெண்டு தெருவீதி கட்டடம் விட்டுக் குடுக்கவும்" (திருமலை.செப்.10/1645, பக்.35).*

*[கோனன் → கோங்கி + மார்.]*

**கோங்கில்லம்** *kōṅgillam*, பெ.(n.) கோங்கிலவு, பஞ்சுமரம்; golden silk cotton tree (சா.அக.).

*[கோங்கு + இலவம் – கோங்கிலவம் → கோங்கிலவம் → கோங்கில்லம். இலவம் → இல்லம்.]*

**கோங்கிலவன்பட்டை** *kōṅgilavaṉ-paṭṭai*, பெ.(n.) கோங்கிலவ மரத்தின் பட்டை; the bark of golden silk cotton tree or false tragacanth tree (சா.அக.).

*[கோங்கு (உயரம்) + இலவம் + பட்டை.]*

இது பல் நோயைப் போக்கும். கல்நாரைப் பொடியாக்கும்.

**கோங்கிலவன் பிசின்** *kōṅgilavaṉ-pišiṉ*, பெ.(n.) கோங்கிலவு மரத்தின் பிசின்; gum of golden silk cotton tree.

*[கோங்கு + இலவு + பிசின்.]*

இது வெள்ளை, சிவப்பு, கறுப்பு நிறமாக இருக்கும். சிவப்பினம் இருமலுக்கு நல்லது [சா.அக.].

**கோங்கிலவன் பூ** *kōṅgilavaṉ-pū*, பெ.(n.) கோங்கிலவ மரத்தின் பூ; இது ஒரு வாணாள் மூலி; flower of false tragacanth tree. It is useful in rejuvenation (சா.அக.).

*[கோங்கு + இலவன் + பூ.]*

**கோங்கிலவு** *kōṅgilavu*, பெ.(n.) இலவு மரவகை (L.); a kind of tree as of false tragacanth.

*[கோங்கு (உயரம்) → கோங்கிலவு.]*

**கோங்கிலி** *kōṅgili*, பெ.(n.) வச்சிர வேங்கை; heart-wood kino tree (சா.அக.).

*[கொங்கில் → கோங்கிலி.]*

**கோங்கிவயல்** *kōṅgi-vayal*, பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanathapuram Dt.

*[கொழிஞ்சில் → கோஞ்சி → கோங்கி + வயல்.]*

**கோங்கிளங்கோசர்** *kōṅgilaṅ-gōšar*, பெ.(n.) கொங்குநாட்டில் குடியேறியோர்; immigrates in *Koṅgu-nāḍu.*

*[கொங்கு → கோங்கு + இளங்கோசர்.]*

**கோங்கு**[1] *kōṅgu*, பெ.(n.) குவிந்த மொட்டுகளாய்ப் பூக்கும் மரவகை; a tree with conical flower buds. *"வேங்கை வெற்பின் விரிந்த கோங்கின் முகைவனப் பேந்திய முற்றா விளமுலை" (புறநா. 334:9–10).*

*[கொங்கை → கொங்கு → கோங்கு.]*

கொங்கைபோற் குவிந்த மொட்டு, அதன் மலர், அது பூக்கும் மரம் [தமி. வர. 219].

வகைகள் : 1. வெள்ளைக் கோங்கு 2. உறப்புக் கோங்கு 3. நீர்க்கோங்கு 4. கறைக்கோங்கு 5. நெடுவாற் கோங்கு 6. கருங்கோங்கு; 7. இலைக் கோங்கு.

**கோங்கு**[2] *kōṅgu*, பெ.(n.) 1. காங்கு; dipterocarp dammer. 2. முள்ளிலவு; red cotton tree. 3. தணக்கு; odal tree. 4. கள்ளிக் காரம்; mordant of *kaḷḷi* tree (சா.அக.).

*[கொங்கு (வளைவு) → கோங்கு.]*

**கோங்குடிப்பட்டு** *kōṅguḍi-p-paṭṭu*, பெ.(n.) புதுக்கோட்டை மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Pudukkōṭṭai* Dt.

*[கோன் + குடி + பட்டு.]*

**கோங்குப்பிசின்** *kōṅgu-p-pišiṉ*, பெ.(n.) பலவகைக் கோங்கு மரங்களின் பிசின்; gum of golden cotton tree. It is a mixture of gums of several kinds of golden cotton trees (சா.அக.).

*[கோங்கு + பிசின்.]*

**கோங்குப்பொன்** *kōṅgu-p-poṉ*, பெ.(n.) பித்தளை; brass (சா.அக.).

*[கோங்கு + பொன்.]*

**கோங்குமரம்** *kōṅgu-maram,* பெ.(n.) உறுதியான மரவகைகளுளொன்று; a kind of strong tree.

*[கோங்கு (உயரம்) + மரம்.]*

பிற நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் மரவகை.

**கோச்சடை** *kō-c-caḍai,* பெ.(n.) 1. இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanathapuram Dt. 2. மதுரை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Madurai Dt.

*[கோ + (சடையன்) சடை.]*

**கோச்சடையன்இரணதீரன்** *kō-c-caḍaiyaṉ-iraṇatīraṉ,* பெ.(n.) முற்காலப் பாண்டிய மன்னன்; a Pandya king. இவன் கி.பி. 674–725 வரை ஆட்சி செய்தவன்.

*[கோ + சடையன் + இரணதீரன்.]*

**கோச்சூலி** *kō-c-cūli,* பெ.(n.) சினையுற்ற மாடு; cow-in-calf, conceived cow (சா.அக.).

*[கோ + சூலி.]*

**கோச்செங்கட்சோழ நாயனார்** *kō-c-ceṅkaṭ-cōḻa-nāyaṉār,* பெ.(n.) நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவராகிய சோழவரசர் (பெரியபு. 4); the Cōḻā king canonized Šaiva saint, one of 63.

*[கோ + செங்கண் + சோழன் + நாயனார்.]*

**கோச்செங்கணான்** *kō-c-ceṅgaṇāṉ,* பெ.(n.) ***கோச்செங்கட் சோழ நாயனார்*** பார்க்க; see *kōcceṅgaṭ-cōḻa-nāyaṉār.* *"செம்பியன் கோச் செங்கணான் சேர்ந்த கோயில்" (திவ். பெரியதி. 6, 6:1).*

*[கோ + (செங்கண்ணன்) செங்கணான்.]*

**கோச்செய்-தல்** *kō-c-cey-,* 1 செ.கு.வி. (v.i.) ஆட்சி செய்தல்; to rule. *"ஐவர் வந்து கோச்செய்து சமைக்க" (தேவா.997:6). "அரசன் தன் ஆணைவழிச் செய்யும் செயல் போலச் செய்து". "இத் தர்மத்துள்ளார் யாவரேனும் கோச் செய்வது செய்து செலுத்த வெட்டிக் குடுத்தோம்" (தொ. 8. கல். 29).*

*[கோ + செய்-.]*

**கோசக்கம்** *kōšakkam,* பெ.(n.) குழப்பம் (யாழ். அக.); confusion.

*[கோசு → கோசகம் → கோசக்கம் → கோன் → கோ.]*

**கோசக்காய்** *kōša-k-kāy,* பெ.(n.) 1. சாதிக்காய்; nutmeg (சா.அக.). 2. வெள்ளரிக்காய்; cucumber. இந்தத் தடவை கோசக்காய் விளைச்சல் அதிகம் (கொங்கு.).

*[கோசம் + காய்.]*

**கோசக்கிலம்** *kōša-k-kilam,* பெ.(n.) வெண் சுண்டை; white coloured solanum (சா.அக.).

*[கோசம் + கிலம்.]*

**கோசகசாலை** *kōšaga-šālai,* பெ.(n.) ஒருவகைப் பூடு; a kind of herbal plant.

*[கோசகம் + சாலை.]*

**கோசகம்** *kōšagam,* பெ.(n.) 1. முட்டை; egg. 2. விதை; testicle. 3. குறி; symbol. 4. ஒருவகைக் கரும்பு; a kind of sugar-cane (சா.அக.).

*[கோசம் → கோசகா.]*

**கோசகாரகம்** *kōša-kāragam,* பெ.(n.) செங்கரும்பு; red sugar-cane (சா.அக.).

*[கோசம் + காரகம்.]*

**கோசகாரம்** *kōša-kāram,* பெ.(n.) 1. பட்டுப்பூச்சி; silk worm. *"கோசகாரப் புழுப்போல்" (ஞானவா. மனத். 22).* 2. தென்னைமரம்; coconut tree. 3. கரும்பு; sugar-cane.

*[கோசம் + காரம்.]*

**கோசங்கம்** *kō-šaṅgam,* பெ.(n.) வைகறைப் பொழுது (யாழ்.அக.); early morning, dawn.

*[கோசு + அங்கம்.]*

**கோசந்தனம்** *kō-šandaṉam,* பெ.(n.) 1. மஞ்சட் சந்தனவகை; a kind of yellow sandal-wood. 2. ஒரு நச்சு அட்டை; a venomous leech (சா.அக.).

*[கோசம் → கோ + சந்தனம்.]*

**கோசநாசி** *kōša-nāši,* பெ.(n.) 1. ஆண்குறி எழுச்சியில்லாதவன்; one who is destitute of the power of erection of the male organ. 2. அலி; eunuch (சா.அக.).

*[கோசம் + நாசி.]*

**கோசநெறி** *kōša-neṟi,* பெ.(n.) 1. பிடுக்கின் வீக்கம்; enlargement of the scrotum. 2. பீச நரம்பின் வீக்கம்; swelling of the spermatic cord. 3. பிடுக்கிலுள்ள நரம்புத் திரட்சி; varicosis of the scrotum. 4. ஆண் அல்லது பெண்குறியின் கோளம்; male or female sexual gland (சா.அக.).

*[கோசம் + நெறி.]*

**கோசப்பட்டு** *kōša-p-paṭṭu,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanjipuram Dt.

*[கோசன் + பட்டு.]*

**கோசபலம்** *kōša-palam,* பெ.(n.) 1. பெரும் பீர்க்கு; acute-angled cucumber. 2. பிடுக்கு; scrotum. 3. சாதிக்காய்; nutmeg. 4. நறுமணம்; perfume. 5. தம்பட்டை அவரை; fowls bean (சா.அக.).

*[கோச + பலம்.]*

**கோசபீசம்** *kōša-pīšam,* பெ.(n.) 1. பொன்னாக்கல் ஆய்வில் உருக்கு முகத்தில் கொடுக்கும் ஒரு மருந்துக் கலப்பு; (in alchemy) any substance or mixture (cross-powder) thrown at intervals to promote transmution when metals are in fusion. 2. பொன்னுக்கு மாற்று ஏறுவதற்காகப் பயன் படுத்துமோர் உப்புச் சரக்கு; an alkaloid used in alchemy for increasing the fineness of gold. 3. மூப்பு; a quintessence prepared from three mystic salts; 4. பிடுக்கிலுள்ள விதைகள்; testicles contained in the scrotum (சா.அக.).

*[கோசம் + பீசம்.]*

**கோசம்[1]** *kōšam,* பெ.(n.) 1. முட்டை (பிங்.); egg. 2. உறை (அக.நி.); sheath, scabbard case, receptacle. 3. ஐங்கோசம்; sheaths or cases believed to constitute the body. *"பிணங்கிய கோச பாசப் பின்னலை" (கைவல்.தத்து.10).* 4. மதிலுறுப்பு (பிங்.); a part of fortress wall. 5. ஆண்குறி; penis. *"ஐயர்தங் கோச நோக்கினர்" (கந்தபு. ததீசியுத். 54).* 6. கருப்பை; womb. *"சஞ்சலமான கோசத் தசையினை" (பாரத. சம்பவ. 72).* 7. கருவூலம் (திவா.); treasure. 8. கருவூலச் சாலை; treasury. *"ஐம்பெருங் குழுவு மத்தி கோசமும்" (பெருங் . வத்தவ. 9:5).* 9. அகரமுதலி முதலிய புத்தகம்; treatise, book, vocabulary, dictionary. *"காப்பியக் கோசமும் கட்டிலும் பள்ளியும்" (பெருங். உஞ்சைக் 38:167).* 10. பட்டா (இ.வ.); register. 11. தொகுதி (பெருங். உஞ்சைக். 38:167, உரை); heap, bundle. 12. நடன முத்திரைக்குரிய அலிக்கை வகை; a variety of *alikkai* (சிலப். ப. 92). 13. சாதிக்காய் (மலை.); nut meg tree. 14. மகிழமரம்; ape-face flower tree.

*[குள் (வட்டம்) → கொள் → கோள் → கோளம் → கோயம் → கோசம்.]*

**கோசம்[2]** *kōšam,* பெ.(n.) அடங்கற்கணக்கு (P.T.L.); register of village lands.

*[கோள் → கோளம் → கோசம்.]*

**கோசம்[3]** *kōšam,* பெ.(n.) காளையின் அடிவயிற்றில் நீர்த்தாரையோடு தொங்கும் தோல்; skin of the gland suspending under the abdomen of a bull.

*[கோள் → கோளம் → கோசம்.]*

**கோசம்[4]** *kōšam,* பெ.(n.) தெரு (வீதி); street.

*[கோள் → கோளம் → கோசம்.]*

**கோசம்பி** *kōšambi,* பெ.(n.) கங்கைக் கரையிலுள்ள ஒரு பழைய நகரம்; an ancient city on the banks of the Ganges in the lower part of the Doab. *"கொடிக் கோசம்பி கோமகன்" (மணிமே.15:161).*

*[கோசம் → கோசம்பி.]*

**கோசமணி** *kōša-maṇi,* பெ.(n.) பெண்குறியின் மணி; the projecting part of a female genital, clitoris (சா.அக.).

*[கோசம் + மணி.]*

**கோசமதம்[1]** *kōša-madam,* பெ.(n.) 1. யானையின் குறியினின்று வரும் மதநீர்; must from the genital organ of an elephant when it ruts. 2. காமத்தினால் ஆண் அல்லது பெண் குறியினின்று ஒழுகும் விந்து அல்லது நாதம்; seminal or ovarian discharge in man or woman from lust (சா.அக.).

*[கோசம் + மதம்.]*

**கோசமலர்** *kōša-malar,* பெ.(n.) ஆண்குறியின் முன்பாகம்; the vascular body forming the extremity of the penis-glans penis (சா.அக.).

*[கோசம் + மலர்.]*

**கோசமாற்று-தல்** *kōš-amāṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) உரிமையாவணம் முதலியவற்றில் பேர் மாற்றுதல்; to transfer patta, etc., in another's name.

*[கோசம் + மாற்று.]*

**கோசர்[1]** *kōšar,* பெ.(n.) பழைய வீரக்குடியினருள் ஒரு சாரார்; an ancient caste of warriors. *"மெய்ம்மலி பெரும்பூட் செம்மற் கோசர்" (அகநா.15).* *"இளந்தேன் கொப்புளிக்கும் நெய்தல் மலர்கள் செறிந்த வளமிக்க வயல்களையுடைய கோசர்களின் நன்னாடு" (அகநா. 113).*

கண்ணகிக்கு விழாச் செய்த கொங்கு நாட்டவர்.

**கோசரபலம்** *kōšara-balam,* பெ.(n.) பிறப்பு ஓரையிலிருந்து தற்காலத்தில் கோள்கள் இருக்கும் நிலையின் பலன்; influence of planets at a given

moment with reference to their relative position from the birth-*rāśi.*

*[கோசரம் + பலம்.]*

**கோசரம்**[1] *kōśaram,* பெ.(n.) 1. ஐம்பொறி மனம் இவற்றுக்குத் தொடர்பானது; object of sense, as sound, colour, etc. *"சிந்தைக்குங் கோசர மல் லன்" (திவ். திருவாய்.1, 9:6).* 2. பொறியுணர்வு; sensation, perception, range of the organs of sense. *"நயன கோசர மறைதலும்" (கம்பரா. மிதிலைக். 40).* 3. ஊர் (பிங்.); town, village. 4. குறித்த காலத்தில் கோள்கள் இருக்கும் நிலை; position of planets at a given moment. 5. ***கோசரபலம்*** பார்க்க; see ***kōśara-palam.*** 6. கண் வரிசை; range of the eyes (சா.அக.).

*[கோ + சரம்.]*

**கோசரம்**[2] *kōśaram,* பெ.(n.) கொடிவழி (சைவ. பொது. 331, உரை); lineage, family.

*[கோ + சரம்.]*

**கோசரம்**[3] *kōśaram,* பெ.(n.) 1. பூந்தாது (பிங்.); farina, pollen of a flower. 2. மகிழம்பூ (மலை.); pointed-leaved ape-flower.

*[கேசரம் → கோசரம்.]*

**கோசரன்** *kōśaran,* பெ.(n.) துறவி; ascetic, mendicant.

*[கோசரம் → கோசரன்.]*

**கோசரி-த்தல்** *kōśari-,* 4 செ.கு.வி. (v.i.) அறிவுக்குப் புலனாதல்; to be cognizable by the senses or intellect. *"அனுபவஞான மாத்திரையின் விளங்கிச் கோசரிப்பதாயும்" (சி.போ.பா. 6:2.ப. 121. சுவாமி).*

*[கோசரம் → கோசரித்தல்.]*

**கோசலம்**[1] *kōśalam,* பெ.(n.) மாட்டின் சிறுநீர்; cow's urine. *"கோசல மோர்நா ளோர்நாள் கோமயம்" (காசிக. வியாதன்சாப. 18).*

*[கோ + சலம்.]*

**கோசலம்**[2] *kō-śalam,* பெ.(n.) 1. ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று; modern *Oudh,* one of 56 ***tēśam.*** *"கோசலத் திறைவ னெய்த" (சீவக.2184).* 2. தமிழ்நூல்களில் குறிக்கப்பெறும் பதினெண் மொழியுள் ஒன்று (திவா.); one of eighteen languages referred to in the ancient Tamil works.

*[கோ + சாலை – கோசாலை (மாட்டுப்பட்டியுள்ள ஊர்) → கோசலம்.]*

**கோசலமாமூலி** *kōśala-mā-mūli,* பெ.(n.) காட்டாமணக்கு; Moghul castor, purging nut, physic nut.

*[கோசலர் + மா + மூலி.]*

இதனைக் கரப்பான், சிரங்கு, வெட்டுக்காயம் போன்றவற்றுக்கிடலாம் (சா.அக.).

**கோசலரேகை** *kōśala-rēgai,* பெ.(n.) கையின் வரி (கைரேகை) வகை (திருவாரூர்.குற.Ms); a line in palm of hand.

*[கோசலம் + ரேகை (வரி –வரிசை → ரேகை).]*

**கோசலை**[1] *kōśalai,* பெ.(n.) ***கோசலம்***[2] பார்க்க; see *kōśalam. "வைகுறு கோசலை மன்னர் மன்னனே" (கம்பரா. திருவவ. 90).*

*[கோசலம்[2] → கோசலை.]*

**கோசலை**[2] *kōśalai,* பெ.(n.) இராமனின் தாய்; *Kausalyā,* mother of Rama. *"திருவுறப் பயந்தன டிறங்கொள் கோசலை" (கம்பரா. திருவவ. 104).*

*[கோசலம் → கோசலை.]*

**கோசவதி** *kōśavadi,* பெ.(n.) பீர்க்கு (தைலவ.); sponge-gourd.

*[கோசம் → கோசவதி.]*

**கோசவாகாரக்கட்டி** *kōśa-v-ākāra-k-katti,* பெ.(n.) பையைப்போல் உள்ள கழலை வகை (இங்.வை.307); cystic tumour.

*[கோசம் + ஆகாரம் + கட்டி.]*

**கோசனகம்** *kōśanagam,* பெ.(n.) 1. கையாந்த கரை; a plant growing in marshy places. 2. நிலக் கடம்பு வகை; a kind of medicinal plant.

*[கோசம் + கனகம்.]*

**கோசனை**[1] *kōśanai,* பெ.(n.) ஆன்மணத்தி (கோரோசனை); bezoar taken from the intestine of the cow.

*[கோரோசனை → கோசனை.]*

**கோசனை**[2] *kōśanai,* பெ.(n.) பேரொலி (யாழ்.அக.); uproar, clamour (சா.அக.).

*[கோரோசனை → கோசனை.]*

**கோசாகாரப்புழு** *kōśākāra-p-pulu,* பெ.(n.) பட்டுப்புழு; silkworm. *"பற்றறாக் கோசாகாரப் புழுப்போல்" (சொரூபசாரம்,98).*

*[கோசாகாரம் + புழு.]*

**கோசாங்கம்** *kōšāṅgam*, பெ.(n.) நாணல்; kaus.

*[கோசம் → கோசாங்கம்.]*

**கோசாங்கோரை** *kōšāṅ-kōrai*, பெ.(n.) கிழங்கு; tuberous root (சா.அக).

*[கோசம் + கோரை → கோசங்கோரை → கோசாங் கோரை.]*

**கோசாமரம்** *kōšā-maram*, பெ.(n.) 1. பயனற்ற மரம்; useless tree. 2. காட்டுமரம்; wild tree. 3. காய்க்காத மரம்; tree not yielding fruits (சா.அக).

*[கோசா(த) + மரம் – கோசமரம் → கோசாமரம்.]*

**கோசாமி** *kōšāmi*, பெ.(n.) ***கோசாயி*** பார்க்க; see *košāyi*.

*[கோ + சாமி.]*

**கோசாயி** *kōšāyi*, பெ.(n.) வடநாட்டுத் துறவியருள் ஒருவகையார்; a class of ascetics from North India.

**மரா.** கோசாவி → **த.** கோசாயி.

**கோசாரம்**[1] *kōšāram* பெ.(n.) குறித்த காலத்தில் கோள்கள் இருக்கும் நிலை; position of planets at a given moments.

*[கோள் + சாரம்]*

**கோசாரம்**[2] *kōšāram*, பெ.(n.) 1. அடங்கல்; deminish. 2. அறியத்தக்கது; worth to know. 3. மகிழமரம்; pointed leaved ape-flower tree. 4. செய்தி; matter.

*[கோ + சாரம்.]*

**கோசாலம்**[1] *kōšālam*, பெ.(n.) ***கோசாலை***[1] பார்க்க; see *kōšālai*.

*[கோசாலை → கோசாலம்.]*

**கோசாலம்**[2] *kōšālam*, பெ.(n.) அகங்கை; palm of the hand (சா.அக.).

*[கோசம் → கோசலம் → கோசாலம்.]*

**கோசாலை**[1] *kōšālai*, பெ.(n.) ஆன்கொட்டில்; cow-shed. *"ஒரு கல்தச்சன் முன்பு கோசாலை கட்டுகிற போது" (கோயிலொ.100).*

*[கோ + சாலை.]*

**இறைவன் திருவமுது செய்தற்குப் பால்பெறுதற்** குரியதாகக் கோயில்களில் வளர்க்கப் பெறும் ஆக்களமைந்த கொட்டில் (கல்.அக.).

*"திருகாமக் கோட்ட முடைய பெரிய நாச்சியார் கோயிலுக்கும் பால் அமுது செய்தருளவும் பாற்போனகப் பாலுக்கும் குலோத்துங்க சோழன் திருக்கோ சாலையிடையற்கு விட்ட பசு நானாற் றொருபதினால்" (தெ.கல். தொ.8.கல்.54).*

**கோசாலை**[2] *kōšālai*, பெ.(n.) ***கொய்சகம்*** பார்க்க; see *kōyšagām*.

*[கொய் + சீலை – கொய்சீலை → கோசாலை.]*

**கோசாவித்திரி** *kō-šāvittiri* பெ.(n.) ஆக்களைத் துதிக்கும் மந்திரம்; mantra propitiating cow. *'கோசாவித்திரி முதலிய தோத்திரங்களைச் செய்து' (சைவச. பொது.168, உரை).*

*[கோ + சாவித்திரி.]*

**கோசாவெடு-த்தல்** *kōšā-v-eḍu-*, 4 செ.கு.வி. (v.i.) வெளிநாட்டில் பணியாற்றுதற்கு அதிகார ஆவணம் (பத்திரம்) பெறுதல்; to obtain power of attorney for acting as agent outside British India.

*[கோசம் → கோசா + எடு-.]*

**கோசான்** *kōsāṉ*, பெ. (n.) ஆண்குறி (உ.வ.); membrum virile.

*[கோசம் → கோசான்.]*

**கோசிகம்**[1] *kōšigam*, பெ.(n.) 1. பட்டாடை; silk cloth. *"கோசிகம் போல" (பெருங்.உஞ்சைக். 43:154). "கோசிகச் செம்பொ னாடை கொம்பனா ரசைத்தல் போலும்" (நைடத.இளவே.4).* 2. ஒரு பண்; a primary melody type, corresponding to Pairavi. 3. சாமவேதம் (சூடா.); *Šāmavēda*. 4. கூகை; owl. *"கூகைப்பெயர் கோசிக மென்பது" (உபதேசகா. சிவநாம.47).*

*[கோசம் → கோசிகம்.]*

**கோசிகம்**[2] *kōšigam*, பெ.(n.) 1. விலாமிச்சை வேர்; the root of a fragrant grass. 2. வெட்டிவேர்; cuscus root (சா.அக).

*[கோசு → கோசிகம்.]*

**கோசிகன்**[1] *kōšigaṉ*, பெ.(n.) விசுவாமித்திரன்; *Višuvāmitra*, as the descendant of *Kaušika*. *"கோசிகற் கொருமொழி சனகன் கூறுவான்" (கம்பரா. கார்முக.64).*

*[கௌசிகன் → கோசிகன்.]*

**கோசிகன்**[2] *kōšigaṉ*, பெ.(n.) கோவலன் காலத்தில் வாழ்ந்தவன்; a contemporary of Kovalan in Silappatikaram.

*[கௌசிகன் → கோசிகன்.]*

**கோசிகை** *kōšigai*, பெ.(n.) 1. பட்டாடை; silk cloth. *"கோசிகையாம் ... அரங்கேசர்க் கரவரசே" (அஷ்டப்.திருவரங்.மா.87).* 2. குடிக்கும் ஏனம்; drinking vessels. 3. மல்லிகைக்கொடி a variety of jasmine creeper. 4. ஆனைச் செவியடி; cow's tongue. 5. குறட்டைப்பாசி; coix millet.

*[கோசி → கோசிகை.]*

**கோசிலம்** *kōšilam*, பெ.(n.) மொச்சைவகை; a kind of bean (சா.அக.).

*[கொள் (வளைவு) → கோசு → கோசிலம்.]*

**கோசிலேபிடித்துவா-தல் (கோசிலேபிடித்து வரு-தல்)** *kōšilē-piḍittu-vā-*, 18 செ.குன்றாவி (v.t.) செ.கு.வி.(v.i.) காற்றின் ஓட்டத்தில் செல்லும்படி கப்பற் சுக்கானைத் திருப்புதல் (வின்.); to turn the rudder of a ship to facilitate sailing towards of the flow of the wind direction.

*[கோசு (வளைவு) + இல் + ஏ + பிடித்து + வா-.]*

**கோசு**[1] *kōšu*, பெ.(n.) 1. கூப்பிடு தொலைவு; a measure of distance, linear measure of Tamil Nadu 1 mile 110 feet, calling distance. *"சன்னிதிக்கு அப்புறத்தில் இரண்டு கோசு அளவிலிருக்கும் பாபவிநாசனிக்கு" (குருபரம். பன்னீ.217).* 2. இரண்டு காதம்; the distance of twenty miles.

*[காதம் → காசம் → காசு → கோசு.]*

**கோசு**[2] *kōšu*, பெ.(n.) ***கோசம்***[4] பார்க்க;see *kōšam*.

*[கோசம் → கோசு.]*

**கோசு**[3] *kōšu*, பெ.(n.) 1. தோணிப்பாயின் முன்புறக் கயிறு (வின்.); lower front rope of the sail of a boat. 2. தடவை முறை (யாழ்ப்.); turn, time. 3. தோல்வி; defeat, loss, overthrow. *அவன் இதிலே கோசுபோய் விட்டான்.* 4. காரியம்; affair, concern. *அவன் கோசுக்குப் போகாதே.* 5. பாயின் கீழ்ப்புறம்; bottom of the sail. 6.கலத்தின் ஒருபக்கம்; a side of a vessel.

*[கோள் (வளைவு) → கோசு.]*

**கோசு**[4] *kōšu*, பெ.(n.) பரணிச்செப்பு (சரபேந்திர. குறவஞ்சி.321); a kind of small perfume-box. 2.தொங்கல் (இ.வ.) ; hangings.

*[கொய் → கோய் (மடிப்பு) → கோசு.]*

**கோசு**[5] *kōšu*, பெ.(n.) கப்பலின் காற்றுப்பக்கம் (பாண்டி.); windward side of a ship.

*[கால் (காற்று) → கோல் → கோய் → கோசு.]*

**கோசுக்கால்** *kōšu-k-kāl*, பெ.(n.) 1. கீரையின் நீண்ட மெல்லிய கால் (யாழ்ப்.) ; long slender stalks of pot herbs. 2.பருமனின்றி நெடுக வளர்ந்த கால்; a leg which has grown in length without proportionate breadth.

*[கோல் → கோசு + கால்.]*

**கோசுப்பாய்** *kōšu-p-pāy*, பெ.(n.) கப்பலின் பின்புறப் பாய்; spankar, after-sail in a barque.

*[கோசு[2] + பாய்.]*

**கோசுப்பாய்மரம்** *kōšu-p-pāimaram*, பெ.(n.) பெரிய பாய்மரம்; the mast of a vessel.

*[கோசு + பாய்மரம்.]*

**கோசுப்புறம்** *kōšu-p-puṟam*, பெ.(n.) மரக்கலத்தின் வலப்பக்கம் (மீன்.தொ.); right side of a wooden vessel.

*[கோசு + புறம்.]*

**கோசுப்பெட்டி** *kōšu-p-peṭṭi*, பெ. (n.) வில் வண்டி; a roofed cart.

*[கோத்தல் → கோச்சுதல் (கூரையமைத்தல்) கோச்சு → கோசு + பெட்டி.]*

**கோசுபோ-தல்** *kōšu-pō-*, 8 செ.கு.வி.(v.i.) தாழ்ச்சியாதல்; to fall low in status, to be degraded. 2. தோல்வியுறுதல்; to be defeated.

**தெ.** கோள் போவுட

*[கோள் (வளைவு) → கோய் → கோசு + போ.]*

**கோசும்பரி** *kōšumbari*, பெ.(n.) காய்கறிகளைப் பச்சையாகவே மசாலையிட்டு ஆக்கிய ஒருவகைப் பச்சடி; a side food which is made of raw vege tables seasoned with condiments so as to give it a relish and taken with main food to increase taste (சா.அக).

**மறுவ.** கோசுமலி.

**க.,து.** கோசும்பரி; **மரா.** கோசிம்பரி.

*[கொய்து + உண்பலி – கொய்துண்பலி → கோசும்பரி.]*

**கோசுமந்தில்** *kōšu-mandil*, பெ.(n.) படகின் பின் பக்கத்துப் பாய் தாங்கும் கட்டை; gaff lift, the spar

upon which the upper edge of a fore and aft sail is extended.

*[கோசு + (மந்து) மந்தில்.]*

**கோசுவாரி** *košu-vāri,* பெ.(n.) பாய்மரத்தின் கீழ் புறத்தில் பாயைக் கட்டப் பயன்படும் குறுக்கு வாட்டக் கழி; the spar on which the bottom of the sail rope is fixed upon.

*[கோசுவரி → கோசுவாரி.]*

**கோசுவிழு-தல்** *kōšu-viḻu-,* 2 செ.கு.வி.(v.i.) துணி வெட்டும்போது கோணிப்போதல்; zigzag cutting of the cloth by mistake.

*[கோள் →கோசு + விழு.]*

**கோஞ்சகக்குடி** *kōñjaga-k-kuḍi,* பெ.(n.) சிவகங்கை மாவட்டத்துச் சிற்றூர்; a village n Sivagangai Dt.

*[கொழிஞ்சில் → கோஞ்சல் + குடி.]*

**கோஞ்சணவயல்** *kōñjana-vayal,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanadhapuram dt.

*[கொழிஞ்சில் →கொஞ்சனி →கோஞ்சணி + வயல்.]*

**கோட்காரன்** *kōṭ-kāraṉ,* பெ.(n.) கோட்சொல்லி (வின்.); slanderer.

*[கோள் + காரன்.]*

**கோட்கூறு** *kōṭ-kūṟu,* ஓரையை (இராசியை) முப்பது வகையாகப் பிரிக்கை; division of a sign of the zodiac into 30 sections, being the number of its degrees. 2.கோள் குற்றம்; good or evil influence of the planets.

*[கோள் + கூறு.]*

**கோட்சுரும்பு** *kōṭšurumbu,* பெ.(n.) தேன் குடிக்கும் வண்டு; a kind of beetle.

*[கோள் + சுரும்பு.]*

**கோட்சுறா** *kōṭšuṟā,* பெ.(n.) கொல்லும் தலைமையுள்ள சுறாமீன்; a kind of shark which capable of taking life of human.

*[கோள் + சுறா.]*

**கோட்சொல்லி** *kōṭ-colli,* குறளை கூறுவோன் (உ.வ.); tale-bearer, slanderer.

*[கோள் + சொல்லி.]*

**கோட்சொல்(லு)-தல்** *kōṭ-col(lu)-,* 13 செ.கு.வி. (v.i.) 1. குறளை கூறுதல்; to tales-bear.

*[கோள் + சொல்.]*

**கோட்டக்ககம்** *kōṭṭakkagam,* பெ. (n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[கோடு → கோட்டு + அக்ககம்.]*

**கோட்டக்கரை** *kōṭṭa-k-karai,* பெ. (n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[கோடு → கோட்ட + கரை.]*

**கோட்டக்கினி** *kōṭṭakkiṉi,* பெ.(n.) வயிற்றெரிச்சல்; burning senstation in the stomach (சா.அக.).

*[கோடு + அக்கினி.]*

**கோட்டகம்**[1] *kōṭṭagam,* பெ.(n.) 1. குளக்கரை; shore, bank. *"நெடுங்குளக் கோட்டகம்" (சிலப். 11:71).* 2. பள்ளம் (சிலப். 11:71, உரை); pit, ditch. 3. ஆழமான நீர்நிலை; deep tank. *"கோட்டக நிலைப்படா நிறைந்தன" (சீவக.41).* 4. குளம்; pool. *"கோட்டகத்தி னகம்புகும்"* (கந்தபு.ஆற்.35). 5. கோயில்; temple.

*[கோட்டம் → கோட்டகம்.]*

**கோட்டகம்**[2] *kōṭṭagam,* பெ.(n.) செங்கத்தாரி; false pea-cock's foot tree (சா.அக).

*[கோடு → கோட்டு + அகம்.]*

**கோட்டகம்**[3] *kōṭṭagam,* பெ.(n.) பல தெருக்கள் கூடுமிடம்; junction of the streets.

*[கூடு → கூட்டு → கோட்டு + அகம்.]*

**கோட்டகம்**[4] *kōṭṭagam,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[கோடு → கோட்டு + அகம்.]*

**கோட்டகயப்பாக்கம்** *kōṭṭakaya-p-pākkam,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanjipuram Dt.

*[கோடு → கோட்டு + கயம் + பாக்கம்.]*

**கோட்டகாரம்** *kōṭṭa-kāram,* பெ.(n.) நெற்களஞ்சியம்; granery. *"ஊருணி குளமுங் கரையும் ஐயன் கோயிலுந் திருமுற்றமும் கோட்டகாரமும் வெள்ளான் சுடுகாடும், புதைச் சுடுகாடும் பறைச்சேரியும்" (தெ.இ.கல்.தொ.II, கல்.-1, பகுதி-1, வரி 4).*

*[கோட்டை + காரம்.]*

**கோட்டகுப்பம்** *kōtta-kuppam*, பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvallur Dt.

*[கோடு → கோட்டு + குப்பம் → கோட்டகுப்பம்.]*

**கோட்டங்காவலர்** *kōttaṅ-kāvalar*, பெ.(n.) சிறைக் கூடங் காப்போர்; warders of a jail. *"கோட்டங் காவலர்...இசைத்துமென் றேகி"(மணிமே.19:48).*

*[கோட்டம் + காவலர்.]*

**கோட்டடி[1]-த்தல்** *kōttadi-*, 4 செ.கு.வி. (v.i) தேர்வில் தோல்வியடைதல் (இ.வ.); to fail in an examination. *பத்தாம் வகுப்பில் இரண்டுமுறை கோட்டடித்து விட்டான்.*

*[கோள் → கோட்டு + அடி-.]*

**கோட்டடி[2]-த்தல்** *kōttadi-*, 4 செ.கு.வி. (v.i.) சீட்டாட்டத்தில் எல்லாப் பிடிகளையுந் தனியே பிடிக்க முயலுதல்; to play alone hand to win all the tricks in a card-game.

*[கூட்டு → கோட்டு + அடி-.]*

**கோட்டந்தை** *kōttandai*, பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanadhapuram Dt.

*[கோடு → கோட்டு + அந்தை - கோட்டந்தை.]*

**கோட்டபஞ்சரம்** *kōtta-pañjaram*, பெ.(n.) கோயிற் கருவறைப் புறச்சுவரில் அழகிய சிறிய கோட்டம் போன்று அமைந்த அமைப்பு; small niche on the outer wall of innermost sauctuary of the temple.

*[கோட்டம் + பஞ்சரம்.]*

**கோட்டபேதம்** *kōttabēdam*, பெ.(n.) குடலுக்குண்டான சிதைவு; waste sustained by bowels (சா.அக).

*[கோட்டம் + பேதம்.]*

**கோட்டம்[1]** *kōttam*, பெ.(n.) 1. வளைவு; bend, curve, warp, as in timber. *"மரத்தின் கனக்கோட்டந் தீர்க்குநூல்"(நன்.25).* 2. வணக்கம்; bowing in worship, adoration. *"முன்னோன் கழற்கே கோட்டந் தருநங் குருமுடி வெற்பன்" (திருக்கோ. 156).* 3. நடுநிலை திறம்புகை; partiality, as swerving from uprightness. *"கோவினுக் கருங்கலங் கோட்ட மில்லது" (தேவா.1182:2).* 4. மனக்கோணல்; crookedness, as of mind. *"உட்கோட்ட மின்மை பெறின்" (குறள்,119).* 5.பகைமை; hatred. *"கோட்டமுற் றமர்செய" (விநாயகபு.37:3).* 6.பொறாமை (பிங்.); envy, jealousy. 7.நாடு (பிங்.); district, province. 8. மதில் சூழ்ந்த நகரம் (பிங்.); town, city. 9.வேலி சூழ்ந்த தோட்டம் (பிங்.); garden.10. கரை; shore, as of a tank. *"உயர்கோட்டத்து... வான் பொய்கை" (பட்டினப்.36).* 11. வளைந்த தண்டுள்ள யாழ் (பிங்.); lute.12. மாக்கோலம் (பிங்.); lines, figures and diagrams drawn with rice-flour on the ground on festive occasions. 13.உண்பன (பிங்.); eatables, edibles. 14. ஒருவகை மருந்து; a kind of medicine. 15. சாலை; street.*"அருஞ்சிறைக் கோட்டத் தகவயிற் புகுந்து" (மணிமே.19:133).*

ம. கோட்டம்; க. கோட; தெ. கோடி (வளைந்தது).

*[குள் → கொள் → கோள் → கோடு → கோட்டம்.]*

**கோட்டம்[2]** *kōttam*, பெ.(n.) 1. மதில் சூழ்ந்த பள்ளிப்படை அல்லது கல்லறை; cemetery. *"சுடும ணோங்கிய நெடுநிலைக் கோட்டமும்" (மணிமே.6:59).* 2. மதில் சூழ்ந்த கோயில் (இ.வ.); temple. *"கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்" (சிலப்.14:10).* 3. அரண் வேலி சூழ்ந்த பாசறை (பிங்.); camp. 4. மதில் சூழ்ந்த சிறைச்சாலை (இ.வ.); prison. *"கோன்றமர் நிகள மூழ்கிக் கோட்டத்துக் குரங்க"(சீவக.262). "ஒறுக்குந் தண்டத் துறுசிறைக் கோட்டம்" (மணிமே.19:43). 5.* இடம் (பிங்.); place. 6.கூட்டம்; assembly, meeting (வே.க.170) (சுவி.73). 7.வட்டமான ஆன்கொட்டில் (இ.வ.); cow shed. *"ஆனிரைக டன்னு கோட்டம்" (வாயுசங். பஞ்சாக்.58).* 8. ஆக்கூட்டம் (பிங்.); herd of cows. 9. குரங்கு; monkey.

க. கோணெ (அறை).

*[கோ (உயர்வு) → கோடு → கோட்டம்.]*

**கோட்டம்[3]** *kōttam*, பெ.(n.) 1. வெண்கோட்டம்; Arabian costum. 2. ஒருவகை நறுமணச் செடி; costus shrub. *"கோட்டமுங் குங்குமமும் பரந்து" (சீவக.1905).* 3. ஒருவகை நறுமணப் பண்டம்; fragrant costus shrub root. *"கடலிடைக் கோட்டந் தேய்த்துக் கழிவது" (கம்பரா.கும்பக.145).* 4. குரா மரம் (பிங்.); bottle-flower. 5. வயல்; field.

*[கோடு = கொம்பு, சந்தனமரக் கிளை. கோடு → கோட்டம்.]*

**கோட்டம்[4]** *kōttam*, பெ.(n.) 1. கடற்கொந்தளிப்பு; sea turbulance. 2. உம்பருலகம் ; holy world. 3. வீணை; a stringed musical instrument. 4. வாட்டரவு; weariness, fatigue.

*[குள் → குடு (ஒலித்தற் குறிப்பு) → குட்டம் → கோட்டம்.]*

**கோட்டம்பட்டி** *kōṭṭam-paṭṭi*, பெ.(n.) கோவை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kovai Dt.

*[கோட்டம் + பட்டி.]*

**கோட்டம்பலவனார்** *kōṭṭambalavāṉār*, பெ.(n.) சங்கப்புலவர்களில் ஒருவர்; one of the Šaṅgam poets.

*[கோட்டம்பலம் → கோட்டம்பலவன் + ஆர்.]*

நற்றிணை என்னும் நூலில் 95ஆம் பாடலை இவர் இயற்றியுள்ளார். கோட்டம்பலம் என்னும் ஊரினராதலின் கோட்டம்பலவன் எனப்பட்டார். ''ஆர்'' உயர்வுப்பன்மையீறு.

**கோட்டமருதூர்** *kōṭṭamarudūr*, பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[கோடு → கோட்டு + மருதூர்.]*

**கோட்டயம்** *kōṭṭayam*, பெ.(n.) 1. சேரநாட்டின் பழைய சிற்றரசுகளுள் ஒன்று; one of the ancient principalities of Kerala. 2. கேரள மாநிலத்தின் நகரங்களுளொன்று; name of a town, head-quarters of the present *kōṭṭayam* Dt.

**ம.** கோட்டயம்.

*[கோட்டை + அகம் – கோட்டகம் → கோட்டயம்.]*

**கோட்டமடுகு** *kōṭṭa-maḍugu*, பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[கோட்டை + (மடு) மடுகு (மடுவு → மடுகு).]*

**கோட்டரம்** *kōṭṭaram*, பெ.(n.) 1. குரங்கு; monkey. 2.பொய்மை; falsehood. 3. நீர்நிலை; pool, tank.

*[கோடு (வளைவு) → கோட்டு + அரம்.]*

**கோட்டரவு** *kōṭṭaravu*, பெ.(n.) 1. மனத்துயர் (யாழ்ப்.); distress. 2. குரங்குமனம்; mischievous mind (சா.அக).

*[கோடுதல் = வளைதல், மனம் சாய்தல், வருந்துதல். கோடு + அரவு (சொல்லாக்க ஈறு).]*

**கோட்டவிளை** *kōṭṭa-viḷai*, பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[கோடு → கோட்டு + விளை – கோட்டவிளை.]*

**கோட்டாக்கினி** *kōṭṭākkiṉi*, பெ.(n.) வயிற்றுத் தீ; the thermal heat supposed to be in the secral region (சா.அக).

*[கோடக்கினி → கோட்டாக்கினி.]*

**கோட்டாரப்பட்டி** *kōṭṭāra-p-paṭṭi*, பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[கொட்டாரம் → கோட்டாரம் + பட்டி.]*

**கோட்டாரம்**[1] *kōṭṭāram*, பெ.(n.) 1.கிணறு; well. 2.குளம்; pond. 3. குளத்திற்கு செல்லும் படி; the stairs leading to a pond. 3.நாற்சதுரத் துரவு; square well. 4.தாமரைத்தடம்; lotus tank. 5. மரம்; tree.

**ம.** கோட்டாரம்.

*[கோட்டகம் → கோட்டாரம்.]*

**கோட்டாரம்**[2] *kōṭṭāram*, பெ.(n.) 1. அரண் சூழ்ந்த நகரம்; a fortified town. 2. அரண்மனை; palace. 3. தலைநகரம்; capital. 4. காவலமைந்த இடம்; a strong hold.

**ம.** கோட்டாரம்.

*[கோட்டகம் → கோட்டம்.]*

**கோட்டாரன்** *kōṭṭāraṉ*, பெ.(n.) 1.தீய ஒழுக்கங் கொண்டவன்; one who leads a low or infamous life. 2.காமவிருப்பமுடையவன் ; a debouched man.

**ம.** கோட்டாரன்.

*[கோடு → கோட்டு + காரன் – கோட்டுகாரன் → கோட்டாரன் (கொ.வ.)]*

**கோட்டாரி** *kōṭṭāri*, பெ.(n.) 1. கல்லாரை (மலை.); iron weed. 2. மலையடிவாரங்களில் அகப்படும் ஆரையைப் போன்ற ஓர் அரிய கொடி; an unknown creeper of the species of marselia said to be found very rarely at the foot of the hills (சா.அக).

*[கோடு + ஆரை.]*

**கோட்டாலம்** *kōṭṭālam*, பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[கோடு → கோட்டு + ஆலம்.]*

**கோட்டாலை** *kōṭṭālai*, பெ.(n.) 1. துன்பம் (திவா.); distress. 2. நகையாட்டுக் கூத்து; grotesque gestures, as of one possessed by the devil, antic. *"கூத்தாடு வாயிதென்ன கோட்டாலை" (பணவிடு.158).* 3. மூடநடத்தை; foolish behaviour. 4. களியாட்டம்; dalliance. 4. உலைவு; to get loosened. 5. நோய்; disease.

*[கொடு (வளைவு) → கோடு + ஆலை – கோட்டாலை.]*

**கோட்டாலைக்காரன்** *kōṭṭālai-k-kāraṉ*, பெ.(n.) 1.தொல்லை செய்வோன்; troublesome person. 2. பகடியாடி; buffoon, joker.

*[கொடு → கோடு + ஆலை + காரன்.]*

**கோட்டாற்றுநிலைப்படை** *kōṭṭāṟṟu-nilaippaḍai*, பெ.(n.) குலோத்துங்கன் தான் வென்ற கோட்டாற்றில் தன் படையைச் சேர்ந்த தலைவரின் கீழ் அமைத்த நிலைப்படை (பிற்.சோழ.வர. சதாசிவ. பண். பக்.288-289); a kind of army camp of the Chola king Kulothungan stationed at *Kōṭṭāṟu*.

*[கோட்டாறு + நிலைப்படை.]*

**கோட்டாறு** *kōṭṭāṟu*, பெ.(n.) குமரிமுனைக்கு வடக்கில் நாஞ்சில் நாட்டிலுள்ள ஊர்; a village in Nāñjilnāḍu north of Kumarimuṉai. "குறுகலர் *குலைய கோட்டாறு உட்பட"-முதற் குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி (கல்.அக.).*

*[கோடு + ஆறு.]*

சங்க கால வேள் ஆயின் ஆய்குடி இதுவே என்பர் மு. இராகவையங்கார் (வேளிர் வரலாறு; இரண்டாம் பதிப்பு 1916 பக். 83).

**கோட்டான்** *kōṭṭāṉ*, பெ.(n.) 1. கூகை (இ.வ.); rock horned owl. *"கூகையைக் கோட்டா னென்றலும்" (தொல்.பொருள்.623).* 2.கொக்கு வகை (யாழ்ப்.); a species of bittern.

ம. கோட்டான்.

*[கோடு = கொம்பு, வளைவு. கோடு + ஆன் - கோட்டான். கொம்புடைமையின் கோட்டானையும் வளைந்த கழுத்துடைமையின் கொக்கையும் குறித்தது.]*

**கோட்டான்கறி** *kōṭṭāṉ-kaṟi*, பெ.(n.) கோட்டானின் இறைச்சி; meat of hooting owl. "கொற்றவரை மயக்கும் கோட்டானின் கறி" என்பது பழமொழி (சா.அக).

*[கோட்டான் + கறி]*

இது நோய்களை விரட்டும். பசியையும் காட்டானைபோல் மதமும் உண்டாக்கும். மருந்து குணமுடையது.

**கோட்டான்காய்** *kōṭṭāṉ-kāi*, பெ.(n.) கூகைத் தேங்காய்; blughted coconut.

*[கோட்டான் + காய்]*

இது நோய்களை விரட்டும். பசியையும் காட்டானை போல் மதமும் உண்டாக்கும்.

**கோட்டான்கோட்டான்** *kōṭṭāṉ-kōṭṭāṉ*, பெ.(n.) பிள்ளைகளின் விளையாட்டு வகை (இ.வ.); a game of children.

*[கோட்டான் + கோட்டான்.]*

**கோட்டான்திருக்கை** *kōṭṭāṉ-tirukkai*, பெ.(n.) 18 அடி நீளமுள்ளதும் பச்சையும் நீலமுங் கலந்த நிறமுடையதுமான கடல்மீன் வகை; sea- devil, deep-purplish, attaining, 18 ft. and upwards across the disc which is twice as broad as long.

*[கோட்டான் + திருக்கை.]*

**கோட்டி**[1] *kōṭṭi*, பெ.(n.) 1. துன்பம் (வின்.); trouble, vexation, annoyance. 2. மூளைக்கோளாறு (வின்.); madness, insanity. *"காமக் கோட்டியால் மனங்கூசினேன்" (இராமநா. உயுத். 41).* 3. பகடி; joke, mimicry. 4. நகையாட்டுக்கூத்து; grotesque gestures, as of one possessed by the devil; actic.5. அழகு; beauty. 6. உலைவு; to get loosensed.

ம. கோட்டி.

*[கோள் →கோட்டி.]*

**கோட்டி**[2] *kōṭṭi*, பெ.(n.) 1. அவை (சபை) (இ.வ.); assembly of learned or respectable persons. *"தோமறு கோட்டியும்" (மணிமே.1:43).* 2. கூட்டம் (பிங்.); multitude, collection, class. 3. பேச்சு, அவைப்பேச்சு, சொற்பொழிவு (இ.வ.); speech, or utteranice as in an asembly. *"வீரக் கோட்டி பேசுவார்" (கம்பரா.மாயாசனகப்.13).* 4. ஒருவரோடு கூடியிருக்கை; company as of a person. *"தன்றுணைவி கோட்டியினி னீங்கி" (சீவக.1035).*

*[கோடகம் → கோட்டி. கொளுத்தி → கோட்டி.]*

**கோட்டி**[3] *kōṭṭi*, பெ.(n.) 1. கோபுரவாசல்; gateway under a temple tower. *"ஆயிழை கோட்டத் தோங்கிருங் கோட்டி யிருந்தோய்" (சிலப்.30:62).* 2. மனைவாயில் (பிங்.); door of a house.

*[கோட்டம் → கோட்டி = கோட்டத்தில் உள்ளது.]*

**கோட்டி**[4] *kōṭṭi*, பெ.(n.) கிட்டிப்புள் (இராட்.); larger stick in the game of tip-cat (R.).

ம. கோட்டி.

*[கிட்டி → கொட்டி → கோட்டி.]*

**கோட்டி**[5]**-த்தல்** *kōṭṭi-*, 4 செ.கு.வி. (v.i.) ஆரவாரித்தல்; to sound, clamour,roar.

*[கூடு → கூட்டு → கூட்டி → கோட்டி.]*

**கோட்டிக்காரன்** *kōṭṭi-k-kāraṉ*, பெ.(n.) பித்தன் (நெல்லை.); mad man.

*[கோட்டி + காரன்]*

**கோட்டிகொள்¹(ளு)-தல்** *kōṭṭi-koḷ(ḷu)-*, 16 செ.கு.வி. (v.i.) அவையில் உரையாற்றுதல்; to speak as in an assembly. *"நூலின்றிக் கோட்டி கொளல்" (குறள், 401).*

*[கோட்டி + கொள்(ளு)-.]*

**கோட்டிகொள்²(ளு)-தல்** *kōṭṭi-koḷ(ḷu)-*, 10 செ.குன்றாவி. (v.t.) 1. துன்புறுத்தல்; to annoy, vex. 2. இகழ்தல்; to jeer at, banter, mock.

*[கோட்டி + கொள்(ளு)-.]*

**கோட்டிதம்** *kōṭṭidam*, பெ.(n.) தோலினின்றும், அதைச் சேர்ந்த மயிர், நகங்கள், குளம்பு, கொம்பு நகம் உருவாவதற்கு அடிப்படையான வெடியகப் பொருள் முதலியவற்றினின்றும் எடுக்கப்படும் பசை; impure viscous substance obtained by boiling animal substances such as skins, hairs, nails, hoofs; keratin (சா.அக).

*[கூட்டு → கூட்டி → கூட்டிதம் → கோட்டிதம்.]*

**கோட்டியம்** *kōṭṭiyam*, பெ.(n.) 1. வியப்பு; miracle. 2. திகைப்பு; astonishment, wonder.

*[கோட்டி → கோட்டியம்.]*

**கோட்டியாழ்** *kōṭṭiyāḻ*, பெ.(n.) நால்வகை யாழி னொன்று; one among the four kinds of lutes.

மறுவ. செங்கோட்டியாழ்.

*[கோடு → கோட்டி + யாழ்.]*

**கோட்டில்வாழ்விலங்கு** *kōṭṭil-vāḻ-vilaṅgu*, பெ.(n.) கிளைகளில் உறையும் அணில், குரங்கு போன்றவை; animals living on branches of trees such as the squirrel, monkey etc.(சா.அக).

*[(கோடு + இல்) கோட்டில் + வாழ் + விலங்கு]*

**கோட்டிலக்கம்** *kōṭṭilakkam*, பெ.(n.) 1. வகுத்த மிச்சம் ; remainder, in division. 2. ஒருவகைச் சதுரக் கணக்கு (வின்.) ; magic square.

*[கூடு → கூட்டு → கோட்டு + இலக்கம்.]*

**கோட்டிறால்** *kōṭṭiṟāl*, பெ.(n.) பாறைகளின் இடுக்குகளில் வாழுமோர்வகை இறால்மீன்; a kind of fish living in the gaps of rocks.

*[கோடு + இறால்]*

**கோட்டினம்** *kōṭṭiṉam*, பெ.(n.) கொம்புடைய எருமைக் கூட்டம் (இ.வ.);herd of buffaloes, as having horns. *"கோட்டினத் தாயர் மகனன்றே" (கலித்.103:33).*

*[கோடு + இனம்]*

**கோட்டு¹-தல்** *kōṭṭu-*, 5 செ.குன்றாவி.(v.t.) 1. வளைத்தல்; to bend, cause to stoop. *"நகைமுகங் கோட்டி நின்றாள்" (சீவக.1568).* 2. வளைத்து முறித்தல் (திவா.); to break. 3. சித்திரம் முதலியன எழுதுதல்; to draw picture. *"தன்னாம மேருவினுங் கோட்டி னானே" (பாரத. சிறப்புப்.19).* 4. கட்டுதல்; to build. *"ஒரு மண்டபங் கோட்டினேன்" (பாரத. வாரணா.123).*

க. கோட்டுக.

*[கோடு → கோட்டு.]*

**கோட்டு²** *kōṭṭu*, பெ.(n.) 1. வளைவு; bend. 2. எழுதுகை; writing. 3. கட்டு; bind. 4. எருமை; buffalo.

*[கோடு → கோட்டு.]*

**கோட்டு³** *kōṭṭu*, பெ.(n.) நெல்லரியின் தொகுதி; bundle of sheaves of paddy.

*[கூடு → கூட்டு → கோட்டு.]*

**கோட்டுக்காறல்** *kōṭṭu-k-kāṟal*, பெ.(n.) வெள்ளியைப் போல் பளபளக்கும் ஒரு வகைக் கடல்மீன்; a kind of sea-fish which shines as silver.

*[கோடு + காறல்]*

**கோட்டுச்சம்பா** *kōṭṭu-c-cambā*, பெ.(n.) விளைந்த நெல்லரியை கயிற்றால் கோடுபிடித்து அடித்த துப்புரவான முதல்தர நெல்; fine paddy obtained by threshing the reaped paddy stalk. கோட்டுச் சம்பா ஆக்கிவைத்தால் போட்டுச் சாப்பிட வருவார்கள் (பழ).

*[கோடு + சம்பா.]*

**கோட்டுநீறு** *kōṭṭu-nīṟu*, பெ.(n.) 1. கிளிஞ்சல் சுண்ணாம்பு; shell lime. 2. சங்குச் சுண்ணாம்பு; a chank lime (சா.அக).

*[கோடு (சுண்ணாம்பு) + (நூறு) நீறு. நூறுதல் = அரைத்தல்.]*

**கோட்டுநூறு** *kōṭṭu-nūṟu*, பெ.(n.) **கோட்டுநீறு** பார்க்க; see *kōṭṭu-nīṟu*. *'கோட்டு நூறும் மஞ்சளுங் கூடியவழிப் பிறந்த செவ்வண்ணம் போல' (தொல். எழுத்து. 6,உரை).*

மறுவ. கோட்டு நீறு.

[கோட்டுநீறு →கோட்டுநூறு.]

**கோட்டுநோய்** *kōṭṭu-nōy*, பெ.(n.) வயிற்றுநோய்; stomach disease (சா.அக).

[கோடு + நோய்]

**கோட்டுப்பலகை** *kōṭṭu-p-palagai*, பெ.(n.) உப்பளத்தில் உப்புவாரும் பலகை (மீனவ.); a plank used for taking salt in salt-pan.

[கோடு + பலகை]

**கோட்டுப்பிடி-த்தல்** *kōṭṭu-p-piḍi-*, 4 செ.குன்றாவி. (v.i.) நெல்லின் அரிகளை யடித்தல் (உ.வ.) ; to thresh the sheaves of paddy.

[கோட்டு + பிடி.]

**கோட்டுப்புலி** *kōṭṭu-p-puli*, பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanadhapuram Dt.

[கோடு → கோட்டு + புலி.]

**கோட்டுப்பூ[1]** *kōṭṭu-p-pū*, பெ.(n.) 1. மரக்கொம்பு களில் தோன்றும் பூ; flowers on the branches of a tree. *"கோட்டுப் பூப்போல மலர்ந்துபிற் கூம்பாது" (நாலடி.215).*

[கோடு + பூ]

பூக்கள் கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என நால்வகைப்படும்.

**கோட்டுப்பூ[2]** *kōṭṭu-p-pū*, பெ.(n.) கல் தாமரை; stone lotus. 2. ஒருவகைத் தாழை; a kind of screw-pine (சா.அக).

[கோடு + பூ.]

**கோட்டுமண் கொள்(ளு)-தல்** *kōṭṭu-maṇ-koḷ(ḷu)*, 16 செ.கு.வி.(v.i.) மண்ணைக் கொம்பாற் குத்திப் பெயர்த்தல்; to break up earth with horns or tusks. *"கோட்டுமண் கொண்டிடந்து" (திவ். பெரியாழ். 3.3:9).*

மறுவ. கோட்டுமண்ணெடுத்தல்.

[கோடு → கோட்டு + மண் + கொள்.]

**கோட்டுமலை** *kōṭṭu-malai*, பெ.(n.) 1. கொம்புள்ள மலையாகிய யானை; elephant. 2. வெண்கல் மலை; hill consisting white or marble stones.

[கோடு (கொம்பு) → கோட்டு + மலை.]

**கோட்டுமா** *kōṭṭu-mā*, பெ.(n.) 1. யானை; ele phant. *"கோட்டுமா வழங்குங் காட்டக நெறியே" (ஐங்குறு.282).* 2. காட்டுப்பன்றி (சிலப். 15:99,அரும்.); boar. 3.எருமைக் கடா; he-buffalo. *"கோட்டுமா வூரவும்" (சிலப். 15:98).* 4. கொம்புள்ள விலங்கு; animal with tusks or horns.

[கோடு (கொம்பு) + மா.]

**கோட்டுமால்** *kōṭṭu-māl*, பெ.(n.) வலைகளை வைத்துக் கட்டும் பெரிய வலைப்பை (மீனவ.); a big netted bag used for keeping the fishing net.

[கூட்டு → கோட்டு + மால்.]

**கோட்டுமீன்** *kōṭṭu-mīṉ*, பெ.(n.) சுறா; shark. *"கோட்டுமீ னெறிந்த வுவகையர்" (நற்.49).*

[கோடு→கோட்டு + மீன்.]

**கோட்டுமுத்து** *kōṭṭu-muttu*, பெ.(n.) யானை மருப்பு முதலியவற்றில் உண்டாகுவதாகக் கருதப்படும் முத்து; pearls claimed to be derived from the tusk of an elephant (சா.அக).

[கோடு →கோட்டு + முத்து.]

**கோட்டுமுளை** *kōṭṭu-muḷai*, பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Kaḍalūr* Dt.

மறுவ. கோட்டிமுளை

[கோடு → கோட்டு + முளை.]

**கோட்டுவாச்சியம்** *kōṭṭu-vācciyam*, பெ.(n.) கம்பியுள்ள இசைக்கருவி; a kind of stringed musical instrument.


கோட்டுவாத்தியம்

[கோடு + வாச்சியம்.]

**கோட்டுவாய்** *kōṭṭu-vāy*, பெ.(n.) 1. கோடை வாய்; dribble. *"முகத்தொழுகு கோட்டு வாயு நெடுமூச்சுங் கண்டு" (இராமநா.சுந்தர.4).* 2. கொட்டாவி (இ.வ.);

yawning. 3. வாயிலிருந்து வழிந்த உமிழ்நீர் காய்ந்து உண்டாக்கிய கோடு; saliva trickling from ones mouth, dribble. *'கோட்டுவாயைக்கூடத் துடைக்காமல் வெளியே கிளம்பிவிட்டாயா?'* (உ.வ.).

ம. கோட்டுவா(ய்).

*[கோட்டு + வாய்.]*

**கோட்டுவாய்சலம்** *kōṭṭu-vāy-šalam,* பெ.(n.) வாய் ஒழுக்கு நீர்; dribbled saliva (சா.அக).

*[கோடு + வாய் + சலம்.]*

**கோட்டுவாய்த்திருக்கை** *kōṭṭuvāy-t-tirukkai,* பெ.(n.) திருக்கை மீன் வகைகளிலொன்று; a kind of fish.

*[கோட்டுவாய் + திருக்கை.]*

**கோட்டுவாய்வடிதல்** *kōṭṭuvāy-vaḍidal,* தொ.பெ.(vbl.n.) வாயினின்று நீர் ஒழுகல்; the flowing of saliva as that founded at the corners of the mouth during sleep in a patient suffering from phlegmatic fever (சா.அக).

*[கோட்டுவாய் + வடி-.]*

**கோட்டுவான்** *kōṭṭuvāṉ,* பெ.(n.) 1. கோட்டான்; rock horned owl. 2. ஒருவகை நீர்ப்பறவை (யாழ்.அக.); an aquatic bird.

*[கோடு → கோட்டு + ஆன். (வகர உடம்படுமெய் இடையில் மிக்கது).]*

**கோட்டுறல்** *kōṭṭural,* பெ.(n.) 1. வளைகை; bending. 2. எழுதுகை; writing.

*[கோடு + உறல் – கோட்டுறல்.]*

**கோட்டுறுகன்னி** *kōṭṭuru-kaṉṉi,* பெ .(n.) கோவை; Indian caper (சா.அக.).

*[கோட்டு + உறு + கன்னி.]*

**கோட்டூர்** *kōṭṭūr,* பெ.(n.) 1. நாகை மாவட்டம் திருத்துறைப்பூண்டியின் அருகில் அமைந்த ஓர் ஊர்; a village near *Tirutturaippūṇdi.* 2. சென்னைக்கருகிலுள்ள ஊர்; a village near Chennai.

*[கோடு → கோட்டு + ஊர் – கோட்டூர் : ஏரியூர்.]*

கோடு = ஏரிக்கரை, கரையுயர்த்தப்பட்ட ஏரி. கோடு என்பது ஏரியைக் குறித்த சொல்லாதலின் ஏரியையடுத்திருக்கும் ஊர், கோடு + ஊர் – கோட்டூர் எனப்பெயர் பெற்றது.

**கோட்டூர்தி** *kōṭṭūrdi,* பெ.(n.) யானை மருப்பினாற் செய்த பல்லக்கு; palanquin made of elephant's tusks. *"தேவிய ரேறிய பெருங்கோட் டூர்தி" (பெருங்.உஞ்சைக்.38:180).*

*[கோட்டு + ஊர்தி]*

**கோட்டூர்நாடு** *kōṭṭūr-nāḍu,* பெ.(n.) சென்னை மாநகரில் கோட்டூரைச் சுற்றியுள்ள பண்டைய பகுதி; old habitations around the *kōṭṭūr* village of Chennai. *"ஐயங்கொண்ட சோழ மண்டலத்து புலியூர்க் கோட்டமான குலோத்துங்க சோழவளநாட்டு கோட்டூர் நாட்டுத் திருவான்மியூரில்" (செ.மா.கல். 1967–125, 6) (கி.பி.13 ஆம் நூற்றாண்டு).*

*[கோடு + ஊர் – கோட்டூர் + நாடு. கோடு : ஏரிக்கரை, ஏரி. கோட்டூர் : ஏரியூர்.]*

**கோட்டெங்கு** *kōṭṭeṅgu,* பெ.(n.) குலைகளை யுடைய தெங்கு; coconut tree bearing bunches of coconuts. *"கோட்டெங்கிற் குலைவாழை" (பட்டினப்.16).*

*[கோள் + தெங்கு.]*

**கோட்டேரி** *kōṭṭēri,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Kadalūr* Dt.

*[கோடு →கோட்டு + ஏரி.]*

**கோட்டை**[1] *kōṭṭai,* பெ.(n.) வட்டமான மதிலரண் (சூடா.); castle, fort, stronghold. *"தங்கிவர் பெலக்கிற்கோட்டை கொத்தளமுஞ் சதுரிலுப் பரிகையாசாரம்" (சாதகசிந்.692).* கோட்டையில் பெண் பிறந்தாலும் போட்ட புள்ளி தட்டாது (பழ).

ம. கோட்ட; க. கோடெ (மண்சுவர், சுவர்), கோட்ட, கோட் (நகரம், கோட்டை); தெ. குடி, கோட, கோமு, கோட்டார (அரணுள்ள நகரம்); து., குட., பட. கோடெ; கொலா. கொடா (சுவர்).

**Indon.** koṭa; **Ar.** hājiz; **Spain.** castalla; **Argentina.** castel-ar; **Itali.** castel di leva; **Mexico.** castano-s; **Chile.** castilla; **Eng.** castle acre; **Ireland.** castle har; **Scottland.**castle hay;**Wales.** castle caer-einion. **Pkt.** kuḍḍa.**Mal.**kōta.

*[கோ (உயரம்) → கோடு → கோட்டை.]*

கோ = உயரம். கோடு = உயரமானது, மதிற்சுவர், பக்கச்சுவர், மலைமுகடு. கோட்டை = உயர்ந்த மதிற்சுவர்களைக் கொண்ட பாதுகாப்பு அரண், பகைவர்களாலும், விலங்குகளாலும், படையெடுப்பு களாலும் எவ்வித தீங்கும் நேராமல் இருப்பதற்காகப் பழங்கால அரசர்கள் அரண்மனையைச் சுற்றிலும் மிக வலுவான கோட்டையை அமைத்துக் கொண்டார்கள். நகரத்தைச் சுற்றிலும்கூட கோட்டை அமைத்துக் கொள்வது உண்டு. கோட்டை வேளாளர் என்னும் அரச வேளாளர் தம் குடியிருப்புகளைச் சுற்றிலும் கோட்டை

கட்டிக் கொள்வார்கள். இதனால் தமிழர்களின் நாகரிகத்தைக் கோட்டைநாகரிகம் என்பர். மண்கோட்டைகள், செங்கற்கோட்டைகள், கற்கோட்டைகள் ஆகியவை செயற்கையாக அமைக்கப்படும் கோட்டைகளாகும். மலை மீது அமைக்கப்படும் கோட்டை மலைக்கோட்டை எனப்படும். கோட்டையைச் சுற்றி அகழியும், அகழியைச் சுற்றி மிளை என்னும் காவற்காடுகளும் அமைக்கப்படுவது தமிழர்களின் கோட்டை நாகரிகத்தின் சிறப்பியல்புகளாகும். தமிழர்களின் கோட்டை கட்டும் நாகரிகம் வட இந்தியாவிலும் பல உலக நாகரிகங்களிலும் பரவியிருப்பதை, கோட்டை என்னும் சொல்லே பல வடிவில் திரிந்து பற்பல மொழிகளிலும் ஊடாடியிருப்பதைக் கொண்டு மெய்ப்பிக்கின்றனர். தமிழர்களின் கோட்டை நாகரிகமே பிற நாட்டாரின் படையெடுப்புகளிலிருந்து தமிழகத்தைக் காத்திருக்கிறது என்று வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள். கோயில் கட்டும் நாகரிகம் வளர்ந்த பிறகு கோட்டை கட்டும் நாகரிகஞ் மறையத் தொடங்கியது என்று கூறுகின்றனர்.

**கோட்டை**[2] *kōṭṭai*, பெ.(n.) 1. 21 மரக்கால் கொண்ட ஒரு முகத்தலளவை (G.Tn.D.I.238); measure of capacity = 21 *marakkāl* . 2. ஒரு நில அளவு (I.M.P.Tn.278) ; a land measure. 3. வட்டமான நெற்கூடு; a straw-covering with paddy stored in. *"உலவாக்கோட்டை" (திருவாலவா.50: 13).* 4. வைக்கோற் போர்; stack of straw or hay. *"வாரிக் களத்தடிக்கும் வந்துபின்பு கோட்டை புகும்" (தனிப்பா.I. 4:3).* 5. நெல்; paddy. *"அன்பனுக்குலவாத கோட்டை யளித்தவாறு கிளத்துவாம்" (திருவிளை.உலவாக்கோ.1).* 6. புளி, இலை முதலியவற்றின் கட்டு; bundle, as of tamarind, plantain leaves etc. *இலைக்கோட்டை.* 7. ஏராளம்; plenty.

**ம., தெ., க., து., வ.** கோட்ட.

*[கோட்டம் → கோட்டை.]*

**கோட்டை**[3] *kōṭṭai*, பெ.(n.) 1. இஞ்சி; ginger plant *"சாலவிருட் சோதக மூலந்தந்த சடநாரங் கோட்டை" (தைலவ. தைல.85).* 2. காடு (பிங்.); jungle. 3. பரிவேடம் ; halo. *"சந்திரனோர் கோட்டை கட்டிக் கொண்டிருந்த கோலமென்ன" (கொண்டல் விடு.72).* 4. பூட்டின் ஒருறுப்பு (இ.வ.); ward of a lock. 5. வீட்டின் உள்ளிடம் (பிங்.); interior of a house. 6. கவை; the fork. *[கோடு = வளைவு. கோடு → கோட்டை]*

**கோட்டைஏர்** *kōṭṭai-ēr*, பெ.(n.) உழுவதற்கு முன்பும் பின்பும் கலப்பையைத் தலைமாற்றிக் கொண்டு செல்கை; to carry the plough on the shoulder upside down before and after ploughing to field.

*[கோட்டை + ஏர்.]*

**கோட்டைக்கடன்** *kōṭṭai-k-kaḍaṉ*, பெ.(n.) அறுப்புக் காலத்தில் நெற்கொடுத்துத் தீர்ப்பதாகச் சொல்லி வாங்குஞ் சிறுகடன் (இ.வ.); short loan of money returnable in kind after harvest.

*[கோட்டை[2] + கடன்.]*

**கோட்டைக்காடு** *kōṭṭai-k-kāḍu*, பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanjipuram Dt.

*[கோட்டை[1] + காடு.]*

**கோட்டைக்கிழங்கு** *kōṭṭai-k-kiḻaṅgu*, பெ.(n.) வாழைக் கிழங்கு; plantain root (சா.அக.).

**மறுவ.** தாயைக் கொல்லி.

*[கோட்டை + கிழங்கு.]*

**கோட்டைக்குழி** *kōṭṭai-k-kuḻi*, பெ.(n.) கோட்டையைச்சுற்றி அமைக்கப்படும் பள்ளம்; a moat, trench.

**மறுவ.** அகழி.

**ம.** கோட்டக்குழி.

*[கோட்டை + குழி.]*

**கோட்டைகட்டு**[1]**-தல்** *kōṭṭai-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. மதிலரண் எடுத்தல்; to construct a fort. 2. பெரும் பொருள் திரட்டுதல்; to accumulate a huge fortune. 3. பரிவேடம் கொள்ளுதல்; to form a halo, as the moon.

**ம.** கோட்ட கெட்டுக

*[கோட்டை + கட்டு-.]*

**கோட்டைகட்டு**[2]**-தல்** *kōṭṭai-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) நெல் மணிகளைக் கோட்டையாகக் கட்டி வைத்தல் (இ.வ.); to store paddy-seeds in bundles.

*[கோட்டை + கட்டு-.]*

**கோட்டைகட்டு**[3]**-தல்** *kōṭṭai-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) கோலி விளையாடுதல்; to play with glass marbles.

*[கோட்டை + கட்டு.]*

குறிப்பிட்ட தொலைவிலிருந்து ஒரு கோடிட்டு, அக் கோட்டினின்று பக்கக் கோடுகளும் இட்டு இதற்கிடையில் கோலிக் குண்டுகளை இடுதல். எவரது குண்டு அந்தக் கோட்டின் அருகில் நிற்கிறதோ அவர் வெற்றி பெற்றதாகக் கருதி விளையாடும் விளையாட்டு.

**கோட்டைகட்டு**[4] *kōṭṭai-kaṭṭu*, பெ. (n.). படைஅணி வகுப்பினொன்று; a kind of parade.

*[கோட்டை + கட்டு.]*

**கோட்டைகட்டு[5]-தல்** *kōṭṭai-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. மனத்தில் அளவு கடந்த ஆசைகளை வளர்த்துக் கொள்ளுதல், மனக்கோட்டை கட்டுதல்; to build castles in the air, to have vain imagines. *எப்படி யெல்லாமோ வாழவேண்டு மென்று கோட்டை கட்டியிருந்தேன்.* 2. பொய்க் கதை கட்டுதல்; to invent a fictitious story.

ம. கோட்டகெட்டுக.

*[கோட்டை + கட்டு-.]*

**கோட்டைச்சுவர்** *kōṭṭai-c-cuvar*, பெ.(n.) அரண்மனைச் சுவர்; fortress, castle.

*[கோட்டை + சுவர்.]*

**கோட்டைத்தணக்கு** *kōṭṭai-t-taṇakku*, பெ.(n.) மரவகைகளு ளொன்று; a kind of tree.

*[கோட்டை +தணக்கு.]*

**கோட்டைப்படி** *kōṭṭai-p-paḍi*, பெ. (n.) கோட்டை வாயில்; gate of a fort.

ம. கோட்டப்படி.

*[கோட்டை + படி.]*

**கோட்டைப்பணம்** *kōṭṭai-p-paṇam*, பெ. (n.) கோட்டையைப் பழுது பார்க்க விதிக்கும் வரி; a tax for the repair building of forts.

ம. கோட்டப்பணம்.

*[கோட்டை +பணம்.]*

**கோட்டைப்பப்பளி** *kōṭṭai-p-pap-paḷi*, பெ.(n.) புடைவை வகை (இ.வ.); a kind of saree.

*[கோட்டை + (பூப்புள்ளி) பப்பளி.]*

**கோட்டைப்பவுன்** *kōṭṭai-p-pavuṉ*, பெ.(n.) பொன் நாணய வகை; gold sovereign with the royal arms impressed on the reverse, dist. fr. *kudiraipavuṉ*.

*[கோட்டை + பவுன்.]*

**கோட்டைப்பூண்டி** *kōṭṭai-p-pūṇḍi*, பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[கோட்டை +பூண்டி.]*

**கோட்டைப்பொறி** *kōṭṭai-p-poṟi*, பெ.(n.) கோட்டை யில் அமைக்கப்படும் பொறி; a machine erected in the fortress.

*[கோட்டை + பொறி.]*

**கோட்டைப்போர்** *kōṭṭai-p-pōr*, பெ.(n.) வைக்கோற் போர் (யாழ்.அக.); hay-stack.

*[கோட்டை + போர்.]*

**கோட்டைபிடி-த்தல்** *kōṭṭai-piḍi-*, 4 செ.கு.வி. (v.i.) அரிய செயலைச் செய்து முடித்தல்; to accomplish a great or arduous task, usually in contempt.

*[கோட்டை + பிடி.]*

**கோட்டைமதில்** *kōṭṭai-madil*, பெ. (n.) வலிய (அரண்)மனையைச் சுற்றியமையும் சுவர்; compound wall of a palace.

ம. கோட்டமதில்.

*[கோட்டை + மதில்]*

**கோட்டைமேடு** *kōṭṭai-mēḍu*, பெ.(n.) 1. அகழிக்குப் புறம்பேயுள்ள மண்மேடு (கட்டட. நாமா.7); glacis. 2. கொள்ளிடம் ஆறு கடலுடன் கலக்குமிடத்தில் ஏற்பட்ட தீவினில் கட்டப்பட்ட கோட்டையைச் சுற்றியுள்ள மேடு; the mound around the fort constructed in an Island formed by the lagoon of *Koḷḷiḍam*.

*[கோட்டை + மேடு.]*

கொள்ளிடம் ஆறு கடலில் கலக்குமிடத்தில் உருவான தீவில் பதினேழாம் நூற்றாண்டில் ஒரு கோட்டை கட்டப்பட்டது. இதனைத் தீவுக் கோட்டை என்று அழைத்தனர். அதைச் சுற்றி அகழியும் அமைக்கப்பட்டு முதலைகள் வளர்க்கப்பட்டன. இக் கோட்டையை ஆங்கிலேயர்கள் 1742-ல் கைப்பற்றினர். கடலரிப்பால் கோட்டை அழிந்துபட்டது. தற்போது அக் கோட்டை இருந்த மேடுமட்டுமே தெரிவதால் கோட்டைமேடு என வழங்கப்படுகிறது.

**கோட்டையடி** *kōṭṭai-y-aḍi-*, பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanniyākumari Dt.

*[கோட்டை + அடி.]*

**கோட்டையடுப்பு** *kōṭṭai-y-aḍuppu*, பெ.(n.) காடியடுப்பு (உ.வ.) ; oven-trench.

*[கோட்டு →கோட்டை + அடுப்பு.]*

**கோட்டையம்மன்** *kōṭṭai-y-ammaṉ*, பெ. (n.) கன்னியாகுமரிக் கோயிலில் அமைந்த தெய்வம்; one of the deities installed at the temple in Kanniyākumari.

ம. கோட்டயம்மன்.

*[கோட்டை + அம்மன்.]*

**கோட்டையாண்டார்** *kōṭṭai-y-āṇḍār,* பெ.(n.) கள்ளர்குடிப் பட்டப்பெயர்களுள் ஒன்று (கள்ளர் சரித்.பக்.98); a caste title of Kallars.

*[கோட்டை + ஆண்டார்.]*

**கோட்டைவடம்** *kōṭṭai-vaḍam,* பெ.(n.) கவலை (கமலை)யைப் பயன்படுத்தாத நேரங்களில் கோதாயம் போட்ட நிலையில் வடத்தைச் சுற்றி வைத்தல்; keeping the rope of 'watch-lift' in circular posture when it is in not use.

*[கோட்டை + வடம்.]*

**கோட்டைவாயில்** *kōṭṭai-vāyil,* பெ.(n.) கோட்டைக்குச் செல்லும் வாயில் ; entrance of a fort.

**மறுவ.** கோட்டைபடி.

**ம.** கோட்டவாதில்.

*[கோட்டை + வாயில்.]*

**கோட்டைவிடு-தல்** *kōṭṭai-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) தவற விடுதல்; to let slip away. பணத்தை இப்படிக் கோட்டை விட்டு விட்டாயே (உ.வ.).

*[கோட்டை + விடு.]*

**கோட்டைவிதைப்பாடு** *kōṭṭai-vidai-p-pāḍu,* பெ.(n.) ஒரு கோட்டை விதை விதைக்கக் கூடிய நிலவளவு (G. Tn. D. I, 238); land measure about 1.62 acres = the extent of land which requires one *kōṭṭai* of seed for sowing.

**மறுவ.** கோட்டைவிரைப்பாடு.

*[கோட்டை + விதைப்பாடு.]*

**கோட்டைவிரைப்பாடு** *kōṭṭai-virai-p-pāḍu,* பெ.(n.) ***கோட்டைவிதைப்பாடு*** பார்க்க; see *kōṭṭai vidai-p-pāḍu.*

*[கோட்டை + விரைப்பாடு.]*

**கோட்டைவெளி** *kōṭṭai-veḷi,* பெ.(n.) கோட்டைக்கு வெளியிலுள்ள இடம் (G.E.M.) ; esplanade.

*[கோட்டை + வெளி.]*

**கோட்டைவேளாளர்** *kōṭṭai-vēḷāḷar,* பெ.(n.) தூத்துக்குடி மாவட்டம் திருவைகுண்டத்தில் கோட்டைக்குள் வாழ்ந்துவரும் வேளாள வகையினர்; a sect of *Vēḷāḷas* living in a fort at *Srivaikuṇḍam* in *Tuttukuḍi* Dt.

*[கோட்டை + வேளாளர்.]*

**கோட்படு¹-த்தல்** *kōṭpaḍu-,*18 செ.குன்றாவி. (v.t.) கோளாறடையச் செய்தல்; to cause derangement or disorder in the system (சா.அக.).

*[குள் (வளைவு) → கோள் + படு.]*

**கோட்படு²-தல்** *kōṭpaḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. பிடிக்கப்படுதல்; to be captured. *"புலிதானே புறத்ததாகக் குட்டி கோட்படா தென்ன" (கம்பரா.சூர்ப்ப.102).* 2. அறியப்படுதல்; to be realised. *"ஞானத்தாலுங் கோட்படாப் பதமே" (கம்பரா.அனுமப்.36).* 3. வலிமை கொள்ளுதல்; become powerful. *"பனிமதக் குவடு கோட்பட் டெழுந்துறப் பாய்ந்த வாற்றால்" (இரகு. திக்குவி.225).*

*[கோள் + படு → கோட்படு.]*

**கோட்படுபதம்** *kōṭ-paḍu-padam,* பெ.(n.) 1. மாட்டுக் குளம்பு (யாழ்.அக.); hoof. 2. குளம்பின் சுவடு; hoof mark.

*[கோட்படுதல் = வளைதல். கோட்படு + (பாதம்) பதம்.]*

**கோட்பதம்** *kōṭpadam,* பெ.(n.) ***கோட்படுபதம்*** பார்க்க ; see *kōṭ-paḍu-padam.*

*[கோட்படுபதம் → கோட்டுபதம்.]*

**கோட்பலவு** *kōṭ-palavu,* பெ.(n.) குலைகளை யுடைய பலாமரம்; jack tree having bunches of jack fruit.

*[கோள் + பலவு.]*

**கோட்பறை** *kōṭ-paṟai,* பெ.(n.) செய்திகளை நகரத்தார்க்குத் தெரிவிக்கும் பறை; proclamation-drum. *"கொள்ளென் குரலொடு **கோட்பறை** கொளீஇ" (பெருங்.வத்தவ.5:62).*

*[கோள் + பறை.]*

**கோட்பாடு¹** *kōṭ-pāḍu,* பெ.(n.) 1. கொள்கை; doctrines. 2. நடத்தை (சிலப்பதி.16, அரும்.) ; conduct. 3. கடைப்பிடிப்பு; adherence, adhesion. 4. நிலைமை; state, condition. 5. கொண்டிருக்கும் தன்மை; state of having.

*[கொள் → கோள் + பாடு →கோட்பாடு.]*

*ஒ.நோ. ஒருமைப்பாடு, பண்பாடு.*

**கோட்பாடு²** *kōṭ-pāḍu,* பெ.(n.) கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு நிறுவப்படும் கூற்று; tenet, conclusion, thesis.

*[கொள் → கோள் + பாடு.]*

**கோட்பு** *kōṭpu,* பெ.(n.) 1. கொள்ளுகை (யாழ்.அக.); taking. 2. வலிமை; strength. *"விதியின் கோட்பால் விடினன்" (கம்பரா.உருக்காட்.81).*

*[கொள் → கோள் + பு. ('பு' சொல்லாக்க ஈறு).]*

**கோட்புகு-தல்** *kōṭ-pugu-,* 21 செ.கு.வி.(v.i.) மரம் முதலியன பயன் கொள்ளும் பருவத்ததாதல்; to mature, as trees. *'கோட்புகாத கன்னிக்கமுகு' (சீவக.169, உரை).*

*[கொள் → கோள் + புகு-.]*

**கோட்புலி** *kōṭ-puli,* பெ.(n.) கொண்டதை விடாத புலி; the tiger which will not let go what it has caught.

*[கொள் → கோள் + புலி.]*

**கோட்புலி நாயனார்** *kōṭ-puli-nāyaṉār,* பெ.(n.) நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவர் (பெரியபு.); a canonized Šaiva Šaint, one of 63.

*[கோள் + புலி + நாயன் + ஆர். கொண்டதை விடாதபுலி → கோட்புலி.]*

**கோடக்ககம்** *kōḍakkagam,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Kaṉyākumari* Dt.

*[கோடன் + அக்ககம் (அக்கசாலை).]*

**கோடக்கன்** *kōḍakkaṉ,* பெ.(n.) கொட்டைப்பாக்கு; areca-nut (சா.அக.).

*[கோடு + (அடைக்காய்) அடக்கன் → கோடடக்கன் → கோடக்கன் (கொ.வ.).]*

**கோடக்குடி** *kōḍakkuḍi,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Rāmanādhapuram* Dt.

*[கோடன் + குடி.]*

**கோடக்குத்துவா** *kōḍa-k-kuttuvā,* பெ.(n.) 1. கடல் மீன்வகை; a herring, greenish, Pellona indica. 2. குத்துவா மீன்வகை; a herring, golden, glossed with purple, Pellona brachysoma.

*[கோடு + அ + குத்துவாய். 'அ' ஆறன்உருபு.]*

**கோடகசாலை** *kōḍagaśālai,* பெ.(n.) ஒருவகைப் பூடு; a very small plant (பதார்த்த.252).

**ம.** கோடாசாரி.

*[கோடம் → கோடகம் + சாலை.]*

**கோடகபாசியம்** *kōḍaga-pāśiyam,* பெ. (n.). வேம்பு; neem tree (சா.அக.).

*[கோடம் → கோடகம் + பாசியம்.]*

**கோடகம்**[1] *kōḍagam,* பெ.(n.) 1. முடியுறுப்பு ஐந்தனுள் ஒன்று (திவா.); ornamental curves of a crown, one of five *muḍi-y-uruppu.* 2. கோபுரமாகச் (சிகரமாகச்) செய்த முடிவகை; a kind of tapering crown. *"கோடக மணிந்த கோல முடியினாய்" (சீவக.2989).* 3. பல தெருக் கூடுமிடம் (பிங்.); junction where several streets meet crossing. 4. குண்டிகை (வின்.) ; ewer.

**ம.** கோடகம்.

**Skt.** kōtaka (curve, bend).

*[கோடு + அகம்.]*

**கோடகம்**[2] *kōḍagam,* பெ.(n.) 1. குதிரை; horse. *"பச்சைக் கோடகக் காற்றை" (கல்லா.17:48).* 2. ***இரலை*** (அசுவதி) பார்க்க (சங்.அக.); the first star.

**Skt.** ghōta; **Russ.** koni; **Mal.** kuda.

*[கோடு + அகம்.]*

**கோடகம்**[3] *kōḍagam,* பெ.(n.) புதுமை (பிங்.); newness, novelty.

**ம.** கோடகம்.

*[குடு → கொடு → கோடு (உயரம், மேன்மை) → கோடகம்.]*

**கோடகம்**[4] *kōḍagam,* பெ.(n.) 1. சுக்கு; dry ginger. 2. செங்கருங்காலி; black catechu. 3. கோழிக்கீரை; cock's greens. 4. இலந்தை போன்ற கொடி; a creeping plant resembling jujube (சா.அக.). 5. பீர்க்கு (நாநார்த்த); spurge gourd.

**Skt.** ghōṭaka.

*[குள் (பள்ளம், குழி, ஒடுக்கு) → குடு → கோடு → கோடகம்.]*

**கோடகி** *kōḍagi,* பெ.(n.) நீர்மேல் நெருப்புச்செடி; water - fire plant.

*[கோடங்கம் → கோடகி.]*

*இது இசிவு போன்ற நோய்களைப் போக்கும் (சா.அக.).*

**கோடங்கம்** *kōḍaṅgam,* பெ.(n.) உடுக்கை மரம் அல்லது கருங்காலி; black wood-acacia catechu (சா.அக.).

**மறுவ.** கோடங்கி.

*[கோடு + அங்கம்.]*

**கோடங்கி** *kōḍaṅgi,* பெ.(n.) 1. உடுக்கை (தஞ்சை.); a small hand drum. 2. உடுக்கடித்துக் குறி சொல்வோன் (இ.வ.) ; soothsayer who uses the *uḍukku* drum. 3. ஒரு மரம் ; a tree.



கோடாங்கி

ம.,க. கோடங்கி; தெ. கோணங்கி; து. கோடங்கி, கோடங்யெ.

*[கொடு → கோடு → கோடங்கி.]*

கோடங்க மரத்தால் செய்த உடுக்கை அதனை யடிப்பவனையும் குறித்தது.

**கோடங்கி பார்-த்தல்** *kōḍaṅgi-pār-,* 4 செ.கு.வி. (v.i.) கோடங்கியிடம் குறி கேட்டல் (வின்.); to consult a soothsayer.

*[கோடங்கி + பார்.]*

**கோடங்கிழங்கு** *kōḍaṅ-kiḻaṅgu,* பெ.(n.) சிற்றரத்தை; lesser galangal.

*[கோடு = வளைதல். கோடு + அம் – கோடம் + கிழங்கு.]*

**கோடங்குடி** *kōḍaṅ-kuḍi,* பெ.(n.) நாகப்பட்டி னம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Nāgappaṭṭiṉam* Dt.

*[கோடல் + குடி – கோடல்குடி → கோடங்குடி.]*

**கோடணை**[1] *kōḍaṇai,* பெ.(n.) 1. சங்கின் ஒலி (திவா.); sound. 2. முழக்கம்; loud noise. *"கோடணை போக்கி" (பெருங்.உஞ்சைக்.49:85).* 3. யாழ் மீட்டல்; playing on the lute. *"குழலவன் கோடணை யறைவாம்" (சீவக.603).* 4. இசைக் கருவி; musical instrument. *"பாடிமிழ் பனித்துறைக் கோடணை யரவமும்" (பெருங்.உஞ்சைக்.41:3).* 5. ஒப்பனை (அலங்காரம்) (மணிமே.5: 94,அரும்.); decoration.

*[த. கோடணை > skt. gōshana.]*

*[கோடு + அணை. கோடு = சங்கு.]*

*சங்கின் முழக்கம் கோடணை. இது skt. gōshana என வடமொழியில் திரிந்தது.*

**கோடணை**[2] *kōḍaṇai,* பெ.(n.) கொடுமை (பிங்.); cruelty.

*[கொடு → கோடு → கோடணை.]*

**கோடணைபோக்கு-தல்** *kōḍaṇai-pōkku-,* 5 செ.கு.வி.(v.i.) பெரு முழக்கம் உண்டாகச் செய்தல்; to cause loud noise. *"கோடணை போக்கியதிர் குரன்முரசு" (பெருங்.உஞ்சைக்.49:85).*

*[கோடணை + போக்கு. **கோடணை**[1] பார்க்க; see kōḍaṇai[1].]*

**கோடதகம்** *kōḍadagam,* பெ.(n.) சுக்கு (சீவரட்.); dried ginger.

மறுவ. கோடதரம்.

*[குள் (குழி, ஒடுக்கு) → குடு → குடுது → கோடது → கோடதகம்.]*

**கோடதாரம்** *kōḍadāram,* பெ.(n.) சுக்குநாறிப் புல்; ginger grass-paniculm repens (சா.அக.).

*[கோடம் + தாரம்.]*

**கோடநோய்** *kōḍa-nōy,* பெ.(n.) தேமல்; a skin disease.

*[கோடு (சுண்ணாம்பு, வெண்மை) – கோட + நோய்.]*

**கோடபதி** *kōḍa-padi,* பெ.(n.) 1. **கோடவதி** பார்க்க; see *kōḍa-vati.* 2. உதயணனுடைய யாழ்; the lute belonging to *Udayaṇaṉ.* *"கூட்டமை வனப்பிற் கோட பதிக்குரல்" (பெருங்.வத்தவ.3:123).*

*[கோடு + பதி.]*

**கோடம்**[1] *kōḍam,* பெ.(n.) செங்கருங்காலி (மலை.); red catechu.

ம. கோடம்.

*[கோடு → கோடம்.]*

**கோடம்**[2] *kōḍam,* பெ.(n.) 1. பேரொலி; loud noise. *"இங்கய லெழுந்த கோடம் யாது" (பாரத. பதின்மூன்.155).* 2. வெண்கலம் (சங்.அக.); bell metal.

*[கோடு (சங்கு) → கோடம்.]*

**கோடம்**[3] *kōḍam,* பெ.(n.) எல்லை (சது.); border.

*[கோடி → கோடம்.]*

**கோடம்**[4] *kōḍam,* பெ.(n.) முடியுறுப்பு ஐந்தனுள் ஒன்று; ornamental curves of a crown, one of five *muḍi-y-uṟuppu.* "*கோடங்களிலும்......... கோத்த முத்து*" (*S.I.I.II.87*).

*[கோடகம்' → கோடம்⁴.]*

**கோடம்**[5] *kōḍam,* பெ.(n.) 1. சங்கு செய்நஞ்சு; a kind of white arsenic. 2. மாமரம்; mango tree. 3. வேம்பு; neem tree. 4. தவளை; frog. 5. கோசம்; penis. 6. நெல்லி; Indian gooseberry. 7. உடம் பெங்கும் தினவை உண்டாக்கும் ஒருவகைத் தேமல்; a disease of the skin attended with itching and exfoliation of the outer-skin (epidermis) (சா.அக.).

*[கோடு = சங்கு, மரக்கிளை. கோடு + அம் = கோடம்.]*

**கோடம்**[6] *kōḍam,* பெ.(n.) ஒரு கால் முடம் (நாநார்த்த.) ; person lame of one leg.

*[கொடு → கோடு → கோடம்.]*

**கோடமாதிதம்** *kōḍamādidam,* பெ.(n.) மதகரி வேம்பு; javanese cedar of sandal neem-Cedrela toona (சா.அக.).

*[கோடு → கோடம் + ஆதிதம்.]*

**கோடர்** *kōḍar,* பெ.(n.) மலை உச்சி (சிகரம்); peak. "*கோடரி னிண்மதிற் கோட்டாறு*" (*இறை.23, உதா.199*).

*[கோடு + அர்.]*

**கோடரகம்** *kōḍaragam,* பெ.(n.) சதுரக்கள்ளி; square spurge uphorbia an tiquorum (சா.அக).

*[கோடு = பக்கம். கோடு → கோடர் + அகம்.]*

**கோடரம்**[1] *kōḍaram,* பெ.(n.) 1. எட்டி; a poisonous and very bitter tree. 2. உணர்ச்சி; sensation. 3. அழிஞ்சில்; sage leaved alangium. 4. சிவதை; Indian rhubarb. 5. வெண்சிவதை; white variety of rhubarbe. 6. மயிர்ச் சாந்து; an unguent used to perfume the hair (சா.அக).

*[கோடு →கோடரம்.]*

**கோடரம்**[2] *kōḍaram,* பெ.(n.) 1. மரப்பொந்து; hollow of a tree. "*அத்தருவின் கோடரத்து*" (*பாரத. நாடு.10*). 2. மரக்கிளை (பிங்.); branch of a tree. 3. மரம் (அக.நி.) ; tree. 4. சோலை (பிங்.); grove. 5. தேரின் மொட்டு (பிங்.) ; pinnacle of a car.

**க.** கோடக.

*[கோடு → கோடரம்]*

**கோடரம்**[3] *kōḍaram,* பெ.(n.) 1. குதிரை; horse. 2. குரங்கு; monkey. "*கொய்தளிர் கோதும் வாழ்க்கைக் கோடரத் துருவு கொண்டு*" (*கம்பரா.அட்சகுமா.4.*).

*[கோடு → கோடரம்.]*

**கோடரவம்** *kōḍaravam,* பெ.(n.) துன்பம் (இ.வ.); distress. "*பணிந்தெழுவார் தம்மனத்திற் கோடரவந் தீர்க்குமவன்*" (*தேவா.821:2*).

*[கோடு + அரவம்.]*

**கோடரவாலி** *kōḍara-vāli,* பெ.(n.) வேப்பமரம்; margosa tree (சா.அக.).

*[கோடரம் + ஆலி.]*

**கோடரி**[1] *kōḍari,* பெ.(n.) மரத்தை பிளக்கும் கருவிவகைகளிளொன்று (பிங்.); a kind of axe, wood cutter.



கோடரி

**மறுவ.** கோடாலி.

**ம.** கோடாலி; **க.** கொடலி, கொட்லி; கொட்டலி; **தெ.** கொடரி, கொலா, கொல்லி; **மால.** கொதலி; பட. கொடலி; **கூய்.** கொட்டேலி; **Skt.** kuṭhāra

*[கோடு →கோடரி. கோடு = மரக்கிளை. அரிதல் = அறுத்தல், வெட்டுதல். கோடரி = மரக்கிளையை வெட்டும் அல்லது பிளக்குங்கருவி.]*

**கோடரி வகை:** 1. சிறுகாம்புக் கோடரி 2. பெருங்காம்புக் கோடரி 3. அங்குசக் கோடரி 4. உன்மடிப் பெருங்கோடரி 5. தலைக்கனக் கோடரி 6. உன்மடிக் கூர்க் கோடரி 7. இருதலைக் கோடரி.

**கோடரி**[2] *kōḍari,* பெ.(n.) கொற்றவை, காளி; Goddess *kāḷi.*

*[கோட்டை + மாரி – கோட்டைமாரி → கோடரி (மரூஉ).]*

# கோடரி வகைகள் (கோடாலி வகைகள்)


பெருங்காம்புக் கோடரி


உள்மடிப் பெருங்கோடரி


உள்மடிக் கூர்க் கோடரி


சிறுகாம்புக் கோடரி


இருதலைக் கோடரி


அங்குசக் கோடரி


தலைக் கனக் கோடரி

**கோடரிக்கரந்தை** *kōḍari-k-karandai,* பெ.(n.) ***கோடாலிக்கரந்தை*** பார்க்க; see *kōḍāli-k-karandai.*

*[கோடரி + கரந்தை.]*

**கோடரிக்காம்பு** *kōḍari-k-kāmbu,* பெ.(n.) 1. கோடரியின் மரப்பிடி; the wooden handle of an axe. 2. தன் குலத்தை அழிப்பவன்; one who destroys one's own family. இந்தப் பையன் அவன் குலத்தையே அழிக்கவந்த கோடரிக்காம்பு (உ.வ.).

**மறுவ:** கோடாலிக்காம்பு.

**ம.** கோடாலிக்காம்பு; **பட.** கொடலிகாவு.

*[கோடரி + காம்பு]*

**கோடரிக்கொண்டை** *kōḍari-k-koṇḍai,* பெ.(n.) காம்பு கழன்ற கோடரியை நினைவூட்டும் உருவம் கொண்ட கொண்டை; a knot of hair dressing resembling a axe without handle. கோடாலிக் கொண்டைக்காரி (நெல்லை.).

**மறுவ:** கோடாலி.

*[கோடரி + கொண்டை.]*

**கோடரோகம்** *kōḍarōgam,* பெ.(n.) ***கோடநோய்*** பார்க்க; *see kōḍanōy.*

*[கோடு + ரோகம்.]*

**கோடல்**[1] *kōḍal,* பெ.(n.) 1. கொள்ளுகை; taking. *"நானம் பகர்ந்திடக் கோடல் செய்வார்" (நைடத. நகரப்.31).* 2. பாடங்கேட்கை; taking lessons from a teacher. *"கோடன் மரபே கூறுங் காலை" (நன்.40).* 3. மனத்துக் கொள்ளுகை; considering. *"கொல்லு மாற்றல ருளரெனக் கோடலுங் கொண்டாய்" (கம்பரா.உயுத்.மந்திரப்.104).* 4. மருமகள்; daughter-in-law.

**தெ.** கோடாலு.

*[கொள் → கோடல்.]*

**கோடல்**[2] *kōḍal,* பெ.(n.) 1. வளைவு (உரி.நி.); curving. 2.முறிக்கை (திவா.); breaking.

**ம.** கோடல்.

*[கோடு → கோடல்.]*

**கோடல்**[3] *kōḍal,* பெ.(n.) 1. வெண்காந்தள்; white species of Malabar glory-lily. *"கோடன் முகையோடு" (பு.வெ.8:16).* 2. வெண்கிடை (பிங்.); sola pith.

*[கோடு (வெண்மை) → கோடல்]*

**கோடல்**[4] *kōḍal,* பெ.(n.) கொம்பு இல்லாத கொடி; a creeper without a branch.

*[கோடு + அல்]*

**கோடல்வாவி** *kōḍal-vāvi,* பெ.(n.) திண்டுக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Thiṇḍukkal* Dt.

*[கோடல் + வாவி.]*

**கோடலம்** *kōḍalam,* பெ.(n.) பிறைபோல் வளைந்த மாலைவகை; a kind of garland in the shape of the crescent moon.

*[கோடு → கோடலம்]*

**கோடலி** *kōḍali,* பெ.(n.) 1. இலந்தை; jujube. 2. காட்டுக்கொடி; wild creeper. 3. கோடாலி மரம்; axe tree. 4. தெருணை; Mysore plum (சா.அக).

*[குடலி → கூடலி → கோடலி.]*

**கோடவதி** *kōḍavadi,* பெ.(n.) வீணை (திவா.); lute.

*[கோடு → கோடவி → கோடவதி.]*

விரவுப்பெயர் போன்று வீணையைப் பெண்பாலாக்கிக் கூறிய கூற்று.

**கோடவி** *kōḍavi,* பெ.(n.) காளி (துர்க்கை) (யாழ்.அக.); Durga.

*[கொற்றவை → கோட்டவி → கோடவி.]*

**கோடற்பூசினி** *kōḍaṟ-pūšiṉi,* பெ.(n.) ***கோடைப் பூசனி*** பார்க்க; see *koḍai-p-pūšaṉi* (சா.அக).

*[கோடை + பூசனி – கோடற்பூசனி (கொ.வ.).]*

**கோடன்**[1] *kōḍaṉ,* பெ.(n.) குயக்கோடன் என்னும் குயவன் ஒருவனின் பெயர்; name of a potter.

*[கோடு → கோடன்.]*

தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் பேராசிரியர், மந்திரம் என்னும் சொல்லுக்குப் பொருள் கூறுங்கால் தமிழை இகழ்ந்த கோடன் என்னும் குயவன் நக்கீரரால் சவிக்கப்பட்டு இறந்தமையைச் சுட்டிக் காட்டுகிறார்.

முரணில் பொதியின் முதற் புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி – யரணியல்
ஆனந்த வேட்கையான் வேட்கோ குயக்கோடன்
ஆனந்தஞ் சேர்க சுவா.

**கோடன்**[2] *kōḍaṉ,* பெ.(n.) கால்நொண்டி; a lame man (சா.அக.).

*[கொடு → கோடு → கோடன்.]*

**கோடன்சம்பா** *kōḍaṉ-šambā*, பெ.(n.) வேனிற் காலத்தில் விதைக்கப் பெற்று ஐந்து மாதங்களிற் பயிராகும் சம்பாநெல் வகை (இ.வ.); *šambā* paddy sown in hot season and maturing in five months.

*[கோடை → கோடன் + சம்பா.]*

**கோடன்நாடு** *kōḍaṉ-nāḍu*, பெ.(n.) நீலகிரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Nilagiri Dt.

*[கோடன் + நாடு.]*

**கோடா** *kōḍā*, பெ.(n.) 1. சாராய வண்டல் (யாழ்ப்.); sediments of liquor. 2. பட்டைச் சாராயம்; arrack derived from bark. 3. அரக்குமண்டி; refuse of lac (சா.அக.).

*[கூடு → கோடு → கோடம் → கோடா (கொ.வ.).]*

**கோடாக்கிழங்கு** *kōḍā-k-kiḻaṅgu*, பெ.(n.) கோணக்கிழங்கு; a fragrant tuber.

*[கோடாணி + கிழங்கு - கோடாகிழங்கு.]*

**கோடாக்குளிகை** *kōḍā-k-kuḷigai*, பெ.(n.) சாராய வண்டலைக் கொண்டு செய்யும் மருந்து உருண்டை; a medicinal pill made of dregs of spirituos liquors as arrack as a chief ingredient.

*[கோடா + குளிகை.]*

**கோடாகோடி** *kōḍā-kōḍi*, பெ.(n.) 1. ***கோடானு கோடி*** பார்க்க; see *kōḍāṉu-kōḍi*. *"கொம்மை பெறுங் கோடா கோடி" (அருட்பா.i.நெஞ்சறி.85).* 2. அளவின்மை; infinite. 3. தாமரை; lotus.

**ம.** கோடாகோடி.

*[கோடி + கோடி - கோடிகோடி → கோடாகோடி.]*

**கோடாங்கல்** *kōḍāṅgal*, பெ.(n.) மலை உச்சிகளில் கூர்மையாகவுள்ள கற்கள்; stones of nail like projections on the summit of rocks; stones like a pyramid in shape (சா.அக.).

*[கோடு + (அம்) ஆம் + கல்.]*

**கோடாங்கி[1]** *kōḍāṅgi*, பெ.(n.)1. ***கோடங்கி*** பார்க்க; see *kōḍaṅgi*. 2. வரிக்கூத்து வகை; a masquerade dance.

**ம.,க.**கோடாங்கி; **தெ.** கோணங்கி; **து.** கோடங்கி, கோடங்கியெ.

*[கொடு → கோடு → கோடங்கி → கோடாங்கி.]*

**கோடாங்கி[2]** *kōḍāṅgi*, பெ.(n.) மகளிர் வரிப் புடைவை வகை (வின்.); women's striped sari.

**ம.** கோடாங்கி; **பட.** கோடிங்கெ (முரட்டுப் போர்வை).

*[கோடு + அங்கி - கோடங்கி → கோடாங்கி.]*

**கோடாங்கிநாயக்கன்பட்டி** *kōḍāṅgi-nāyakkaṉ-paṭṭi*, பெ.(n.) திண்டுக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Thiṇḍukkal* Dt.

*[கோடாங்கி + நாயக்கன் + பட்டி.]*

**கோடாங்கிபட்டி** *kōḍāṅgipaṭṭi*, பெ.(n.) திண்டுக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Thiṇḍukkal* Dt.

*[கோடாங்கி + பட்டி.]*

**கோடாங்கிபாளையம்** *kōḍāṅgi-pāḷaiyam*, பெ.(n.) கோவை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kovai Dt.

*[கோடாங்கி + பாளையம்.]*

**கோடாசரி** *kōḍāšāri*, பெ.(n.) கோடகசாலை என்னும் பூண்டு வகை; coromandel gendarussa.

**மறுவ.** கோடகசாலை, கோடாசுழி, கோடாசூரி.

**ம.** கோடாசாரி.

*[கோடகசாலை → கோடாசரி.]*

**கோடாசலம்** *kōḍāšalam*, பெ.(n.) வயிற்றுப் போக்கைக் கட்டும் மருந்துவகை (பதார்த்த.1215); a medicinal pill for arresting diarrhoea.

**மறுவ:** கோடாசலக் குளிகை, கோடாசுழி.

**ம.** கோடாசாரி.

**கோடாசுழி** *kōḍāšuḻi*, பெ.(n.) வயிற்றுப்போக்கு மருந்து; a dose of physic (சா.அக.).

*[குடல் → குடலம் → கோடலம் → கோடா + சுழி.]*

**கோடாசுழிமாத்திரை** *kōḍāšuḻi-māttirai*, பெ.(n.) ***கோடாசலக்குளிகை*** பார்க்க; see *kōḍāšala-k-kuḷigai*.

*[கோடாசுழி + மாத்திரை.]*

**கோடாசூரி** *kōḍāšūri*, பெ.(n.) கோடகசாலை; Coromandal gendarusa.

*[கோடகசாலை → கோடாசூரி.]*

**கோடாசொரிச் செய்நஞ்சு** *kōḍāšori-c-ceynañju*, பெ.(n.) வைப்பு நஞ்சுவகை (வின்.); a prepared arsenic.

**மறுவ.** கோடாசொரி.

*[கோடகசாலை → கோடகசொரி + செய்நஞ்சு.]*

**கோடாஞ்சி** *kōḍāñji,* பெ.(n.) நெடுநாரைப்பூடு; fragrant cherry nut meg (சா.அக.).

ம. கோடாஞ்சி.

*[கோடு → கோடாஞ்சி.]*

சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலி இச்சொல்லுக்குப் பெரிய மரவகை எனப்பொருள் குறித்துள்ளது.

**கோடாந்தூர்** *kōḍāndūr,* பெ.(n.) கரூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Karūr* Dt.

*[கோடன் + (அழுந்தூர்) ஆந்தூர்.]*

**கோடாந்தை** *kōḍāndai,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Rāmanāda puram* Dt.

*[கோடன் + ஆந்தை.]*

**கோடாநீர்** *kōḍānīr,* பெ.(n.) தடிப்பில்லாத நீர்; fluid not thick (சா.அக.).

*[கோடு → கோடா + நீர்.]*

**கோடாமணி** *kōḍāmaṇi,* பெ.(n.) மணிகள் போன்று தேரின் விளிம்புகளில் செதுக்கப்படும் உருவம்; a figure engraved on the edges of the chariot as a bead of coral.

*[கோடா + மணி.]*

**கோடாமை** *kōḍāmai,* பெ.(n.) 1. மனக்கோட்டம் கொள்ளாமை; absence of envy or dislike. 2. கோணாமை; poise. 3. திரியாமை; of stable mind. 4. சலியாமை; untirableness. 5. ஒருதலைக் கணில்லாமை; fair and neutral outlook. *"கோடாமை சான்றோர்க் கணி" (குறள்.118).*

*[கோடு + ஆ + மை. 'ஆ' எ.ம.இ.நிலை.]*

**கோடாய்** *kōḍāy,* பெ.(n.) செவிலித்தாய்; foster mother. *"கோடாய் மடந்தையை நாட" (திருக்கோ. 235, கொளு).*

*[கொள் → கோள் + தாய்.]*

**கோடாரி** *kōḍāri,* பெ.(n.) ***கோடரி*** பார்க்க; see *kōḍari* (சங்.அக.).

*[கோடரி → கோடாரி.]*

**கோடாரிக்காம்பு** *kōḍāri-k-kāmbu,* பெ.(n.) ***கோடரிக்காம்பு*** பார்க்க; see *kōḍari-k-kāmbu.*

ம. கோடாலிக்காம்பு, கோடாலிக்கை.

*[கோடு + அரி – கோடரி + காம்பு – கோடரிக்காம்பு → கோடாரிக்காம்பு]*

**கோடாரேந்தல்** *kōḍārēndal,* பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Rāmanāda puram* Dt.

*[கோடலம் → கோடாலம் + ஏந்தல்–கோடாலஏந்தல் → கோடாரேந்தல். ஏந்தல் = ஏரி.]*

**கோடாலம்** *kōḍālam,* பெ.(n.) பிறைபோல் வளைந்த மாலைவகை; crescent shaped necklace, as of pearls. *"குளிர்முத்தின் கோடாலமும்" (திவ். பெரியாழ். 3.3:1).*

*[கோடு → கோடாலம்.]*

**கோடாலி**[1] *kōḍāli,* பெ.(n.) ***கோடரி*** பார்க்க; see *kōḍari.*

மறுவ. கோடரி.

ம. கோடாலி; க. கொடலி, கொட்லி; தெ. கொட்டலி; கொலா. கொல்லி; மால. கொதலி; கூய். கொட்டேலி; பட. கொடலி.

*[கோடு + அரி – கோடரி → கோடாலி.]*

**கோடாலி**[2] *kōḍāli,* பெ.(n.) சுரக்கோடாலி; a pill (சா.அக.).

*[கோடரி → கோடாலி.]*

[இது அகத்திய வாகடத்திற் சொல்லியுள்ள ஒரு மருந்து. இது எல்லாவகைச் சுரத்தையும் போக்கும்.]

**கோடாலிக்கரந்தை** *kōḍāli-k-karandai,* பெ.(n.) ***கொட்டைக்கரந்தை*** பார்க்க; see *koṭṭai-k-karandai.*

*[கோடாலி + கரந்தை.]*

**கோடாலிக்காம்பு** *kōḍāli-k-kāmbu,* பெ.(n.) ***கோடரிக்காம்பு*** பார்க்க; see *kōḍari-k-kāmbu.* குலத்தைக் கெடுக்கவந்த கோடாலிக் காம்பே.

ம. கோடாலிக்காம்பு; பட. கொடலிகாவு.

*[கோடரிக்காம்பு → கோடாலிக்காம்பு.]*

**கோடாலிக்குடோரி** *kōḍāli-k-kuḍōri,* பெ.(n.) 1. இசிவு (சன்னி) முதலிய நோய்களைக் குணப்படுத்துவதற்குக் கீறியிடும் ஒரு மருந்துச் சரக்கு; a medicinal preparation applied to wounds in scarification as a cure for apoplexy. 2. இதள் மாற்றிய (இராச வாத) முறைப்படி மாழைகளை உருக்க வேண்டிப் பயன்படும் ஒரு மருந்து; in al-

chemy a chemical substance used for melting a metal (சா.அக.).

[கோடாலி + குடோரி : கீள் → கீறுறு (கீறு) → குடுறு → குடோரி]

**கோடாலிக்கொண்டை** *kōḍāli-k-koṇḍai*, பெ.(n.) ***கோடாலிமுடிச்சு*** பார்க்க; see *kōḍāli-muḍiccu.*


கோடாலிக்கொண்டை

[கோடாலி + கொண்டை.]

**கோடாலிமரம்** *kōḍāli-maram*, பெ.(n.) சரளமரம், அரக்க மரம்; potato plum of Mysore (சா.அக.).

[கோடரி → கோடாலி + மரம்.]

**கோடாலிமுடிச்சு** *kōḍāli-muḍiccu*, பெ.(n.) கூந்தலை அள்ளிச் சுருட்டிப் போட்டுக்கொள்ளும் முடிச்சு (தஞ்சை.); a casual way of knotting the hair.

மறுவ. கோடாலிக் கொண்டை.

[கோடரி → கோடாலி + முடிச்சு.]

**கோடாலைக்கல்** *kōḍālai-k-kal*, பெ.(n.) சூடாலைக்கல் என வழங்கும் ஒருவகை மருந்துச் சரக்கு ; kind of loadstone probably manganese, one of the 126 kinds of natural substances (சா.அக.).

[கோடாலை + கல்.]

**கோடாலைச்சக்கரம்** *kōḍālai-c-cakkaram*, பெ.(n.) ***கோடாலைக்கல்*** பார்க்க; see *kōḍālai-k-kal* (சா.அக.).

[கோடாலை + சக்கரம்.]

**கோடாவடி-த்தல்** *kōḍā-v-aḍi*, 4 செ.குன்றாவி. (v.t.) பட்டைச் சாராய வண்டலை நீரிலிட்டுக் கரைத்தல் (வின்.); to dissolve the dregs of an inferior kind of arrack in water (W.).

[கோடா + அடி.]

**கோடான்**[1] *kōḍāṉ*, பெ.(n.) சிவகங்கை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Šivagaṅgai Dt.

[கோடன் → கோடான்.]

**கோடான்**[2] *kōḍāṉ*, பெ.(n.) 1. புன்செய்ப் பொழியிலுள்ள ஒருவகைக் கிழங்குச் செடி; a kind of tuber plant. 2. கொத்துமல்லியில் தோன்றும் ஒருவகை நோய்; a kind of disease in coriander plant.

[கோடன் → கோடான்.]

**கோடான்குறிச்சி** *kōḍāṉ-kuṟicci*, பெ.(n.) சிவகங்கை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Šivagaṅgai Dt.

[கோடன் → கோடான் + குறிச்சி.]

**கோடானி** *kōḍāṉi*, பெ.(n.) நறுமணமிக்க வேர்; fragrant coray root (சா.அக.).

[கோடு → கோடானி.]

**கோடானுகோடி** *kōḍāṉu-kōḍi*, பெ.(n.) பலகோடி; immense number, as a hundred billions. *"கோடானு கோடி கொடுப்பினும்" (தமிழ்நா.40).*

ம. கோடானுகோடி; கோடார்கோடி.

[கோடி + ஆன + கோடி - கோடானகோடி → கோடானுகோடி.]

**கோடி**[1] *kōḍi*, பெ.(n.) 1. ஆடை; cloth (பிங்.). 2. புதிய ஆடை; newly purchased cloth. *"மந்திரக் கோடி யுடுத்து" (திவ். நாய்ச்.6:3).* 3. புதுமை (சூடா.); newness.

ம. கோடி. து. கோடி (சாயம் வெளுக்காத துணி).

[கோடு → கோடி. விளிம்பில் கரை (கோடு) கட்டிய புத்தாடை.]

**கோடி**[2] *kōḍi*, பெ.(n.) இளமை; youthful. அவளைக் கோடியில் பார்த்தேன் மிக அழகாக இருந்தாள் (கொங்.வ).

[குழ → குட → குடு → கொடு → கோடு → கோடி.]

**கோடி**[3] *kōḍi*, பெ.(n.) 1.வளைவு; bend. *"முளைத் திங்கட் கோடியென" (திருவாரூ. 134).* 2. முடிமாலை; garland worn on head.

[கோடு (வளைவு) → கோடி]

**கோடி**[4] *kōḍi*, பெ.(n.) 1. நூறு நூறாயிரம்; crore. *"நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன"*

*(திருவாச.3:4).* 2. எண்ணின் மிகுதி; large number. 3. தொகுதி; multitude, as of living beings. *"சீவகோடி" (கைவல். தத். 33).* 4. 64 அக்குரோணி கொண்ட பெரும்படை (பிங்.); a vast army consisting of 64 *akkurōṇi.* 5. இருபது; a score, as in counting precious stones, silks, etc. *கோடிப் பட்டின் (சீவக. 2331, உரை).* 6. வரிசை; row. *'ஆயுத கோடியிலும், ஆபரண கோடியிலும்' (ஈடு.).*

ம., க., தெ., பட., **கோண்.** கோடி, **து.** கோடி (கற்களையும் மரங்களையும் அளக்கும் ஓர் அளவு).

**கோடி**[5] *kōḍi,* பெ.(n.) 1. நுனி; tip, end. *"கூவலொன் றகழ்ந்தான் வில்லின் கோடியால்" (சேதுபு. இராமனரு. 95).* 2. கடலுட் செல்லுந்தரை முனை; capecalin. *கோடிக்கரை.* 3. மூலை;nook. 4. வீட்டின் புறக்கோடி (வின்.); backyard of a house. 5. விளிம்பு; edge, as of verandah; bead, as in carpentry. 6. படை (சேனை)யின் பிற்கூழை; rear of an army. *உரமுதற் கோடி யீறாயின" (குறள், 767, உரை).* 7. எல்லை; limit. *"அறிவின் கோடியார்" (கம்பரா. ஆறுசெல்.13).* 8. கலிங்கு; weir of a tank, outlet for the surplus water. *"ஏரிகோடி யோடுகிறது" (C.G.).* 9. குறிப்பு; slight hint. *கோடிகண்டால் விடுவாரோ (வின்.).* 10. சாத்திரச் சொற்போரில் மேன்மேற் கூறும் கருத்து; argument raised in a debate. 11. வயிரக் குணங்களுள் ஒன்று (சிலப். 74, 180, உரை.); a quality in diamond.

ம., க., தெ., து., பட., **கோண்.**கோடி.

*[கோள் → கோடு (வளைவு, விளிம்பு, நுனி, முகடு, உயர்வு, பெருக்கம், மிகுதி) → கோடி.]*

**கோடி**[6]**-த்தல்** *kōḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. அணிசெய்தல் (அலங்கரித்தல்); to adorn, decorate. *"கோடித் தன்ன கோடுசால் வையம்" (பெருங். இலாவாண. 8:185).* 2. அமைத்தல்; to make. "கடிமண்டபமுன் கோடிப்ப" (காஞ்சிப்பு. திருமண.4). 3. மனக் கோட்டை கட்டுதல்; to imagine, picture in mind. *"கண்ணாலங் கோடித்தது" (திவ். நாய்ச்.10:9).* 4. வேண்டுதல் (யாழ். அக.); to beseech, supplicate. 5. ஒலித்தல்; to sound.

*[கொள் → கோள் → கோடு → கோடி.]*

**கோடிக்கரை**[1] *kōḍi-k-karai,* பெ.(n.) நாகை மாவட்டம் திருமறைக்காட்டருகில் அமைந்த ஓர் ஊர்; a village situated near *Tirumaṟaikkāḍu* in *Nāgappaṭṭiṉam* Dt.

*[கோடி + கரை.]*

இதன் இலக்கியப் பெயர் தொன்முதுகுடி என்பதாகும். கோடியில் அமைந்ததாலும், கடல், ஏரி, ஆறு, குளம் இவற்றின் கரைகளில் அமைந்த ஊர்கள் போலக் கரை என்னும் பின்னொட்டு அடைவதாலும் இப்பெயர் வழங்கப்படுகிறது.

**கோடிக்கரை**[2] *kōḍi-k-karai,* பெ.(n.) தனுக்கோடி முதலிய தூய நீர்த்துறை; sacred sea-bathing ghats at *Kōḍikkari, Dhaṉuskōḍi,* etc.

*[கோடி + கரை.]*

**கோடிக்கரைச்செறிவு** *kōḍi-k-karai-c-ceṟivu,* பெ.(n.) குமரிமுனை புகையிலை; tobacco of Cape Comerin (சா.அக.).

*[கோடிக்கரை + செறிவு.]*

**கோடிக்கரையான்தோணி** *kōḍi-k-karaiyāṉ-tōṇi,* பெ.(n.) கோடிக்கரையிலுள்ள தோணி, அதாவது கள்ளத்தோணி; vessel at *kōḍi-k- karai.* Piratical vessel.

*[கோடிக்கரை + ஆன் + தோணி.]*

**கோடிக்கல்** *kōḍi-k-kal,* பெ.(n.) கட்டடத்தின் மூலைக்கல் (வின்.); corner stone.

ம. கோடிக்கல்.

*[கோடி + கல்.]*

**கோடிக்காரன்**[1] *kōḍi-k-kāraṉ,* பெ.(n.) கோயிற் றிருமேனிகள் ஊர்தியில் உலாவரும் போது தூக்க வருபவன்; one who carries temple idols on mounts.

**மறுவ.** திருவடித்தாங்கி.

*[கோடி + காரன். கோடுதல் = கொள்ளுதல், சுமத்தல்.]*

**கோடிக்காரன்**[2] *kōḍikāraṉ,* பெ.(n.) கொடுக்கல் வாங்கல் செய்யும் மார்வாரி வணிகன்; Marvari, money lender.

*[கோடி + காரன்.]*

**கோடிக்கிளை** *kōḍi-k-kiḷai,* பெ.(n.) நகுதாளியிலை; common cherry nutmeg (சா.அக.).

*[கோடி + கிளை.]*

**கோடிக்குத்தல்** *kōḍi-k-kuttal,* பெ.(n.) 1. தெருப் பாய்ச்சல்; situation of a house at the street-end, facing streetward, considered inauspicious. 2. தெருக்கோடி; corner of a street. 3. சிற்றூரின் கடைசிப்பகுதியில் அமைந்த வீடு; a house situated at the end of the small village.

*[கோடி + குத்தல்.]*

**கோடிகச்சு** *kōḍikaccu,* பெ.(n.) முகமதியரின் (இசுலாத்தின்) ஐந்து கடமைகளில் ஒன்றான மக்காவிற்குப் புனிதப் பயணம் (யாத்திரை) மேற்கொள்ளுதல்; Haj Pilgarimage. *"கோடிகச்சு செய்த பலனுமடைவா ராகவும்" (சேதுபதி மன்னர் செப்பேடுகள் எ.55-65, பக்.476).*

*[கோடி + கச்சு (ஹஜ் → கச்சு.).]*

**கோடிகம்**[1] *kōḍigam,* பெ.(n). 1. பூந்தட்டு; salver or tray for flowers. *"பூ நிறைசெய்த... கோடிகம்" (சீவக. 2707).* 2. குண்டிகை (பிங்.); ewer pot with a spout. 3. அணிகலச்செப்பு (பிங்.); jewel casket.

*[கோடி → கோடிகம்.]*

**கோடிகம்**[2] *kōḍigam,* பெ.(n.) 1. இந்திரகோபப் பூச்சி; lady's fly. 2. நுனி; tip. 3. மூலை; corner. 4. ஆடை; cloth. *"செங்கோடிகம்" (பெருங். உஞ்சைச். 57:43).* 5. சிலை; statue. 6. இளமை; youth.

*[கோடு → கோடி → கோடிகம்.]*

**கோடிகர்** *kōḍigar,* பெ.(n.) ஆடைநெய்வோர்; weaver. *"கோடிகர் வரைப்பினும்" (பெருங். இலாவாண. 8:67).*

*[கோடிகம் → கோடிகர்.]*

**கோடிகரி-த்தல்** *kōḍikari-,* 4 செ.கு.வி. (v.i.) தொகுத்துச் சொல்லுதல்; to sum up in order, systematize and summarise.

*[கோடி + கரி.]*

**கோடிகாட்டு-தல்** *kōḍi-kāṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) செய்தியைப் புரிந்துகொள்ளும்படியாகக் குறிப்புக் காட்டுதல்; to hint at. கோடிகாட்டினால் போதும் புரிந்துகொள்வேன் (உ.வ.).

*[கோடு → கோடி + காட்டு.]*

**கோடிகாண்பி-த்தல்** *kōḍi-kāṇbi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. குறிப்புக்காட்டுதல்; to hint at slightly. 2. சுருங்கச் சொல்லி விளங்கவைத்தல்; to make one understand by hinting.

*[கோடி + காண்பி.]*

**கோடிகாவன்** *kōḍi-kāvaṉ,* பெ.(n.) கோடிக்கரை கோவிலுக்கு நிலக்கொடை கொடுத்தவன்; donar of land to *kōḍikkarai* temple. *"திருக்கோடிக் காவாகிய கண்ணமங்கலத்து ஆத்திரையன் கிழவன் கோடிகாவன் மெழுக்குப்புறம் வைத்த நிலத்துக். கீழ்பாற் கெல்லை"* (S.I.I. XIII, 125-3 pg.64).

*[கோடி + காவன்.]*

**கோடிகோடாக்கினி** *kōḍi-kōḍākkiṉi,* பெ.(n.) பேரழிவு தரும் காட்டுத்தீ; great conflagration (சா.அக.).

*[கோடி + கோடாக்கினி.]*

**கோடிச்சிலை** *kōḍi-c-cilai,* பெ.(n.) 1. 120 தமிழ் மருத்துவ இயற்கைப் பொருள்களில் ஒன்றான மஞ்சட்கல்; the yellow stone. 2. புதிய சீலை; a new sari (சா.அக.).

*[கோடி + சிலை (எதிரொலிப்பது, கல்) – கோடிச்சிலை → கோடிச்சீலை.]*

**கோடிச்செல்வன்** *kōḍi-c-celvaṉ,* பெ.(n.) மிகப்பெருஞ் செல்வன், பணக்காரன்; fabulously wealthy man, multi-millionaire.

*[கோடி + செல்வன்.]*

**கோடிச்செல்வி** *kōḍi-c-celvi,* பெ.(n.) மிகப்பெரும் பணக்காரி; fabulously wealthy woman.

*[கோடி + செல்வி.]*

**கோடிசித்தி** *kōḍi-śitti,* பெ.(n.) சேர்ந்தாடு பாவை என்னும் மருந்து; an unknown drug (சா.அக.).

*[கோடு + சித்தி.]*

**கோடிசீமான்** *kōḍi-śīmāṉ,* பெ.(n.) பெருஞ் செல்வன்; multi-millionaire.

*[கோடி + சீமான்.]*

**கோடிஞ்சி** *kōḍiñji,* பெ.(n.) கோழி; fowl, cock or hen (சா.அக.).

*[கோழி → கோழிஞ்சி → கோடிஞ்சி (கொ.வ.).]*

**கோடிட்ட** *kōḍiṭṭa,* பெ.எ.(adj.) கோடுபோட்டு விடப்பட்ட; indicated by a line.

*[கோடு + இட்ட.]*

**கோடிட்டுக்காட்டு-தல்** *kōḍiṭṭu-k-kāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) வலியுறுத்திச் சுட்டிக்காட்டுதல்; to underline, under score.

*[கோடிட்டு + காட்டு.]*

**கோடிடு-தல்** *kōḍiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) அடிக்கோடிடுதல்; to underline.

*[கோடு + இடு.]*

**கோடித்தரை** *kōḍi-t-tarai,* பெ.(n.) 1. விளை நிலமாகப் புதிதாய் வெட்டித் திருத்தப்பட்ட நிலம் (யாழ்.அக.); land newly converted and made fit for cultivation.

2. புதுச்செய்கை; new act. 3. பூண்டதரை; newly converted land, floor.

[கோடி (புதியது) + தரை.]

**கோடிதம்** *kōḍidam,* பெ.(n.) ஒரு முகில்; a cloud, blue sky; azure.

[சுடு → கோடு → கோடிதம்.]

**கோடிதீர்த்தம்** *kōḍi-tirttam,* பெ.(n.) கடலிற் குளித்தற்கரிய நற்பேறுடைய இடங்களான (புண்ணியத் தலங்கள்) தனுக்கோடி போன்ற கோடிக்கரை; sacred sea bathing ghat at *Daṉuskōḍi* etc.,

[கோடி + (நீர்த்தம்) தீர்த்தம்.]

**கோடிதூங்கி** *kōḍi-tūṅgi,* பெ.(n.) வேலையில்லாது சோம்பித்திரிபவன்-ள்; loiterer, one who hangs about other's houses.

[கோடிதூங்கு → கோடி தூங்கி.]

**கோடிதூங்கு-தல்** *kōḍi-tūṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. மூலையில் உறங்குதல்; to sleep in a corner. 2. சோம்பித்திரிதல்; to loiter about.

[கோடி + தூங்கு.]

**கோடிநீர்** *kōḍi-nīr,* பெ.(n.) தண்ணீர்க்குடம்; water pot (சா.அக.).

[கோடி + நீர்.]

**கோடிப்பருவம்** *kōḍi-p-paruvam,* பெ.(n.) இளமைப் பருவம் (யாழ்.அக.); youth. அவனை நான் கோடியில் பார்த்த போது அழகாய் இருந்தான் (கொங்கு).

மறுவ. வாலைப்பருவம், கோடிவயது.

தெ. கோடெபருவமு.

[கோடி + பருவம்.]

**கோடிப்பல்லி** *kōḍi-p-palli,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharumapuri Dt.

[கோடி + (பள்ளி) பல்லி.]

**கோடிப்பள்ளம்** *kōḍi-p-paḷḷam,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvallur Dt.

[கோடி + பள்ளம்.]

**கோடிப்பாக்கம்** *kōḍi-p-pākkam,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram dt.

[கோடி + பாக்கம்.]

**கோடிப்பாம்பு** *kōḍi-p-pāmbu,* பெ.(n.) பழக்கப் படாத பாம்பு; wild or untamed young cobra. *"வெட்ட வெளியிலே கோடிப்பாம் பாடுமோ" (குற்றா.குற. 124:31).*

[கோடி (புதிய) + பாம்பு.]

**கோடிப்பாலை** *kōḍi-p-pālai,* பெ.(n.) ***கொடிப் பாலை*** (சிலப். 3:71, கீழ்க்குறிப்பு) பார்க்க; see *koḍi-p-pālai.*

[கோடி + பாலை]

**கோடிப்பாளைக்கருக்கு** *kōḍi-p-pāḷai-k-karukku,* பெ.(n.) மகளிரின் நெற்றிச்சுட்டி என்னும் சூளா மணிவகைகளின் முன்னமைப்பு; a frontal decoration of an ornament worn by women hanging above the forehead.



கோடிப்பாளை கருக்கு

[கோடி (இறுதி) + பாளை + கருக்கு - கோடிப்பாளைக் கருக்கு.]

பாக்குப்பாளை போன்று பூவேலைப்பாடுகள் செதுக்கப்பட்ட அணிகல வேலைப்பாடுகளை பாளைக்கருக்கு என்பர்.

**கோடிப்புங்கு** *kōḍi-p-puṅgu,* பெ.(n.) இராமநாதபுரம் விளத்தூர் பகுதியில் இருந்த ஒரு ஊரின் பெயர்; *'விளத்தூர் மண் கோட்டை சோளிக்குடி சிருதவயல் கோடிப்புங்கு' (சே.செ.52-37, பக்.262).*

[கோடி + புங்கு.]

**கோடிப்பூட்டு இணைப்பு** *kōḍi-p-pūṭṭu-iṇaippu,* பெ.(n.) மரவேலைப்பாட்டின்போது பயன்படுத்தப் படும் ஒருவகை இணைப்பு; a kind of joint used in wooden works.

[கோடி + பூட்டு + இணைப்பு.]

**கோடிபோடு-தல்** *kōḍi-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) கணவன் இறந்தவுடன் கைம்பெண்ணுக்கு உறவினர்

புதுப்புடவை போடுதல்; to offer a new cloth to a widow in mourning by relations.

*[கோடி + போடு-.]*

**கோடிம்பகம்** *kōḍimbagam,* பெ.(n.) ***கோடும்பிகம்*** பார்க்க; see *kōḍumbigam* (சா.அக.).

*[கோடும்பிகம் → கோடிம்பகம்.]*

**கோடிம்பம்** *kōḍimbam,* பெ.(n.) கரும்பூசணி; sweet water melon (சா.அக.).

*[கோடு + நிம்பம்.]*

**கோடிமட்டம்** *kōḍi-maṭṭam,* பெ.(n.) சுவர்களின் கோடியைச் சரிபார்க்க உதவும் கருவி; an instrument used for the correction of the corner of a wall in masonry work.

மறுவ. மூலைமட்டம்.

*[கோடு + மட்டம்.]*

**கோடிமுடி-தல்** *kōḍi-muḍi-,* 2 செ.கு.வி. (v.i.) 1. தன்னை விருந்திற்கழைக்கும்படி மணமகன் முதலியோருடைய புதிய ஆடையில் பணம் முடிதல் (யாழ்ப்.); to tie a piece of money in the new cloth as of a bridegroom to oblige him to give an invitation to a feast. 2. ஒருவகை விளையாட்டு; a kind of play.

*[கோடி + முடி-.]*

**கோடிமுரிதல்** *kōḍi-muri,* பெ.(n.) வயிரக்குற்றம் பன்னிரண்டனுள் ஒன்று (சிலப். 14:180, உரை.); a flaw in diamonds, one of 12 vayirakkuṟṟam.

*[கோடி + முரி.]*

**கோடிமூட்டு** *kōḍi-mūṭṭu,* பெ.(n.) மரப்பலகை, சட்டம் ஆகியவை மூலைகளில் பொருந்துமாறு இணைக்கப்படும் இணைப்பு; a joint which connects the corners of the wooden planks and frames.

*[கோடி + மூட்டு.]*

**கோடியக்கரை** *kōḍiya-k-karai,* பெ.(n.) ***கோடிக்கரை*** பார்க்க; see *kōḍi-k-karai.*

*[கோடி + அ + கரை.]*

**கோடியக்காடு** *kōḍiya-k-kāḍu,* பெ.(n.) நாகை மாவட்டம் திருமறைக் காட்டிற்குத் தெற்கே உள்ள காடு; a forest situated in *Tirutturai-p-pūṇḍi* taluk in *Nāgai* Dt.

*[கோடி + அ + காடு.]*

**கோடியம்** *kōḍiyam,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Viluppuram Dt.

*[கோடி → கோடியம்.]*

**கோடியர்**[1] *kōḍiyar,* பெ.(n.) 1. கூத்தர்; professional dancers. *"கொடும்பறைக் கோடியர்" (மதுரைக். 523).* 2. நாடகர்; actors or actress.

*[கோடு → கோடியர் (வளைந்தாடும் கூத்தர்).]*

**கோடியர்**[2] *kōḍiyar,* பெ.(n.) சிவிகையின் முன்பின் முனைகளைத் தாங்கிச்செல்வோர் (யாழ்.அக.); those who carry a palanquin at its two ends. *"விழவிற் கோடியர் நீர்மை போல" (புறநா.29).*

*[கோடு → கோடி → கோடியர்.]*

**கோடியலூர்தி** *kōḍiyal-ūrdi,* பெ.(n.) யானை மருப்பினால் செய்யப்பட்ட ஊர்தி; vehicle or conveyance made of elephant's tusks. *"கோடிய லூர்தியுங் கொண்டு விசியுறுத்து" (பெருங். உஞ்சைக். 37:219).*

*[கோடு + இயல் + ஊர்தி.]*

**கோடியன்** *kōḍiyaṉ,* பெ.(n.) பல்லக்கு மற்றும் ஊர்தி சுமப்போன்; bearer of palanquin or *vāgaṉam* of an idol.

*[கோடு : பல்லக்குத்தண்டு, மரம். கோடு → கோடியன்.]*

**கோடியிணைப்பு** *kōḍi-y-iṇaippu* பெ.(n.) மரச் சட்டங்களின் கோடியில் இணைக்கும் இணைப்பு; a joint between the corners of wooden planks.

*[கோடி + இணைப்பு.]*

**கோடியில்லாமை** *kōḍi-y-illāmai,* பெ.(n.) வயிரக்குற்றம் 12-ல் ஒன்று (சிலப். 14:180, உரை); a flaw in diamonds, one of 12 vairakkuṟṟam.

*[கோடி + இல்லாமை.]*

**கோடியுடம்பு** *kōḍi-y-uḍambu,* பெ.(n.) 1. மெல்லிய உடம்பு (யாழ்ப்.); tender body. 2. இளைத்தவுடம்பு; young body.

*[கொடி → கோடி + உடம்பு.]*

**கோடியூர்** *kōḍi-y-ūr,* பெ. (n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[கோடி + ஊர்.]*

**கோடியெடு**[1]**–த்தல்** *kōḍi-y-eḍu,* 4 செ.குன்றாவி. (v.t.) திரும்பச் சொல்லுதல் (ஈடு.10.3:1); to repeat.

*[கோடி + எடு.]*

**கோடியெடு**[2]**–த்தல்** *kōḍi-y-eḍu,* 4 செ.குன்றாவி. (v.t.) இறந்தவர் வீட்டுக்குப் புத்தாடை வாங்கிச் செல்லுதல்; to buy and carry a new cloth to deceased house.

*[கோடி (புத்தாடை) + எடு.]*

**கோடியோடு–தல்** *kōḍi-y-ōḍu-,* 5 செ.கு.வி.(v.i.) ஏரி நீர் நிரம்பிவழிதல் (C.G.); to overflow, as surplus water in a tank.

*[கோடி + ஓடு.]*

**கோடிரம்**[1] *kōḍiram,* பெ.(n.) 1. ஒரு விலங்கு; an ichneumon. 2. ஓர் பூச்சியினம்; insect coccinella of various kinds. 3. கீரி; mongoose (சா.அக.).

ம. கோடிரம்.

*[கோடு → கோடிரம்.]*

**கோடிரம்**[2] *kōḍiram,* பெ.(n.) ***கோடிரவம்*** பார்க்க; see *kōḍiravam.*

*[கோடு → கோடிரம்.]*

**கோடிரவம்** *kōḍiravam,* பெ.(n.) சதுரக்கள்ளி (மலை.); square spurge.

*[கோடு → கோடிரம் → கோடிரவம்.]*

**கோடிலம்** *kōḍilam,* பெ.(n.) 1. கோட்டம்; put chock. 2. ஒருவகை நறுமணச் செடி; a kind of fragrant plant.

*[கோடு → கோடிலம்.]*

**கோடிவகை** *kōḍi-vagai,* பெ.(n.) ஆடைவகைகள்; type of clothings.

*[கோடி + வகை.]*

வகைகள்: கோசிகம், பீதகம், பச்சிலை, அரத்தம், நுண்டுகில், கண்ணம், வடகம், பஞ்சு, இட்டு, பாகம், கோங்கலர், கோபம், குருதி, கரியல், பேடகம், பூங்காக்காழம் , தூரியம், நூல்யாப்பு, திருக்கு, தேவாங்கு, குச்சலி, தேவகிரி, இறஞ்சி, வெண்பொத்தி, செம்பொத்தி, பணி பொத்தி [கழ.த.அக.].

**கோடிவஞ்சி** *kōḍi-vañji,* பெ.(n.) சிறுகுறிஞ்சான்; small Indian ipecacuanha (சா.அக.).

*[கோடி + வஞ்சி.]*

**கோடிவயது** *kōḍi-vayadu,* பெ.(n.) 1. இளமை; youth 2. ***கோடிப்பருவம்*** பார்க்க; see *kōḍi-p-paruvam* (சா.அக.).

*[கோடி + வயது.]*

**கோடிவளி** *kōḍi-vaḷi,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvallur dt.

*[கோடி + வளி.]*

**கோடிவெள்ளை** *kōḍi-veḷḷai,* பெ.(n.) புதிய ஆடையின் முதல் வெள்ளை; first wash of new cloths.

*[கோடி + வெள்ளை.]*

**கோடீகரி–த்தல்** *kōḍi-kari,* 4 செ.குன்றாவி.(v.t.) தொகுத்துச்சொல்லுதல்; to sum up in order, systematise and summarise.

*[கொள் → கோள் → கோடு (மனத்துட் கொள்ளுதல்) + கரித்தல்.]*

**கோடீசுவரன்** *kōḍīśuvaraṉ,* பெ.(n.) ***கோடிச் செல்வன்*** பார்க்க; see *kōḍi-c-celvaṉ.*

*[கோடி + ஈசுவரன்.]*

**கோடீசுவரி** *kōḍīśuvari,* பெ.(n.) ***கோடிச்செல்வி*** பார்க்க; see *kōḍi-c-celvi.*

*[கோடி + ஈசுவரி.]*

**கோடீரம்**[1] *kōḍīram,* பெ.(n.) 1. முடி (வின்.); crest, diadem. 2. முனிவர்களின் சடை; long matted hair, as of ascetics. *"வெண்ணிலவு விரிந்த கோடீரம்" (குமர.பிர. மதுரைக். 101).* 3. மண்ணாங்கட்டி யுடைக்குந் தடி முதலியன; a pole clods is used to break the clod of earth.

*[கோடு (வளைவு) → கோடுரம் → கோடீரம்.]*

**கோடீரம்**[2] *kōḍīram,* பெ.(n.) வானவில்; rain-bow.

*[கோடு = வளைவு. கோடு → கோடிரம் → கோடீரம்.]*

**கோடு**[1]**–தல்** *kōḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. வளைதல்; to bend, to be crooked. *"செங்கோல் கோடியோ" (மணிமே. 28:188).* 2. நெறிதவறுதல்; to go astray, deviate. *"கோடாருங் கோடிக் கடுவினைய ராகியார்ச் சார்ந்து" (நாலடி, 124).* 3. நடுநிலைமை தவறுதல்; to be partial, biassed. *"கோடாமை சான்றோர்க் கணி" (குறள்,118).* 4. வெறுப்புறுதல் (வின்.); to be displeased, aversion. 5. கோணுதல்; to bend, curve. *"கற்பிளார்கோடும் வாயினரீவார்க் கரும் பழுதுரைப்பவர்" (தணிகைப்பு. அகத்.346).*

6. சூழ்தல்; to cover, all round. 7. வட்டமாதல்; to get round. 8. எரிதல்; to burn. 9. குறாவுதல்; to mean, to be sad. 10. கொள்ளுதல்; to secure. *"தலை யிழைத்துக் கோடுமுன்" (தணிகைப்பு.வீராட்.39).*

*[கோண் → கோடு.]*

**கோடு**[2] *kōḍu*, பெ.(n.) 1. வளைவு; crookedness, flexure. 2. நடுநிலை நீங்குகை; partiality. *"கோடிறீக் கூற்றம்" (நாலடி.5).* 3. யானை, பன்றிகளின் கொம்பு; tusk. *"மத்த யானையின் கோடும்" (தேவா.39:1).* 4. விலங்கின் கொம்பு; horn. *"கோட்டிடை யாடினை கூத்து" (திவ். இயற். திருவிருத். 21).* 5. ஊதுகொம்பு; blowing-horn. *"கடுங்கட் காவலர் கொடுங்கோடு சிலைப்ப" (பெருங். உஞ்சைக். 58:25).* 6. நீர்வீசுங் கொம்பு; a horn-like contrivance used for discharging water in jets. *"நீர்மணக் கோட்டினர்" (பரிபா.6:34).* 7. மரக்கொம்பு (பிங்.); branch of a tree. 8.யாழ்த் தண்டு; body of a lute. *"மகர யாழின் வான்கோடு தழீஇ" (மணிமே.4:56).* 9. கெ, கே முதலியவற்றின் தலைப்பிலுள்ள கொம்புக் குறியீடு; symbol 'ெ', 'ே', as in கெ, கே, etc. *'விலங்கு பெற்றும் கோடு பெற்றும் புள்ளி பெற்றும்' (தொல். எழுத்து. 17, உரை).* 10. பிறைமதி; crescent moon. *"பசும்பணிக் கோடு மிலைந்தான்" (திருக்கோ. 149).* 11. சங்கு; conch, chank. *"கோடு முழங் கிமிழிசை யெடுப்பும்" (பதிற்றுப். 50:25).* 12. குலை; bunch, cluster. 13. மயிர்முடி; coil of hair. *"குரற் கூந்தற்கோடு" (கலித். 72:20).* 14. மலையுச்சி; summit of a hill, peak. *"பொற்கோட் டிமயமும்" (புறநா.2:24).* 15. மலை; mountain. *"குமரிக் கோடும்" (சிலப்.11:20).* 16. மேட்டுநிலம்; high ground, elevation. *"நறுங்காழ் கொன்று கோட்டின் வித்திய" (மதுரைக். 286).* 17. வரி; line. 18. ஆட்டம் முதலியவற்றுக்காக வகுத்த எல்லை (தானம்); diagram, figure, as a square, circle, etc., drawn for playing games. *"கோடின்றி வட்டாடல் கொள்வ தொக்கும்" (தாயு. நினை.2).* 19. நீர்க்கரை; bank of a river, bund of a tank or well. *"குளவளாக் கோடின்றி நீர்நிறைந் தற்று" (குறள்:523).* 20. குளம்; tank. *"கோடெலா நிறையக் குவளைம் மலரும்" (தேவா.425:4).* 21. காலவட்டம்; cycle of time. *"கலியுகக் கோட்டுநாள்" (T.A.S.H. O.P.S.5).* 22. வரம்பு (பிங்.); ridge, as in a field; border, limit. 23. ஆடைக்கரை; stripe, border, as of a cloth. *"கொடுந்தானைக் கோட்டழகும்" (நாலடி.131).* 24. முனை; cusp, horn, as of the crescent moon. *"கோடு கூடு மதியம்" (பதிற்றுப்.31:12).* 25. பக்கம்; side. *"கோடுய ரடுப்பு" (புறநா. 164).* 26. அரணிருக்கை (வின்.); stronghold, fortified place. 27. கட்டடச்சுவர்; wall of a building. 28. நத்தை; snail. 29. கோட்டான்; large owl. 30. சங்கம்பட்டை; bark of smooth volkameria - cleodendran inerme. 31.கிளிஞ்சில்; shell (சா.அக.). 32. சுண்ணாம்பு; lime.

**தெ., க., து.** கோடு; **பர்.** கோட்; **கோண்.** கோர்.

*[கோண் →கோடு ஒ.நோ. பாண் →பாடு.]*

**கோடு**[3] *kōḍu*, பெ.(n.) கொடுமை; hardship, oppression. *"கோடற வைத்த கோடாக் கொள்கையும்" (பதிற்றுப். 37:11).*

*[கொள் → கொடு → கோடு.]*

**கோடுகடைதொழில்** *kōḍu-kaḍai-tol̤il*, பெ.(n.) யானைக்கோடு முதலியவற்றைக் கடையும்தொழில்; the art of carving tusks.

*[கோடு + கடை + தொழில்.]*

**கோடுகீறு-தல்** *kōḍu-kīru-*, 5 செ.கு.வி. (v.i.) **கோடிகாண்பி** பார்க்க; see *kōḍi-kāṇbi.*

*[கோடு + கீறு.]*

**கோடுங்கிரி** *kōḍuṅgiri*, பெ.(n.) மல்லிகை; jasmine (சா.அக.).

*[கோடு = புதிய. கலி = மணம். கோடும் + கலி – கோடுங்கலி → கோடுங்கிரி (கொ.வ.).]*

**கோடுபாடு** *kōḍu-pāḍu*, பெ.(n.) மூலைமுடுக்கு; in all corners.

*[கோடு + பாடு.]*

**கோடுபோடு-தல்** *kōḍu-pōḍu-*, 19 செ.குன்றாவி. (v.t.) உப்பளப் பாத்தியில் படிந்த உப்புப்படிவத்தில் பலகையால் கோடுபோடுதல்; to draw lines on the surface of crystalized salt.

*[கோடு + போடு.]*

**கோடும்பிகம்** *kōḍumbigam*, பெ.(n.) தும்மட்டி; country cucumber (சா.அக.).

*[கொள் → கொடு → கொடும்பி → கொடும்பிகம் → கோடும்பிகம்.]*

**கோடுமட்டி** *kōḍu-maṭṭi*, பெ.(n.) மட்டி வகைகளு ளொன்று; a kind of shell.

*[கோடு + மட்டி.]*

**கோடுமுத்தம்** *kōḍu-muttam*, பெ.(n.) சங்கிற் பிறந்த வெண்ணிநிற முத்து; white pearl from sea shell oyster.

*[கோடு = பங்கு. கோடு + முத்தம்.]*

**கோடுருவகம்** *kōduruvagam,* பெ.(n.) அத்தி; a kind of fig tree (சா.அக.).

*[கோடு + உருவகம்.]*

**கோடுரை** *kōdurai,* பெ.(n.) சங்கஞ்செடி; a thorny kind of shrub (சா.அக.).

*[கோடு → கோடுரை.]*

**கோடுவாய்** *kōdu-vāy,* பெ.(n.) ***கோட்டுவாய்*** பார்க்க; see *kōttu-vāi* (சா.அக.).

*[கோட்டுவாய் → கோடுவாய்.]*

**கோடை**[1] *kōdai,* பெ.(n.) 1. மேல்காற்று; west wind. *"கோடை தூற்றக் கூடிய வூழிலை" (ஞானா. 28:12).* 2. வேனிற்காலம் (பிங்.); summer season. 3. வெயில்; sun shine. *"வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப" (திருவாசக.3:71).* 4. கோடைப் பயிர் (இ.வ.); summer crop. 5. கோடைக்கானல்; a mountain. *"வெள்வீ வேலிக் கோடைப் பொருந" (புறநா.205:6).*

**க.** கோடெ; **ம.** கோட; **பட.** (தென்மேற்கு பருவமழை); **கோத.** கெட்; **துட.** க்வாட் (பருவமழை, ஆண்டு).

*[கொடு → கோடு → கோடை.(குடக்கு)→கோடை.]*

**கோடை**[2] *kōdai,* பெ.(n.) 1. கோடற்கிழங்கு; a bulbous root grown in the summer season. 2. கரந்தை; sweet basil.

*[கோடு → கோடை.]*

**கோடை**[3] *kōdai,* பெ.(n.) குதிரை (பிங்.); horse.

*[கோடகம் → கோடை.]*

**கோடை**[4] *kōdai,* பெ.(n.) 1. வெண்காந்தள்; white species of Malabar glory-lily. 2. செங்காந்தள்; Malabar glorylily.

*[கோடு = வெண்மை n. கோடு → கோடை.]*

**கோடை**[5] *kōdai,* பெ.(n.) இளமை; youth.

**தெ.** கோடெ (இளைஞன், இளம)

**Fin.** kyty (wife's brother-in-law); **Est.** kudi; **Mansi.** kil; **Mong.** kydeqy; **O.Turk.** kude; **Jap.** kata; **Q.** katac.

*[கோடு → கோடை.]*

**கோடைக்கட்டி** *kōdai-k-katti,* பெ.(n.) வேனிற் காலத்தில் உடம்பில் காணும் அரத்தக் கொப்புளம்; boils occuring in summer due to excessive heat of the body (சா.அக.).

**மறுவ.** கோடைக் கொப்புளம்.

*[கோடை + கட்டி.]*

**கோடைக்கண்ணி** *kōdai-k-kanni,* பெ.(n.) 1. ஒரு வகை நெல்; a kind of paddy. 2. வேனிற்காலத்துப் பூ; summer flower (சா.அக.).

*[கோடை + கண்ணி.]*

**கோடைக்காந்தள்** *kōdai-k-kāndal,* பெ.(n.) வெண்காந்தள்; Malabar glory (சா.அக.).

*[கோடை + காந்தள்.]*

**கோடைக்காந்திரம்** *kōdai-k-kāndiram,* பெ.(n.) பொழுதுவணங்கி (சூரியகாந்தி); sunflower (சா.அக.).

*[கோடை + காந்திரம்.]*

**கோடைக்காலம்** *kōdai-k-kālam,* பெ.(n.) வேனிற் காலம்; hot weather, summer season (சா.அக.).

*[கோடை + காலம்.]*

**கோடைக்காற்று** *kōdai-k-kārru,* பெ.(n.) 1. மேற்குக் காற்று; west wind. 2. நெருப்புக்காற்று; the hot west wind. 3. வேனிற் பருவத்தின் காற்று; breeze of summer season (சா.அக.).

**ம.** கோடக்காற்று; **பட.** கோடெதாயி.

*[கோடை + காற்று.]*

**கோடைக்கானல்** *kōdai-k-kānal,* பெ.(n.) 1. பழனி மலைத் தொடரின் தென்பால் 7,000 அடிக்குமேல் உயரமுள்ள மலைப்பகுதி; the southern ridge of the Palani hills. more than 7000 ft. high. 2. கோடைக்கானல் மலையின் உச்சியில் குளிர்ச் சிக்காகத் தங்கும் ஒரு மலைநகர்; a sanatorium at the top of *Kodaikkānal* hill.

*[கோடை (மேற்கு) + கானல்.]*

**கோடைக்கிழங்கு** *kōdai-k-kilangu,* பெ.(n.) சிற்றரத்தை (மலை.); lesser galangal.

**ம.** கோடக்கிழங்ஙு.

**மறுவ.** குட்டியிடுக்கி.

*[கோடை + கிழங்கு.]*

**கோடைக்கிரிசம்** *kōdai-k-kirišam,* பெ.(n.) மணிப் பிரண்டை; a species of adamantine creeper (சா.அக.).

*[கோடை + (கிரிச்சம்) கிரிசம்.]*

**கோடைக்குவாடான்** *kōḍaikku-vāḍāṉ,* பெ.(n.) ஆவிரை என்னுமோர் மூலிகை (மலை.); Cassia.

*[கோடை + வாடான்.]*

**கோடைக்குறுவை** *kōḍai-k-kuṟuvai,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy. "கோடைக் குறுவை குளவாளை செங்குறுவை (நெல்விடு.179).

மறுவ. சித்திரைக்குறுவை

*[கோடை + குறுவை]*

**கோடைக்கேப்பை** *kōḍai-k-kēppai,* பெ.(n.) கேழ்வரகு வகை; a kind of ragi.

*[கோடை + கேப்பை]*

**கோடைக்கொட்டை** *kōḍai-k-kōṭṭai,* பெ.(n.) நிலக்கடலை; ground-nut, as usually a summer crop.

*[கோடை + கொட்டை.]*

**கோடைக்கொப்புளம்** *kōḍai-k-koppuḷam,* பெ.(n.) ***கோடைக்கட்டி*** பார்க்க; see *kōḍai-k-kaṭṭi* (சா.அக.).

*[கோடை + கொப்புளம்]*

**கோடைச்சம்பா** *kōḍai-c-cambā,* பெ.(n.) வேனிற் காலத்துப் பயிராகும் சம்பாநெல்; šambā paddy grown in summer season (சா.அக.).

*[கோடை + சம்பா.]*

**கோடைச்சவுக்கு** *kōḍai-c-cavukku,* பெ.(n.) ஆற்றுச்சவுக்கு (L.); tamarisk.

*[கோடை + சவுக்கு.]*

**கோடைச்செய்கை** *kōḍai-c-ceygai,* பெ.(n.) மறுபயிருக்குக் கோடைக் காலத்தில் நிலத்தைப் பண்படுத்துகை (வின்.); preparation of land in hot season for the next crop.

*[கோடை + செய்கை.]*

**கோடைச்சோளம்** *kōḍai-c-cōḷam,* பெ.(n.) தஞ்சையில் கோடை காலத்திற் பயிரிடப்படும் சோளம்; cholam cultivated in Thanjavur area in summer.

*[கோடை + சோளம்.]*

**கோடைத்தண்ணீர்** *kōḍai-t-taṇṇīr,* பெ.(n.) 1. கள்; toddy, as a beverage in hot weather. 2. பனிக் கட்டி உருகிய தண்ணீர்; ice-water (சா.அக.).

*[கோடை + தண்ணீர்.]*

**கோடைத்தணி** *kōḍai-t-taṇi,* பெ.(n.) ஆனைத் தொண்டி; ordure tree (சா.அக.).

மறுவ. கோடைத்தொண்டி

*[கோடை + (தலை) தணி]*

**கோடைத்தாணி** *kōḍai-t-tāṇi,* பெ.(n.) ஒருவகைப் பூடு; a kind of herb as of net-veined Indian nettle (சா.அக.).

*[கோடை + (தாளி) தாணி]*

**கோடைத்திருநாள்** *kōḍai-t-tirunāḷ,* பெ.(n.) கோடைகாலத்தில் நடைபெறுகின்ற திருவிழா; a celebration in summer. *"இறையமுது நூறும் கொடைத்திருநாள் பிறபத்தில் முதல் திருநாளில்" (திருப்பதி.கல்.தொ.3.கல்7–2).*

*[கோடை + திருநாள்.]*

**கோடைத்தொண்டி** *kōḍai-t-toṇḍi,* பெ.(n.) ஆனைத் தொண்டி; ordure tree - sterculia lata (சா.அக.).

மறுவ. கோடைத்தணி

*[கோடை + தொண்டி.]*

**கோடைப்பயிர்** *kōḍai-p-payir,* பெ.(n.) 1. கோடைக்காலத்துப் பயிர்; crop raised in hot season. 2. கோடைச்சாகுபடியின் விளை பொருள்; produce of cultivation in the hot season.

ம. கோடைநெல் (ஒருவகை நெல்).

*[கோடை + பயிர்.]*

**கோடைப்பாலி** *kōḍai-p-pāli,* பெ.(n.) மடச் சாம்பிராணி; Malabar mahogany (சா.அக.).

*[கோடை + (பால்) பாலி]*

**கோடைப்புரோசனம்** *kōḍai-p-purōšaṉam,* பெ.(n.) ***கோடைப்பயிர்*** பார்க்க; see *kōḍai-p-payir.*

*[கோடை + புரோசனம்.]*

**கோடைப்பூகிகம்** *kōḍai-p-pūgigam,* பெ.(n.) மஞ்சள் அந்திமல்லிகை; yellow evening jasmine (சா.அக.).

*[கோடை + (போகம்) பூகிகம்.]*

**கோடைப்பூசணி** *kōḍai-p-pūšaṇi,* பெ.(n.) கோடைக்காலத்தில் காய்க்கும் பூசணிவகை; a species of pumpkin bearing fruit in hot season.

*[கோடை + பூசணி]*

**கோடைப்போகம்** *kōḍai-p-pōgam,* பெ.(n.) ***கோடைப்பயிர்*** பார்க்க; see *kōḍai-p-payir.*

*[கோடை + போகம்.]*

**கோடைபாடியபெரும்பூதனார்** *kōḍai-pāḍiya-perum-pūdaṉār,* பெ.(n.) சங்ககாலப் புலவர்களு ளொருவர்; a Sangam poet.

*[கோடை (கொடைக்கானல் மலை) + பாடிய + பெரும்பூதனார்.]*

இவர் பாடிய பாடல் கிடைத்திலது. அக்காலத்தில் மலை, ஊர்பற்றிப் பாடும்போது அதனை முன்பு பாடிய புலவரைக் குறிப்பிடுதல் உண்டு. அதனடியாக இவர் கோடையைப்பற்றிப் பாடியிருக்கக் கூடும். பெரும்பூதனார் என்னும் அவரின் இயற்பெயருடன் கூடி இப் பெயர் அமைந்தது எனக் கருதப்படுகிறது.

**கோடைமழை** *kōḍai-maḻai,* பெ.(n.) கோடை காலத்து மழை; summer rain.

**ம.** கோடமழ; **பட.** கோடெமே.

*[கோடை + மழை.]*

**கோடையடிக்காரன்** *kōḍai-y-aḍikkāraṉ,* பெ.(n.) ஒருவரிடத்தினின்று பிடுங்கி மற்றொருவர்க்கு ஏராளமாய்க் கொடுப்பவன்; one who is liberal at another's expense (loc.).

*[கோடை + அடி + காரன்.]*

**கோடையடிபடு-தல்** *kōḍai-y-aḍipaḍu-,* 20 செ.கு.வி (v.i.) வெய்யிலிலடிபடுதல்; to roam in hot sun.

*[கோடை + அடிபடு.]*

**கோடையான்தோட்டம்** *kōḍaiyāṉ-tōṭṭam,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thanjai Dt.

*[கோடையான் + தோட்டம்.]*

**கோடையிடி** *kōḍai-y-iḍi,* பெ.(n.) கோடைப் பருவத்து மழையிடி; thunder during rains in hot season.

*[கோடை + இடி.]*

**கோடையெலுமிச்சை** *kōḍai-y-elumiccai,* பெ.(n.) புதுச்சேரி எலுமிச்சை; Pondicherry lime (சா.அக.).

*[கோடை + எலுமிச்சை.]*

**கோடைவாகளி** *kōḍai-vāgaḷi,* பெ.(n.) சிறு செருப்படை; a low spreading plant, as a diffuse prostrate herb.

**மறுவ:** கோடைவாசனி.

*[கோடை + வாகளி.]*

இது அறுத்த வயலிலும், குளக்கரையிலும் படரும், சொறிசிரங்கு, படை முதலிய நோய்களைப் போக்கும் [சா.அக.].

**கோடைவாய்** *kōḍai-vāy,* பெ.(n.) வாயினின்று வடியும் நீர்; dribble.

**மறுவ.** கொடுவாய், கோட்டவாய்.

*[கோட்டுவாய் → கோடைவாய்.]*

**கோண்**[1] *kōṇ,* பெ.(n.) 1.வளைவு; crookedness. *"கோணார் பிறை" (திருவாசக. 16:5).* 2.கோணம்; an angle. *"முக்கோ ணிவர் தரு வட்டம்" (குற்றா.தல. பராசத்.3).* 3. மாறுபாடு; crossness of disposition. *"கோணைக் களிற்றுக் கொடித்தேர்" (சீவக. 28).* 4. கொடுங்கோன்மை (திவா.); tyranny.

**ம.** கோண்; **க.** கோண, கோன; **தெ.** கோணமு; **து.** கோண; **பட.** கோணெ (வளைவு).

**Skt.** koṇa.

*[கோள் → கோண்.]*

**கோண்**[2] *kōṇ,* பெ.(n.) நுண்ணிய பகுதி; a minute division. *"அணுவினைச் சத கூறிட்ட கோணினு முளன்" (கம்பரா.இரணிய. 124).*

*[குள் → கொள் → கோள் → கோண்.]*

**கோண்**[3] *kōṇ,* பெ.(n.) ஏனத்தின் (பாத்திரத்தின்) மூக்கு (யாழ்.அக.); spout or projecting mouth of a vessel, lip.

*[குள் → கொள் → கோள் → கோண்.]*

**கோண்டகம்** *kōṇḍagam,* பெ.(n.) நெருஞ்சில்; caltrope (சா.அக.).

*[குள் → குண்டு → குண்டகம் → கோண்டகம்.]*

**கோண்டகு** *kōṇḍagu,* பெ.(n.) குறிஞ்சான்; an edible and medicinal creeper (சா.அக.).

*[குண்டகம் → கோண்டகு.]*

**கோண்டகை** *kōṇḍagai,* பெ.(n.) கொடியரசு; a kind of tree as of ficus (சா.அக.).

*[கொள்→கொண்டகை→கோண்டகை.]*

**கோண்டம்**[1] *kōṇḍam,* பெ.(n.) ***கோண்டகம்*** பார்க்க; see *kōṇḍagam.*

*[கோண்டகம்→கோண்டம்.]*

**கோண்டம்²** *kōṇḍam,* பெ.(n.) குறிஞ்சாவகை (மலை.); a species of scammony swallow - wort.

*[கோண்டகம் →கோண்டம்.]*

**கோண்டம்³** *kōṇḍam,* பெ.(n.) 1. **கோதண்டம்²** (யாழ்.அக.) பார்க்க; see *kōdaṇḍam²*. 2. தூக்கு; pendents, anything suspended.

*[குண்டம் →கோண்டம்.]*

**கோண்டலன் குப்பம்** *kōṇḍalaṉ-kuppam,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Viḻuppuram* Dt.

*[கொண்டலன் →கோண்டலன் + குப்பம்.]*

**கோண்டன்** *kōṇḍaṉ,* பெ.(n.) 1.கீழ்மகன்; loafer. 2. பெருங் கொப்பூழன்; one who has a large navel.

ம. தோண்டன்.

*[குண்டன் →கோண்டன்.]*

**கோண்டன்கிழங்கு** *kōṇḍaṉ-kiḻaṅgu,* பெ.(n.) **கோரைக்கிழங்கு** பார்க்க; see *kōrai-k-kiḻaṅgu*.

*[கோண்டன் + கிழங்கு.]*

**கோண்டி** *kōṇḍi,* பெ.(n.) ஆந்திர மாநிலம் (கம்மம், அடிலபாத்), சட்டிச்கார் (பச்தர்), மகாராட்டிரம் (வார்தா, நாக்பூர்), ஒரிசா மாநிலங்களில் பழங்குடி மக்களால் பேசப்பட்டு வரும் திராவிட மொழி; a Dravidian language spoken by Tribals in Andhra Pradesh, Chattisgarh, Maharashtra and Orissa.

கோண்டி பேசுவோர் இருபது இலக்கம் பேர். தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் இவற்றை அடுத்து அதிக மக்கள் பேசும் திராவிட மொழி கோண்டி மொழியே ஆகும்.

**கோண்டூர்** *kōṇḍūr,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram Dt.

*[கோண்டன் (கோரைக்கிழங்கு) →கோண்டு + ஊர்.]*

**கோண்டை¹** *kōṇḍai,* பெ.(n.) 1. இலந்தை; jujube. 2. பாக்குமரம்; areca-nut tree.

*[குண்டை → கோண்டை.]*

**கோண்பாய்ச்சல்** *kōṇ-pāyccal,* பெ.(n.) குறுக்கிடு வழி (இ.வ.); cross-wise or slanting direction.

*[குள் → கோள் → கோண் + பாய்ச்சல்.]*

**கோண்பு** *kōṇbu,* பெ.(n.) கோணுதல்; to be bent, curved.

*[கோண் → கோண்பு. ஒ.நோ. காண் → காண்பு.]*

**கோண்மா** *kōṇ-mā,* பெ.(n.) இரைக்காகப் பிற உயிரினங்களைக் கொல்லும் புலி, அரிமா முதலியன; beast of prey, as lion, tiger etc. *"கும்பத்தின் கரியைக் கோண்மாக் கொன்றென"* (*கம்பரா. இரணிய.* 125).

*[கோள் + மா – கோள்மா → கோண்மா.]*

**கோண்மா நெடுங்கோட்டனார்** *kōṇmā neḍuṅkōṭṭaṉār,* பெ.(n.) கடைக்கழகப் புலவர்களி லொருவர்; one among Sangam poets.

*[கோண்மா + நெடுங்கோட்டனார்.]*

இவர் கடைக்கழக நூல்களில் ஒன்றான நற்றிணையின் 40ஆவது பாடலைப் பாடியுள்ளார். அப் பாடலில் வருகின்ற கோண்மா நெடுங்கோடு என்னும் சொற்றொடரிலிருந்து இப் பெயர் வழங்கப்பட் டிருக்கலாம்.

**கோண்மீன்** *kōṇ-mīṉ,* பெ.(n.) கோள் (கிரகம்); planet. *"வாணிற விசும்பிற் கோண்மீன்" (சிறுபாண். 242).*

*[கோள் → கோண் + மீன்.]*

**கோண்விழு-தல்** *kōṇ-viḻu-,* 2 செ.கு.வி.(v.i.) கோணலாதல் (வின்.); to become crooked, uneven.

*[கோண் + விழு.]*

**கோணக்கண்** *kōṇa-k-kaṇ,* பெ.(n.) மாறுகண்; squint.

*[கோண் + அ + கண்.]*

கண்களின் இருவிழிகளும் வெவ்வேறு திசை களைப் பார்ப்பது போன்ற நிலை.

**கோணக்கணிதவியல்** *kōṇa-k-kaṇida-v-iyal,* பெ.(n.) கோணங்களைக் கொண்டு பயிலும் கணக்கு; trigonometry.

*[கோணம் + கணிதம் + இயல்.]*

**கோணக்கழுத்து** *kōṇa-k-kaḻuttu,* பெ.(n.) 1. பிறவியில் அல்லது வலிப்பினால் வளைந்த கழுத்து; distorted neck either congenital or acquired from fits. 2. சாய்ந்த கழுத்து; wry neck (சா.அக.).

*[கோணல் + கழுத்து.]*

**கோணக்களிகிண்டு-தல்** *kōṇa-k-kaḷi-kiṇḍu-,* 5 செ.கு.வி. (v.i.) குழப்பமுண்டாதல் (நெல்லை); to

create confusion. இப்படிக் கோணக்களி கிண்டுவது நல்லதன்று (உ.வ.).

*[கோணல் + களி + கிண்டு.]*

**கோணக்காப்பு** *kōṇa-k-kāppu,* பெ.(n.) கை கால்களிலணியும் கோணல்வளை; angulated anklet or bangles.

*[கோணல் + காப்பு.]*

**கோணக்காய்** *kōṇa-k-kāy,* பெ.(n.) ***கோணற் காய்*** பார்க்க; see *kōṇaṟ-kāy* (சா.அக.).

*[கோணல் + காய் – கோணற்காய் → கோணக்காய்.]*

**கோணக்கால்** *kōṇa-k-kāl,* பெ.(n.) ***கோணற் கால்*** பார்க்க; see *kōṇaṟ-kāl* (சா.அக.).

*[கோணல் + கால் – கோணற்கால் → கோணக்கால்.]*

**கோணக்கிணாக்கி** *kōṇa-k-kiṇākki,* பெ.(n.) சிற்றரத்தை வகை (மலை.); nodding galangal.

மறுவ: கோணாக்கிணக்கி.

*[கோணல் + (கிணக்கி) கிணாக்கி.]*

**கோணக்கீச்சான்** *kōṇa-k-kiccāṉ,* பெ.(n.) உடல்வளைந்த கீச்சான் மீன்; a kind of fish having twisted body.

*[கோணல் + கீச்சான்.]*

**கோணக்குழல்** *kōṇa-k-kuḻal,* பெ.(n.) ஒருவகை வளைந்த ஊதுகுழல்; a kind of trumpet.

ம. கோணக்குழல்.

*[கோண(ம்) + குழல்.]*

**கோணக்கூத்து** *kōṇa-k-kūttu,* பெ.(n.) இழுப்பினால் குதிக்கச் செய்யும் ஒரு நோய் (சா.அக.); a disease marked by a peculiar jumping or springing motion in the patient due to clonic spasm of the muscles,saltatory spasm.

*[கோணல் + கூத்து.]*

**கோணக்கொம்பு** *kōṇa-k-kombu,* பெ.(n.) 1. வாங்கால் என்னும் ஊது கருவி; bugle - horn, wind instrument (loc.). 2. மாட்டுக் கொம்பில் ஒருவகை; a kind of cow horn.

*[கோணல் + கொம்பு.]*

**கோணக்கொன்றை** *kōṇa-k-koṉṟai,* பெ.(n.) கோணக்காய்க் கொன்றை; purging cassia (சா.அக.).

*[கோணல் + கொன்றை – கோணற்கொன்றை → கோணக்கொன்றை.]*

**கோணக்கோணவிழு-தல்** *kōṇa-k-kōṇa-viḻu-,* 2 செ.கு.வி (v.i.) வலிப்பு நோயினால் கைகால் இழுத்தல்; distortion of the limbs as in fits (சா.அக.).

*[கோண + கோண + விழு-.]*

**கோணக்கோதயம்** *kōṇa-k-kōdayam,* பெ.(n.) தகரை; ringworm plant (சா.அக.).

*[கோணல் + கோதயம்.]*

**கோணங்கி** *kōṇaṅgi,* பெ.(n.) 1. கோமாளி; clown or fool in a play, buffoon. 2. ***கோடங்கி*** பார்க்க; see *kōḍaṅgi* 3. நகைச்சுவை நாடகம்; a kind of humourous drama. 4. உடற்கோணி ஆட்டம்; a twisted dance.

*[கோண் → கோணங்கி.]*

**கோணங்கிக்கூத்து** *kōṇaṅgi-k-kūttu,* பெ.(n.) 1. கோமாளிக்கூத்து; dancing of a clown. 2. ஒழுங்கற்ற நடையுடைகள்; droll and improper conduct or dress.

*[கோணங்கி + கூத்து.]*

**கோணங்கித்தாசரி** *kōṇaṅgi-t-tāšari,* பெ.(n.) தாசரி இனத்திலுள்ள கோணங்கி; a konangi belonging to *Dašari* caste.

*[கோணங்கி + தாசரி.]*

**கோணங்கிப்பட்டி** *kōṇaṅgi-p-paṭṭi,* பெ.(n.) நாமக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Nāmakkal* Dt.

*[கோணங்கி + பட்டி.]*

**கோணங்கிப்பல்லு** *kōṇaṅgi-p-pallu,* பெ.(n.) அழகற்று நீண்டுள்ள பல் (வின்.); projecting unsightly teeth (W.).

*[கோணங்கி + பல்லு. பல் → பல்லு.]*

**கோணங்கிப்பாட்டு** *kōṇaṅgi-p-pāṭṭu,* பெ.(n.) செய்யுள் வகை; a kind of poem.

*[கோணங்கி + பாட்டு.]*

**கோணங்கியம்மை** *kōṇaṅgi-y-ammai,* பெ.(n.) உடல் உறுப்புகளைக் குறைத்து வேறுபடுத்தும் அம்மை வகை (வின்.); a kind of small pox which contracts and distorts the limbs.

*[கோணங்கி + அம்மை.]*

**கோணத்தடி** *kōṇa-t-taḍi,* பெ.(n.) அதிகாரக் குறியாகக் கொண்டு செல்லும் தடிவகை (இ.வ.); a staff with a curved head, an emblem of authority.

*[கோண் → கோணல் + தடி.]*

**கோணத்தண்டு** *kōṇa-t-taṇḍu,* பெ.(n.) 1. ஒருபுறம் வளைந்த ஆண்குறி; penis inclined to one side. 2. வாசியை மாற்றுவதற்குப் பயன்படும் ஒக தண்டு; a stick or a wooden rod with a curve at the top used by yogis, for directing vital air from the right nostril to the left and vice versa (சா.அக.).

*[கோணல் + தண்டு.]*

**கோணத்திசை** *kōṇa-t-tišai,* பெ.(n.) இருதிசைகளுக்கிடைப்பட்ட திசை; intermediate directions between two perpendicular directions.

மறுவ. மூலத்திசை.

*[கோணல் + திசை – கோணத்திசை.]*

**கோணத்தேளி** *kōṇa-t-tēḷi,* பெ.(n.) உருவமைப்பில் கோணலாய்த் தோன்றும் மீன்; a kind of fish which seems to be having twisted body.

*[கோணல் + தேளி.]*

**கோணப்பார்வை** *kōṇa-p-pārvai,* பெ.(n.) மாறு கண் (இ.வ.); squint eye.

*[கோணல் + பார்வை.]*

**கோணப்பாறை** *kōṇa-p-pāṟai,* பெ.(n.) பூம்புகாருக்கு வடகிழக்கில் கடலடியில் அமைந்திருக்கும் ஒரு பாறை; an under sea-rock situated at north east of Poompukar.

*[கோணம் + பாறை.]*

**கோணப்புளி** *kōṇa-p-puḷi,* பெ.(n.) கொடுக்காய்ப் புளி (L.); Manilla tamarind.

*[கோணல் + புளி.]*

**கோணம்**[1] *kōṇam,* பெ.(n.) 1. வளைவு (பிங்.); curve, curvature. 2. வளைந்தவாள் (பிங்.); curved sword, scimitar. 3. யானைத்தோட்டி; elephant hook. *"கோணந் தின்ற வடுவாழ் முகத்த" (மதுரைக். 592).* 4. குறுந்தெரு; narrow short lane. *"கோணமு மறுகு மெல்லாம்" (சீவக. 615).* 5. மாப்பிலாச்சை மீன் (M.M.803.); seer-fish, bluish attaining 4 ft. in length.

வ.கோண; **Skt.** koṇa **Gk.** gonia (angle); **E.** gon.

*[கோண் → கோணம்.]*

**கோணம்**[2] *kōṇam,* பெ.(n.) 1. மூலை; angle, corner. *"கோணமொத் திலங்கோர் முழத்தினின்" (திருவாலவா.15:2).* 2. **கோணத்திசை** பார்க்க; see *kōṇa-t-tišai. "வடக்கொடு கோணந்தலை செய்யார்" (ஆசாரக். 31).* 3. ஒதுக்குப்புறமான இடம் (இ.வ.); remote, obscure place. 4. வயற்காடு; a small estate.

**ME**.Ang-Fr. Cornere ; **ML.** corneria; **L.** cornu; **E.** corner.

*[கோண் → கோணம்.]*

**கோணம்**[3] *kōṇam,* பெ.(n.) மூக்கு (பிங்.); nose, snout, nostril.

**Skt.** ghoṇka.

*[கோண் → கோணம்.]*

**கோணம்**[4] *kōṇam,* பெ.(n.) குதிரை (பிங்.); horse.

**Skt.** ghoṇa.

*[கோ → கோணம் (ஆண் குதிரை).]*

**கோணம்**[5] *kōṇam,* பெ.(n.) 1. நிலை; perspective. 2. கண்ணோட்டம்; point of views. ஒவ்வொரு தமிழறிஞரும் அவரவர் கோணத்தில் இலக்கியத்தை அணுகுகிறார்கள் (உ.வ.).

*[கோண் → கோணம்.]*

**கோணமங்கலம்** *kōṇa-maṅgalam,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Cuddalore Dt.

*[கோணம் (எருமை) + மங்கலம்.]*

**கோணமலை** *kōṇa-malai,* பெ.(n.) திரிகோணமலை; Trikōṇa-malai a place name in Sri Lanka.

மறுவ. கோணாமலை.

*[கோணம் + மலை.]*

**கோணமுகம்** *kōṇa-mugam,* பெ.(n.) ஒருபக்கம் கோணிய முகம்; face distorted to one side, as in paralysis, or in birth (சா.அக.).

*[கோணல் + முகம்.]*

**கோணமூக்கு** *kōṇa-mūkku,* பெ.(n.) பிறவியிலேயே அல்லது காயம், அடி முதலியவற்றால் ஊனமான மூக்கு; mis-shapen or ill-shaped nose by congenital or traumatic cause (சா.அக.).

மறுவ. கோணைமுகம்.

*[கோணல் + மூக்கு.]*

**கோணயன்** *kōṇayaṉ,* பெ.(n.) அறிவிலி, பயனற்றவன்; a senseless fellow, a worthless man.

ம. கோணயன்

*[கோன் → கோணயன்.]*

**கோணல்**[1] *kōṇal,* பெ.(n.) 1.வளைவு (பிங்.); wryness, obliquity, deflection. 2. கூன் (திவா.); hump, deformity. 3. மாறுபாடு (சூடா.); crookedness, as of mind. 4. மனவுளைச்சல் (உ.வ.); uneasiness of mind.

ம. கோணல்.

*[கோண் → கோணல்.]*

**கோணல்**[2] *kōṇal,* பெ.(n.) முறையற்ற போக்கு; perversity, deviation. உன்னறிவு ஏன் கோணலாகப் போகிறது? (உ.வ.).

*[கோண் → கோணல்.]*

**கோணல்குணம்** *kōṇal-kuṇam,* பெ.(n.) 1. மனத் துன்பம்; uneasiness of mind. 2. ***கோணல்*** பார்க்க; see *kōṇal* (சா.அக.).

*[கோணல் + குணம்.]*

**கோணல்சம்பா** *kōṇal-sambā,* பெ.(n.) நெல்வகை (விவசா.1); a kind of paddy.

*[கோணல் + சம்பா.]*

**கோணல்மாணல்** *kōṇal-māṇal,* பெ.(n.) 1. தாறு மாறு; crookedness, of a complex nature, difficult to set right. 2. மாறுபாடு; confused state or condition (சா.அக.).

*[கோணல் + மாணல்.]*

**கோணல்மூஞ்சி** *kōṇal-mūñji,* பெ.(n.) வெறுப்பு, சிரிப்பு முதலியவற்றைக் காட்டும் முகம் (இ.வ.); grimace, wry face expressing annoyance, etc. or meant to raise a laugh.

*[கோணல் + மூஞ்சி.]*

**கோணல்வளைவு** *kōṇal-vaḷaivu,* பெ.(n.) வளைவு வகை (கட்டட.நாமா.16); skew.

*[கோணல் + வளைவு.]*

**கோணலயம்** *kōṇalayam,* பெ.(n.) அரிவாள்; a sickle, reaping hook.

*[கோணல் + அயம் (இரும்பு).]*

**கோணலிலை** *kōṇal-ilai,* பெ.(n.) காட்டுநெல்லி; triple-nerved mercury (சா.அக.).

*[கோணல் + இலை.]*

**கோணவட்டம்**[1] *kōṇa-vaṭṭam,* பெ.(n.) கோணலா யுள்ள வட்டம்; irregular circle.

*[கோணல் + வட்டம்.]*

**கோணவட்டம்**[2] *kōṇa-vaṭṭam,* பெ.(n.) அரசவிருதுகளுள் ஒன்று; an emblem of royalty. *"கோணவட்டக் கோல முகத்த" (பெருங். மகத. 20:22).*

*[கோணல் + வட்டம்.]*

**கோணவழக்கு** *kōṇa-vaḻakku,* பெ.(n.) நேர்மை யற்ற சொற்போர்; perverse argument.

*[கோணல் + வழக்கு.]*

**கோணவாசல்** *kōṇa-vāšal,* பெ.(n.) அரண்மனை முதலியவற்றில் வளைந்து செல்லும் வாயில் (இ.வ.); gateways leading to a hall, circuitously arranged, as in a palace.

*[கோணம் + வாசல்.]*

**கோணவாய்** *kōṇa-vāy,* பெ.(n.) கோணலாயுள்ள வாய்; wry mouth.

*[கோணம் + வாய்.]*

**கோணவாயன்** *kōṇa-vāyaṉ,* பெ.(n.) பன்றி; pig.

மறுவ. பன்றி, மிறுதாறு.

*[கோணல் + வாயன்.]*

**கோணவாளை** *kōṇa-vāḷai,* பெ.(n.) வாளைமீன் வகைகளிலொன்று; a kind of fish.

*[கோணல் + வாளை.]*

**கோணவிட்டம்** *kōṇa-viṭṭam,* பெ.(n.) மூலைகளை இணைக்கும் விட்டம்; a cross beam which connects the corners.

*[கோணம் + விட்டம்.]*

**கோணவிருட்சம்** *kōṇa-viruṭšam,* பெ.(n.) கரும்பு; sugarcane (சா.அக.).

*[கோல் → கோன் → கோண் → கோணம் + விருட்சம்.]*

**கோணவீச்சம்** *kōṇa-viccam,* பெ.(n.) ஒரு புள்ளியிலிருந்து எழும் இருவேறு கோடுகளுக் கிடைய உள்ள தூரம்; amplitude of two lines starting from a particular point.

*[கோணம் + வீச்சம்.]*

**கோணவுடம்பு** *kōṇa-v-uḍambu,* பெ.(n.) கருவிலேயே ஒரு பக்கமாகத் திரும்பிக் கோண வடிவாய்க் காணப்படும் உடம்பு; the body of a baby in the womb which is so distorted to one side that it exhibits a ghastly appearance (சா.அ.க).

*[கோணல் + உடம்பு.]*

**கோணவெழுச்சி** *kōṇa-v-eḻucci,* பெ.(n.) உள் வளைந்த ஆண்குறியெழுச்சி; painful erection with incurvation of the penis towards the scrotum occurring in gonorrhoea (சா.அக.).

*[கோணல் + எழுச்சி.]*

**கோணவேல்** *kōṇa-vēl,* பெ.(n.) மரு என்ற முள்ளில்லாத வேல மரவகை; divi-divi tree.

மறுவ: கோணவேலன்.

*[கோணல் + வேல்.]*

**கோணவேலன்** *kōṇa-vēlaṉ,* பெ.(n.) ***கோணவேல்*** பார்க்க; see *kōṇa-vēl.*

*[கோணம் + அளவு.]*

**கோணளவு** *kōṇaḷavu,* பெ.(n.) கோணங்களின் மதிப்பீடு; angular measurement.

*[கோணம் + அளவு.]*

**கோணற்கழுத்து** *kōṇaṟ-kaḻuttu,* பெ.(n.) ***கோணக்கழுத்து*** பார்க்க; see *kōṇa-k-kaḻuttu* (சா.அக.).

*[கோணல் + கழுத்து.]*

**கோணற்காய்** *kōṇaṟ-kāy,* பெ.(n.) ***கோணை வேல்*** பார்க்க; see *kōṇai-vēl* (சா.அக.).

*[கோணல் + காய்.]*

**கோணற்காரன்** *kōṇaṟ-kāraṉ,* பெ.(n.) ஒரு மரம்; mountain snow-ball tree (சா.அக.).

*[கோணல் + காரன்.]*

**கோணற்கால்** *kōṇaṟkāl,* பெ.(n.) உள் வளைந்த கால்; bandy leg (சா.அக.).

மறுவ: கோணக்கால.

*[கோணல் + கால்.]*

**கோணற்பாய்** *kōṇaṟpāi,* பெ.(n.) சிறுமரப்பாய்; wooden mat.

*[கோணல் + பாய்.]*

**கோணன்** *kōṇaṉ,* பெ.(n.) 1. கூனன் (பிங்.); humpback. 2. அற (நீதி)க்கேடன்; unjust, unrighteous person. *"கொடுமராதியைப் பண்ணிடுங் கோணன்" (சிவதரு. பாவ. 66).*

*[கோணு → கோணன்.]*

**கோணன்** *kōṇaṉ,* பெ.(n.) காரி (சனி); saturn.

ம. கோணன்.

*[கோண் → கோணன்.]*

**கோணா** *kōṇā* பெ.(n.) ஓர் நீலகிரிப் பூடு; Nilgiri herb elm (சா.அக.).

*[கோண் → கோணா.]*

**கோணாக்கிணாக்கி** *kōṇā-k-kiṇākki,* பெ.(n.) சிற்றரத்தை; nodding galangal (சா.அக.).

*[கோணக்கிணாக்கி → கோணாக்கிணாக்கி.]*

**கோணாகோணம்** *kōṇā-kōṇam,* பெ.(n.) கோணத்துட் கோணம் (தொல். எழுத்து. 311, உரை); angular figure within an angular figure.

*[கோணம் + கோணம். கோணகோணம் → கோணாகோணம்.]*

**கோணாமாணாவெனல்** *kōṇā-māṇā-v-eṉal,* பெ.(n.) தாறுமாறாதற் குறிப்பு; expr. signifying confusion or disorderliness.

*[கோணு → கோணா + மாணா + எனல்.]*

**கோணாமுகம்** *kōṇā-mugam,* பெ.(n.) சூழ்ந்த அகழி யிருக்கை (வின்.); a fortified capital surrounded by a ditch.

*[கோள் → கோண் → கோணா + முகம்.]*

**கோணாய்** *kōṇāy,* பெ.(n.) 1. ஓநாய்; Indian wolf. 2. ஆண் நரி; male jackal.

*[கொள் → கோள் → கோண் + நாய் – கோணாய்.]*

**கோணாவட்டம்** *kōṇā-vaṭṭam,* பெ.(n.) 1.கோணத்துள் வட்டம் (தொல். எழுத்து. 311, உரை);

circle within an angular figure. 2. அரச விருதுகளுள் ஒன்று; an emblem of royalty. *"சூந்தற் பிச்சமுங் கோணா வட்டமும்" (பெருங். உஞ்சைக். 46:62).*

*[கோணம் + வட்டம் - கோணவட்டம் →கோணாவட்டம்.]*

**கோணாவலை** *kōṇā-valai,* பெ.(n.) இறால்மீன் பிடிக்கப் பயன்படும் வலை (மீனவ.); net used for prawn fishing.

*[கோணம் + வலை – கோணவலை →கோணாவலை.]*

**கோணி**[1] *kōṇi,* பெ.(n.) அத்தி; country fig.

*[கோளி → கோணி.]*

**கோணி**[2] *kōṇi,* பெ.(n.) 1. சாக்குப்பை; sacks made of jute fibre, gunny bag, sack cloth. கோணி கொண்டது, எருது சுமந்தது (பழ). 2. எட்டு மரக்கால் கொண்ட ஓர் அளவு; a measure of capacity 2 *tūṇi = 8 marakkāl. "கோணித் தீம் பசும்பால் வாரெரித்திட்டு" (தைலவ. தைல. 135).* 3. கந்தை; tatters. 4. பதினாயிரங் கோடா கோடி; ten thousand crores of a crore. 5. இருதூணி என்னுமோ ரளவை; a measure knownas '*iru thooni*'.

மறுவ. கோணிகை, கோணிப்பை, கோணியல்.

ம. கோணி; க., தெ., து., பட. கோணி; **skt.** gōṇi.

*[கோள் → கோளி → கோணி.]*

**கோணி**[3] *kōṇi,* பெ.(n.) பன்றி (பிங்.); boar, hog, as having a snout.

*[கோண் → கோணி.]*

**கோணிக்கயிறு** *kōṇi-k-kayiṟu,* பெ.(n.) சாக்குத் தைக்கும் சணல்நூல் (இ.வ.); gunny twine.

ம. கோணிக்கயர்.

*[கோணி + கயிறு.]*

**கோணிக்கவாயன்** *kōṇikkavāyaṉ,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy.

*[கோணி + கவையன் – கோணிக்கவையன் → கோணக்கவாயன்.]*

**கோணிக்குணங்கல்** *kōṇi-k-kuṇaṅgal,* பெ.(n.) மனம் தளர்தல்; getting uneasiness of mind through annoyance (சா.அக.).

*[கோண் → கோணி + குணங்கல்.]*

**கோணிக்குறுகல்** *kōṇi-k-kuṟugal,* பெ.(n.) மூப்பினால் வளைந்து சிறுத்தல்; becoming short and crooked through old age (சா.அக.).

*[கோணி + குறுகல்.]*

**கோணிக்கொடு-த்தல்** *kōṇi-k-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) மனமில்லாமற் கொடுத்தல்; to give grudgingly or with reluctance.

*[கோணு + கொடு – கோணிக்கொடு.]*

**கோணிக்கொள்ளல்** *kōṇi-k-koḷḷal,* பெ.(n.) 1. வளைந்து கொள்ளல்; being bent. 2. சினங் கொள்ளல்; getting angry. 3. பிணக்குக் கொள்ளல்; quarrelling as of lovers (சா.அக.).

*[கோணி + கொள்ளல்.]*

**கோணிகை**[1] *kōṇigai,* பெ.(n.) ***கோணி***[2] பார்க்க; see *kōṇi*[2].

*[கோண் → கோணிகை.]*

**கோணிகை**[2] *kōṇigai,* பெ.(n.) சிற்றூரில் ஏற்பட்டிருந்த பழைய வரிவகை (I.M.P.T.P. 234); an ancient village cess.

*[கோண் → கோணிகை.]*

**கோணித்தட்டம்மை** *kōṇi-t-taṭṭammai,* பெ.(n.) ஒருவகைத் தட்டம்மை; a kind of small - pox with elevated or raised flat patches in the body (சா.அக.).

மறுவ: கோணித்தட்டு.

*[கோணி + தட்டம்மை.]*

**கோணித்தட்டு** *kōṇi-t-taṭṭu,* பெ.(n.) ***கோணித்தட்டம்மை*** பார்க்க; see *kōṇi-t-taṭṭammai.*

*[கோண் → கோணி + பட்டு.]*

**கோணிப்பட்டு** *kōṇi-p-paṭṭu,* பெ.(n.) பட்டுவகை (S.I.I.VIII,23); a kind of silk.

*[கோண் → கோணி + பட்டு.]*

**கோணிப்பட்டை** *kōṇi-p-paṭṭai,* பெ.(n.) சாக்குத் துணி; coarse gunny-cloth.

*[கோணி + பட்டை.]*

**கோணிப்பை** *kōṇi-p-pai,* பெ.(n.) சாக்கு; coarse sack, gunny-bag.

*[கோணி + பை.]*

**கோணிப்போ–தல்** *kōṇi-p-pō-,* 5 செ.கு.வி. (v.i.) வளைதல்; to grow wry (சா.அக.).

*[கோண் → கோணி + போ.]*

**கோணியம்** *kōṇiyam,* பெ.(n.) ***கோப்பிரண்டை*** பார்க்க; see *kōppiraṇḍai.* (சா.அக.).

*[கோப்பிரண்டை → கோணியம்.]*

**கோணியல்** *kōṇiyal,* பெ.(n.) ***கோணிப்பை*** பார்க்க; see *kōṇi-p-pai.*

*[கோணி → கோணியல்.]*

**கோணியலூசி** *kōṇiyal-ūši,* பெ.(n.) ***கோணியூசி*** பார்க்க; see *kōṇi-y-ūši.*

*[கோணி → கோணியல்.]*

**கோணியூசி** *kōṇi-y-ūši,* பெ.(n.) சாக்குத் தைக்கும் ஊசி; packing-needle for sewing gunny bags, bodkin.

**மறுவ:** கோணியலூசி.

**ம.** கோணிசூசி.

*[கோணி + ஊசி.]*

**கோணீசுவரர்** *kōṇīśuvarar,* பெ.(n.) திருக்கோண மாமலையிலே கோயில் கொண்டிருக்கும் இறைவன்; God at Tirikonamalai in Sri Lanka.

*[கோணி + ஈசுவரன்.]*

**கோணு–தல்** *kōṇu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. வளைதல் (பிங்.) ; to be bent, curved. 2. கோணலா யிருத்தல்; to be awry, crooked, oblique. 3. நெறி பிறழ்தல்; to deviate, swerve from the proper course. 4. முகங்கோணுதல், மாறுபடுதல் (சூடா.); to be perverse, to be changed as circumstances. 5. வெறுப்புக் கொள்ளுதல்; to have dislike or aversion. *"கோணாதே குலவி நுழைந்தனையே" (அருட்பா. 6. திருவடிப்புகழ்ச்.1:4).* 6. சாய்தல்; to incline.

**ம.** கோணுக.

**Fin.** kaantya, kaantaa (to turn), kaannos (turn); **Kari.** keanda; **Est.** kaanata; **Komi.** kezni; **Mong.** yandai.

*[கோள் → கோண் → கோணு–தல்.]*

**கோணூசி** *kōṇūši,* பெ.(n.) ***கோணியூசி*** பார்க்க; see *kōṇi-ūši.*

*[கோண் + ஊசி.]*

**கோணை**[1] *kōṇai,* பெ.(n.) 1. வளைவு; curvature. 2. கோணல்; crookedness. 3. கொடுமை (அக.நி.); severity, cruelty. 4. தொல்லை; difficulty, trouble. *"கோணை பெரிதுடைத்தெம் பெம்மானைக் கூறுதலே" (திவ்.திருவாய். 2,5:10).* 5. வலிமை; strength. *"கோணை யிருங்குண்டை" அட்டப். திருவேங்.மா. 58).*

*[கோண் → கோணை.]*

**கோணை**[2] *kōṇai,* பெ.(n.) அழிவின்மை (திவா.); imperishability.

*[கோள் : வட்டம், நிறைவு, அழிவின்மை. கோள் → கோண் → கோணை.]*

**கோணைக்கத்தி** *kōṇai-k-katti,* பெ.(n.) அறுவை செய்வதற்குப் பயன்படும் வளைந்த கத்தி; a curved knife used in surgery (சா.அக.).

*[கோணை + கத்தி.]*

**கோணைக்கழுத்தன்** *kōṇai-k-kaḻuttaṉ,* பெ.(n.) வளைவுள்ள கழுத்துள்ளோன்; a man of crooked neck (சா.அக.).

*[கோண் → கோணை + கழுத்து + அன்.]*

**கோணைக்களிறு** *kōṇai-k-kaḷiṟu,* பெ.(n.) வலுவுள்ள இளம்யானை; male of the elephant.

*[கோணை + களிறு.]*

**கோணைக்குரங்கன்** *kōṇai-k-kuraṅgaṉ,* பெ.(n.) சூழ்ச்சிக்குணமும் குறும்புத்தனமும் உள்ளவன்; a man of crooked and mischivous disposition (சா.அக.).

*[கோணை + குரங்கு + அன்.]*

**கோணைத்தலைப்பாடி** *kōṇai-t-talaippāḍi,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thanjai Dt.

*[கோணை + தலை + பாடி.]*

**கோணைப்பல்** *kōṇai-p-pal,* பெ.(n.) 1. ஒழுங் கில்லாமல் வளர்ந்த பல்; an irregular tooth. 2. கோரைப்பல்; canine tooth.

ம. கொம்பல்லு; பட. கோணெகல்லு.

*[கோணை + பல்.]*

**கோணைப்பெருமான்** *kōṇai-p-perumāṉ,* பெ.(n.) ஒற்றைத் திருவடிச் சிவம்; Śiva in his *Egapādādam form.*

*[கோணை + பெருமான்.]*

**கோணைப்பேச்சு** *kōṇai-p-pēccu,* பெ.(n.) அயன் மொழி (இ.வ.); foreign language.

*[கோண் → கோணை + பேச்சு.]*

**கோணைமாதம்** *kōṇai-mādam,* பெ.(n.) சிலை மாதம் (மார்கழி) (வின்.); *Mārkaḻi,* as an unpropitious month.

மறுவ. பீடை மாதம்.

*[கோணை + மாதம்.]*

**கோணைமுகம்** *kōṇai-mugam,* பெ.(n.) ***கோண முகம்*** பார்க்க; see *kōṇa-mugam* (சா.அக.).

*[கோண் → கோணை + முகம்.]*

**கோணையன்** *kōṇaiyaṉ,* பெ.(n.) தீக்குண முள்ளவன் (இ.வ.); man of crooked disposition.

*[கோணை → கோணையன்.]*

**கோணையாராய்ச்சி** *kōṇai-y-ārāyccì,* பெ.(n.) தவறான ஆய்வு; perverted research.

*[கோணை + ஆராய்ச்சி.]*

**கோணைவாயன்(கோணைவாய்ச்சி)** *kōṇai-vāyaṉ,* பெ.(n.) பிறவியில் அல்லது வலிப்பினால் ஒருபக்கம் வளைந்த வாய் உள்ளவன்–ள்; man with a writhed or distorted mouth due to congenital causes or nervous affections (சா.அக.).

*[கோணை + வாய் + அன்.]*

**கோணைவேல்** *kōṇai-vēl,* பெ.(n.) முள்ளில்லாத வேல்; American sumach (சா.அக.).

மறுவ. கோணற்காய்

*[கோணை + வேல்.]*

**கோத்தக்கொடி** *kōtta-k-koḍi,* பெ.(n.) இலந்தை jujube (சா.அக.).

*[கோத்தல் + கொடி.]*

**கோத்தகிரி** *kōtta-giri,* பெ.(n.) நீலகிரி மாவட்டத்தில் அமைந்த ஓர் ஊர்; a village situated in Nilgiris District.

*[கோத்தர் + கிரி – கோத்தகிரி. கேரி → கிரி]*

கோத்தர்கள் வாழும் இடமாதலால் இப் பெயர் பெற்றது.

**கோத்தணி** *kōttaṇi,* பெ.(n.) ***கொடிமுந்திரி*** பார்க்க; see *koḍi-mundiri.*

*[கொத்து + அணி – கொத்தணி → கோத்தணி.]*

**கோத்தணிகை** *kōttaṇigai,* பெ.(n.) ***கோத்தணி*** பார்க்க; see *kōttaṇi.*

*[கோத்தணி → கோத்தணிகை.]*

**கோத்தந்தம்[1]** *kō-t-tandam* பெ.(n.) 1. மாட்டுக் கொம்பு; horn of cattle. 2. மாட்டுப்பல்; tooth of cow.

மறுவ. கோதந்தம்.

*[கோ + தந்தம்.]*

**கோத்தபுட்பகம்** *kōttapuṭpagam,* பெ.(n.) செம்மரம்; redwood; red cedar (சா. அக.).

*[கோத்தல் + புட்பகம்.]*

**கோத்தம்** *kōttam-,* பெ.(n.) நீலமலையில் பேசப்படும் திருந்தாத் திராவிட மொழிகளுள் ஒன்று; one of the uncultivated the Dravidian languages, which is spoken at Nilgiri hills.

*[கோ → கோத்தம்.]*

**கோத்தமாலை** *kōtta-mālai,* பெ.(n.) தொடையல்; garland.

*[கோத்த + மாலை.]*

**கோத்தர்** *kōttar,* பெ.(n.) நீல மலைவாழ் பழங்குடியினத்தவர்; Kotas a tribe on the Nilgiris District.

*[கோ - மலை. கோ →கோத்தர் (மலை வாழ்நர்).]*

கோத்தகிரி முதலிய ஏழு ஊர்களில் மொத்தம் சில நூறு கோத்தர் வாழ்கின்றனர். 1981–ல் 492 பேர் இருந்தனர். கோத்தர் தம் ஊர்களைக் 'கோகால்' என அழைக்கின்றனர்.

**கோத்தர்மொழி** *kōttar-moḻi,* பெ.(n.) ***கோத்தம்*** பார்க்க; see *kōttam.*

*[கோத்தர் + மொழி]*

**கோத்தற்கோவை** *kōttaṟ-kōvai,* பெ. (n.) காக்கைப் பாலை; esculent-leaved false kamela (சா. அக.).

*[கோத்தல் + கோவை]*

**கோத்தனம்** *kōttaṉam,* பெ.(n.) நாற்பது சரமுள்ள முத்துமாலை; pearl garland is having forty strings.

*[கோ + தனம்.]*

**கோத்தனி** *kōttaṉi,* பெ.(n.) ***கொடிமுந்திரி*** பார்க்க; see *koḍi-mundiri.*

*[கோத்தணி → கோத்தனி.]*

**கோத்திகவாசனம்** *kōttiga-v-āšaṉam,* பெ.(n.) முழந்தாளைச் சுண்டிக் குளசிரண்டில் பதியவைத்து உட்கார்ந்திருத்தல்; a posture in which the legs are folded crosswise and the inward joints of the feet made to rest in the flexure on either side (சா. அக.).

*[குத்தகம் → கோத்திகம் + ஆசனம்.]*

**கோத்திரப்பெயர்** *kōttira-p-peyar,* பெ.(n.) குடிப்பெயர் (பன்னிருபா. 146); patronymic.

*[கோத்திரம் + பெயர்.]*

**கோத்திரம்**[1] *kōttiram,* பெ.(n.) 1. தொட்டி செய் நஞ்சு; a prepared arsenic. 2. கொடிமுந்திரிகை; common grape. 3. நெட்டிப்புல்; sola pith grass. 4. மறுபிறப்பிற்குக் காரணமான தீவினை; karma determining re-birth. 5. நிலம்; earth. 6. காடு; forest. 7. குடை; umbrella (சா.அக.).

*[கோ + திரம்.]*

**கோத்திரம்**[2] *kōttiram,* பெ.(n.) 1. மரபுவழி; lineage 2. தலைமுறை; generation. 3. கால்வழி; lineage, family. *"எவ்வூரெக் கோத்திரத்தீர்" (பெருங். மகத. 6:185).*

*[கொத்து → கோத்து → கோத்திரம்.]*

**கோத்திரம்**[3] *kōttiram,* பெ.(n.) 1. மாட்டுக்கொட்டில்; protection or shelter for cows, cow-pen. cow-shed stable for cattle. 2. மாட்டுமந்தைக்குரிய முனிவரிடம் பயின்ற மாணவரைச் சுட்டும் சொல்; a word denoting the owner-cum teacher of a cow-pen, who considered to be the lineage head of a student's heritage. "கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர்" 3. பிராமணரின் 49 குடிப்பிரிவுகளுள் ஒன்று; one of the 49 Gotras of Brahmins.

*[கோ + திரம் - கோத்திரம். ஒ.நோ. மா + திரம் - மாத்திரம். கோ - மாடு, ஆவு, ஆன். கோத்திரம் - மாட்டு மந்தை, மாட்டுத்தொழுவம்.]*

த. கோத்திரம் > **skt.** Gōtra.

மாட்டுக் கொட்டிலைக் குறித்த இச்சொல் வடமொழியில் Gōtra எனவும் Gōtrai எனவும் வழங்குகிறது. எந்த மாட்டுக் கொட்டிலுக்கு உரிமையுடைய முனிவரிடம் ஒரு மாணவன் பயின்றானோ அவன் அந்த முனிவரின் பெயரைத் தன் குடிப்பெயராகக் கொள்வது ஆரியரின் மரபாகும். இதனை, an affix used for forming a Patr.Li; a tribe, subdivision in Brāhman Caste 49 Gōtras are reckoned and supposed to be sprung from and named after celebrated teachers as Sandilya, kasyapa, Gauthama, Bharadvāja etc., என்று மாணியர் வில்லியம்சு வடமொழி அகரமுதலியில் குறிப்பிடுகிறார்.

**கோத்திரம்**[4] *kōttiram,* பெ.(n.) சிறுவரகு (மலை.); kora millet.

*[கோத்து - மலை. கோத்து →கோத்திரம்.]*

**கோத்திரமின்மை** *kōttira-miṉmai,* பெ.(n.) அருகன் எண்குணங்களுள் மறுபிறப்புக்குரிய வினை யில்லாமை (பிங்.); condition of being free from karma that causes re-birth, one of *arugaṉ-eṉ-kuṇam.*

*[கோத்திரம் + இன்மை.]*

**கோத்திரி**[1] *kōttiri,* பெ.(n.) 1. கொடிமுந்திரிகை; grape vine. 2. முசுமுசுக்கை; bristly bryony.

*[கோத்து →கோத்திரி.]*

**கோத்திரி**[2] *kōttiri,* பெ.(n.) மலை; mountain. *"கொங்கின் புசககோத்திரி" (திருப்பு. 1187).*

*[குவடு → கோடு →கோ → கோத்து →கோத்திரி.]*

**கோத்திரி**[3] *kōttiri,* பெ.(n.) தெய்வங்களுக்குப் படைப்பிட்டு அதன் பேரில் நாட்டும் திரி அல்லது சிறு பந்தம் (நாஞ்சில்) ; burning wick or small torch placed on an offering of cooked rice to a deity.

ம. கோத்திரி.

*[கோ + திரி.]*

**கோத்திரிகை** *kō-t-tirigai,* பெ.(n.) 1. கொடி முந்திரிகை; grape vine. 2. முசுமுசுக்கை; rough bryony (சா. அக.).

*[கோத்து →கோத்திரிகை.]*

**கோத்திரேயம்** *kōttirēyam,* பெ.(n.) வெண்பருத்தி; white cotton (சா. அக.).

**கோத்திரை** *kōttirai,* பெ.(n.) 1. நிலம் (பிங்.); earth. 2. மலை; mountain.

*[கோ →கோத்து (மலை) →கோத்திரை.]*

**கோத்திழை-த்தல்** *kōttiḻai-,* 4 செ.குன்றாவி.(v.t.) பாய், கூடை முதலியவற்றைப் பழுதுபார்த்தல்; to patch up a hole or rent, as in a mat, a basket.

*[கோ →கோர்→கோத்து + இழை-.]*

**கோத்துக்கொடு-த்தல்** *kōttu-k-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. பிறருக்கு ஊசியில் நூலைக் கோத்துக் கொடுத்தல்; to thread a needle and pass it to another. 2. இருவர்க்குள் பகை யுண்டாகும்படி ஒருவர் கூற்றை மற்றவர்க்கு மாறுபடுத்திக் கூறுதல் (வின்.); to tell tales and create enmity between two persons.

*[கோர் → கோத்து + கொடு-.]*

**கோத்தும்பி** *kō-t-tumbi,* பெ.(n.) 1. அரசவண்டு; king of beetle. 2. 'கோத்தும்பீ' என்ற தொடரைப் பாட்டின் ஈறுதோறுங் கொண்ட திருவாசகப் பதிகம்; a poem in *Tiruvāšagam* with the refrain `*kōttumbi*' at the end of each verse.

*[கோ + தும்பி.]*

**கோத்துவாங்கு**[1]**-தல்** *kōttu-vāṅgu-,* 5 செ. கு.வி. (v.i.) ஆடைக்கரையை வேறு நூலில் தனியாக நெய்தல்; to weave the borders of a cloth with threads of a different colour.

**கோத்துவாங்கு**[2]**-தல்** *kōttu-vāṅgu-,* 5 செ. குன்றாவி. (v.t.) கோணி முதலியன தைத்தல்; to do coarse sewing as of gunny bags, mats.

*[கோத்து + வாங்கு-.]*

**கோத்துவிடு-தல்** *kōttu-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1.துன்பத்துக்கு உள்ளாக்குதல்; to bring into difficulties. 2. பகைமூட்டுதல் (வின்.); to show discord, create enmity.

*[கோத்து + விடு-.]*

**கோத்தை** *kōttai,* பெ.(n.) 1. பழுது; defect, blemish, flaw. *“கோத்தை யுண்டாமோ” (பரிபா. 175:5).* 2. குருடன்; a blind person. 3. பீளை; rheum. secretion from the eyes. 4. அழிம்பன்; destroyer. 5. ஆண்நரி; male jackal.

Gk. kakos.

*[கோது →கோத்து →கோத்தை.]*

**கோத்தொட்டுண்ணப்பாலது** *kōttoṭṭuṇṇa-p-pāladu,* பெ.(n.) அரசன் உரிமையுடன் பெற்று நுகர்தற்குரியதான இறைவரி கடமை முதலிய வரிவகைகள்; land revenue etc lawfully accruing to a king. *“ஊராட்சியும் வட்டி நாழியும் உள்ளிட்டுக் கோத்தொட்டுண்ணப் பால தெவ்வகைப் பட்டதும் கோக்கொள்ளாதேய் பள்ளிச் சந்தத்துக்கேய் பெறுவதாகவும்” (பெரிய லெய்டன் செப்பேடுகள்.).*

*[கோ (அரசன்) + தொட்டு + உண்ணற்பாலது.]*

**கோதஓடைப்பட்டி** *kōda-ōḍaippaṭṭi,* பெ.(n.) தேனி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Theni Dt.

*[கோதன் + ஓடை + பட்டி.]*

**கோதகம்** *kōdagam,* பெ.(n.) 1. சுக்குநாறிப் புல்; ginger grass. 2. அழிஞ்சில்; sage leaved alangium (சா.அக.).

*[கோது → கோதகம்.]*

**கோதங்கிப்பட்டி** *kōdaṅgi-p-paṭṭi,* பெ.(n.) தேனி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Theni Dt.

*[கோடங்கி →கோதங்கி + பட்டி.]*

**கோதடி** *kōdaḍi,* பெ.(n.) கப்பற் கயிற்றை உரைசாமற் காக்குங் கருவி (Naut.); chafing-gear, any material used to protect sails or rigging at points where they are exposed to friction.

*[கோ + தடி.]*

**கோதண்டப்புலியர்** *kōdaṇḍa-p-puliyar,* பெ.(n.) கள்ளர்குடிப் பட்டப்பெயர்களுள் ஒன்று (கள்ளர் சரித்.பக்.98); a caste title of Kaḷḷars.

*[கோதண்டம் + புலி + அர்.]*

**கோதண்டபாணி** *kōdaṇḍa-pāṇi,* பெ.(n.) இராமன் (வில்லை கையிற் கொண்டவன்); Rama, as having bow *Kodaṇḍam* in his hand. *"கோதண்ட பாணி குலமருகன்" (திருப்போ. சந்நிதி. மாலை, 66).*

*[கோதண்டம் + தண்டம் + பாணி]*

**கோதண்டம்**[1] *kōdaṇḍam,* பெ.(n.) 1. வில்; bow. *"கனகவரைக் கோதண்டன்" (திருப்போ. சந். தாலாட்டு காப்பு.).* 2. இராமன் வில்; the bow of Rama. 3. புருவ நடுவம்; space between eyebrows. *"அணைவரிய கோதண்ட மடைந்தருளி" (சி.சி. 9:8).*

*[கோ + தண்டம்.]*

**கோதண்டம்**[2] *kōdaṇḍam,* பெ.(n.) 1. பள்ளிச் சிறாரைத் தண்டிக்குந் தொங்கு கயிறு (உ.வ.); rope or swing suspended in old-time schools for infliction of punishment. 2. பழங்காலத்தில் பிடிபட்ட குற்றவாளியின் கைகால்களைக் கட்டி தண்டிக்க மரத்தினால் செய்யப்பட்ட ஓர் அமைப்பு; stocks in ancient time used to punish criminals (prisoners).

**ம.** கோதாண்டம்; **க.** கோதண்ட; **தெ.** கோதண்டமு.

*[கோ + தண்டம்.]*

**கோதண்டவெள்ளம்** *kōdaṇḍa-veḷḷam,* பெ.(n.) ***கோதண்டவெளி*** (தக்கயாகம்.334, உரை) பார்க்க; see *kōdaṇḍa-veḷi.*

*[கோதண்டம் + வெள்ளம்.]*

**கோதண்டவெளி** *kōdaṇḍa-veḷi,* பெ.(n.) நெற்றிக் கண் (தக்கயாகப்.34, உரை.); Śiva's third eye, in the forehead.

**மறுவ.** கோதண்டவெள்ளம்.

*[கோதண்டம் + வெளி.]*

**கோதண்டவேர்** *kōdaṇḍa-vēr,* பெ.(n.) கணுக்கால்; ankle (சா. அக.).

*[கோதண்டம் + வேர்.]*

**கோதண்டை** *kōdaṇḍai,* பெ.(n.) சிற்றூர்ப் பெயர்; name of a village.

*[கோ + தண்டலை – கோத்தண்டலை → கோதண்டை.]*

**கோதத்தம்** *kōdattam,* பெ.(n.) 1. அரிதாரம்; yellow orpiment. 2. ஒரு வெண்தாதுவுப்பு; a white mineral substance, apparently an earthy salt (சா.அக.).

*[கோ + தத்தம்]*

**கோதந்தம்** *kōtandam,* பெ.(n.) 1. மாட்டுக்கொம்பு; horn of cattle. 2. ஆவின் பல்; cow's tooth (சா.அக.).

*[கோ + தந்தம்]*

**கோதந்தி** *kōdandi,* பெ.(n.) 1. தாடை; jaw. 2. கதுப்பு; chin. 3. கன்னம்; cheek (சா. அக.).

*[கொழுது + அந்தி – கொழுதந்தி → கோதந்தி]*

**கோதப்பட்டி** *kōdappaṭṭi,* பெ.(n.) தேனி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Theni Dt.

*[கோதன் + பட்டி.]*

**கோதம்**[1] *kōdam,* பெ.(n.) 1. பொல்லாங்கு; fault. *"கோதஞ்செய் குடர்கள்" (சீவக. 1583).* 2. சீதாங்க செய்நஞ்சு (W.); a mineral poison.

*[கோது → கோதகம்]*

**கோதம்**[2] *kōdam,* பெ.(n.) 1. சினம்; anger. *"கோதம்புரி மனத்தார்" (பிரமோத். 13:12).* 2. குற்றம்; fault; blemish. 3. வெறுப்பு; hatred aversion.

*[கதம் → கொதம் → கோதம்]*

**கோதம்**[3] *kōdam,* பெ.(n.) ***கோத்திரம்*** பார்க்க; see *kōttiram. "நீசகோதமும் நின்றுதித்திட" (மேருமந். 332).*

*[கோத்திரம் → கோதம்]*

**கோதமன்** *kōdamaṉ,* பெ.(n.) ***கௌதமன்*** பார்க்க; see *koudamaṉ. "கோதமன் காதலன் கூறன் மேயினான்" (கம்பரா. கார்முக. 11).*

*[கவுதமன் → கோதமன்.]*

**கோதமனார்** *kōdamaṉār,* பெ.(n.) கடைச்சங்கப் புலவருள் ஒருவர் (பாவலர். சரித்.); a poet in the last Tamil Academy of Sangam age.

*[கோதமன் + ஆர்.]*

**கோதமாயவா** *kōda-māyavā,* பெ.(n.) கோதுமை; wheat (சா. அக.).

*[கோதுமை + யவம்.]*

**கோதரணி** *kōdaraṇi,* பெ.(n.) ஒருவகைப் பூ; a kind of flower (சா. அக.).

*[கோது + (அரளி) அரணி.]*

**கோதரபுட்பி** *kōdara-puṭpi,* பெ.(n.) ஒரு பூடு; a plant (சா. அக.).

*[கோதரம் + புட்பி.]*

**கோதரம்** *kōdaram,* பெ.(n.) சுக்கு; dry ginger (சா.அக.).

*[கோது →கோதரம்.]*

**கோதரவம்** *kōdaravam,* பெ.(n.) 1. உடும்பு; guana. 2. ஒரு கொடிய நச்சுப்பாம்பு; a very poisonous snake (சா. அக.).

*[கோது + அரவம்.]*

**கோதல்** *kōdal,* பெ.(n.) 1. அழிந்த பண்டம்; decayed or decomposed matter or substance. 2. முத்தமிடல்; kissing. 3. எயிற்று நீர்; sucking the lips (சா. அக.).

*[கொழுது →கோது →கோதல்.]*

**கோதலூத்து** *kōdalūttu,* பெ.(n.) தேனி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Theni Dt.

*[கொழிதல் →கோதல் + ஊத்து.]*

**கோதவாடி** *kōda-vāḍi,* பெ.(n.) கோவை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kovai dt.

*[கோதன் + (பாடி) வாடி.]*

**கோதளங்காய்** *kōdaḷaṅkāy,* பெ.(n.) சமுத்திராப் பழம்; common Indian oak (சா. அக.).

*[கோதளம் + காய்.]*

**கோதனம்**[1] *kōdaṉam,* பெ.(n.) 1. ஆவின்கன்று (பிங்.); calf. 2. ஆன் (பசுச்) செல்வம்; cows considered as wealth. *"மாதனம் கோதனங்கள்" (திருவாலவா. 40:4).*

**மறுவ:** கோதன்னம்.

*[கோ + தனம்.]*

**கோதா**[1] *kōdā,* பெ.(n.) உடும்பு; guana.

*[கோது →கோதா.]*

**கோதா**[2] *kōdā,* பெ.(n.) 1. கொம்மட்டி; small water-melon. 2. நாரத்தை; citron (சா. அக.).

**ம.** கோத; **Skt.** gōdhā.

*[கோது →கோதா.]*

**கோதாக்கினி** *kōdākkiṉi,* பெ.(n.) செழுமலர்க் கொன்றை; a flowering tree of the cassia genus.

*[கோது + (அழகினி) அக்கினி.]*

**கோதாட்டம்** *kōdāṭṭam,* பெ.(n.) ***கோதாட்டு*** பார்க்க (வின்.); see *kōdāṭṭu.*

*[கொழுது →கோது + ஆட்டம்.]*

**கோதாட்டு**[1]**-தல்** *kōdāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தீவினை முதலிய குற்றங்களைப் போக்குதல்; to cleanse or purify from sin or dirt. *"நந்தம்மைக் கோதாட்டி" (திருவாச. 7:17).* 2. சீராட்டுதல்; to caress, tend with care. *"குருவிபறவாமற் கோதாட்டி" (பட்டினத்.திருப்பா.17:8).*

*[கொழுது →கோது + ஆட்டு.]*

**கோதாட்டு**[2] *kōdāṭṭu,* பெ.(n.) 1. அழுக்கைப் போக்கித் தூய்மை செய்தல் (சா. அக.); purifying by removing the dirt. 2. வருத்துகை; vexing, ill-treatment. 3. வஞ்சிக்கை (W.); deceit, guile fraud. 4. குறும்பு விளையாட்டு; mischiveous sport. *"கோதாட்டொழி" (ஆத்திசூ.).*

**மறுவ:** கோதாட்டம்.

*[கோது + ஆட்டு.]*

**கோதாணி**[1] *kōdāṇi,* பெ. (n.) பெருங்குரும்பை; bow-string hemp, stemless plant (சங். அக.).

*[கோது + (தாளி) தாணி.]*

**கோதாணி**[2] *kōdāṇi,* பெ. (n.) கால்நடைகளுக்குத் தீவனம் வைக்கும் நெடுங்கூடை; a long open basket for cattle feed.

*[கோது + (தாழி) தாணி.]*

**கோதாரணம்** *kōdāraṇam,* பெ. (n.) 1. கலப்பை (யாழ்.அக.); plough. 2. மண்வெட்டி; spade, hoe.

**ம.** கோதாரணம்.

**கோதாரி** *kōdāri,* பெ. (n.) 1. கக்கல்கழிச்சல் நோய்; spasmodic cholera. 2. கொள்ளைநோய்; epidemic, pestilential disease, as small-pox, scarlet fever.

**மறுவ:** கோதாரிக் கழிச்சல்.

*[கோது → கோதாரி.]*

**கோதாரிக் காய்ச்சல்** *kōdāri-k-kāyccal,* பெ. (n.) பெருவாரிச் சுரம்; influenza (சா. அக.).

*[கோதாரி + காய்ச்சல்.]*

**கோதாரிக் குரல்** *kōdāri-k-kural,* பெ. (n.) கக்கல் கழிச்சல் (வாந்தி பேதிக்) குரல்; cholera-voice (சா. அக.).

*[கோதாரி + குரல்.]*

**கோதாவரி**[1] *kōdāvari*, பெ.(n.) ***கோதாவிரி*** பார்க்க; see *kōdāviri*.

மறுவ: கோதாவிரி.

*[கோதாவிரி → கோதாவரி.]*

**கோதாவிரி** *kōdāviri*, பெ.(n.) ஆந்திர மாநிலத்தில் பாயும் ஒரு பேராறு (சூடா.); the river Godavari in Andhra Pradesh. *"சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவிரி" (கம்பரா. சூர்ப்ப.1).*

*[கோதை + விரி – கோதாவிரி (கோதை = பெண். விரி = விரிந்து செல்வது.).]*

**கோதாளை** *kōdāḷai*, பெ.(n.) கப்பற்குழாயின் வாய் (Naut.); limber hole, mouth of conduit on either side of the kelson to afford a passage for water to the pump-well.

*[கோ + துளை – கோதுளை → கோதாளை.]*

**கோதானம்** *kōdāṉam*, பெ. (n.) பத்துவகைக் கொடைகளில் ஒன்றாகிய ஆ(பசு)க்கொடை; gift of a cow, one of ten gifts. அப்பன் சோற்றுக்கு அழுகிறான், பிள்ளை கும்பகோணத்தில் கோதானம் செய்கிறான் (பழ).

*[கோ + தானம்.]*

**கோதி**[1] *kōdi*, பெ. (n.) கோதுமை; wheat.

*[கோது → கோதி.]*

**கோதி**[2] *kōdi*, பெ. (n.) நெற்றி; forehead.

*[குது → கொது → கோது → கோதி.]*

**கோதிகை** *kōdigai*, பெ. (n.) 1. உடும்பு (தைலவ. பாயி. 57); a big lizard. 2. முதலை (யாழ். அக.); crocodile.

*[கோள் → கோள்து → கோது → கோதிகை.]*

**கோதிமம்** *kōdimam*, பெ.(n.) கோதுமை; wheat (சா. அக.).

மறுவ: கோதி, கோதமாயவா.

**கோதிமுடி–த்தல்** *kōdi-muḍi-*, 4 செ.கு.வி. (v.i.) மயிர்சீவிக்கட்டுதல்; to form a hair-knot.

*[கோதி + முடி–]*

**கோதில்லாச் சாறு** *kōdiḷḷā-c-cāṟu*, பெ. (n.) இலை, காம்பு, செத்தைகள் இல்லாத சாறு; juice free from leaves, strings and other rubbish (சா. அக.).

*[கோது + இல்லா + சாறு.]*

**கோதில்லாப்புளி** *kōdiḷḷā-p-puḷi*, பெ. (n.) காம்புகள் களைந்த புளி; tamarind got rid of strings and other strings (சா. அக.).

*[கோது + இல்லா + புளி.]*

**கோது**[1]**–தல்** *kōdu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. அலகால் இறகைக் குடைந்து நேராக்குதல்; to peck and adjust with the beak, as feathers. *"மயில்கோது கயிலாயம்" (தேவா. 1157: 6).* 2. மயிர்ச் சிக்கெடுத்தல்; to disentangle, as the hair, with the fingers. *"கோதிச் சிக்கின்றி முடிக்கின்ற... குழலி" (பெருந்தொ. 1323).* 3. சிறிது சிறிதாக உண்ணுதல்; to pick, as food in eating; to take in small quantities, as birds, sickly or dainty children, bashful persons. குழந்தை சோற்றைக் கோதுகிறது. 4.வெளிச் சிதறுதல்; to scatter, spill. *"கோதிக் குழம்பலைக்குங் கும்பத்தை" (நாலடி,47).* 5. ஓலையை வாருதல்; to tear in strips, as tender leaves. 6. தோண்டுதல் (யாழ்ப்.); to hollow, excavate, scoop out.

ம. கோது

*[கொழுது → கோது.]*

**கோது**[2] *kōdu*, பெ. (n.) 1. சக்கை; refuse, waste, empty kernels of grain, lees, residuum, leavings; fibre, as of a tamarind fruit, sugarcane. *"மற்றதன் கோதுபோற் போகு முடம்பு" (நாலடி, 34).* 2. பழ முதலியவற்றின் தோல்; covering, capsule, pod. *"சங்கெட்கோது" (தைலவ. தைல. 18).* 3. பூ முதலிய வற்றின் நரம்பு; fibrous structure in flowers, etc. *"கோது குலாவிய கொன்றை" (திருமந். 16).* 4. குற்றம்; fault, blemish, defect, error. *"கோதியல் காமம்" (சீவக. 223).* 5. பயனின்மை; uselessness. *"கோது செய்குணக் கோதினுட் கோதனான்" (சீவக. 240).* 6.நெறிதவறுகை; deviation,deflection.

ம. கோது.

**Fin.** kuori (shell, bark, husk, cortex); **Est.** koor; **Mansi.** gōr; **Jap.** kōra, kara; **Q.** fara.

*[கொழுது → கோது.]*

**கோது**[3] *kōdu*, பெ.(n.) ***கோதுகம்*** பார்க்க; see *kōdugam*. *"வானவர்தங் கோதா" (திவ். பெரியதி. 6.2:9).*

**Mal.** gandum.

*[குதுகலம்→குதுகம் →கோதுகம் → கோது.]*

**கோதுகம்**[1] *kōdugam*, பெ.(n.) உள்ளக் களிப்பு; joy, delight. *"கோதுக மியாவர் கொண்டாடுவார்" (சூளா. முத். 36).*

*[குதுகலம்→குதுகம் →கோதுகம்.]*

**கோதுகம்**[2] *kōdugam*, பெ.(n.) கச்சோலம் (சித்.அக.); long zedoary.

*[கொழுது→கொழுதுகம் →கோதுகம்.]*

**கோதுகலம்** *kōdu-galam*, பெ.(n.) குதுகலம், விருப்பம்; desiser, longing. *"கோதுகலமுடைக் குட்டனேயோ" (திவ்.பெரியாழ்.2.9:6)*

**மறுவ.** குதுகம், குதூகலம்.

*[குது→குதுகம் →குதுகலம் → கோதுகலம்.]*

**கோதுகுலம்** *kōdu-kulam*, பெ.(n.) **கோதுகலம்** பார்க்க; see *kōdu-kalam*. *"கோதுகுலமுடைய பாவாய்" (திவ்.திருப்பா.8)*

*[கோது + குலம்.]*

**கோது நரம்பு** *kōdu-narambu*, பெ.(n.) செடி, இலை முதலியவற்றின் நரம்பு; filaments of plants and flowers (சா. அக.).

*[கோது + நரம்பு.]*

**கோதுபழம்** *kōdu-paḻam*, பெ.(n.) புளியம்பழம்; tamarind fruit (சா. அக.).

*[கோது + பழம்.]*

**கோதும்பி** *kōdumbi*, பெ.(n.) கோத்தும்பீ என்ற தொடரைப் பாட்டின் ஈறுதோறுங் கொண்ட திருவாசகப் பதிகம்; a poem in *Tiruvāśagam* with the refrain *kōttumbi* at the end of each verse.

*[கோத்தும்பி → கோதும்பி.]*

**கோதும்பை** *kōdumbai*, பெ.(n.) கோதுமை (உ.வ.); wheat.

*[கோது → கோதும்பை.]*

**கோதுமம்** *kōdumam*, பெ.(n.) கோதுமை (யாழ். அக.); wheat.

*[கோதும்பை → கோதுமம்.]*

**கோதுமை** *kōdumai*, பெ.(n.) ஒருவகைத் தவசம் (பதார்த்த. 827); wheat, triticum vulgare. ஏழாயிரம் பொன் பெற்ற குதிரை இறப்பைப் பிடுங்கையில், குருட்டுக் குதிரை கோதுமை ரொட்டிக்கு வீங்கினதாம் (பழ).

ம. கோதூமம்.

*[கோத்தும்பை → கோதுமை.]*

**கோதுமைஅடை** *kōdumai-aḍai*, பெ.(n.) கோதுமை அடை; bread made of wheat (சா. அக.).

*[கோதுமை + அடை.]*

**கோதுமைக்கஞ்சி** *kōdumai-k-kañji*, பெ.(n.) 1. கோதுமை நொய்யைக் கொண்டு அணிய மாக்கப்படும் கஞ்சி; conjee prepared from wheat flour which is taken to check profuse menstruation. 2. வாற்கோதுமைக் கஞ்சி; barley water (சா. அக.).

*[கோதுமை + கஞ்சி.]*

**கோதுமைக்களி** *kōdumai-k-kaḷi*, பெ.(n.) கோதுமை மாவைத் தண்ணீரிலிட்டுக் கொதிக்க வைத்துக் கிண்டிய களி; pudding prepared from wheat flour by boiling it in water and stirring (சா. அக.).

*[கோதுமை + களி.]*

**கோதுமைக்காடி** *kōdumai-k-kāḍi*, பெ.(n.) கோதுமைக் கஞ்சியைப் புளிக்க வைத்து அணியமாக்கும் காடி; alcoholic fermentation of wheat conjee (சா. அக.).

*[கோதுமை + காடி.]*

**கோதுமைக்கூழ்** *kōdumai-k-kūḻ*, பெ.(n.) கோதுமை மாவு அல்லது நொய்யைக் கொண்டு அணியமாக்கப்படும் பாயசம்; wheat porridge prepared like wheat pudding, but in a liquid form (சா.அக.).

*[கோதுமை + கூழ்.]*

**கோதுமைச்சத்து** *kōdumai-c-cattu*, பெ.(n.) 1. கோதுமை துகள் (ரவா) அல்லது மாவைத் தண்ணீரி லிட்டுப் பிழிந்தெடுத்த சாறு; liquid essence of wheat pressed and filtered out from a solution of wheat gruel or flour. 2. கோதுமையில் அடங்கியுள்ள பொருள்கள்; the glutinous starchy substance etc., contained in wheat (சா. அக.).

*[கோதுமை + சத்து.]*

**கோதுமைத்தவிடு** *kōdumai-t-taviḍu*, பெ.(n.) கோதுமையினின்று கழிந்த மேற்றோல்; the husk or outer coat of wheat; wheat bran.

*[கோதுமை + தவிடு.]*

இது சிறிதளவு மலத்தை இளக்கும். நீரிழிவுக்கும் கொடுக்கலாம். கட்டுக்கட்டவும், வறுத்து ஒத்தடம் கொடுக்கவும் பயன்படும். மார்பு வலி, வயிற்று வலி முதலியன குணமாகும் (சா. அக.).

**கோதுமைநாகம்** *kōdumai-nāgam*, பெ.(n.) கோதுமைத் தவசம் போன்ற புள்ளியுடைய

பாம்புவகை; a species of cobra with wheat-like patches.

[கோதுமை + நாகம்.]

**கோதுமைப்பாணி** *kōdumai-p-pāṇi*, பெ.(n.) கோதுமை மாவைத் தண்ணீரிலிட்டுக் கொதிக்க வைத்துக் கிண்டிய சாரம்; mucilage of starch. It is obtained by boiling wheat flour and water and constantly stirring for a few minutes (சா. அக.).

[கோதுமை + பாணி.]

**கோதுமைப்பால்** *kōdumai-p-pāl*, பெ.(n.) ***கோதுமைச்சத்து*** பார்க்க; see *kōdumai-c-cattu*.

[கோதுமை + பால்.]

**கோதுமைமணி** *kōdumai-maṇi*, பெ.(n.) 1. கோதுமைத் தவசம்; wheat grain. 2. கோதுமைத் தவசம் போன்ற பொன்மணிகளால் அமைந்த கழுத்தணி; a kind of necklace formed of wheat - like beads of gold.

[கோதுமை + மணி]

**கோதுமையரவை** *kōdumai-y-aravai*, பெ.(n.) கோதுமையரிசியை உடைத்துப் பிரித்தெடுத்த நுண்ணியநொய்; fine crushed particles prepared from the heart of wheat (சா. அக.).

[கோதுமை + அரவை. அரவை→ரவை→ரவா எனத் திரிபுற்றது.]

**கோதுமையரிசி** *kōdumai-y-ariśi*, பெ.(n.) கோதுமையை உடைத்துப் பிரித்தெடுத்த பருத்த நொய்; large particles of crushed wheat cooked and used like rice for eating (சா. அக.).

[கோதுமை + அரிசி.]

**கோதுமைரவா** *kōdumai-ravā*, பெ.(n.) ***கோதுமையரவை*** பார்க்க; see *kōdumai-aravai*.

[கோதுமை + (அரவை) ரவா.]

**கோதுவி-த்தல்** *kōduvi-*, 4.பி.வி.(v.cau.) நீக்குவித்தல்; to remove, root out, exterminate. *"வினையாயின கோதுவித்தாய் நீறெழு"* (தேவா. 1139:2).

[கோது →கோதுவி.]

**கோதுவை** *kōduvai*, பெ.(n.) அடமானம்; pledge. *"மடத்துச் சொத்துக்கள் யேதேனும் கோதுவை வைக்க விக்கிரயஞ் செய்ய தானங் கொடுக்க எவ்வித சுதந்திரமும் கொள்ளக் கூடாது"* (செ.மா.கல்.1967/171,18).

[கொதுவை → கோதுவை.]

**கோதூமம்** *kōdūmam*, பெ.(n.) கோதுமை; wheat. *"நலம்தகு பொருள் கோதூமம்"* (திருவானைக். நானவி. 25).

[கோதுமை →கோதூமம்.]

**கோதூர்** *kōdūr*, பெ.(n.) நாமக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Namakkal Dt.

[கோது + ஊர்.]

**கோதூளி** *kōdūḷi*, பெ. (n.) வீட்டுக்குத் திரும்பி வரும் மாடுகளின் நடையால் தூளியெழுங் காலமாகிய மாலை நேரம் (பிங்.); evening, as the time when dust is raised by home returning cattle, considered auspecious.

மறுவ: கோதூளி சமயம்; கோதூளிலக்கினம்.

[கோ + தூளி.]

**கோதூளிசமயம்** *kōdūḷi-śamayam*, பெ.(n.) ***கோதூளி*** பார்க்க; see *kōdūḷi*.

[கோதூளி + சமயம்.]

**கோதேரன்** *kōtēraṉ*, பெ.(n.) காவற்காரன் (யாழ்.அக.); protector.

[கோ + தேரன் (தேர்க்காரன்).]

**கோதேனுகம்** *kōdēṉugam*, பெ.(n.) சதையொட்டி யிலை; the leaf of an unknown plant supposed to unite the two cut portions of flesh, as in incision (சா. அக.).

[கோ + தேனுகம்.]

**கோதை**[1] *kōdai*, பெ.(n.) 1. பெண்களின் தலைமயிர் (பிங்.); women's hair. 2. ஆண்டாள்; a Vaisṇava female saint. 3. பூமாலை; garland of flowers worn by women. *"கூந்தல் வேய்ந்த கோதையும்"* (பெருங். உஞ்சைக். 48:77). 4. முத்தாரம்; garland of pearls. *"கோதை சூடிப் பூண்சுமந்து"* (பதிற்றுப். 88:31). 5. ஒழுங்கு (பிங்.); order, regularity, row, series. 6. பெண்; woman, beautiful as a garland. *"நறுமலர்க் கோதைக்கு நல்லற முரைத்து"* (மணிமே.பதி. 81). 7. பேய்; goblin. *"தூரகமுகக் கோதைக்கிடை"* (திருப்பு. 137).

[கோது → கோதை.]

**கோதை**[2] *kōdai*, பெ. (n.) சேரர் பட்டப் பெயர்களுளொன்று; a title of the Cēra kings. *"மாவள் ஈகைக் கோதையும்"* (புறநா.172: 10).

ம. கோத.

[கோது → கோதை.]

**கோதை**[3] *kōdai,* பெ. (n.) காற்று (பிங்.); wind.

[சூதை → கோதை.]

**கோதை**[4] *kōdai,* பெ.(n.) 1. உடும்பு (பிங்.); guana. 2. வில்லாளர் கையிற் பூணும் தோலுறை; glove of iguana leather, worn by archers on the left fore-arm to protect it from being injured by the bowstring. *"மூரிச் சிலையு முரட் கோதை யுங்கட்டி" (பாரதவெண். 776).* 3. மரக்காற்பறை; a cylindrical drum. *"மரக்கா லன்ன வொருவாய்க் கோதை" (கல்லா. 8).*

ம. கோத; **Skt.** gōdhā.

[கோது → கோதை.]

**கோதை**[5] *kōdai,* பெ.(n.) கௌதமி என்னும் பழங்கால ஆற்றின் பெயர் (பிங்); name of an ancient river kaudami.

[கோது → கோதை.]

**கோதைக்குடி** *kōdai-k-kuḍi,* பெ.(n.) இலால்குடி வட்டம், ஆலம்பாக்கத்திற்கு அருகிலிருந்த சிற்றூர்; a small village near Alambākkam in Lālguḍi taluk. *"கொங்குலாங் கோதைக்குடி உய்ய வந்தாள் தன் தம்பிரானுக்கு" (SII.XXVI.778-3 pg.564).*

[கோதை (சேரன்) + குடி.]

**கோதைமங்கலம்** *kōdai-maṅgalam* பெ.(n.) திண்டுக்கல் மாவட்டம் பழனியின் அருகில் அமைந்த ஓர் ஊர்; a village situated near Paḻani in Thinḍukkal Dt.

[கோதை + மங்கலம்.]

கடை ஏழு வள்ளல்களுள் ஒருவனான பேகன் தனது பரத்தை கோதை என்பவளுக்கு இலவயமாகக் கொடுத்தமையால் இப் பெயர் பெற்றதாம்.

**கோதைமாதவி** *kōdai-mādavi,* பெ.(n.) மாலைபோலப் பூக்கும் ஒருவகைக் குருக்கத்தி; a species of *kurukkatti* (சா. அக.).

[கோதை + மாதவி.]

**கோதையர்** *kōdaiyar,* பெ.(n.) மாதர்; women.

[கோது → கோதையர்.]

**கோதையன்** *kōdaiyan,* பெ.(n.) பயனில்லாப் பொருளைக் கூறுவோன்; man of empty words. *"எந்நாக் கோதையர்க் கூற லுண்டே" (சீவக. 3098).*

[கோது → கோதையன்.]

**கோதையாள்வியான புரவுவரிநங்கை** *kōdaiyāḷ-viyāṉa-puravu-vari-naṅgai,* பெ.(n.) திண்டிவனம் வட்டாரத்திலுள்ள பெருமுக்கல் ஊரில் உள்ள கோயில்; temple of the Perumukkal in Tinḍivaṉam taluk. *"இக்கோயில் தேவரடிமகள் கோதையாள்வியான புரவுவரி நங்கை வினாயகப் பிள்ளையார்க்கு" (த.நா.தொ.ஆய்வு. தொடர்.எண். 114/1992 கல்.46,4).*

[கோதை + ஆள்வி + ஆன + புரவுவரி + நங்கை.]

**கோதையிருப்பு** *kōdai-y-iruppu,* பெ.(n.) திண்டுக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thinḍukkal Dt.

[கோதை + இருப்பு.]

**கோதையூர்** *kōdai-y-ūr,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kaṉyākumari Dt.

[கோதை + ஊர்.]

**கோந்தச்சார்** *kōndaccār,* பெ.(n.) அற்பன்; an insignificant contemptible person.

[கோந்தி + சார் – கோந்திச்சார் → கோந்தச்சார். கோந்தி = குரங்கு.]

**கோந்தளங்காய்** *kōndalaṅ-gāy,* பெ.(n.) 1. குறு தேங்காய்; unripe coconut. 2. சமுத்திராப்பழம்; sea-side Indian oak.

[கோந்தளம் + காய்.]

**கோந்தளாகிகம்** *kōndaḷāgigam,* பெ.(n.) முயற்புல்; hare grass (சா. அக.).

[கோந்தளம் + ஆகிகம்.]

**கோந்தனை** *kōndaṉai,* பெ.(n.) பேய்க் கொம்மட்டி; colocynth, climber.

[கோது →கோந்து →கோந்தனை.]

**கோந்தி** *kōndi,* பெ.(n.) குரங்கு; monkey.

**க., து., நா.** கோதி; **தெ.** கோதி, க்ரோதி; **கட.** கோதி, கோந்தி.

[தெ.கோடி →கோந்தி]

**கோந்திக்குணம்** *kōndi-k-kuṇam,* பெ.(n.) குரங்குக் குறும்பு; apishness; foolery (சா. அக.).

[கோந்தி + குணம்.]

**கோந்துரு**[1] *kōnduru,* பெ.(n.) 1. பூட்டனுக்குப் பாட்டன் (யாழ்ப்.); ancestor in the fifth line, great-grand father's grandfather (J.). 2. கேலி எள்ளல்; ridicule (W.).

*[கொந்துள்→கோந்துள் →கோந்துரு.]*

**கோந்துரு**[2] *kōnduru,* பெ.(n.) வஞ்சகம் (யாழ்.அக.); duplicity.

*[கோது→கோந்து →கோந்துரு.]*

**கோந்துலா** *kōndulā,* பெ.(n.) மராட்டியப் பிச்சைக்காரர் பயன்படுத்தும் பறைவகை (இ.வ.); a kind of musical drum used by Mahratta beggars.

*[மரா. கோண்தல →கோந்துலா.]*

**கோநகர்** *kō-nagar,* பெ.(n.) 1. தலைநகர்; capital city. *"கோநக ரெதிர்கொள" (சிலப்.27:255).* 2. கோயில்; temple. *"மாயோன் கோநக ரெட்டும்" (கந்தபு. திருநகரப். 88).*

*[கோ + நகர்]*

அரசனின் தலைநகர் அரசிருக்கை, கோநகர், படைவீடு என்னும் பெயர்களுள் ஒன்றால் அழைக்கப்பெற்றது. இவற்றுள் அரசிருக்கை என்பது அரசன் நிலையாக வாழும் நகரையே குறிக்கும். கோநகர் என்பது அரச குடும்பத்தினர் இருந்து ஆளும் நகரையும், படைவீடு என்பது படை நிறுத்தப்பெற்று அரசன், நாடுகாவல் சுற்றும்போக்கில் தங்கக்கூடிய நகரையும் குறிப்பது முண்டு [பழந்தமிழாட்சி. பக். 12 – 13].

**கோநசம்** *kōnašam,* பெ.(n.) ஒருவகைப் பாம்பு (யாழ்.அக.); a kind of snake.

*[கோ + (நாசம்) நசம்.]*

**கோநாக்கிலை** *kō-nākkilai,* பெ.(n.) ஆன் நாக்கிலை; a plant, the leaves of which resemble the tongue of the cow (சா. அக.).

*[கோ + நாக்கு + இலை]*

**கோநாகசர்ப்பம்** *kōnāga-sarppam,* பெ.(n.) மிக்க வெய்யிலினாலும். அலைச்சலினாலும் அடிபட்ட பசுக்களின் மூக்கிலிருந்துண்டாகிப் பிறகு வெளிப்பட்டுத் திரிவதாகக் கருதப்பட்ட ஒருவகை நாகம்; a kind of cobra imagined to be orginating from the nostrils of the cow knocking about in the scorching sun and exhausted by fatigue (சா. அக.).

**மறுவ.** கோநசம்.

**கோநாதன்** *kō-nādan,* பெ.(n.) 1. எருது; a bull (எருது). 2. இடையன்; a sheperd

*[கோ + நாதன்.]*

**கோநாய்** *kō-nāy,* பெ.(n.) 1. ஆண்நரி; male jackal. 2. ஓநாய்; wolf. *"கோநாயினம் வெரூஉம் வெற்ப" (பழ.292).* ஆட்டுக்கிடையிலே கோநாய் புகுந்ததுபோல் (பழ).


கோநாய்

*[கோ + நாய்.]*

**கோநிலையம்** *kō-nilayam,* பெ.(n.) அரசமனை; palace.

*[கோ + நிலையம்.]*

**கோநீர்** *kō-nīr,* பெ.(n.) ஆன் (பசு) மூத்திரம்; cow's urine (சா.அக.).

**மறுவ.** கோமியம்.

*[கோ + நீர்.]*

**கோநெய்** *kō-ney,* பெ.(n.) ஆன் (பசு) நெய்; cow's ghee (சா.அக.).

*[கோ + நெய்.]*

**கோநொந்தோலி** *kōnondōli,* பெ.(n.) நொந்தோலி மீன்வகையில் பெரிய மீன் (மீனவ.); a kind of big fish by name *nondōli.*

*[கோ + (நெய்த்தோலி) நொந்தோலி.]*

**கோநோக்கம்** *kō-nōkkam,* பெ.(n.) கண்டங் கத்தரி; a thorny plant which bears small yellow fruits (சா.அக.).

*[கோ + (நூக்கம்) நோக்கம்.]*

**கோப்பதவாரம்** *kō-p-pada-vāram,* பெ.(n.) அரசர்க்குரிய இறை (T.A.S.II,82.); tax due to the king.

*[கோ + பதம் + வாரம்.]*

**கோப்பரம்** *kōpparam,* பெ.(n.) உதவாக்கரை, ஒன்றுக்கும் பயன்படாதவன்; useless fellow. அவன் ஒரு கோப்பரம். ஒன்றுக்கும் பயனில்லை (நெல்லை.).

மறுவ. ஆதம் (ஆதாயம்) அற்றவன், துப்பற்றவன் விட்டேற்றி, உதவாக்கரை, கழிசடை.

*[கோ : மாடு, எருது, கோ + உரம் – கோவுரம் → கோப்புரம் → கோப்பரம் (மாட்டுச்சாணம், எரு, குப்பை).]*

**கோப்பழி—த்தல்** *kōppaḻi-,* 4 செ.குன்றாவி.(v.t.) சீரழித்தல்; to ruin, pull down, dismantle. *"குருமாமணி யூசலைக் கோப்பழித்து" (திருக்கோ. 161).*

*[கோப்பு + அழி.]*

**கோப்பன்** *kōppaṉ,* பெ.(n.) 1. கெட்டிக்காரன்; capable person not easily bamboozled. 2. தேர்ந்த போக்கிரி; clever scoundrel.

*[கோ → கோப்பன்.]*

**கோப்பாட்டன்** *kōppāṭṭāṉ,* பெ.(n.) கொட்பாட்டன் (வின்.); grand father's father.

*[கொட்பாட்டன் → கோட்பாட்டன்.]*

**கோப்பாண்டியன்** *kō-p-pāṇḍiyaṉ,* பெ.(n.) பாண்டியன் (திவா.); Pāṇḍya, as king of kings.

*[கோ + பாண்டியன்.]*

**கோப்பாளச்சுவர்** *kōppāḷa-c-cuvar,* பெ.(n.) இருபக்க ஒட்டுச்சார்பின் மேல் முக்கோண வடிவிலமைந்த சுவர் (கட். தொ.); triangular wall on a partition wall.



கோப்பாளச்சுவர்

*[கோப்பாளம் + சுவர்.]*

**கோப்பாளம்** *kōppāḷam,* பெ.(n.) மாலியர் (வைணவர்) திருமாலின் பன்னிரு பெயர்களை ஓதி உடலிற் பன்னிரு இடங்களில் செங்குத்து முக்கீற்றாக இடும் திருமண் குறி; the Vaisnava sectarian tridental mark, worn on the person in twelve places, reciting the twelve names of Vishnu. அவன் நெற்றியில் கோப்பாளம் போட்டிருக்கிறான் (நெல்லை).

மறுவ. திருமண், நாமம்.

*[கோவலன் → கோபாலன் → கோப்பாளம்.]*

கோபாலன் பெயரைச் சொல்லி இட்டுக் கொள்ளும் அடையாளக் குறியீடு கோப்பாளம் எனப்பெயர் பெற்றது.

**கோப்பாளி** *kōppāḷi,* பெ.(n.) 1. வரிக்கூத்துவகை (சிலப்.3:13, உரை); a masquerade dance. 2. ***கோப்பன்*** பார்க்க (loc.) see *kōppaṉ.*

*[கோப்பு + ஆளி.]*

**கோப்பிகா** *kōppigā,* பெ. (n.) புன்னை; common poon or Alexandrian laurel (சா. அக.).

*[குப்பி→கோப்பி→கோப்பிகை→கோப்பிகா.]*

**கோப்பிடு—தல்** *kōppiḍu-,* 18 செ.குன்றாவி.(v.t.) ஏற்பாடு செய்தல்; to make arrangements; to scheme. *"கூட்டுக்குளே யடைக்கக் கோப்பிட்டாள்" (விறலிவிடு. 603).*

ம. கோப்பிடுக.

*[கோப்பு + இடு–.]*

**கோப்பியகன்** *kōppiyagaṉ,* பெ.(n.) அடிமை; slave.

*[கோப்பியன்→கோப்பியகன்.]*

**கோப்பியம்** *kōppiyam,* பெ.(n.) 1. ஒளித்து வைத்தல்; keeping hidden or concealed (சா.அக.). 2. கண்ணியம்; sence of decency. 3. காத்தல்; to save, protect. 4. அடக்கம்; humility, quietness. 5. கோலம் (கழ. த. அக.); decorative designs drawn on floor. 6. மறைபொருள்; secrecy, concealment, privacy. எல்லாம் கோப்பியமாக நடக்கிறது (உ.வ.).

ம. கோப்பியம் (மந்தணம்); Skt. gōpya.

*[குப்பு→கூப்பு→கோப்பு→கோப்பியம்.]*

**கோப்பியாதி** *kōppiyādi,* பெ.(n.) ஈடு; substitute, compensatory.

*[கோப்பியம் + ஆதி.]*

**கோப்பிரசாரபூமி** *kōppirašārabūmi,* பெ.(n.) அரசு ஆணைவழி கோயிலுக்கு விளம்பரப்படுத்திய நிலம்; land to temples notified by king. *"ஆக இந் நாற்பால் எல்லைக்கும் உட்பட்ட இருபத்தஞ்சு பாடகமும் கோப்பிரசார பூமியாரு எல்லோருக்கும் சாதாரணம் ஆதலால்" (தெ.கல். தொ.Vகல். 993:4).*

*[கோ + பிரசாரம் + பூமி.]*

**கோப்பிரண்டை** *kōppiraṇḍai,* பெ.(n.) களிப் பிரண்டை; a species of adamantine creeper. It is round and smooth and is prescribed for flatulence.

*[கோ + பிரண்டை]*

உருண்டையாயும், வழவழப்பாயுமிருக்கும். இது ஊதை நோய்க்குப் பயன்படும்.

**கோப்பிராமணர்** *kō-p-pirāmaṇar,* பெ. (n.) இறைவனுக்குக் கொடை அளிக்க ஆனிரைகளைப் பேணி வந்த அந்தணர்; bhramin who took care of the cows endowed to a temple. *"அகிதம் பண்ணினாள் அவாள் கெங்கைக் கரையில் கோகஸ்த்தியும் கோப்பிராமணரையும் கொன்னை தோஷத்தில் அடைவார்கள்" (தஞ்.மரா.செப்.50, 26-43).*

*[கோ + பிராமணர்.]*

**கோப்பு**[1] *kōppu,* பெ.(n.) 1. கோக்கை; stringing, inserting, threading, adorning. 2. ஒழுங்கு; arrangement, order, method. *"விரதத்தின் கோப்பனைத்தும்" (விநாயகபு.62:15).* 3. அமைப் பழகு; beauty, as of form or construction; finish. *"ஊசலைக் கோப்பழித்து" (திருக்கோ. 161).* 4. ஒப்பனை; decoration, ornament, embellishment. *"கோப்பணி வான்றோய் குடி" (திருக்கோ. 196).* 5. கவிவு; that which covers, as a cloud, a roof; that which over-whelms, as grief. *"நீப்பருந் துயர் கோப்புக் கொள்ளலும்" (விநாயகபு.7:3).* 6. இடம்பம் (வின்.); gaudiness, showiness, parade. 7. பகிடி (வின்.); jest, sport, farce. 8. சூழ்ச்சி (உபாயம்); means, device, scheme. *"வேந்தர் பொன்னைக் கொள்ளை கொள்ளக் கள்ளியிந்தக் கோப் பெடுத்தாள்" (விறலிவிடு. 421).* 9. தோள் முதலியவற்றிற் கோக்கப்படும் சுமை; bundle, pack, as taken on shoulders. *"தோட்கோப்புக் கொள்ளார்" (நாலடி.328).* 10. பணியாளர்களுக்கு அரசில் ஏற்படும் படித்தரம் (யாழ்ப்.); daily provisions allowed by kings to their officers.

ம. கோப்பு; தெ., க. கோபு; குட. கோபி (விழா); பர். கோப் (பேணுதல்).

*[கோ→கோப்பு]*

**கோப்பு**[2] *kōppu,* பெ. (n.) காய்கறிகள்; vegetables (சா. அக.).

*[காய்→காய்ப்பு→காப்பு→கோப்பு]*

**கோப்பு**[3] *kōppu,* பெ.(n.) இணைத்தொகுப்பு, பதிவு மூலங்களின் தொகுப்பு; file.

*[கோ → கோப்பு 'பு' சொ.ஆ.ஈறு.]*

**கோப்பு**[4] *kōppu,* பெ.(n.) மனையின் மேற்கூரையும் துலாக்கட்டும் சேரும் பகுதி; (கட்.தொ.); joint of roof with sub -structure.

*[கோ → கோப்பு]*

**கோப்பு**[5] *kōppu,* பெ.(n.) 1. வணக்கம்; salution. 2. உயரம், வலிமை; hight, strength.

தெ. கோப்பு

*[கூப்பு→கோப்பு]*

**கோப்பு**[6] *kōppu,* பெ.(n.) அணியமான நிலை; a proper and fitting nature. கம்பு அருவாளோடு கோப்பா வந்து இறங்கிட்டான் (நெல்லை.).

*[கூப்பு → கோப்பு]*

**கோப்புக்கயிறு** *kōppu-k-kayiṟu,* பெ.(n.) இரு வேறு வலைகளை இணைக்க உதவுங் கயிறு (மீனவ.); a rope used for joining the two different nets.

*[கோப்பு + கயிறு]*

**கோப்புக்கூட்டு-தல்** *kōppu-k-kūṭṭu-,* 5 செ. குன்றாவி.(v.t.) அணியமாதல் (இ.வ.); to make or get ready.

*[கோப்பு + கூட்டு.]*

**கோப்புக்கொடு-த்தல்** *kōppu-k-koḍu-,* 4 செ.குவி. (v.i.) சமையலுக்கு வேண்டிய காய்கறிப் பொருள்களைக் கொடுத்தல்; to give or supply vegetables, curry stuffs etc. necessary for preparing food (சா. அக.).

*[கோப்பு + கொடு.]*

**கோப்புத்தட்டு-தல்** *kōppu-taṭṭudal,* தொ.பெ. (vbl.n.) கடலடிப் பாறை முகட்டிற் சிக்கிய வலையைக் குளியாள் நீக்குதல் (மீனவ.); to remove the intangle of the net on the top of the sea rock.

*[கோப்பு + தட்டு-.]*

**கோப்புப்பட்டறை** *kōppu-p-paṭṭarai,* பெ.(n.) பல உதிரிப் பொருள்களை இணைக்குமிடம்; fabrication shop.

*[கோப்பு + பட்டறை.]*

**கோப்புப்போடு-தல்** *kōppu-p-pōḍu-,* 19 செ. குன்றாவி.(v.t.) மனைக்குமேற் கோப்பு அமைத்தல் (கட். தொ.); to form the top joints of a house.

*[கோப்பு + போடு-.]*

**கோப்புமட்டம்** *kōppu-maṭṭam,* பெ.(n.) கட்டடச் சுவரின் மேல்வரி (கட். தொ.); top layer of the wall.

*[கோப்பு + மட்டம்.]*

**கோப்புமுறை** *kōppu-muṟai,* பெ.(n.) பொருத்தும் முறை; art or manner of fitting or arranging things. *"மூக்குங் கோடுங் கோப்புமுறை கொளீஇ" (பெருங். உஞ்சைக். 58:53).*

*[கோப்பு + முறை.]*

**கோப்பெண்டு** *kō-p-peṇḍu,* பெ.(n.) அரசன் மனைவி; queen. *"பெருங்கோப் பெண்டு மொருங் குடன் மாய்ந்தனள்" (சிலப். 25:86).*

*[கோ + பெண்டு.]*

**கோப்பெருங்கணக்கர்** *kō-p-peruṅ-kaṇakkar,* பெ.(n.) அரசு தலைமைக் கணக்கர்; chief accountants of a state. *"கோப்பெருங் கணக்கரைக் குழுவிடை விளங்க" (பெருங். நரவாண.7:122).*

*[கோ + பெருங்கணக்கர்.]*

**கோப்பெருங்கிழவோள்** *kō-p-peruṅ-kiḻavōḷ,* பெ.(n.) **கோப்பெருந்தேவி** பார்க்க; see *kō-p-peru-n-dēvi. "குன்றாக் கற்பினெங் கோப்பெருங் கிழவோள்" (பெருங்.இலாவாண. 11:47).*

*[கோ + பெரும் + கிழவோள்.]*

**கோப்பெருஞ்சிங்கவேளார்** *kō-p-peruñ-śiṅga-vēḷār,* பெ.(n.) நடுநாட்டு மன்னர் கோப்பெருஞ் சிங்கனின் அதிகாரி; an officer of the King of Nadu Nadu, *kōpperuñ-śiṅgaṉ. "கூடலூர்க் கூடலூருடையான் திருவரங்கன் பெரிய நாயனான கோப்பெருஞ்சிங்கவேளார் வைத்த திருநொந்தா விளக்கொன்றுக்கு" (SII.XII.227-6 pg.141).*

*[கோ + பெருஞ்சிங்கன் + வேளார்.]*

**கோப்பெருஞ்சிங்கன்** *kō-p-peru-ñ-śiṅgaṉ,* பெ.(n.) சேந்தமங்கலத்தைத் தலைநகராகக் கொண்டு நடுநாட்டை ஆண்ட காடவர் குல மன்னர்களில் சிறந்தவர்; a popular king of the Kāḍava dynasty who ruled from Sēndamaṅgalam on the banks of Kadilam in Naḍunāḍu (*Viḷuppuram* Dt.).

*[கோ + பெருஞ்சிங்கன்.]*

**கோப்பெருஞ்சேரல் இரும்பொறை** *kō-p-peru-ñ-jēral-irumboṟai,* பெ.(n.) ஒரு சேர மன்னன்; a *Cēra* king.

*[கோ + பெருஞ்சேரல் + இரும்பொறை.]*

**கோப்பெருஞ்சோழன்** *kō-p-peru-ñ-jōḻaṉ,* பெ.(n.) சோழ மன்னர்களில் ஒருவன்; a *Cōḻa* king.

*[கோ + பெருஞ்சோழன்.]*

உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன்; மிக்க புலமையுடையோன்; கிள்ளி வளவனுக்குப் பின் அரசுகட்டி லேறியவன். இவனுக்கு நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி என்னும் மக்களிருந்தனர். இவர்கள் தந்தைமீது காழ்ப்புணர்ச்சி கொண்டு தாக்க முற்பட்டபோது மனம் வருந்தி வடக்கிருந்து உயிர் நீத்தான். இவனைக் காணாமலேயே இவன்மீது நட்புக் கொண்ட பிசிராந்தையார் இவனருகில் அமர்ந்து வடக்கிருந்து உயிர் நீத்தார்.

**கோப்பெருந்தேவி** *kō-p-peru-n-dēvi,* பெ.(n.) பட்டத்தரசி; chief queen, queen consort. *"ஓர்த்துட னிருந்த கோப்பெருந் தேவி" (சிலப்.27:251).*

*[கோ + பெருந்தேவி.]*

**கோப்பெருமுதியர்** *kō-p-peru-mudiyar,* பெ.(n.) அரசாங்கத்தில் பட்டறிவு மிகுந்த விருத்தர்; aged and experienced counsellors in a state. *"வாணிகர்க் கறையுங் கோப்பெரு முதியர்" (பெருங். இலாவாண. 2:164).*

*[கோ + பெருமுதியர்.]*

**கோப்பெருவேந்தன்** *kō-p-peru-vēndaṉ,* பெ.(n.) அரசர்க்கரசன்; king of kings, emperor. *"கோப் பெரு வேந்தன் யாப்புறுத் தமைத்தபின்" (பெருங். மகத. 22:78).*

*[கோ + பெருவேந்தன்.]*

**கோப்பை** *kōppai,* பெ.(n.) 1. வெள்ளைக் களி மண்ணினாற் செய்த சீனக் கலம் (சா.அக); a porcelain cup manufactured in China. 2. வேலைப் பாடு கொண்ட பரிசுப் பொருள்; cup, trophy. நமது நாடு காற்பந்து போட்டியில் உலகக் கோப்பையை வென்றது (உ.வ.). 3. உண்கலம்; cup; drinking-vessel.

ம. கோப்ப; க., து. குப்பி; தெ. குப்பெ; பட. கோப்பெ.

H. kuppi; **Pali., Pkt.** kūppa; **L.** cuppa; **F.** Coupe; **E.** cup; **Port.** copa.

*[கும்பம் - மட்பாண்டம். கும்பம்→கும்பி→குப்பி → கோப்பை.]*

**கோப்பைவெடிப்பு** *kōppai-veḍippu,* பெ. (n.) மரத்தில் ஆண்டு வளைவுகள் சரியாகப் பொருந்தாமல் வெடிக்கும் வெடிப்பு (கட். தொ.); crack in joints of wooden planks.

*[கோப்பை + வெடிப்பு.]*

**கோபக்கண்ணி** *kōba-k-kaṇṇi,* பெ. (n.) 1. முண்டினி மரம்; an unknown tree. 2. கோபக் கண்ணுடையவள்; woman with an angry look (சா. அக.).

*[கோபம் + கண்ணி.]*

**கோபக்காரன்** *kōba-k-kāraṉ,* பெ.(n.) சினம் மிகுந்தவன்; irritable, hot-tempered man.

*[கோபம் + காரன்.]*

**கோபக்காரி**[1] *kōba-k-kāri,* பெ.(n.) மிகுசினமுள்ள பெண்; angry woman.

*[கோபம் + காரி.]*

**கோபக்காரி**[2] *kōba-k-kāri,* பெ.(n.) தலைச்சுருளி; Indian birth wort (சா. அக.).

*[கோபம் + காரி.]*

**கோபக்குண்டம்** *kōba-k-kuṇḍam,* பெ.(n.) எட்டி மரம்; strychnine tree.

மறுவ: கோபதிண்டம்.

*[கோபம் + குண்டம்.]*

**கோபக்குரு** *kōba-k-kuru,* பெ.(n.) வெள்ளைக் கழற்கொடி (சா. அக); white bead vine.

*[கோபம் + குரு.]*

**கோபங்காய்ந்தோர்** *kōbaṅ-kāyndōr,* பெ.(n.) (சினம் காத்தோர்) முனிவர் (பிங்.); sages, saints, as persons who have subdued their temper.

*[கோபம் + காய்ந்தோர்.]*

**கோபங்கொள்(ளு)-தல்** *kōbaṅ-koḷ(ḷu)-,* 16 செ.கு.வி. (v.i.) புண் முதலியவை உக்கிரமாதல் (யாழ்ப்.) to be inflamed, irritated, as a sore or wound, to become aggravated, as a disease, to rage, as the sea.

*[கோபம் + கொள்(ளு.]*

**கோபச்சுரம்** *kōba-c-curam,* பெ.(n.) சினம் வரும்படி பித்தம் மிகுந்திருக்கும் காய்ச்சல் (சீவரட்.32); bilious fever.

*[கோபம் + சுரம்.]*

**கோபஞ்செலுத்து-தல்** *kōbañ-celuttu-,* 5 செ. கு.வி.(v.i.) சினத்தை வெளிக்காட்டுதல் (வின்.); to give vent to anger.

*[கோபம் + செலுத்து.]*

**கோபத்தீ** *kōba-t-ti,* பெ.(n.) 1. கோபத்தின் சூடு; heat arising from anger; wrath (சா. அக.). 2. உயிர்த் தீக்களுள் ஒன்றான சினம் (சூடா.); the fire of anger, one of *uyir-t-ti.*

*[கோபம் + தீ.]*

**கோபதாபம்** *kōbatāpam,* பெ.(n.) கடுஞ்சினம்; fury, rage.

*[கோபம் + தாபம்.]*

**கோபதி** *kō-padi,* பெ.(n.) 1. எருது (உரி.நி.); bull, as lord of cows. 2. தேவர்த் தலைவன் (இந்திரன்); Indra, as king of Svarga. 3. கதிரவன்; sun.

*[கோ + பதி.]*

**கோபதிண்டம்** *kōba-tiṇḍam,* பெ.(n.) ***கோபக் குண்டம்*** பார்க்க; see *kōba-k-kuṇḍam.*

*[கோபக்குண்டம் → கோபதிண்டம்.]*

**கோபம்**[1] *kōbam,* பெ.(n.) 1. சினம்; anger. 2. வெறுப்பு; dislike.

*[குப்பள் - சிவப்பு. குப்பள்→குப்பளி → குப்பு →கோப்பு →கோபம் (கொ.வ.).]*

**Skt., Pali.,** kōpa; **Pkt.** kōva; **Sinh.** kov, kō.

**கோபநிலைகள்:** *கோபம்* சிறிது பொழுது நிற்பது; சினம் நீடித்து நிற்கும் கோபம்: *சீற்றம்* சீறியெழுங் கோபம்; *வெகுளி* அல்லது *காய்வு* அல்லது *உருத்திரம்* நெருப்புத்தன்மையுள்ள கடுங்கோபம்; *கொதிப்பு* கண் போன்ற உறவினர்க்குச் செய்யப்பட்ட கொடுமைபற்றிப் பொங்கி யெழுங் கோபம்; *எரிச்சல்* மனத்தை உறுத்துங் கோபம்; *கடுப்பு* பொறாமையோடு கூடிய கோபம்; *கறம்* அல்லது *வன்மம்* பழிவாங்குங் கோபம்; *கறுவு* தணியாக் கோபம்; *கறுப்பு* கருப்பன்முகம் கறுத்துத் தோன்றும் கோபம்; *சிவப்பு* அல்லது *செயிர்* சிவப்பன் முகம் சிவந்து தோன்றுங் கோபம்; *விளம்* நச்சுத் தன்மையான கோபம்; *வெறி* அறிவிழந்த கோபம்; *முனிவு* அல்லது *முனைவு* வெறுப்போடு கூடிய கோபம்; *கதம்* என்றும் இயல்பான கோபம்; *கனிவு* முகஞ்சுளிக்கும் கோபம்; *செற்றம்* அல்லது *செறல்* பகைவனை அழிக்கும் கோபம்; *ஊடல்* மனைவி கணவனொடு கோபித்துக் கொண்டு உரையாடாத மென்கோபம்; *புலவி* ஊடலின் வளர்ந்த நிலை; *துனி* ஊடலின் முதிர்ந்த நிலை; *சடைவு* உறவினர் குறைகூறும் அமைதியான கோபம் [சொல். கட். 49].

**கோபம்**[2] *kōbam,* பெ.(n.) தம்பலப் பூச்சி; cochineal. "*கொல்லை நெடுவழிக் கோபம் ஊரவும்*" (*சிறுபாண்.168*).

*[குப்பள்→குப்பம் → கோபம்.]*

**கோபம்**[3] *kōbam,* பெ.(n.) ஒருவகைத் துகில்; a kind of cloth (சிலப்.14:108 உரை).

*[கோபம் - சிவப்பு, செந்நிறத்துகில்.]*

**கோபம்**[4] *kōbam*, பெ.(n.) துத்த செய்நஞ்சு; a kind of prepared arsenic.

*[கோபம்[1] → கோபம்[4].]*

**கோபல்** *kōbal*, பெ.(n.) இது அம்பரைப் போன்ற ஒரு போலிகடைச்சரக்கு; false amber or copal, it is fraudently sold in bazaars as a substitute for amber (சா. அக.).

*[குப்பள் = சிவப்பு. குப்பள் → கோப்பல் → கோபல்.]*

**கோபவல்லி** *kōbavalli*, பெ.(n.) 1. பெருங்குரும்பை; moorva stemless plant. 2. நன்னாரி; Indian sarsaparilla (சா. அக.).

*[கோபம் (சிவப்பு) + வல்லி.]*

**கோபன்** *kōbaṉ*, பெ.(n.) 1. இடையன்; shepherd, cowherd. 2. அதிகாரி; officer. 3. காப்போன்; guard. 4. சிவன்; Siva. *கூன் மதியர் கோபர் (தேவா.542:4).*

*[கோ + கோவன் → கோபன் (கொ.வ.).]*

**கோபனை** *kōbaṉai*, பெ.(n.) கவண் (யாழ்ப்.); sling to drive away birds etc.

*[கோப்பு → கோப்பனை → கோபனை.]*

**கோபாக்கினி** *kōbākkiṉi*, பெ.(n.) ***கோபத்தீ*** பார்க்க; see *kōba-t-ti.*

*[கோபம் + அழனி – அக்கினி.]*

**கோபாபத்திரம்** *kōbāpattiram*, பெ.(n.) ஆம்பற் கிழங்கு, கொட்டிக் கிழங்கு; esculent bulbous root of Indian water-lily (சா. அக.).

*[கோபம் (சிவப்பு) + பத்திரம்.]*

**கோபாலகன்** *kōbālagaṉ*, பெ. (n.) 1. இடையன்; shepherd; cow-herd. 2. கண்ணன்; Lord *Krisnaṉ*. *"குருந்தொசித்த கோபாலகன்" (திவ்.இயற்.3:32).*

*[கோ + பாலகன்.]*

**கோபாலகிருட்டிணபாரதியார்** *kōbāla-kiruṭṭiṉa-bāradiyār*, பெ.(n.) பத்தொன்பதாம் நூற்றாண்டுப் புலவர்களுளொருவர்; "நந்தனார் சரித்திர" ஆசிரியர்; a poet of nineteenth century author of *Nandaṉār-carittiram.*

*[கோபாலன் + கிருட்டிணன் + பாரதியார்.]*

**கோபாலசக்கரம்** *kōbāla-śakkaram*, பெ.(n.) பழைய நாணய வகை (பணவிடு.145); an ancient coin.

**கோபாலர்**[1] *kōbālar*, பெ.(n.) 1. அரசர்; king, 2. இடையர்; shepherd, cowherd.

*[கோ + பாலர்.]*

**கோபாலர்**[2] *kōpālar*, பெ.(n.) கள்ளர்குடிப் பட்டப்பெயர்களுள் ஒன்று (கள்ளர் சரித்.பக்.98); a caste title of Kaḷḷars.

*[கோவலர் → கோபாலர்.]*

**கோபாலம்** *kōbālam*, பெ.(n.) கன்னி (புரட்டாசி) மாதத்தில் காரி (சனி)க்கிழமை தோறும் இரந்து நோற்கும் நோன்பு; a religious vow to beg on Saturdays in the month of *Puraṭṭāśi.*

*[கோபாலன் → கோபாலம்.]*

**கோபாலன்** *kōbālaṉ*, பெ.(n.) 1. இடையன்; shepherd. 2. கண்ணன்; Lord Krisna. *"கோபாலா போரேறே" (பாரத.கிருட்.34).*

**Skt., Pali.** gōpāla; **Pkt.** gōvāla; **Pan.** gavāl; **Nep.** gwālō; **Uri.** goāḷa; **H.** goal, gual; **Guj.** govāḷ; **Mar.** gōvāḷa, gōvḷā, govḷā; **Beng.** goyāl (cowshed).

*[கோ + பாலன்.]*

**கோபாலி** *kōbāli*, பெ.(n.) வேணுகோபாலன் உருவம் பொறிக்கப்பெற்றுச் சேலம் பகுதியில் வழங்கிய ஒரு வகை நாணயம் (G.Sm.D.I.i, 290); a fanam current in the Salem district, having the figure of Krishna with the flute.

*[கோபாலன் → கோபாலி.]*

**கோபாவல்லி** *kōbāvalli*, பெ.(n.) மருள் என்னும் சணல் வகை; lowstring hemp (சா. அக.).

*[கோபம் = சிவப்பு. கோபம் + வல்லி – கோபவல்லி → கோபாவல்லி.]*

**கோபாவேசம்** *kōbā-vēšam*, பெ.(n.) சினங்கொண்ட நிலைமை; the state of being red with anger; angry mood (சா. அக.).

*[கோபம் + ஆவேசம்.]*

**கோபி**[1]**-த்தல்** *kōbi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. சினம் கொள்ளுதல்; to be angry, indignant, offended; to take umbrage. 2. புண் முதலியன சினத்தல் (யாழ்ப்.); to be morbidly irritated; to be virulent, as an ulcer.

ம. கோபிக்குக.

*[கோப்புதல் = மேலெழுப்புதல். கோப்பு → கோப்பி → கோபி = சினம் பொங்குதல்.]*

**கோபி[2]–த்தல்** *kōbi-*, 4 செ.குன்றாவி.(v.t.) கடிதல்; tobe angry with, to reprove, check, reprimand.

*[கோபி[1] → கோபி[2].]*

**கோபி[3]** *kōbi[1]*, பெ.(n.) சினமுள்ளவன்; hot tempered man.

ம. கோபி.

*[குப்பு → கோப்பு → கோப்பி → கோபி.]*

**கோபி[4]** *kōbi*, பெ.(n.) சுண்ணாம்புடன் கலந்து கட்டடங்களுக்கு வண்ணமாகப் பூசப்படும் சந்தன நிறத்திலுள்ள ஒருவகைப் பொடி; yellowish red pigment mixed with lime used for painting buildings.

*[குப்பள் = சிவந்த மண், சிவப்பு. குப்பள் → குப்பி → கோபி.]*

**கோபி[5]** *kōbi*, பெ.(n.) 1. நன்னாரி; sarsaparilla. 2. சந்தனம்; sandal. 3. கருநொச்சி; willow-leaked justicia.

*[குப்பள் = சிவந்த மண், சிவப்பு. குப்பள் →குப்பி →கோபி.]*

**கோபிகம்** *kōbigam*, பெ.(n.) அசோகு; *aśōgā* tree (சா.அக.).

*[கோபி (சிவப்பு) → கோபிகம்.]*

**கோபிகாவசந்தம்** *kōbigā-vaśandam*, பெ.(n.) பண்வகை (இராகவகை) (பரத.இராக.102); a specific melody - type.

*[கோபிகை + வசந்தம்.]*

**கோபிகாவி** *kōbi-kāvi*, பெ.(n.) 1. ஒருவகைச் சிவந்த மஞ்சட்காவி; a kind of reddish yellow ochre. 2. பூரான் காவி; common yellow ochre.

*[கோபி + காவி.]*

**கோபிசந்தனம்** *kōbi-šandaṉam*, பெ.(n.) 1. கோபிக்கல்; yellow ochre. 2. திருமண்; yellow earth worn by *Vaisṇavites* on their forehead (சா. அக.). *"தாமரைத் திருமணியு மெய்க் கோபி சந்தனமும்" (பிரபோத.10:13).*

*[கோபி + சந்தனம்.]*

**கோபிசாற்று–தல்** *kōbi-sāṟṟu-*, 5 செ.குன்றாவி. (v.t.) ஏமாற்றுதல் (உ.வ.); to deceive.

*[கோபம் = சிவப்பு. கோபம் →கோபி = செஞ்சந்தனம்.]*

**கோபித்தம்** *kōbittam*, பெ.(n.) எருது அல்லது ஆவின் பித்தப் பையினின்று எடுத்து அணியமாக்கப்படும் மான்மணத்தி; ox bile; bile of cows - bezoar (சா.அக.).

*[கோ + பித்தம்.]*

**கோபித்தவக்கினி** *kōbitta-v-akkiṉi*, பெ.(n.) 1. அகட்டுத் தீ; gastric fire. 2. பித்தம்; bile (சா.அக.).

*[கோபித்தம் + அக்கினி.]*

**கோபிதாரம்** *kōbi-tāram*, பெ.(n.) சுரா (பிங்.); bottle-flower.

*[கோபி + தாரம்.]*

**கோபிப்பேய்ச்சூலை** *kōbi-p-pēy-c-cūlai*, பெ.(n.) பித்தம் மிகுந்து சினக்கும்போது பேய் பிடித்தவர்களைப் போல் நடுக்கங் கண்டு சூலைநோய் கொண்டவர்களைப் போல் கை, கால் வலுவற்று ஒன்றையெடுக்கவும், நடக்கவும் முடியாமற் செய்யுமோர் நிலைமை; an agitated condition or strong emotion by which one is rendered unable to handle any substance or to walk any distance, owing to the shivering of the body arising from anger. It is due to the affection of the nervous system as a result of the aggravated condition of bile in the system (சா.அக.).

*[கோபி + பேய் + சூலை.]*

**கோபிபோடு–தல்** *kōbi-pōḍu-*, 19 செ.குன்றாவி. (v.t.) ***கோபிசாற்று–தல்*** பார்க்க; see *kōbi-šāṟṟu-*.

*[கோபி + போடு.]*

**கோபியடி–த்தல்** *kōbi-y-aḍi-*, 4 செ.கு.வி.(v.i.) சுவர்க்கு மஞ்சட்காவி பூசுதல்; to brush walls with yellow-wash.

*[கோபி + அடி.]*

**கோபினை** *kōbiṉai*, பெ.(n.) சினம் (யாழ்.அக.); anger.

*[கோபம் → கோபினை.]*

**கோபீகன்** *kōbīgaṉ*, பெ.(n.) கடுங்கோபமுள்ளவன்; extremely hot-tempered man. *"பொறையிலாத கோபீகன்" (திருப்பு.530).*

*[கோபம் → கோபிகன் → கோபீகன்.]*

**கோபுரக்கல்** *kōbura-k-kal*, பெ.(n.) செங்கல்; brick; red brick (சா. அக.).

*[கோபுரம் + கல்.]*

## கோபுர வகைகள்



திருவரங்கம்



ஏகம்ப ஈசன்



ஈமவோட்டு ஈசன் (கபாலீசுவரர்)



தில்லைக் கூத்தர் (சிதம்பர நடராசர்)

**கோபுரக்கள்ளி** *kōbura-k-kaḷḷi,* பெ.(n.) பெருங் கள்ளி; a kind of tall spurge (சா. அக.).

*[கோபுரம் + கள்ளி.]*

**கோபுரச்சங்கு** *kōbura-c-caṅgu,* பெ.(n.) கோபுர வடிவுடைய சங்கு (மீனவ.); a shell having the shape of, temple tower.

*[கோபுரம் + சங்கு.]*

**கோபுரச்சித்தன்** *kōbura-c-cittaṉ,* பெ.(n.) பொன்னாக்கும் ஆற்றல் முறைகளை இயற்றிய சித்தர்களுள் ஒருவர்; one of the Šidda's who instituted the principles of alchemy (சா.அக.).

*[கோபுரம் + சித்தன்.]*

**கோபுரத்தலை** *kōpura-t-talai,* பெ.(n.) கோபுரத்தைப்போல் அடி பருத்தும், மேற்பக்கம் கூச்சாகவும், உச்சியுயர்ந்தும் காணும் தலை; tower head - Acrocephalia, it is a deformity of the head in which its vertical diametre is increased and the top is more or less pointed like a tower (சா.அக.).

*[கோபுரம் + தலை.]*

**கோபுரத்தும்பை** *kōpura-t-tumbai,* பெ.(n.) அடுக்குத் தும்பை (மலை.); species of balsam.

*[கோபுரம் + தும்பை]*

**கோபுரத்துமெய்காப்பான்** *kōpurattu-mey-kāppāṉ,* பெ.(n.) கோயில் காவலன்; temple guard. *"கோபுரத்து மெய்காப்பான் நொருவன் இவன்னெ சாலை உண் வெண்கல நூறும் எண்ணி புகுவிக்கவு பொதவைப்பிக்கவும் கடவான்" (SII.XIX.357:67, pg.185).*

*[கோபுரத்து + மெய்காப்பான்.]*

**கோபுரந்தாங்கி** *kōburan-tāṅgi,* பெ.(n.) 1. ***கோபுரந்தாங்கிப்பதுமை*** பார்க்க; see *kōpuran-dāṅgi-p-padumai.* 2. செயற்பொறுப் பாளராய் நடிப்பவன்; one who has an immoderate sense of self- importance and thinks that on him alone everything depends. 3. பூடுவகை (M.M.95); Coromandel chiretta.

*[கோபுரம் + தாங்கி]*

**கோபுரந்தாங்கிப்பதுமை** *kōburan-tāṅgi-p-padumai,* பெ.(n.) கோபுரத்தைத் தாங்குவது போல, கோபுர உச்சியிலுள்ள பதுமை; figure at the top of a tower seeming to support it.

*[கோபுரம் + தாங்கி + பதுமை]*

**கோபுரப்புடம்** *kōbura-p-puḍam,* பெ.(n.) காட்டெருணவக் கோபுரம் போலக் குவித்து நிரப்பி இடும் புடம்; calcination of metals with dried cow-dung heaped like a cone.

*[கோபுரம் + புடம்.]*

**கோபுரம்**[1] *kōpuram,* பெ.(n.) நகரம் அல்லது கோயிலின் பெருவாயில் (திவா.); tower-gate of a city or temple.

கோ = அரசு, தலைமை. புரம் = உயர்வு, உயர்ந்த கட்டடம்.

புரை = உயர்ச்சி, 'புரைஉயர் பாகும்' (தொல். உரி. 4) வேந்தன் இருந்த உயர்ந்த எழுநிலைக் கட்டடம் முதலிற் கோபுரம் எனப்பட்டது: பின்பு கோயிலில் அமைந்த எழுநிலை மாடமும் வானளாவி நின்று அப் பெயர் பெற்றது. அதன் அமைப்புத் தேரை ஒத்ததாகும்.

கோபுரம் உள்ள நகர்களின் பெயர்களே, முதலில், 'புரம்' என்னும் ஈறு பெற்றன.

எ.டு. : காஞ்சிபுரம், கங்கைகொண்ட சோழபுரம். வேந்தன் தன் தலைநகரை நாற்புறமும் நோக்கவும், தொலைவிற் பகைவர் வரவைக் காணவும், பகைவர் முற்றுகையிட்டு உழிஞைப்போரை நடத்துங்கால் நொச்சிப்போரைக் கண்காணிக்கவும், அவன் அரண்மனையின்மேல் எழுநிலை கொண்ட ஓர் உயர்ந்த தேர்போன்ற கட்டடம் கட்டப்பட்டிருந்தது. அது 'புரம்' எனப்பட்டது. 'புரம்' = உயர்ந்த கட்டடமான மேன்மாடம்.

புரம் என்பது பின்பு, புரத்தைக் கொண்ட அரண்மனையையும், அதன் சூழலையும் குறித்து, அதன்பின் நகர் என்னும் சொற்போல் தலைநகர் முழுவதையும் குறித்து, நாளடைவில் நகரப் பொதுப் பெயராயிற்று. அரண்மனையிலுள்ள புரம் அரசன் இருக்கையாதலால், கோபுரம் எனப்பட்டது. கோ = அரசன், கோ இருந்த இல் கோயில் எனப்பட்டதை நோக்குக.

பகைவர் வரவு காண்டற்குக் கோபுரம் சிறந்த அமைப்பென்று கண்டபின், நகரைச் சூழ்ந்த கோட்டை மதிலினும், வாயிலிற் பெரிதாகவும் மற்ற இடங்களிற் சிறியனவாகவும் கோபுரங்கள் கட்டப்பட்டன. சிறியன கொத்தளம் எனப்பட்டன. (பண். தமி. நா.பக். 135—6)

கோ என்பது உயரமான, பெரிய எனப் பொருள் தரும். புரம் = வளைந்த சுற்றுமதில். கோபுரம் = சுற்றுச்சுவரில் உயரமாகக் கட்டப்பெற்ற நுழைவாயில் கட்டடப் பகுதி, கொடியேந்திய யானையும் தேரும் உள்நுழையும் வண்ணம் நுழைவாயில் அமைந்த உயர்ந்த மதிற்சுவர்ப்பகுதி. புரம், புரி என்பன சுற்று மதில்கள் உயர்த்திக் கட்டப்பட்ட நகரம், அரண்மனை, கோட்டை ஆகியவற்றைக் குறிக்கும். தமிழர் வரலாற்றில் அரண்மனையிலும் நகரத்தைச் சுற்றிலும் கோட்டை மதில்களில் அமைக்கப்பட்ட கோபுரங்கள், கோவில்களில் இடம்பெற்ற போது நுழைவாயில் கோபுரங்களாக உயர்த்திக் கட்டப்பெற்றன. கோபுரம் என்னும் தமிழ்ச் சொல் சமற்கிருதம் உள்ளிட்ட அனைத்து வடமொழி களிலும் இதே முறையில் வழங்கி வருகிறது. வடமொழியாளர் கோபுரம் என்பதற்கு மாட்டுப்பட்டிகளில் மாடுகள் நுழைவதற்கு அமைக்கப்பட்ட வாயில் என்று கூறுவது உண்மைக் காரணம் ஆகாது. புரம் என்னும் சொல் நேரடியாக வாயில் எனப் பொருள் தராது மாட்டைக் குறிக்கும் 'கோவு' – 'கோ' என்னும் சொல்லும் தூய தமிழ்ச்சொல்லே. இச்சொல்லையும் இதே முறையில் வடமொழி

கடன் கொண்டுள்ளது. ஆதலின் வட மொழியாளர் கோபுரம் என்னும் தமிழ்ச் சொல்லை வடசொல்லாகத் திரித்து கூறுவது பொருந்தாது.

**கோபுரம்**[2] *kōburam,* பெ.(n.) பெருங்கோரை (நாநார்த்த.); a kind of sedge.

*[கோ + புரம் - கோபுரம்.]*

**கோபுரவாசல்** *kōbura-vāšal,* பெ.(n.) கோபுரத்தின் கீழ்நிலை; gateway under a tower.

மறுவ: கோபுரவாயில்.

*[கோபுரம் + வாசல்.]*

**கோபுரவாயில்** *kōpura-vāyil,* பெ.(n.) ***கோபுரவாசல்*** பார்க்க; see *kōpuravāšal.*

மறுவ. கோபுரவாயில்.

*[கோபுரம் + வாசல்.]*

**கோம்பல்**[1] *kōmbal,* பெ.(n.) 1. குறையாத சினம் (பிங்.); vehement anger. 2. மிகுசினம் (திவா.); rage. 3. முன்கோபம் (திவா.); hot temper.

*[கோம்பு → கோம்பல்.]*

**கோம்பவிளை** *kōmbaviḷai,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[கோம்பு + விளை.]*

**கோம்பறை**[1] *kōmbaṟai,* பெ.(n.) பயனற்றது (யாழ்.அக.); that which is good for nothing.

*[கோம்பை →கோம்பறை.]*

**கோம்பறை**[2] *kōmbaṟai,* பெ.(n.) ஒருவகைக் கடல் மீன்; a kind of sea fish.

*[கோம்பு →கோம்பறை (முக்கோண வடிவினது).]*

**கோம்பி** *kōmbi,* பெ.(n.) 1. பச்சோந்தி (பிங்.); chameleon, 2. ஒந்திப் பொது; bloodsucker; *"கோம்பிக் கொதுங்கி மேயா மஞ்ஞை" (திருக்கோ. 21).*

*[கோம்பு→கோம்பி.]*

**கோம்பு**[1]**–தல்** *kōmbu-,* 5 செ.கு.வி (v.i.) சினத்தல் (பிங்.); to be angry, furious.

*[கூம்பு→கோம்பு.]*

**கோம்பு**[2] *kōmbu,* பெ.(n.) சினக்குறிப்பு; anger, signs of anger. *"கோம்பு படைத்த மொழிசொல் பரத்தையர்" (திருப்பு. 263).*

*[கூம்பு→கோம்பு.]*

**கோம்பு**[3] *kōmbu,* பெ.(n.) நீர்த்தேக்கப்பகுதிகளில் ஆற்றோடு வந்துசேரும் சிற்றாறு அல்லது நீர்க்கால் பள்ளச்சாய்கால்களில் நிலப்பரப்பின் உட்புகுந்து நீர் தேங்கும் கூம்பு தோற்றத்து பள்ளப் பகுதி; area of water stagnation in the low belts adjacent to the main storage of the dam. இந்த ஆண்டு கோம்பில் நீர் ஏறியதால் முழுவடையில் பயிரிடவில்லை (கொங்.வ.).

*[கோத்தல்→கோ (நீர்கோத்தல்) →கோம்பு.]*

**கோம்புபாளையம்** *kōmbu-pāḷaiyam,* பெ.(n.) கரூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Karur Dt.

*[கோம்பு + பாளையம்.]*

**கோம்பூர்** *kōmbūr,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[கோம்பு + ஊர்.]*

**கோம்பை**[1] *kōmbai,* பெ.(n.) 1. தேங்காய் முதலிய வற்றின் மேலோடு (தஞ்சை.); shell of a coconut or arecanut with the husk, young palmyra fruit after the edible kernel is removed. 2. அறிவிலி (தஞ்சை.); empty headed person. 3. காட்டிலுள்ள மரக்கட்டை வேலி; stockade in a forest.

ம. கோம்ப.

*[குரும்பை→ கோம்பை.]*

**கோம்பை**[2] *kōmbai,* பெ.(n.) தேனி மாவட்டத்தில் ஓர் ஊர்; a town in Theni district noted for dogs.

*[கோம்பு→கோம்பை.]*

**கோம்பை**[3] *kōmbai,* பெ.(n.) கூரை, ஓட்டு வீடுகளின் பக்கச் சுவர்களின் முக்கோண வடிவ மேற்பகுதி (கட்.தொ.); top triangular portion of side walls of tiled or thatched houses.

*[கோம்பு→கோம்பை.]*


கோம்பை

**கோம்பைக் கலயம்** *kōmbai-k-kalayam,* பெ.(n.) அடியற்ற மட்பாண்டம்; a bottomless mud-vessel.

*[கோம்பை + கலயம்.]*

**கோம்பை நாய்** *kōmpai-nāy,* பெ.(n.) கோம்பை ஊரிலுள்ளதும் காவல் புரிவதிற் சிறந்ததுமான ஒருவகைச் செந்நாய்; species of large red dogs used as watch dogs, bred in Kombai in Theni district.

*[கோம்பை + நாய்.]*

**கோம்பைப்பட்டி** *kōmabai-p-patti,* பெ.(n.) திண்டுக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dhindukkal dt.

*[கோம்பை + பட்டி.]*

**கோம்மரை** *kōmmarai,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டம் தண்டந்தோட்டம் அருகிருந்த ஊர்; a place near Thandanthottam in Thanjavur dt. *"மாத்தர கோத்திரத்து இரண்ய கேசி சூத்திரத்து கோம்மரை சுவாமிதத்தா பட்டன்" (பல்.செ.முப்.பக் 222 வ.208, தண்.தோ.செ.).*

*[கோம்பரை→கோம்மரை.]*

**கோமக்கள்ளி** *kōma-k-kaḷḷi,* பெ.(n.) சதுரக் கள்ளி; square-spurge.

*[கூர்மம் + கள்ளி – கூர்மக்கள்ளி → கூமக்கள்ளி → கோமக்கள்ளி.]*

**கோமகள்** *kō-magaḷ,* பெ.(n.) 1. அரசி; queen. *"எங்கோமகளை யாட்டிய் வந்நாள்" (சிலப். 25:161).* 2. தலைவி (பிங்.); lady in authority, mistress.

ம. கோமள்

*[கோ + மகள்.]*

**கோமகன்** *kō-magaṉ,* பெ.(n.) 1. இளவரசன்; prince, son of a king. கோமகற் பெற்று (பெருங். நரவாண. 7:36). 2. அரசன்; king. *"கோமகன் கொற்றங் குறைவின் றோங்கி" (சிலப். 36:6).* 3. மதிப்பிற் குரியவர்; eminent person.

*[கோ + மகன்.]*

**கோமங்கலம்** *kō-maṅgalam,* பெ.(n.) கோவை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kovai Dt.

*[கோ + மங்கலம்.]*

**கோமசூரிகை** *kō-maśūrigai,* பெ.(n.) கால்நடைகளுக் குண்டாகும் அம்மை; cow-pox, small pox of cattle - vaccinia (சா. அக.).

*[கோமம் + சூரிகை.]*

**கோமட்டி** *ko-matti,* பெ.(n.) தெலுங்கு வணிக வகையினர்; Telugu-speaking merchant-caste.

ம. கோமட்டி; **க.** கோமடி, கோமடிக; **தெ.** கோமடி; **கூ.** கோமடி, கோமடிகெ

*[கோமுட்டி → கோமட்டி.]*

**கோமடந்தை** *kō-madandai,* பெ.(n.) அரசலக்குமி, அரசி; queen, goddess of Sovereignty. *"கோமடந்தை களிகூர" (பாரத அருச்சுனன்றீர். 40).*

ம. கோமடந்த.

*[கோ + மடந்தை.]*

**கோமடம்** *kōmadam,* பெ. (n.) பெரிய மடம்; big mutt. "கஞ்சிபோசன் இராமபிரான்பட்டரூய கோமடத்து சூரியதேவபட்டரூய அத்திக்குறி நம்பிப்பிரான் பட்டரூய" (தெ.இ.கல்.தொ.6 கல்.37–16).

*[கோ + மடம்.]*

**கோமணம்** *kōmaṇam,* பெ.(n.) ***கோவணம்*** பார்க்க; see *kōvaṇam.*

மறுவ. தாய்ச்சிலை.

ம. கோமணம்; **து.** கோமண.

*[கோமணம் →கோவணம்.]*

**கோமணாண்டி** *kōmaṇāṇḍi,* பெ.(n.) ***கோவணாண்டி*** பார்க்க; see *kōvaṇāṇḍi.*

*[கோவணாண்டி → கோமணாண்டி.]*

**கோமணிக் குன்றம்** *kōmaṇi-k-kuṉṟam,* பெ.(n.) பித்தளைக்கான கனிமங்கள் கிடைக்கும் மலை; mountain containing brass ore (சா. அக.).

*[கோமணி + குன்றம்.]*

**கோமதம்** *kōmadam,* பெ.(n.) ***கோரோசனை*** பார்க்க; see *kōrōśaṉai* (சா. அக.).

*[கோ = மாடு. கோ + மதம்.]*

**கோமதி** *kōmadi,* பெ.(n.) 1. பீகார் மாநிலத்து ஆறு; a river of Bihar. "ஆன கோமதி வந்தெய்து மரவம்" (கம்பரா. வேள்வி.5) 2. ஒரு தெய்வம்; a Goddess.

*[கோமளத்தி →கோமதி]*

**கோமதை** *kōmadai,* பெ.(n.) ***கோமதி*** பார்க்க; see *kōmadi.*

*[கோமதி + கோமந்தை]*

**கோமம்** *kōmam*, பெ.(n.) 1. ஈரல்; liver, 2. சங்கு செய்நஞ்சு; a variety of white arsenic (சா. அக.).

*[கோப்பு →கோமம் (கூரானது)]*

**கோமம்பட்டி** *kōmam-paṭṭi*, பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri dt.

*[கோமம் + பட்டி.]*

**கோமம்பட்டு** *kōmam-paṭṭu*, பெ.(n.) தருமபுரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Dharmapuri Dt.

*[கோமம் + பட்டு.]*

**கோமயம்** *kōmayam*, பெ.(n.) 1.மாட்டுச்சாணம்; cow-dung. *"கோமயப் பூச்சிச் செய்தே" (இரகு.கடிம.79).* 2. ஆன் (பசுவின்) சிறுநீர்; cow's urine. *"இருநான்கு பஞ்சதசியேழ் இரண்டு தன்னில் வரமாகுங் கொள்கோமயம்" (சைவச. பெ.கு. 198).* 3.காடிநீர்; fermented liquid, vinegar.4.ஆ (பசு)த் தன்மை; the nature or peculiarity of a cow (சா. அக.).

*[கோ + மயம்]*

**கோமரத்தாடி** *kōmarattāḍi*, பெ.(n.) உடலில் தெய்வங்களேறுவதால் வெறியாடுபவன் (G. Tn. D.I. 109); a person who is inspired by deities and dances.

*[கோ + மரம் + அத்து + ஆடி.]*

**கோமரம்**[1] *kōmaram*, பெ.(n.) தெய்வமேறி ஆடுகை (தெய்வ ஆவேசம்) (G.Tn.D.I.109); inspiration, possession by spirits.

[ம. கோமரம் → த. கோமரம்.]

**கோமரம்**[2] *kōmaram*, பெ.(n.) சதுரக்கள்ளி (மலை.); square spurge.

*[கூர் → கோ + மரம்]*

**கோமராசி** *kōmarāśi*, பெ.(n.) குரங்கன்சுறா அல்லது புலிச்சுறா வென்னும் ஒருவகைக் கடல்மீன்; tiger-shark-Stegostoma tigrinum (சா. அக.).

*[கோமம் + ராசி (உயிரினம்)]*

**கோமரி** *kōmari*, பெ.(n.) ஓமம்; a species of cumin (சா.அக.).

*[கூர்மலி→கூமலி→கோமரி]*

**கோமலகம்** *kōmalagam*, பெ.(n.) தாமரை நார் நூல்; lotus thread.

**மறுவ.** கோபத்திரம்.

*[கோமலம் →கோமலகம்]*

**கோமலதை** *kōmaladai*, பெ.(n.) மென்மை; that which is soft.

*[கோமலம் →கோமலதை]*

**கோமலம்** *kōmalam*, பெ.(n.) 1. அழகு; beauty. 2. நீர்; water. 3. பேய்த்தேர்; a ghost (temple car) chariot, 4. மிருது; softness. 5. இளவேனில்; spring season.

*[கும்→ கும்மல்→ கும்மலம் →கோமலம்]*

**கோமலமூலகம்** *kōmala-mūlagam*, பெ.(n.) முருங்கை; drumstick tree.

*[கோமலம் + மூலகம்]*

**கோமளம்** *kōmaḷam*, பெ.(n.) 1. மென்மை; softness, tenderness. *"கோமளக் கொழுந்து" (திருவாச.5:68).* 2) இளமை; youthfullness, juvenility. *"கோமளவான் கன்றைப் புல்கி" (திவ். திருவாய். 4:4:5).* 3. அழகு (சூடா.); loveliness, beauty. *"கோமளம் பத்மராகம்" (அரிச்.நாட்டு.10).* 4.கறவை பெற்றம் (சூடா.); milch cow. 5.மாணிக்கவகை; a kind of ruby. *"மாணிக்கம்...... கோமளமும்" (S.I.I.ii,431,51).* 6. மகிழ்ச்சி; joy.

*[கும்மல்→ கும்மலம் →கோமளம்]*

**கோமளாங்கம்** *kōmaḷāṅgam*, பெ.(n.) மென்மையான வுடம்பு; tender body (சா. அக.).

*[கோமளம் + அங்கம் - கோமளாங்கம்]*

**கோமாட்டி** *kōmāṭṭi*, பெ.(n.)தலைவி; heroine, mistress. *"கவிரிதழ்க் குறக்கோ மாட்டி கணவனை" (குற்றா. தல. நூற்பயன் 49).*

*[கோவன் →கோபன்→கோமம் + ஆட்டி - கோமாட்டி.]*

**கோமாணங்கையர்** *kōmāṇaṅgaiyar*, பெ.(n.) அரசன் பெருந்தேவி; queen-in-chief in a kings harem. *"பைந்தொடிக் கோமாணங்கையர்" (பெருங். உஞ்சைக். 40:63).*

*[கோமாள் + நங்கையர்.]*

**கோமாதாக்கள்** *kō-mādākkaḷ*, பெ.(n.) நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை என்ற ஐவகை ஆன் (பசு)கள்; the fine 'mother cows', viz., nantai, pattirai, surabi, *śuśilai, śumaṉai*

*[கோ + மாதாக்கள்.]*

## கோபுர வகைகள்



அங்கயற்கண்ணி (மீனாட்சியம்மன்)



எழிற்கண்ணியம்மன் (காஞ்சி காமாட்சியம்மன்)



திருவண்ணாமலை



பேரரசப் பெருமாள் (காஞ்சிவரதராசப் பெருமாள்)



**கோமாப்பு** *kōmāppu*, பெ. (n.) நரிநாவல்; small jaumoon (சா. அக.).

*[கோ + (மால்) மாப்பு]*

**கோமாபுரம்** *kōmāpuram*, பெ.(n.) தஞ்சை மாவட்டத்துச் சிற்றூர், a village in Thanjai dt.

*[கோமம் + புரம்.]*

**கோமாயு** *kōmāyu*, பெ.(n.) 1. நரி; fox; jackal. 2. சிறு கலன்; small vessel.

*[குறு →கோ + மாயு]*

**கோமார்** *kōmār*, பெ.(n.) நாவல்மரம்; jamoon tree (சா. அக.).

*[கோமம் + மரம் – கோமமரம்→கோமார் (கொ.வ.)]*

**கோமாரி** *kōmāri*, பெ.(n.) மாடுகளின் கால்களிலும் வாயிலும் வரும் ஒருவகை நோய்; a kind of disease in the mouth and leg of cow.

மறுவ. கோதாரி.

*[கோ (மாடு) + மாரி (நோய்).]*

**கோமாள்** *kōmāḷ*, பெ.(n.) தலைவி; mistress. *"கோமாட் கோடிய குறிப்பின னாகி" (பெருங். மகத. 8:59).*

*[கோமகள் → கோமாள்]*

**கோமாளம்** *kōmāḷam*, பெ.(n.) *1.* ***கும்மாளம்*** குதித்து ஆடுகை; jumping, romping, as of fat bullocks. 2. கொண்டாட்டம்; celebration. 3. பகடி விளையாட்டு; a kind of fun play.

ம. கோமாளம்.

*[கும்மாளம் → கோமாளம்]*

**கோமாளி[1]-த்தல்** *kōmāḷi-*, 4 செ.கு.வி.(v.i.) கோமாளித்தனஞ் செய்தல் (பாண்டி); to play the baffoon; to indulge in drollery.

*[கோமாளம் → கோமாளி.]*

**கோமாளி[2]** *kōmāḷi*, பெ.(n.) 1. நகைச்சுவை யூட்டுபவன்; buffoon, a clown. *"நிலையிலாத கோமாளி" (திருப்பு. 530).* 2. பேதை; a simpleton.

ம. கோமாளி; **கோத.** கோமாள்ய.

*[கும்மாளம் → கும்மாளி → கோமாளி.]*

**கோமாளித்தனம்** *kōmāḷi-t-taṉam*, பெ.(n.) பேதைத்தனம்; baffoonness.

ம. கோமாளித்தனம்.

*[கோமாளி + தனம்.]*

**கோமாளிக்குணம்** *kōmāḷi-k-kuṇam*, பெ.(n.) பித்து; madness (சா. அக.).

*[கோமாளி + குணம்.]*

**கோமாளிக்கூத்து** *kōmāḷi-k-kūttu*, பெ.(n.) நகைப்பு விளைக்குஞ் செயல்; buffoonery.

*[கோமாளி + கூத்து.]*

**கோமாளூர்** *kōmāḷūr*, பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Villuppuram dt.

*[கோமாள் + ஊர்.]*

**கோமான்[1]** *kōmāṉ*, பெ.(n.) 1. அரசன்; king. *"வத்தவர் கோமான் வயவர் திரிதர" (பெருங். உஞ்சைக். 44:93).* 2. பெருமையிற் சிறந்தோன்; person of eminence, lord. *"கோமாற்கே நாமென்று மீளா வாளாய்" (தேவா. 1236:1).* 3. குரு (பிங்.); spiritual preceptor. 4. மூத்தோன் (திவா.); elder.

*[கோ + (மகன்) மான்]*

**கோமான்[2]** *kōmāṉ*, பெ.(n.) பன்றி; hog.

*[கூர்மம்→கோமம்→ கோமான்]*

**கோமான்[3]** *kōmāṉ*, பெ.(n.) சதுரக்கள்ளி; square spurge.

*[கூர்மம்→கோமம்→ கோமான்]*

**கோமி** *kōmi*, பெ.(n.) ***கோமதி*** பார்க்க; see *kōmadi.* *"கோமியு முறையுங் குடமூக்கிலே" (தேவா. 432:8).*

*[கோமதி →கோமி]*

**கோமிருகம்** *kōmirugam*, பெ.(n.) கத்தூரிமான்; musk deer (சா. அக.).

*[கோ + மிருகம்.]*

**கோமிலாய்** *kōmilāy*, பெ.(n.) காட்டுவிலங்கின் தன்மையன் (யாழ். அக.); rude, brutish person.

*[கோமுரான்→கோமிலா(ன்)ய்.]*

**கோமுகம்[1]** *kō-mugam*, பெ.(n.) 1. ***கோமுகா விருக்கை*** பார்க்க; see *komugā-v-irukkai.* 2. ***கோமுகி*** பார்க்க; see *kōmugi.* ஒரு விரல் உசரத்து கோமுகம் ஒன்று (S.I.I. ii. 176, 60).

*[கோ + முகம்]*

**கோமுகம்**[2] *kōmugam,* பெ.(n.) ஒருவகை இசைக் கருவி; a kind of musical instrument.

*[கோ + முகம்]*

**கோமுகாவிருக்கை** *kōmugā-v-irukkai,* பெ.(n.) கணுக்கால்களை இடுப்புச் சந்திற் சேர்க்கும் மாட்டின் முகம் போன்ற ஒக இருக்கை வகை; a yōgic posture which consists in crossing the ankles and placing them in the hip joints.

மறுவ. கோமுகாசனம்

*[கோமுகம் + இருக்கை]*

**கோமுகி** *kō-mugi,* பெ.(n.) ஆன் (பசு) முதலியவற்றின் முகமாகச் செய்யப்பட்ட நீர்விழும் வாய்; gargoyle as in the form of cows' head, projecting from a building, pedestal of a lingam etc.

மறுவ. கோமுகம், கோமுகை.

*[கோ + முகி]*

**கோமுகை** *kōmugai,* பெ.(n.) ***கோமுகி*** பார்க்க; see *kō-mugi.* *"ஒருமுழுங் கோமுகையோடும்" (சைவச. பொது. 505).*

*[கோ + (முகி) முகை.]*

**கோமுச்சிரவல்லி** *kōmu-c-ciravalli,* பெ.(n.) சித்திரமூலம் என்னும் கொடி (மலை.); Ceylon leadwort, climber.

மறுவ. கொடுவேலி.

*[கோமுகம் + சிரவல்லி.]*

**கோமுட்டி**[1] *kōmutti,* பெ.(n.) தெலுங்கு பேசும் வணிகர்; Telugu speaking merchant.

*[கோ + முட்டி. மாட்டு மந்தைகளையுடைய செல்வன்.]*

**கோமுட்டி**[2] *kōmutti,* பெ.(n.) பாயுடன் கூடிய மரம்; a wood along with a mat.

*[கோ + முட்டி.]*

**கோமுட்டிக்குட்டு** *kōmutt-k-kuttu,* பெ.(n.) கோமுட்டிகளின் கமுக்கமான வணிகத் தரவுகள்; trade-secrets, as of a *kōmutti.*

*[கோமுட்டி + குட்டு.]*

**கோமுட்டிச்சாட்சி** *kōmutti-c-catci,* பெ.(n.) வழக்காடி, எதிர்வழக்காடி இருவருக்கும் ஏற்ப உரைக்கும் சான்று (கோமுட்டி சொல்லுஞ் சான்று); evidence equally favourable to the plaintiff and defendant, evidence of ambiguous value.

*[கோமுட்டி + சாட்சி.]*

**கோமுராச்சுறா** *kōmurā-c-curā,* பெ.(n.) சுறாமீன் வகைகளுலொன்று; a kind of shark fish.



கோமுராச்சுறாமீன்

*[கோமுரா + சுறா.]*

**கோமுற்றவர்** *kō-murravar,* பெ.(n.) அரசர்; king. *"கோமுற்றவர் கொள்ளுதல்" (அஷ்டாதச. ப. 71).*

*[கோ + முற்று – கோமுற்று→கோமுற்றவர்.]*

**கோமுறியான்** *kōmuriyān,* பெ.(n.) பிலால் வகையைச் சார்ந்ததொரு கடல்மீன் (மீனவ.); a kind of sea fish as of *pilāl.*

*[கோ + முறியான்.]*

**கோமுறை**[1] *kō-murai,* பெ.(n.) அரசனது நெறி தவறாத ஆட்சி; just rule of a king. *"கோமுறை யன்றிப் படுபொருள் வெளவிய" (சிலப். 23:101).*

*[கோ + முறை.]*

**கோமுறை**[2] *kō-murai,* பெ.(n.) அரசிறை ; revenue. *"நாம் கொள்ளும் கோமுறைகளுமே" (S.I.I. V.312).*

*[கோ + முறை.]*

**கோமுறைபாடு** *kōmurai-pādu,* பெ.(n.) அரசு இட்டுள்ள இறை, வரி முதலிய கட்டுப்பாடுகள்; regularisation of rate, tax levied by the Government. "இந் நான்கெல்லைக்கு உட்பட்ட நஞ்செய் புஞ்செய் பட்டடை கொடித்தோட்டம் மரவடை மாவடை மற்றும் நாங்கொள்ளும் கோமுறை பாடுகளும் மற்றும் எப்பேற்பட்ட சுவந்திரங்களும்" (SII.V. 763–6 p. 329).

*[கோ + முறைபாடு.]*

**கோமுனி** *kō-muni,* பெ.(n.) அரச குரு; royal sage. *"சரங்களே கொடு கோமுனி யிருக்கையோர் கூட மாக்கினான்" (கம்பரா. வேள்வி. 49).*

*[கோ + முனி.]*

**கோமூத்திரம்** *kō-mūttiram,* பெ.(n.) ஆவின் சிறுநீர்; cow's urine (சா. அக.).

*[கோ + மூத்திரம்.]*

முள் – [மொள்] = மோள். மோளுதல் → சிறுநீர்விடுதல். மோள் + நிரம் – [மோட்டிரம்] – மோத்திரம் → மூத்திரம். மோள் என்னும் வினையும் மோத்திரம் என்னும் பெயர்வடிவும் இன்றும் பாண்டி நாட்டில் வழங்குகிறது {வ...வர.244}.

**கோமூத்திரிகை**[1] *kō-mūttrigai,* பெ.(n.) 1.ஒரு வகைப் புல்; a kind of yellowish brown grass. 2. ஒரு கொடி; a creeper (சா. அக.).

*[கோ + (மூத்திரம்) மூத்திரிகை.]*

**கோமூத்திரிகை**[2] *kōmūttirigai,* பெ.(n.) ஒரு செய்யுளின் முன்னிரண்டடி மேல்வரியாகவும் பின்னிரண்டடி கீழ்வரியாகவும் எழுதி அவ் விரண்டு வரியின் எழுத்துகளையும் மாட்டின் சிறுநீர்த் தாரைபோல் மாறிமாறிப் படிக்க அச் செய்யுளாகும்படி அமைத்துப் பாடும் சித்திரகவி (தண்டி. '95); verse of two lines composed in such a way that the first letter of the first, the 2nd of the 2nd, the 3rd of the first, the 4th of the 2nd, etc., when read together form the 1st line and the 1st of the 2nd, the 2nd of the 1st, the 3rd of the 2nd, the 4th of the 1st etc., form the second line.

கோமூத்திரிகை

skt. *mūttirikā.*

*[கோ + (மூத்திரம்) மூத்திரிகை.]*

**கோமேதகத்தீவு** *kōmēdaga-t-tivu,* பெ.(n.) தொன்மங்களில் கூறப்பட்ட எழுவகைத் தீவுகளுள் ஒன்று; (சி.போ.பா.ப. 209); an annular continent mentioned in Puranas.

*[கோமேதகம் + தீவு.]*

**கோமேதகம்** *kōmēdagam,* பெ.(n.) ஒன்பான் மணிகளுளொன்று (சிலப். 14:190, உரை); sardonyx from the Himalayas and the Indus, one of nine gems.

*[கோ + மேதகம். கோ + (மேதம்) மேதகம். கோ = மாடு. மேதம் = கொழுப்பு.]*

மாட்டுக் கொழுப்பின் நிறம் கொண்ட மணி கோமேதகம் எனப்பட்டது. இதில் வெண்மை, வெளிர்மஞ்சள், சிவப்பு, கருநீல வகைகளும் உண்டு.

**கோமேதம்**[1] *kō-mēdam,* பெ.(n.) ***கோமேதகம்*** பார்க்க; see *kōmēdagam.*

*[கோ + (மேதகம்) மேதம்.]*

**கோமேதம்**[2] *kōmēdam,* பெ.(n.) ஆவின் கொழுப்பைத் தீயிலிடும் வேள்வி; cow-sacrifice. *"கோமே மிராச சூயம்" (உத்தரா.திக்குவி.117).*

*[கோ + மேதம். கோ = ஆ, மாடு. மேதம் = கொழுப்பு.]*

**கோய்** *kōy,* பெ.(n.) 1. கள் முகக்கும் ஏனம்; vessel for taking out toddy. *"ஓரிற் கோயிற் றேருமால்" (புறநா. 300).* 2. மணத்தி (பரணி)ச் செப்பு; small perfume box. *"சாந்துக்கோய் புகிய செல்வ" (சீவக. 764).* 3. தாழி (பரணி) நாள் (சங்.அக.); the second naksatra.

*[கோளி→கோள் → கோய்.]*

**கோயக்கண்** *kōya-k-kaṉ,* பெ.(n.) மாறுகண்; squint eye.

*[கோய் + கண் – கோய்க்கண் →கோயக்கண்.]*

**கோயம்புத்தூர்** *kōyamputtūr,* பெ.(n.) ***கோவன் புத்தூர்*** பார்க்க; see *kōvaṉ-puttūr.*

*[கோவன் (ஆயன்) +புத்தூர் = கோவன்புத்தூர்→ கோயம்புத்தூர்.]*

கோவன் என்னும் ஆயர் இனத் தலைவன் வாழ்ந்த ஊர் என்பதனால் கோவன்புத்தூர் ஆகிப் பின்னர்க் கோயம்புத்தூர் ஆயிற்று.

**கோயம்பேடு** *kōyam-bēḍu,* பெ.(n.) சென்னை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Chennai Dt.

*[கோள் = பகைவரிடம் கொள்ளையடித்த மாடுகள். கோள்→கோ + அன் – கோயன் (மாடு மேய்ப்பவன், மாட்டு மந்தைக்காரன்.) + பேடு (மேட்டு நிலம்) → கோயம்பேடு.]*

**கோயமுத்தூர்** *kōyamuttūr,* பெ.(n.) ***கோவன் புத்தூர்*** பார்க்க; see *kōvaṉ-puttūr.*

*[கோவன் – கோயன் + புத்தூர்.]*

**கோயர்** *kōyar,* பெ.(n.) 1. கோயன் பார்க்க; see *kōyaṉ.* 2. கோசர் என்னும் வகுப்பினர்; people

known as *Kōsar*. 3. கோதாவிரிக்கரையில் வாழும் திராவிட வகுப்பினர்; a Dravidian tribal group of people in the Godaviri region of Andra Pradesh.

*[கோ→ கோயன்→கோயர் (மாடு மேய்ப்பவர்).]*

**கோயன்** *kōyan*, பெ.(n.) 1. மாடு மேய்ப்பவன், ஆயன்; a cowherd. 2. மாட்டு மந்தைக்கு உரிமை யாளன்; owner of a herd.

*[கோள் : பகைவரிடம் கொள்ளையடித்த மாடுகள். கோள்→கோ + அன் – கோயன்.]*

**கோயா** *kōyā*, பெ.(n.) ஆந்திர மாநிலத்தில் வாரங்கல், கம்மம், கோதாவரிப் பகுதிகளிலும், சட்டித்(ஸ்)கர் (பஸ்தர்), ஒரியா (கோரபட்) மாநிலங்களிலும் பழங்குடிமக்கள் இரண்டிலக்கம் பேருக்குமேல் பேசி வரும் திரவிடமொழி; a Dravidian language spoken by more than two lakhs Tribals in Andhra Pradesh (Warangal, Kammam, Godavari) etc.

*[கோ : மலை. கோ → கோயன்→கோயா (மலைவாழ் நன்).]*

**கோயில்**[1] *kōyil*, பெ.(n.) அரண்மனை; palace, residence of a king or noble man. *"கோயின் மன்னனைக் குறுகினள்" (சிலப்.20:47).*

*[கோ + இல் – கோயில்.]*

கோயில் எனும் சொல் தொடக்க காலத்தில் அரசனின் அரண்மனையை மட்டும் குறித்தது [கோ = அரசன், இல் = வீடு] இச் சொல் [கோ] பெரியது என்றும் பொருள்பட்டதால் பெரிய வீடு என்றும் தொடக்கத்தில் ஆளப்பட்டது. பெரிய வீடு என்று பொருள்பட்ட போது அரசன் வாழும் வீட்டைவிட, கடவுள் இருக்கும் கட்டடம் மிகப் பெரிதாக இருக்க வேண்டும் எனும் கருத்தில் கோயில்கள் அரண்மனைகளைவிட, பெரியனவாகக் கட்டப்பட்டன. இக் கருத்தில் 'கோ' [பெரிய] பெயரெச்சமாக நிற்பதால் கோயில் என்பதைச் சேர்த்து எழுதாமல் கோ இல் எனப் பிரித்து எழுதுவதும் வழக்கமாக இருந்தது. பிரித்து எழுதப்பட்ட கோஇல் என்னும் சொல்லே கல்வெட்டிலும் கடவுள் ஆலயத்தைக் குறிக்கப் பயன்பட்டிருக்கிறது. இடையில் யகர வகர உடம்படுமெய்கள் சேர்க்காமல் பெயர்ச்சொற்களையும் பெயர் ஈறுகளையும் பிரித்து எழுதுவதைத் தொல்காப்பியரும் குறிப்பிட்டிருக்கிறார். நாய் என்பது நாஇ என உயிரெழுத்து இகரம் சேர்த்துத் தொல்காப்பியத்தில் குறிப்பிடப்படுகிறது. ஐந்திராவிட மொழிகளான மராத்தி, குச்சர மொழிகளிலும் உடம்படுமெய்களான யகர வகரங்கள் சேர்க்கப்படுவதில்லை.

கோ என்னும் சொல்லுக்குத் தலைவன், அரசன், கடவுள், பெரியது என்னும் அடிப்படைப் பொருள்கள் உள்ளன. ''வாயில் வந்து கோயில் காட்ட'' எனும் சிலப்பதிகாரத் தொடரில் கோயில் என்னும் சொல் அரண்மனையையே குறித்தது. தொல்காப்பியருக்கும் முந்தைய பழங்காலத்தில் கோயில்கள் மாங்களின்கீழ் அமைந்த சிறு உருவங்களாக இருந்தன. கடவுள் கோவிலுக்கென்று கட்டடங்கள் எழுப்பப்பட்டதற்கான சான்றுகள் சிந்துவெளி நாகரிகத்தில் கூடக் கிடைக்கவில்லை. ஆதலால் கோட்டைகளோடு அமைந்த அரசன் வீடு ஒன்றே பெரிய கட்டடமாக இருந்ததால் கோயில் அரண்மனையை மட்டும் குறித்தது. மலையாள மொழியிலும் கோயில் அரண்மனையைக் குறிக்கும். கடவுள் இருக்கும் கோயிலை அம்பலம் என்பர் [பகவதி அம்பலம்]. நாளடைவில் அரண்மனையைக் குறித்த கோயில் எனும் சொல் கடவுள் ஆலயத்தையும் குறிக்கப் பயன்படுத்தப்பட்டது. கடவுள் இருக்கும் ஆலயத்தைக் கோவில் என்னும் சொல்லால் வேர் பிரித்துக் காட்டுவதே இலக்கணப்படி செப்பமானதாகும். புணர்ச்சி இலக்கணப்படி,

"இ, ஈ, ஐ வழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ஏமுனிவ் விருமையும்
உயர்வரின் உடம்படு மெய்யென் றாகும்"

– நன். 162

இதன்படி கோ + இல் = கோவில் என்றுதான் வரவேண்டும். கோயில் என்று எழுதுவது இலக்கணப்படி தவறாகிறது. அப்படியானால்

இறையன் – இறைவன்
துறையன் – துறைவன்

என்னும் சொற்கள் இருவகையாகவும் புணர்கின்றன. ஆனால் மலையன் என்பதை மலைவன் என்று சொல்ல முடியவில்லை. தலையன் தலைவன் என்ற இரண்டும் ஒரே பொருளில் வரும் என்று சொல்ல முடியாது. முனியன் முனிவன் என்பதையும் ஒரே பொருளில் கொள்ள முடியாது. கணியன் கணிவன் என்பனவும் வெவ்வேறு பொருளுடையன. ஆதலின் வகர உடம்படுமெய் வரவேண்டிய இடத்தில் யகர உடம்படுமெய் வந்தால் ஒரு நுண்ணிய பொருள் வேறுபாடு உள்ளது என்பதை மறுக்க இயலாது. ஆதலின் கோயில் என்பதில் பெரிய என்னும் பொருளில் 'கோ' பெயரெச்சமாக நின்று இடையில் விட்டிசைத்ததால் இலக்கணப்படி வகர உடம்படுமெய் வராமல் யகர உடம்படுமெய் வந்ததாகக் கொள்ள வேண்டும். இதன்படி கோவில் என்பதை ஒரு சொல் நீர்மைத்தாகக் கொண்டு, சேர்த்திசைக்க வேண்டும். 'கோயில்' என்பதை இருசொல் நீர்மைத்தான பெயரெச்சத் தொடராகக் கொண்டு 'கோஇல்' என இருசொல் போல் விட்டிசைக்க வேண்டும் என்று கொள்வதே பொருத்தமாகும்.

விட்டிசைக்காத சொற்புணர்வுகளில் பொருள் வேறுபாட்டை முதன்நிலைச் சொல்லே விளக்குகிறது. தலையன் தலைவன் எனும் விட்டிசை இல்லாத சொற்களில் நிலைமொழிச் சொல்லான தலை என்பதே பொருள் வேறுபாடு காட்டும். தலையன் என்பதில் தலையை உடையன் எனும் பொருளில் தலை + அன் எனப் பிரித்தல் வேண்டும். தலைவன் என்னும் சொல்லில் தலைமை உடையவள் என்னும் பொருளில் தலைவு + அன் எனப் பிரித்தல் வேண்டும் [தலைவு = தலைமை] சான்றாகப் பணிவு துணிவு போன்றவை பண்புப் பெயராதல் காண்க.

முனியன் முனிவன் எனும் சொற்களில் முனியன் என்பது இயற்பெயர். முனிவன் என்பதில் முனிவு என்பது நிலைமொழி ஆகிறது. [முனிவு + அன்].

இறையன், இறைவன் என்னும் சொற்களில் இறை + அன் = இறையன் எனவும், இறைவு [தலைமை] + அன் = இறைவன் எனவும் புணர்ந்தன. துறையன் துறைவன் என்னும் சொற்களில் துறை + அன் = துறையன், துறைவு [துறை மேலாண்மை] + அன் = துறைவன் எனப் புணர்ந்தன. இறைவு,

## கோயில் வகைகள் (திராவிடக் கட்டடக்கலை)



குடிசையின் கூரை அமைப்பு (பாஞ்சாலி மண்டபம்)



சதுரக்கோயில் அமைப்பு



நீள்சதுரக் கோயில் அமைப்பு



நீண்ட அரையுருளை வடிவ தூங்கானை மாடக்கோயில் அமைப்பு



நீழல் குடையமைப்பு

துறைவு எனும் சொற்கள் வழக்கிழந்தன. சாஅறாகப் பண்ணைய மேலாண்மை யைக் குறித்த பண்ணாட்டு என்னும் சொல் செய்யுளில் வழக்கிழந்தாலும் கொங்குநாட்டில் இன்றும் பேச்சு வழக்கில் இருப்பதைச் சுட்டிக் காட்டலாம்.

இதன் வண்ணம் கோவு (தலைமை) + இல் = கோவில். உலகப் படைப்பிற்கே தலைவனான இறைவனின் கோவிலைச் சுட்டியது. ஆதலால் கோயில் என்பது அரண்மனையை குறிக்கவும், கோவில் என்பது இறைவனின் ஆலயத்தைக் குறிக்கவும் வழங்கிய சொற்கள் என்று கூறுவதே இலக்கணப்படி அமைவு பெறத் தக்கனவாம். இருவகையாகவும் வரலாம் எனவும் ஒன்றினை வழுவமைதியாகக் கொள்ளலாம் எனவும் கூறப்படுவன மொழிமரபின் வரையறுத்த இலக்கண மருங்கில் உகந்த வழக்காக ஏற்றுக்கொள்ளத் தக்கனவல்ல.

**கோயில்[2]** *kōyil*, பெ.(n.) 1. ஆலயம்; temple, sanctuary, church, chapel. *"அரும்பொருட் டணைத்தே யண்ணல் கோயில்" (பரிபா. பக்.174, செய்யுள்.2).* 2. சிதம்பரம் (தேவா.); sacred town of Chidambaram (Cirrambalam). 3. திருவரங்கம்; Srirangam. *"கோயிற் பிள்ளா யிங்கே போதராயே" (திவ். பெரியாழ். 2.9:4).* 4. வீரசைவர் தரிக்கும் இலிங்கசம்புடம்; silver casket enclosing the lingam worn by Lingayats. 5. கோயிற்பற்று; parish church, parish.

**மறுவ.** கோவில், கோ இல், கோநகர் அம்பலம்.

**ம.** கோயில்; **தெ.** கோயில, கோவெல; **கோண்.** கோஅ(அரசன்); பர். கோச் (அரசன்).

*[கோ + இல் – கோயில்.]*

கோயில் பெயரெச்சத்தொடர்.

**கோயில்[3]** *kōyil*, பெ.(n.) நாற் சீர்த்தூக்கு நேர அளவு (மணிமே.2:19. உரை); a kind of time measure.

*[கோயில் மணி → கோயில்.]*

**கோயில்கணக்கு** *kōyil-kaṇakku*, பெ.(n.) ***கோயிற்கணக்கு*** பார்க்க; see *kōyir-kaṇakku*. *"இப்படிக்கு கோயில் கணக்கு தப்பிலா வேளான் எழுத்து" (SII.XXVI.15-16 p.11).*

*[கோயில் + கணக்கு.]*

**கோயில்காளை** *kōyil-kāḷai*, பெ.(n.) ***கோயிற் காளை*** பார்க்க; see *koyir-kāḷai*.

*[கோயில் + காளை.]*

**கோயில்குடியான்** *kōyil-kuḍiyāṉ*, பெ.(n.) துரிஞ்சில்; dark sirissa (சா. அக.).

*[கோயில் + குடியான்.]*

**கோயில்தானத்தார்** *kōyil-tānattār*, பெ.(n.) திருக்கோயில் வழிபாடுகள். திருவிழாக்கள். திருப் பணிக்ள் ஆகியவற்றைப் பொறுப்புடன் நிகழ்த்துவதற்கு ஊர்ச்சபையாரால் அமைக்கப்பெறும் பெருமக்கள்; a set of people asked to administer temple affairs. *"உடையார் திருக்கோபுரமடைய நாயனார் கோயில் தானத்தார்க்கு அருளிச் செயல்படி"* (S.I.I. XVII.130).

*[கோயில் + தானம் + அத்து + ஆர்.]*

**கோயில்மகிமை** *kōyil-magimai*, பெ.(n.) கோயில் காணிக்கை; donations to the temple.

*[கோயில் + மகிமை]*

**கோயில்மாடு** *kōyil-māḍu*, பெ.(n.) 1. கோயிற்கு விடப்பட்ட மாடு, கோயிலில் விளக்கெரிக்கத் தேவைப்படும் நெய்யை வழங்குதற்காகக் கொடையாக வழங்கப்பட்ட மாடு; cow or bull belonging to a temple. 2. பெருமாள்மாடு; trained bull taken by wandering mendicants. 3. ***கோயிற்காளை*** பார்க்க; see *kōyir-kāḷai*.

*[கோயில் + மாடு.]*

**கோயில்யானை** *kōyil-y-āṉai*, பெ.(n.) கோயிலில் உள்ள யானை; temple elephant.

*[கோயில் + யானை.]*

நிலம் விற்ற பிறகு எல்லை உறுதி செய்து ஊர் ஆட்சி மன்றத்தினர் நிலம் விற்றவர் வாங்கியவர் ஆகியவர் யானை முன் செல்லக் கற்களையும் கள்ளியையும் பயன்படுத்தி நிலத்தின் நான்கெல்லையும் உறுதி செய்வது.

**கோயில்வாசி** *kōyil-vāši*, பெ.(n.) அரசர்க்குரிய இறை; taxes due to the king (S.I.I.iii, 80).

*[கோயில் + வாசி.]*

**கோயில்வாரியம்** *kōyil-vāriyam*, பெ.(n.) கோயில் மேலாண்மை அவை; managing committee of a temple. *"கோயில் வாரியம்"* (S.I.I.iii, 80).

*[கோயில் + வாரியம்]*

**கோயில்வெண்ணி** *kōyil-veṇṇi*, பெ.(n.) கரிகாற் சோழன் தன் பகைவர்களுடன் பொருது வெற்றிபெற்ற இடம்; the place where kari-kal solan has fought with his opponent and won.

**மறுவ.** வெண்ணிக்கூற்றம், திருவெண்ணியூர், கோயில் உண்ணி.

*[கோயில் + வெண்ணி (வெண்நாவல் மரம்).]*

தஞ்சை மாவட்டத்தில் உள்ள வரலாற்றுச் சிறப்புடைய ஊர். கரிகாலன் சேரமான் பெருஞ்சேரலாதனை வென்றவூர். வெண்ணாவல் மரத்தை வெண்ணி என்பர். வெண்ணாவல் மரம் இருந்ததால் பெற்ற பெயர்.

**கோயிலக்கரமண்டபம்** *kōyil-akkara-mandabam,* பெ.(n.) கோயில் முன்மண்டபம்; the first mandapam in a temple. *"இக்கோயிலக்கற மண்டபத்து தளம் வடவெற்றாற்றி நித்தவினோத புரத்து அழியா நிலையில் வியாபாரிகளில் கோட்டாறுடையான முகிலன் குனிச்சாண்டார் தன்மம்" (புது.கல்.1029).*

*[கோயில் + அக்கரம் + மண்டபம்.]*

**கோயிலகம்** *kōyilagam,* பெ.(n.) கோயில் உள்ளகம்; the inner part of the temple.

*[கோயில் + அகம்.]*

**கோயிலங்காடியார்** *kōyil-aṅgāḍiyār,* பெ.(n.) தமிழ் நாட்டு வணிகக்குடிகளுள் ஒன்று; one of the business communities of Tamilnadu. *"நாட்டார் மாடையில் வகுக்கும் காணிக்கை திருத்தாயார் காணிக்கை திருமகனார் காணிக்கை பத்திவரி செட்டிகள் வாணிகள் சேனையங்காடியார் கொயிலங்காடியார்".*

*[கோயில் + அங்காடியார்.]*

**கோயிலாஞ்சேரி** *kōyilāñjēri,* பெ.(n.) சென்னை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Chennai Dt.

*[கோயிலான் + சேரி.]*

**கோயிலாம்பாக்கம்** *kōyilām-bākkam,* பெ.(n.) சென்னை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Chennai Dt.

*[கோயிலான் + பாக்கம்.]*

**கோயிலார்** *kōyilār,* பெ.(n.) கோயிற் பணியாளர்; servents of a temple (யாழ்.அக).

*[கோயில் + ஆர்.]*

**கோயிலாழ்வார்** *kōyil-āḻvār,* பெ.(n.) 1. வழிபாட்டுப் பெட்டி; box-shrine for private worship. 2. கருவறை; inner sanctuary or sanctum, sanctorum of a temple. *"கோயிலாழ்வார்க் குள்ளே பெரிய பெருமாள் கண் வளர்ந்தருளுகிறபடி" (திவ். திருமாலை. 21 வியா.76).*

**மறுவ.** உண்ணாழிகை.

*[கோயில் + ஆழ்வார்.]*

**கோயிலாள்** *kōyil-āl,* பெ.(n.) பட்டத்தரசி; crowned queen. *"தானுங் கோயிலாளும் புறம்போந்து நின்று" (பதிற்றுப். 8, பதி. இறுதி).*

*[கோ + இலாள். இல்லாள் → இலாள்.]*

**கோயிலொழுகு** *kōyil-oḻugu,* பெ.(n.) திருவரங்கத்துக் கோயிலின் வரலாறு கூறும் நூல்; a book dealing with the history, properties etc., of the Srirangam temple.

*[கோயில் + ஒழுகு.]*

**கோயிற்கட்டணம்** *kōyiṟ-kaṭṭaṇam,* பெ.(n.) உவளகம் (அந்தப்புரம்); palace-zenana. *'பெரிய பிராட்டியார் எழுந்தருளியிருக்கிற கோயிற்கட்டணமாய்' (ஈடு.10.10:9).*

*[கோயில் + கட்டணம்.]*

**கோயிற்கட்டி** *kōyiṟ-kaṭṭi,* பெ. (n.) உண்டைக்கட்டி; balls of cooked rice distributed in temples.

*[கோயில் + கட்டி.]*

**கோயிற்கணக்கு**[1] *kōyiṟ-kaṇakku,* பெ.(n.) கோயிற்கணக்கன்; temple accountant. *"இக் கோயிற் கணக்குகாணியுடைய நெற்குப்பை உடையான்" (S.I.I. V, 645).*

*[கோயில் + கணக்கு.]*

**கோயிற்கணக்கு**[2] *kōyiṟ-kaṇakku,* பெ.(n.) ஊர் தோறும் கிறித்தவரின் பிறப்பிறப்பு மற்றும் மண நிகழ்வுபற்றிப் பதியும் கோயிலிலுள்ள கணக்குப் புத்தகம் (யாழ். அக.); the Parish registry.

*[கோயில் + கணக்கு.]*

**கோயிற்கணக்குக் காணி** *kōyiṟ-kaṇakku-k-kāṇi,* பெ.(n.) கோயில் கணக்கர் இறையிலிநிலம்; Govt. Tax free land of the temple accountant. *"திருவூறலுடையார் கோயில் கணக்குக் காணி உடைய பெருந்துறுடையான்" (S.I.I. V. 1380 - 2 p. 500).*

*[கோயில் + கணக்கு + காணி.]*

**கோயிற்கலஞ்செய்-தல்** *kōyiṟ-kalañjey-,* 1 செ.கு.வி.(v.i.) கோயிலிடித்தல்; to demolish a temple. *"மாந்தரைக் குழியுளுந்துதல் கோயிற் கலஞ் செய்தல்" (நீலகேசி, 540).*

*[கோயில் + கு + அலம் + செய்.]*

**கோயிற்காலம்** *kōyiṟ-kālam,* பெ.(n.) கோயில் களில் அவ்வக் காலத்துச் செய்யப்படும் பூசை; temple worship performed at different hours of the day.

*[கோயில் + காலம்.]*

**கோயிற்காளை** *kōyiṟ-kāḷai*, பெ.(n.) 1. கோயிலுக்கு விடப்பட்ட காளை; bull of the temple. 2. அடங்காத் தடியன்; fat and unruly fellow.

*[கோயில் + காளை.]*

**கோயிற்கிராமம்** *kōyiṟ-kirāmam*, பெ.(n.) கோயிலுக்குச் சொந்தமான சிற்றூர்; a village belonging to a temple.

*[கோயில் + (கம்மம்) கிராமம்.]*

**கோயிற்குட்டி** *kōyiṟ-kuṭṭi*, பெ.(n.) ***கோயிற் பிள்ளை*** பார்க்க; see *kōyiṟ-piḷḷai*.

*[கோயில் + குட்டி.]*

**கோயிற்குடிமை** *kōyiṟ-kuḍimai*, பெ.(n.) கோயிலுக்குரிய பணியாளர் கோயில் நிலபுலன் களில் வீடு கட்டிக்கொண்டு வாழும் உரிமை; right to erect house in temple land by the temple servant. *"கொயில் குடிமை திருஅரங்கு விரபொகம், மடஅரிசி உள்ளிட்டன தவிர்வதாகவும்" (தெ.க.தொ.8, கல்.44).*

*[கோயில் + குடிமை.]*

**கோயிற்குடியான்** *kōyiṟ-kuḍiyāṉ*, பெ.(n.) சங்கூதும் பணிசெய்வோன்; conch-blower, a servile caste.

*[கோயில் + குடியான்.]*

**கோயிற்குத்து** *kōyiṟ-kuttu*, பெ.(n.) கோயில் வாசலுக்கு நேராக மனையின் வாசலமைதல்; the entrance of a home kept directly opposite to the entrance of a temple.

*[கோயில் + குத்து.]*

**கோயிற்குறுணி** *kōyiṟ-kuṟuṇi*, பெ.(n.) களத்தில் முதன்முதலாகக் கோயிலுக்குக் கொடுக்கும் குறுணியளவுள்ள தவசம்; first *kuṟuṇi* of a harvest given as an offering to the temple.

ம. கோயிற்குறுணி.

*[கோயில் + குறுணி]*

**கோயிற்கூட்டி** *kōyiṟ-kūṭṭi*, பெ.(n.) கிறித்தவக் கோயிலைப் பெருக்கித் தூய்மை செய்பவள்; church sweeper.

*[கோயில் + கூட்டி.]*

**கோயிற்கூழைத்தனம்** *kōyiṟ-kūḻai-t-taṉam*, பெ.(n.) அரசன் அவையிலுள்ளார் காட்டும் போலி வணக்கம்; hypocritical behaviour, characteristic of courtiers. *'நீங்கள் கோயிற் கூழைத்தனம் அடிக்கிறபடி இதுவோ!' (திவ். இயற்.திருவிருத். 90, வியா. 468).*

*[கோயில் + கூழை + தனம்.]*

**கோயிற்கேள்வி** *kōyiṟ-kēḷvi*, பெ.(n.) கோயில் மேலாளர் (I.M.P.N.A.191); temple manager.

*[கோயில் + கேள்வி. கேள்விகேட்டவர் = மேலாளர்.]*

**கோயிற்கொத்து** *kōyiṟ-kottu*, பெ.(n.) கோயில் அல்லது அரண்மனைப் பணியாள்கள் (M.E.R. 1923-4, p.103); temple or palace servants. *"கோயிற்கொத் தடிமைத் தாசி இருக்குமனை" (சரவண. பணவிடு.192).*

*[கோயில் + கொத்து.]*

**கோயிற்கொள்(ளு)-தல்** *kōyil-koḷ(ḷu)*,[13] செ.குன்றாவி. (v.t.) வாழுமிடமாகக் கொள்ளுதல்; to take up abode in, inhabit. *"திருக்கடித் தானத்தைக் கோயில் கொண்டான்" (திவ். திருவாய். 8:6:5).*

*[கோயில் + கொள்(ளு)-.]*

**கோயிற்சாந்து** *kōyiṟ-cāndu*, பெ.(n.) அரசர் பூசுதற்குரிய கலவைச் சந்தனம்; sandal-paste of superior quality, as suited to a king. *'கோயிற் சாந்தை உன்னால் ஒளிக்கப்போமோ' (திவ்.திருப்பா.10, வியா.120).*

*[கோயில் + சாந்து.]*

**கோயிற்சுற்று** *kōyiṟ-šuṟṟu*, பெ.(n.) கோயிலை அடுத்துள்ள இடம்; vicinity or neighbourhood of a temple.

*[கோயில் + சுற்று.]*

**கோயிற்சேரி** *kōyiṟ-šēri*, பெ.(n.) கோயிலுக்குச் சொந்தமான குடியிருப்புப் பகுதி; part of a village belonging to a temple.

*[கோயில் + சேரி.]*

**கோயிற்படி** *kōyiṟ-paḍi*, பெ.(n.) கோயிலிற் கிடைக்கும் அன்றாடக் கட்டளை (வின்.); daily allowance for the expenditure of a temple.

*[கோயில் + படி.]*

**கோயிற்பண்ணியர் விருத்தம்** *kōyiṟ-paṇṇiyar-viruttam*, பெ.(n.) நம்பியாண்டார் நம்பியால் இயற்றப்பெற்றுப் பதினொராந் திருமுறையுள் சேர்க்கப்பெற்றுள்ளதொரு சிற்றிலக்கியம்; a poem in *Patinōrāntirumuṟai* composed by Nambi yāṇḍār nambi.

*[கோயில் + பண்ணியர் + விருத்தம்.]*

**கோயிற்பணிப்பெண்** *kōir-paṇi-p-peṇ,* பெ.(n.) கோயிலிற் பணியாற்றும் பெண்; maid servant of the temple.

*[கோயில் + பணிப்பெண்.]*

**கோயிற்பதாகை** *kōyiṟ-padāgai,* பெ.(n.) சென்னை மாவட்டச் சிற்றூர்; a village in Chennai Dt.

*[கோயில் + (படாகை) பதாகை.]*

**கோயிற்பாளையம்** *kōyiṟ-pāḷaiyam,* பெ.(n.) ஈரோடு மாவட்டத்துச் சிற்றூர்; a village in Erode Dt.

*[கோயில் + பாளையம்.]*

**கோயிற்பற்று** *kōyiṟ-paṟṟu,* பெ. (n.) 1. கோயிலுக் குரிய நிலம் முதலியவை; lands, etc. belonging to a temple. 2. கிறித்தவக்கோயிலின் ஆளுகைக்குட் பட்ட ஊர்ப்பகுதி; Parish district belonging to a church.

ம. கோயிர்ப்பற்று.

*[கோயில் + பற்று.]*

**கோயிற்பறவை** *kōyiṟ-paṟavai,* பெ.(n.) 1. புறா; pigeon. 2. மயில்; peacock (சா. அக.).

*[கோயில் + பறவை.]*

**கோயிற்பாறை** *kōyiṟ-pāṟai,* பெ.(n.) பூம்புகாருக்குக் கிழக்கே 15 பாகக் கடலடியில் காணுமொரு கடற்பாறை; a sea rock at about 15 fathom depth in the sea east of Pūmpugār.

*[கோயில் + பாறை.]*

**கோயிற்பிராகாரம்**[1] *kōyiṟ-pirāgāram,* பெ.(n.) ***கோயிற்றிருச்சுற்று*** பார்க்க; see *kōyiṟ-ṟiruccuṟṟu.*

*[கோயில் + பிராகாரம்.]*

**கோயிற்பிராகாரம்**[2] *kōyiṟ-pirāgāram,* பெ.(n.) கிருத்தவக் கோயில்களில் பிணம் புதைக்குமிடம்; church yard.

*[கோயில் + பிராகாரம்.]*

**கோயிற்பிள்ளை** *kōyiṟ-piḷḷai,* பெ.(n.) கிறித்தவக் கோயிலின் அலுவலர்; church warden; sexton.

மறுவ. கோயிற்குட்டி.

*[கோயில் + பிள்ளை.]*

**கோயிற்புரம்** *kōyiṟ-puram,* பெ.(n.) குமரி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Kanyakumari Dt.

*[கோயில் + புரம்.]*

**கோயிற்புராணம்** *kōyiṟ-purāṇam,* பெ.(n.) உமாபதி சிவாச்சாரியார்(சிதம்பரம்) தில்லையின் பெருமை குறித்து இயற்றிய தொன்மநூல்; a puranam by *UmapathiŚivāccāriyār* dealing with Chidambaram.

*[கோயில் + புராணம்.]*

**கோயிற்புறம்** *kōyiṟ-puṟam,* பெ.(n.) கோவிலுக்குக் கொடையாக விடப்பட்ட நிலம்; land endowed to a temple.

*[கோயில் + புறம்.]*

**கோயிற்புறா** *kōyiṟ-puṟā,* பெ.(n.) மாடப் புறா; blue rock-pigeon.

*[கோயில் + புறா.]*

**கோயிற்பூனை** *kōyiṟ-pūṉai,* பெ.(n.) மதவேடதாரி (வின்.); dissembler in religion; hypocrite.

*[கோயில் + பூனை.]*

**கோயிற்பெண்டுகள்** *kōyiṟ-peṇḍugaḷ,* பெ.(n.) கோயில்களில் பணிபுரியும் பெண்கள்; தேவரடியார்; women working in temple. *"தன்மீஸ்வரமுடைய நாயனார் கோயில் தானத்தோம் கோயில் பெண்டுகள் மக்களும், புத்திர புத்திரரும்"* (S.I.I. VI. 254).

*[கோயில் + பெண்டுகள்.]*

**கோயிற்பெருச்சாளி** *kōyiṟ-peruccāḷi,* பெ.(n.) கோயிற் சொத்தைப் பறிக்க முயல்வோன்; one who misappropriates temple funds. *"உங்களப்பன் கோயிற் பெருச்சாளி" (தனிப்பா.).*

*[கோயில் + பெருச்சாளி. பெருச்சாளி = உழைப்பின்றி உண்டு கொழுப்பது. அதுபோல் கோயிற் சொத்தை உண்டு கொழுப்போன்.]*

**கோயிற்றமப்பேறு** *kōyiṟṟamappēṟu,* பெ.(n.) ஒருவகை வரி; a kind of tax in *nañjai* land. *"அந்தராயம் குடிமை கொயிற்றமப் பேறு நகர வினியோகம் உள்ளிட்டு வருவனவும் இந்நிலத்துக்கு தண்டாதொழியக் கடவதாகவும்" (S.I.I.XVII.287-3).*

*[கோயில் + தாமம் + பேறு.]*

**கோயிற்றமர்** *kōyiṟṟamar,* பெ.(n.) வழிபாடு, வரவுசெலவுக் கணக்கு, கண்காணிப்பு, தணிக்கை ஆய்வு ஆகிய அனைத்துப் பணிகளையும் நிகழ்த்தும் பூசகர்; the priest who is looking after the administration of the temple. *"அடுத்த ஆண்டைச் செலவு*

# கோயில் வகைகள் (திராவிடக் கட்டடக்கலை)





கரக் கோயில் எனப்படும் தேர் அமைப்பு



**வட்டக்குடிசை அமைப்பு :** சிவன் கோயில் ஆந்திர, ஒரிசா மாநில எல்லையில் கிழக்கு மலைத் தொடர்ச்சியிலுள்ள மகேந்திரகிரி மலை உச்சியில் அமைந்துள்ள பழங்கால சிவன்கோயில்.

- ***S.K. Pandian**, 1988,*
*The Hidden Heritage.*



சிதம்பரம் கோயில் (குடிசைக்கோயில் அமைப்பு)




தஞ்சைக்கோயில் (சதுரக்கோயில் அமைப்பு)

கோயிற்றமர் தவிராமையாலும்" (தெ.க.தொ.8, கல்97).

[கோயில் + தமர்].

**கோயிற்றிருச்சுற்று** *kōyiṟṟiru-c-cuṟṟu,* பெ.(n.) ***கோயிற்சுற்று*** பார்க்க; see *kōyiṟ-śuṟṟu.*

[கோயில் + திரு + சுற்று.]

**கோயிற்றூக்கு** *kōyiṟṟūkku,* பெ.(n.) தாளவகையுள் ஒன்று (சிலப். 14:150, உரை); a variety of time-measure.

[கோயில் + தூக்கு.]

**கோயின்மேரை** *kōyiṉ-mērai,* பெ.(n.) கோயிலுக்குக் கொடுக்கும் விளைச்சல் பகுதி; portion of agricultural produce set apart for temple.

[கோயில் + மேரை.]

**கோயின்மை** *kōyiṉmai,* பெ.(n.) 1. பெருமை; royal dignity, pride, as of a king. *"அடிமை யென்னுமக் கோயின்மை யாலே" (திவ். பெரியாழ்.5.1:4).* 2.செருக்கு; arrogance, conceit. *"கொங்கை நஞ்சுண்ட கோயின்மைகொலோ" (திவ். பெரியதி. 11.1:4).*

மறுவ: கோவின்மை.

[கோயில் →கோயின்மை.]

**கோயினான்மணிமாலை** *kōyiṉāṉmaṇi-mālai,* பெ.(n.) சிதம்பரத்திலுள்ள சிவபெருமான்மீது பட்டினத்தடிகள் பாடியதொரு சிற்றிலக்கியம் ; a poem by *Paṭṭiṉattaḍigaḷ* in praise of Šiva at Chidambaram.

[கோயில் + நான்மணி + மாலை.]

**கோர்[1]–த்தல்** *kōr,* 4 செ.குன்றாவி. (v.t.) ***கோ–த்தல்*** பார்க்க; see *kō-.*

[கோ → கோர்]

**கோர்[2]–த்தல்** *kōr,* 4 செ.குன்றாவி.(v.t.) நூலை அல்லது நாணைத் துளைவழி துருவச் செய்தல்; to send the edge of a thread through the hole of the needle. கோர் – செங்குத்து see கோரவாரம்.

[குள் → குர் → குரு → கோர் → கோர்–த்தல்]

**கோர்க்கலம்** *kōr-k-kalam,* பெ.(n.) மட்கலம் (யாழ்ப்.); earthen vessel.

[கோர் + கலம்.]

**கோர்க்காலி** *kōrkkali,* பெ.(n.) ***கோக்காலி*** பார்க்க; see *kōkkāli.*

[கோக்காலி →கோர்க்காலி.]

**கோர்கச்சா** *kōrkaccā,* பெ.(n.) மீன்திரட்டி, வைத்தற்குரிய வலைப்பை; a netted bag to collect and keep the fish during the time of fishing.

[கோர் + கச்சா(வு).]

**கோர்கோர்** *kōr-kōr,* பெ.(n.) சிறுவர் சண்டை, சேவற் சண்டையின்போது தூண்டிவிடும் உணர்ச்சிச் சொல்லடுக்கு; a phrase used in Children's war.

[கோர் + கோர்.]

**கோர்த்தம்** *kōrttam,* பெ.(n.) மூளையின் பெரும் பங்கு; the superior and chief portion of the brain occupying the whole upper cavity of the skull-cerebrum (சா. அக.).

இது மண்டை ஓட்டு (கபால) அறையில் நெற்றி தொடங்கிப் பிடரி வரையிலுள்ள அகலமான பகுதி.

[கோ → கோர்த்தம்.]

**கோர்த்தரம்** *kōr-t-taram,* பெ.(n.) சிறு மூளை; portion of the brain which is posterior to and underlies the great cerebral mass or cerebrum - cerebellum (சா. அக.).

[கோ → கோர்த்தம்→கோர்த்தரம்.]

இது பிடரியெலும்பினது கீழ்ப்பள்ளத்துள் ளடங்கிய மூளையின் பகுதி.

**கோர்வை[1]** *kōrvai,* பெ.(n.) ***கோவை*** பார்க்க; see *kōvai.*

ம. கோர்வ.

[கோ→கோர்→கோர்வை.]

**கோர்வை[2]** *kōrvai,* பெ.(n.) சொற்கட்டு அமைப்பின் முடிவில் வரும் தொடர்; a phrase coming at the end of a sequence of words.

[கோ→கோர்→கோர்வை.]

**கோர்வை[3]** *korvai,* பெ.(n.) உடற்பகுதியையும் முந்தானையையும் சேர்த்து நெய்யப்படும் சேலை; saree woven with contrasting colour border and palla.

[கோ→கோர்→கோர்வை]

**கோர்வை[4]** *korvai,* பெ.(n.) அன்னவெட்டி என்னும் சோற்றுக் கரண்டி; spoon to take rice.

[கோ → கோர்→கோர்வை.]

**கோர்வைப்புகையிலை** *korvai-p-pugai-y-ilai,* பெ.(n.) புகையிலை அடுக்கு; tobacco leaves strung together on a line.

*[கோர்வை + புகையிலை.]*

**கோர்வைமரம்** *kōrvai-maram,* பெ.(n.) கைமரங் களின் இணைப்பு; wooden joints.

*[கோர்வை + மரம்.]*

**கோரக்கநாதர்** *kōrakka-nādar,* பெ.(n.) ஒன்பது சித்தருள் ஒருவர் (சது.); one among the nine Śiddhas.

*[குரவர்→ குரக்கர் →கோரக்கர் + நாதர்.]*

(பாவலர் சரித்.) புலமை, மருத்துவம், இதளியம் (இரசவாதம்) மூன்றினும் பெயருடையார் – இவர் பாடிய நூறு செய்யுள் அடங்கிய நூலுக்குக் கோரக்கர் வைப்பு என்று பெயர்.

**கோரக்கர்** *kōrakkar,* பெ.(n.) ***கோரக்கநாதர்*** பார்க்க; see *kōrrakka-nādar.*

*[குரவர்→ குரக்கர் →கோரக்கர்.]*

**கோரக்கர்புளி** *kōrakkar-puli,* பெ.(n.) ஆனைப் புளி; பப்பரப்புளி; Korakha's tamarind, baobab (சா. அக.).

*[கோரக்கர் + புளி.]*

கோரக்கர் இம் மரத்தினடியே இருந்து உணர்த்தியதனால் இப் பெயர் பெற்றது.

**கோரக்கர் மூலி** *kōrakkar-mūli,* பெ.(n.) கஞ்சாங்குல்லை; (மூ.அ.); the drug ganja, as used by *Kōrakkar. "புகையென்று கோரக்கர் மூலி தன்னை" (அகத்.வல்.).*

*[கோரக்கர் + மூலி.]*

கோரக்கர் இம் மூலிகையை மருந்தாகச் செய்து வந்தவராம். இது குறித்தே இப் பூண்டுக்குக் கோரக்கர் மூலி எனப் பெயர் வந்திருக்கலாம் (பாவலர் சரித்.ப. 117).

**கோரக்கர் வைப்பு** *kōrakkar-vaippu,* பெ.(n.) கோரக்கர் எழுதிய நூல்களுள் ஒன்று, a book written by *Kōrakkar.*

*[கோரக்கர் + வைப்பு]*

**கோரகம்**[1] *kōragam,* பெ.(n.) ***கோரம்*** (வின்.) பார்க்க; see *kōram* (W.).

தெ. கோர.

*[கோரம்→ கோரகம்.]*

**கோரகம்**[2] *kōragam,* பெ.(n.) அரும்பு (பிங்.); bud.

*[குல்→ குரவம்→குரகம் →கோரகம்.]*

**கோரகம்**[3] *kōragam,* பெ.(n.) தக்கோலம் (நாநார்த்த); cubeb.

*[குரகம்→ கோரகம்.]*

**கோரகுப்பம்** *kōrakuppam,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvallur Dt.

*[கோரை + குப்பம் – கோரைக்குப்பம்→ கோரகுப்பம் (கொ.வ.).]*

**கோரகை**[1] *kōragai* பெ.(n.) 1. அகப்பை; ladle. *"கோரகைக்குட் பதிசுடுகறகம்" (தைலவ. பாயி. 14).* 2. புத்தத் துறவியரின் உணவு வாங்கும் ஏனம் (மணிமே.5:59, அரும்.); begging bowl of the Buddhist ascetics.

*[கோர்→ கோரகை (மொள்ளுவது).]*

**கோரகை**[2] *kōragai* பெ.(n.) 1. குயில்; Indian cuckoo. 2. இளம் பூவரும்பு; bud of flower. *"புல்லி நீப்பன பூவிரி கோரகை" (சேதுபு. திருநாட்டு. 120).*

*[கொள்→கோள்→கோளகை→ கோரகை.]*

**கோரங்கம்** *kōrangam,* பெ.(n.) நெல்லி (மலை.); Indian gooseberry.

மறுவ. கோரங்காமிகம்.

*[குளங்கம் → கோளங்கம்→ கோரகம்.]*

**கோரங்கி** *kōrangi,* பெ.(n.) 1. சிற்றேலம் (மலை.); small cardamom. 2. பூலா; feather-foil. 3. கோரங்கி நெல்; paddy grown in Korangi (Godaveri Dist.) (சா. அக.).

*[குளாங்கி→ கோரங்கி.]*

**கோரங்கிப்பயறு** *kōrangi-p-payaru,* பெ.(n.) கோதாவரி மாவட்டம் கோரங்கி நாட்டில் விளையும் பயறு; pulse or cereals cultivated in Korangi (Godaveri Dist.) (சா.அக.).

*[கோரங்கி + பயறு .]*

**கோரங்கிமூலம்** *kōrangi-mūlam,* பெ.(n.) பூலாங்கிழங்கு; bulbous root of *pūlā.*

*[கோரங்கி + மூலம்]*

**கோரங்கியேலம்** *kōrangi-y-ēlam,* பெ.(n.) சிற்றேலம்; little cardamom (சா. அக.).

*[கோரங்கி + ஏலம்.]*

**கோரங்கிழங்கு** *kōran-kilangu,* பெ.(n.) ***கோரைக்கிழங்கு*** பார்க்க, see *kōrai-k-kilangu.*

*[கோரை → கோரம் + கிழங்கு.]*

**கோரங்கு** *kōrangu,* பெ.(n.) நீர்க்கோழி; water-fowl (சா. அக.).

*[கோரங்கி→கோரங்கு.]*

**கோரசண்டி** *kōrašaṇḍi,* பெ.(n.) தலைச்சுருளிப் பூண்டு; Indian birth-wort (சா. அக.).

**மறுவ.** பெருமருந்துப்பூடு.

*[கோரை + சண்டி - கோரைச்சண்டி →கோரசண்டி (கொ.வ.).]*

**கோரசம்** *kōrašam,* பெ.(n.) 1. சிவல் என்னும் பறவைவகை (பிங்.); a kind of partridge. 2. கவுதாரி; grey partridge.

*[குரசம்→கோரசம்.]*

**கோரடம்** *kōraḍam,* பெ.(n.) கருங்காலி; a kind of ebony (சா. அக.).

*[கால்→காரடம்→கோரடம்.]*

**கோரண்டம்** *kōraṇḍam,* பெ.(n.) 1. பெருங் குறிஞ்சி (பிங்.); a species of conehead. 2. மரு தோன்றி (வின்.); henna. 3. செம்முள்ளி (தைலவ. தைல. 10); thorny nail-dye.

**மறுவ.** கோரண்ணம்.

*[குரண்டம்→கோரண்டம்.]*

**கோரண்ணம்** *kōraṇṇam,* பெ.(n.) ***கோரண்டம்*** பார்க்க; see *kōraṇḍam* (சா. அக.).

*[கோரண்டம்→கோரண்ணம்.]*

**கோரணப்பட்டு** *kōraṇa-p-paṭṭu,* பெ.(n.) கடலூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Cuddalore Dt.

*[காரணை→கோரணம் + பட்டு.]*

**கோரணம்பட்டி** *kōraṇampaṭṭi,* பெ.(n.) நாமக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Namakkal Dt.

*[கோரணம் + பட்டி.]*

**கோரணி[1]** *kōraṇi,* பெ.(n.) 1. கேலிக்கூத்து; mockery by gesture; mimicry. "*தோகையர் பாலர்கள் கோரணி கொண்டு*" (*பட்டினத். உடற்கூற்று வண்ணம், 3*). 2. முகஞ்சுளித்தல் (இராட்.); grimace, distortion of the countenance, as in pain or mimi cry. 3. திமிர்வாதம் (வின்.); epilepsy. 4. முணு முணுப்பு (யாழ்ப்.); captious complaint.

*[குரரி →குரணி→கோரணி.]*

**கோரணி[2]** *kōraṇi,* பெ.(n.) 1. குழப்பம், கோளாறு; confusion; "*கோரணிப் படுத்துமக் கொடிய ரோவலர்*" (இரட்சணிய.ப.81). 2. கவனத்தை வேறுவழியில் திருப்புதல் (பாண்டி); diversion of attention.

*[குரளு →குரணி→கோரணி.]*

**கோரனைப்பூடு** *kōraṉai-p-pūḍu,* பெ.(n.) வெட்டிவேர்; khus khus root (சா. அக.).

*[கோரை→கோரணை + பூடு.]*

**கோரதந்தம்** *kōra-tandam,* பெ.(n.) 1. கோரைப்பல்; curved tusks, as of wild boars. 2. பாம்பின் நச்சுப்பல்; poisonous fang of a snake.

*[கூர் →கூர →கோரம் + தந்தம்]*

**கோரதம்** *kō-radam,* பெ.(n.) பெரும்பாலும் எருதுகளால் இழுக்கப்படும் தேர்; a car, generally drawn by oxen.

*[கோ + ரதம்.]*

**கோரநீடு** *kōranīḍu,* பெ.(n.) பூனை; cat (சா. அக.).

*[கோரை + (நீட்டு) நீடு - கோரைநீடு (கோரைப்புல் போன்ற மீசையுடையது).]*

**கோரப்பல்** *kōra-p-pal,* பெ.(n.) 1) கொடுமையான, தோற்றமுடையப் பல்; ugly-looking tooth. 2. பாம்பின் நச்சுப் பல்; poisonous fang of a snake. 3. நான்கு முன்பற்களுக்கு அடுத்தபடி இரு பக்கத்திலுமுள்ள பற்கள்; the two sharp-pointed teeth in both jaws one on each side between the incisors, and grinders-canine teeth. 3.முறிந்த பல்; projecting stump of a tooth-snag tooth. 4.தெத்துப்பல்; deformed tooth (சா. அக.).

**மறுவ.** கோரதந்தம்.

**ம.** கோம்பல்லு.

*[கோரை→கோரம் + பல்.]*

**கோரப்பிடி** *kōra-p-piḍi,* பெ.(n.) வறுமை போன்ற வற்றின் தப்பமுடியாத தீவிரநிலை; vice-like grip as of poverty. வறுமையின் கோரப்பிடியில் சிக்கித் தவிக்கின்றனர் (உ.வ.).

*[கோரம் + பிடி]*

**கோரபுட்பம்** *kōra-puṭbam,* பெ.(n.) 1. ஊமத்தம் பூ; datura flower. 2. வெண்கலம்; bell-metal, bronze (சா. அக.).

*[கோரம் + புட்பம்]*

**கோரம்[1]** *kōram,* பெ.(n.) 1. கோளகச் செய்நஞ்சு; a native arsenic. 2. ஊமத்தை; thorn apple.3. மகிழம்

விதை; seed of *makila*. 4. வெப்பம்; heat. 5. கொடுமை; cruelty, severity. 6. கொடூரமானது; that which creates fear. *"நின்முகக் கமலமுங் கோரமாம்" (திருச்செந்.4:13:17).* 7. ஒரு மறைமொழி; a mantra. 8. கொடுந்தோற்றம்; that which is hideus.

*[குல் → குரம் (வளைவு) →கோரம்]*

**கோரம்²** *kōram*, 1. வளைவு; curvature. 2. புகையிலை; tobacco. 3. வட்டில்; eating dish, a hollow metallic plate. *"அமுதுடைக் கோர நீக்கி (கம்பரா.அயோத்தி.மந்திரப்.25).* 4. நரக வகை; a hell. *"கோர மதுதான் முதனரகம்" (சிவதரு. சுவர்க்க.107, நரக.).* 5. விரைவு (திவா.); swiftness, fleetness, speed. 6. சோழன் குதிரை; horse of *Cōla* king. *"கோரத்துக் கொப்போ கனவட்ட மம்மானை" (தனிப்பா.).*

**தெ.** கோர (வட்டில்) **தெ.** குர்ரமு (குதிரை).

*[குல் → குரம் →கோரம்]*

**கோரம்³** *kōram*, பெ.(n.) அரும்பு; bud.

*[குல் → குரு → கோர் → கோரம்]*

**கோரம்பர்** *kōrambar*, பெ.(n.) கழைக்கூத்தர் (வின்.); pole-dancers.

*[கோல் + அம்பர்.]*

**கோரம்பலம்** *kōrambalam*, 1. கேளிக்கை; diversion, drollfry, amusement, bufoonery. 2. தந்திரம்; excuse, subterfuge, pretence, shift, trick. 3. வாய்ச்சண்டை; altercation, bickering. 4. உதவி; help; assist. 5. கோளாறு; disorder.

*[கோரம் + அம்பலம்]*

**கோரம்பாய்** *kōram-pāy*, பெ.(n.) ***கோரைப்பாய்*** பார்க்க; see *kōrai-p-pāy*.

*[கோரைப்பாய் → கோரம்பாய் (கொ.வ.)]*

**கோரம்பு** *kōrambu*, பெ.(n.) தீம்பு; wickedness. *"அதுவுமுன் கோரம்புக் கேற்கு மன்றே" (திவ். பெருமாள். 6:4).*

*[கோரம் → கோரம்பு]*

**கோரமங்கலம்** *kōramaṅgalam*, பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thiruvallur Dt.

*[கோரை + மங்கலம்.]*

**கோரமரணம்** *kōra-maraṇam*, பெ.(n.) வலி மிகுவிக்கும் சாவு; painful death; agonising death (சா. அக.).

*[கோரம் + (மடி) மரணம்.]*

**கோரமூஞ்சி** *kōra-mūñji*, பெ.(n.) 1. கொடுமை யான முகம்; horrible face in a monster birth. 2. சுழித்த முகம்; distortion of the countenance - grimace (சா. அக.).

*[கோரம் + (முகம்) மூஞ்சி]*

**கோரவாதம்** *kōra-vādam*, பெ.(n.) உடம்பின் நரம்புகளில் காற்றுப் பிடிப்புப் பரவிக் கீல்களைத் தளரச் செய்யுமோர் ஊதைநோய்; a kind of rheumatism (சா. அக.).

*[கோரம்+ வாதம்]*

**கோரவாரம்** *kōra-vāram*, பெ.(n.) சந்தனமரம் (யாழ்.அக.); sandal-wood tree (சா. அக.).

*[கோர் (செங்குத்து உயரம்)→கோர+ வாரம்]*

**கோரவிருத்தி** *kōra-virutti*, பெ.(n.) 1. அரக்கக் குணம்; one of the three inherent qualities of man. 2. அதிகச் சூடு; increase of heat in the system. 3. நஞ்சின் மிகுதி; excess of poison (சா.அக.).

*[கோரம் + விருத்தி.]*

**கோரவெய்யில்** *kōra-veyil*, பெ.(n.) கொடிய வெய்யில்; severe or scorching sun (சா. அக.).

*[கோரம் + வெய்யில்.]*

**கோரன்¹** *kōraṉ*, பெ.(n.) 1. சிவன்; Lord Šiva. 2. சுளுந்துக் கட்டை; torch tree.

*[குல் →குரு→கோரன்.]*

**கோரன்²** *kōraṉ*, பெ.(n.) கொங்குவள நாட்டிலே வல்லம் என்னும் ஊரில் வாழ்ந்தவன். கொலை, களவு முதலிய தீத்தொழில்களைச் செய்து கொண்டிருந்தமையால் இப் பெயர் பெற்றிருக்கலாம். பேசுதலைக் கடைப்பிடித்துத் தனது தீத்தொழில் களையும் போக்கிக் கொண்டவன்.

*[குல் →குரு→கோரன்.]*

**கோரா** *kōrā*, பெ.(n.) 1. அழுக்கெடுக்காதது; unbleached as cotton cloth. 2. சாயம் ஏற்றாதது; undyed as silk. 3. ***கோராப்பட்டு*** பார்க்க; see *kōrā-p-paṭṭu*. 4. கரச்சி மீன்; a kind of sea-fish Pristipoma caripa. 5. பழக்கப்படாத புதிய குதிரை, காளைபோன்ற விலங்கு; untamed horse, bull etc.

*[கோரம் →கோரா.]*

**கோராடம்** *kōrādam,* பெ.(n.) பூஞ்சாந்துப் பட்டை, ஒரு கடைச்சரக்கு; a bazaar drug (சா. அக.).

*[கோரடம் → கோராடம்.]*

**கோராதனம்** *kōrā-tanam,* பெ (n.) ஒகவகை; a yogic posture (தத்துவப்.109, உரை).

*[கோர் →கோராப்பு.]*

**கோராப்பட்டு** *kōrā-p-pattu,* பெ.(n.) 1. யுனானி மருத்துவத்தில் ஆண்மைப் பெருக்கத்திற்குப் பயன்படுத்தும் ஒரு கடைப்பொருள்; a bazaar drug prescribed by Unani practitioners for increasing the secretion of semen. 2. சாயம் ஏற்றாத வெண்பட்டு; undyed white silk (சா.அக.).

*[கோரம் + பட்டு.]*

**கோராப்பு** *kōrāppu,* பெ.(n.) கோரைப்புல் வடிவிலுள்ள ஒருவகைக் கடல்வாழ் பயிரி; a kind of sea plant as of bul rush.

*[கோர் →கோராப்பு.]*

**கோராமசன்னி** *kōrāmaśanni,* பெ.(n.) குழந்தைகளுக்கு உடம்பு நெருப்பைப்போற் காய்ந்து சதை குலுங்கவும், கைகால் துடிக்கவும் செய்யும் ஒரு குளிர் ஊதைநோய்; a kind of typhoid fever in children marked by fits or convulsions followed by violent agitation of muscles and limbs due to high temperature (சா. அக.).

*[கோரம் →கோராமம் + சன்னி.]*

**கோராவாரி** *kōrāvāri,* பெ.(n.) புயற்காற்று; storm, so called from its carrying dust and dirt along with it (சா.அக.).

*[கோரம் →கோரா + வாரி.]*

**கோரான்** *kōrāṉ,* பெ.(n.) சுளுந்துக் கட்டைமரம்; torch tree (சா. அக.).

**மறுவ.** கோரான்கட்டை, கோரான் குச்சு, கோரான் சூள்.

*[கோர் = உயரம். கோர் →கோராப்பு.]*

வழிப்போக்கர்கள் இரவில் தீவட்டியாகப் பயன்படுத்துவர்] [சா. அக.].

**கோரான்காவி** *kōrāṉ-kāvi,* பெ.(n.) ஒருவகைக் காவி; a kind of red ochre not bright or clear (சா.அக.).

*[கோரான் + காவி.]*

**கோரான்குச்சு** *kōrāṉ-kuccu,* பெ.(n.) ***கோரான்*** பார்க்க; see *kōrāṉ.*

*[கோரான் + குச்சு]*

**கோரான்சிவப்பு** *kōrāṉ-śivappu,* பெ.(n.) கம்மலான சிவப்புநிறம்; dull red colour (சா.அக.).

*[கோரன் → கோரான்+ சிவப்பு.]*

**கோரான்சுளுந்து** *kōrāṉ-śuḷundu,* பெ.(n.) ***கோரான்*** பார்க்க; see *kōrāṉ* (சா.அக.).

*[கோரான் + சுளந்து]*

**கோரான்சூள்** *kōrāṉ-sūḷ,* பெ.(n.) ***கோரான்*** பார்க்க; see *kōrāṉ* (சா. அக.).

*[கோரான் + சூள்]*

**கோரான் வெள்ளை** *kōrāṉ-veḷḷai,* பெ.(n.) கம்மலான வெள்ளை மண் வகை; a kind of dull white clay (சா. அக.).

*[கோரான் + வெள்ளை]*

**கோரி[1]–த்தல்** *kōri-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கடுமையாதல்; to become violent, to hement; to rage. *'கோரித் தொன்பது வாயிலும்.... கொளுத்த' (திருவிளை.குண்மோ.16).*

*[குரு → கோர் → கோரி.]*

**கோரி[2]** *kōri-,* பெ.(n.) மலைமகள்; Parvati. *'கோரியென் னுள்ளங் குலாவிநின் றாளே' (திரு ம;ந.1110).*

*[கௌரி→கோரி]*

**கோரிக்கை** *kōrikkai,* 1. வேண்டுகோள்; request. 2. விருப்பம்; desire. 3. மன்றாட்டம்; pray.

*[கோலு→கோரு→கோரி]*

**கோரிகை[1]** *kōrigai,* பெ.(n.) அகப்பை; wooden spoon; ladle. *"முக்கோரிகை நெய்யூற்று" (தைவல.தைல.135, வரி 137).*

*[கோரகை→கோரிகை.]*

**கோரிகை[2]** *kōrigai,* பெ.(n.) மரக்குதிரையின்மேல் வைக்கும் ஒலை நெற்கூடை (யாழ்ப்.); large *ōla* bag for grain, set on a wooden horse.

*[கோர்→கோரிகை]*

**கோரிதம்** *kōridam,* பெ.(n.) 1. துகள்; dust. 2. விள்ளல்; a piece.

*[கோர்→கோரிதம்]*

**கோரியை** *kōriyai,* பெ.(n.) ***கோரிகை***[1] பார்க்க; see *kōrigai* (சா. அக.).

*[கோரிகை → கோரியை]*

**கோரு[1]-தல்** *kōru-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. வேண்டிக்கொள்ளுதல்; to request, solicit. 2. விரும்புதல்; to wish, desire. 3. நினைத்தல்; to think.

**தெ., து.** கோரு; **க., ம.** கோறு.

*[கோது→கோரு.]*

**கோரு[2]-தல்** *kōru-,* 5 செ. குன்றாவி. (v.t.) ***கோலு***[4] பார்க்க; see *kōlu. கிணற்றிலிருந்து தண்ணீர் கோருகிறான் (உ.வ.).*

*[கோது→கோரு.]*

**கோருடன்** *kōrudan,* பெ.(n.) ***கோரை*** பார்க்க; see *kōrai* (சா. அக.).

*[கோறு→கோரு]*

**கோரை[1]** *kōrai,* பெ.(n.) 1. ***கோரை***[2] பார்க்க; see *kōrai* 2. மயிர்; hair. 3. முடி, மயிர்; lock hair (சா. அக.).

*[கோல் →கோர்→கோரை]*

**கோரை[2]** *kōrai,* பெ.(n.) 1. வழலை; the three mystic salts. 2. முட்டையுட் சவ்வு; the membrane covering albumen and yolk.

*[கோலு → கோரை]*

**கோரை[3]** *kōrai,* பெ.(n.) 1. புல்வகை (K.R.); sedges and bulrushes. 2. ஒருவகைக் கிழங்கு; a kind of root. 3. ஒருவகைக் கடற்புல்; a kind of sea grass.

**ம.** கோர.

*[கோர் (நீட்சி)→கோரை]*

**கோரை[4]** *kōrai,* பெ.(n.) காளை; bull.

*[கோ→கோரை]*

**கோரை[5]** *kōrai,* பெ.(n.) 1. வளைவு; bend. 2. அழகில்லாதது; not beautiful, ugly.

*[குல்→குலை→கூரை→கோரை]*

**கோரைக்காடன்** *kōrai-k-kāḍan,* பெ.(n.) நாங்குநேரி வட்டம் ஏர்வாடிப் பகுதியில் உள்ள பெரும் பழஞ்சியின் படைத்தலைவன்; army chief. "பெரும் பழஞ்சி இருக்கின்ற படைத்தலைவன் கொறைக் காடனுக்கு" (தெ.இ.க.தொ.14, கல்.44-20).

*[கோரை + காடன்]*

**கோரைக்கிழங்கு** *kōrai-k-kiḻaṅgu,* பெ.(n.) 1. முத்தக்காசு வகை; fragrant tuber of cyperus rotundus. 2. முத்தக்காசு; straight sedge (பதார்த்த.443).

*[கோரை +கிழங்கு]*

இது நறுமணம் உள்ளது. இதயம், வயிறு இவற்றிற்கு வலிவைக் கொடுக்கும். வறட்சியை உண்டாக்கும்; வியர்வையைத் தோற்றுவிக்கும். நீரைப் போக்கும்; கூந்தல் வளர்ச்சிக்குப் பயன்படும் [சா. அக.].

**கோரைகிண்டி** *kōrai-kiṇḍi,* பெ.(n.) ***கோரை யுள்ளான்*** பார்க்க; see *kōrai-y-uḷḷāṉ.*

**மறுவ.** கோரைகுத்தி.

*[கோரை + கிண்டி.]*

**கோரைகுச்சு** *kōrai-kuccu,* பெ.(n.) கொறுக்கை; European bamboo reed (loc.).

*[கோரை + குச்சு.]*

**கோரைகுத்தி** *kōrai-kutti,* பெ.(n.) ***கோரையுள் ளான்*** பார்க்க; see *kōrai-y-uḷḷāṉ.*

*[கோரை + குத்தி.]*

**கோரைச்சம்பா** *kōrai-c-camba,* பெ.(n.) சம்பா நெல்வகை (பதார்த்த. 811); rush-paddy.

*[கோரை + சம்பா]*

**கோரைச்சுண்ணம்** *kōrai-c-cuṇṇam,* பெ.(n.) வழலைச் சுண்ணம்; the universal salt (சா. அக.).

*[கோரை + சுண்ணம்]*

**கோரைத்தண்டு** *kōrai-t-taṇḍu,* பெ.(n.) கோரைப் புல்லின் அடித்தண்டு; the tuber of cyperus or sedge grass (சா. அக.).

*[கோரை + தண்டு]*

**கோரைநிலம்** *kōrai-nilam,* பெ.(n.) கற்கரடு, கருமலை, ஆரணி, உவற்பொட்டல், களிமண்உப்பு, மண் போன்றவை கொண்டதாக இருக்கும் நிலம்; a kind of land.

*[கோரை + நிலம்.]*

கோரை மட்டும் வளரும் நிலம்.

**கோரைப்பதி** *kōrai-p-padi,* பெ.(n.) பெரும்பீர்க்கு; a large species of luffa (சா. அக.).

*[கோரை + பதி]*

**கோரைப்பாய்** *kōrai-p-pāy,* பெ.(n.) கோரைப் புல்லாற் பின்னப்பட்டப் பாய் (உ.வ.); grass mat, bulrush mat.

ம. கோரப்பாய்.

*[கோரை + பாய்.]*

**கோரைப்புல்** *kōrai-p-pul,* பெ.(n.) ***கோரை***[2] பார்க்க; see *kōrai.*

ம. கோரப்புல்லு, கோரம்புல்லு.

*[கோரை + புல்.]*

**கோரைப்புற்கிழங்கு** *kōrai-p-puṟ-kiḻaṅgu,* பெ.(n.) ***கோரைக்கிழங்கு*** பார்க்க; see *kōrai-k-kiḻaṅgu.*

*[கோரை + புல் + கிழங்கு.]*

**கோரைப்பேரிகம்** *kōrai-p-pērigam,* பெ.(n.) மிசிரிப்பருப்பு, சாலா மிசிரி; salep-Salep orchid (சா.அக.).

*[கோரை + பேரிகம்.]*

**கோரைமயிர்** *kōrai-mayir,* பெ.(n.) முறைப்புள்ள நீண்ட மயிர்; long and stiff hair. கோரைமயிர் குடியைக் கெடுக்கும் (பழ.).

*[கோரை + மயிர்.]*

**கோரைமுடி** *kōrai-muḍi,* பெ.(n.) ***கோரைமயிர்*** பார்க்க; see *kōrai-mayir.*

*[கோரை + முடி.]*

**கோரைமூஞ்சி** *kōrai-mūñji* பெ.(n.) **கோரமூஞ்சி** பார்க்க; see *kōra-mūñji*

*[கோரை + மூஞ்சி.]*

**கோரையஞ்சீலா** *kōrai-y-añjīlā,* பெ.(n.) சீலாமீன் வகைகளுளொன்று; a kind of *śīlā* fish (சா.அக.).

*[கோரை + அம் + சீலா.]*

**கோரையரிசி** *kōrai-y-ariśi,* பெ.(n.) நீண்ட அரிசி; needle shaped rice (சா.அக.).

மறுவ. சிலந்தியரிசி, பூங்கோரை.

*[கோரை + அரிசி.]*

**கோரையிறால்** *kōrai-y-iṟāl,* பெ.(n.) நீண்ட மீசைகளையுடைய ஒருவகைக் கடலிறால்; sea-prawn with long - whiskers (சா.அக.).

*[கோரை + இறால்.]*

**கோரையுள்ளான்** *kōrai-y-uḷḷāṉ,* பெ.(n.) ஒருவகை நீண்ட உள்ளான் பறவை; species of long snipe.



கோரையுள்ளான்

மறுவ. கோரைகிண்டி, கோரைகுத்தி, கோரைவெட்டி.

*[கோரை + உள்ளான்.]*

**கோரையுளுவை** *kōrai-y-uḷuvai,* பெ.(n.) பழுப்பு நிறமுடைய உளுவைமீன் (மீனவ.); *uḷuvai* fish, brown in colour.



கோரையுளுவை

*[கோரை + உளுவை.]*

**கோரையூதை** *kōrai-y-ūdai,* பெ.(n.) இடுப்புக் கடுத்து நொந்து, துறட்டியைப்போல் நடுப்படத் தறித்து வலித்து நடக்கவும், நிமிரவும் முடியாது சந்து மட்டும் வலிக்கும் ஒருவகை ஊதைநோய் (யூகி. முனி. 1200); a rheumatic affection of the muscles about the loins. It is characterised by severe pain of the small of the back and piercing pain in the pelvis due to the inflammatory condition of the fibrous tissues. It is aggravated by movements of limbs often preventing the patient form walking or maintaining an erect position (சா.அக.).

*[கோரை + ஊதை.]*

**கோரைவாதம்** *kōrai-vādam*, பெ.(n.) ***கோரையூதை*** பார்க்க; see *kōrai-y-ūdai*.

*[கோரை + வாதம்.]*

**கோரைவீரம்** *kōrai-vīram*, பெ.(n.) போகர் நூலிற் சொல்லிய வண்ணம் காகத்தினிறகை கொக்கி னிறகைப்போல் வெண்மையாக்கும் திறமுடைய ஒருவகை வீரவைப்பு; a prepared compound of corrosive sublimate capable of converting the black wing of a crow into a white one resembling that of a stork (சா.அக.).

*[கோரை + வீரம்.]*

**கோரைவெட்டி** *kōrai-veṭṭi*, பெ.(n.) ***கோரை யுள்ளான்*** பார்க்க; see *kōrai-y-uḷḷāṉ*.

*[கோரை + வெட்டி.]*

**கோரோசம்** *kōrōšam*, பெ.(n.) ***கோரோசனை*** பார்க்க; see *kōrōšaṉai* (சா.அக.).

**மறுவ.** கோவுரசனம், கோரோசனம்.

*[கோரோசனை →கோரோசம்.]*

**கோரோசனை** *kōrōšaṉai*, பெ.(n.) ஆவின் வயிற்றினின்று எடுக்கப்படும் மஞ்சணிறமுள்ள மணப்பொருள் (பதார்த்த. 1083); bezoar taken from the stomach of cows.

**மறுவ.** கோரோசம், கோரோசனம், மான்மணத்தி.

*[கோ (மாடு) + அரிசனம் (மஞ்சள்) – கோயரிசனம் →கோரோசனம் →கோரோசனை. மாட்டின் மஞ்சள் நிறமுள்ள மணப்பொருள் மஞ்சள் நிறத்தின் ஒப்புமை நோக்கி கோயரிசனம் எனப்பட்டது. இது பிறமொழியாளரால் வடதமிழில் கோரோசனம் எனத்திரித்து வடமொழியிலும் கடன் கொள்ளப்பட்டது]*

**கோரோசனைக்குளிகை** *kōrōšaṉai-k-kuḷigai*, பெ.(n.) குழந்தைகளுக்கேற்படும் கோழை, இருமல், சுரம், தலைவலி முதலியவற்றுக்குக் கொடுக்கும் ஒரு மாத்திரை; a pill prepared with bezoar as chief ingredient and prescribed for morbid affections in apoplexy and children's diseases such as phlegm in the chest, cough, fever, headache etc. (சா.அக.).

**மறுவ.** கோரோசனை மாத்திரை.

*[கோரோசனை + குளிகை.]*

**கோரோசனைப் பாவிகம்** *kōrōsaṉai-p-pāvigam*, பெ.(n.) வைப்புக் கோரோசனை; artificially prepared bezoar; false bezoar (சா.அக.).

*[கோரோசனை + பாவிகம்.]*

**கோரோசனைப் புளிப்பு** *kōrōšaṉai-p-puḷippu*, பெ.(n.) கோரோசனைத் தூள்; gallic acid occurring in the bezoar stones in the form of a powder (சா.அக.).

*[கோரோசனை + புளிப்பு.]*

**கோரோசனைமாத்திரை** *kōrōšaṉai-māttirai*, பெ.(n.) ***கோரோசனைக் குளிகை*** பார்க்க; see *kōrōšaṉai-k-kuḷigai* (சா.அக.).

*[கோரோசனை + மாத்திரை.]*

**கோல்**[1] *kōl*, பெ.(n.) 1.கழி, கம்பு; rod, stick. *"அலைக்கொரு கோறா" (கலித்.82:24).* கோல் ஆட குரங்கு ஆடும் (பழ). 2. மரக் கொம்பு (சூடா.); branch. 3. ஊன்றுகோல்; staff. *"கோலூன்றி" (நாலடி.13).* கோல் இழந்த குருடனைப் போல (பழ). 4. சித்திரந் தீட்டுங் கோல் (பிங்.); brush, pencil, as for painting *"இன்னமுது கோறோய்த்து" (நைடத.நளன்றூ. 89).* 5. அரசாட்சி; government. *"மன்னவன் கோற்கீழ்ப் படின்" (குறள்,558).* 6. முத்திரைக் கோல் (வின்.); staff or stamp for marking. 7. தீக்கடை கோல்; stick used for churning the flint stone to produce fire. *"கைக்கோ லுமிழ்ந்த வெற்படு சிறுதீ" (பெருங். நரவாண.8:134).* 8. பிரம்பு; cane. 9. குதிரையை முடுக்கி ஒட்டும் சவுக்கு, குதிரைச் சம்மட்டி (சூடா.); horse-whip. 10. கொழு (பிங்.); plough share. 11. அம்பு; arrow. *"ஐங்கோலை வென்றுகைக் கொண்டமுக் கோலன்" (திருவேங். கலம். காப்பு.3).* 12. ஈட்டி (சூடா.); spear. 13. குடைமுதலியவற்றின் காம்பு; handle, as of an umbrella. *"அருள்குடை யாக வறங்கோ லாக" (பரிபா.3:74).* 14. யாழின் நரம்பு; lute string. *"கோல்பொரச் சிவந்த... விரல்" (சீவக. 459).* 15. துலாக்கோல் (பிங்.); balance on the principle of a steel-yard, beam of scales. 16. துலைஓரை (திவா.); libra of the zodiac. 17. துலை (ஐப்பசி)த் திங்கள் (தைலவ.பாயி. 55.); the month tulai (*Aippaši*). 18. செங்கோல்; sceptre. *"வேலன்று வென்றி தருவது மன்னவன் கோலதூஉங் கோடா தெனின்" (குறள், 546).* 19. அளவுகோல்; measuring rod. *"கோலிடை யுலக மளத்தலின்" (கம்பரா. நகரப்.11).* 20. அணியின் ஒவிய வேலை; exquisite work-manship. *"வார்கோல் செறியரிச் சிலம்பிற் குறுந்தொடி மகளிர்" (புறநா.36:2).* 21. திரட்சி; roundness. *"கோனிற வளையினார்க்கு" (சீவக.209).* 22. வட்டம், உருண்டை; rotundity. 23. நெசவுக் கருவி; a kind of weaving instrument.

**ம., து.** கோலு; **க., பட.** கோல், கோலு; **தெ.** கோல; **கோத.** கோல்; **துட.** க்வீல்; **பர்.** கோல் (அம்பு); **குட.** கோலி;

**கோண்.** கோலா; **கூ.** கோடு (உலக்கை); **குவி.** கோலு (உலக்கை); **கொலா.** கோலா, கோல; **கூய்.** கேரி (அம்பு).

**Fin.** kolka (a blunt arrow), kaari; **Est.** kolk, kaar (bow);

*[குல் → குலவு. குலவுதல் = வளைதல். குலவு → குலாவு. குலுத்தல் = வளைந்த காயுள்ள கொள். குலுக்கை = உருண்டு நீண்ட குதிர். குல் → (கொல்) → கோல் = உருட்சி, திரட்சி. உருண்டு திரண்ட நீண்ட கோல்.]*

**கோல்²** *kōl,* பெ.(n.) 1. மை எழுது கோல், அஞ்சனக்கோல்; pencil to paint the eye with collyrium (அக.நி.). 2. 11 அடி நீளமுள்ள நீட்டல் அளவுகோல்; a unit of linear measure of 11 feet. 3. 24 அடியுள்ள நீட்டலளவை; a unit of linear measure of 24 feet (திவ்.பெரியாழ்.3.2:6).

*[கால் (நீட்சி) →கோல்.]*

**கோல்³** *kōl,* பெ.(n.) 1. இலந்தை (சூடா.); jujube tree. 2. தெப்பம் (வின்.); raft, float.

*[குல் → கொல் → கோல்.]*

**கோல்கடமான்** *kōl-kaḍamāṉ,* பெ.(n.) ஒருவகை கடல்மீன்; a kind of sea fish.

*[கோல் + கடமான்.]*

**கோல்காரன்** *kōl-kāraṉ,* பெ.(n.) 1. காவற்காரன்; a watchman. 2. ஊர்க்காவலன்; a village servant.

*[கோல் + காரன்.]*

**கோல்குடிதாங்கியார்** *kōlguḍi-tāṅgiyār,* பெ.(n.) ஊரவைத் தலைவர்; village headman. *"இவ்வூர் பெருங்குளத்திலிருந்து அறுவமடையும், கோல்குடி தாங்கியார் நிலம் உட்பட மனைக்குழி நூற்றுநால் காணி" (ஆவ.98, ப.54).*

*[கோல் + குடி + தாங்கியார்.]*

**கோல்கொடு-த்தல்** *kōl-koḍu-,* 4 செ.கு.வி.(v.i.) கோலாற் கண்ணிலானை நடத்திவருதல் (வின்.); to lead the blind with a staff.

*[கோல் + கொடு.]*

**கோல்கொள்(ளு)-தல்** *kōl-koḷ(ḷu)-,* 13 செ.குன்றாவி. (v.t.) விலங்கு பூட்டிய தேர் முதலியன செலுத்துதல்; to drive, as a car drawn by horses, with a whip in hand. *"கொள்வார் கோல்கொள்ளக் கொடித்திண்டே ரேறுவோர்" (பரிபா.11:51).*

*[கோல் + கொள்(ளு).]*

**கோல்நிறைகூலி** *kōl-niṟai-kūli,* பெ. (n.) வரிவகை (S.I.I. iii, 266); a tax on articles measured by weight.

*[கோல் + நிறை + கூலி.]*

**கோல்பிடி-த்தல்** *kōl-piḍi-,* 4 செ.கு.வி.(v.i.) ***கோல்கொடு-த்தல்*** பார்க்க; see *kōl-koḍu-.*

*[கோல் + பிடி.]*

**கோல்போடு-தல்** *kōl-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) தண்டு வலித்தல் (தூண்டிலிடுதல்) (மீனவ.); fishing with rod.

*[கோல் + போடு.]*

**கோல்மட்டம்** *kōl-maṭṭam,* பெ.(n.) கோலுயரம், கோலளவு; staff-height, as a standard.

*[கோல் + மட்டம்.]*

**கோல்மரம்** *kōl-maram,* பெ.(n.) வண்டியின் ஏர்க்கால் மரம்; pole of a cart.

*[கோல் + மரம்.]*

**கோல்மூலி** *kōl-mūli,* பெ.(n.) இலந்தை; jujube (சா.அக.).

*[கோல் + மூலி.]*

**கோல்வலி-த்தல்** *kōl-vali-,* 4 செ.கு.வி. (v.i.) துடுப்புக்கோலால் பரிசல் தள்ளுதல்; to propel boat with oars.

*[கோல் + வலி-.]*

**கோல்வள்ளம்** *kōl-vaḷḷam,* பெ.(n.) விளிம்பு பிரம்பு கட்டின வட்டில்; a cup with ornamental brim *"மணிக்கோல் வள்ளத்தவ னேந்த" (சீவக. 2700).*

*[கொள் → கோல் + வள்ளம்.]*

**கோல்வளை¹** *kōl-vaḷai,* பெ.(n.) 1.அழகிய வளை; beautiful ring. 2.பெண்; female.

*[கோல் (அழகு) + வளை.]*

**கோல்வளை²** *kōl-vaḷai,* பெ.(n.) வளைவகை; a variety of bangles. கோல்வளை, கழல் வளை, வரிவளை என்னுமாபோல (திவ்.பெரியாழ்.3.4:8, வியா. பக்.618).

*[கோல் + வளை.]*

**கோல்விழுக்காடு** *kōl-viḻukkāḍu,* பெ.(n.) தற்செயல்; chance, accident. *'கோல்விழுக் காட்டாலே பரிகாரமாயிருக்கை யன்றிக்கே' (ஈடு. 4.10:5.).*

*[கோல் + விழுக்காடு.]*

**கோலக்கல்** *kōla-k-kal,* பெ.(n.) கோலப்பொடியாக இடித்தற்குரிய (வெங்கக்) கல்; a kind of white stone powdered and used for drawing decorative figures on the floor.

*[கோலம் + கல்.]*

**கோலக்காரன்** *kōla-k-kāraṉ,* பெ.(n.) கேலிக்காரன் (இ.வ.) ; humorist, jester.

*[கோலம் (புனைவு) + காரன்.]*

**கோலகந்தம்** *kōla-kandam,* பெ.(n.) புழுக்களைக் கொல்லப் பயன்படும் ஒரு கிழங்கு; a bulbous root used for killing worms (சா.அக.).

*[கோலம் + கந்தம்.]*

**கோலகப்பை** *kōl-agappai,* பெ.(n.) நீண்ட காம்பையுடைய அகப்பை (இ.வ.) ; ladle with a long handle, as used in the preparation of large quantities of rice and curry.

*[கோல் + அகப்பை.]*

**கோலகம்** *kōlagam,* பெ.(n.) திப்பிலி (மலை.); long pepper.

*[கோலம் → கோலகம்.]*

**கோலங்கட்டு-தல்** *kōlaṅ-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) நாடகம் முதலியவற்றிற்கு வேடம் பூணுதல் (யாழ்ப்.); to put on dress as an actor, dress up for the - atricals; to put on a mask or costume.

*[கோலம் + கட்டு.]*

**கோலங்காட்டு-தல்** *kōlaṅ-kāṭṭu,* 5 செ.கு.வி. (v.i.) 1. மணமக்களை மணப்பந்தலுக்கு அழைத்துக் கொண்டு வருதல் (இ.வ.); to conduct the bride-groom and the bride to the marriage dais. 2. சாயல் கொள்ளுதல்; to represent, personify. 3. மாதிரி காட்டுதல்; to show an example.

*[கோலம் + காட்டு.]*

**கோலங்காண்(ணு)-தல்** *kōlaṅ-kāṇ(ṇu)-,* 13. செ.குன்றாவி.(v.t.) 1. ஒப்பனை செய்தல்; to adorn, beautify, decorate. *கோலங்காண் படலம் (கம்பரா.).* 2. துன்பத்திற்கு உள்ளாக்குதல்; to reduce one to a wretched condition. அவன் என்னை இக்கோலங் கண்டான் (இ.வ.).

*[கோலம் + காண்(ணு).]*

**கோலங்கெடு-தல** *kōlaṅ-keḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. அழகு கெடுதல்; to spoil the beauty. 2. சீரழிதல்; to disorder, to get deranged.

*[கோலம் + கெடு.]*

**கோலங்கொள்(ளு)-தல்** *kōlaṅ-kol(lu)-* 16 செ.கு.வி. (v.i.) 1.நிகழ்வுக்கேற்ப வேடம் பூணுதல்; to put on appropriate dress. *"கொற்றவை கோலங்கொண்டு" (பரிபா.11:100).* 2.பொய்த் தோற்றம் காட்டுதல்; to put it on. 3. மந்தாரமா யிருத்தல் (யாழ்ப்.); to assume a cloudy appear-ance.

*[கோலம் + கொள்(ளு).]*

**கோலச்சங்கம்** *kōla-c-caṅgam,* பெ.(n.) ***கோலச்சங்கு*** பார்க்க; see *kōla-c-caṅgu* (சா.அக.).

*[கோலம் + (சங்கு) சங்கம்.]*

**கோலச்சங்கு** *kōla-c-caṅgu,* பெ.(n.) முட்சங்கு; mistletoe berry thorn.

*[கோலம் + சங்கு.]*

**கோலச்சாரி** *kōla-c-cāri,* பெ.(n.) வேட்டுவப்பெண் கொற்றவையுருக்கொண்டு ஆடுங் கூத்து (சிலப். பதி. 73, உரை); masquerade dance by a woman of the *Vēḍar* caste disguised as Durgai.

*[கோலம் + (சாலி = சான்றவள், பொருந்தியவள்) சாரி.]*

**கோலச்சுண்ணம்** *kōla-c-cuṇṇam,* பெ.(n.) வழலைச் சுண்ணம்; (in alchemy) a prepared calcium compound.

*[கோலம் + சுண்ணம்.]*

**கோலசிம்பி** *kōla-cimbi,* பெ.(n.) பூனைப் பிடுக்கன் கொடி; cat bean.

*[கோலம் + சிம்பி.]*

**கோலஞ்செய்வாள்** *kōlañ-ceyvāḷ,* பெ.(n.) தலைவிக்கு ஒப்பனை செய்பவள் (சூடா.); lady's dressing-maid.

*[கோலம் + செய்வாள்.]*

**கோலடி** *kōlaḍi,* பெ.(n.) கையாலடித்த தவசத்தைக் குவித்துக் கோலாலடிக்கை (G.Sm. D.I.i.210); threshing of paddy and other grain with sticks, after beating them with hand.

*[கோல் + அடி.]*

**கோலதளம்** *kōla-taḷam,* பெ.(n.) ***கோலந்தனா*** பார்க்க (சா.அக.); see *kōlandaṉā.*

*[கோலம் + தளம்.]*

**கோலந்தனா** *kōlandanā*, பெ.(n.) ஞாழல்; a mixture of various shrubs used in perfumes and punguents such as cassia, jasmine etc. (சா.அக.).

*[கோலம் = ஒப்பனை. தளம் = பொடி. கோலம் + தனம் – கோலந்தனம் →கோலந்தானா (கொ.வ.).]*

**கோலநகுடவேர்** *kolanaguḍa-vēr*, பெ.(n.) அமுக்கிரா (இராசவைத்.); Indian winter cherry root.

*[கோலம் + நகுடம் + வேர்.]*

**கோலப்பாம்பு** *kōla-p-pāmbu*, பெ.(n.) ஒருவகைக் கடற்பாம்பு; a kind of sea snake (மீனவ.).

*[கோலம் + பாம்பு.]*

**கோலப்புச்சம்** *kōla-p-puccam*, பெ.(n.) ஒருவகை நாரை; a kind of crane (சா.அக.).

*[கோலம் + புச்சம்.]*

**கோலப்பொடி** *kōla-p-poḍi*, பெ. (n.) கோலமிடுதற் குதவும் அரிசிமா அல்லது ஒருவகை வெள்ளைக் கற்பொடி; rice-flour or white stone-powder used for drawing decorative figures in houses.

*[கோலம் + பொடி.]*

**கோலம்**[1] *kōlam*, பெ.(n.) 1. அழகு; beauty, gracefulness. *"கோலத் தனிக்கொம்பர்" (திருக்கோ.45).* 2. நிறம்; colour. *"கார்க்கோல மேனி யானை" (கம்பரா. கும்பக. 154).* 3. உருவம்; form, shape, external or general appearance. *மானுடக் கோலம்.* 4. தன்மை; nature. 5. வேடம்; costume, appropriate dress; attire, as worn by actors; trappings; equipment; habiliment. *"உள்வரிக் கோலத்து" (சிலப்.5:216).* 6. அணிகலன்; ornament, as jewelry. *"குறங்கிணை திரண்டன கோலம் பொறாஅ" (சிலப். 30:18).* 7. ஒப்பனை; adornment, decoration, embellishment. *"புறஞ்சுவர் கோலஞ் செய்து" (திவ்.திருமாலை.6).* கண்டதே காட்சி கொண்டதே கோலம் (பழ). 8. மா, கற்பொடி முதலியவற்றிலிடும் கோலம்; ornamental figures drawn on floor, wall or sacrificial pots with rice - flour, white stone-powder, etc. 9. சூலி (கர்ப்பிணி) களுக்குச் செய்யும் வளைகாப்புச் சடங்கு; ceremony of providing pregnant woman with bangles in fifth or seventh month after conception. 10. விளையாட்டு; play, sport. *"அல்லமன்றன் கோலமென் சொல்வேன்" (பிரபுலிங். பிரபுதே. 73).* 11. பெருந்துன்பநிலை; wretched condition.

**தெ.** கோலமு; **க.** கோல; **ம.** கோலம்.

*[குல் →கொல் (புதியது, அழகியது) →கோல் + அம்.]*

**கோலம்**[2] *kōlam*, பெ.(n.) 1. முயற்சி; exertion, effort. *"கோலங்கொ ளுயிர்களும்" (திவ்.திருவாய். 5.6:10).* 2. சிறு நீரோட்டம் (பிங்.); streamlet.

*[குல் →கொலு →கோலு→கோலம்.]*

**கோலம்**[3] *kōlam*, பெ.(n.) 1. பன்றி; hog, wild hog. *"கேழ நிகழ்வரக் கோலமொடு பெயரிய" (பரிபா.2:16).* 2. முள்ளம்பன்றி (திவா.); pcrcupine. 3. இலந்தை (பிங்.); jujube tree. 4. தெப்பம் (வின்.); raft.

*[கால் (கருப்பு) = கோல் → கோலம்.]*

**கோலம்**[4] *kōlam*, பெ.(n.) குரங்கு (பிங்.); monkey.

*[கோல் (வளைவு) →கோலம்.]*

**கோலம்**[5] *kōlam*, பெ.(n.) 1. பாக்கு (பிங்.); areca-nut. 2. பீர்க்கு (பிங்.); sponge-gourd.

*[கோல் (நீட்சி) →கோலம்.]*

**கோலம்**[6] *kōlam*, பெ.(n.) தக்கோலம் (மூ.அ.); cubeb.

*[கோல் → கோலம்.]*

**கோலம்போடு–தல்** *kōlam-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. சுவர், தரை முதலியவற்றில் அழகான வரியிடுதல்; to draw ornamental figures on wall or floor with rice flour or white stone powder. 2. ஒப்பனை செய்வித்தல்; to decorate. 3. கோட்ட மிடுதல்; to bend. 4.புனைந்து கொள்ளுதல், வேடமணிதல்; to wear costume.

*[கோலம் + போடு.]*

**கோலம்வா–தல் (கோலம்வருதல்)** *kōlam-vā-*, 18 செ.கு.வி.(v.i.) ஊர்வலம் வருதல் (வின்.); to go in procession.

*[கோலம் + வா.]*

**கோலமா** *kōla-mā*, பெ.(n.) ***கோலப்பொடி*** பார்க்க; see *kōla-p-poḍi*

மறுவ. கோலமாவு, கோலப்பொடி.

*[கோலம் + மா.]*

**கோலமாலம்** *kōlamālam*, பெ.(n.) மலையாமணக்கு (மலை.); coral plant.

*[கோலம் + ஆலம்.]*

**கோலமாவு** *kōla-māvu*, பெ.(n.) ***கோலப்பொடி*** பார்க்க; see *kōla-p-poḍi*

*[கோலம் + மாவு.]*

**கோலமாறு–தல்** *kōla-māṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. முன்கொண்ட தோற்றம் மாறுதல்; to change in appearance or dress. *"நகுடனுங் கோல மாறினான்" (தனிப்பா.).* 2. வேடம் புனைதல் (வின்.); to be disguised; to put on dress, as an actor.

*[கோலம் + மாறு.]*

**கோலமிடு–தல்** *kōlam-iḍu-,* 20 செ.குன்றாவி. (v.t.) ***கோலம்போடு–தல்*** பார்க்க; see *kōlam-pōḍu-. "கோலமிடுதல் குடைபிடித்தல்" (சினேந்.458).*

*[கோலம் + இடு–.]*

**கோலமுத்தம்** *kōlamuttam,* பெ.(n.) ஒருவகைப் பூடு; an unknown plant (சா.அக.).

*[கோலம் + முத்தம்.]*

**கோலரக்கு** *kōl-arakku,* பெ.(n.) கொம்பரக்கு; shel-lac.

*[கோல் + அரக்கு.]*

**கோலரம்** *kōlaram,* பெ. (n.) முளை (சது.); shoot from a seed or root.

*[கோலம் → கோலரம்.]*

**கோலரி** *kōlari,* பெ.(n.) அமுக்கிரா; amukkirā (சா.அக.).

*[கோல் + அரி.]*

**கோலல்** *kōlal,* பெ.(n.) கோலுதல்; to surround.

*[கொலு →கோலு →கோலல்.]*

**கோலலவணம்** *kōla-lavaṇam,* பெ.(n.) துரிசு (வின்.); a kind of blue vitriol.

*[கோலம் + லவணம் (உப்பு).]*

**கோலவல்லி** *kōla-valli,* பெ.(n.) கொடிவகை (யாழ்.அக.); a creeper.

*[கோலம் + வல்லி.]*

இதன் காய் மிளகைப்போல் இருக்கும்.

**கோலவல்லீசம்** *kōlavallīšam,* பெ.(n.) செவ்வியம்; common pepper (சா.அக.).

*[கோலம் + (வல்லியம்) வல்லீசம்.]*

**கோலவுணவு** *kōla-v-uṇavu,* பெ.(n.) பன்றியின் உணவாகிய கோரைக் கிழங்கு (இராசவைத்.); sedge tuber, as hog's food.

*[கோலம் + உணவு. கோலம் = பன்றி.]*

**கோலவேர்** *kōla-vēr,* பெ.(n.) நிலப்பனை (மலை.); ground palm.

*[கோலம் + வேர்.]*

**கோலறை** *kōlaṟai,* பெ.(n.) 1. கூலியாள் வேலை செய்தற்காக அளவுகோலால் அறுதி செய்து கொடுக்கப்பட்ட நிலம்; working area portioned out for each individual labourer, as determined by a measuring-rod. *"வாணிச்சிக் கிடுங் கோலறைக் கோரா ளின்றி" (திருவாலவா.30:8).* 2. குழித்தரை; a pit land.

*[கோல் + அறை.]*

**கோலறையிடு–தல்** *kōlaṟai-y-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) வேலை செய்யுமிடங்களைக் கூலியாள்களுக்கு வகுத்துக் கொடுத்தல்; to measure off an area for work for different labourers. *"மனைகடொறுங் கோலறையிட்டு வேண்டி யடைப்பாயென" (திருவாலவா.30:6).*

*[கோல் + அறை + இடு–.]*

**கோலன்** *kōlaṉ,* பெ.(n.) 1. கையில் கோல் கொண்டவன்; one who is with a staff. 2. நீண்ட வடிவுடையது; a lengthy one. 3. ஒப்பனையும் புனைவும் கொண்டவன்; one who is with make up.

*[கோல் + அன்.]*

**கோலன்வல்லி** *kōlaṉ-valli,* பெ.(n.) ஆனைத் திப்பிலி; pericarps of pothos officinalis (சா.அக.).

*[கோலன் + வல்லி.]*

**கோலன்வைப்பு** *kōlaṉ-vaippu,* பெ.(n.) சிவனார் வேம்பு; Šiva's neem (சா.அக.).

*[கோலன் + வைப்பு.]*

**கோலா**[1] *kōlā,* பெ.(n.) திப்பிலி; long pepper

*[கோலன் →கோலா.]*

**கோலா**[2] *kōla,* பெ.(n.) 1. கடல்மீன். இதன் உடம்பு நீண்டும் ஒல்லியாயும், தலைக் கூச்சாகவும், எலும்பு பச்சை நிறமாயும் இருக்கும்; a kind of fish; gasfish or garpeck. It has a slender body pointed head and green bone. 2. பறக்கும் மீன்வகை (யாழ்.அக.); flying fish.

ம. கோலான்.

**Fin.** kala; **Est.** kala; **Mari.** kol; **Hung.** hal; **Mong.** xalima; **Jap.** karei; **Q.** calma.

*[கோலன் →கோலா.]*

**வகைகள் :** 1. வட்டமூக்குக் கோலா, 2. பறவைக் கோலா, 3. பசுங்கோலா, 4. சப்பைக் கோலா, 5. வரிக் கோலா,

## கோலாமீன் வகைகள்



பற் கோலா



வட்டமூக்குக் கோலா



வரிக்கோலா



சப்பைக் கோலா



பாம்புக் கோலா






ஏமின் கோலா


கோலாமீன்

6. திருவெண்கோலா, 7. பாம்புக்கோலா, 8. கருவாலன் கோலா, 9. ஏமின்கோலா, 10. மயிற்கோலா, 11. பற்கோலா, 12. தாய்க் கோலா, 13. பீச்சிக்கோலா (சா.அக.).

**கோலாக்கட்டா** *kōlā-k-kaṭṭā-*, பெ.(n.) 18 அங்குல நீளம் வளர்வதும் நீலமிடையிட்ட பச்சை நிறமுள்ளதுமான கடல்மீன்வகை; a sea-fish, greenish, shot with blue, attaining 18 in. in length.

*[கோலன் + (கட்டு) கட்டா.]*

**கோலாகலம்** *kōlākalam*, பெ.(n.) 1. ஆரவாரம், ஆடம்பரம்; pomposity. *"கூராரும் வேல்விழியார் கோலா கலங்க ளெல்லாம்" (பிரமோத.27:14).* 2. குசால்; gaiety, style. 3. பேரொலி; big sound. 4. விலங்கின மெழுப்புமொலி; sound produced by animals. 5. கூக்குரல்; loud and confused noise.

*[கோலம் + ஆகுலம்.]*

**கோலாகலம்பண்(ணு)-தல்** *kōlākalam-paṇ(ṇu)-*, 11. செ.கு.வி. (v.i.) ஒழுங்கீனமாக நடத்தல் (வின்.); to be disorderly, to lead a dissipated or dissolute life (சா.அக.).

*[கோலாகலம் + பண்ணு.]*

**கோலாகலனேந்தல்** *kōlākalaṉēndal*, பெ.(n.) கோரைக்கிழங்கு (இராசவைத்.); sedge tuber, as hog's food.

*[கோலாகலன் : பேரொலி எழுப்பும் பன்றி. நந்து → நந்தல் (விரும்பும் உணவு). கோலாகலன் + நந்தல்.]*

**கோலாகாலி** *kōlākāli*, பெ.(n.) ஆடம்பரமாய் நடப்பவன்-ள்; extravagant person fond of display or pomp.

*[கோலாகலம் →கோலாகாலி.]*

**கோலாங்கூலம்** *kōlāṅgūlam*, பெ.(n.) முசு; langur, a large and black kind of wild bearded ape.

*[கால் →கோல் + நாங்குலம் (நாஞ்சில்). கலப்பை போல் முதுகு வளைந்த கருங்குரங்கு.]*

**கோலாச்சி** *kōlācci*, பெ.(n.) மீன்வகை; a kind of fish.

*[கோல் + ஆச்சி.]*

**கோலாச்சுறா** *kōla-c-cuṟā*, பெ.(n.) மீன்வகை (F.L.); a kind of shark, grey or brown.

*[கோலன் + சுறா.]*

**கோலாஞ்சி**[1] *kōlāñji*, பெ.(n.) மிகு ஒப்பனை, ஆகுலம், பகட்டு (யாழ்ப்.); excessive decoration, finery in dress, style above one's rank a condition.

*[கொழு →கோழு→ கோலஞ்சி→கோலாஞ்சி.]*

**கோலாஞ்சி**[2] *kōlāñji*, பெ.(n.) 1. அடுக்கு; one on top of another. 2. அணியம்; ready. 3. அதிகோலம்; over graceful, over handsome.

*[கொழுவுதல் : பொருத்துதல், அடுக்குதல், அழகுபடுத்துதல். கொழு →கோழு →கோலஞ்சி.]*

**கோலாட்டப்பாட்டு** *kōlāṭṭa-p-pāṭṭu*, பெ.(n.) கோலடித்து விளையாடும்போது பாடும், ஒருவகைப் பாட்டு; a kind of song in a children's play with short coloured sticks.

ம. கோலடிப்பாட்டு.

*[கோலாட்டம் + பாட்டு.]*

**கோலாட்டம்** *kōlāṭṭam*, பெ.(n.) 1. வண்ணமிட்ட கோல்களைக் கொண்டு தாளத்திற்கும் பாட்டிற்கு மிசையச் சிறார் தட்டிக் கொண்டு விளையாடும் ஒருவகை விளையாட்டு; a children's game in which they sing and dance in a ring, marking time with beats of short coloured sticks. *"செவ்வாய்ச்சியர் கோலாட்டம்" (காஞ்சிப்பு. வாணீச.54).* 2. துலை, நளி, சிலை (ஐப்பசி, கார்த்திகை, மார்கழி) மாதங்களிலொன்றில் கோலாட்டத்துடன் இளம்பெண்கள் கொண்டாடும் ஒரு விழா; a festival celebrated by girls with *kōlāṭṭam* in the months of tulai, naḷi, cilai *Aippaši*, *Kārtigai* or *Mārgaḻi*.

ம. கோலடி; க. கோலாட; தெ. கோலாடமு; து. கோலாட

*[கோல் + ஆட்டம்.]*

**கோலாடி** *kōl-āḍi*, பெ.(n.) அரசாணை செல்லும் இடம்; sphere of royal authority or influence. *"என் கோலாடி குறுகப்பெறா" (திவ்.பெரியாழ்.5.4:4).*

*[கோல் + ஆடி.]*

**கோலாடு** *kōl-āḍu*, பெ. (n.) ஆட்டுவகை (இ.வ.); a kind of sheep.

*[கோல் + ஆடு.]*

**கோலாந்தி** *kōlāndi*, பெ. (n.) பற்பாடகச் செடி; fever plant (சா.அக.).

*[கோல் → கோலாந்தி.]*

**கோலாபம்** *kōlābam*, பெ. (n.) சிவதை; Indian jalep (சா.அக.).

*[கலாவம்→கலாபம்→கோலாபம்.]*

**கோலாமரம்** *kōlā-maram*, பெ. (n.) கோலாமீன் பிடிக்கச் செல்லும் மரக்கலம்; a wooden vessel used for fishing of kola fish (மீனவ.).

*[கோலா + மரம்.]*

**கோலாமாலாவெனல்** *kōlā-mālā-v-eṉal*, பெ. (n.) குழப்பக் குறிப்பு; expr. denoting confusion or disorderliness. திருமணத்தைக் கோலாமாலா வென்று நடத்திவிட்டான் (இ.வ.).

*[கோலாமாலா = ஒலிக்குறிப்பு. கோலா + மாலா + எனல்.]*

**கோலாமி** *kōlāmi*, பெ.(n.) ஆந்திர (அடிலாபாத்), மராட்டிய (வார்தா) மாநிலங்களில் பழங்குடிமக்கள் பேசி வரும் திரவிட மொழி; a Dravidian language spoken by Tribals in Andhra Pradesh (Adilabad) and Maharashtra (Wardha).

**மறுவ.** கொலாமி.

*[ஒருகா. குல →குளு →(குழு) குலுமி →கோலாமி.]*

இம்மொழியைப் பலரும் கொலாமி என்றே வழங்குவர். இம்மொழிபற்றிக் காண்க: S.B. Steever(Ed.) The Dravidian Languages (London 1998): Ch. XI pp.301-7 'Kolami' by P.S. Subramanyam.

**கோலாமீன்** *kōlā-mīṉ*, பெ. (n.) 1.***கோலா*** பார்க்க; see *kōlā*. 2. பறவை மீன்; a flying fish (சா.அக.).

*[கோலா + மீன்.]*

**கோலாரிக்கம்** *kōlārikkam*, பெ.(n.) இருவரிடும் சண்டை (இராட்.); duel.

**தெ.** கொலாரகமு.

*[கோல் + (ஆர்த்தல்) ஆரிக்கம்.]*

**கோலாலம்** *kōlālam*, பெ. (n.) ***கோலாகலம்*** பார்க்க; see *kōlākalam*. *"கோலால மாகிக் குரைகடல்வா யன்றெழுந்த வாலாலம்"* (திருவாச. 12:8).

*[கோலாகலம் →கோலாலம்.]*

**கோலாலிண்டு** *kōlāliṇḍu*, பெ.(n.) ஒரு முள்ளி; Indian black berry (சா.அக.).

*[கோலால் + இண்டு.]*

**கோலாவத்தம்** *kōlā-vattam*, பெ.(n.) கீழ்க்காய் நெல்லி; a small plant with slender green main branches (சா.அக.).

*[கோல் + ஆவத்தம்.]*

**கோலாவலை** *kōlā-valai*, பெ.(n.) கோலாமீன் பிடிக்கும் வலைவகை; a kind of net generally used for fishing of kola fish.

*[கோலா + வலை.]*

**கோலாவிதை** *kōlā-vidai*, பெ. (n.) இலந்தை விதை; jujube seed (சா.அக.).

*[கோலா + விதை.]*

**கோலாள்** *kōlāḷ*, பெ.(n.) தேர்ப்பாகன்; charioteer. *"அங்கவன்றன் கோலாளைக் கொன்று"* (பாரத. வெண். 799).

*[கோல் = துறட்டி (அங்குசம்). கோல் + ஆள்.]*

**கோலி**[1] *kōli*, பெ.(n.) கூந்தல், மயிர் (சது.); hair.

*[கோலு (நீட்சி) →கோலி.]*

**கோலி**[2] *kōli*, பெ. (n.) இலந்தை (பிங்.); jujube tree (சா.அக.).

*[கோல் →கோலி.]*

**கோலி**[3] *kōli*, பெ.(n.) திப்பிலி (மலை.); long pepper.

**Mhr.** gōli. **தெ., ம.** கோலி (gōli); **து.** கோளி (gōḷi).

*[கோலன் (குச்சி போன்றது) →கோலா →கோலி.]*

**கோலி**[4] *kōli*, பெ. (n.) 1.சிற்றழிஞ்சில்; privet. 2. புன்குவகை; a species of privet.

*[கோலன் →கோலி.]*

**கோலிக்கற்றை** *kōli-k-kaṟṟai*, பெ.(n.) சாமரம் (சங்.அக.); chowry, tail of the yak.

*[கோலி[1] + கற்றை.]*

**கோலிக்கொள்(ளு)-தல்** *kōli-k-koḷ(ḷu)-*, 16 செ.குன்றாவி.(v.t.) சேர்த்துக் கொள்ளுதல் (வின்.); to gather up, amass, accumulate, as property.

*[கோலி + கொள்(ளு)-. கோலுதல் = சேர்த்தல், திரட்டல்.]*

## கோலாமீன் வகைகள்



கருவாலன் கோலா



திருவெண் கோலா



மயிற்கோலா



பசுங்கோலா



பறவைக் கோலா





வீச்சிக் கோலா

**கோலிகக்கருவி** *kōliga-k-karuvi,* பெ.(n.) நெசவுக் கருவி; loom.

*[கோலிகன் + கருவி.]*

**கோலிகம்** *kōligam,* பெ. (n.) இலந்தை; jujube.

*[கோலி → கோலிகம்.]*

**கோலிகன்** *kōligaṉ,* பெ. (n.) 1. நெசவுத்தொழில் செய்பவன் (நேமிநா.எழுத்து.16,உரை); weaver. 2. கோலிகரால் நெய்யப்பட்ட ஆடை (தொல்.சொல். 114, உரை); a kind of coarse cloth, as woven by *kōligar.*

ம. கோலியன்.

*[கோலி + அன். கோலுதல் = சேர்த்தல், இணைத்தல். கோலியர் = நூலிழைகளை இணைத்து துணி நெய்வோர். கோல் →கோலு →கோலியன் →கோலிவன் →கோலிகன். ககரம் சகரமாகத் திரிந்தபோது கோலியர் →சோலியர் →சாலியர் எனத் திரிந்தது.]*

**கோலிசம்** *kōlišam,* பெ.(n.) மிளகு; black pepper-piper nigrum (சா.அக.).

*[கோலி² → கோலிசம்.]*

**கோலிஞ்சி** *kōliñji,* பெ. (n.) மலையிஞ்சி (நாஞ்சில்); a kind of ginger.

ம. கோலிஞ்சி.

*[கோல் + இஞ்சி.]*

**கோலியப்பறை** *kōliya-p-paṟai,* பெ.(n.) கோலிகப் பறையன் (W.); a division of the pariah caste who weave coarse cloth, as woven by *kōligar.*

*[கோலியன் + பறை.]*

**கோலியடி–த்தல்** *kōli-aḍi,* 4 செ.கு.வி. (v.i.) கோலி யுண்டையால் விளையாடுதல்; to play marbles.

*[கோலி + அடி.]*

**கோலியர்** *kōliyar,* பெ. (n.) நெய்வோர்; weaver.

ம. கோலிகர்.

*[கோலு → கோலியர்.]*

**கோலியள்(ளு)–தல்** *kōli-y-aḷ(ḷu)-,* 5 செ. குன்றாவி. (v.t.) வாரியெடுத்தல் (யாழ்ப்.) ; to bale, take up with a bucket, as water, or gather with a sweep of the arm, as earth, grain.

*[கோலுதல் = அகலவாட்டில் இருகை சேர்த்தல்.கோலி + அள்(ளு).]*

**கோலியன்** *kōliyaṉ,* பெ.(n.) ***கோலிகன்*** பார்க்க; see *kōligaṉ.*

ம. கோலியன்.

*[கோலிகன் → கோலியன்.]*

**கோலிவா(ரு)தல்** *kōli-vā-,* 15 செ.குன்றாவி. (v.t.) சுற்றி வருதல்; to go round, envelope, as an army.

*[கோலு + வா.]*

**கோலிவாசி** *kōli-vāši,* பெ. (n.) கரடி; bear (சா.அக.).

*[கோலி (நீண்டமயிர்) + வாசி.]*

**கோலிளகுதல்** *kōl-iḷagudal,* பெ.(n.) அரசன் சாவு, செங்கோல் தளர்ந்து முடிவுறல்; death of a king, fall of the sceptre. *'கோலிளகுதல் மங்கல மரபு' (சீவக. 2146, உரை).*

*[கோ + இளகுதல்.]*

**கோலினிறம்** *kōliṉiṟam,* பெ.(n.) அழிஞ்சில்; a medicinal tree whose root, fruit, leaves, flowers are an antidote against poison (சா.அக.).

*[கோல் + நிறம்.]*

**கோலு¹–தல்** *kōlu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. பாத்தி முதலியன வகுத்தல்; to make, form, as beds in a garden. 2. வளைத்தல்; to enclose, envelop, encompass; to stretch round. *"நெடுங்காழ்க் கண்டங் கோலி" (முல்லைப்.44).* 3. திரட்டிவைத்தல்; to gather. *"கோலாப் பிரசமன் னாட்கு" (திருக்கோ.110).* 4. நீர்முதலியவற்றை முகந்து அள்ளுதல்; to bale, draw up, as with an *ōlá*bucket; to gather with a sweep of arm. *'கோலித் தண்ணீர் குடிக்கப்பட்ட..... குடை' (கலித்.23,உரை).* 5. விரித்தல்; to spread out. *"கணமயிறொக்கெண் ணுழையாத் தழைகோலிநின் றாலும்" (திருக்கோ. 347).* 6. தொடங்குதல்; to commence. *'பரஸ்வரூபத்தை நிரூபிக்கக் கோலி' (ஈடு,அவ.ஜீ.).* 7. உண்டாக்குதல்; to construct, compass, effect. 8. கலந்தாய்தல் (ஆலோசித்தல்); to consider, deliberate. *"முற்கோலிப் பாண்டு புத்திரர்க் கோறும்" (பாரத. நச்சுப்.3).* 9. ஒன்றுதல் (தியானித்தல்); to ponder, meditate. *"மாலைக் கோலித் திரியும்" (அஷ்டப். திருவேங்.மா.3).*

ம. கோருக.

*[குல் → கொல் → கோல் → கோலு.]*

**கோலு²–தல்** *kōlu-,* 9 செ.கு.வி. (v.i.) இணைதல்; to join together.

Fin. koinia, koinata (to copulate); Est. koinaba, koinida.

*[குல் → கொல் → கோல் → கோலு.]*

**கோலுபட்டை** *kōlu-paṭṭai,* பெ.(n.) இறைகூடை வகை (யாழ்ப்.); a kind of *ōla* bucket.

*[கோலு + பட்டை.]*

**கோலுமை** *kōlumai,* பெ.(n.) தொடக்கம் (வின்.); preparation, commencement.

*[கோலு → கோலுமை.]*

**கோலெரி** *kōl-eri,* பெ. (n.) விளக்குத் தண்டின்மேல் உள்ளச் சுடரொளி ; lamp on a post. *"கோலெரி கொளைநறை" (பரிபா.17:6).*

*[கோல் + எரி.]*

**கோலெழுத்து** *kōl-eḻuttu,* பெ.(n.) 1. எழுதும் பரப்பில் கீறல் அல்லது பள்ளம் விழாமல் எழுதுகோலில் மை தோய்த்து, துணி, மரப்பட்டை, மட்பானை ஆகியவற்றின் மீது எழுதும் எழுத்து; style used to write using ink or colour powder or liquid. 2. ஒப்பனைக் கோலம்; a decorative drawing. 3. மலையாள நாட்டில் வழங்கும் ஒருவகை எழுத்து (I.M.P. Trav. 93-B.); a variety of script used in Malabar.

ம. கோலழுத்து.

*[கோல் + எழுத்து.]*

கண்ணெழுத்து என்பது எழுதும் பரப்பில் கீறல் விழ எழுதுவது, ஒலைச் சுவடி எழுத்து போன்றது.

**கோலை** *kōlai,* பெ.(n.) மிளகு (தைலவ. தைல. 135, வரி. 91); black-pepper.

*[கோல் → கோலை.]*

**கோலொற்று-தல்** *kōl-oṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) அம்பு தொடுத்தல்; to shoot an arrow. *"கோலொற்றக் குனிந்த வாறே" (சீவக.797).*

*[கோல் + ஒற்று.]*

**கோலோகம்** *kō-lōgam,* பெ.(n.) ஆ(பசு)க்களுக் குரிய விண்ணுலகம்; paradise of cows as cow-world. *"கோலோகம் விட்டிழிந்து" (காசிக. விச்சுவநா.8).*

*[கோல் + உலகம்.]*

**கோலோர்** *kōlōr,* பெ.(n.) மதயானையை அடக்கி நடத்தும் குத்துக்கோற்காரர்; spearmen controlling an elephant in rut. *"கோலோர்க் கொன்று மேலோர் வீசி" (மதுரைக். 381).*

*[கோல் →கோலோர்.]*

**கோவக்காரி** *kōva-k-kāri,* பெ.(n.) தலைச்சுருளிச் செடி; Indian birth wort (சா.அக.).

*[கோபக்காரி →கோவக்காரி.]*

**கோவக்கீச்சான்** *kōva-k-kīccāṉ,* பெ.(n.) ஒருவகை கடல்மீன் (மீனவ.); a kind of sea fish.

*[கோவம் + கீச்சான்.]*

**கோவங்கம்** *kōvaṅgam,* பெ.(n.) சரகண்ட செய்நஞ்சு; a kind of native arsenic (சா.அக.).

*[கோ + வங்கம்.]*

**கோவங்கிழங்கு** *kōvaṅ-kiḻaṅgu,* பெ.(n.) ***கோவைக் கிழங்கு*** பார்க்க; see *kōvai-k-kiḻaṅgu* (சா.அக.).

*[கொவ்வை→கோவை + கிழங்கு.]*

**கோவசூரி** *kō-vaśūri,* பெ.(n.) ***கோவைசூரி*** பார்க்க; see *kovai-śūri.*

*[கோவைசூரி →கோவசூரி.]*

**கோவசை** *kō-vaśai,* பெ.(n.) மலட்டுமாடு; cow not calved (சா.அக.).

*[கோ + வசை.]*

**கோவஞ்சி**[1] *kō-vañji,* பெ. (n.) ஒருவகைச் சங்கு; a kind of conch.

*[கோ + (வளஞ்சி) வஞ்சி.]*

**கோவஞ்சி**[2] *kō-vañji,* பெ. (n.) மீன் வகை; a kind of fish. கோவஞ்சிக்கடியன் பொதியன் (பறாளை. பள்ளு.16).

*[கோ + (வளஞ்சி) வஞ்சி.]*

**கோவண்டக்குறிச்சி** *kōvaṇḍa-k-kuṟicci,* பெ. (n.) திருச்சிராப்பள்ளி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tiruchirappaḷḷi Dt.

*[கோ + அண்டன் + குறிச்சி.]*

**கோவணக்குண்டியன்** *kōvaṇa-k-kuṇḍiyaṉ,* பெ.(n.) கோவணாண்டி; a religious mendicant of the Šiva sect who has no clothing but the fore-lape (சா.அக.).

*[கோவணம் + குண்டியன்.]*

**கோவணம்** *kōvaṇam,* பெ.(n.) குண்டித்துணி; man's loin-cloth; fore-lape. *"துன்னம்பெய்

*கோவணம்" (திருவாச.12:2).* கோவணத்தில் ஒரு காசு இருந்தால் கோழி கூப்பிட பாட்டு வரும் (பழ).

**மறுவ.** தாச்சீலை.

**ம.** கோவணம்; **க., து.** கோவண; **தெ.** கோவணமு

*[கோ (கோத்தல்) + அணம்.]*

**கோவணவர்** *kōvaṇavar,* பெ.(n.) கோயில் கண் காணிப்பாளர் (விசாரணையாளர்) (கோயிலொ,65) superintendent of a temple.

*[கோ + (பணவர்) வணவர்.]*

**கோவணவன்** *kōvaṇavaṉ,* பெ. (n.) ***கோவணன்*** பார்க்க; see *kōvaṇaṉ. "இஞ்ஞின்ற கோவணவன்" (திருவிசை. கருவூர். 46).*

*[கோ + (பணவன்) வணவன்.]*

**கோவணன்**[1] *kōvaṇaṉ,* பெ. (n.) சிவன் (சது.); śiva one with a loin-cloth fore-lape.

*[கோவணம் + அன்.]*

**கோவணன்**[2] *kō-vaṇaṉ,* பெ. (n.) வசிட்டன் (சது.); Vasista, as having *Kāmatēṉu* with him.

*[கோவணம் + அன்.]*

**கோவணாண்டி** *kōvaṇāṇḍi,* பெ.(n.) (இரந்துண்ணி) வாழும் வழிவகையற்றவன்; a begger with only a loin cloth for his clothing, destitute person.

*[கோவணம் + ஆண்டி.]*

**கோவணி** *kōvaṇi,* பெ.(n.) ஆத்தி (மூ.அ.); common mountain ebony.

*[குவணி →கோவணி.]*

**கோவத்தக்குடி** *kōvatta-k-kuḍi,* பெ.(n.) திருச்சிராப்பள்ளி மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tiruchirappalli Dt.

*[கோ + அத்தன் + குடி.]*

**கோவத்தி** *kō-vatti,* பெ.(n.) ***கோவதை*** பார்க்க; see *kō-vadai.*

*[கோவதை →கோவத்தி.]*

**கோவதை** *kō-vadai,* பெ.(n.) ஆ(பசு)க்கொலை; slaughter of cows, considered a sin. *"கொந்தலர்த்தார் மைந்தனைமுன் கோவதை செய்தார்க்கு" (பெரியபு.மனுநீதி. 34).*

*[கோ + வதை.]*

**கோவந்தபுத்தூர்** *kōvanda-puttūr,* பெ.(n.) தஞ்சை மாவட்ட ஊர்ப் பெயர்களிலொன்று; a village in Thanjavur Dt.

*[கோ + வந்தன் + புத்தூர்.]*

**கோவம்**[1] *kōvam,* பெ.(n.) கோபம்; angar. *"கோவந் தோன்றிடிற் றாயையு முயிருணுங் கொடியோர்" (கம்பரா.படைக்கா.23).*

*[கோப்பு → கோப்பி → கோபி → கோவி → கோவம்]*

**கோவம்**[2] *kōvam,* பெ.(n.) 1. தம்பலப்பூச்சி; cochineal. *"கோவத் தன்ன கொங்குசேர் புறைத்தலின்" (சிறுபாண்.71).* 2. பொன்; gold.

*[கோபம் →கோவம்.]*

**கோவர்** *kōvar,* பெ. (n.) இடையர்; shepherds.

*[கோ → கோவு + அர்.]*

**கோவர்த்தனம்** *kō-varttaṉam,* பெ.(n.) இந்திரன் சினந்து விடுத்த பெருமழையைத் தடுத்து ஆநிரைகளையும் இடையர்களையும் காப்பதற்காகக் கண்ணனாற் குடையாகத் தாங்கப்பட்டதும் வடமதுரைப் பக்கத்துள்ளதுமான ஒரு மலை (திவ். பெரியாழ்.3:5:1); celebrated hill in Brindaban near Muttra lifted up and held by Krisṇā to shelter cows and cowherds from a rain storm sent by Indira.

*[கோ + வர்த்தனம்.]*

ஆநிரை மீட்பு நிகழ்வுற்ற இடமாதலின் இவ் வூர் இப் பெயர் ஏற்றதெனலாம்.

**கோவர்த்தனர்** *kō-varttaṉar,* பெ.(n.) கோவைசியர் (பிங்.); herds men (சா.அக.).

*[கோ (மாடு) + வர்த்தனர்.]*

**கோவரகழுதை** *kōvara-kaḻudai,* பெ.(n.) ***கோவேறுகழுதை*** பார்க்க; see *kōvēṟu-kaḻudai.*

*[கோவேறு → கோவர + கழுதை.]*

**கோவல்**[1] *kōval,* பெ.(n.) 1. மாட்டு மந்தை; herd, flock. 2. ஊரின் பொது மேய்ச்சலிடம்; common pasture of a village.

**மறுவ.** மந்தைவெளி, ஆவடி.

*[கோள் : போரில் கொள்ளை கொண்ட மாடுகள். கோள் → கோ (மாடு) →கோவு + அல் – கோவல்.]*

**கோவல்**[2] *kōval,* பெ.(n.) ***கோவலூர்*** பார்க்க; see *kōvalūr. "கோவ லிடைகழியே பற்றி" (திவ்.இயற். 1.86).*

[கோ→கோவு→கோவல்[1]→கோவல்[2] (மாட்டு மந்தை யிருந்த ஊர்)]

**கோவலகணவாய்** *kōvala-kaṇavāy,* பெ.(n.) கணவாய்ச்சிப்பி மீன்வகை (வின்.); a species of cuttle fish.

[கோ + வல் + கணவாய்]

**கோவலர்** *kōvalar,* பெ.(n.) 1. முல்லைநில மக்கள்; men of the sylvan tract, herdsmen. *"குருந்தங் கண்ணிக் கோவலர்" (ஐங்குறு. 439).* 2. இடையர்; shepherds.

[கோ→கோவு (மாடு) →கோவல் (மாட்டுமந்தை) + அர் – கோவலர்.]

**கோவலராயப்பேரையன்** *kōvalarāya-p-pēraiyaṉ,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டம் சம்பையில் தண்டனை பெற்ற வணிகன்; a merchant, who was punished by the guild at Jambai in Thirukkovalur taluk in Villuppuram Dt. "முடியனூரிருக்கும் பள்ளிச்சேரி அடியநம்பியான கோவலராயப் பேரையன்" (தெ.இ.க.தொ.22, கல்.67–5).

[கோவலர் + ஆயன் + பேர் + அரையன்.]

**கோவலன்[1]** *kōvalaṉ,* பெ.(n.) 1. மாட்டு மந்தைகளுடைய பெருஞ்செல்வன்;a rich man of cattle wealth. 2. சிலப்பதிகாரக் காப்பியத் தலைவன்; hero of the epic *Šilappadikāram. "கொண்டேத்தும் கிழமையில் கோவலன்என் பான்மன்னோ" (சிலப்).*

[கோ → கோவு→கோவல் (மாட்டு மந்தை) + அன் – கோவலன்.]

மாட்டு மந்தைகளுக்குத் தலைவன் கோவலன் எனப்பட்டான். நாளடைவில் இச் சொல் பெருஞ்செல்வன் என்னும் பொருள்பட்டதால் இப் பொருளில் சிலப்பதிகாரக் கோவலனுக்கும் காரணப்பெயராயிற்று.

**கோவலன்[2]** *kōvalaṉ,* பெ.(n.) திருமால் பெயர்களுள் ஒன்று; one of the name of Tirumāl.

[கோவலன் >**Skt.** *gōpāla.*]

**கோவ்லி** *kōvali,* பெ.(n.) பற்கிட்டுகை; tetanus.

[கோல்→கோ + வலி.]

**கோவலூர்** *kōval-ūr,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்திலுள்ளதும் பழைமையுடையதுமாகிய திருக்கோவலூர்; *Tirukkovalūr* in Viḷupuram Dt. of historic interest. *"முரண்மிகு கோவலூர் நூறி" (புறநா. 99).*

[கோவல் : மாட்டுமந்தை. கோவல் + ஊர் – கோவலூர்.]

**கோவலை** *kōvalai,* பெ.(n.) 1. நீரோட்டமுள்ள கழிமுகங்களில் பயன்படும் மீன்வலை; a kind of fishing net used for fishing in backwaters. 2. நீளமும் அகலமும் உள்ள பெரிய வலை (மீனவ.); big net, long and broad.

[கோ + வலை.]

**கோவளம்[1]** *kōvaḷam,* பெ.(n.) 1. கடற்குள் நீண்ட தரைமுனை; cape, headland. 2. தரைமுனையிலுள்ள ஊர்; town near a headland.

ம. கோவளம்; **M.** kōḷam.

[கோ + அளம்.]

**கோவளம்[2]** *kōvaḷam,* பெ.(n.) கோயில் முன்மண்டபத்தில் குமுதப்படைக்கு மேலுள்ள பகுதி; portion above the kumudappadai in the front mandapam. *"திரு அக்கிறமண்டபம் முன்பு திருக்கற் செய்துநின்ற குமுத படைக்குமேல் திருக்கற்சாத்த வாங்கி கோவளத்து கல்லடிப்பிக்கவும்" (SII.XVII.561 - 23 p. 236) (கி.பி.1237).*

[கோ → கோவளம்.]

**கோவளை** *kōvaḷai,* பெ.(n.) நரிவாழை (L.); tube-flower.

[கோ + வளை.]

**கோவன்** *kōvaṉ,* பெ.(n.) 1. இடையன்; herdsman. *"கோவ னிரைமீட்டனன்" (சீவக. 455).* 2. அரசன்; king. *"கோவனும் மக்களும்" (சீவக.1843).* 3. வசிட்டன் (அக.நி.); Vasitan. 4. சிவன் (அக.நி.); *Šiva.*

[கோ →கோவு (மாடு) + அன்.]

**கோவன்காய்** *kōvaṉ-kāy,* பெ.(n.) மலைத் தக்காளி; mountain currant tomato (சா.அக.).

[கோவன் + காய்.]

**கோவன்புத்தூர்** *kōvaṉ-puttūr,* பெ.(n.) கோயமுத்தூரின் முந்தைய பெயர்; early form of Coimbatore. *"பேரூர் நாட்டு கோவந்தபுத்தூரான வீரகேரள நல்லூர்ப்பால் பெருமாட்டிகள்" (SII.V.241-6 பக்.88).*

[கோவன்+ புத்தூர்–கோவன்புத்தூர்.]

**கோவன்வெண்ணெய்க்கூத்தன்** *kōvaṉ-veṇṇei-k-kūttaṉ,* பெ.(n.) திருமால்புரம் நகரக் கணக்கனின் பெயர்; name of the acccontant of Thirumalpuram in Velur Dt. *'இப்படிக்கு நகரக்கணக்குக் கோவன்*

*வெண்ணெய்க் கூத்தன் இவை என் எழுத்து' (தெ.இ.க.தொ-22, கல்.271-18).*

**கோவாங்கம்** *kōvāṅgam,* பெ.(n.) 1. செம்மணி; a ruby. 2. மாணிக்கத்தின் நான்காவது பிரிவு; the fourth shape of red beads.

*[கோவு + அங்கம்.]*

**கோவாங்காட்டு மூலை** *kōvāṅkāṭṭu-mūlai,* பெ.(n.) வடமேற்கு மூலை; north-western direction.

*[கோவன்காடு →கோவாங்காட்டு + மூலை.]*

இம்மூலையில் மின்னினால், உடனே மழை வந்து விடும். அதாவது, பூட்டிய ஏரை அவிழ்த்து வடத்தைச் சுருட்டும் முன்பு மழை வந்துவிடும் என்பது நம்பிக்கை. அதனால் இம்மூலையை வடஞ்சுருட்டி மூலை என்றும் அழைப்பர்.

**கோவாங்கு** *kōvāṅgu,* பெ.(n.) படிதமென்னும் மாணிக்க வகை (சிலப்.14:186, உரை); a kind of ruby.

*[கோவாங்கம் →கோவாங்கு.]*

**கோவாங்குமணி** *kōvāṅgu-maṇi,* பெ. (n.) ஒருவகை மாணிக்கம் (இரத்தினம்); a kind of ruby.

*[கோவாங்கு + மணி.]*

கோவைப்பழம், செங்கல், குராமலர், மஞ்சளென்னு மிவைபோன்ற நிறத்தினையுடையது.

**கோவாரி** *kō-vāri,* பெ.(n.) மாடுகளுக்கு வரும் அம்மை நோய்வகை; (M.Cm. D.1887, 247); rinderpest.

*[கோ + வாரி.]*

**கோவாலவண்டி** *kōvāla-vaṇḍi,* பெ.(n.) ***கொல்லாப்பாண்டி*** பார்க்க (சிலப்.ப.199.); see *kollā-p-pāṇḍi*

*[கொல்லாப்பண்டி →கோவாலவண்டி.]*

**கோவி**[1] *kōvi,* பெ.(n.) சினமுள்ளவன்-ள்; angry person. *"கோவியவாவன்" (சைவச.ஆசாரக்.17).*

*[கோபம் →கோபி →கோவி.]*

**கோவி**[2] *kōvi,* பெ.(n.) இடைச்சி; shepherdess, *"கோவி நாயகன்" (திவ். பெரியதி. 2.1:4).*

*[கோவன் →கோவி.]*

**கோவிக்கல்** *kōvi-k-kal,* பெ.(n.) அரண்மனை (T.A.S.V., 205); palace.

*[கோ →கோவு →கோவி + கல்.]*

**கோவிக்கீரை** *kōvi-k-kīrai,* பெ.(n.) முட்டைக்கோசு (பாண்டி.); cabbage.

*[கோவி + கீரை.]*

**கோவிசந்தனம்** *kōvi-šandaṉam,* பெ.(n.) ***கோபி சந்தானம்*** பார்க்க; see *kōbi-šandāṉam. "கோவிசந் தனத்தினைக் கோடு நெற்றியில்" (சேதுபு. சேதுபல. 128).*

*[கோபி →கோவி (சந்தனம்) + சந்தானம்.]*

**கோவிட்டு** *kō-viṭṭu,* பெ.(n.) மாட்டுச் சாணம் (தைலவ. பாயி.41.); cowdung.

*[கோ + விட்டு. புட்டை →விட்டை → விட்டு. **கோவிட்டை** பார்க்க; see kō-viṭṭai.]*

**கோவிட்டை** *kō-viṭṭai,* பெ.(n.) மாட்டுச்சாணி; cow-dung (சா.அக.).

*[கோ + விட்டை.]*

**கோவிடாணம்** *kōviḍāṇam,* பெ.(n.) நளிநய முத்திரை வகை (செந். x, 424); a handpose in dance.

*[கோ + விடாணம்.]*

**கோவித்தியர்** *kōvittiyar,* பெ.(n.) முல்லைநில மகளிர் (தொல்.பொருள்.20, உரை); women of the sylvan tract, shepherdesses.

*[கோவி→கோவித்தியர்.]*

**கோவிதன்** *kōvidaṉ,* பெ.(n.) நன்குணர்ந்தோன்; expert (பகவற். 3:17).

*[கோவி→கோவித்தியர்.]*

**கோவிதாரம்** *kōvi-dāram,* பெ.(n.) 1. குரா; a kind of shrub bottle - flower. 2. காட்டாத்தி (மலை.); a species of tree whose fruit is holy, mountain ebony; fig tree (சா.அக.).

*[கோவி (சிவப்பு) + தாரம்.]*

**கோவிதேசுவரம்** *kōvidēšuvaram,* பெ.(n.) சிவனிடங்க ளாயிரத்தெட்டனு ளொன்று; one of 1008 šiva temples.

*[கோவு→கோவிதன் + ஈசுவரம்.]*

**கோவிந்தக்கொள்ளி** *kōvinda-k-koḷḷi,* பெ.(n.) கோவிந்தா சத்தமிட்டு ஏதிலி (அநாதைப்) பிணத்துக்கிடுங் கொள்ளி; burning an unclaimed corpse with cries of Govinda.

*[கோவிந்தம் + கொள்ளி.]*

**கோவிந்தசதகம்** *kōvinda-šadagam*, பெ.(n.) நாராயண பாரதியார் இயற்றியதும் ஒவ்வொரு செய்யுளும் ஒவ்வொரு பழமொழியைக் கொண்டு கோவிந்தனே யென்று முடியப்பெறுவதுமாகிய சதக நூல்வகை; a *šadagam* poem by *Nārāyaṇa Bārati*, each stanza explaining a proverb and ending with an address to Govinda.

*[கோவிந்தன் + சதகம்.]*

**கோவிந்தம்** *kōvindam*, பெ.(n.) செம்முள்ளி; thorny nail dye (சா.அக.).

*[கோவி (சிவப்பு) → கோவிந்தம்.]*

**கோவிந்தம்போடு-தல்** *kōvindam-pōḍu-*, 20 செ.கு.வி.(v.i.) *'கோவிந்தா'* என்று சொல்லிக் கையால் வணங்குதல் (கொ.வ.); to bow or salute uttering the name of Govinda.

*[கோவிந்தம் + போடு-.]*

**கோவிந்தர்** *kōvindar*, பெ.(n.) இடையர், முல்லைநில மக்கள் (திவா.); men of the sylvan tract, herdsmen.

*[கோ → கோவு → கோவந்தர் → கோவிந்தர்.]*

**கோவிந்தன்** *kōvindaṉ*, பெ.(n.) திருமால் (பிங்.); Visṇu.

*[கோ →கோவு (மாடு) → கோவந்தன் → கோவிந்தன்.]*

**கோவியம்** *kōviyam*, பெ.(n.) ***கோவிட்டை*** பார்க்க; see *kō-viṭṭai* (சா.அக.).

*[கோ + (மயம் → மியம்) → வியம்.]*

**கோவிராசராசகேசரி** *kō-v-irāša-rāša-kēšari*, பெ.(n.) முதலாம் இராசராச சோழனுடைய பட்டப்பெயர்; a title of Rajaraja I. *"ஸ்ரீ கோவிராஜ ராஜகேசரி பந்மரான ஸ்ரீராஜராஜ தேவர்க்கு யாண்டு" (S.I.I.III.-15 p.23).*

*[கோ + இராசன் + இராசன் + கேசரி.]*

**கோவில்** *kō-v-il*, பெ.(n.) கடவுளின் உருவச் சிலையைக் கொண்டு எழுப்பப்படும் வழிபாட்டுக்கான கட்டடம்; temple.

ம. கோவில்; **தெ.** கோவிய.

*[கோ : தலைமை. கோ → கோவு : தலைமையான இறைவன். கோவு + இல் : கோவில். **கோயில்** பார்க்க.]*

இறைவனுக்காக எழுப்பப்படும் ஆலயத்தைக் கோவில் என்பதே மாபிலக்கணத்திற்கு ஏற்றதாகும்.

"இ, ஈ, ஐவழி யவ்வும்
ஏனை உயிர்வழி வவ்வும் ஏமுனிவ்விருமையும்
உயிர்வரின் உடம்படுமெய்யென்றாகும்"

என்ற நன்னூல் இலக்கண நெறிக்கேற்பக் கோ + இல் = கோவில் எனப் புணர்வதே பொருத்தமாகும். தமிழர்களின் கோவில் கட்டடக்கலையைத் திராவிடக் கட்டடக்கலை என இக்காலத்தில் குறிப்பிடுகின்றனர். மிகப் பழங்காலத்தில் மரங்களின்கீழ்த் தெய்வ வழிபாடு நடந்தது. அதன் பிறகு சிறுகூரை அளவில் கோயில்கள் எழுந்தன. மண்ணாலும் செங்கல்லாலும் மரத்தாலும் கோவில்கள் அமைக்கப்பட்டன. கோச்செங்கட் சோழன் எண்டோள் ஈசற்கு எழுபது மாடங்கள் கட்டினான் எனக் கூறப்படுகின்றது. அதன்பிறகு பல்லவர் காலத்தில் குகைக் கோவில்களும் கற்கோவில்களும் உருவெடுத்தன. சோழர் காலத்திலும், பாண்டியர் காலத்திலும், விசயநகர மன்னர் காலத்திலும் கற்களால் ஆன பெருங்கோவில்கள் தமிழக வரலாற்றில் தலைமையிடத்தைப் பெற்றிருந்தன. திராவிடக் கட்டடக்கலை என்பது ஆறு வகைக் கோவில் அமைப்புகளைக் கொண்டது. 1. குடிசையின் கூரை அமைப்பு; வட்டக் குடிசை அமைப்பு 2. சதுரக் கோவில் அமைப்பு 3. நீள்சதுரக் கோவில் அமைப்பு 4. நீண்ட அரை உருளை வடிவில் அமைந்த தூங்கானை மாடக் கோயில் அமைப்பு 5.நீழற்குடையமைப்பு 6. கரக்கோவில் எனப்படும் தேர் அமைப்பு. இந்த ஆறு வகை அமைப்புகளின் அடிப்படையை மாமல்லபுரத்தில் உள்ள பாண்டவர் தேர்களில் காணக்கூடும். நீழற்குடையமைப்பு என்பது ஊர்வலங்களில் இடம்பெறும் தெய்வம் அல்லது பெருமக்கள், மணமக்கள் ஆகியோர் மீது வெயிலும் மழையும் படாதவண்ணம் நடுவில் தூக்கிப் பிடித்தும் இருபுறமும் தாழப்பிடித்தும் செல்லும் செயற்கைக் குடைத் துணியமைப்பைக் குறித்தது. நீழற்குடையமைப்பு, வட்டக்குடையமைப்பு எனவும் நீள்குடையமைப்பு எனவும் மேலும் இருவகைப்படும். வட்டக் குடையமைப்பில் விரித்த குடையமைப்பு, மடித்த குடையமைப்பு, கவிழ்த்த குடஅமைப்பு என்பவை உட்பிரிவுகளாகும். ஆலயங்களைச் சுற்றி அமைந்துள்ள சுற்றாலை மதில்களில் உயரமான நுழைவாயில் கோபுரங்கள் அமைப்பதும் கருவறைக்கு மேல் குடையாப்பு (விமானம்) அமைப்பதும் நூற்றுக்கால், ஆயிரங்கால் மண்டபம் அமைப்பதும் கோவில்களில் திருக்குளங்களும், கொடிமரங்களும் அமைத்துக் கோவில் மரங்கள் (தலவிருட்சம்) வளர்ப்பதும் தென்னாட்டுக்கே உரிய வேலைப்பாடுகளும் திராவிடக் கட்டடக் கலையின் சிறப்பியல்புகளாகும். மரக்கோவில்களிலும், அரசர்களின் பெருந்தேர்களிலும் அமைந்த சிற்ப வேலைப்பாடுகள் அனைத்தும் கற்களால் கோவில் கட்டிய கற்றச்சர்களால் முழுமையாகப் பின்பற்றப்பட்டிருப்பதைத் தமிழகக் கோவில்களில் காணமுடிகிறது. மரவேலைப்பாடுகள் கல்வேலைப்பாடுகளாக வளர்ந்த வளர்ச்சியே திராவிடக் கட்டடக் கலையின் தனித்தன்மையைக் காட்டுகிறது.

இந்தியக் கோவிற் கட்டடக்கலை வல்லுநர்கள் வட இந்தியக் கோவில் கட்டுமானங்களை நாகர அமைப்பு என்றும் நடுவண் இந்திய அமைப்புகளை வேசரக் கட்டு மானங்கள் என்றும் தென்னிந்தியக் கட்டுமானங்களைத் திராவிடக் கட்டுமானங்கள் என்றும் வகைப்படுத்தி யுள்ளனர். நாகரக் கட்டுமானம் ஆரியச் சார்புடையது. வேசரக் கட்டுமானம் வடநாட்டுத் தென்னாட்டுக் கட்டுமானங்களின் கலப்பாக அமைந்தது.

ஆரியர்கள் இலைக்குடில்களில் வாழ்ந்தவர்கள். செங்கற் கட்டடம்கூடக் கட்டத் தெரியாதவர்கள். ஆதலால்

வடநாட்டுக் கோவில் கட்டுமானத்தை ஆரியச் சார்புடையது என்று சொல்வது பொருந்தாது. நகரம் என்னும் சொல்லில் இருந்து பிறந்த 'நாகர' என்னும் சொல் வடநாட்டு வணிகர்கள் வளமாக வாழ்ந்த நகரத்து வீடுகளையே குறிக்கும். ஆதலால் 'நாகர'க் கட்டுமானம் என்பது வடநாட்டு வணிகரின் வீட்டு அமைப்பு என்று கூறுவதே பொருந்தும்.

திராவிடக் கட்டடக்கலையில் சதுரக் கோவிலின் மேல்முகப்பில் அரைக்கோள வடிவில் அமைக்கப்படும் குடையாப்பு (விமானம்) வகைமையின் சதுரக்கோயில் அமைப்புமே வடநாட்டு 'நாகர'க் கோவில் அமைப்பாக வளர்ந்திருக்கிறது. தேர்களிலும், தேர்ப் பாடைகளிலும் ஒன்றன்மேல் ஒன்றாக மூங்கிலால் அல்லது மரச்சட்டங்களால் அமைக்கப்படும் மேற்கட்டுகளும் உச்சிக் குடையும் வடநாட்டு 'நாகர'க் கட்டுமானத்தில் குடைமேல் குடை அமைந்த கோவில்களாகவும் மூடிய குடைபோன்று நெடுக்குப் பள்ளங்களோடு பூரி சகன்னாதர் கோவில்போல் தொங்கும் குடைவடிவில் அமைந்த ,அமைப்புகளும் தென்னாட்டுக் கோவில் வகைமையின் திரிபுற்ற வளர்ச்சியே எனலாம். தமிழர்களின் மிகத் தொன்மையான மரபுகளின் வண்ணம் நடுகல் வழிபாடே கோவில் வழிபாடாக வளர்ந்துள்ளது என்பதை வரலாறு காட்டுகிறது. நடுகல் வழிபாடே வடபுலத்தில் அசோகர் காலத்தில் தூபி என்னும் துமிலிகளாக வளர்ந்தது. நடுகல் செதுக்கும் வழக்கம் அசோகனின் தரும சக்கரத் தூணாகவும் அரசர்களின் வெற்றித்தூணாகவும் மாறின. குகையில் வாழ்ந்த முனிவர்களுக்காக அமைக்கப்பட்ட கற்குடைவுகள் கற்கோவில்கள் அமைக்க வழிகோலின. தமிழக அரசர்களின் தேர்களையும் அரண்மனை மற்றும் கோட்டை கோபுரங்களையும் முற்றிலும் பின்பற்றி வளர்ந்தது திராவிடக் கட்டடக்கலை ஆகும். பௌத்த சமண சமயத்தினர் கலை நுணுக்கங்களில் கருத்துச் செலுத்தாதவராதலால் கட்டட மேற்கட்டு பாங்குகளை மட்டும் பின்பற்றி வடநாட்டு 'நாகர' கட்டடக் கலையை வளர்த்துக் கொண்டனர். ஆதலின் இந்தியக் கோவில் கட்டுமானத்தில் தமிழர்களின் கோவிற் கட்டுமானப் பாங்கே ஊடாடியுள்ளது என்பது உறுதிப்படுகிறது. வடமொழியில் 'மயமதம்' என்னும் கட்டடக் கலைநூல் மொழியாக்கம் செய்வதற்கு முன்பே தமிழில் ஏராளமான கட்டடக்கலை நூல்கள் இருந்தன என்பதை நூலறிபுலவர், நுணங்கு நூல் அறிந்தோர் என்னும் சொல்லாட்சிகள் நிறுவிக் காட்டுகின்றன. ***கோட்டை, கோபுரம், கோவில்*** பார்க்க. சங்ககாலத்தில் செங்கற் கோவில்கள் எழுந்தன. பல்லவர் காலத்தில் கற்கோவில் எழுந்தன. சோழர்காலத்தில் உயர்ந்த கருவறைக் கோவில்கள் எழுந்தன.

பாண்டியர் காலத்தில் நாற்புறக் கோபுரங்கள் அமைந்த கோவில்கள் எழுந்தன. விசயநகர அரசர் காலத்தில் ஆயிரங்கால், நூற்றுக்கால் மண்டபங்களும் நெடிய தூண்களில் அழகிய சிற்பங்களும், பிள்ளைக் கோவில்களும் எழுந்தன.

**கோவில்கோட்டை** *kō-v-il-kōṭṭai,* பெ.(n.) கி.பி.1729-ல் இன்றைய புதுக்கோட்டை வட்டத்தின் பண்டைய ஆட்சி மாகாணப் பிரிவு; administrative name of Pudukkottai region. *"நம்முடையதான குடிக்கானமு கோவில் கோட்டை மாகாணத்தைச் சேர்ந்த சிறுபனையூர்" (தஞ்.மரா.செ.5,61).*

*[கோவில் + கோட்டை.]*

**கோவில்திருமடந்தை** *kōvil-tiru-maḍandai,* பெ.(n.) வைப்பரிதாரம்; an orpiment artificially made, synthetic orpiment (சா.அக.).

*[கோவில் + திருமடந்தை.]*

**கோவில்திருமாளம்** *kōvil-tirumāḷam,* பெ.(n.) திருவாரூர் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Tiruvarur Dt.

*[கோவில் + (திருவாளம்) திருமாளம்.]*

**கோவில்பட்டி** *kōvil-paṭṭi,* பெ.(n.) தூத்துக்குடி மாவட்டத்தில் ஒரு ஊர்; a town in Thoothukudi Dt.

*[கோவில் + பட்டி.]*

செண்பகவல்லி கோவில் அமைந் துள்ளமையால் இப் பெயர் பெற்றதாம்.

**கோவில்வாசல் மறியல்** *kōvil-vāšal-maṟiyal,* பெ.(n.) நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் கோவிலலுவலரை முன்னிட்டுக் கொண்டு நடத்தும் ஊர்க்கூட்ட வகை (E.T.V,263); a form of panchayat among the *Nāṭṭukkōṭṭai* Chetties, in which the temple-manager takes the lead, dist. fr. *maḍattu-vāšal-maṟiyal.*

*[கோவில் + வாசல் + மறியல்.]*

**கோவில்வீடு** *kōvil-vīḍu,* பெ.(n.) 1. வீட்டிலமைந்த குலதெய்வங்களின் கோவில் (G.Tp. D.I. 91); a private chapel or shrine. 2. கோவிலுக்குக் கொடையாக விடப்பட்ட வீடு (இ.வ.); house given as endowment to a temple.

*[கோவில் + வீடு.]*

**கோவில்வெண்ணி** *kōvil-veṇṇi,* பெ.(n.) கரிகாலனைப் பாடிய வெண்ணிக் குயத்தியாரின் ஊர்; place of *Veṇṇikkuyattiyār* who praised *Karikālaṉ* of Sangam poet.

*[கோவில் + வெண்ணி.]*

**கோவிலங்கு** *kō-vilaṅgu,* பெ.(n.) அரிமா (சிங்கம்); lion, as king of beasts. *"கோவிலங்கு பொரவஞ்சுமோ" (பாரத. கிருட்டிண. 122).*

*[கோ + விலங்கு. கோ = பெரிய, தலைமை, வலிய.]*

**கோவிலாழ்வார்** *kōvil-āḻvār,* பெ.(n.) ***கோயிலாழ்வார்*** பார்க்க; see *kōyil-āḻvār.*

*[கோவில் + ஆழ்வார்.]*

**கோவிற்குடியான்** *kōviṟ-kuḍiyāṉ,* பெ.(n.) பதினெண்குடியுள் சங்கூதும் பணிசெய்வோன் (வின்.); conch blower, a servile caste, one of 18 *kuḍimakkaḷ.*

*[கோவில் + குடியான்.]*

**கோவிற்புறா** *kōviṟ-puṟā*, பெ.(n.) மாடப்புறா (M.M.99); blue rock-pigeon.

*[கோவில் + புறா.]*

**கோவிற்றுறையார்** *kōviṟṟuṟaiyār*, பெ.(n.) கோயில் வேலைக்காரர்; staff or servants in a temple.

*[கோவில் + துறையார்.]*

**கோவின்மை** *kōviṉmai*, பெ.(n.) ***கோயின்மை*** பார்க்க; see *kōyiṉmai*. *'கொள்ளும்புட் காக்கின்ற கோவின்மையோ' (யாழ்ப். வி. 22, உரை).*

*[கோ + இன்மை.]*

**கோவு**[1] *kōvu*, பெ.(n.) 1. ஆன், ஆவு, மாடு; cow. 2. ஆவினம்; bovine species.

*[கோன் →கோ→கோவு.]*

**கோவு**[2] *kōvu*, பெ.(n.) 1. தலைமை; leadership. 2. தலைவன்; leader, head. 3. அரசன்; king. 4. இறைவன்; God.

*[கோன் → கோ → கோவு.]*

**கோவுகந்தம்** *kōvukandam*, பெ.(n.) நச்சுப் பொருள் (யாழ்.அக.); an arsenic.

*[கோவு + கந்தம்.]*

**கோவுரம்**[1] *kō-v-uram*, பெ.(n.) 1. மாட்டுச்சாணம்; cowdung. 2. எரு, உரம்; manure. 3. குப்பை; rubbish.

மறுவ. கோப்பரம்.

ம. கோவுரம்.

*[கோ + உரம்.]*

**கோவுரம்**[2] *kōvuram*, பெ.(n.) கோபுரம்; tower.

மறுவ. கோவரம்.

*[கோபுரம் → கோவுரம்.]*

**கோவூர்** *kōvūr*, பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டம் திருப்பெரும்புதூர் வட்டம் குன்றத்தூருக்கருகிலுள்ள ஓர் ஊர்; a village near *Kundrattūr* in *Kāñjipuram* Dt. கோவூரான் திருடகுண்ணத்தூரான் தண்டம் கட்டினான் (பழ).

*[கோ + ஊர்.]*

சுற்றுப்புற ஊர்கட்குத் தலைமையானதாக விளங்கியமையால் இப் பெயர் பெற்றிருக்கலாம்.

**கோவூர்கிழார்** *kōvūr-kiḻār*, பெ.(n.) கடைக்கழகப் புலவருள் ஒருவர் (புறநா.); a celebrated poet of the last *Saṅgam*.

*[கோவூர் + கிழார்.]*

இவர் புறநானூற்றில் 46, 68 ஆம் பாடல்களைப் பாடியுள்ளார். சிற்றூரின் நிலங்கள் அனைத்தும் ஒரு மாந்தனுக்கு உரிமைப்படின் அவ்வூர்ப்பெயருடன் கிழார் என்னும் அடை சேர்த்து வழங்குவது அக்கால மரபாகும். அவ் வடிப்படையில் கிழார் என்ற அடை சேர்ந்தது.

**கோவெண்ணெய்** *kō-veṇṇey*, பெ.(n.) மாட்டு வெண்ணெய்; butter from cow's milk; cow's butter (சா.அக.).

*[கோ + வெண்ணெய்.]*

**கோவெனல்** *kō-v-eṉal*, பெ.(n.) 1. இரங்கற் குறிப்பு; onom. expr. of bewailing. 2. பேரொலி செய்தற் குறிப்பு (உரி.நி.); onom.expr. of making loud noise.

*[கோ + எனல்.]*

**கோவேங்கைப் பெருங்கதவனார்** *kōvēṅgai-p-peruṅkadavaṉār*, பெ.(n.) கடைக்கழகப் புலவர்களில் ஒருவர்; a *Saṅgam* poet. தொடராற் பெயர் பெற்ற புலவர். குறுந்தொகையின் 134ஆம் பாடலைப் பாடியவர்.

*[கோ + வேங்கை + பெருங்கதவனார்.]*

**கோவேள்** *kōvēḷ*, பெ.(n.) குயவர்; potters. *"இருங்கோ வேட்களுஞ் செம்பு செய்ஞ்ஞரும்" (மணிமே.28:34).*

க. கோவ.

*[குய் : சுடுதல். குய் →கோ + வேள்.]*

**கோவேறுகழுதை** *kō-v-ēṟu-kaḻudai*, பெ.(n.) கழுதைவகை (சிலப். 6:119, உரை); mule, as the mount of a king.

ம. கொவற்கழுத; க. கோநேரிகத்கெ.

*[கோ : அரசன். கோ + ஏறு + கழுதை. அரசர் ஏறும் ஊர்தி.]*

**கோவை**[1] *kōvai*, பெ.(n.) ***கோவன்புத்தூர்*** பார்க்க; see *kōvaṉ-puttūr*.

**கோவை**[2] *kōvai*, பெ.(n.) அன்னவெட்டியென்னும் ஏனம்; a kind of metalic vessel for taking and serving rice.

*[கோரு →கோர் →கோர்வை (முகப்பது)→கோவை.]*

**கோவை**[3] *kōvai*, பெ.(n.) 1. கோக்கை; stringing, filing, arranging. *"கோவையார்வடக் கொழுங்கவடு"*

(கம்பரா. வரைக். 1). 2. வரிசை; series, succession, row. 3. கோத்த வடம் (பிங்.); string of ornamental beads for neck or waist. 4. ஏற்பாடு; arrangement, scheme. "கோத்த கோவைநன் றாயினும்" (பாரத. சூது. 64). 5. அகப்பொருட் கோவை; a kind of love poem. "நற்றமிழ்க் கோவை யுரைசெய்த" (பிரமோத். கடவுள். 8). 6. பழையதொரு பொன் நாணயம். (I.M.P. N.A.594); an ancient gold coin. 7. கொடி வகை; a common creeper of the hedges. "கோவையங் கனிநே ரென்ன" (திருச்செந்.பு.8:56). 8. படர்கொடிவகை (பதார்த்த.421); a climbing shrub.

ம. கோவ; தெ. க்ரோவ; து. கோபெ.

[கோ → கோவை.]

**கோவைக்கலித்துறை** *kōvai-k-kali-t-tuṟai*, பெ.(n.) ***கட்டளைக் கலித்துறை*** பார்க்க (வீரசோ. யாப். 18, உரை); see *kaṭṭaḷai-k-kali-t-tuṟai.*

[கோவை + கலித்துறை.]

**கோவைக்காய்** *kōvai-k-kāy*, பெ.(n.) ***கோவை*** பார்க்க; see *kōvai* (சா.அக.).

[கோவை + காய்.]

**கோவைக்காய்வற்றல்** *kōvai-k-kāy-vaṟṟal*, பெ.(n.) பச்சைக் கோவைக்காயை அறுத்துக் காயவைத்து எண்ணெயிலிட்டு வறுத்த பண்டம்; dried pieces of green caper which are sliced and fried in gingelly oil (சா.அக.).

[கோவை + காய் + வற்றல்.]

**கோவைக்கிழங்கு** *kōvai-k-kiḻaṅgu*, பெ.(n.) 1. ***கோவை***[3] பார்க்க; see *kōvai.* 2. கொல்லன் கோவைக்கிழங்கு; root of Brahminy kite caper. 3. கோவை வள்ளிக்கிழங்கு; Goa potato; Goa yam (சா.அக.).

[கோவை + கிழங்கு.]

**கோவைக்கீச்சான்** *kōvai-k-kīccāṉ*, பெ.(n.) கீச்சான்; a kind of sea-fish.

[கோவை + கீச்சான்.]

**கோவைக்கீரை** *kōvai-k-kīrai*, பெ.(n.) கோவை யிலை; leaves of Indian caper.

[கோவை + கீரை.]

**கோவைச்சருக்கரை** *kōvai-c-carukkarai*, பெ.(n.) கோவாநாட்டுச் சருக்கரை; Goa sugar (சா.அக.).

[கோவை + சருக்கரை.]

**கோவைசியர்** *kō-vaiśiyar*, பெ.(n.) ஆநிரை புரந்து வாபம் வணிக வகையர்; a class of merchants whose professions were cattle raising and agriculture.

மறுவ. கோவணிகர்.

[கோ + வைசியர் (வணிகர்).]

வைசியன் என்னும் சொல் பலவிடங்களுக்குச் சென்று பொருள்களை விற்கும் வணிகனைக் குறித்தது. *vis* என்னும் வடமொழிச்சொல் புகுதலையும் குடியிருத்தலையும் குறிக்கும். உழவுத் தொழிலோடு கால்நடை மேய்த்து விற்கும் தொழில் கொண்டோர் கோவைசியர் என்றும் உழவுத் தொழிலும் வணிகமும் செய்தோர் பூவைசியர் என்றும் வணிகம்மட்டும் செய்தோர் தனவைசியர் என்றும் அறியப்பட்டனர். கோவணிகன் எனின் முற்றுந் தமிழாம்.

**கோவைசூரி** *kō-vaiśūri*, பெ.(n.) மாட்டு வைசூரி; cow pox.

[கோ + வைசூரி.]

**கோவைத்தண்டு** *kōvai-t-taṇḍu*, பெ.(n.) கோவைச்செடியின் தண்டு; leaf-stalk of Indian caper (சா.அக.).

[கோவை + தண்டு.]

**கோவைத்தியன்** *kō-vaittiyaṉ*, பெ.(n.) கால்நடை மருத்துவர்; a veterinary doctor who has specialised in the treatment of cows (சா.அக.).

மறுவ. கோமருத்துவன்.

[கோ + வைத்தியன்.]

கோமருத்துவன் எனின் முற்றுந்தமிழாம்.

**கோவைத்துறை** *kōvai-t-tuṟai*, பெ.(n.) கோவை நூலில் அமைந்த அகப்பொருட்டுறை; theme of the stanzas in a Kovai poem. களவியலால் நடக்கும் ஒழுக்கத்தைக் கூறுவது.

[கோவை + துறை.]

**கோவைப்பழம்** *kōvai-p-paḻam*, பெ.(n.) கனிந்த சிவப்புக் கொவ்வைப்பழம்; red ripe caper fruit. It is eaten raw.

[கோவை + பழம்.]

**கோவையாணி** *kōvai-y-āṇi*, பெ.(n.) கைமரங்களை இணைக்கும் முளை (பிணை யலாணி) (வின்.); pegs for jointing rafters together.

[கோவை + ஆணி.]

**கோவைவள்ளி** *kōvai-valli*, பெ.(n.) சிறுவள்ளிக் கிழங்கு; Goa yam; Goa potato (சா.அக.).

*[கோவை + வள்ளி]*

**கோழ்** *kōḻ*, பெ.எ.(adj.) 1. வழுவழுப்பான; slippery, oily. *"வெண்பொனாற் கோழரை குயின்ற பூகம்" (திருவிளை.திருமணப்.65).* 2. செழிப்பான; thriving luxurious, rich. *"கோழிலை வாழை" (அகநா.2).* 3. கொழுப்பான; fat. *"கோழிளந் தகர்" (திருவிளை. நகரப்.79).*

*[குல் → குள் → குழ் → கோழ்.]*

**கோழக்கெளுத்தி** *kōḻa-k-keḷutti*, பெ.(n.) கூழக் கெளுத்தி எனும் ஆற்று மீன்; a kind of river fish.

*[கூழை → கோழ + கெளுத்தி]*

**கோழகம்** *kōḻagam*, பெ.(n.) ***கோழம்*** பார்க்க; see *kōḻam.*

*[கோழ் → கோழம் → கோழகம்.]*

**கோழகூரொட்டு** *kōḻa-kūr-oṭṭu*, பெ.(n.) மரப்பலகைகள் கழன்றுவராமல் இணைக்கும் இணைப்பு; a kind of joint in wooden planks.

*[கோழ + கூர் + ஒட்டு.]*

**கோழம்** *kōḻam*, பெ.(n.) 1. சங்கு செய்நஞ்சு; a mineral poison (யாழ்.அக.). 2. ஒரு கனிமம்; an ore.

*[கோழ் → கோழம்.]*

**கோழம்கொடுமலை** *kōḻam-koḍumalai*, பெ.(n.) வெண்கலமலை; a mountain containing bell-metal ore (சா.அக.).

*[கோழம் + கொடுமலை.]*

**கோழம்பம்** *kōḻambam*, பெ.(n.) குழப்பம்; confusion, tumult. *"கொடீ ராகிற் கோழம்பமே" (திவ். பெரியாழ்.3.4:5).*

*[குழப்பம் → கோழப்பம் → கோழம்பம்(கொ.வ.).]*

**கோழயர்** *kōḻayar*, பெ.(n.) கள்ளர்குடிப் பட்டப் பெயர்களுள் ஒன்று (கள்ளர் சரித்.பக்.98); a caste title of *Kaḷḷars.*

*[கோழியர் → கோழயர்.]*

**கோழரை** *kōḻ-arai*, பெ.(n.) வழுவழுப்பான மரத்தினடி; slippery tree trunk. *"கோழரை குயின்ற பூகம்" (திருவிளை. திருமணப். 65).*

*[கொழுமை + அரை – கொழரை → கோழரை.]*

**கோழி**[1] *kōḻi*, பெ.(n.) வீட்டிலோ அல்லது பண்ணையிலோ முட்டைக்காகவும் இறைச்சிக்காகவும் வளர்க்கப்படும் அதிக உயரம் பறக்காத பறவை; gallinaceous fowl. *"குப்பை கிளைப் போவாக் கோழிபோல்" (நாலடி. 341).*

**மறுவ.** குக்குடம்.

**ம.** கோழி; **க.** கோழி, கோளி; **தெ.** கோடி; **து.** கோரி; **பட.** கோயி; **கோத.** கொய்; **துட.** க்விட்ய்; **குட.** கோளி; **கோண்., கொலா., நா., பர். கோர்., கூய்.** கொசு; **குவி.** கொக்கோதி; **குரு.** கோலி.

*[உள் → உளு = துளைக்கும் புழு. உளுத்தல் = புழு, மரத்தைத் துளைத்தல். உளு → உழு → உழுதல் = நிலத்தைக் கீறுதல். குள் → குழி → குழை → குடை. குடைதல் = துளைத்தல். குழி → கொழு → கொழுது → கோது. கோதுதல் = குடைதல். கொழு = நிலத்தைத் துளைக்கும் ஏருசி. கொழு → கோழி = நிலத்தைக் கிளைக்கும் பறவை (தமிழ் வரலாறு, 82). கொழுதுதல் = குப்பை கிளறுதல். கொழு → கோழு → கோழி.]*

கோழிவகை: 1. அறுபதாங்கோழி, 2. கருங் கோழி, 3. கானாங்கோழி, 4. சேவற்கோழி, 5. வான் கோழி, 6. பெட்டைக்கோழி, 7. காட்டுக்கோழி, 8. நீர்க் கோழி, 9. நெருப்புக்கோழி, 10. சம்பங்கோழி, 11. தாமரைக்கோழி, 12. கின்னிக் கோழி, 13. குளத்துக் கோழி, 14. வரகுக் கோழி, 15. நாமக்கோழி.

**கோழி**[2] *kōḻi*, பெ.(n.) 1. கோழி யானையை வென்றதாகக் கூறப்படுமிடமும் சோழன் தலைநகருமான உறையூர்; Uṟaiyūr, a town near *Tirucciṟāppaḷḷi*, once the capital of the *Cōḻās*, where a cock is said to have conquered an elephant. *'கோழி யுயர்நிலை மாடத்து' (புறநா.67:8).*

**மறுவ.** உறையூர், உறந்தை, கோழியூர்.

*[கோழியூர் → கோழி.]*

**கோழி**[3] *kōḻi*, பெ.(n.) விட்டில் பூச்சி; moth. *"விளக்கத்திற் கோழி போன்றேன்" (தேவா. 523:5).*

**மறுவ.** விட்டில்.

*[கோழி[1] → கோழி[3].]*

கோழிப்போரில் இறப்புக்கு அஞ்சாமல் போரிட்டு மடியும் சேவலைப் போல் தீயில் அஞ்சாமல் விழுந்து சாகும் இயல்பு நோக்கி விட்டிற்பூச்சி கோழி எனப்பட்டது.

**கோழி**[4] *kōḻi*, பெ.(n.) 1. ***கோழியவரை*** பார்க்க; see *kōḻi-y-avarai.* 2. வெருகங்கிழங்கு (மலை.); a tuberous-rooted herb. 3. பன்றிமோந்தான் கிழங்கு (மலை.); water -nut. 4. இடலை (இ.வ.); Indian wild olive.

*[கோழி[1] → கோழி[4].]*

# கோழி வகைகள்


வான் கோழி


கருங்கோழி


கானாங்கோழி


வரகுக் கோழி


சம்பங்கோழி


நீர்க்கோழி

**கோழி**[5] *kōḻi,* பெ.(n.) 1. விலங்குகளில் சிலவற்றின் பெண்ணினத்தைச் சுட்டும் உவம ஆகுபெயர்; a word denoting the feminine gender among certain animals and non-human objects. கோழிக்குதிரை, கோழிக்கழுதை (பெட்டைக் குதிரை, பெட்டைக் கழுதை).

*[கீள் – கீழி – கேழி – கோழி.]*

முட்டையிடும் தன்மையால் பெண்மையுணர்த்திய இச்சொல் கோழி (பெண் குதிரை) இந்தியில் Gōḍa எனத்திரிந்தது. மரஞ்செடிவகைகளில் கொழிஞ்சி, ஆலமரம், அத்தி, பெருங்குறிஞ்சா, திப்பிலி ஆகியவற்றுக்கு ஆகுபெயராயிற்று. ஆண் விலங்குகள் சேவல் எனப்படும் ''குதிரையுள் ஆணினைச் சேவல் என்றலும்'' (தொல். பொருள்.).

**கோழிக்கண்** *kōḻi-k-kaṇ,* பெ.(n.) குன்றிமணி; jeweller's bead.

*[கோழி + கண்.]*

கோழியின் கண்போன்ற வடிவத்தை ஒத்திருந்தமையால் குன்றிமணி இப் பெயர் பெற்றதாம்

**கோழிக்கரணம்** *kōḻi-k-karaṇam,* பெ.(n.) பத்திரை (யாழ்.அக.); a division of time.

*[கோழி + கரணம்.]*

**கோழிக்கல்** *kōḻi-k-kal,* பெ.(n.) கற்களையும் இரும்பையும் மெருகிட உதவும் ஒருவகைக் கல்; a kind of stone used to polish stone and steel.

*[கோழி + கல்.]*

**கோழிக்காசிரைக்கீரை** *kōḻi-k-kāširai-k-kīrai,* பெ.(n.) 1. உமரிக்கீரை; sea blite. 2. ***கோழிப் பசலை*** பார்க்க; see *kōḻi-p-pašalai* (சா.அக.).

*[கோழி + காசிரை + கீரை.]*

**கோழிக்காடை** *kōḻi-k-kāḍai,* பெ.(n.) ஒருவகைக் காடை; the southern grey partridge.


கோழிக்காடை

ம. கோழிக்காட.

*[கோழி + காடை.]*

**கோழிக்காமம்** *kōḻi-k-kāmam,* பெ.(n.) ***கோழிப் புணர்ச்சி*** பார்க்க; see *kōḻi-p-puṇarcci.*

*[கோழி + காமம்.]*

**கோழிக்காரம்**[1] *kōḻi-k-kāram,* பெ.(n.) 1. கோழி மலங்கூட்டிச் செய்த மருந்துவகை; medicine in which fowl-dung is used. 2. மருந்தாக உட்கொள்ளும் கோழியாணம் (யாழ்.அக.); medicinal broth of boiled fowl. 3. கஞ்சாப்பயிருக்கு உரமாகும் கோழியெரு (வின்.); fowl-dung generally used in manuring soil for the ganja plant.

*[கோழி + காரம்.]*

**கோழிக்காரம்**[2] *kōḻi-k-kāram,* பெ.(n.) கோழிகளின் காய்ந்த கழிவு (மலம்); dried fowl-dung.

*[கோழி + காரம்.]*

**கோழிக்கால்**[1] *kōḻi-k-kāl,* பெ.(n.) கொடியரசு; wild pipal.

*[கோழி + கால்.]*

**கோழிக்கால்**[2] *kōḻi-k-kāl,* பெ.(n.) கோழியின்கால், கோழிக்கால் போன்ற அடையாளக் குறிவகை; cross-mark shaped like x, as resembling a fowl's foot.

ம. கோழிக்கால்.

*[கோழி + கால்.]*

**கோழிக்காற்புல்** *kōḻi-k-kāṟ-pul,* பெ.(n.) புல்வகை (வின்.); Deccan grass.

*[கோழி + கால் + புல்.]*

**கோழிக்காற்பூடு** *kōḻi-k-kāṟ-pūḍu,* பெ.(n.) குமரகன்பூடு; a plant, the leaves of which resemble the fowl's leg (சா.அக.).

*[கோழி + கால் + பூடு.]*

**கோழிக்கிரணிகம்** *kōḻi-k-kiraṇigam,* பெ.(n.) ***கோழித்தலைக் கந்தகம்*** பார்க்க; see *kōḻi-t-talai-k-kandagam.*

*[கோழி + கிரணிகம்.]*

**கோழிக்கிழங்கு** *kōḻi-k-kiḻaṅgu,* பெ.(n.) வெருகன் கிழங்கு; bulbous root of வெருகு (சா.அக.).

*[கோழி + கிழங்கு.]*

**கோழிக்கீரணி** *kōḻi-k-kīraṇi,* பெ.(n.) மாந்தப்புல்; citronella grass.

மறுவ. காவட்டம் புல்.

*[கோழி + கீரணி.]*

**கோழிக்கீரை** *kōḻi-k-kīrai,* பெ.(n.) பருப்புக்கீரை (பதார்த்த. 604); common purslane.

ம. கோழிச்சீர; க. கோளிகோழி; தெ. தோளிகூர.

[கோழி + கீரை.]

**கோழிக்குஞ்சாணம்** *kōḻi-k-kuñjāṇam,* பெ.(n.) கோழிக்குஞ்சுச் சாறு; chicken-broth (சா.அக.).

[கோழி + குஞ்சு + ஆணம்.]

**கோழிக்குஞ்சு** *kōḻi-k-kuñju,* பெ.(n.) இளங்கோழி; chicken (சா.அக.).

ம. கோழிக்குஞ்ஞு.

[கோழி + குஞ்சு]

**கோழிக்குடாப்பு** *kōḻi-k-kuḍāppu,* பெ.(n.) ***கோழிக்கூடு*** பார்க்க; see *kōḻi-k-kūḍu.*

[கோழி + குடாப்பு.]

**கோழிக்குடி** *kōḻi-k-kuḍi,* பெ.(n.) அசோகுமரம்; Indian mast tree.

[கோழி + குடி.]

**கோழிக்குடை** *kōḻi-k-kuḍai,* பெ.(n.) குடைமேற் குடை; a plant (சா.அக.).

[கோழி + குடை.]

**கோழிக்குத்தி** *kōḻi-k-kutti,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Thanjavore Dt.

[கோழி + குத்தி.]

**கோழிக்குரல்** *kōḻi-k-kural,* பெ.(n.) ***கோழிகூவு நேரம்*** பார்க்க (யாழ்.அக.); see *kōḻi-kūvu-nēram.*

[கோழி + குரல்.]

**கோழிக்குறும்பான்** *kōḻi-k-kuṟumbāṉ,* பெ.(n.) ***கோழிக்கீரை*** பார்க்க; see *kōḻi-k-kīrai.*

[கோழி + குறும்பான்.]

**கோழிக்குறுமா** *kōḻi-k-kuṟuma,* பெ.(n.) கோழிக் கறியுடன் பச்சை மிளகாய் மசாலையிட்டு அணியமாக்கப்படும் குழம்பு; a kind of stew prepared with the aid of green chilly and other curry stuffs (சா.அக.).

மறுவ. கோழிச்சாறு.

[கோழி + குறுமா.]

**கோழிக்குறுமான்** *kōḻi-k-kuṟumāṉ,* பெ.(n.) ***கோழிக்கீரை*** பார்க்க; see *kōḻi-k-kīrai* (சா.அக.).

மறுவ. கோழிக்குறும்பான்.

[கோழி + குறுமான்.]

**கோழிக்கூடு** *kōḻi-k-kūḍu,* பெ.(n.) கோழியை அடைத்து வைக்குமிடம் (உ.வ.); hen-coop, fowl-house.

ம. கோழிக்கூடு; பட. கோயிகூடு.

[கோழி + கூடு.]

**கோழிக்கூடுபழம்** *kōḻi-k-kūḍu-paḻam,* பெ.(n.) கோழிக்கோட்டில் விளையும் வாழைப்பழம்; a kind of plantain fruit grown in *Kōḻi-k-kōḍu* (சா.அக.).

[கோழிக்கோடு → கோழிக்கூடு + பழம்.]

**கோழிக்கூண்டு** *kōḻi-k-kūṇḍu,* பெ.(n.) **கோழிக் கூடு** பார்க்க; see *kōḻi-k-kūḍu.*

[கோழி + கூண்டு.]

**கோழிக்கொடி** *kōḻi-k-koḍi,* பெ.(n.) ***கோழியவரை*** பார்க்க; see *kōḻi-y-avarai.*

[கோழி + கொடி.]

**கோழிக்கொடியோன்** *kōḻi-k-kōḍiyōṉ,* பெ.(n.) 1. கோழியைக் கொடியிற் கொண்ட முருகக்கடவுள்; one having a cock on his banner. 2. ஐயனார் (திவா.); Aiyaṉār.

ம. கோழிக்கொடியோன்.

[கோழி + கொடியோன்.]

**கோழிக்கொண்டை** *kōḻi-k-koṇḍai,* பெ.(n.) 1. சேவற் சூட்டுப்பண்ணைச் செடி (மலை.); cockscomb, ornamental shrub. 2. கோழியின் தலையில் வளரும் தசைப்பகுதி; a muscle part grown on the top of the head of a cock.

[கோழி + கொண்டை.]

**கோழிக்கொண்டைப்பூ** *kōḻi-k-koṇḍai-p-pū,* பெ.(n.) கோழியின் கொண்டையின் வடிவினதாக வுள்ள மலர்; a flower resembling the crest of a cock.

[கோழி + கொண்டை + பூ.]

**கோழிகவிழ்க்கும் நேரம்** *kōḻi-kaviḻkkum-nēram,* பெ.(n.) மாலைப்பொழுது (அந்தி.); the time when poultry are shut up (சா.அக.).

[கோழி + கவிழ்க்கும் + நேரம்.]

**கோழிகிண்டு-தல்** *kōḻi-kiṇḍu-,* 5 செ.கு.வி. (v.i.) உருத்தெரியாதபடி எழுதுதல் (உ.வ.); to scrawl, scribble.

# கோழி வகைகள்



நெருப்புக்கோழி



குளத்துக்கோழி



தாமரைக்கோழி



கிண்ணிக்கோழி





காட்டுக்கோழி



நாமக் கோழி

மறுவ. கோழிக்கால் கிறுக்கல்.

*[கோழி + கிண்டு.]*

**கோழிகூவல்** *kōḻi-kūval,* பெ.(n.) ***கோழிகூவு நேரம்*** பார்க்க; see *kōḻi-kūvu-nēram.*

*[கோழி + கூவல்.]*

**கோழிகூவுநேரம்** *kōḻi-kūvu-nēram,* பெ.(n.) விடியற் காலம் (உ.வ.); day break, as the time of cock-crowing.

*[கோழி + கூவு + நேரம்.]*

**கோழிச்சம்** *kōḻiccam,* பெ.(n.) ***கோழிக்காரம்*** பார்க்க; see *kōḻi-k-kāram* (சா.அக.).

*[கோழி + எச்சம் = கோழியெச்சம் → கோழிச்சம்.]*

**கோழிச்சாரம்** *kōḻi-c-cāram,* பெ.(n.) பெரு நன்னாரி; big sarsaparilla (சா.அக.).

*[கோழி + சாரம்.]*

**கோழிச்சாவல்** *kōḻi-c-cāval,* பெ.(n.) ***கோழிச் சேவல்*** பார்க்க; see *kōḻi-c-cēval* (சா.அக.).

*[கோழி + சாவல். சேவல் → சாவல் (கொ.வ.)]*

**கோழிச்சாறு** *kōḻi-c-cāṟu,* பெ.(n.) 1. கோழி ஆணம்; fowl soup. 2. கோழிக்குஞ்சு ஆணம்; chicken - broth (சா.அக.).

*[கோழி + சாறு.]*

**கோழிச்சிலும்பான்** *kōḻi-c-cilumbāṉ,* பெ.(n.) சிறுசிலும்பான் செடி; an unknown plant (சா.அக.).

*[கோழி + சிறும்பான்.]*

**கோழிச்சூடன்** *kōḻi-c-cūḍaṉ,* பெ.(n.) ***கோழிக் கொண்டை*** பார்க்க; see *kōḻi-k-koṇḍai.*

*[கோழி + சூடன்.]*

**கோழிச்சேபகம்** *kōḻi-c-cēbagam,* பெ.(n.) ***கோழிக்கிரணி*** பார்க்க; see *kōḻi-k-kiraṇi* (சா.அக.).

*[கோழி + சேபகம்.]*

**கோழிச்சேவல்** *kōḻi-c-cēval,* பெ.(n.) ஆண்கோழி; cock. *"கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்" (சிலப். 14:10).*

*[கோழி + சேவல். சேவல் →சாவல் (கொ.வ.)]*

**கோழித்தலைக்கந்தகம்** *kōḻi-t-talai-k-kandagam,* பெ.(n.) சிவந்த கந்தகம்; red sulphur.

*[கோழி + தலை + கந்தகம்.]*

இது சேவல் கொண்டையைப்போல் சிவப்பாக இருக்கும். கந்தகம் சேர்ந்த ஒருமாழை [உலோகம்]. இதை வாதமுறையில் பொன் வெள்ளி செய்யப் பயன்படுத்துகின்றனர் [சா.அக.].

**கோழித்தலைக்கெந்தி** *kōḻi-t-talai-k-kendi,* பெ.(n.) தமிழ் முறைப்படி 32 வைப்புச் செய்நஞ்சுகளி லொன்று; according to Tamil medicine it is a prepared arsenic which is classified as one of the 32 kinds of synthetic poisons (சா.அக.).

*[கோழி + தலை + கெந்தி.]*

**கோழித்தலைச்சூடன்** *kōḻi-t-talai-c-cūḍaṉ,* பெ.(n.) ***கோழித்தலைக் கந்தகம்*** பார்க்க; see *kōḻi-t-talai-k-kandagam* (சா.அக.).

*[கோழி + தலை + சூடன்.]*

**கோழித்தாடை** *kōḻi-t-tāḍai,* பெ.(n.) கோழித் தொண்டையின்கீழ்த் தொங்கும் சதை; the fleshy excrescence hanging under the throat of the domestic fowl, wattle (சா.அக.).

*[கோழி + தாடை.]*

**கோழித்தூக்கம்** *kōḻi-t-tūkkam,* பெ.(n.) கோழியைப்போல் அடிக்கடி உறக்கம் கொண் டெழும் தூக்கம்; light sleep enabling one to wake up frequently like a cock even on slight disturbance (சா.அக.).

*[கோழி + தூக்கம்.]*

**கோழிநூல்** *kōḻi-nūl,* பெ.(n.) கோழிகளின் போர்த் தன்மையைக் கூறும் நூல் (பு.வெ. 12, வென்றிப். 6,உரை); a book describing the methods of cock-fight.

*[கோழி + நூல்.]*

**கோழிநெஞ்சு** *kōḻi-neñju,* பெ.(n.) 1. கோழிக் குடையது போன்ற நெஞ்சு; pigeon breast. 2. அச்சத்தால் நடுங்கும் மனம்; timid or agitated heart, chicken heart.

*[கோழி + நெஞ்சு.]*

**கோழிப்பசரைக்கீரை** *kōḻi-p-paśarai-k-kīrai,* பெ.(n.) ***கோழிப்பசளை*** பார்க்க; see *kōḻi-p-paśaḷai.*

*[கோழிப்பசளைக்கீரை → கோழிப்பசரை (கொ.வ.) + கீரை.]*

**கோழிப்பசளை** *kōḻi-p-paśaḷai,* பெ.(n.) உமரிக் கீரை (L.); sea-blite.

*[கோழி + பசளை.]*

**கோழிப்பறவை** *kōḻi-p-paṟavai,* பெ.(n.) கோழி பறக்கும் தொலைவு (யாழ்ப்.); short distance, distance, of a fowl's flight.

*[கோழி + பறவை.]*

**கோழிப்பாம்பு** *kōḻi-p-pāmbu,* பெ.(n.) குக்குடப் பாம்பு (மேருமந்.479, உரை); winged serpent.

*[கோழி + பாம்பு.]*

**கோழிப்பிந்து** *kōḻi-p-pindu,* பெ.(n.) கோழியின் பித்தப்பை; the gall bladder of fowl (சா.அக.).

*[கோழி + (பித்து) பிந்து.]*

**கோழிப்பீ** *kōḻi-p-pī,* பெ.(n.) கோழியெச்சம்; fowl's dung, droppings of a fowl (சா.அக.).

*[கோழி + பீ.]*

**கோழிப்புடம்** *kōḻi-p-puḍam,* பெ.(n.) குக்குடபுடம் (மூ.அ.); a mode of calcination in preparing medicine.

*[கோழி + புடம்.]*

**கோழிப்புணர்ச்சி** *kōḻi-p-puṇarcci,* பெ.(n.) சேர்க்கையில் நீடித்து நிற்காமல் எளிதில் விந்து வெளிப்படும் புணர்ச்சி; sexual intercourse not sustainable, but attended with quick discharge of semen (சா.அக.).

*[கோழி + புணர்ச்சி.]*

**கோழிப்புரை** *kōḻi-p-purai,* பெ.(n.) கோழிகளை அடைத்துவைக்கும் கூண்டு; enclosure for domestic fowls as of chicken pen.

*[கோழி + புரை.]*

**கோழிப்புல்** *kōḻi-p-pul,* பெ.(n.) ***கோழிக்காற்புல்*** பார்க்க; see *kōḻi-k-kāṟ-pul.*

*[கோழி + புல்.]*

**கோழிப்பூ** *kōḻi-p-pū,* பெ.(n.) கோழியின் தலைச்சூட்டு; cock's-comb.

*[கோழி + பூ.]*

**கோழிப்பூண்டு** *kōḻi-p-pūṇḍu,* பெ.(n.) ***கோழியவரை*** பார்க்க; see *kōḻi-y-avarai* (சா.அக.).

*[கோழி + பூண்டு.]*

**கோழிப்போகம்** *kōḻi-p-pōgam,* பெ.(n.) ***கோழிப்புணர்ச்சி*** பார்க்க; see *kōḻi-p-puṇarcci* (சா.அக.).

*[கோழி + போகம்.]*

**கோழிப்போர்**[1] *kōḻi-p-pōr,* பெ.(n.) சேவற் சண்டை; cock fight.



கோழிப்போர்

மறுவ. சேவற்போர், சேவற்சண்டை, கோழிச்சண்டை.

*[கோழி + போர்.]*

**கோழிப்போர்**[2] *kōḻi-p-pōr,* பெ.(n.) உறையூரில் நடந்த சண்டை; battle at Uraiyur. *"ராஜராஜதேவர் கோழிப்போரில் ஊத்தை அட்டாமல் என்று கடவ திருவிளக்குக்குத் தந்த ஆட்டில் அடுத்த ஆடு நாற்பத்து நாலும் இவநெய் வைத்த காசில் குடுத்த காசு"* (தெ.இ.கல்.தொ.II. கல்.24, பகுதி–1. வரி.5).

*[கோழி (உறையூர்) + போர். கோழியூர்போர் → கோழிப்போர்.]*

**கோழிபற்பம்** *kōḻi-paṟpam,* பெ.(n.) கோழிப்புடமிட் டெடுத்த பற்பம்; white powder obtained by calcining egg (சா.அக.).

*[கோழி + பற்பம்.]*

**கோழிமருதை** *kōḻi-marudai,* பெ.(n.) கருமருது; black marutham or Negroe's olive (சா.அக.).

*[கோழி + மருதை.]*

**கோழிமன்** *kōḻi-maṉ,* பெ.(n.) உறையூர் அரசன்; king of *Uṟaiyūr. "கோழிமன் தொடுகழல் வீர சோழன்"* (விசயராசேந்திரன் மெய்க்கீர்த்தி).

*[கோழி + மன்.]*

**கோழிமீன்** *kōḻi-mīṉ,* பெ.(n.) பதினெட்டங்குல நீளமும் கருநிறமுமுள்ள கடல்மீன்வகை; sturgeon,


கோழிமீன்

blackfish - brown, attaining 18 in. in length.

[கோழி + மீன்.]

**கோழிமீன்கல்** *kōḻi-mīṉ-kal,* பெ.(n.) கோழிமீன் மேயும் கடலடிக்கல்; a rock in the sea where the small fishes are sheltered.

[கோழி + மீன் + கல்.]

**கோழிமுட்டை** *kōḻi-muṭṭai,* பெ.(n.) 1. கோழியின் முட்டை; hen's egg. 2. பாழ் (பூச்சியம்); cipher.

[கோழி + முட்டை.]

**கோழிமுட்டைத்தைலம்** *kōḻi-muṭṭai-t-tailam,* பெ.(n.) மாந்தம், வலிப்பு முதலியவற்றுக்கு மருந்தாகக் கோழிமுட்டையிலிருந்து இறக்கும் நெய் (வின்.); medicinal oil extracted from hen's eggs, used for fits, spasms etc.,

[கோழி + முட்டை + தைலம்.]

**கோழிமுதுக்கெண்டை** *kōḻi-mudu-k-keṇḍai,* பெ.(n.) ஒருவகைக் கெண்டைமீன்; a kind of fish.

[கோழிமுது + கெண்டை.]

**கோழிமுள்** *kōḻi-muḷ,* பெ.(n.) கோழிக்காலிலுள்ள கூரிய நகம்; hooked claws of a cock.

[கோழி + முள்.]

**கோழிமுள்ளி** *kōḻi-muḷḷi,* பெ.(n.) கழுதைமுள்ளி; holly-leaved bear's breech.

[கோழி + முள்ளி.]

**கோழிமுளையான்** *kōḻi-muḷaiyāṉ,* பெ.(n.) ஒரு வகைப் பூடு (யாழ்.அக.); large-flowered purslane.

[கோழி + முளையான்.]

**கோழியடி-த்தல்** *kōḻi-y-aḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) கோழியைக் கொல்லுதல்; to kill a fowl.

[கோழி + அடி-.]

புலால் உண்பவர் ஆடு, கோழி முதலிய உயிர் (பிராணி)களைக் கொல்வதை ஆடுகொல்லுதல், கோழி கொல்லுதல் என்னாது ஆடடித்தல், கோழியடித்தல் எனக் கூறும் வழக்கு மக்கள் குறிஞ்சி நிலையில் விலங்குகளையும் பறவைகளையும் கல்லாலும் வணரி (வளைதடி)யாலும் அடித்துக் கொன்றதை நினைவூட்டும் சொல்.கட்.க.18.

**கோழியவரை** *kōḻi-y-avarai,* பெ. (n.) 1. அவரை வகை (பதார்த்த.572); sword bean. 2. பெருங் கோழியவரைக் கொடி (A.); West Indian seaside-bean.

[கோழி + அவரை.]

**கோழியாகக்கூவு[1]-தல்** *kōḻi-y-āga-k-kūvu-,* 5 செ.கு.வி. (v.i.) ஓயாமல் அழைத்தல்; continuous call. *'கோழியாகக் கூவுகிறேன் என்னவென்று கேட்டாயா' (உ.வ.).*

[கோழி + ஆக + கூவு.]

**கோழியாகக்கூவு[2]-தல்** *kōḻi-y-āga-k-kūvu-,* 5 செ.கு.வி. (v.i.) மன்றாடுதல்; to crow like a cock, to entreat, importune.

[கோழி + ஆக + கூவு.]

**கோழியாணம்** *kōḻi-y-āṇam,* பெ.(n.) கோழிச்சாறு (வின்.); chicken broth.

[கோழி + ஆணம்.]

**கோழியுள்ளான்** *kōḻi-y-uḷḷāṉ,* பெ.(n.) ஒருவகை உள்ளான் (வின்.); jack snipe.


கோழியுள்ளான்

[கோழி + உள்ளான்.]

**கோழியூர்** *kōḻi-y-ūr,* பெ.(n.) உறையூரின் மறுபெயர்; another name of the *Cōḻās* capital Uṟaiyūr.

மறுவ. உறையூர்.

*[கோழி + ஊர்.]*

சோழன் தன் தலைநகர் நிறுவும் பொருட்டு யானையுடன் புறப்பட்டான். வழியில் கோழியொன்று யானையைத் தாக்கியது. யானை புறங்காட்டி நின்றது. கோழியின் நினைவாக அரசன் தன் தலைநகரை அவ்விடத்து நிறுவி அவ்வூருக்குக் கோழியூர் எனப் பெயரிட்டழைத்தான் என்று கூறுகின்றனர். இது பொருத்தமன்று.

மதங்கொண்ட யானையின் தலைமீது கோழி பலமுறை மிதித்தால் மதம் அடங்கும். இவ்வாறு யானைக்கு அஞ்சிய கோழிகள் யானையின் தலை மீது பறந்து மிதித்து மதம் அடக்கிய செய்தி, கோழியூர் எனப்பெயர் பெறக் காரணமாயிற்று. வட்டக்காட்சி (Circus) நடத்துவோர் யானை மதங்கொள்ளும்போது அடக்குவதற்கு கோழிகளை உடன் கொண்டுசெல்வது வழக்கம்.

**கோழியூர்கிழார் மகனார் செழியனார்** *kōḻiyūr-kiḻār-maganār-ceḻiyanār,* பெ.(n.) ஒரு சங்கப் புலவர்; a Sangam poet.

*[கோழியூர் + கிழார் + மகனார் + செழியனார்.]*

நற்றிணையில் 380ஆம் பாடலைப் பாடியவர் ஊரால் பெயர் பெற்றவர்.

**கோழிவிழுங்கல்** *kōḻi-viḻuṅgal,* பெ.(n.) நாணய வகை (பணவிடு.138); a coin.

*[கோழி + விழுங்கல்.]*

**கோழிவென்றி** *kōḻi-venṟi,* பெ.(n.) சேவலின் போர் வெற்றியைக் கூறும் புறத்துறை (பு.வெ.12, வென்றிப்.6); theme describing the victory of a cock in cock-fight.

*[கோழி + வென்றி.]*

**கோழிவேந்தன்** *kōḻi-vēndaṉ,* பெ.(n.) 1. சோழ மன்னர்களின் பட்டப்பெயர்; title of *Cōḻa* kings. 2. சோழன்; *Cōḻa* as the king of *Uṟaiyūr.*

*[கோழியூர் → கோழி + வேந்தன்.]*

உறையூரைத் தலைநகராகக் கொண்டு அரசு புரிந்த மன்னனுக்குக் கோழி வேந்தன் எனப் பெயர் வழங்கலாயிற்று.

**கோழை** *kōḻai,* பெ.(n.) 1. சளி; phlegm, mucus. *"கோழை மிடறாக" (தேவா.263:1).* 2. உமிழ்நீர்; saliva. கோழைவடிதல் (உ.வ.). 3. மனத் திட்பமின்மை; bashfulness, timidity. *"கோழை மனத்தை" (திருப்பு. 366).* 4. இரக்கம் (உ.வ.); tender-heartedness. 5. மனத்திடமில்லாதவன்; bashful, timid person. *'கோழைகளா யிருப்பாரை' (ஈடு.9.3:6).* 6. சிறுபிள்ளை; child. *"பருவமுறாக் கோழை யறியுமோ" (விநாயகபு.72:132).*

ம. கோழ; க. கோளே; தெ. கோட்ஆடு (திகைப்படைதல்).

*[குழ → கொழு → கோழி.]*

**கோழைக்கட்டு** *kōḻai-k-kaṭṭu,* பெ.(n.) மூச்சுக் குழலிற் கட்டும் சளித் திரட்டு; accumulation of phlegm in the bronchial tubes.

*[கோழை + கட்டு.]*

**கோழைத்தனம்** *kōḻai-t-taṉam,* பெ.(n.) மனத் திடமின்மை; bashfulness, timidity, cowardice.

*[கோழை + தனம்.]*

**கோழைதீர்-தல்** *kōḻai-tīr-,* 4 செ.கு.வி.(v.i.) மனத்திடம் பெறுதல்; to overcome bashfullness or timidity.

*[கோழை + தீர்.]*

**கோழைபடு-தல்** *kōḻai-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) கீழ்மையடைதல்; to dwindle, decrease. *"மேழிச் செல்வங் கோழைபடாது" (கொ.வே.).*

ம. கோழெப்பெடுக.

*[கோழை + படு-.]*

**கோழைபோக்கி** *kōḻai-pōkki,* பெ.(n.) நறுந்தாளி (சங்.அக.); a fragrant convolvulus.

*[கோழை + போக்கி.]*

**கோழையறுக்குஞ்சூரன்** *kōḻai-y-aṟukkuñ-cūraṉ,* பெ.(n.) திப்பிலி (சங்.அக.); long-pepper.

*[கோழை + அறுக்கும் + சூரன்.]*

**கோழையறுப்பான்** *kōḻai-y-aṟuppāṉ,* பெ.(n.) கோழையைப் போக்கும் பூடு; vegetable expectorant, as loosening phlegm.

*[கோழை + அறுப்பான்.]*

**கோழையன்** *kōḻaiyaṉ,* பெ.(n.) மனத்திடமற்றவன்; bashful or timid person, coward.

*[கோழை + அன்.]*

**கோழையிருமல்** *kōḻai-y-irumal,* பெ.(n.) கோழையால் வரும் இருமல் (யாழ்ப்.); cough occasioned by the accumulation of phlegm.

*[கோழை + இருமல்.]*

**கோழைவிந்து** *kōḻai-vindu,* பெ.(n.) துளசி (மலை.); holy basil.

*[கோழை (மென்மை) + விந்து (பிந்து) - சிறுவடிவினது.]*

**கோள்**[1] *kōḷ,* பெ.(n.) 1. கொள்ளுகை; taking, receiving, accepting, seizing, holding, envelop-

"கோளிரு ளிருக்கை" (பரிபா.4:57). 2. துணிபு; opinion, tenet, creed, decision, determination, conclusion. "மாசற்றார் கோள்" (குறள், 646). 3. மதிப்பு; estimation, appraising, valuation. "தம்மைத்தாங் கொள்வது கோளன்று" (நாலடி, 165). 4. வலிமை (பிங்.); strength, power, ability. 5. தன்மை; quality, nature, character. "யாக்கைக்கோ ளெண்ணார்" (நாலடி.18). 6. பட்டறிவு, நுகர்ச்சி; enjoyment, experience. "என்னாருயிர் கோளுண்டே" (திவ். திருவாய். 9.6:7). 7. குறளை; calumny, aspersion, back-biting, tale-bearing. "கோட்செவிக் குறளை காற்றுட னெருப்பு" (கொ.வே.). 8. பொய் (சூடா.); falsehood. 9. இடையூறு (திவா.); impediment, obstacle, evil, vice. 10. தீமை (திவா.); 11. கொலை; killing, murder. "கோணினைக் குறித்து வந்தான்" (சீவக. 264). 12. பாம்பு (சீவக. 320, உரை); serpent. 13. நஞ்சு; poison. 14. கருங்கோள் (இராகு); ascending node. "கோள்வாய் மதியம் நெடியான் விடுத்தாங்கு" (சீவக.454). 15. வானமண்டலத்து ஓர் உறுப்பு; planet. "எல்லாக் கோளு நல்வழி நோக்க" (பெருங். இலாவாண.11:70). 16. முகில் (மேகம்); cloud. "கோளொடு குளிர்மதி வந்து வீழ்ந்தென" (சீவக.320). 17. ஒளி; brilliance, light. "முன்னைக் கோளரியே" (திவ். திருவாய்.2:6:6). 18. பரிவேடம்; halo. "மதியங் கோள்வாய் விசும்பிடை" (சீவக.1098). 19. குலை; cluster. "செழுங்கோள் வாழை" (புறநா.168:13). 20. காவட்டம்புல் (மலை.); citronella grass. 21. கொழு (திவா.); plough share.

[கொள் → கோள்.]

குல் → குள் → கூள் → கூளி = வளைந்த வாழைப்பழம். கூல் → கூண்டு = தட்டிவளைவு, வண்டிக்கூண்டு போன்ற பறவைக் கூடு, விலங்குக் கூண்டு. கூண்டு → கூடு = நெற்கூடு, கூண்டு, உறை, உள்ளீடின்மை. குள் → கொள் = வளைந்த காயுள்ள பயற்றுவகை. கொள் → கோள் = சுற்றிவரும் விண்மீன் (கிரகம்) வட.வர. முன். 5).

**கோள்**[2] *kōḷ*, பெ.(n.) ஒரு பாட்டினகத்துப் பொருள் கொண்டு நிற்கும் நிலை; depth of the theme in a song.

[கொள் → கோள்.]

**கோள்**[3] *kōḷ*, இடை.(part.) முன்னிலைப் பன்மை விகுதி; verbal ending of the second pers. pl. "புறப்பற்றுத் தள்ளுங்கோள்" (அஷ்டப்.நூற்றெட். 58).

[கள் → காள் → கோள்]

**கோள்காரன்** *kōḷ-kāraṉ*, பெ.(n.) ***கோள்மூட்டி*** பார்க்க; see *kōḷ-mūṭṭi*. சூதுகாரன் கையும் கோள்காரன் வாயும் சும்மாயிராது (பழ).

[கோள் + காரன்.]

**கோள்குண்டனி** *kōḷ-kuṇḍaṉi*, பெ.(n.) புறங் கூறுகை; tale-bearing, calumny.

[கோள் + குண்டனி.]

**கோள்சொல்(லு)-தல்** *kōḷ-śol(lu)-*, 13 செ.கு.வி. (v.i.) ***கோள்முடி-த்தல்*** பார்க்க; see *kōḷ-muḍi-*.

[கோள் + சொல்(லு).]

**கோள்நிலை** *kōḷ-nilai*, பெ.(n.) கதிரவன் குடும்பத்துக் கோள்களின் சுற்றோட்ட நிலை; solar family. "கோல்நிலை திரியின் கோள்நிலை திரியும், கோள்நிலை திரியின் மாரி வாறங் கூரும்" (புறநா.).

[கோள் + நிலை.]

**கோள்முடி-த்தல்** *kōḷ-muḍi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. புறந்தூற்றுதல்; to tell tales. 2. கோட்சொல்லி இருவருக்குள் கலகம் விளைத்தல்; to create mischief by slanderous reports.

[கொள் → கோள் + முடி-.]

**கோள்மூட்டி** *kōḷ-mūṭṭi*, பெ.(n.) புறங்கூறி கலகம் விளைப்பவன்; one who creates mischief by slanderous reports, a tale bearer.

மறுவ. கோள்காரன்.

[கோள் + மூட்டி.]

**கோள்மூட்டு-தல்** *kōḷ-mūṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) ***கோள்முடி-த்தல்*** பார்க்க; see *kōḷ-muḍi-*.

[கோள் + மூட்டு-.]

**கோள்வாய்** *kōḷ-vāy*, பெ.(n.) புதுப்புண்; fresh wound. 'கலந்துபிரிந்த கோள்வாய் பொறுக்க வரி தாயிருக்கும்' (ஈடு,6.2:ப்ர.).

[கோள் + வாய்.]

**கோளக்கட்டி** *kōḷa-k-kaṭṭi*, பெ.(n.) புண்வகை (இங்.வை. 307); glandular tumour.

[கோளம் + கட்டி.]

**கோளகச்செய்நஞ்சு** *kōḷaga-c-cey-nañju*, பெ.(n.) நாட்படு நஞ்சு (மூ.அக.); a mineral poison.

[கோளகம் + செய் + நஞ்சு.]

**கோளகம்**[1] *kōḷagam*, பெ.(n.) 1. மிளகு; common pepper. 2. திப்பிலி; long-pepper.

[கோளம் → கோளகை = வட்டவடிவம். கோளம் → கோளகம் = (உருண்டை) மிளகு (வட.வர.5).]

**கோளகம்**[2] *kōḷagam*, பெ.(n.) 1. ***கோளகச் செய்நஞ்சு*** பார்க்க; see *kōḷaga-c-cey-nañju*. 2. தாளகம் (சங்.அக.); yellow sulphide of arsenic. 3. மண்டல விரியன் (பிங்.); viper.

*[கோள் → கோளகம்.]*

**கோளகன்**[1] *kōḷagaṉ*, பெ.(n.) கோளுரைப்போன்; one who tells tale against others.

*[கோள் → கோளகன்.]*

**கோளகன்**[2] *kōḷagaṉ*, பெ.(n.) கைம்பெண் (விதவை) பெற்ற மகன்; widow's son (செ.அக.).

*[கோள் → கோளகன்.]*

**கோளகை** *kōḷagai*, பெ.(n.) 1. வட்டவடிவம்; sphere, globe. *"அண்டகோளகைப் புறத்ததாய்" (கம்பரா. அகலிகைப்.60).* 2. யானைக் கிம்புரி; ornamental ring, as of an elephant's tusk. 3. மணடலிப்பாம்பு (சூடா.); a large viper. 4. உறை (வின்.); envelope, receptacle, socket.

*[கோளம் → கோளகை = வட்டவடிவம், மண்டலிப் பாம்பு (வட.வர.5).]*

**கோளத்தசை** *kōḷa-t-tasai*, பெ. (n.) ஒருவகைத் திசு; a kind of liboque muscles.

*[கோளம் + தசை.]*

**கோளப்பாதி** *kōḷa-p-pādi*, பெ.(n.) நிலவுருண்டையின் பாதிப்பகுதி; earth's hemisphere.

*[கோளம் + பகுதி.]*

இதனை வடமொழியாளர் கோளார்த்தம் என வழங்குவர்.

**கோளம்** *kōḷam*, பெ.(n.) 1. உருண்டை; ball, orb, globe. sphere. 2. விலங்குகளின் உடலில் நீரூறுந் தசைப்பற்று; gland. கோளக்கட்டி (உ.வ.).

*[கொள் → கோள் → கோளம் = வட்டம், உருண்டை (வட.வர.முன். 5).]*

**கோளம்பம்** *kōḷambam*, பெ.(n.) கோள் மறைப்பு (கிரகணம்); eclipse (சோதிட.அக.).
*[அம்பல் = குவிதல். மூடுதல். மறைத்தல். கோள் + (அம்பல்) அம்பம்].*

**கோளயோகம்** *kōḷa-yōgam*, பெ.(n.) ஓர் ஓரையில் ஏழு கோள்கள் நிற்க வரும் நல்வினை; conjunction of seven planets in one house. *"ஒருராசி தன்னிலேதா னோரேழு கோளு நிற்கி லிருமையாங் கோள யோகம்" (சாதகசிந்.2045).*

*[கோள் → கோளம் + யோகம்.]*

**கோளரங்கம்**[1] *kōḷ-araṅgam*, பெ.(n.) வான் கோள்கள் எவ்வாறு அமைந்துள்ளன என்பதை விளக்கும் வகையில் ஒளிப்படம் காட்டும் ஏந்து உள்ள ஓர் அரங்கம்; கோளப்பாதி வடிவக்கூரையில் இப் படம் காட்டப்படும்; planetarium.

*[கோள் + அரங்கம்.]*

**கோளரங்கம்**[2] *kōḷ-araṅgam*, பெ.(n.) ஓரை மண்டலங்களின் விண்மீன்கள், கோள்கள் ஆகியவற்றின் வடிவங்களைப் பொருத்திக்காட்டும் கோளவடிவான விண்தோற்றக் காட்சிக்கூடம்; planetarium, domed building in which images of stars, planets, constellations etc. are projected.

*[கோள் + அரங்கம்.]*

**கோளரி** *kōḷ-ari*, பெ.(n.) அரிமா (ஆண்சிங்கம்) (பிங்.); lion.

*[கோள் + அரி. கோள் = வளைவு, திரும்பு. முன்னும் பின்னும் திரும்பிப் பார்க்கும் இயல்புடையது.]*

**கோளரிக்கொடியோன்** *kōḷari-k-kodiyōṉ*, பெ.(n.) வீமன் (பிங்.); Bhima, as having a lion-banner.

*[கோள் + அரி + கொடியோன்.]*

**கோளரிஞ்சான்** *kōḷ-ariñjāṉ*, பெ.(n.) ஒன்பதரை அங்குல நீளமும் சாம்பல் நிறத்ததுமான ஆற்றுமீன் வகை; carp, leaden-grey, attaining 9½ in. in length.

*[கோள் + அரிஞ்சான்.]*

**கோளவகுப்பு** *kōḷa-vaguppu*, பெ.(n.) எட்டுப் பக்கத்தும் முகங்களை யுடையதாக அமைக்கும் படை வகுப்பு; octagonal disposition of an army (சுக்கி)நீதி, 339).

**மறுவ.** கோளவியூகம்.

*[கோளம் + வகுப்பு.]*

**கோளவங்கம்** *kōḷa-vaṅgam*, பெ.(n.) ஈயமணல் (சங்.அக.); lead ore.

*[கோளம் + வங்கம்.]*

**கோளவியூகம்** *kōḷa-viyūgam*, பெ.(n.) ***கோளவகுப்பு*** பார்க்க; see *kōḷa-vaguppu*.

*[கோளம் + skt. வியூக.]*

**கோளன்** *kōḷaṉ*, பெ.(n.) 1. ***கோளகன்*** பார்க்க; see *kōḷagaṉ*. *"கோளரிருக்கு மூர்" (தனிப்பா. 1:64:127).* 2. கோளுரைப்போன்; one who tells tales. பெரு மஞ்சிகன் கோளன் (தணிகைப்பு. அகத.345).

*[கோள் → கோளன்.]*

**கோளா** *kōlā*, பெ.(n.) 1. நறுமணப் பண்டங் கலந்ததும் இறைச்சி முதலியவற்றை உள்ளீடாகக் கொண்டதுமான ஒருவகை உண்டை யுணவு (இ.வ.); balls of minced mutton or vegetables mixed with powdered spices and fried in ghee. 2. மயக்கத்தை யுண்டுபண்ணும் கஞ்சாவுருண்டை; balls of ganja drug inducing stupor.

*[கோள் → கோளா : பொரித்த உருண்டைக் கறி, மருந்துருண்டை (வ.வர.5).]*

**கோளாங்கல்** *kōlān-kal*, பெ.(n.) 1. கூழாங்கல் (j.); pebbles. 2. பருக்கைக்கல்; small pebbles, gravel.

*[குள் → கூழை + அம் + கல் – கூழாங்கல் → கோளாங்கல் (கொ.வ.).]*

**கோளாந்தி** *kōlāndi*, பெ.(n.) சிவகங்கை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Sivagangai Dt.

*[கோளன் + அந்தை – கோளாந்தை → கோளாந்தி]*

**கோளாம்பி** *kōlāmbi*, பெ.(n.) படிக்கம் (இ.வ.); spitton.

*[கோள் + ஆம்பி]*

**கோளார்த்தம்** *kōlārttam*, பெ.(n.) கோளத்தின் பாதி; earth's hemisphere.

*[கோள் + அர்த்தம். வ. **கோளப்பாதி** பார்க்க; see kōla-p-pādi.]*

**கோளாளன்** *kōl-ālan*, பெ.(n.) நூற்பொருள் முதலியவற்றை மறவாது உட்கொள்பவன்; a man of retentive memmory or of firm grasp. *"கோளாள னென்பான் மறவாதான்" (திரிகடு. 12).*

*[கோள் + ஆளன்.]*

**கோளாறு**[1] *kōl-āru*, பெ.(n.) 1. தாறுமாறு; dis order. 2. குற்றம்; fault. 3. சண்டை (J.); quarrel, tumult, scuffle.

*[குளறு → குளாறு → கோளாறு.]*

**கோளாறு**[2] *kōl-āru*, பெ.(n.) 1. வழிவகை, வழிமுறை; means, expedient. அந்தச் செயல் முடியும்படி நான் ஒரு கோளாறு சொல்லுகிறேன் (உ.வ.). 2. இலக்கு; aim. கோளாறு பார்த்து எறிந்தேன் (உ.வ.).

மறுவ. கொள்ளாறு, வழிவகை.

*[கொள் → கோள் + ஆறு – கோளாறு (கைக்கொள்ளத் தக்க வழிவகை).]*

**கோளி**[1] *kōli*, பெ.(n.) 1. கொள்வோன் (சூடா.); receiver. 2. நான்காம் வேற்றுமை; dative case. *"ஒண்கோளியொடு" (வீரசோ. வேற்.1).* 3. ஆல்; banyan. 4. அத்தி (பிங்.); country fig. 5. பூவாது காய்க்கும் மரம்; tree bearing fruit without outwardly blossoming. *"கொழுமென் சினைய கோளி யுள்ளும்" (பெரும்பாண்.407).* 6. கொழுஞ்சி (பிங்.); sylhet orange.

*[கொள் → கோள் → கோளி.] (வேக.199)*

**கோளி**[2] *kōli* பெ.(n.) **கோளகன்** பார்க்க (திவா.); see *kōlagan*.

*[கோளன் → கோளி.]*

**கோளி**[3] *kōli* பெ.(n.) **கோளிகை** பார்க்க; see *kōligai*. *"குண்டேழுங் கோளியோ ராறும்" (திருக்காளத். பு. 13:30).*

*[கோளிகை → கோளி.]*

**கோளி**[4] *kōli* பெ.(n.) பூவாது காய்க்கும் மரம்; any tree that bears fruit without blossoming.கோளி ஆலமரம் (உ.வ.).

*[கோழி → கோளி.]*

**கோளிக்குடி** *kōli-k-kudi*, பெ.(n.) மதுரை மாவட்டத்துச் சிற்றூர்; a village in Madurai Dt.

*[கோளி (ஆலமரம்) + குடி.]*

**கோளிகை** *kōligai*, பெ.(n.) குதிரை கழுதைகளின் பெட்டை (யாழ்.அக.); female of a horse or ass.

*[கோழி → கோளி[3] → கோளிகை.]*

பெட்டையைக் கோழி எனக் குறிப்பது மரபு.

**கோளியம்** *kōliyam*, பெ.(n.) துத்தி (பிங்.); country mallow.

*[கோள் → கோளி → கோளியம்.]*

**கோளிழை-த்தல்** *kōl-ilai-*, 16 செ.குன்றாவி. (v.t.) கொல்லுதல்; to kill. *"குஞ்சரங் கோளிழைக்கும் பாம்பை" (திருக்கோ.21).*

*[கோள் + இழை-.]*

**கோளுரை** *kōl-urai*, பெ.(n.) குறளைமொழி; slanderous report. *"கோளுரைகள் பேசொணாது" (அறப். சத.8).*

*[கோள் + உரை.]*

**கோளேசம்** *kōlēsam*, பெ.(n.) குங்குமப்பூ (மலை.); saffron.

*[குளசம் → கோளேசம்.]*

**கோளை**[1] *kōḷai,* பெ.(n.) எலி (யாழ்.அக.); rat.

*[கோள் → கோளை.]*

**கோளை**[2] *kōḷai,* பெ.(n.) குவளை; bowl.

*[குவளை → கோளை. (கொ.வ.)]*

**கோளை**[3] *kōḷai,* பெ.(n.) 1. தோழி ; female companion. 2. கோதாவரி; the river Godavari.

*[இகுளை (தோழி)→கோளை.]*

**கோளை**[4] *kōḷai,* பெ.(n.) மீன்வகை; a kind of fish. *"கோளை யாளல்" (குருகூர்ப்.7).*

*[கோள் → கோளை.]*

**கோளைக்குத்து** *kōḷai-k-kuttu,* பெ.(n.) சளிக் கட்டா லுண்டாகும் நெஞ்சுக்குத்து (J.); acute throbbing pain in the chest from phlegm.

*[கோழை + குத்து – கோழைக்குத்து → கோளைக்குத்து (கொ.வ.)]*

**கோற்கணக்குக் குழிக்கணக்கு** *kōr-kaṇakku-k-kuḻi-k-kaṇakku,* பெ.(n.) கோலால் அளந்து கொள்ளப்பட்ட நிலத்தின் குழிக்கணக்கு (இ.வ.); land surveying, computing the extent of a land in *kuḻi,* with a measuring rod.

*[கோற்கணக்கு + குழிக்கணக்கு.]*

**கோற்காரன்** *kōr-kāraṉ,* பெ.(n.) 1. ஊர் ஊழியக் காரன் (G.Sm.D.I.i.127); a village servant. 2. ஓடந்தள்ளுவோன் (இ.வ.); ferryman.

*[கோல் + காரன்.]*

**கோற்குத்து** *kōr-kuttu,* பெ.(n.) கோல்முனையாற் குத்தப்படும் அளவுள்ள நிலம்; bit of land coverable by the end of a staff when planted on the ground. *'ஒரு கோற்குத்துங் கொடேன்' (ஈடு.7:5 பிர.).*

*[கோல் + குத்து.]*

**கோற்குறிப்பு** *kōr-kuṟippu,* பெ.(n.) நிலவளவுக் கணக்கு (W.G.); abstract of land survey.

*[கோல் + குறிப்பு.]*

**கோற்கூத்து** *kōr-kūttu,* பெ.(n.) வரிக்கூத்துவகை; a kind of masquerade dance. *'கோத்த பறைக் குடும்பு கோற்கூத்து' (சிலப். 3:13, உரை).*

*[கோல் + கூத்து.]*

**கோற்கூலி** *kōr-kūli,* பெ.(n.) வரிவகை (தெ.இ.க.தொ.IV.30); a tax.

*[கோல் + கூலி.]*

**கோற்கொடி**[1] *kōr-koḍi,* பெ.(n.) 1. கொடிவகை (திவா.); a species of creeper. 2. சுரை (மலை.); calabash.

*[கோல் + கொடி.]*

**கோற்கொடி**[2] *kōr-koḍi,* பெ.(n.) இலந்தைவகை (பிங்.); jujube tree.

*[கோல் + கொடி.]*

**கோற்பிரமாணம்** *kōr-piramāṇam,* பெ.(n.) ஊரின் நிலவிரிவுக் கணக்கு (இ.வ.) ; statement of the whole extent of a village and its lands whether cultivated or waste.

*[கோல் + பிரமாணம்.]*

**கோற்புழு** *kōr-puḻu,* பெ.(n.) உலண்டு (பிங்.); case-worm.

*[கோல் + புழு.]*

**கோற்றகைமாக்கள்** *kōṟṟagai-mākkaḷ,* பெ.(n.) கோல்கொண்டு காக்கும் வீரர்; warriors armed with sticks. *"மிலைச்சருஞ் சிலதருங் கோற்றகை மாக்களும்" (பெருங். உஞ்சைக். 42:24).*

*[கோல் + தகை + மாக்கள். தகைத்தல் : தடுத்தல்.]*

**கோற்றேன்** *kōṟṟēṉ,* பெ.(n.) கொம்புத்தேன்; superior wild honey, as found on tree branches. 'காலனை யோலமிட வடர்த்த கோற்றேன்' (திருக்கோ.150).

*[கோல் + தேன்.]*

**கோற்றொடி** *kōṟṟoḍi,* பெ.(n.) 1. வேலைத்திற னமைந்த கைவளையல்; bangles of fine workmanship. *"கோற்றொடி மாதரொடு" (சிலப்.26:121).* 2. பெண்; woman.

*[கோல் + தொடி.]*

**கோற்றொழில்** *kōṟṟoḻil,* பெ.(n.) 1. (செங்கோல் செலுத்தி) அரசாட்சி செய்கை; rule or government of a kingdom, as symbolically expressed by sceptre-wielding. *"கோற்றொழிற் கொற்றம்" (பெருங். மகத. 23:60).* 2. அரிய வேலைப்பாடு; fine workmanship. *'கோற்றொழில் விளங்குந்தொடி (கலித்.100, உரை).*

*[கோல் + தொழில்.]*

**கோற்றொழிலவன்** *kōṟṟoḻilavaṉ,* பெ.(n.) அரசர் வாழ்கூடத்து வாசலிற் கோல்கொண்டு காவல்

செய்பவன்; guard or watchman armed with a stick, stationed at the porch of a king's palace. *"கோற்றொழி லவற்குக் கூறின னிற்ப" (பெருங். உஞ்சைக். 47:10).*

*[கோல் + தொழில் + அவன்.]*

**கோற்றொழிலாளர்** *kōṟṟoḻil-āḷar,* பெ.(n.) கோலைக் கையேந்தி அரசர்க்குமுன் வழி விலக்குவோர்; king's attendants armed with sticks, their duty being to disperse the crowd and clear the way for the king to pass. *"கோற்றொழி லாளர் மாற்றுமொழி இயம்ப" (பெருங். உஞ்சைக். 58:76).*

*[கோல் + தொழில் + ஆளர்.]*

**கோறணி** *kōṟaṇi,* பெ.(n.) ***கோரணி*** பார்க்க (யாழ்.அக.); see *kōraṇi.*

*[கோரணி → கோறணி.]*

**கோறம்பு** *kōṟambu,* பெ.(n.) ஒருவகை நெற்றியணி; an ancient ornament for the forehead. *"நெற்றி மேற் றிருத்திய கோறம்புந் திருக்குழலும்" (திவ். பெரியாழ். 3:4:6).*

க. கோரம்ப.

*[கோலம் + பூ – கோலம்பூ → கோறம்பு.]*

**கோறர்** *kōṟar,* பெ.(n.) கள்ளர்குடிப் பட்டப் பெயர்களுள் ஒன்று (கள்ளர் சரித்.பக்.98); a caste title of Kaḷḷars.

*[கோல + அர் – கோலர் → கோறர்.]*

**கோறல்** *kōṟal,* பெ.(n.) கொல்லுகை; killing, slaying. *"கோறல் பிறவினை யெல்லாந் தரும்" (குறள். 321).*

*[கொல் →கோறு →கோறல்.]*

**கோறின்னல்** *kōṟiṉṉal,* பெ.(n.) பல்விளக்குகை; cleaning the teeth. *"விதித்த கோறின்று" (காஞ்சிப்பு. ஒழுக்.8).*

*[கோல் + தின்னல். கோல் : குச்சி – பற்குச்சி. பற்குச்சியை மென்று பல் துலக்குதல்.]*

**கோறுண்ணி** *kōṟuṇṇi,* பெ.(n.) பிற உயிரினைக் கொன்று பிறகு உண்ணும் உயிரி; predator.

*[கோறு + உண்ணி.]*

**கோறை** *kōṟai,* பெ.(n.) 1. பழுது loc.; defect, ble mish. 2. சிராய்த்த காயம்; scratch, as on the body. 3. துளை (W.); hole, cavity, hollow, as in a tooth, in fistula. 4. மணிபதிக்குங் குவளை (W.); socket.

*[குறை → கோறை.]*

**கோறைபடு-தல்** *kōṟai-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. பழுதாதல்; to be injured, as clothes, fruits. 2. சிராய்த்த காயமுண்டாதல்; to have a scratch, as on the body.

*[குறை→கோறை + படு-.]*

**கோறையா-தல்** *kōṟai-y-ā-,* 8 செ.கு.வி.(v.i.) 1. பழுதுபடுதல்; to be injured or spoiled. 2. குழி யாதல் (யாழ்ப்.); to become hollow.

*[கோறை + ஆ.]*

**கோறைவை-த்தல்** *kōṟai-vai-,* 4 செ.கு.வி.(v.i.) ***கோறையா-தல்*** பார்க்க; see *kōṟai-y-ā-.*

*[கோறை + வை.]*

**கோன்**[1] *kōṉ,* பெ.(n.) 1. அரசன்; king. 2. தலைவன்; master, lord. *"உண்மையுமா யின்மையுமாய்க் கோனாகி" (திருவாச. 5:15).*

ம. கோன்.

*[கோவன் → கோன்.]*

**கோன்**[2] *kōṉ,* பெ.(n.) ***கோனான்*** பார்க்க (loc.); see *kōṉāṉ.*

*[கோ → கோவன் → கோன்.] (வ.மொ.வ.43.)*

**கோன்**[3] *kōṉ,* பெ.(n.) 1. ஞாயிறு ; Sun. 2. திங்கள் ; Moon. 3. வியாழன்; Jupiter (சோதிட.அக.).

*[கோள்→கோ→கோன்.]*

**கோன்மை**[1] *kōṉmai,* பெ.(n.) 1. ஆளுகை; rule savereignty. 'பாய்திரை யுலகக் கோன்மை' (உபதேசகா. சிவத்துரோ.2760). 2. அரசமுறைமை; justice (இரு.நூ.) 3. தனது சட்டங்களைத் தானே அமைத்துக்கொள்ளும் உரிமை; the right constitute their own law of the land, sovereignty.

*[கோல் → கோன் + மை.]*

கோன்மை என்பது ஒரு நாட்டிற்குரிய தனி யுறுப்பாகப் பண்டைக் காலத்தில் உணரப்பட்டமையால் திருவள்ளுவர் ஏனை மூன்றுறுப்புகளையும் ஆறாக வகுத்து "படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும் உடையான் அரசருள் ஏறு" என்று கூறினார் (பழந்தமிழாட்சி.ப. 8).

ம. கோன்ம.

**கோன்மை**[2] *kōṉmai,* பெ.(n.) தலைமை; superi ority.

*[கோன் → கோன்மை.]*

**கோனகப்பாடி** *kōṉaga-p-pāḍi,* பெ.(n.) நாமக்கல் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Namakkal Dt.

*[கோனகன் + பாடி.]*

**கோனடிதொடு-தல்** *kōṉ-aḍi-toḍu-,* 12 செ.கு.வி. (v.i.) அரசனடிமேல் ஆணையிடுதல்; to swear upon king's feet. *"உசாவுவங் கோனடி தொட்டேன்" (கலித். 94:36).*

*[கோன் + அடி + தொடு-.]*

**கோனாகுளம்** *kōṉā-kuḷam,* பெ.(n.) இராமநாத புரம் மாவட்டத்துச் சிற்றூர்; a village in Ramanadhapuram Dt.

*[கோனான் + குளம்.]*

**கோனாடு**[1] *kō-nāḍu,* பெ.(n.) சோணாட்டு உட்பிரிவுகளுளொன்று (புறநா. 54); a division of Cōlā country.

*[கோன் + நாடு.]*

**கோனாடு**[2] *kō-nāḍu,* பெ.(n.) புதுக்கோட்டைப் பகுதியில் முற்காலத்தில் இருந்த நிலப்பரப்பு (பிற்.சோழ.வரலாறு–சதாசிவ பண்டாரம் ப.6); a region around Pudukkottai in ancient times.

*[கோன் + நாடு.]*

சோழநாட்டிற்கும் பாண்டிய நாட்டிற்கும் இடைப்பட்ட பகுதியில் இருந்த நாடு. கொடும்பாளூர் இதன் தலைநகர். இருக்குவேளிர் எனும் மரபினர் இப் பகுதியை ஆட்சி செய்தனர்.

**கோனாப்பட்டு** *kōṉā-p-paṭṭu,* பெ.(n.) புதுக்கோட்டை மாவட்டத்துச் சிற்றூர்; a village in *Pudukkōṭṭai* Dt.

*[கோனான் + பட்டு.]*

**கோனான்** *kōṉāṉ,* பெ.(n.) இடையர் பட்டப்பெயர்; title of the Idaiyar caste. *"எந்தக் கோனான்றன் கையிற் கொடுத்தானோ" (விறலிவிடு.703).*

தெ. கோனாரி.

*[கோ - ஆனிரை, மாடு. கோ → கோன் → கோனான்.] (வட.வர.43).*

**கோனிச்சி** *kōṉicci,* பெ.(n.) இடைச்சி (யாழ்.அக.); a woman of Idaiyar caste.

*[கோனான் (ஆ.பா.) → கோனிச்சி (பெ.பா.).]*

**கோனிப்பூடு** *kōṉ-p-pūḍu,* பெ.(n.) சணல் (சித்.அக.); Indian hemp, jute.

*[கோனி + பூடு.]*

**கோனூர்** *kōṉūr,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள ஓர் ஊர்; a village in *Thañjāvūr* Dt.

*[கோன் + ஊர்.]*

**கோனேரி** *kōṉ-ēri,* பெ.(n.) திருப்பதியிலுள்ளதொரு பொய்கை; a sacred tank on Tirupati hills. *"கோனேரி வாழுங் குருகாய்ப் பிறப்பேனே" (திவ். பெருமாள். 4:1).*

*[கொலுவுதல் - படிக்கட்டுக் கோலுதல். கொலு பொம்மைக்கொலு. கொலு → கோலு→கோனு + ஏரி (கோனேரி - படிக்கட்டுகள் அமைக்கப்பட்ட நீர்நிலை).]*

**கோனேரிதாசர்** *kōṉēri-dāšar,* பெ.(n.) பத்தொன் பதாம் நூற்றாண்டுப் புலவர்களு ளொருவர்; a poet of nineteenth century.

*[கோனேரி + தாசர்.]*

**கோனேரியப்ப முதலியார்** *kōṉēri-y-appa-mudaliyār,* பெ.(n.) தமிழில் உபதேசகாண்டம் பாடிய ஆசிரியர்; the author of *Upadēša kāṇḍam* in Tamil.

*[கோனேரி + அப்பன் + முதலியார்.]*

**கோனேரியப்பர்** *kōṉēri-y-appar,* பெ.(n.) பன்னிரண்டாம் நூற்றாண்டுப் புலவர்களி லொருவர்; a poet of twelfth century.

*[கோனேரி + அப்பர்.]*

**கோனை** *kōṉai,* பெ.(n.) ஒலி (அக.நி.) ; sound.

*[கொல் → கொன் → கோன் → கோனை.]*

**கோனோலை** *kōṉ-ōlai,* பெ.(n.) அரசாணை எழுதப்பட்ட திருமுகம் (S.I.I.II. 351); written order of a king.

*[கோ - அரசன். கோ → கோன் + ஓலை.]*

# கௌ

**கௌ**[1] *kau,* (எ) ககர மெய்யும் ஔகார நெட்டுயிரும் சேர்ந்த பின்னண்ண வல்லின உயிர்மெய் சார்பெழுத்தாகிய அசையெழுத்து; vowel consonant secondary letter, being a compound of velar consonant 'k' and vowel 'au' syllable in character.

*[க் + ஔ – கௌ.]*

**கௌ**[2] *kau,* பெ.(n.) கொள்ளு; horse-gram (மலை.).

**கௌ[3]** *kau,* பெ.(n.) 1. தீங்கு; evil. 2. மனவருத்தம்; distress, mental agony.

*[கவ்வு →கௌ.]*

**கௌ[4]** *kau,* பெ.(n.) காக்கை அல்லது அண்டங்காக்கை கரையும் ஒலி; caw of the crow or harsh cry of a rook.

க.கவு, கவ்வு; தெ. கௌ; த.கவ்வை.

*[கவ்வை →கௌவை →கௌ.]*

குறிப்பாக இது அண்டங்காக்கையின் பேரொலியையே சுட்டும்.

**கௌகணம்** *kaukaṇam,* பெ.(n.) கொங்கண நாடு; an ancient region.

*[கொண்கானம்→கொகனம்→கௌகணம் (கொ.வ.)]*

**கௌசலை** *kaušalai,* பெ.(n.) இராமன் தாய்; Rama's mother. *"மன்னுபுகழ்க் கோசலைதன் மணி வயிறு வாய்த்தவனே"* *(திவ். பெருமாள்.8:1).*

*[கோ + சாலை – கோசாலை (மாட்டுப்பட்டி உள்ள ஊர்)→ கோசலை→கோசலம் →கௌசலை.]*

**கௌசாம்பி** *kausāmbi,* பெ.(n.) கங்கைக் கரையிலுள்ள ஒரு பழைய நகரம்; an ancient city on the bank of the Ganges in the lower part of the Doab.

*[கோசம்பி (ஒரு மரம்) →கோசாம்பி →கௌசாம்பி.]*

இம்மரம் வளரும் காடு. இம்மரத்தின் பூச்சாறு சிவப்பு வண்ணம் செய்து நிறமூட்டப் பயன்படும்.

**கௌசிகம்[1]** *kaušigam,* பெ.(n.) 1.கூகை (பிங்.); owl. 2. பட்டாடை (பிங்.);silk cloth. 3. பண்வகை (சிலப். 6:35,உரை); a primary melody-type. 4. பட்டுச்சேலை; silk saree.5. பாம்பு; snake.

*[கொழு : மென்மை, நுண்மை. கொழு →கொழுது →கோது →கோதிகம்→கௌசிகம்.]*

**கௌசிகம்[2]** *kaušigam,* பெ.(n.) 1. விளக்குத்தண்டு (பிங்.); lamp-stand. 2. கருவிகளிளொன்று; an instrument.

*[கோல் →கோது (நீட்சி) →கோதிகம்→கௌசிகம்.]*

**கௌசிகன்** *kaušigaṉ,* பெ.(n.) 1. விசுவாமித்திரன்; Viswamittiraṉ. *"கௌசிகன் சொல்லுவான்"* *(கம்பரா. மிதிலை. 42).* 2. இந்திரன் (பிங்.); Indira.

*[கோசலம்→ கோசியன் → கோசிகன் → கௌசிகன் (கோசல் நாட்டினன்).]*

**கௌசிப்பி** *kaucippi,* பெ.(n.) முத்தின் மேலுள்ள கூடு; shell covering the pearl.

தெ. கௌசிப்ப.

*[கவ்வு→கௌவு + சிப்பி.]*

**கௌசு** *kaušu,* பெ.(n.) முடைநாற்றம்; bad smell.

க.,தெ. கௌசு.

*[கவிச்சி→கௌசு.]*

**கௌசுகம்** *kaušugam,* பெ.(n.) 1. ஒருவகை மரம்; a kind of tree, tripterocarp dammer (மலை.). 2. ***குங்கிலியம்*** பார்க்க; see *kuṅgiliyam.*

**கௌட்டம்** *kauṭṭam,* பெ.(n.) மாட்டின் கால் நோய்; a disease affecting the legs of cattle.

தெ. கௌட்ட

*[கவுட்டம்→கௌட்டம்.]*

**கௌடசாட்சி** *kauḍašāṭci,* பெ.(n.) பொய்ச்சாட்சி; false witness.

*[கவல் →கவடு →கௌடம் + சாட்சி.]*

**கௌடநடை** *kauḍa-naḍai,* பெ.(n.) ***கௌடநெறி*** பார்க்க (w); see *kauḍa-neṟi.*

*[கௌடம் + நடை.]*

**கௌடநெறி** *kauḍa-neṟi,* பெ.(n.) செறிவு முதலிய வைதருப்ப நெறிக்குரிய குணங்கள் நிரம்பி வாராமல் சொற்பெருகத் தொடுக்குஞ் செய்யுணெறி; the Kauda style of poetry characterised mainly by verbosity dist. fr. *Vaidharbaneri.*

*[கௌடம் : வங்கநாடு. வெல்லம் காய்ச்சுதலினால் பெயர் பெற்ற நாடு. கௌடம் + நெறி.]*

**கௌடம்[1]** *kauḍam,* பெ.(n.) 1.வங்காள நடுவில் உள்ள ஒரு நாடு; the district of Gaur, central part of Bengal extending from Vanga to the borders of Orissa. 2. ***கௌடநெறி*** பார்க்க (தண்டி.4); see *kauḍaneṟi.*

*[கருப்பட்டி – கொர்டு : கூடு (வெல்லம்) →கௌடு →கௌடம் (வெல்லம் காய்ச்சியதால் இப்பெயர் பெற்ற வங்க நாடு)]*

**கௌடம்[2]** *kauḍam,* பெ.(n.) ஒருவகைக் கொடி; a medicinal creeper.

**கௌடி[1]** *kauḍi,* பெ.(n.) கவடி, பலகறை;

*[கவடி (சோழி, பலகறை) →கௌடி.]*

**கௌடி**[2] *kauḍi,* பெ.(n.) ஒரு பண்; a musical mode.

*[கவ்வு→கவ்வுளி→கவுளி→கவுடி→கௌடி.]*

**கௌடி**[3] *kauḍi,* பெ.(n.) 1. வழிமுறையாகக் காட்டப்படுகிறது; a sample of the thing. 2. கோலிகை (மாதிரி); specimen, illustrative or typical example.

**தெ.** கவுடுவு, கௌடி, கைவடி, கைவளி.

*[கைவழி→கைவடி→கௌடி. கைவழி = (வழிமுறை) அதன் வழிவந்தது. வழிமுறை எனப்பொருள்பட்ட இத்தமிழ்ச்சொல் வழக்கிழந்தது.]*

**கௌடிபாய்-தல்** *kauḍi-pāi-,* 13 செ.கு.வி.(v.i.) ஒருவகை விளையாட்டு; a kind of play.

*[கவுடி →கௌடி + பாய்-.]*

**கௌடு** *kauḍu,* பெ.(n.) கவடு, கள்ளம்;

**தெ.**கௌடு.

*[கவல்→கவடு→கௌடு (கொ.வ.)]*

**கௌணப்பொருள்** *kauṇa-p-porul,* பெ.(n.) இலக்கண வகையாற் கொள்ளும் பொருள் (சி.சி. பாயி. 2.ஞானப்.); secondary meaning or sense of a word, metaphorical sense, opp. to. *mukkiyapporuḷ*

*[கமுக்கம்→கமுணம்→கவுணம்→கௌணம் + பொருள்.]*

**கௌணியன்** *kauṇiyaṉ,* பெ.(n.) கவுணியக் குலத்தான்; one born in the *Kauṇḍiṇya* gotra.

**மறுவ.** கவுணியன்.

*[கோ = மாடு, ஆனிரை. கோ→கோன்→கோனியன் → கௌணியன் (கவுணியன்)→ கவுணியன் – ஆனிரை மேய்க்குடியினன்.]*

ஐந்திரவிட மொழிகளான குச்சர மொழியில் கோவனி என்னும் சொல்லும் மராத்தியில் கவ்வுள என்னும் சொல்லும் கால்நடை மேய்ப்போரைக் குறித்தல் காண்க.

**கௌதகம்** *kaudagam,* பெ.(n.) போதிகை; capital of a pillar, wooden piece attached to a wall supporting the main beam of a house.

*[கவ்வு→கவுதம்→கௌதகம்.]*

**கௌதபெருந்தச்சன்** *kauda-peruntaccaṉ,* பெ.(n.) மாமல்லபுரத்தை உருவாக்கிய தலைமைக் கட்டுமானக் கலைஞருள் ஒருவர்; one of the chief Sthapathis, who were responsible for the rock cut caves and buildings of Mamallapuram. கௌதப் பெருந்தச்சன் என்னும் எழுத்துப் பொறிப்பு, பூஞ்சோலை எனும் சிற்றூர்ப் புடைப்புக் கல்லில் காணப்படுகிறது.

*[கோதை = பெரியவன், தலைவன். கோதை →கௌதம் + பெருந்தச்சன்.]*

**கௌதம்**[1] *kaudam,* பெ.(n.) மீன்கொத்தி; kingfisher.

*[கவ்வு →கவுதம்→கௌதம்.]*

**கௌதம்**[2] *kaudam,* பெ.(n.) மழைநீரால் சுவர் நனையாதிருக்கச் சுவரின் உச்சியில் கட்டப்படும் கட்டட அமைப்பு (Tinn); cornice.

*[கோ →கோதை (அகன்றது, பெரியது) →கௌதம்.]*

**கௌதமநதி** *kaudama-nadi,* பெ.(n.) கௌதமை நதி; river *Kaudamai.*

*[கௌதம் + நதி.]*

**கௌதமன்** *kaudamaṉ,* பெ.(n.) 1. கவுதம புத்தன்; the Buddha. 2. ஒரு முனிவர்; an ancient saint.

*[கோ→கோதை = பெரியவன், தலைவன். கோதை →கோதமன்→கௌதமன்.]*

கோதை எனும் சொல் பெரிய மாலையையும் ஆற்றல் மிக்க தலைவன் எனும் பொருளில் சேர மன்னனையும் குறித்தல் காண்க.

**கௌதமனார்** *kaudamaṉār,* பெ.(n.) 1. தலைக் கழகப் புலவருள் ஒருவர் (தொல். பொருள். 75, உரை); a poet of the first Šangam. 2. ***கோதமன்*** பார்க்க; see *kōdamaṉ.*

*[கோ→கோதை→கோதமன்→கௌதமன். கௌதமன் என்பது வடமொழியில் பெற்ற திரிபு.]*

**கௌதமி** *kaudami,* பெ.(n.) 1. ஓர் ஆறு (பிங்.); a river. 2. கோரோசனை; bezoar - stone (W.).

*[கோ→கோதை→கோதமன்→கோதமி (பெருமை மிக்கவள், பெருமைமிக்கது).]*

**கௌதாரி** *kaudāri,* பெ.(n.) ஒரு பறவை; Indian partridge.

*[கதுவாலி→கவுதாரி→கௌதாரி.]*

**கௌந்தி**[1] *kaundi,* பெ.(n.) 1.வால்மிளகு(மலை.); cubele. 2. கடுக்காய்வேர் (மூ.அக.); chebulic myrobalan root.

*[காந்து →காந்தி →கௌந்தி.]*

**கௌந்தி**[2] *kaundi,* பெ.(n.) சைன தவப்பெண் (திவா.); female Jain ascetic.

*[காந்து →காந்தி →கௌந்தி.]*

**கௌமாரம்** *kaumāram,* பெ.(n.) 1.இளம்பருவம்; childhood. 2. முருகக்கடவுளே பரம்பொருளென்று வழிபடும் சமயம்; the religion of the Skanda as supreme being and whose followers are exclusively devoted to his worship. 3. ***கவுமாரம்*** பார்க்க; see *kavumāram.*

*[குமரன்→குமரம்→கௌமாரம்]*

**கௌமாரி** *kaumāri,* பெ.(n.) 1.தூய பெண்களுள் ஒருத்தி; one of *Catta-mādar,* the female principle of Kumara or Skanda. 2. மாகாளீ (பிங்.); Kali.

*[குமரி→கௌமாரி]*

**கௌரம்** *kauram,* பெ.(n.) 1. வெண்மை; whiteness. 2. பொன்னிறம் (சிலப். 12:67, உரை); yellow colour. 3. அச்சம்; fear. 4. தூய்மை; cleanliness. 5. தாமரை; lotus. 6. நூல்; thread. 7. பொன்; gold. 8. ***கவுரம்*** பார்க்க; see *kavuram.*

*[கோடு = யானைக் கொம்பு செங்குத்தான செம்மண்மேடு. உயரம் (அச்சம்) கோடு →கோடம்→ கோரம் (கொ.வ.).]*

**கௌரி**[1] *kauri,* பெ.(n.) 1. மலைமகள், பார்வதி; Parvati. *"பேருங் கௌரியென் றழைத்தனர்" (திருவிளை. விருத்த. 4).* 2. காளி; Kali. *"அம்பிகை மாதரி கௌரி" (அரிச். 4. துதி).* 3. எட்டு அல்லது பத்தகவைப் பெண்; young girl of 8 or 10 years. 4. பொன்னிறம் (W.); yellow colour. 5. கடுகு; mustard (மலை.). 6. கொடிவகை; bristly trifoliate vine.

*[குமரி →குவரி→கௌரி]*

**கௌரி**[2] *kauri,* பெ.(n.) 1. சோழி; small white or yellow shell, used as a coin in some parts of India (M.M.238). 2. ***கவுரி*** பார்க்க ; see *kavuri.*

*[கவடி →கவரி→கௌரி]*

**கௌரிக்கங்கை** *kauri-k-kaṅgai,* பெ.(n.) ஓர் ஆறு; a river.

*[குமரி→குவரி →கௌரி + கங்கை]*

**கௌரிகாளை** *kauri-kāḷai,* பெ.(n.) எக்காள வகை; a long brass trumpet.

*[குமரி→குவரி →கௌரி + காளை.]*

**கௌரிகேணி** *kauri-kēṇi,* பெ.(n.) 1. கொடிவகை; mussell-shell creeper. s.el.elitoria termaated typiea. 2.***வெள்ளைக் காக்கணம்*** பார்க்க (மலை.); see *veḷḷai-k-kākkaṇam.*

*[குமரி→குவரி →கௌரி + கேணி.]*

**கௌரிசிப்பி** *kauri-cippi,* பெ.(n.) வழிபாட்டுக் கலனாகப் பயன்படும் பெருஞ்சங்கு(W.); a big conch which is used as a thing to be worshipped.

*[குமரி→குவரி →கௌரி + சிப்பி.]*

**கௌரிபாத்திரம்** *kauri-pāttiram,* பெ.(n.) ***கௌரிசிப்பி*** பார்க்க; see *kauri-cippi* (W.).

*[கௌரி + பாத்திரம்.]*

**கௌரிமைந்தன்** *kauri-maindaṉ,* பெ.(n.) முருகக் கடவுள் (பிங்.); Skanda, as son of Parvati.

*[குமரி→குவரி → கௌரி + மைந்தன்.]*

**கௌரியம்** *kauriyam,* பெ.(n.) பாண்டியன் பட்டப் பெயர்; Pāṇḍiyas title. *"தவிரா வீகைக் கௌரியர் மருக" (புறநா. 3:5).*

**மறுவ.** குமரியர்.

*[குமரி = குமரிநாடு. பாண்டியர்களில் பழைய நாடு. கடல் கொண்ட தென்னாடு. குமரி →குமரியர் →குவரியர் →கௌரியர் = பாண்டியர்.]*

**கௌரிவிரதம்** *kauri-viradam,* பெ.(n.) ஐப்பசி மாதத்தில் கௌரியை நோக்கிப் புரியும் நோன்பு; religious observance in honour of Parvati in the month of Aippaši.

*[கௌரி + விரதம்.]*

**கௌரு** *kauru,* பெ.(n.) முதிர்வண்ணம், அழுத்தமான நிறம்; bright colour.

**தெ.** கௌரு, கவுரு.

*[கவிர்→கவுர் →கௌரு.]*

**கௌவல்** *kauval,* பெ.(n.) கௌவுதல்; grasp with eagerness, to seize with mouth.

*[கவ்வு →கவ்வல்→கௌவல்.]*

**கௌவாணம்** *kauvanam,* பெ.(n.) குறிஞ்சி யாழ்த்திறங்களுள் ஒன்று; an ancient secondary melody. type of the *kuriñji* classs.

*[கௌளம் + வாணம் = கௌளவாணம்→ கௌவாணம்.]*

**கௌவாளன்** *kauvāḷaṉ,* பெ.(n.) மீன்வகை; a kind of fish.

*[கவ் →கௌ + ஆளன்—கௌவாளன்.]*

**கௌவிக்கொள்-தல்** *kauvi-k-koḷ,* 16 செ. குன்றாவி. (v.t.) 1. வாயால் பற்றிக் கொள்ளுதல்; to catch by mouth. 2. கைப்பற்றிக்கொள்; to take by force.

தெ. கௌங்கிலி (வலக்காரமாகச் சேர்த்துக் கொள்ளல், அணைத்துக் கொள்ளல்)

*[கவ்வு →கௌவு + கொள்–கௌவிக்கொள்.]*

**கௌவியம்** *kauviyam,* பெ.(n.) ஆனைந்து பசுவினின்று பெறப்படும் பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் ஆகிய பொருள்கள்; the five choice products of a cow. *"தீதில் கௌவியங் கூட்டுபு பிசைந்தனர்" (சூத. சிவமா. 2:23).*

*[கோ (மாடு)→கோவியம்→கவ்வியம். **கவ்வியம்** பார்க்க; see kavviyam.]*

**கௌவு–தல்** *kauvu-,* செ.குன்றாவி.(v.t.) 1. வாயால் பிடித்தல்; to seize with mouth, grasp with eagerness. *"கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டும்" (நாலடி. 70).* 2. கவர்தல்; to absorb, engross. *"அகங் கௌவிய களிப்பெய்தி" (திருவிளை. யானை. 24).*

*[கவ்வு→கௌவு.]*

**கௌவுகண்** *kauvugkan,* பெ.(n.) கீழ்ப்பார்வை; downcast furtive look. *கௌவுகண் போட்டுப் பார்க்கிறான்* (நாஞ்.).

*[கவ்வு →கௌவு + கண்.]*

**கௌவுதடி** *kauvu-tadi,* பெ.(n.) 1.கவரான கழி (அகநா. 34, உரை.); forked stick. 2. குத்துக்கோல் *(சிலப். 16, 162.அரும்.);* pike staff. 3. ***கவைக்கோல்*** பார்க்க (W.); see *kavai-k-kōl.*

*[கவை→கவ்வு →கௌவு + தடி.]*

**கௌவை**[1] *kauvai,* பெ.(n.) 1. ஒலி; sound. *"குயிற் கௌவையிற் பெரிதே" (ஐங்குறு.369).* 2. வெளிப் பாடு; disclosure. *"கற்பொடு புணர்ந்த கௌவை" (தொல். பொருள்.41).* 3. பழிச்சொல்; ill report, scandal. *"கல்லென் கௌவை யெழாஅக் காலே" (ஐங்குறு. 131).* 4. துன்பம் (பிங்.); affliction, distress. 5. கள் (பிங்.); toddy.

*[கவ்வை→கௌவை.]*

**கௌவை**[2] *kauvai,* பெ.(n.) 1.வினை; concern, business, affair. 2. எள்ளிளங்காய்; green sesamum seed. *"கௌவை போகிய கருங்கா" (மலைபடு.105).* 3. ஆயில்யம்; the nineth naksatra.

*[செய் → கெய் → கய் → கவ் → கவ்வை →கௌவை.]*

**கௌவைமரம்** *kauvai-maram,* பெ.(n.) அடைப்புக்குள் விலங்குகள் வாராமல் தடுக்குங் கட்டை; cross bar at the entrance of an enclosure to prevent animals from straying (Loc.).


கௌவைமரம்

*[கவ்வு →கௌவை + மரம்.]*

**கௌளம்** *kaulam,* பெ.(n.) இசைவகை, பண்வகை (பரத. இராக. 55); a primary melody-type.

*[கவ்வு →கவ்வுளம் (செறிந்த பண் வகை) →கௌளம்.]*

**கௌளி**[1] *kauli,* பெ.(n.) 1. பல்லி; lizard. 2. ***கவுளி*** பார்க்க; see *kavuli.*

*[கவ்வு →கவ்வுளி →கவுளி →கௌளி.]*

**கௌளி**[2] *kauli,* பெ.(n.) 1. ஒரு பண்வகை (பரத. இராக. 56); a specific melody - type. 2. நூறு வெற்றிலை கொண்ட கட்டு; bundle of 100 betel leaves.

*[கவ்வு →கவ்வுளம் →கவுளம் →கௌளி (செறிந்த பண்வகை).]*

**கௌளிக்கட்டாயச்சொல்(லு)–தல்** *kauli-k-kattāy-c-col(lu),* 8 செ.கு.வி.(v.i.) குறிசொல்லி ஏமாற்றுதல் (இ.வ.); to deceive a person by professing to foretell, to mislead by soothsaying.

*[கௌளி + கட்டாயம் + சொல்.]*

**கௌளிக்கட்டு** *kauli-k-kattu,* பெ.(n.) ***கௌளிக் காதல்*** பார்க்க; (loc.); see *kouli-k-kādal.*

*[கௌளி + கட்டு.]*

**கௌளிக்காதல்** *kauli-k-kādal,* பெ.(n.) நன்மை தீமைகளை அறிவிக்கும் பல்லி ஒலி (W.); chirp of a lizard, as presaying good or evil.

*[கௌளி + காதல். கதைத்தல் (பேசுதல்) - காதல்.]*

**கௌளிச்சொல்** *kauli-c-col,* பெ.(n.) ***கௌளிக் காதல்*** பார்க்க; see *kauli-k-kādal* (Loc.).

*[கௌளி + சொல்.]*

**கௌளிசாத்திரம்** *kauli-śāttiram,* பெ.(n.) பல்லிச் சொற்குப் பலன்கூறும் நூல்; treatise interpreting the chirps of lizards.

*[கவுளி→கௌளி + சாத்திரம்.]*

**கௌளிபத்திரம்** *kauḷi-pattiram,* பெ.(n.) வெள்ளை வெற்றிலை வகை; white betel-leaf.

*[கௌளி = வெண்மை. கௌளி + பத்திரம்.]*

**கௌளிபாத்திரம்** *kaulipāttiram,* பெ.(n.) 1. மஞ்சள் நிறமான காய்கள் காய்க்குந் தெங்குவகை; a variety of coconut tree bearing yellow coconuts (Loc.). 2. தேங்காயோட்டினால் செய்யப்பட்டுத் துறவியர் நீர் அல்லது உணவுகொள்ளப் பயன்படுத்தும் ஏனம்; coconut shell used by ascetics as a begging bowl, water - vessel, etc.

*[கௌளி = வெண்மை. கௌளி + பாத்திரம்.]*

**கௌனு** *kauṉu,* பெ.(n.) 1. நடுப்பகுதி; middle. 2. நடுவு; centre. 3. இலைகளால் செய்த செருப்பு; a slipper made of leaves.

தெ. கவுனு, கௌனு.

*[குள் → குவ் → கவ் → கவல் (பள்ளம், நடுக்குழி) → கவுல் → கவுன் (கவுள்) → கவுனு → கௌனு.]*

பள்ளமான நடுப்பகுதியும், குழிந்த உள்ளங்காலுக்குப் பொருந்துமாறு பொருத்திக் கட்டிய இலைகளாலான மிதியடியும் கவுன் எனும் சொல்வடிவம் பெறலாயின.

## ங

**ங்** *ṅ,* பெ.(n.) ஙகரத்தின் இனமெல்லெழுத்தாகிய பின்னண்ண மூக்கொலி மெய்யெழுத்து. தமிழ் நெடுங்கணக்கில் முப்பது முதலெழுத்துகளுள் ஒன்று; the velar nasal consonant related to the velar plosive by place of articulation, being one among the 30 primary alphabets of the Tamil language.

*[ங் = ககரத்தின் இனமெல்லெழுத்து மெய்.]*

**ங**[1] *ṅa,* பெ.(n.) ஙகர ஒற்று முன்னும் அகரவுயிர் பின்னுமாகப் பலுக்கப்படும் மெல்லின உயிர்மெய் யெழுத்தாகிய சார்பெழுத்து; the compound of ங்+அ, velar nasal vowel consonant being one among the secondary alphabets of the Tamil language. *"ஙப்போல் வளை" (ஆத்திசூடி).*

*[ங்+அ – ங]*

ஙகர உயிர்மெய்யெழுத்து வரிசையில் அனைத்து உயிர்மெய்யெழுத்துகளும் தமிழ்ச் சொல்லாட்சிகளில் இடம்பெறவில்லை. இவற்றுள் ங ஒன்றே வழக்கி லிருப்பினும் தமிழ் நெடுங்கணக்கில் உயிர்மெய் யெழுத்துகள் பதினெட்டும் மாணவர்களுக்குப் பயிற்றுவிக்கப்படுகின்றன. கற்பிக்குங்கால் எழுத்துக் கோவை இடைவீடு படலாகாது என்பதற்காக நெடுங் கணக்கில் பயன்பாடு நோக்காது பயிற்சி யொழுங்கு நோக்கிச் சேர்த்துக்கொள்ளப்பட்டன என மரபிலக்கண வல்லுநர் அமைதி கூறுவர். அதனாற்றான் ஔவை யாரும் பயன் கருதாது சுற்றந்தழுவ வேண்டும் என்னும் கருத்தை வலியுறுத்த "ஙப்போல் வளை" என ஙகர வரிசைத் தழுவலை உவமைகாட்டி விளக்கினார்.

கல்லாதார் நாவில் திரிபடையும் சொற்களும், ஞாலத் தாய்மொழி காலத்திலிருந்து கிளைத்த உலகமொழிகளில் ஒலித்திரிபாகும் ஊடாட்டங்களிலும், தமிழில் பயன்கழிந்த ஙகர உயிர்மெய்யெழுத்தொலிகள் வழக்கூன்றலாம் எனும் கருத்தும் பண்டையோர் முடிபாகலாம்.

**ங**[2] *ṅa,* பெ.(n.) குறுணியைக் குறிக்கும் குறியீடு; symbol for a *marakkāl* or eight measures.

*[ங்+அ–ங ]*

பண்டைய ஙகர வரிவடிவம் குறுணியைக் குறிக்கும் குறியீடாயிற்று.

கலம் என்னும் முகத்தல் அளவுக்குக் கீழளவு எண்களைத் தூணி, பதக்கு, குறுணி என்னும் வரிசையில் குறுணி மூன்றாம் அளவாக நிற்றலின் மூன்றைக் குறிக்கும். ஙகர வடிவு முகத்தல் அளவுக் குறியீடாகியிருக்கலாம்.

**ஙகரம்** *ṅagaram,* பெ.(n.) குறுணியளவு; (தைலவ.தைல.6); a measure of capacity = 8 *nāḻi* = 1 *kuruṇi.*

*[ங + கரம் – ஙகரம் = ங எனும் உயிர்மெய்யெழுத்து.]*

ஙகர உயிர்மெய்யெழுத்தின் வரிவடிவக் குறியீடு பழந்தமிழ்க் கணக்கு நூல்களில் குறுணியளவைக் குறிப்பதற் காக ஆளப்பட்டது. 8 நாழி – 1 குறுணி.

**ஙனம்** *ṅaṉam,* இடை.(part.) சுட்டெழுத்து வினா வெழுத்துகளையொட்டித் தன்மை இடம் முதலிய பொருள்களைத் தரும் இடைச்சொல்; suffix in the sense of place, manner, room, mode, ways used after the demonstrative particles அ,இ,உ,எ,யா as அங்ஙனம், etc.

*[ங் + அனம் – ஙனம். 'அனம்' – 'கனம்' என்பதன் திரிபு ஈறு. அ+ஙனம்–அங்ஙனம் = அத்தன்மை. ஒ.நோ. நன்கனம்). அ+கண் – அங்கண் → அங்கணே (கொ.வ.) → அங்ஙனம் (அவ்விடம்). இவ்வாறு தன்மை, இடப்பொருள்களில் இச் சொல் ஆட்சி பெற்றது.]*

இனி ஙகரம் மொழி முதலாவது குறித்து, "சுட்டியா வெகர வினாவழி யவ்வை ஒட்டி ஙவ்வு முதலா குமமே" என நன்னூல் [106] கூறுவது கூர்ந்து நோக்கத்தக்கது. மூன்று சுட்டும் யா வினாவும் எகர வினாவுமாகிய இடைச்சொற்களின் பின், அகரத்தைச் சேர்ந்து ஙகர மெய்யும் சொல்லுக்கு முதலாகும்.

மூன்று சுட்டும் யாவினாவும் எகர வினாவுமாகிய இடைச்சொற்களின் பின் அகரத்தை யொட்டி ஙவ்வும் மொழிக்கு முதலாம்.

எ–டு. அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், யாங்ஙனம், எங்ஙனம் எனவரும். இவற்றை அங்கு எங்கு என்றாற்போல

ஒருமொழிகள் என்றால் என்னையெனின் அஞ்ஞான்று, எஞ்ஞான்று என்பனபோலப் பிளவுபட்டு இடையே மெல்லொற்று மிக்கு வருதலின் தொடர்மொழிகளே யாமென்க.

ஙனமென்பது இடத்தினையும் தன்மை யினையும் உணர்த்தும் பலபொருள் ஒருசொல்லாய் வரினும், தனித்துவரும் தன்மையதன்றி முடவன் கோனூன்றி வந்தாற்போலச் சுட்டு வினாவாகிய இடைச்சொற்களை முன்னிட்டு வருதலான் வழி யென்றும், ஏனைய மெய்கள் போல முதலாகாமையின் அவ்வோ டென்னாது ஒட்டி என்றும் ஒருவாற்றான் முதலாதலின் இழிவுசிறப்பாக ஙவ்வுமென்று கூறினார். இங்ஙனம் கூறலான் ஙகரம் மொழிக்கு முதலாகாதென்பார்க்கு உடன்படலும் மறுத்தலுமாய்ப் பிறர்தம் மதமேற் கொண்டு களைவே யென்னும் மதம்படக் கூறினாரென்றுணர்க" எனச் சிவஞான முனிவர் நன்னூலில் உரை வகுத்துள்ளார்.

[அ + கனம் – அக்கனம் → அங்கனம் → அங்ஙனம் எனவும் அ + கண் – அக்கண் → அங்கண் → அங்ஙனம் எனவும் ககர முதற்சொற்கள் வருமொழியில் ஙகர முதற்சொற்களாகத் திரிந்திருத்தலின் ஙகரத்தைத் திரிபு முதலெழுத்து எனக் கொள்ளலாம்.]

**ஙா**[1] *ńā*, பெ.(n.) ஙகர ஒற்று முன்னும் ஆகாரவுயிர் பின்னுமாகப் பலுக்கப்படும் மெல்லின உயிர்மெய் யெழுத்தாகிய சார்பெழுத்து; the compound of ங்+ஆ, velar nasal vowel consonant being one among the secondary alphabets of the Tamil language.

*[ங் + ஆ – ஙா.]*

**ஙா**[2] *ńā*, பெ.(n.) 1. குழந்தையின் அழுகையொலி; weeping sound of a child. 2. குழந்தை மொழியில் பாலைக் குறிப்பால் உணர்த்தும் இங்கா என்னும் சொற்குறுக்க ஒலிப்புக் குறியீடு; symbolic sound of a child denoting the requirement of milk from mother.

*[இங்ஙா → இங்ஙா → ஙா]*

**ஙாத்தாள்** *ńāttāḷ*, பெ.(n.) எங்கள் ஆத்தாள் என்பதன் மரூஉ வழக்காகிய கடுங் கொச்சைச் சொல்; corrupted form of the compound word. எங்கள் + ஆத்தாள். lit. our mother.

*[எங்கள் + ஆத்தாள் – ஙாத்தாள் (கொ.வ.).]*

இத்தகைய கடுங்கொச்சை வழக்கு முற்றிலும் விலக்கத் தக்கது.

**ஙி** *ńi*, பெ.(n.) ஙகர ஒற்று முன்னும் இகரவுயிர் பின்னுமாகப் பலுக்கப்படும் மெல்லின உயிர்மெய் யெழுத்தாகிய சார்பெழுத்து; the compound of ங் + இ, velar nasal vowel consonant being one among the secondary alphabets of the Tamil language.

*[ங் + இ – ஙி.]*

**ஙீ** *ńī*, பெ.(n.) ஙகர ஒற்று முன்னும் ஈகாரவுயிர் பின்னுமாகப் பலுக்கப்படும் மெல்லின உயிர்மெய் யெழுத்தாகிய சார்பெழுத்து; the compound of ங் + ஈ, velar nasal vowel consonant being one among the secondary alphabets of the Tamil language.

*[ங் + ஈ – ஙீ.]*

**ஙு** *ńu*, பெ.(n.) ஙகர ஒற்று முன்னும் உகரவுயிர் பின்னுமாகப் பலுக்கப்படும் மெல்லின உயிர்மெய் யெழுத்தாகிய சார்பெழுத்து; the compound of ங் + உ, velar nasal vowel consonant being one among the secondary alphabets of the Tamil language.

*[ங் + உ – ஙு.]*

**ஙூ** *ńū*, பெ.(n.) ஙகர ஒற்று முன்னும் ஊகாரவுயிர் பின்னுமாகப் பலுக்கப்படும் மெல்லின உயிர்மெய் யெழுத்தாகிய சார்பெழுத்து; the compound of ங் + ஊ, velar nasal vowel consonant being one among the secondary alphabets of the Tamil language.

*[ங் + ஊ – ஙூ.]*

**ஙெ** *ńe*, பெ.(n.) ஙகர ஒற்று முன்னும் எகரவுயிர் பின்னுமாகப் பலுக்கப்படும் மெல்லின உயிர்மெய் யெழுத்தாகிய சார்பெழுத்து; the compound of ங் + எ, velar nasal vowel consonant being one among the secondary alphabets of the Tamil language.

*[ங் + எ – ஙெ.]*

**ஙே** *ńē*, பெ.(n.) ஙகர ஒற்று முன்னும் ஏகாரவுயிர் பின்னுமாகப் பலுக்கப்படும் மெல்லின உயிர்மெய் யெழுத்தாகிய சார்பெழுத்து; the compound of ங் + ஏ, velar nasal vowel consonant being one among the secondary alphabets of the Tamil language.

*[ங் + ஏ – ஙே.]*

**ஙை** *ńai*, பெ.(n.) ஙகர ஒற்று முன்னும் ஐகாரவுயிர் பின்னுமாகப் பலுக்கப்படும் மெல்லின உயிர்மெய் யெழுத்தாகிய சார்பெழுத்து; the compound of ங் + ஐ, velar nasal vowel consonant being one among the secondary alphabets of the Tamil language.

*[ங் + ஐ – ஙை.]*

**ஙொ** *ńo*, பெ.(n.) ஙகர ஒற்று முன்னும் ஒகரவுயிர் பின்னுமாகப் பலுக்கப்படும் மெல்லின உயிர்மெய் யெழுத்தாகிய சார்பெழுத்து; the compound of ங் + ஒ, velar nasal vowel consonant being one among the secondary alphabets of the Tamil language.

*[ங் + ஒ – ஙொ.]*

**நொக்காள்** *ṅokkāḷ,* பெ.(n.) உங்கள் அக்காள் என்பதன் மரூஉ வழக்காகிய கொச்சைச் சொல்; corrupted form of the compound word. உங்கள் + அக்காள். lit. your elder sister. நொக்காள் வந்தாளா? (நெல்லை.).

*[உங்கள் + அக்காள் – நொக்காள் (கொ.வ.).]*

இத்தகைய கடுங்கொச்சை வழக்குகள் முற்றிலும் விலக்கத்தக்கன.

**நொண்ணன்** *ṅoṇṇaṉ,* பெ.(n.) உங்கள் அண்ணன் என்பதன் மரூஉ வழக்காகிய கடுங் கொச்சைச் சொல்; corrupted form of the compound word. உங்கள் + அண்ணன். lit. your elder brother. நொண்ணன் எங்கே? (நெல்லை.).

*[உங்கள் + அண்ணன் – நொண்ணன் (கொ.வ.).]*

இத்தகைய கடுங்கொச்சை வழக்குகள் முற்றிலும் விலக்கத்தக்கன.

**நொப்பன்** *ṅoppaṉ,* பெ.(n.) உங்கள் அப்பன் என்பதன் மரூஉ வழக்காகிய கடுங்கொச்சைச் சொல்; corrupted form of the compound word. உங்கள் + அப்பன். lit. your father. நொப்பன் எங்கே? (நெல்லை.).

*[உங்கள் + அப்பன் – நொப்பன் (கொ.வ.).]*

இத்தகைய கடுங்கொச்சை வழக்குகள் முற்றிலும் விலக்கத்தக்கன.

**நொம்மாள்** *ṅommāḷ,* பெ.(n.) உங்கள் அம்மாள் என்பதன் மரூஉ வழக்காகிய கடுங்கொச்சைச் சொல்; corrupted form of the compound word. உங்கள் + அம்மாள். lit. your mother. நொம்மாள் எங்கே? (நெல்லை.இ.வ.).

*[உங்கள் + அம்மாள் – நொம்மாள் (கொ.வ.).]*

இத்தகைய கடுங்கொச்சை வழக்குகள் முற்றிலும் விலக்கத்தக்கன.

**ஙோ** *ṅō,* பெ.(n.) ஙகர ஒற்று முன்னும் ஓகாரவுயிர் பின்னுமாகப் பலுக்கப்படும் மெல்லின உயிர்மெய் யெழுத்தாகிய சார்பெழுத்து; the compound of ங் + ஓ, velar nasal vowel consonant being one among the secondary alphabets of the Tamil language.

*[ங் + ஓ – ஙோ.]*

**ஙௌ** *ṅau,* பெ.(n.) ஙகர ஒற்று முன்னும் ஔகாரவுயிர் பின்னுமாகப் பலுக்கப்படும் மெல்லின உயிர்மெய் யெழுத்தாகிய சார்பெழுத்து; the compound of ங் + ஔ, velar nasal vowel consonant being one among the secondary alphabets of the Tamil language.

*[ங் + ஔ – ஙௌ.]*

